ஸ்ரீ வித்யாரண்யர் இயற்றிய

# ஸ்ரீமத் சங்கர திக்விஜயம்




சமஸ்கிருத மூலம், தமிழ் அநுவாதம்,

உரையுடன் கூடியது

S.MOHAN JAYARAJAN

॥ श्रीः ॥






श्री विद्यारण्यविरचितः

॥ श्रीमच्छङ्कर दिग्विजयः ॥

# ஸ்ரீமத் சங்கர திக்விஜயம்

**ஸ்ரீ வித்யாரண்யர்**
**இயற்றியது**

**சம்ஸ்கிருத மூலம், தமிழ் அனுவாதம்,**
**உரையுடன் கூடியது**

**தமிழ் அனுவாதம் உரை:**
**வேதாந்த சிரோமணி**
**பண்டிட் நூரணி ஸ்ரீ என். எஸ். அனந்தகிருஷ்ண சாஸ்திரி அவர்கள்**



**புதிய பதிப்பு**
**2003**
**ஸ்ரீமதி லிங்கம்மாள் ராமராஜு சாஸ்த்ர ப்ரதிஷ்டா டிரஸ்ட்**
**ராஜபாளையம்**

புதிய பதிப்பு : மே 2003 (ஸ்ரீ சங்கரஜயந்தி)



விலை ரூ : 200/-

பிரதிகள் கிடைக்குமிடம் :-

1. ஸ்ரீ சாரதா பீடம், சிருங்கேரி
   Book Depot.

2. ஸ்ரீமதி லிங்கம்மாள் ராமராஜு சாஸ்த்ர ப்ரதிஷ்டா டிரஸ்ட்
   1, காந்தி கலைமன்றம் சாலை
   ராஜபாளையம் 626117
   e-mail : shastrapratishta@yahoo.com

3. சாஸ்த்ரப்ரகாஸிகா டிரஸ்ட்
   சந்திர விலாஸ் அபார்ட்மென்ட்ஸ்
   A-3, No. 9, 8வது தெரு
   டாக்டர் ராதாகிருஷ்ணன் சாலை
   மயிலாப்பூர், சென்னை 600 004
   Phone : 044-28530975
   e-mail : info@sastraprakesika.org

Printed at:
Sudarsan Graphics, Chennai - 600 017







## ।। श्री शृङ्गेरी श्रीजगद्गुरुमहासंस्थानम् ।।

श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य पदवाक्यप्रमाणपारावारपारीण
यमनियमासनप्रणायामप्रत्याहारधारणाध्यानसमाध्यष्टाङ्गयोगानुष्ठाननिष्ठ
तपश्चक्रवर्त्यनाद्यविच्छिन्न श्रीशङ्कराचार्यगुरुपरम्पराप्राप्त षड्दर्शनस्थापनाचार्य
व्याख्यानसिंहासनाधीश्वर सकलनिगमागमसारहृदय सांख्यत्रयप्रतिपादक वैदिकमार्गप्रवर्तक
सर्वतन्त्रस्वतन्त्रादिराजधानी विद्यानगरमहाराजधानी कर्णाटकसिंहासनप्रतिष्ठापनाचार्य
श्रीमद्राजाधिराजगुरुभूमण्डलाचार्य ऋष्यशृङ्गपुरवराधीश्वर तुङ्गभद्रातीरवासि
श्रीमद्विद्याशङ्करपादपद्माराधक श्रीजगद्गुरु श्रीमदभिनवविद्यातीर्थस्वामिगुरुकरकमलसञ्जात

## ।। श्री जगद्गुरु शृङ्गेरी श्रीमद्भारतीतीर्थमहास्वामिभिः ।।



निखिलास्तिकमहाजनेषु नारायणस्मरणपुरस्सरं विरचिता आशिषस्समुल्लसन्तु।

इह खलु भगवान् धर्मग्लानिं अधर्माभ्युत्थानं च परिहर्तुं भुव्यवतरामीति गीतायां प्रतिजज्ञे। तदनुसारमेव अतीतेषु युगेषु दाशरथिवासुदेवादिरूपेण धरण्यामवतीर्य धर्मं पर्यरक्षीत्। तथैवास्मिन् कलियुगे तस्यैव सनातनवैदिकधर्मस्य परित्राणाय केरलेषु कालट्यां आर्याम्बाशिवगुर्वभिख्ययोः पुण्यदम्पत्योः पुत्रत्वेन शंकरनाम्ना आविर्बभूव। द्वात्रिंशत्समाः अस्यां क्षितौ समचारीत्। अवैदिकानि मतानि निरास्यत्। औपनिषदं अद्वैतसिद्धान्तं लोकानवागमयत्। सूत्रभाष्यादीन् बहून् ग्रन्थतल्लजानररचत्। काश्मीरेषु सर्वज्ञपीठमध्यरुक्षत्। भारतस्य चतसृषु दिक्षु चत्वार्याम्नाय पीठानि प्रत्यतिष्ठिपत्। तेषु स्वशिष्यान् पद्मपादादींश्चतुरः अधिपतीन् व्यधासीत्। तदेवं धर्मरक्षणाय सुदृढां व्यवस्थां विधाय स्वयं वीतरागः हैमवते केदारे तिरोबभूव।

तदिदं शङ्करचरितं विद्यारण्यविरचितमाधवीयशङ्करविजये स्पष्टं सविस्तरं प्रत्यपादि। सर्वेऽपि शिष्टाः तस्यैव शङ्करविजयस्य आचार्यचरित्रप्रतिपादने प्रामाण्यमुररीकुर्वन्ति। अत एव तस्य देशभाषासु अनुवादं विधाय प्रचारणं लोकानां महतीमुपकृतिं जनयति इति धिया नैकभाषासु स अनूद्य प्राकाश्यत। द्रविडभाषयापि स ग्रन्थः बहुभ्यो हायनेभ्यः प्राक् अस्मदास्थानविद्वद्भिः श्री यनु.यस्.अनन्तकृष्ण शास्त्रिभिः अनूदितः प्रकाशितश्च। तस्य चाधुना दौर्लभ्यं लोकानां तद्विषयिणीं उत्कण्ठां चाभिलक्ष्य राजपालयस्थ लिंगम्माळ् शास्त्रप्रतिष्ठानेन सोयं पुनर्मुद्राप्य प्रकाश्यत इति विज्ञाय भृशं मोदामहे।

श्रीशारदाचन्द्रमौलीश्वरयोरसीमयानुकम्पया ग्रन्थोऽयं सुष्ठु प्रकाश्यतां आस्तिकाः एनं सम्यगधीत्य भगवत्पादीयं चरित्रं यथावदवगत्य आत्मानं कृतार्थयन्तु इत्याशास्महे।

इति नारायणस्मरणम्

शृङ्गगिरिः
स्वभानुचैत्रशुक्लदशमी
स्थिरवासरः। 12.4.2003.



# ஸ்ரீஸ்ரீஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீமத் பாரதீதீர்த்த ஸ்வாமிகளால் ஸகல மஹாஜனங்களிடம் நாராயண ஸ்மரணத்துடன் செய்யப்பட்ட ஆசிகள் விளங்கட்டும்

கீதையில் பகவான் தர்மம் வாடி, அதர்மம் மேலோங்கும்பொழுது இதை போக்கடிக்க பூமியில் அவதரிக்கிறேன் என்று ப்ரதிக்ஞை செய்துள்ளார். அதை அனுஸரித்து சென்ற யுகங்களில் தாசரதிராமன்-கிருஷ்ணன் போன்ற அவதாரத்தை பூமியில் எடுத்து தர்மத்தைக் காப்பாற்றினுர். அதுபோல் கலியுகத்தில் ஸநாதன வைதிக தர்மத்தைக் காப்பாற்ற கேரளநாட்டில் காலடியில் ஆர்யாம்பா சிவகுரு ஆகிய புண்ணியதம்பதிகளின் புத்திரராக சங்கரர் என்ற பெயரில் தோன்றினுர். இப்பூமியில் 32 வருடங்கள் சஞ்சரித்தார். அவைதிகமான மதங்களைக் கண்டித்தார். உபநிஷத்தில் கூறிய அத்வைத ஸித்தாந்தத்தை ஜனங்களுக்கு போதித்தார். ஸூத்ரபாஷ்யம் போன்ற சிறந்த நூல்களை இயற்றினுர். காச்மீரத்தில் ஸர்வக்ஞபீடம் ஏறினுர். பாரதத்தின் நான்கு திசைகளிலும் நான்கு ஆம்னாய பீடங்களை (மடங்களை) ஸ்தாபித்தார். அவைகளில் தம் சிஷ்யர்களான பத்மபாதர் முதலிய நால்வர்களை மடாதிபதிகளாக நியமித்தார். இவ்விதமாக தர்மரக்ஷணத்திற்காக மிகவும் த்ருடமான ஏற்பாட்டைச் செய்து, தான் ராகமற்றவராக (ஆசையற்றவராய்) இமயமலையைச் சார்ந்த கேதார்நாத்தில் மறைந்தார்.

இத்தகைய ஸ்ரீசங்கரசரித்திரம், ஸ்ரீவித்யாரண்யர் இயற்றிய மாதவீய சங்கர திக்விஜயத்தில் ஸ்பஷ்டமாயும் விஸ்தாரமாயும் விவரிக்கப்பட்டுள்ளது. எல்லா சிஷ்டர்களும் இந்த சங்கரவிஜயத்தைத்தான் முக்ய பிரமாணமாக ஏற்கிருர்கள். இதனுல்தான் பிரதேசபாஷைகளில் மொழிபெயர்ப்பு செய்து பிரசாரம் செய்வது மக்களுக்கு பெறும் உபகாரத்தைச் செய்யும் என்ற எண்ணத்தில் பல மொழிகளில் மொழி பெயர்த்து வெளியிடப்பட்டது. தமிழிலும் மொழிபெயர்த்துப் பல வருஷங்களுக்கு முன்பு நமது ஆஸ்தான வித்வான் ஸ்ரீ என்.எஸ். அனந்தகிருஷ்ண சாஸ்திரிகளால் வெளியிடப்பட்டது. அது இப்பொழுது மக்களுக்குக் கிடைப்பது துர்லபமாயிருப்பதையும் அதன் ஆவலையும் கண்டு ராஜபாளையம் ஸ்ரீமதி லிங்கம்மாள் ராமராஜு சாஸ்திர ப்ரதிஷ்டானத்தின் மூலம் அதே புஸ்தகம் மறுமுறை பிரசுரிக்கப்படுவதை அறிந்து ரொம்பவும் மகிழ்ச்சி அடைகிருேம்.

ஸ்ரீ சாரதா சந்திரமௌளீச்வரர்களின் எல்லையற்ற கருணையினுல் இந்த நூல் நல்ல முறையில் வெளியிடப்பட்டு, ஆஸ்திகர்கள் இதை நன்கு கற்று ஸ்ரீ பகவத்பாதரின் சரித்திரத்தை உள்ளபடி உணர்ந்து, தங்களை க்ருதார்த்தர்களாக (பயன் பெற்றவர்களாக) செய்து கொள்ளும்படி ஆசீர்வதிக்கிருேம்.

என்று நாராயண ஸ்மரணம்

ஸ்ரீ

சிருங்கேரி
ஸ்வபானு சைத்ரசுக்லதசமீ
ஸ்திரவாஸரம் (12.4.2003)

# माधवीयशङ्करदिग्विजयस्य

# समर्पणम्



श्रीशङ्करो गुरुः साक्षात् 'भव' - एव न संशयः।
चरितं तस्य विख्यातं माधवाचार्यनिर्मितम्॥१॥

सुविख्यातं महाकाव्यलक्षणेन समन्वितम्।
महिमानं गुरोर्वक्ति करबिल्वसमं हि नः ॥२॥

गुरूणां **भारतीतीर्थपादानां** आज्ञया स्वयम्।
ग्रन्थरत्नमिदं सम्यगनूद्य द्राविडीगिरा ॥३॥

'राम्को' - नाम्ना प्रसिद्धायाः संस्थायाः स्थापको मुदा।
गुरुभक्ताग्रगण्योऽयं प्रकाशीकुरुतेऽधुना ॥४॥

सुभानौ शुक्ल पञ्चम्यां वैशाख्यां मङ्गले दिने।
सकुटुम्बोऽर्पयत्येतत् पादयोर्भारतीगुरोः ॥५॥

शृङ्गगिरिः
06.05.2003

इत्थम्
पि.आर्. रामसुब्रह्मण्य राजा सकुटुम्बः॥

# பதிப்புரை

உலக தத்துவமேதைகளில் தலைசிறந்தவராக ஸ்ரீசங்கர பகவத்பாதர்கள் போற்றப்படுகிறார். நம்முடைய பாரததேசத்திலோ அவர் சாட்சாத் கைலாஸபதியான சிவபெருமானின் அவதாரமாகவே கருதப்பட்டு வணங்கப்படுகிறார்.

வேதங்கள் போதிக்கும் ஸநாதன தர்மத்திற்கு விரோதமான மதங்கள் தோன்றி, அவைகளின் பிரச்சாரத்தினால் ஜனங்கள் மயங்கிக் குழப்பமடைந்த போது, சரியான வழிபாட்டுமுறைகளும் கைவிடப்பட்டன. வேத உபநிஷத்துக்கள் போதித்த உண்மைகளும் விளங்காமல் போயின. அந்த சமயத்தில் ஸநாதன தர்மத்தைப் புனருத்தாரணம் செய்ய ஸ்ரீசங்கர பகவத்பாதாசாரியர் ஈச்வர அவதாரமாகவே தோன்றினார். நாடெங்கும் திக்விஜயம் செய்து என்றைக்கும் பிரமாணமாக உள்ள அத்வைத தத்துவத்தையும், வேததர்மத்தையும் மீண்டும் நிலைநாட்டினார். பிரஸ்தானத்ரயம் என்று சொல்லப்படும் உபநிஷத்துக்கள், ப்ரஹ்மசூத்ரங்கள், பகவத்கீதை மூன்றிற்கும் விரிவான பாஷ்யங்களை அருளினார், தவிர எண்ணற்ற பிரகரண க்ரந்தங்களையும் ஸ்தோத்திரங்களையும் இயற்றி பின்வரும் சந்ததியரும் கடைத்தேற வகை செய்தார். இவைகளுடன் தம் அவதார காரியம் முடிந்து மீண்டும் கைலாஸத்திற்கு எழுந்தருளுவதற்கு முன், தாம் மேற்கொண்ட நற்காரியங்கள் வாழையடி வாழையாகத் தொடர்ந்து நடந்து கொண்டே இருக்க ஒரு குருபரம்பரைக்கு ஏற்பாடு செய்யும் வகையில் நம் பாரத தேசத்திற்கு நான்கு முக்கிய திக்குகளிலும் நான்கு ஆம்னாய பீடங்களை ஏற்படுத்தினார். அவைகளுள் தெற்கு திக்கில் தம்முடைய 32 ஆண்டு வாழ்க்கையின் முக்கியமான காலமான 12 ஆண்டுகளை மனமுவந்து கழித்த சிருங்ககிரி எனப்படும் சிருங்கேரியில் தட்சிணாம்னாய பீடமான ஸ்ரீசாரதா பீடத்தை ஏற்படுத்தினார். அது முதல் அந்த பீடத்தில் அவிச்சின்னமாக குருபரம்பரை வந்து கொண்டு பெரிய மகான்களே பீடாதிபதிகளாக வந்து கொண்டிருக்கிறார்கள்.

தற்போது சிருங்கேரி ஸ்ரீசாரதா பீடத்தில் ஆட்சிபுரிந்து நமக்கு அருள்பாலித்து வரும் அனந்தஸ்ரீ பாரதீதீர்த்த மகாஸ்வாமிகளின் ஆக்ஞையைத் தலைமேற்கொண்டு இந்த **"ஸ்ரீ சங்கர திக்விஜயம்"** என்ற அரிய நூலின் புதிய பதிப்பை வெளியிட்டு அவர்களுக்கே இதை ஸமர்ப்பணமும் செய்கிறோம்.

ஸ்ரீ ஆதிசங்கரரின் உண்மையான வரலாற்றை இந்த கிரந்தம் எடுத்துக் கூறுகிறது. இதை ஓர் அழகிய காவியமாக இயற்றியவர் ஸ்ரீ தட்சிணாம்னாய சிருங்கேரி சாரதா பீடத்தின் ஜகத்குரு பரம்பரையில் 12ஆவது பீடாதிபதியாக மிகப்பிரஸித்தியுடன் விளங்கிய ஸ்ரீ வித்யாரண்ய மஹாஸ்வாமிகள் அவர்கள். இனிய சொற்களும், ஆழ்ந்த கருத்துக்களும் அடங்கிய சம்ஸ்க்ருத ஸ்லோகங்களால் அமைக்கப்பட்ட இந்த காவியத்தை எளிய தமிழில் மொழிபெயர்த்து ஆங்காங்கு விளக்கங்களுடன் கொடுத்திருப்பவர் பண்டிட் நூரணி ஸ்ரீ என்.எஸ். அனந்தகிருஷ்ண சாஸ்திரி அவர்கள்.

சென்ற ஆண்டு (2002) நவராத்திரி உத்ஸவம் சிருங்கேரியில் வழக்கம் போன்ற கோலாகலத்துடன் நடந்தபோது நான் என் குடும்பத்தினருடன் சென்று ஸ்ரீ சாரதாம்பாளையும் ஜகத்குரு அனந்தஸ்ரீ ஸந்நிதானம் அவர்களையும் தரிசித்தேன். அந்த சமயம் அவர்களுடைய ஆசியுடன் மறுபதிப்புகளாக எங்களால் அச்சிடப்பட்ட "ஸ்ரீ சங்கர கிரந்தாவளி" என்ற புத்தகங்களை ஜகத்குரு அவர்கள் தம் திருக்கரங்களால் வெளியிட்டார்கள். என்னுடைய பௌத்திரன் சிரஞ்ஜீவி அபிநவ்

ராமசுப்ரமணியராஜா ஸ்ரீஸந்நிதானத்தின் முன்னிலையில் ஸ்ரீ பகவத்கீதை ஸ்லோகங்களை அழகிய முறையில் ஒப்புவித்து அவருடைய ஆசிகளைப் பெற்றான்.

அச்சமயம் ஸ்ரீ வித்யாரண்ய மஹாஸ்வாமிகளால் இயற்றப்பட்ட உயர்ந்த கிரந்தங்களான 'அனுபூதிப்பிரகாசம்', ஸ்ரீ பாரதீதீர்த்த மஹாஸ்வாமிகள் (11 வது பீடாதிபதி) அவர்களால் இயற்றப்பட்ட 'வையாஸிக ந்யாயமாலா' போன்ற கிரந்தங்களை ஏற்கெனவே நாங்கள் வெளியிட்டிருந்ததை நினைவு கூர்ந்து ஆசீர்வதித்தார்கள். அதே சமயம் ஸ்ரீ வித்யாரண்ய மஹாஸ்வாமிகளால் இயற்றப்பட்ட **'ஸ்ரீ சங்கர திக்விஜயம்'** என்ற அரும் புத்தகம் தற்சமயம் கிடைக்காமல் இருப்பதை சுட்டிக்காட்டி இந்தப் புத்தகத்தின் பழைய பதிப்பை என் கைகளில் கொடுத்து இதை அச்சிட்டு மீண்டும் பிரகாசப்படுத்துமாறு ஆக்ஞையிட்டார்கள்.

ஸ்ரீ சங்கரரின் வாழ்க்கை வரலாறு மிகவும் அற்புதமானது. அவர் வாழ்ந்த காலத்தைப் பற்றி மட்டுமல்லாமல், அவருடைய வாழ்க்கையில் சில நிகழ்ச்சிகளைப் பற்றியும் கருத்து வேறுபாடுகள் சில இருக்கின்றன. வேறு சில சங்கர விஜயங்களை விட ஸ்ரீ வித்யாரண்யர் எழுதியுள்ள இந்த நூலே முழுமையானதாகவும், யதார்த்தமாகவும், ஆதாரபூர்வமாகவும் உள்ளது என்றும் அதனால் ஜனங்களுக்கு அது படிக்கக் கிடைக்க வகை செய்ய வேண்டும் என்று ஸ்ரீஸ்ரீ ஸந்நிதானம் அவர்கள் அபிப்பிராயப்பட்டார்கள்.

இந்த மறுபதிப்பை வெளியிட எங்களுக்கு வாய்ப்பும் அது ஜகத்குரு அவர்களின் ஆக்ஞையாகவும் எங்களுக்கு கிடைத்தது எங்கள் பெரும் பாக்யம்.

இந்த மறுபதிப்பு செய்யும் முயற்சிக்கு பூரண ஒத்துழைப்பு அளித்து அதற்கான மூல க்ரந்தத்தை கொடுத்து உதவிய ஸ்ரீஸ்ரீ சிருங்கேரி சாரதாபீடத்தின் நிர்வாக அதிகாரியும், அதன் வளர்ச்சிக்கு தன்னை அர்ப்பணித்துக் கொண்டவருமான குருஸேவா துரீண **ஸ்ரீமான் V.R. கௌரிசங்கர்** அவர்களுக்கும், சென்னை ஸ்ரீவித்யாதீர்த்த பவுண்டேஷன் **ஸ்ரீ K. நாராயணசுவாமி** அவர்களுக்கும், இந்த அரிய நூலை சிறப்பாக புதிய வடிவில் பிரசுரிப்பதற்கு பக்தி சிரத்தையோடு ஏற்பாடு செய்த சென்னை சுதர்ஸன் கிராபிக்ஸ்ஸின் மேனேஜிங் பார்ட்னர் **ஸ்ரீ N. சுப்ரமணியன்** அவர்களுக்கும், இந்நூலில் சம்ஸ்க்ருத சமர்ப்பணம் ஸ்லோகங்கள் இயற்றி உதவிய சென்னை சம்ஸ்க்ருத கலாசாலை முதல்வர் வேதாந்த மீமாம்ச சிரோமணி வேதபாஷ்ய ரத்னம் **Dr. R. கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகளுக்கும்,** மேலும் அச்சுப்பிழைகளைத் திருத்திக்கொடுத்து அரும்பணியாற்றிய **ஸ்ரீ E.R. ரவிக்குமார்** அவர்களுக்கும் என்னுடைய குடும்பத்தின் சார்பில் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

இக்க்ரந்தத்தை **ஸ்ரீ ஸ்ரீ சாரதா சந்திரமௌலீச்வரர் அனுக்ரஹத்தை ஜகத்குரு ஸ்ரீ ஸ்ரீ அபிநவவித்யாதீர்த்த மஹாஸ்வாமிகளை** உள்ளத்தில் வைத்து பிரார்த்தித்து, ஸ்ரீமதி லிங்கம்மாள் ராமராஜு சாஸ்த்ர ப்ரதிஷ்ட்டா டிரஸ்ட் மூலம் வெளியிட்டுள்ளோம். ஸ்ரீசங்கர ஜெயந்தி நன்னாளில் ஸ்ரீஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ சாரதாபீடத்தில் தம் திருக்கரங்களால் வெளியிடுவதற்கு வாய்ப்பும், சம்மதமும் அளித்த **ஸ்ரீஸ்ரீ பாரதீதீர்த்த மஹாஸ்வாமிகளுக்கு** நாங்கள் ஸமர்ப்பணம் செய்கின்றோம்.

"ராமமந்திரம்" **பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜா**

ராஜபாளையம்

*06.05.2003*

# ॥ विषयानुक्रमणिका ॥







॥श्रीः॥

ओं तत्सद्ब्रह्मणे नमः

श्री गुरुचरणारविन्दाभ्यां नमः

श्रीविद्यारण्यविरचितः

# ॥ श्रीमच्छङ्करदिग्विजयः ॥

## अथ प्रथमः सर्गः

## முதலாவது ஸர்க்கம்

### उपोद्घातः

### முகவுரை

ஸ்ரீ வித்யாரண்யஸ்வாமிகள் பரமேசுவரனுடைய அவதாரமாகிய ஸ்ரீமத் சங்கரபகவத்பாதாசாரியருடைய திவ்யசரித்திரத்தை வர்ணிப்பதற்கு விருப்பம் கொண்டவராகி முதலில் குரு நமஸ்காரத்தைச் செய்து பின் தான் செய்யப்போகிற காரியத்தின் பிரதிக்ஞை கூறுகிறார்:

प्रणम्य परमात्मानं श्रीविद्यातीर्थरूपिणम् ।<br>
प्राचीनशङ्करजये सारः संगृह्यते स्फुटम् ॥ १

ஸ்ரீ வித்யா தீர்த்தர் என்ற ரூபத்துடன் கூடிய பரமாத்மாவை வணங்கி பிறகு புராதனமான சங்கரவிஜயம் என்ற நூலில் கூறும் விஷயம் சுருக்கிக் கூறப்படுகிறது என்பது செய்யுளின் பொருள். (நூல் இயற்றுவதற்கு முதலில் இஷ்டதேவனை வணங்கவேண்டியது அவசியம். அந்த வணக்கம் மானஸிகமாக மட்டும் இருந்தால் மற்றவர்களுக்கு வழிகாட்டியாக ஆகாது. ஆகையால் மற்றவர்களுக்கு தெய்வபக்தியை உண்டாக்குவது சான்றோர்களின் கடமையாகும். ஆனதுபற்றி தான் செய்யும் தெய்வவணக்கத்தை நூலில் இயற்றிக்காட்டினர். இச்செய்யுளில் ஞானோபதேசம் செய்கிற ஆசிரியர் பரமாத்மா எனக் கூறப்படுகிறது. ஆசிரியர் மூன்றுவகைப்படுகின்றனர். சரீரம் தோன்றுவதற்குக் காரணமான தந்தை முதல் ஆசிரியர். தர்மங்களை போதனை செய்பவர் இரண்டாமவர். ஆத்மஞானத்தைப் புகட்டுபவர் மூன்றாமவர். அவருக்கும் பரம்பொருளாகிய பரமாத்மனுக்கும் வேற்றுமையில்லை என்பதை இங்கு நூலாசிரியர் விளக்குகின்றார்: स वै सत्कर्मणां साक्षाद् द्विजातेरिह संभवः। आद्योऽङ्ग यत्राश्रमिणां यथाऽहं ज्ञानदो गुरुः ॥ என்று ஸ்ரீமத்

பாகவதத்திலுள்ள செய்யுள் இந்த விஷயத்தைத் தெரிவிக்கின்றது. இது ஸ்ரீகிருஷ்ணரால் சிறந்த பக்தனுகிய குசேலரிடம் கூறப்பட்ட வசனம். இதன் பொருள் மேற்கூறியபடி என்று ஸ்ரீதரஸ்வாமிகளுடைய அபிப்பிராயம்.

மேலும் இந்தச் செய்யுளினுல் நூலாசிரியர் குருபக்தியையும் உணர்த்துகின்ருர்: ''यस्य देवे परा भक्तिर्यथा देवे तथा गुरौ । तस्यैते कथिता ह्यर्थाः प्रकाशन्ते महात्मनः'' हति ॥ எவனுக்கு தேவனிடத்திலுள்ளதைப் போல் குருவினிடத்திலும் சிறந்த பக்தியுள்ளதோ அந்த மகானுக்குத்தான் அவர் கற்பிக்கும் பொருள்கள் விளங்கும் என்றும், அத்தகைய சிறந்த குருபக்தி உள்ளவனுக்கு ஆசிரியர் கற்பிக்காத சிறந்த விஷயங்களும் அவரது அனுக்கிரகத்தினுல் விளங்குகின்றன என்பது. आत्मनाम गुरोर्नाम नामातिकृपणस्य च । श्रेयस्कामो न गृह्णीयाद् ज्येष्ठापत्यकलत्रयोः ॥ மேன்மையை விரும்புகின்றவன் தன்னுடையவும், ஆசிரியருடையவும், லோபியினுடையவும், மூத்த குமாரனுடையவும், மனேவியினுடையவும் பெயரை கூறக்கூடாது.

இதன்படி இங்கு ஆசிரியர், இந்த மங்கள சுலோகத்தில் தனது ஆசிரியருடைய 'பாரதி' என்ற பதத்தைக் கூருமல் 'தீர்த்த' என்ற பதத்தைக் கூறினுர். இது காரணப் பெயராகும். சிறந்த வித்தையை உபதேசம் செய்து சிடர்களே அஞ்ஞானத்திலிருந்து காப்பாற்றி பரிசுத்தர்களாகச் செய்வதினுல் அவர், தீர்த்தரூபி. பெரியோர்களேக் கூறுகையில், 'ஸ்ரீ' என்ற பதத்தை முன்னிட்டுக் கூறவேண்டுமாதலால் அந்தச் சொல்லேயே முதலாக வைத்து உரைத்தார்.

தன்னுடைய குருவைப்போலவே உலககுருவாகிய 'ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாசாரியார்' அவர்களேயும் இந்தச் செய்யுளினுல் வணங்குகிருர் என்னும் பொருள் கொள்ளலாம். சிவபெருமானே ஸ்ரீ சங்கரராக இவ்வுலகில் அவதரித்து அஞ்ஞானிகளுடைய அஞ்ஞானத்தை தன்னுடைய சிறந்த உபதேசத்தினுல் நீக்கி அவர்களே பரிசுத்தர்களாகச் செய்ததுமன்றி முக்தர்களாகவும் செய்தமையால் அப்படிச் சொல்வதும் சிறந்ததாகும்.)

(முன்னேர்கள் இயற்றிய விஸ்தாரமான சங்கரவிஜயம் இருக்கையில் சுருக்கமான இந்த கிரந்தத்தினுல் என்ன பிரயோஜனம்? எல்லா விஷயங்களேயும் இதனுல் அறிந்து கொள்ள முடியாதல்லவா? என்ற ஆக்ஷேபத்திற்கு சமாதானம் கூறுகிருர்:-)

यद्वद् घटानां पटलो विशालो विलोक्यतेऽल्पे किल दर्पणेऽपि ।
तद्वन्मदीये लघुसंग्रहेऽस्मिन्नुद्वीक्ष्यतां शाङ्करवाक्यसारः ॥ २

பெரிதான குடம் அல்லது யானேக்கூட்டம் முதலான பதார்த்தங்களுடைய விசாலமான உருவம், அவைகளேக் காட்டிலும் சிறிதான கண்ணுடியில் பிரதிபலித்துக் காணப்படுகிறதல்லவா? அதுபோலவே என்னுடைய இந்த கிரந்தம் (நூல்) சுருக்கி எழுதப்பட்டதாக இருந்தபோதிலும் ஸ்ரீ சங்கரரைப் பற்றியுள்ள சாரமான சொற்களின் கருத்து குறைவின்றித் தெரிந்து கொள்ள காரணமாகவே இருக்கிறது.

மேலும் பலவகையில் தன்னுடைய அவை அடக்கத்தைக் கூறுகிறார்.

यथाऽतिरुच्ये मधुरेपि रुच्युत्पादाय रुच्यान्तरयोजनाऽर्हा ।
तथेष्यतां प्राक्कविहृद्यपद्येष्वेषाऽपि मत्पद्यनिवेशभङ्गी ॥ ३

மிகவும் இனிப்பான உணவுப்பொருளை உண்ணும்பொழுது அதனுடைய சுவையை அதிகமாக சுவைப்பதற்கு காரமான மற்றொரு பதார்த்தத்தை சாப்பிடவேண்டியதாக இருக்கிறதன்றோ; அதுபோலவே முன்னோர்களால் இயற்றப்பெற்ற செய்யுட்கள் நற்சுவை மிகுந்தவை. ஆதலால் அவைகளின் சுவைகளை நன்கு அனுபவிக்க இனிய சுவையற்ற என்னுடைய செய்யுட்களும் படிக்கத்தக்கவைகளே.

(தன்னுடைய இந்த நூலுக்கும் தக்க பயன் உண்டு என்பதை உதாரணத்துடன் கூறுகின்றார்:-)

स्तुतोपि सम्यक्कविभिः पुराणैः कृत्याऽपि नस्तुष्यतु भाष्यकारः ।
क्षीराब्धिवासी सरसीरुहाक्षः क्षीरं पुनः किं चकमे न गोष्ठे ॥ ४

முன்னோர்களாகிய கவிஞர்களால் நன்கு புகழ்ந்து கூறப்பட்டபோதிலும், பிரம்மசூத்திரங்களுக்கும், உபனிஷத்துக்களுக்கும், ஸ்ரீமத் பகவத் கீதைக்கும், பாஷ்யங்களை இயற்றிய அந்த மஹாசாரியார் என்னுடைய இந்த கிருதியினாலும் சந்தோஷமடைவாராக. பாற்கடலில் வாசம் செய்யும் தாமரைக்கண்ணனாகிய திருமால் ஸ்ரீகிருஷ்ணராக அவதரித்த காலத்தில் இடையர் குலத்தில் வாசம் செய்துகொண்டு அவர்கள் அளித்த பாலில் விருப்பம் கொள்ளவில்லையா? ஏன் அவ்வாறு விருப்பம் கொண்டார்? பாற்கடலிலேயே வாசம் செய்து கொண்டிருக்கிறவருக்கு பாலில் விருப்பமுண்டாகுமா? ஆயர் குலத்தில் உள்ளவர்களுடைய சிறந்த பக்திக்கு தான் வசப்பட்டவராகவன்றோ அங்கு வாசம் செய்ய விரும்பினார். அவர்களுடைய நிகரற்ற பக்தியே பாற்கடற்வாசியாகிய அவரையுங்கூட அவர்கள் அருளிய பாலைக் குடிக்கச்செய்தது. பகவானைக் கட்டுப்படுத்துவது பக்தியன்றோ? ஆகையால் அந்த சங்கரருடைய திருவடிமலர்களில் ஈடுபட்ட மனமுடைய தனது முயற்சிக்கு அந்தப் பரமாசாரியாருடைய பிரசாதம் கிடைக்குமென்ற நம்பிக்கையுடன் அதனை இந்தச் செய்யுளினால் பிரார்த்திக்கிறார். தான் இயற்றிய நூல் சுருக்கமாயினும் காவியத்தினுடைய நாயகராகிய சங்கரருடைய அருள் கிட்டுமென்பதற்கு ஏற்றதாக உவமானம் கூறினார். ஆயர்குலத்தில் கிடைத்த பால் சிறிதாயினும் அதைக்கொண்டு பாற்கடலில் வசிக்கும் பகவான் சந்தோஷமடைந்தார்.

(அவ்வாறு அந்த சங்கரருடைய குணங்களை வர்ணிப்பதனால் தன்னுடைய மனதிற்கு சுத்தியுண்டாகுவதே பயன் என்று கூறுகிறார்:-)

पयोब्धिविवरीसुनिःसृतसुधाझरीमाधुरीधुरीणभणिताधरीकृतफणाधराधीशितुः।
शिवङ्करसुशङ्कराभिधजगद्गुरोः प्रायशो यशो हृदयशोधकं कलयितुं समीहामहे॥ ५

பாற்கடலின் துவாரங்களிலிருந்து வெளியே வந்த அமிருதத்தின் பிரவாகத்தினுடைய சுவையைக்காட்டிலும் மிகவும் இனிப்பான

சொற்சுவையினால் ஆதிசேஷனுடைய சொற்களைத் தோற்கடித்தவரும், ஆகையினாலேயே 'நல்ல சங்கரன்' என்ற பெயர் கொண்டவருமாகிய உலககுருவினுடைய கீர்த்தியை வர்ணனை செய்ய விரும்புகின்றோம். அந்த கீர்த்தி கீர்த்தனம் செய்பவர்களுடைய மனதின் துர்க்குணங்களை நீக்கிச் சுத்தம் செய்யும் தன்மையுள்ளது.

(சங்கரருடைய குணங்களை வர்ணிப்பதற்குத் தனக்கும் தகுதி உண்டு என்பதை அவை அடக்கத்துடன் கூறுகிறார்:-)

क्वेमे शङ्करसद्गुरोर्गुणगणा दिग्जालकूलङ्कषाः
कालोन्मीलितमालतीपरिमलावष्टंभमुष्टिंधयाः ।
क्वाहं हन्त तथाऽपि सद्गुरुकृपापीयूषपारम्परी -
मग्नोन्मग्नकटाक्षवीक्षणबलादस्ति प्रशस्ताऽर्हता ॥ ६

இருகரைகளும் புரண்டு மீறிச் செல்லும் நதிப்பிரவாகம்போல் எல்லா திசைகளின் எல்லைகளைக் கடந்து பரந்துள்ளவைகளும், வஸந்தம், சரத்து ஆகிய காலங்களில் மலர்ந்து மிக பரிமளவாசனையுள்ள மல்லி முல்லை ஆகிய புஷ்பங்களுடைய கர்வத்தை நாசம் செய்யும் சக்தியுள்ள அந்த ஸத்குருவின் நற்குணங்களுடைய கூட்டங்கள் எங்கே? கேவலம் ஒரு ஜந்துவாகிய நான் எங்கே? ஆயினும், அந்த ஸத்குருவினுடைய குணாமிருதப்பிரவாகத்தில் மூழ்கி எழுந்திருத்தலாகிய கடைக்கண்பார்வையின் பலத்தினால் எனக்கும் அந்த ஸத்குருவினுடைய குணங்களைக் கூறுவதற்குத் தகுதி உண்டு. (இந்த சுலோகத்தில் ஸத்குரு என்ற பதம் தனது குருவாகிய வித்யா தீர்த்தர் என்ற அர்த்தத்தையும், ஸ்ரீ சங்கரபகவத்பாதாசாரியாளையும் கூறுகின்றது.) (1) ''अस्ति ब्रह्मेति चेद्वेद, सन्तमेनं ततो विदुरिति'' (2)''सदेव सोम्येदमग्र आसीत्'' (3) ''ब्रह्म वेद ब्रह्मैव भवति'' என்ற வசனங்கள் உள. (1) பிரம்ம வஸ்துவை இருக்கிறதாக எவன் அறிந்துகொள்கிறானோ அவனை ஸத்து என்று சான்றோர்கள் அறிந்துகொள்கிறார்கள். (2) ஹே ஸோம்ய (நல்லவனே) இந்த உலகம் முதலில் ஸத்தான பரமாத்மாவாகவே இருந்தது. (3) அந்த பிரம்மவஸ்துவை அறிந்தவன் பிரம்மமாகவே ஆகிறான், என்பது பொருள். மேற்கூறிய வசனங்களின்படி ஸத்குரு என்ற பதம் பிரம்மநிஷ்டரைக் கூறுகிறது. அத்தகையவருடைய அனுக்கிரஹத்தினால் கிட்டாத பொருள் ஒன்றுமில்லை. ஆதலால் தனக்குப் பரமாசாரியாளுடைய குணங்களை வர்ணிப்பதற்கு அதிகாரம் உண்டு என்பது திண்ணம். குருகடாக்ஷம் தான் அதற்கு மூலமென்று அடக்கிக் கூறினார்.)

धन्यंमन्यविवेकशून्यसुजनंमन्याब्धिकन्यानटी-
नृत्योन्मत्तनराधमाधमकथासंमर्ददुष्कर्दमैः ।
दिग्धां मे गिरमद्य शङ्करगुरुक्रीडासमुद्यद्यशः-
पारावारसमुच्चलज्जलझरैः संक्षालयामि स्फुटम् ॥ ७

பாக்கியமற்றவர்களாயினும் தங்களை மிக பாக்கியவான்கள் என்று நினைத்துக் கொள்ளுபவர்களும், விவேகமற்றவர்களும், தங்களைத் தாமாகவே சிறந்தவர்களென்று கருதுகின்றவர்களும், பாற்கடலில் தோன்றிய லக்ஷ்மியாகிய

சஞ்சலசுபாவமுள்ள நாட்டியப்பெண் நர்த்தனம் செய்வதினுலுண்டான செல்வத்தினுல் மிகவும் செருக்கடைந்தவர்களும், மிகவும் அதமர்களுமாகிய மனிதர்களுடைய கதைகளைக் கூறுதலாகிய அதிகமான கெட்ட சேற்றினுல் பூசப்பெற்ற என்னுடைய வாக்கை இப்பொழுது ஸ்ரீ சங்கரராகிய பரமாசாரியருடைய லீலாவிசேஷங்களால் தோன்றிய கீர்த்தியாகிய சமுத்திரத்தின் ஜலப்பிரவாகத்தினுல் நன்கு கழுவிச் சுத்தம் செய்து கொள்ளுகிறேன்.

(असत्कीर्तनकान्तारपरिवर्तनपांसुलाम् । वाचं शौरिकथालापैर्गङ्गयेव पुनीमहे ॥ என்று வியாசபகவான் கூறுகிறுர். அஸத்துக்களேயும் அஸத்துக்களான பொருள்களேயும் அடிக்கடி கூறுதலாகிய காட்டில் புரளுதலினுல் தூசிபடிந்து அழுக்குள்ளதாகிய வாகிந்திரியத்தை ஸ்ரீமன் நாராயணனுடைய சரித்திரங்களைக் கூறுதலாகிய கங்காநதி ஜலத்தினுல் சுத்தம் செய்துகொள்ளுகிறோம் என்பது அதன் பொருள். இது இங்கு கவனிக்கத்தக்கது.

'शिवेन वचसा त्वा गिरिशाच्छा वदामसि' என்று வேதம் கூறுகின்றது. மறைகளாகிய மலேயில் சயனம் செய்கிறவரே (படுத்திருக்கிறவரே) உம்மை மங்களமான வசனத்தினுல் நன்கு கூறுகிறோம் என்பது பொருள். பரமசிவன் வேதங்களால் அறிந்து கொள்ளத்தக்கவர். அவரை வர்ணிக்கின்ற வசனமும் நாவும் பரிசுத்தமானது என்ற மேற்கூறிய வசனத்தின் கருத்தும் இங்கு கவனிக்கத்தக்கது.)

(இவ்வாறு, நரர்களைப் புகழ்ந்ததினுல் நிர்ம்மலத்தன்மை நீங்கிய வாக்கை நரர்களுக்கும் மற்ற எல்லா பிராணிகளுக்கும் பதியாகிய பரமசிவனுடைய அவதாரமாகிய பரமாசாரியாளுடைய குணங்களைக் கூறுதலினுல் சுத்தம் செய்து கொள்ளுதலேயே பயனுகக் கூறி இதனுல் மற்ற அறிஞர்களுக்கும் சந்தோஷமுண்டாகுமென்று கூறுகிறுர்:-)

वन्ध्यासूनुखरीविषाणसदृशक्षुद्रक्षितीन्द्रक्षमा -
शौर्यौदार्यदयादिवर्णनकलादुर्वासनावासिताम् ।
मद्वाणीमधिवासयामि यमिनस्त्रैलोक्यरङ्गस्थली -
नृत्यत्कीर्तिनटीपटीरपटली चूर्णैर्विकीर्णैः क्षितौ ॥ ८

'மலடி மகன், கழுதைக் கொம்பு' என்பவைபோல் இல்லாதவைகளான பொறுமை, சௌர்யம், கொடை, கருணை முதலான குணங்களை கற்பனை செய்து அற்பர்களான அரசர்களை வர்ணித்ததினுல் என்னுடைய வாக்கு கெட்ட நாற்றம் நிறைந்ததாகி விட்டது. அதனை, பூமியில் ஏராளமாகப் பரவிக்கிடக்கின்ற பரிமள வாசனையுள்ள மகரந்தத் தூளினுல் நல்ல மணமுள்ளதாகச் செய்து கொள்கிறேன். அந்த பரிமள மகரந்தத்தூள் யாதெனில் ஐம்பொறிகளேயுமடக்கிய சிறந்த துறவியான ஸ்ரீ சங்கரருடைய கீர்த்தியாகிய நாட்டியப்பெண், மூன்று உலகமாகிய அரங்கத்தில் நர்த்தனம் செய்யும்போது அவளுடைய தேகத்தினின்றும் உதிர்ந்து கீழே பரவலாக விழுந்த மகரந்தத் தூள்களே ஆகும். அவைகளைக் கொண்டு நாவை பரிமள வாசனையுள்ளதாகச் செய்து கொள்கிறேன்.

पीयूषद्युतिखण्डमण्डनकृपारूपान्तरश्रीगुरु -
प्रेमस्थेमसमर्हणार्हमधुरव्याहारसूनोत्करः ।
प्रौढोऽयं नवकालिदासकवितासन्तानसंतानको
दद्यादद्य समुद्यतः सुमनसामामोदपारम्परीम् ॥ ९

அமிருதமய கிரணங்களைக்கொண்ட சந்திரக்கலையை தலையிலணிந்துள்ள பரமசிவன் உலகிலுள்ள ஆன்மாக்களிடம் கருணை கூர்ந்து பரமாச்சாரியராகத் தோன்றினர். அவரிடம் கொண்ட சிறந்த அன்பாகிய பக்தியின் உறுதியான நிலையினல் (அவருடைய பாதங்களில்) ஸமர்ப்பணம் செய்யத் தகுந்த சொற்களாகிய மலர்களைத் தோற்றுவித்தும், புதிய காளிதாசனுடைய செய்யுட் தொகுதியுமாகிய, வளர்ச்சியடைந்த இந்த கற்பகவிருக்ஷம் அறிஞர்களுக்கு ஆனந்தப்பிரவாகத்தை அளிக்கட்டும். (நன்கு வளர்ந்து மலர்ந்த மலர்கள் நிரம்பிய கற்பகவிருக்ஷம், ஸுமனஸ் என்ற பதத்தினல் கூறப்படுகின்ற தேவர்களுக்கு ஆனந்தத்தை அளிக்கின்றது. அதில் மலர்ந்த மலர்கள் பரமசிவனுடைய பாதங்களில் அவர்களால் ஸமர்ப்பணம் செய்யும்படி நேருகிறதினலும் அவர்களுக்கு மிக்க ஆனந்தம் உண்டாகிறது. இந்த கவிதையிலுள்ள சொற்களும் அந்த பரமசிவனுடைய கருணவதாரமாகிய ஸ்ரீ பரமாச்சாரியாளுடைய பாதாரவிந்தங்களின் சிறப்பைக் கூறுவதால் 'ஸுமனஸ்' என்ற சொல்லால் கூறப்படும் நல்ல மனமுடைய அறிஞர்களுக்கு ஆனந்தத்தை அளிக்கின்றன என்று சிலேடையாக கூறுகிருர்.)

सामोदैरनुमोदिता मृगमदैरानन्दिता चन्दनै-
र्मन्दारैरभिवन्दिता प्रियगिरा काश्मीरजैः स्मेरिता ।
वागेषा नवकालिदासविदुषो दोषोज्झिता दुष्कवि-
व्रातैर्निष्करुणैः क्रियेत विकृता धेनुस्तुरुष्कैरिव ॥ १०

புதிய காளிதாசன் என்ற அறிஞருடைய வாக்காகிய பசு மிகவும் சந்தோஷத்துடன் பரிமளவாசனையுள்ள சந்தனக் குழம்புகளைப் பூசி, மந்தார புஷ்பங்களால் அலங்காரம் செய்து, கஸ்தூரி, குங்குமம் முதலான பொருள்களால் வாசனையுள்ளதாகச் செய்து, பிரியமான வசனத்தினல் ஆதரவளித்து சிலரால் புகழப்படுகிறது. மாசற்றதாகவும் இருக்கிறது. ஆயினும் கருணையற்ற துருக்கர்களால் பசு துன்பப்படுத்தப்படுவது போல் கருணையற்ற துஷ்ட கவிகளால் ஏளனம் செய்யப்படும். (என்று அஞ்சுகிருர்)

(வேறு ஒரு பொருள் अमृगमदैः अनुमोदिता, अचन्दनैः आनन्दिता என்று பதத்தைப் பிரித்து மிருகங்களின் மாமிசத்தை சாப்பிடுவதினல் உண்டாகும் மதமுள்ளவரைக்காட்டிலும் வேருனவர்களாலும் மாமிசபக்ஷணம் செய்யாதவர்களாதலால் அஹிம்சை விரதம் கொண்டவர்களாலும், சந்தனம், மாலை, பெண் முதலாகிய சிற்றின்பப் பொருள்களில் ஈடுபடாதவர்களாலும் = பிரம்மநிஷ்ட்டர்களாலும், ஆமோதிக்கப்பட்டு ஆனந்தத்துடன் ஆதரிக்கப்பட்டது என்றும், मन्दारैरभिनन्दिता மந்தர்களுக்கும் 'अं' வாஸுதேவனை 'र' கொடுக்கிறவர்களால் (தங்களுடைய யோகசக்தியின் மகிமையால்

மூடர்களுடைய ஹ்ருதயகமலத்திலும் ஸ்ரீமானுகிய நாராயணன் விளங்கும்படி அருள் புரிபவர்களால்) புகழப்பெற்றதும், காஷ்மீரதேசத்தவர்களாகிய அறிஞர்களாலும் சந்தோஷத்துடன் ஆதரவு செய்யப்பட்டதாகிய என்னுடைய இந்தக் கவிதை கருணையற்ற துருக்கர்போன்ற அற்ப கவிகளால் ஆதரிக்கப்படாவிடின் அதுபற்றி கவலையில்லை.)

यद्वा दीनंदयालवः सहृदयाः सौजन्यकल्लोलिनी -
दोलान्दोलनखेलनैकरसिकस्वान्ताः समन्तादमी ।
सन्तः सन्ति परोक्तिमौक्तिकजुषः किं चिन्तयाऽनन्तया
यद्वा तुष्यति शङ्करः परगुरुः कारुण्यरत्नाकरः ॥ ११

அல்லது, எளியவர்களிடம் கருணை கூறுகின்றவர்களும் பிறருடைய சிரமத்தை அறிகின்றவர்களும் நல்ல சுபாவமாகிய நதியில் சஞ்சாரம் செய்வதிலேயே மிகவும் ஆசைகொண்ட மனமுடையவர்களும், பிறருடைய சொற்களை முத்துமாலை போல் தங்களுடைய கழுத்தில் (நெஞ்சில்) அணிந்து கொள்பவர்களுமாகிய சான்றோர்கள் எல்லா இடத்திலும் இருக்கிறார்களன்றோ! அதிகமான சிந்தனையை ஏன் வீணுகக்கொள்ள வேண்டும்? எவ்விதத்திலும் கருணைக்கடலும் பரமாசாரியருமாகிய ஸ்ரீசங்கரர் சந்தோஷமடைவார். ஆகையால் முயற்சி வீணுகாது.

उपक्रम्य स्तोतुं कतिचन गुणाञ्छङ्करगुरोः
प्रभग्नाः श्लोकार्धे कतिचन तदर्धार्धरचने ।
अहं तुष्टूषुस्तानहह कलये शीतकिरणं
कराभ्यामहर्तुं व्यवसितमतेः साहसिकताम् ॥ १२

அந்த பரமகுருவாகிய ஸ்ரீசங்கரருடைய குணங்களைக் கூறுவதற்காக ஆரம்பித்து சிலர் பாதி செய்யுள் இயற்றுவதற்குள்ளேயே தோல்வியுற்றனர். வேறுசிலர் கால்செய்யுள் எழுதுவதற்கு முன்னமே தோல்வியுற்றனர். இத்தகைய ஸ்ரீகுருவின் குணங்களை துதிசெய்ய விரும்பிய நான் சந்திரனை கைகளால் பிடிப்பதற்கு தீர்மானம் செய்த மூடனுடைய பிடிவாத குணத்தைப் பின்பற்றியவனுக இருக்கின்றேன்.

तथाऽप्युज्जृम्भन्ते मयि विपुलदुग्धाब्धिलहरी -
लसत्कल्लोलालीलसितपरिहासैकरसिकाः ।
अमी मूकान्वाचालयितुमपि शक्ता यतिपतेः
कटाक्षाः किं चित्रं भृशमघटिताभीष्टघटने ॥ १३

ஆயினும், ஐம்பொறிகளை அடக்கிய துறவிகளில் சிறந்தவராகிய ஆசாரியருடைய கடைக்கண் பார்வைகள் என்னிடத்தில் விசேஷமாக பரவுகின்றன. பரந்த பாற்கடலில் பொங்கும் அலைகளினழகையும், சுவையையும் ஏளனம் செய்கின்ற அந்த கடைக்கண் பார்வைகள் ஊமைகளைக்கூட மிக பேசும் திறமையுள்ளவர்களாக மாற்றும் திறமையுள்ளவை. அப்படி இருக்கையில் முடியாத காரியம் நிறைவேறுவதில் என்ன ஆச்சரியம்?

अस्मजिह्वाग्रसिंहासनमुपनयतु स्वोक्तिधारामुदारा -
मद्वैताचार्यपादस्तुतिकृतसुकृतोदारता शारदाम्बा ।
नृत्यन्मृत्युञ्जयोच्चैर्मुकुटतटकुटीनिः स्रवत्स्वःस्रवन्ती -
कल्लोलोद्वेलकोलाहलमदलहरीखण्डिपाण्डित्यहृद्याम् ॥ १४

ஒப்புயர்வற்ற ஆசாரியபாதாளுடைய குணங்களை ஸ்துதி செய்வதினுல் ஏற்படும் புண்யம் சிறப்பையடைந்தமையால் வாக்குத்தேவதையாகிய ஸரஸ்வதீதேவீ, ஆனந்ததாண்டவம் செய்கின்ற பரமசிவனுடைய ஜடையாகிய குகையிலிருந்து கிளம்பி கீழே விழுகின்ற தேவகங்கையினுடைய பெரிய அலைகளின் அளவுகடந்த ஆரவாரத்தின் கர்வத்தை நாசம் செய்யும் சக்தியுள்ளதும், இனியதுமாகிய, சிறந்த வாக்குவிலாசத்தை (சொற்பொழிவை) என்னுடைய நாவாகிய சிங்காசனத்தில் அமரும்படி செய்ய வேண்டும் (என்று வேண்டுகோள்.)

क्वेदं शङ्करसद्गुरोः सुचरितं क्वाहं वराकी कथं
निर्बध्नासि चिरार्जितं मम यशः किं मज्जयस्यम्बुधौ ।
इत्युक्त्वा चपलां पलायितवतीं वाचं नियुंक्ते बलात्
प्रत्याहृत्य गुणस्तुतौ कविगणश्चित्रं गुरोर्गौरवम् ॥ १५

''சங்கரராகிய பரமாசாரியருடைய சிறந்த திவ்ய சரித்திரம் எங்கே, அற்பையாகிய நான் எங்கே, என்னை இந்த விஷயத்தில் ஏன் வற்புறுத்துகிருய். வெகுகாலமாக என்னுல் சம்பாதனை செய்யப்பட்ட கீர்த்தியை ஏன் சமுத்திரத்தில் மூழ்கும்படி செய்கிருய்'' என்று கூறி தங்களை விட்டு பயந்து ஓடிய சஞ்சலையான வாக்கை (வாகிந்திரியத்தை) வற்புறுத்தி இழுத்துக் கொண்டுவந்த கவிகளின் கூட்டம் அந்த பரமகுருவினுடைய குணங்களை வர்ணிக்கும்படி நியமிக்கிறது. இது அந்தப் பரமகுருவினுடைய விசித்திரமான கௌரவமேயாகும்.

रुक्षैकाक्षरवाङ्निघण्टुशरणैरौणादिकप्रत्यय -
प्रायैर्हन्त यङन्तदन्तुरतरैर्दुर्बोधदूरान्वयैः ।
क्रूराणां कवितावतां कतिपयैः कष्टेन कृष्टैः पदै -
र्हाहा स्याद्वशगा किराततततेरेणीव वाणी मम ॥ १६

கடூரங்களாயும், ஒரே எழுத்துள்ள சொற்களின் பொருளைக் கூறும் நிகண்டுக்களால் பொருள் விளக்கமுடையவைகளும் உணுதி பிரத்யயங்களை கொண்டவைகளும், யஙந்தங்களால் கடினங்களும், நலிந்து பொருள் விளக்கும் தன்மையுள்ளவையும், தூரத்திலுள்ள சொற்களுடன் தொடர்ந்து (தொக்கி) பொருள் கூறுகின்றவைகளும், கடூரர்களான கவிஞர்களால் வற்புறுத்தி இழுக்கப்பட்டுத் தொகுக்கப்பட்டவைகளுமாகிய சொற்களால் எனது வாக்கு (வாக்தேவி), வேடர்களின் கூட்டத்தில் அகப்பட்ட மான்பேடையைப் போல் வருந்தும் அன்றோ! என்ன கஷ்டம்.

அப்படியாயின் காவ்யத்தை இயற்றுவதற்கு ஏன் முயற்சிக்க வேண்டும் என்ற ஆக்ஷேபம் தோன்ற பகவத்பாதாளாகிய பரமேசுவரருடைய குணங்களை

கூறுவதனால், தான் பாக்யமுற்றவனாக விளங்குவதுடன், அதனை கற்கின்றவர்களும் அவ்வாறு பாக்யவான்களாக விளங்குகிறார்கள் என்று கூறுகிறார்:-

नेता यत्रोल्लसति भगवत्पादसंज्ञो महेशः
शान्तिर्यत्र प्रकचति रसः शेषवानुज्ज्वलाद्यैः ।
यत्राविद्याक्षतिरपि फलं तस्य काव्यस्य कर्ता
धन्यो व्यासाचलकविवरस्तत्कृतिज्ञाश्च धन्याः ॥ १७

எந்த காவ்யத்தில் பரமேசுவரருடைய அவதாரமாகிய பகவத்பாதர் என்று பிரசித்திபெற்றவர் நாயகராகவும் 'சாந்தி' ரசம் நிலையுள்ளதாகவும், சிருங்காரம் முதலிய மற்ற ரசங்கள் அங்கங்களாகவும், அவித்தையின் நாசம் பயனாகவும் இருக்கின்றதோ அத்தகைய காவ்யத்தை இயற்றுகின்றவன் வியாசமுனிவர் போல் நிலைபெற்ற சிறந்த கவியாகவும் மிக பாக்கியசாலியாகவும் இருக்கின்றான். அந்த காவ்யத்தை படித்துப் பொருளை அறிந்து கொள்கிறவர்களும் பாக்கியசாலிகள்.

तत्रादिम उपोद्घातो द्वितीये तु तदुद्भवः ।
तृतीये तत्तदमृतान्धोऽवतारनिरूपणम् ॥ १८

चतुर्थसर्गे तच्छुद्धाष्टमप्राक्चरितं स्थितम् ।
पञ्चमे तद्योग्यसुखाश्रमप्राप्तिनिरूपणम् ॥ १९

महताऽनेहसा यैषा सम्प्रदायागता गता ।
तस्याः शुद्धात्मविद्यायाः षष्ठे सर्गे प्रतिष्ठितिः ॥ २०

तद्वद्व्यासाचार्यसन्दर्शविचित्रं सप्तमे स्थितम् ।
स्थितोऽष्टमे मण्डनार्यसंवादो नवमे मुनेः ॥ २१

वाणीसाक्षिकसार्वज्ञनिर्वाहोपायचिन्तनम् ।
दशमे योगशक्त्या भूपतिकायप्रवेशनम् ॥ २२

बुद्ध्वा मीनध्वजकलास्तत्प्रसङ्गप्रपञ्चनम् ।
सर्ग एकादशे तूग्रभैरवाभिधनिर्जयः ॥ २३

द्वादशे हस्तधात्र्यार्यतोटकोभयसंश्रयः ।
वार्तिकान्तब्रह्मविद्याचलनं तु त्रयोदशे ॥ २४

चतुर्दशे पद्मपादतीर्थयात्रानिरूपणम् ।
सर्गे पञ्चदशे तूक्तं तदाशाजयकौतुकम् ॥ २५

षोडशे शारदापीठवासस्तस्य महात्मनः ।
इति षोडशभिः सर्गैर्व्युत्पाद्या शाङ्करी कथा ॥ २६

பதினாறு ஸர்க்கங்கள் அடங்கிய அந்த காவ்யத்தில் முதல் ஸர்க்கத்தில் முகவுரையும், இரண்டாவதில் பரமேசுவரருடைய அவதாரமும், மூன்றாவதில் அந்தந்த தேவர்களுடைய அவதாரமும் நிரூபணம் செய்யப்படுகின்றது. நான்காவது ஸர்க்கத்தில் அவருடைய எட்டு வயதுக்கு முன்னுள்ளதான (சரித்திரம்) அவருடைய தூய்மையுள்ள சரித்திரம் - அடங்கியது. ஐந்தாவதில் அவருக்கு தக்கதான சுகத்திற்கு காரணமான நான்காவது ஆசிரமத்தின் நிரூபணம். அநேக காலமாக சம்பிரதாயம் கெட்டதினால் குறைவடைந்த பரிசுத்தமான பிரும்மவித்தையை நிலைநாட்டுதல், ஆறாவது ஸர்க்கத்தில் உள்ளது. ஏழாவதில் அந்த சங்கராச்சாரியார் வியாசமுனிவரை சந்தித்ததினால் உண்டான ஆச்சரியமான நிகழ்ச்சி. எட்டாவதில் மண்டனமிச்ரருடன் வாதம். ஒன்பதில் சரஸ்வதிதேவியை சாட்சியாக வைத்துக்கொண்டு தன்னுடைய ஸர்வக்ஞத்தன்மையை அடைவதற்குள்ள வழியை யோசனை செய்தல், பத்தாவதில் யோகசக்தியினால் அரசனுடைய உடலில் புகுதலும், காமசாஸ்திரத்தின் கலைகளை அறிந்து அவைகளின் நிரூபணமும் உள்ளது. பதினொன்றாவது ஸர்க்கத்தில் உக்ரபைரவர் என்ற காபாலிகனுடைய வதை. பன்னிரண்டில் ஹஸ்தாமலகாச்சாரியார், தோடகாச்சாரியார் என்ற இருவர்களை அடைதல், பதிமூன்றாவதில் வார்த்திகம் வரையிலுள்ள பிரம்மவித்யா நூலை பிரசாரம் செய்தல். பதினான்காவதில் பத்மபாதாசாரியருடைய தீர்த்தயாத்திரையின் வரலாற்றைக் கூறுதல். பதினைந்தாவதில் அந்த பரமாசாரியருடைய திக்விஜயத்திற்குள்ள முயற்சி. பதினாறாவதில் அந்த மகான் ''சாரதாபீடம்'' என்ற சர்வக்ஞபீடத்தை அடைதல். இவ்வாறு பதினாறு ஸர்க்கங்களால் சங்கரருடைய திவ்ய சரித்திரம் விவரிக்கப்பட்டதாக இருக்கிறது.

सैषा कलिमलच्छेत्री सकृच्छुत्याऽपि कामदा ।
नानाप्रश्नोत्तरै रम्या विदामारभ्यते मुदे ॥ २७

கலியினுடைய தோஷத்தை நாசம் செய்கின்றதும், ஒரு தடவை கேட்பதினாலேயே விருப்பங்களை அளிக்கின்றதும், பல சம்பாஷணைகளால் மனதைக் கவருகின்றதும் ஆகிய அத்தகைய சிறந்த சரித்திரம் அறிஞர்களுக்கு சந்தோஷம் உண்டாவதற்காக இயற்றப்படுகிறது.

एकदा देवता रूप्याचलस्थमुपतस्थिरे ।
देवदेवं तुषारांशुमिव पूर्वाचलस्थितम् ॥ २८

ஒருநாள் தேவர்கள், கிழக்கு மலையில் விளங்கும் சந்திரனைப் போல் பிரகாசிக்கிறவரும், கைலாசமலையில் வசிக்கிறவரும், தேவர்களுக்கெல்லாம் தேவருமாகிய சிவபெருமானைத் துதித்தனர்.

प्रसादानुमितस्वार्थसिद्धयः प्रणिपत्य तम् ।
मुकुलीकृतहस्ताब्जा विनयेन व्यजिज्ञपन् ॥ २९

அந்த பரமாத்மனது முகமலர்ச்சியால் தங்களுடைய காரியம் நிறைவேறும் என்று ஊகித்து அறிந்த தேவர்கள் மலர்போன்ற கைகளை கூப்பியவர்களாக பணிவுடன் தெரிவித்தனர்.

विज्ञातमेव भगवन्विद्यते यद्धिताय नः ।
वञ्चयन्सुगतान् बुद्धवपुर्धारी जनार्दनः ॥ ३०

பகவானே! எங்களுடைய நன்மைக்காக நாராயணன் புத்தசரீரத்தை அடைந்தவராக சுகதர்களை வஞ்சித்தார் என்பது தங்களுக்குத் தெரிந்த விஷயமே.

तत्प्रणीतागमालम्बैर्बौद्धैर्दर्शनदूषकैः ।
व्याप्तेदानीं प्रभो धात्री रात्रिः संतमसैरिव ॥ ३१

பிரபுவே! அந்த புத்தாவதாரத்தில் இயற்றிய நூல்களை பின்பற்றி, ஆஸ்திகமதத்தை தூஷிக்கின்ற பௌத்தர்களால் இப்பொழுது பூமி, இருளினால் இரவு வியாபிக்கப்படுவதுபோல் வியாபிக்கப்பட்டதாக இருக்கிறது.

वर्णाश्रमसमाचारान्द्विषन्ति ब्रह्मविद्विषः ।
ब्रुवन्त्याम्नायवचसां जीविकामात्रतां प्रभो ॥ ३२

ஹே பிரபுவே! பிரம்மத்துவேஷம் கொண்டவர்களாக மனிதர்கள் வர்ணாசிரமதர்மங்களை வெறுக்கின்றனர். மறைகள் கூறும் வசனங்கள் உலக வாழ்விற்கு மட்டும் காரணமேயன்றி பரலோகசுகத்தையும், துக்கத்தையும் கூறுகின்றனவல்ல என்று நிரூபிக்கிறார்கள்.

न सन्ध्यादीनि कर्माणि न्यासं वा न कदाचन ।
करोति मनुजः कश्चित्सर्वे पाखण्डतां गताः ॥ ३३

ஸந்தியாவந்தனம் முதலிய நல்ல கடமைகளை தகுந்த மனிதன் செய்வதில்லை. (மறைகள் புகழ்ந்து கூறும்) ஸன்யாஸதர்மத்தையும் பின்பற்றுகிறவனில்லை. எல்லோரும்பாக்கண்டத்தன்மையை (பாஷண்டத்தன்மையை) அடைந்து விட்டனர்.

( पाशब्देन त्रयीधर्मः पा रक्षण इति स्मृतेः । तं खण्डयन्ति ये तर्कैस्ते पाखण्डा इति स्मृताः ॥ 'பா' என்ற தாதுவிற்கு காப்பாற்றுதல் என்று பொருள். உலகமனைத்தையும் காப்பாற்றுகின்ற பொருள் 'தர்மம்' = அவனவனுடைய 'கடமை.' அந்த தர்மத்தை தமது புத்தியில் தோன்றும் குயுக்திகளால் கண்டித்து மறுத்து விபரீதமாக பேசி செயலாற்றுகிறவர்கள் பாகண்டர்கள். இந்தச் சொல் பாஷண்டர்கள் என்று மருவியது.)

श्रुते पिदधति श्रोत्रे क्रतुरित्यक्षरद्वये ।
क्रियाः कथं प्रवर्तेरन् कथं क्रतुभुजो वयम् ॥ ३४

'क्रतु' = யாகம் என்ற இரண்டு எழுத்துக்கள் கூறப்படுகையில் வெறுப்பினால் செவிகளை மூடிக்கொள்கின்றனர். இப்படி இருக்கையில் வேள்விகள் எவ்வாறு நடைபெறும்? நாங்கள் வேள்விகளில் கொடுக்கக்கூடிய அவிற்பாகத்தை எவ்வாறு உண்ண முடியும்?

(''तस्मादितः प्रदानं देवा उपजीवन्ति, तस्मादमुतः प्रदानं मनुष्याः'' என்று வேதவசனம். இவ்வுலகில் நடைபெறும் வேள்விகளில் அளிக்கப்படுகின்ற ஹவிஸ் முதலியவைகளால் தேவர்கள் ஜீவிக்கின்றனர். விண்ணுலகத்திலிருந்து

அளிக்கப்படும் மழையினுல் இவ்வுலகம் உய்கின்றது என்று மேற்கூறிய வசனத்தின் பொருள்.

''दुदोह गां स यज्ञाय सस्याय मघवा दिवम् । सम्पद्विनिमयेनोभौ दधतुर्भुवनद्वयम् ॥'' என்று காளிதாசர் கூறுகிருர்.

அந்த திலீப மகாராஜன் யக்ஞம் செய்வதற்காக இவ்வுலகிலுள்ள ஜனங்களிடமிருந்து (கப்பம்) வரி வசூலித்தான். மண்ணுலகத்திற்கு மழை பொழிவதற்காக தேவேந்திரன் சுவர்க்கத்தைக் கறந்தான். (தேவர்களுக்கு உத்தரவளித்து அவ்வாறு செய்வித்தான்.) இவ்வாறு அவ்விருவர்களும் இரண்டு உலகங்களையும் தமது செல்வங்களையே கைமாறு செய்துகொண்டு காப்பாற்றினுர்கள் என்று இந்தச் செய்யுளின் கருத்து.

''अमृतं नाम यत्सन्तो मन्त्रजिह्वेषु जुह्वति'' என்று மகாகவி மாகன் கூறுகிருன். சான்ருேர்கள் வேள்விகளில் மந்திரங்களை ஜபித்து பக்தியுடன் அக்னிகளில் எந்த திரவ்வியத்தை ஹோமம் செய்கின்றனரோ அதுதான் தேவர்கள் உட்கொள்ளும் அமிருதம் என்று அதன் பொருள். இவைபோன்ற வசனங்கள் இங்கு கவனிக்கத்தக்கவை.)

शिवविष्णवागमपरैर्लिङ्गचक्रादिचिह्नितैः ।
पाखण्डैः कर्म संन्यस्तं कारुण्यमिव दुर्जनैः ॥ ३५

சைவம் வைஷ்ணவம் என்ற நூல்களை பின்பற்றியும், உடலில் லிங்கம், சக்கரம் முதலிய குறிகளை குறிப்பிட்டுக் கொண்டும், துஷ்டர்கள் கருணையை கைவிடுவதுபோல் பாஷண்டர்கள் தர்மங்களை கைவிட்டனர்.

अनन्येनैव भावेन गच्छन्त्युत्तमपूरुषम् ।
श्रुतिः साध्वी मदक्षीबैः का वा शाक्यैर्न दूषिता ॥ ३६

தன் கணவனிடத்தில் விசேஷமான பக்தியுடன் அவனை அடைவதற்கு சென்றுகொண்டிருக்கும் பதிவிரதைபோலுள்ள 'சுருதி' ஒரே கருத்துடன் பரமபுருஷனை நிரூபணம் செய்கின்றதாக அவனையே அடைகின்றது. அத்தகைய எந்த சுருதிதான், மதுபானம் முதலியதனுல் விவேகமிழந்து மதம் பிடித்த பௌத்தர்களால் கண்டிக்கப்படாமலிருக்கிறது? (துஷ்டர்களால் பதிவிரதையான மங்கைக்கு தீங்கு ஏற்படுவதுபோல் 'சுருதி'க்கு = வேதத்திற்கு அர்த்தம் மாறுபட்டதால் தீங்கு உண்டாயிற்று. ('சுருதி' பெண்பாலானதுபற்றி பதிவிரதைக்கு உபமேயமாக கூறப்பட்டுள்ளது.)

सद्यः कृत्तद्विजशिरः पङ्कजार्चितभैरवैः ।
न ध्वस्ता लोकमर्यादा का वा कापालिकाधमैः ॥ ३७

தற்பொழுது அந்தணர்களுடைய சிரஸ்ஸை அறுத்து அவைகளாகிய தாமரைப்பூக்களால் பைரவனுக்கு பூஜைசெய்யும் செய்கையுள்ள காபாலிக அதமர்களால் உலகத்திலுள்ள எந்த நல்ல நிலைமைதான் நாசமடையாமலுள்ளது?

अन्येऽपि बहवो मार्गाः सन्ति भूमौ सकण्टकाः ।
जनैर्येषु पदं दत्त्वा दुरन्तं दुःखमाप्यते ॥ ३८

பூமியிலுள்ள வழிகள் யாவும் முட்கள் நிரம்பியவைகளாக இருக்கையில் அங்கு கால் வைத்து நடக்க முடியாததுமன்றி மிக வேதனையையும் உண்டாக்குவதுபோல் வேறு அநேக சமயங்களும் பல தூஷணைகள் நிரம்பியிருப்பதால் அறநெறியில் செல்லுகிறவர்களுக்கு அளவில்லாத துன்பங்கள்தான் உண்டாகின்றன.

तद्भवान् लोकरक्षार्थमुत्साद्य निखिलान् खलान् ।
वर्त्म स्थापयतु श्रौतं जगद्येन सुखं व्रजेत् ॥ ३९

ஆகையால் உலகமுய்வதற்காக துஷ்டர்கள் அனைவரையும் நிராகரித்து உலகம் சுகமடையும்படி வேதமார்க்கத்தைத் தாங்கள் நிலைநாட்ட வேண்டும்.

इत्युक्त्वोपरतान्देवानुवाच गिरिजाप्रियः ।
मनोरथं पूरयिष्ये मानुष्यमवलम्ब्य वः ॥ ४०

இவ்வாறு கூறித் தங்களுடைய வசனங்களை முடித்த தேவர்களை நோக்கி பார்வதியின் பதியாகிய பரமசிவன், ''மனிதப்பிறவியடைந்து உங்களுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்கிறேன்'' என்று கூறினார்.

दुष्टाचारविनाशाय धर्मसंस्थापनाय च ।
भाष्यं कुर्वन्ब्रह्मसूत्रतात्पर्यार्थविनिर्णयम् ॥ ४१

मोहनप्रकृतिद्वैतध्वान्तमध्याह्नभानुभिः ।
चतुर्भिः सहितः शिष्यैश्चतुरैर्हरिवद्भुजैः ॥ ४२

यतीन्द्रः शङ्करो नाम्ना भविष्यामि महीतले ।
मद्वत्तथा भवन्तोऽपि मानुषीं तनुमाश्रिताः ॥ ४३

तं मामनुसरिष्यन्ति सर्वे त्रिदिववासिनः ।
तदा मनोरथः पूर्णो भवतां स्यान्न संशयः ॥ ४४

தீயசெயல்களை நாசம் செய்வதற்கும், அறநெறியை நிலைநிறுத்துவதற்கும், பிரம்மஸூத்திரங்களுடைய உண்மையான கருத்தை நிரூபணம் செய்துகொண்டு, (மண்ணுலகில்) அஞ்ஞானமாகிய இருளை நீக்குவதற்கு நடுப்பகலில் விளங்கும் சூரியன் போன்றவர்களும் நான்கு புஜங்களோடு கூடின நாராயணனே என்று ஐயமுண்டாக்குகின்றவர்களுமான நான்கு சீடர்களுடன் சங்கரன் என்ற பெயருடன் சிறந்த துறவியாக மண்ணுலகில் அவதரிக்கப்போகிறேன். தேவலோகத்தில் வசிக்கின்ற நீங்கள் அனைவரும், என்னைப் போலவே மானிடவேடம் கொண்டவர்களாக என்னைப் பின்பற்றினால் உங்களுடைய விருப்பம் பூர்த்தியாகும். ஐயமில்லை (என்று கூறினார்).

ब्रुवन्नेवं दिविषदः कटाक्षानन्यदुर्लभान् ।
कुमारे निदधे भानुः किरणानिव पङ्कजे ॥ ४५

இவ்வாறு தேவர்களை நோக்கி கூறினவராக, பிறருக்கு கிடைப்பதற்கு அரிதான கடைக்கண்பார்வையை, சூரியன் தாமரையில் தனது கிரணங்களை பரவச் செய்வதுபோல குமரனிடத்தில் வீசினர்.

(कुत्सितो मारो यस्मात्, स कुमारः, कुत्सितान् मारयति इति कुमारः என்று இருவிதமாக 'குமார' என்ற பதத்திற்கு பொருள், (1) யாருடைய அழகை பார்க்கும்பொழுது, மன்மதன் மிகவும் தாழ்ந்தவனாக எண்ணப்படுகிறானோ, (2) அற்பர்களை யார் கொல்லுகிறாரோ அவர் என்று விளக்கம். ஸத்யோ ஜாதம், வாமதேவம், அகோரம், தத்புருஷம், ஈசானம் என்ற ஐந்து முகங்களுடையவரான சிவனும், சக்தியும் ஒன்றுசேர வேண்டியது இயல்பாகயிருக்கையில் தன்னுடைய பிரபாவத்தை மிகவும் இறுமாப்புடன் காண்பிக்க முயன்ற மன்மதனை நெற்றிக்கண்ணினால் எரித்து, மிக பக்தியுடன் தனக்கு பணிவிடை செய்த பார்வதிதேவியாகிய சக்தியை அடைந்து, 'சுந்தர' என்ற சொல்லுக்கே முக்கிய பொருளாகிய பரமசிவன், சக்தியுடன் சேர்ந்து, அவ்விருவருடைய முகங்களும் ஒன்று சேர்ந்து ஆறுமுகமுடையவராகத் தோன்றியவர் 'குமாரர்'. அவருடைய அழகுக்கு நிகராக வேறு அழகு இருக்க முடியுமா? உலகங்களையெல்லாம் மிக துன்புறுத்திய தாரகன் முதலான அசுரர்களைக் கொன்றவர். ஆகையால், தான் (சிவபெருமான்) செய்யக்கூடிய நிவிருத்திமார்க்கத்தின் பிரதிஷ்டை நிகழவேண்டுமாயின், பிரவிருத்திமார்க்கம் நிலைத்தாலன்றி இயலாதாகையால் முதல் முதலாக மஹாதேவன் அவரைக் கடைக்கண்ணால் பார்த்தார். ஞானபண்டிதராகிய அவர்தான் ஞானமார்க்கமாகிய மாபெரும் அழிவற்ற கட்டடத்திற்கு தர்மமார்க்கத்தின் பாதுகாப்பாகிய அஸ்திவாரக்கல் போடவேண்டும் என்று கருத்து.)

क्षीरनीरनिधेर्वीचिसचिवान् प्राप्य तान् गुहः ।
कटाक्षान्मुमुदे रश्मीनुदन्वानैन्दवानिव ॥ ४६

பாற்கடலின் அலைகளுக்கு நிகரான அந்தக் கடைக்கண்பார்வைகளை அடைந்த குமாரர், சந்திரனுடைய கிரணங்களை அடைந்து சமுத்திரம் ஆனந்தப்படுவதுபோல் ஆனந்தப்பட்டார்.

अवदन्नन्दनं स्कन्दममन्दं चन्द्रशेखरः ।
दन्तचन्द्रातपानन्दिवृन्दारकचकोरकः ॥ ४७

பற்களின் ஒளியாகிய சந்திரநிலாவினால் தேவர்களாகிய சகோரப் பறவைகளை ஆனந்திக்கச் செய்தவரும், தலையில் சந்திரனுடையவருமாகிய பரமசிவன் புத்திமானாகிய புதல்வனான கந்தனிடம் கூறினார்.

शृणु सौम्य वचः श्रेयो जगदुद्धारगोचरम् ।
काण्डत्रयात्मके वेदे प्रोद्धृते स्याद् द्विजोद्धृतिः ॥ ४८

அழகியவனே! உலகத்தின் ரக்ஷணைக்கு உரியதும் நன்மைக்கு காரணமுமான வசனத்தை கேட்பாயாக. பிரவிருத்திமார்க்கம், பக்திமார்க்கம் (உபாசனாமார்க்கம்), நிவிருத்திமார்க்கம் (ஞானமார்க்கம்) ஆகிய மூன்று

மார்க்கங்களை உணர்ந்து வேதங்களை சம்ரக்ஷணை செய்தால் பிராம்மணர்களின் ரக்ஷணை ஏற்படுகிறது.

तद्रक्षणे रक्षितं स्यात्सकलं जगतीतलम् ।
तदधीनत्वतो वर्णाश्रमधर्मततेस्ततः ॥ ४९

அந்தப் பிராம்மணர்களை காப்பாற்றினால் மூன்று உலகமும் காப்பாற்றப்பட்டதாகும். ஏனெனில் வர்ணங்கள், ஆசிரமங்கள் இவைகளுடைய தர்மங்கள் யாவும் அவர்களையே ஆதாரமாகக் கொண்டுள. (எல்லா தர்மங்களுக்கும் முக்கியாதிகாரம் அவர்களுக்கேயாகும்.) ஆகையால்:-

इदानीमिदमुद्धार्यमितिवृत्तमतः पुरा ।
मम गूढाशयविदौ विष्णुशेषौ समीपगौ ॥ ५०

मध्यमं काण्डमुद्धर्तुमनुज्ञातौ मयैव तौ ।
अवतीर्यांशतो भूमौ सङ्कर्षणपतञ्जली ॥ ५१

मुनी भूत्वा मुदोपास्तियोगकाण्डकृतौ स्थितौ ।
अग्रिमं ज्ञानकाण्डं तूद्धरिष्यामीति देवताः ॥ ५२

सम्प्रति प्रतिजाने स्म जानात्येव भवानपि ।
जैमिनीयनयाम्भोधेः शरत्पर्वशशी भव ॥ ५३

இந்த உலகம் காப்பாற்றப்படவேண்டும் என்று என்னுடைய இந்த அபிப்பிராயத்தை முன்னமேயே ரகசியமாக அறிந்த நாராயணனும், ஆதிசேஷனும் என் சமீபத்திற்கு வந்து என்னால் அனுமதிக்கப்பட்டவர்களாக பூமியில் ஸங்கர்ஷணன், பதஞ்சலி என்ற முனிவர்களாகத் தோன்றி தேவதா காண்டத்தை காப்பாற்றுவதற்காக உபாசனமார்க்கத்தையும், யோகமார்க்கத்தையும் நிலைநாட்டும் செயலில் ஈடுபட்டுள்ளனர். சிறந்ததான ஞானகாண்டத்தைக் காப்பாற்றுகிறேன் என்று யான் தேவர்களுக்கு வாக்களித்ததை நீயும் அறிவாய். ஆகையால் ஜைமினிமுனிவருடையதான நூலாகிய தர்ம மார்க்கமென்னும் சமுத்திரத்திற்கு நீ சரத்காலசந்திரனாக விளங்குவாயாக.

(சரத்காலசந்திரனால் சமுத்திரத்திற்கு சந்தோஷம் பொங்குவதுபோல் உன்னால் ஜைமினியினுடைய நூலுக்கு வளர்ச்சி ஏற்படவேண்டும்.)

विशिष्टं कर्मकाण्डं त्वमुद्धर ब्रह्मणः कृते ।
सुब्रह्मण्य इति ख्यातिं गमिष्यसि ततोऽधुना ॥ ५४

பிரம்மத்தினுடையவும் (வேதத்தினுடையவும்) பிராம்மணர்களுடையவும், பாதுகாப்பின்பொருட்டு, சிறந்ததான கர்மகாண்டத்தை வளரும்படி செய்வாயாக. அதன் மூலமாக நீ இப்பொழுது 'சுப்பிரமணியன்' என்ற பிரசித்தியை அடைவாய்.

नैगमीं कुरु मर्यादामवतीर्य महीतले ।
निर्जित्य सौगतान्सर्वानाम्नायार्थविरोधिनः ॥ ५५

மண்ணுலகத்தில் அவதரித்து, வேதமார்க்கத்திற்கு பகைவர்களாகிய சௌகதர்களனைவரையும் வென்று அந்த வேதமார்க்கத்தினுடைய சம்பிரதாயத்தை வழங்கச் செய்வாயாக.

ब्रह्माऽपि ते सहायार्थं मण्डनो नाम भूसुरः ।
भविष्यति महेन्द्रोऽपि सुधन्वा नाम भूमिपः ॥ ५६

பிரம்மதேவனும் உனக்கு உதவி செய்வதற்காக மண்டனர் என்ற பிராம்மணனாகவும், தேவேந்திரன் 'சுதன்வன்' என்ற அரசனாகவும் தோன்றுவார்கள்.

तथेति प्रतिजग्राह विधेरपि विधायिनीम् ।
बुधानीकपतिर्वाणीं सुधाधारामिव प्रभोः ॥ ५७

பிரம்மதேவருக்கும் கட்டளையை விதிக்கின்றதும், அமிருதம்போன்றதும், ஸர்வசக்தனாகிய பரமேசுவரருடையதும் ஆகிய அந்த வசனத்தை தேவசேனாநாயகனாகிய குமாரர் ஏற்றுக்கொண்டார்.

अथेन्द्रो नृपतिर्भूत्वा प्रजा धर्मेण पालयन् ।
दिवं चकार पृथिवीं स्वपुरीममरावतीम् ॥ ५८

பிறகு மஹேந்திரன் அரசனாகத் தோன்றி மிகவும் தர்மத்துடன், பிரஜைகளை பரிபாலித்துக்கொண்டு மண்ணுலகத்தை விண்ணுலகமாகவும், தன் பட்டணத்தை அமராவதியாகவும் செய்தான்.

सर्वज्ञोऽप्यसतां शास्त्रे कृत्रिमश्रद्धयाऽन्वितः ।
प्रतीक्षमाणः क्रौञ्चारिं मेलयामास सौगतान् ॥ ५९

ஸர்வக்ஞனாக (எல்லாம் அறிந்தவனாக) இருந்தபோதிலும் அஸத்துக்களுடைய நூலில் சிரத்தையைப் பாசாங்கு செய்துகொண்டும், கிரௌஞ்ச மலையைப் பிளர்ந்தவராகிய குமாரனுடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டும் தனது சபையில் சௌகதர்களை ஒன்றுசேர்த்தினார்.

ततः स तारकारातिरजनिष्ट महीतले ।
भट्टपादाभिधा यस्य भूषा दिक्सुदृशामभूत् ॥ ६०

பிறகு, தாரகாசுரனை கொன்றவரான கந்தரும் மண்ணுலகில் தோன்றினார். பட்டபாதன் (குமரிலபட்டர்) என்ற அவருடைய பெயர் திசைகளாகிய சுந்தரப் பெண்மணிகளுக்கு காதணியாக விளங்கியது. (அவருடைய பெயர் எல்லா திசைகளிலும் பரவிற்று.)

स्फुटयन्वेदतात्पर्यमभाङ्जैमिनिसूत्रितम् ।
सहस्रांशुरिवानूरुव्यञ्जितं भासयञ्जगत् ॥ ६१

அருணன் இருளை நீக்கியபின் சூரியன் உலகத்தைத் தன்னுடைய கிரணங்களால் பிரகாசிக்கும்படி செய்வதுபோல் ஜைமினி முனிவர் தோற்றுவித்த வேதங்களின் தாத்பரியத்தையுணர்த்தும் மீமாம்ஸாசாஸ்திரத்தைத் தன்னுடைய திறமையினுல் அந்தக் குமரிலபட்டர் விளக்கினுர்.

राज्ञः सुधन्वनः प्राप नगरीं स जयन्दिशः ।
प्रत्युद्गम्य क्षितीन्द्रोऽपि विधिवत्तमपूजयत् ॥ ६२

அந்தக் குமரிலபட்டர் ஆங்காங்கு திசைகளில் மற்ற மதஸ்தர்களை வென்று சுதன்வராஜனுடைய நகரத்தை அடைந்தார். அரசனும் எதிர்கொண்டு அவரை வரவேற்று முறைப்படி உபசரித்தார்.

(தனது இல்லத்திற்கு வந்த விசுவாமித்திரமுனிவரை தசரதமஹாராஜன் உபசரித்தார் என்று கூறுகையில், வால்மீகிமுனிவர் அதற்கு உவமானமாக 'प्रत्युज्जगाम तं हृष्टो ब्रह्माणमिव वासवः' என்று கூறினுர். இந்திரன் பிரம்மதேவரை சந்தோஷத்துடன் கூடியவனுக எதிர்கொண்டதுபோல், அந்த அரசனும் மாமுனிவரை மிக சந்தோஷமுள்ளவராக எதிர்கொண்டழைத்தார் என்று பொருள். இங்கும் சுதன்வராஜன் குமரிலபட்டரை, இந்திரன் பிரம்மதேவரை உபசரித்ததுபோல் உபசரித்தான் என்றும் பொருள் கூறலாம். विधिवत् = विधिमिव என்று அர்த்தம்.)

सोऽभिनन्द्याशिषा भूपमासीनः काञ्चनासने ।
तां सभां शोभयामास सुरभिर्द्युवनीमिव ॥ ६३

அந்தக் குமரிலரும் அரசனுக்கு ஆசிகூறி பொன்மயமான ஆசனத்தில் வீற்றிருந்தார். வஸந்தகாலம் தனது பரிமளவாசனையினுல் தேவலோகத்து நந்தவனத்தை அலங்காரம் செய்வதுபோல் அவர் அந்த அரசசபையை அலங்கரித்தார்.

सभासमीपविटपिश्रितकोकिलकूजितम् ।
श्रुत्वा जगाद तद्व्याजाद्राजानं पण्डिताग्रणीः ॥ ६४

அறிஞர்களில் சிறந்தவராகிய அவர் அரசசபைக்கு அருகிலுள்ள மரத்தில் உட்கார்ந்திருந்த குயிலினுடைய இனிமையான குரலைக் கேட்டு அதை வியாஜமாகக் கொண்டு அரசனை நோக்கிக் கூறினுர்:-

(पण्डा என்றுல் ஆத்மஞானம் என்று பொருள். அது உள்ளவன் पण्डितः)

मलिनैश्चेन्न सङ्गस्ते नीचैः काककुलैः पिक ।
श्रुतिदूषकनिर्ह्रादैः श्लाघनीयस्तदा भवेः ॥ ६५

குயிலே, செவியைப்புண்படுத்தும் குரலை வெளியிடுகின்றவைகளும், கறுப்புநிறமுள்ளவைகளும் அற்பங்களுமாகிய காக்கைக் கூட்டங்களுடன் சகவாசம் ஏற்படாவிடின் நீ புகழத்தகுந்தவனுகவே இருப்பாய்.

(மலினமான மனம் கொண்டவர்களும் அற்பர்களும், சுருதியை = வேதத்தை தூஷணம் செய்யும் சொற்களை கூறுகின்றவர்களும், காக்கைக்கூட்டங்களுக்கு ஒப்பானவர்களுமாகிய (வேதமதத்திற்கு புறம்பான நாஸ்திகமதத்தை பிரசாரம் செய்பவர்களான) பௌத்தர்களுடைய சகவாசம் இல்லாவிடில் நீ புகழத்தகுந்தவனுகவே இருப்பாய் என்று அந்நியாபதேசம்.)

षडभिज्ञा निशम्येमां वाचं तात्पर्यगर्भिताम् ।
नितरां चरणस्पृष्टा भुजङ्गा इव चुक्रुधुः ॥ ६६

உட்கருத்துக் கொண்ட இந்த வசனத்தைக் கேட்டு, காலினுல் மிதிக்கப்பட்ட பாம்புகள் போல் பௌத்தமதத்தினவர்கள் மிகவும் சினமுற்றனர்.

छित्त्वा युक्तिकुठारेण बुद्धसिद्धान्तशाखिनम् ।
स तद्ग्रन्थेन्धनैश्शीर्णैः क्रोधज्ज्वालामवर्धयत् ॥ ६७

யுக்தியாகிய கோடாலியினுல் புத்தமதக் கொள்கையாகிய மரத்தை வெட்டி அவர்களுடைய நூல்களாகிய ஏராளமான விறகுகளை எரித்து அவர்களுடைய கோபமாகிய அக்னியை வளர்த்தினுர்.

सा सभा वदनैस्तेषां रोषपाटलकान्तिभिः ।
बभौ बालातपाताम्रैः सरसीव सरोरुहैः ॥ ६८

இளம் வெய்யிலினுல் மலர்ந்த செந்தாமரைகளால் குளம் செந்நிறமாக விளங்குவதுபோல் கோபத்தினுல் சிவந்த ஒளிகளுடன் கூடிய அவர்களுடைய முகங்களால் அந்த சபை செந்நிறமான ஒளியுள்ளதாயிற்று.

उपन्यस्यत्सु साक्षेपं खण्डयत्सु परस्परम् ।
तेषूदतिष्ठन्निर्घोषो भिन्दन्निव रसातलम् ॥ ६९

குமரிலபட்டரைச் சேர்ந்தவர்களும் பௌத்தமதத்தினவரும் தம் தம் மதத்தை பிரசங்கம் செய்வதும், ஒருவர் மற்றொருவருடைய மதத்தைக் கண்டனம் செய்வதும் ஆகிய பெரிய கோஷம் பாதாளத்தையே மோதியது போல் ஒலித்தது.

अधः पेतुर्बुधेन्द्रेण क्षताः पक्षेषु तत्क्षणम् ।
व्यूढकर्कशतर्केण तथागतधराधराः ॥ ७०

அறிஞர்களில் சிறந்த குமரிலராகிய தேவேந்திரனுல், தனது கடினமான யுக்தியாகிய வஜ்ராயுதத்தினுல் கொள்கைகளாகிய இறக்கைகள் அறுக்கப் பட்டபொழுது பௌத்தர்களாகிய மலைகள் கீழே விழுந்தன. (உபமாலங்காரத்தை மூலமாகக் கொண்ட ரூபகாலங்காரம்.)

स सर्वज्ञपदं विज्ञोऽसहमान इव द्विषाम् ।
चकार चित्रविन्यस्तानेतान्मौनविभूषितान् ॥ ७१

விசேஷமாக எல்லாவற்றையும் அறிந்த அந்த குமரிலபட்டர் வேதமார்க்கத்தின் பகைவர்களாகையால் தன்னுடைய எதிரிகளாகிய

அவர்களுக்கு 'ஸர்வக்ஞ' (புத்தனுக்குப் பெயர்) என்ற பெயரைக் கேட்க பொறுமையில்லாதவரோ என்று தோன்றுமாறு அவர்களுடைய மதத்தை நிராகரித்து அவர்களை ஓவியத்தில் அமைக்கப்பட்டவர்களைப்போல் மௌனமுள்ளவர்களாகச் செய்தார்.

ततः प्रक्षीणदर्पेषु बौद्धेषु वसुधाधिपम् ।
बोधयन्बहुधा वेदवचांसि प्रशशंस सः ॥ ७२

அந்த பௌத்தர்களுடைய செருக்கு அடங்கினபிறகு அவர் அரசனுக்கு வேதவசனங்களைப் பலவிதத்தில் நன்கு உபதேசம் செய்து அவைகளையும் அவைகளின் கருத்தை நன்கு உணர்ந்த அரசனையும் புகழ்ந்தார்.

बभाषेऽथ धराधीशो विद्यायत्तौ जयाजयौ ।
यः पतित्वा गिरेः शृङ्गादव्यग्रस्तन्मतं ध्रुवम् ॥ ७३

வெற்றியும் தோல்வியும் கல்வியினுடைய நிலைமையைப் பொறுத்துள்ளவை. (மதத்தின் சிறப்பை (வெற்றியினுல்) தீர்மானம் செய்ய இயலாது.) எவன் மலையின் உச்சியிலிருந்து கீழே விழுந்து மரணமடையாதவனுக விளங்குகிருனே அவனுடைய மதம் சிறந்தது என்று அரசன் பிறகு கூறினுன்.

तदाकर्ण्य मुखान्यन्ये परस्परमलोकयन् ।
द्विजाग्र्यस्तु स्मरन्वेदानारुरोह गिरेः शिरः ॥ ७४

அரசனுடைய அந்த வசனத்தைக் கேட்டு, ஒருவர் மற்ருெருவருடைய முகத்தைப் பார்த்தனர். பிராம்மணர்களில் சிறந்தவராகிய குமரிலரோவெனில் வேதங்களை மனதில் நினைத்துக்கொண்டு மலையின் உச்சியில் ஏறினுர்.

यदि वेदाः प्रमाणं स्युर्भूयात्काचिन्न मे क्षतिः ।
इति घोषयता तस्मान्न्यपाति सुमहात्मना ॥ ७५

வேதங்கள் பிரமாணங்களே ஆகில், அவைகளையே நம்பிய எனக்கு ஒருவிதமான தீங்கும் ஏற்படாது என்று உரைத்துக்கொண்டு அந்த மகான் அங்கிருந்து விழுந்தார்.

किमु दौहित्रदत्तेऽपि पुण्ये विलयमास्थिते ।
ययातिश्च्यवते स्वर्गात्पुनरित्यूचिरे जनाः ॥ ७६

(தான் செய்த புண்ணியகர்மங்களின் பயனுக அநேக காலம் சுவர்க்க லோகத்தில் வசித்து போகங்களை அனுபவித்த பின், அந்த புண்ணியம் குன்றியதினுல் அங்கிருந்து தள்ளப்பட்டார் யயாதிமகாராஜன்.) ஆயினும் அவருடைய பேரன்கள் (பெண்ணின் புதல்வர்கள்) தங்களுடைய பாட்டனுக்கு தங்களுடைய புண்ணியங்களனைவற்றையும் அளித்தனர். அந்த போகங்களையும் அனுபவித்ததினுல் அவையும் நாசமுற்ற பின் அந்த யயாதி மகாராஜன் தேவலோகத்திலிருந்து விழுகிருரோ என்று, மலையிலிருந்து விழுந்த குமரிலபட்டரைக் கண்டு ஜனங்கள் சந்தேகப்பட்டுக் கூறினர்.

(யயாதிமன்னன் அறநெறி தவருது அரசாக்ஷி புரிந்து மண்ணுலகில் மானிடபோகங்கள் யாவற்றையும் குறையின்றி அனுபவித்து கடைசியில் தனது பூதஉடல் நீங்கி விண்ணுலகையடைந்து சிறந்த போகவைபவங்கள் யாவற்றையும் அனுபவித்துக்கொண்டு உவகை பூரித்தவராக விளங்கினுர். ஒரு சமயம் தேவேந்திரன் அந்த யயாதிமன்னரிடம் வினவினுன்:-

''அரசே! அறநெறிகள் யாவற்றையும் முறைப்படி வழங்கி துறவறத்தையும் குறையின்றிக் கையாண்ட, தாம் யாருக்கு நிகராக விளங்குகின்றீர்? அதனே யான் அறிய விரும்புகின்றேன்.''

யயாதிமன்னன்: - ''தேவேந்திரனே! நான் தவத்தில் ஒப்புயர்வற்றவனுக உள்ளேன். தேவர்களிலும், மனிதர்களிலும், கந்தர்வர்களிலும், மாமுனிவர்களிலும் எனக்குச் சமமாக ஒருவரையும் யான் அறியேன்'' என்று விடையளித்தான்.

அவ்வாறு செருக்குடன் கூறிய சொல்லேச் செவியுற்ற தேவேந்திரன் கூறினுன்: - ''சான்ருேர்களின் பெருமையை உணராமல் அவர்களே (சமமானவர்களேயும், சிறந்தவர்களேயும்) அவமதித்ததினுல் உமது புண்ணியம் குன்றியது. இனிமேல் இந்த விண்ணுலகில் வாசம் செய்ய உமக்கு இடமில்லே. மண்ணுலகிற்கே போகக்கடவீர்'' என்று உறுதியாகக்கூற அந்த மன்னர் ஸ்வர்க்கத்திலிருந்து கீழே இறங்கினுர். அவ்வாறு இறங்குகையில் சான்ருேர்களின் ஸகவாஸம் தனக்குக் கிடைக்க வேண்டும் என்று தேவேந்திரனிடம் பிரார்த்தித்தான். இந்திரனும் அவ்வாறு அருளினுன். பிறகு அவர், அஷ்டகன், சிபி, பிரதர்தனன், வஸுமான் என்ற தனது பேரன்மார்கள் (பெண்ணின் மக்கள்) யாகம் செய்யும் இடத்தில் இறங்கி, அவர்களுடன் சம்பாஷணே செய்கையில், அவர்களும் தமது பாட்டனுராகிய அவருக்கு தம்முடைய புண்ணியங்களே அளித்தனர். இறுதியில், அவர்களுடைய புண்ணியங்களின் பயனுக திரும்பவும் ஸ்வர்க்கசுகங்களே அனுபவித்தார். அந்த சுகங்களும் அழிவடைந்தன. (என்ற கதை இவ்விடம் கவனிக்கத்தக்கது)).

अपि लोकगुरुः शैलात्तूलपिण्ड इवापतत् ।
श्रुतिरात्मशरण्यानां व्यसनं नोच्छिनत्ति किम् ॥ ௭௭

உலகத்தில் ஏற்பட்ட தீயநெறியாகிய இருளே நீக்கும் தன்மையுடையவராதலால் உலகங்களுக்கே குருவாகிய அந்த மகான் மலேயின் உச்சியிலிருந்து பஞ்சுருண்டைபோல் கீழே விழுந்தார். தன்னே நம்பியவர்களுடைய துன்பத்தை வேதம் நாசம் செய்யாதா?

श्रुत्वा तदद्भुतं कर्म द्विजा दिग्भ्यः समाययुः ।
घनघोषमिवाकर्ण्य निकुञ्जेभ्यः शिखावलाः ॥ ௭௮

காட்டில் கொடிகளின் புதர்களில் மறைந்திருக்கும் மயில்கள் மேககர்ஜனேயைக் கேட்டு சந்தோஷத்துடன் வெளியே கிளம்புவதுபோல், ஆச்சரியமான அந்தக் காரியத்தின் நிகழ்ச்சியைக் கேட்டு பிராம்மணர்கள் பல திசைகளிலிருந்தும் கிளம்பி வந்து சேர்ந்தனர்.

दृष्ट्वा तमक्षतं राजा श्रद्धां श्रुतिषु सन्दधे ।
निनिन्द बहुधाऽऽत्मानं खलसंसर्गदूषितम् ॥ ௭௯

அந்த குமரிலபட்டர் ஒரு சிறு விரணம்கூட உடம்பில் ஏற்படாமல் சந்தோஷத்துடன் நின்றதைக் கண்டு அரசனும் வேதங்களில் நம்பிக்கையை நிலைநிறுத்திக்கொண்டான். இதுவரையில் துஷ்டர்களுடைய சகவாசத்தினுல் தோஷமுற்ற தன்னை இகழ்ந்துகொண்டான்.

सौगतास्त्वब्रुवन्नेदं प्रमाणं मतनिर्णये ।
मणिमन्त्रौषधैरेवं देहरक्षा भवेदिति ॥ ௮௦

ஸௌகதர்களோவெனில் 'அரசே, இந்தப் பந்தயம் மதத்தின் உண்மையைத் தீர்மானம் செய்யத்தக்க உபாயமன்று. மணி, மந்திரம், ஒளஷதம் இவைகளாலும் இவ்வாறு உடலின் பாதுகாப்பு ஏற்படலாம் எனக் கூறினர்.

दुर्विधैरन्यथा नीते प्रत्यक्षेऽर्थेऽपि पार्थिवः ।
भ्रुकुटीभीकरमुखः सन्धामुग्रतरां व्यधात् ॥ ௮௧

எல்லோரும் கண்காக்ஷியாகக் கண்ட நிகழ்ச்சியைக்கூட துஷ்டர்களான பௌத்தர்கள் 'சரியன்று' என மறுத்துக்கூறின சமயத்தில் அரசன் புருவங்களை நெறித்து மிகவும் சினம் கொண்டவனுக கடூரமான உறுதிகொண்டான்.

पृच्छामि भवतः किञ्चिद्वक्तुं न प्रभवन्ति ये ।
यन्त्रोपलेषु सर्वास्तान्घातयिष्याम्यसंशयम् ॥ ௮௨

உங்களிடம் ஒரு விஷயத்தைப்பற்றி வினவுகின்றேன். உண்மையான பதில் கூற வல்லமையில்லாதவர்களை கழுவிலிட்டுக் கொல்லச்செய்வேன்; ஐயமில்லை.

इति संश्रुत्य गोत्रेशो घटमाशीविषान्वितम् ।
आनीयात्र किमस्तीति पप्रच्छ द्विजसौगतान् ॥ ௮௩

இவ்வாறு பிரதிக்ஞை கூறி, உள்ளே பாம்பை அடைத்து ஒரு குடத்தை கொண்டு வந்து 'இதனுள் என்ன இருக்கிறது' என்று பிராம்மணர்களிடமும், பௌத்தர்களிடமும் வினவினுன்.

वक्ष्यामहे वयं भूप श्वः प्रभातेऽस्य निर्णयम् ।
इति प्रसाद्य राजानं जग्मुर्भूसुरसौगताः ॥ ௮௪

'அரசே! நாளைக்கு இதற்கு உறுதியான விடை கூறுகிரேம்' என்று அரசனுக்கு சமாதானம் கூறி பிராம்மணர்களும், பௌத்தர்களும் அங்கிருந்து சென்றனர்.

पद्मा इव तपस्तेपुः कण्ठद्वयसपाथसि ।
द्युमणिं प्रति भूदेवाः सोऽपि प्रादुरभूत्ततः ॥ ௮௫

பிராம்மணர்கள் தாமரைமலர்கள்போல், கழுத்தளவு ஜலத்தில் நின்று சூரியனைக்குறித்து தவம் செய்தனர். அந்த சூரியபகவானும் அவர்களுடைய தவத்தினால் சந்தோஷம் அடைந்தவராக அவர்களுக்கு முன்னே தோன்றினார்.

((1) तरणिर्विश्वदर्शतो ज्योतिष्कृदसि सूर्य । विश्वमाभासि रोचनम् ।

(2) वाममद्य सवितर्वाममुश्वो दिवेदिवे वाममस्मभ्यं सावीः । वामस्य हि क्षयस्य देव भूरेरया धिया वामभाजः स्याम ।

(3) हिरण्यपाणिमूतये सवितारमुपह्वये । स चेत्ता देवता पदम् ।

என்று வேதங்களில் சூரியனுடைய மகிமையைப் புகழுகின்ற வசனங்கள் பல உள. அவைகளின் பொருள்: - (1) ஹே சூரியனே! தாங்கள் இருளையும் அஞ்ஞானத்தையும் நீக்கி ஒளியையும் ஞானத்தையும் அளிக்கின்றீர்கள். உலக மனைத்தையும் மிக்க பிரகாசமுள்ளதாகச் செய்கின்றீர்கள். (2) ஹே ஸவித:! = உலகத்தை உண்டுபண்ணுகின்றவரே! எங்களுக்கு இன்று நல்ல கர்மபலன்களை அளிப்பீர்களாக. அதுபோலவே நாளைக்கும், ஒவ்வொரு நாளும் நல்ல பயன்களை அளிப்பீர்களாக. மங்களகரமும் அழிவற்றதுமாகிய விண்ணுலகத்தில் வஸிக்கவேண்டுமென்ற விருப்பத்துடன் கூடிய நாங்கள் தங்களுடைய அனுக்கிரகத்தினால் நற்பயன்களை அனுபவிப்போமாக. (3) உபாஸகர்களாகிய எங்களுக்கு அளிப்பதற்கு பொற்காசுகளை கைகளில் நிரம்ப வைத்துள்ள சூரியபகவானை எமது பாதுகாப்பிற்காக பக்தியுடன் தியானம் செய்கின்றேன். (கூப்பிடுகிறேன்) தேவரூபியாகிய அவர் எங்களுக்குரிய நன்னெறியையும் நற்பயனையும் அளிக்கிறார்.

மாயையினால் இராம உருவத்தைச் செய்து சீதாப்பிராட்டியின் கண் முன்னால் அதன் தலையை வெட்டி அந்த தேவியை ராவணன் கலங்கச்செய்ய ஸரமை என்ற தோழி உண்மையைக் கூறி அந்த உத்தமிக்கு ஆறுதல் கூறுகையில் சூரியனை தியானம் செய்து பூஜை செய்யும்படிக் கூறுகின்றாள்:-

गिरिवरमभितोऽनुवर्तमानो हय इव मण्लमाशु यः करोति ।
तमिह शरणमभ्युपेहि देवं दिवसकरं प्रभवो ह्ययं प्रजानाम् ॥

குதிரை வட்டம் சுற்றுவதுபோல் எவர் உதயகிரியை சுற்றிக்கொண்டு தனது கிரணசமூஹத்தை உலகமெங்கும் பரவச் செய்கின்றாரோ அந்த சூரியபகவானை சரணமடைவாயாக. இவர்தான் எல்லா பிராணிகளுடைய உற்பத்திக்கும் நன்மைக்கும் காரணம். மேலும், பாண்டவர்கள் சூரியபகவானுடைய ஒப்புயர்வற்ற அருளைப்பெற்று அக்ஷயபாத்திரத்தை அடைந்து எல்லோருக்கும் அன்னதானமளித்தனர். கடைசியில் வெற்றியையும் பெற்றனர். ஆகையால் சூரியபகவானுடைய உபாஸனை எல்லா நன்மைகளுக்கும் மூலகாரணம்.)

सन्दिश्य वचनीयांशमादित्येऽन्तर्हिते द्विजाः ।
आजग्मुरपि निश्चित्य सौगताः कलशस्थितम् ॥ ८६

அரசசபையில் கூறவேண்டிய விஷயத்தை உபதேசித்து சூரியபகவான் மறைந்த பிறகு, பிராம்மணர்கள் சபைக்கு வந்தனர். பௌத்தர்களும் தங்களுடைய புத்திசாதுர்யத்தினுல் விஷயத்தை மனதில் தீர்மானித்துக்கொண்டு சபைக்கு வந்தனர்.

ततस्ते सौगताः सर्वे भुजंगोऽस्तीत्यवादिषुः ।
भोगीशभोगशयनो भगवानिति भूसुराः ॥ ८७

பிறகு அந்த பௌத்தர்கள் எல்லோரும் அந்த குடத்திற்குள் பாம்பு இருக்கிறது என்று கூறினுர்கள். ஆதிசேஷனுடைய உடலில் பள்ளிகொண்ட பகவான் இருக்கிருர் என்று பிராம்மணர்கள் கூறினர்.

श्रुतभूसुरवाक्यस्य वदनं पृथिवीपतेः ।
कासारशोषणम्लानसारसश्रियमाददे ॥ ८८

பிராம்மணர்களுடைய வசனத்தைக்கேட்டபொழுது அரசனுடைய முகம், தண்ணீர் வற்றிய குளத்திலுள்ள தாமரைமலரின் அழகு குன்றுவது போல் வருத்தத்தினுல் வாடியது.

अथ प्रोवाच दिव्या वाक् सम्राजमशरीरिणी ।
तुदन्ती संशयं तस्य सर्वेषामेव शृण्वताम् ॥ ८९

सत्यमेव महाराज ब्राह्मणा यद्बभाषिरे ।
मा कृथाः संशयं तत्र भव सत्यप्रतिश्रवः ॥ ९०

(எவர்களுடைய மதம் உலகத்தின் அழிவிற்கு காரணமாக இருக்கிறதோ, அப்படிப்பட்ட பௌத்தர்கள் உண்மையைக் கூறிவிட்டனர். எந்த மகான் உலகம் உய்வதற்குக் காரணமான தர்மநெறியை நிலைநாட்டுவதற்காக தோன்றியுள்ளாரோ, அத்தகையவருடைய மதத்தை பின்பற்றியவர்கள் கூறியது உண்மையல்லாததாகிவிட்டது என்று அரசன் மிகவும் வருத்தமுற்ருன். என்ன விபரீதம்.) இந்த சந்தர்ப்பத்தில் அரசனுடைய மனதிலுள்ள சந்தேகத்தை நீக்குவதற்கு அசரீரியான வாக்கு ஒலித்தது:- ''மகாராஜனே! பிராம்மணர்கள் கூறியது உண்மை. அந்த விஷயத்தில் நீ சந்தேகம் கொள்ளாது உன்னுடைய பிரதிக்ஞையை காப்பாற்றுவாயாக.''

श्रुत्वाऽशरीरिणीं वाणीं ददर्श वसुधाधिपः ।
मूर्तिं मधुद्विषः कुम्भे सुधामिव सुराधिपः ॥ ९१

அந்த அசரீரியைக்கேட்டு அரசன் குடத்தை திறந்து பார்க்கும் பொழுது மது என்ற அசுரனை சம்ஹாரம்செய்த நாராயணனுடைய திவ்ய சரீரத்தை, தேவேந்திரன் அமிருதத்தைக் கண்டதுபோல் கண்டு வியப்படைந்தான்.

निरस्ताखिलसन्देहो विन्यस्तेतरदर्शनात् ।
व्यधादाज्ञां ततो राजा वधाय श्रुतिविद्विषाम् ॥ ९२

தான் வைத்த பொருளுக்கு மாருக வேறு அற்புதமான திவ்யமங்கள ரூபத்தைக் கண்டு எல்லா சந்தேகங்களும் நீங்கியவனுக அந்த அரசன் வேத மார்க்கத்திற்கு பகைவர்களாயுள்ளவர்களை வதைசெய்வதற்கு கட்டளையிட்டான்.

(लौकिकानान्तु साधूनामर्थं वागनुवर्तते। ऋषीणां पुनराद्यानां वाचमर्थोऽनुधावति ॥ உலகவிவகாரங்களுக்கு ஈடுபட்ட ஸத்துக்களுடைய வசனம் விஷயத்தைப் பின்பற்றி உள்ளது. (இருக்கும் பொருளைக் கூறுவார்கள்.) தவத்தின் சக்தி விளங்கும் முதியோர்களான முனிவர்களுடைய வசனமோவென்முல் பொருளை உண்டாக்குகிறது. அவர்களுடைய சொல்லுக்குப் பொருளை சிருஷ்டிசெய்யவும், ஒன்றை மற்றென்ருக மாற்றவும் சக்தி உண்டு. அத்தகையவர்களுடைய மதமன்ரே உலகம் உய்வதற்குக்காரணம். வேதமார்க்கம்தான் சிறந்தது என்பதற்கு இதைக்காட்டிலும் வேறு நிரூபணம் வேண்டுமா?)

आसेतोरातुषाराद्रेर्बौद्धानावृद्धबालकम् ।
न हन्ति यः स हन्तव्यो भृत्यानित्यन्वशान्नृपः ॥ ९३

இராமசேதுமுதல் இமயமலைவரையிலுள்ள தேசங்களில் வசிக்கும் பௌத்தர்களை கிழவர்களும், குழந்தைகளுமுட்பட எவன் கொல்லாமலிருக்கிருனே அவன் வதைசெய்யத்தக்கவன் என்று சேவகர்களுக்கு அரசன் கட்டளையிட்டான்.

(அந்த அரசன் இவ்வாறு செய்தது சரி என்று நூலாசிரியர் கூறுகிருர்.)

इष्टोऽपि दृष्टदोषश्चेद्वध्य एव महात्मनाम् ।
जननीमपि किं साक्षान्नावधीद्भृगुनन्दनः ॥ ९४

தனக்கு பிரியமானவனுயினும் குற்றவாளியாக இருந்தால் மகான்களால் வதைசெய்யத்தக்கவனே. பிருகுவம்சத்தில் பிறந்த பரசுராமன் தன்னுடைய தாயாரைக்கூட (குற்றம் செய்தமையால்) கொலைசெய்யவில்லையா?

स्कन्दानुसारिराजेन जैना धर्मद्विषो हताः ।
योगीन्द्रेणेव योगघ्ना विघ्नास्तत्त्वावलम्बिना ॥ ९५

கந்தக்கடவுளுடைய அவதாரமாகிய குமரிலபட்டரை பின்பற்றிய அரசனுல் தர்மத்தின் பகைவர்களாகிய ஜைனர்கள் கொல்லப்பட்டனர். அதற்கு உபமானம்:- தத்துவத்தை (ஆத்மதத்துவத்தை) உணர உறுதி கொண்ட சிறந்த யோகியினுல் யோகத்தின் இடையூறுகள் எவ்வாறு அறவே ஒழிக்கப்படுகின்றனவோ அதுபோல்.

हतेषु तेषु दुष्टेषु परितस्तार कोविदः ।
श्रौतवर्त्म तमिस्रेषु नष्टेष्विव रविर्महः ॥ ९६

இரவின் இருள் நீங்கி விடியற்காலையில் கதிரவன் கிரணங்களை பரவச் செய்வதுபோல், தீயவர்கள் ஒழிந்தபோது சமர்த்தராகிய குமரிலர் வேதமார்க்கத்தை பரவச்செய்தார்.

कुमारिलमृगेन्द्रेण हतेषु जिनहस्तिषु ।
निष्प्रत्यूहमवर्धन्त श्रुतिशाखाः समन्ततः ॥ ९७

ஓங்கி வளர்கின்ற மரக்கிளைகளை அழிக்கின்ற யானைகள், சிங்கங்களால் கொல்லப்பட்டால் தாவுகள் தழைத்து மரங்கள் வளர்கின்றன. அதுபோலவே குமரிலராகிய சிங்கம், பௌத்தர்களாகிய யானைகளை கொன்றமையால் மறையாகிய மரத்தின் பற்பல வசனங்களாகிய தாவுகள் நன்கு பொருளை விளக்கிக்கொண்டு எல்லா திசைகளிலும் பரவின.

(இவ்வாறு முகவுரையாக கந்தருடைய அவதாரத்தை சுருக்கிக் கூறி பரமசிவனுடைய அவதாரத்தை அடுத்த ஸர்க்கத்தின் தோற்றுவாயாகத் துவக்கினார்.)

प्रागित्थं ज्वलनभुवा प्रवर्तितेऽस्मिन् कर्माध्वन्यखिलविदा कुमारिलेन ।
उद्धर्तुं भुवनमिदं भवाब्धिमग्नं कारुण्याम्बुनिधिरियेष चन्द्रचूडः ॥ ९८

இவ்வாறு கந்தனுடைய அவதாரமும், எல்லாமறிந்தவருமான குமரிலர், மறைகள் கூறும் தர்மமார்க்கத்தை அபாயமின்றி நடத்துவதற்கு பாதுகாப்பைச் செய்தார். ஆயினும் இவ்வுலகம் ஸம்ஸாரமாகிய கடலில் மூழ்கியிருப்பதுபற்றி அதனைக் காப்பாற்றுவதற்கு கருணாநிதியான சந்திரசேகரர் மண்ணுலகத்தில் தோன்ற விருப்பமுற்றார்.

(மோக்ஷம், எல்லாவித இன்பதுன்பங்களும் நீங்கி நிலையான பேரானந்தம். அதை அடைவதற்கு ஆத்மஞானம் முக்கிய காரணம். மாசற்ற மனதில் தான் ஆத்மஸ்வரூபம் விளங்கும். மனச்சுத்தி அவனவனுடைய தர்மங்களைச் செய்வதினால் நிலவுகிறது. அந்த தர்மங்களைக் கூறுவது வேத பிரமாணம். அதில் நம்பிக்கை நிலைக்கச் செய்தல், அந்த ஸத்கர்மங்களைச் செய்தல் என்பது ஆணிவேர். அதனைக் கந்தக்கடவுள் குமரிலராகத்தோன்றிக் காப்பாற்றினார். தமது புதல்வன் செய்த காரியத்தினால் சந்திரசேகரனும் சந்தோஷமடைந்து சகல ஜீவர்களுடையவும் ஸம்ஸாரபாசத்தை அறுக்க உறுதிகொண்டார். பசுபதியான அவர் பசுக்களிருக்கும் இவ்வுலகத்தில் தோன்ற தீர்மானம் கொண்டார்.)

इति श्रीमाधवीये तदुपोद्घातकथापरः ।
संक्षेपशङ्करजये सर्गोऽयं प्रथमोऽभवत् ॥१॥

இவ்வாறு ஸ்ரீமாதவாசாரியரியற்றிய சங்கரவிஜயத்தின் சுருக்கத்தில்
ஸ்ரீ சங்கரருடைய அவதாரத்திற்கு முகவுரையான
இந்த முதலாவது ஸர்க்கம் முற்றிற்று.

आदितः श्लोका : 98



# अथ द्वितीयः सर्गः

# இரண்டாவது ஸர்க்கம்

## आचार्यजन्मादिकथनम्

## ஆசாரியருடைய அவதாரம் முதலானதைக் கூறுதல்

ततो महेशः किल केरलेषु श्रीमद्वृषाद्रौ करुणासमुद्रः ।
पूर्णानदीपुण्यतटे स्वयंभूलिङ्गात्मनानङ्गधगाविरासीत् ॥ १

பிரவிருத்திமார்க்கத்திற்கு பிரசாரம் நிலைத்தபின், காமனை எரித்தவரும் கருணைக்கடலுமாகிய மகாதேவன் கேரளதேசத்தில் விருஷாசலத்தினருகில் பூர்ணை என்ற நதியின் பரிசுத்தமான கரையில் ஸ்வயம்பூலிங்கமாகத் தோன்றினார். (தானாகவே தோன்றியவர், செயலினால் அல்லாதவர்.)

तच्चोदितः कश्चन राजशेखरः स्वप्ने मुहुर्दृष्टतदीयवैभवः ।
प्रसादमेकं परिकल्प्य सुप्रभं प्रावर्तयत्तस्य समर्हणं विभोः ॥ २

எங்கும் நிறைந்தவராயினும், அங்கு ஸ்வயம்பூலிங்கத்தில் புகுந்தவராகி விளங்குகையில், வெயில், மழை, காற்று முதலியவைகளால் துன்பமுற்றவர் போலவும் தன்னைக்கவனிப்பவர் ஒருவருமில்லையென்றும், கவனிப்பவர்கள் ஒரு குறையுமின்றி மேன்பட்டவராகி விளங்குவார்கள் என்றும் எண்ணம் கொண்டார். அப்படி அருளியவர்போல தன்னுடைய மகிமையை அந்த அரசனுக்குக் கனவில் காண்பித்தார். அறிஞனை அரசனும் அதனை உணர்ந்தவனாக அங்கு ஒரு கோயிலைக்கட்டி அந்தப் பரமேசுவரனுக்குப் பூஜையை குறைவின்றி நடக்கும்படி நியமித்தான்.

तस्येश्वरस्य प्रणतार्तिहर्तुः प्रसादतः प्राप्तनिरीतिभावः ।
कश्चित्तदभ्याशगतोऽग्रहारः कालट्यभिख्योऽस्ति महान्मनोज्ञः ॥ ३

அதனருகில் காலடி என்று பெயருடைய ஒரு அக்கிரஹாரம் உள்ளது. அது அழகியதும் பெரிதுமானது. வணங்கியவர்களுடைய வருத்தங்களை விலக்க வல்லமையுள்ள வாமதேவருடைய அருளினால் ஈதிபாதைகளற்றதாகவிருந்தது.

कश्चिद्विपश्चिदिह निश्चलधीर्विरेजे विद्याधिराज इति विश्रुतनामधेयः ।
रुद्रो वृषाद्रिनिलयोऽवतरीतुकामो यत्पुत्रमात्मपितरं समरोचयत्सः ॥ ४

அந்த அக்ரஹாரத்தில் அசஞ்சலமான புத்தியுள்ள ஒரு அறிஞர் இருந்தார். 'வித்யாதிராஜன்' என்று பிரசித்தமான பெயருள்ளவர். விருஷாசலத்தில் வாசம் கொண்டுள்ளவரும் ஆராதிக்கிறவர்களுடைய துன்பங்களைத்

தூரவிலக்குகின்றவருமாகிய பரமேசுவரன் அந்த அக்கிரஹாரத்தில் தோன்ற விருப்பம்கொண்டவராக அந்த வித்தியாதிராஜருடைய புதல்வன் தனக்குத் தந்தையாகவிருக்கவேண்டும் என்று விரும்பினார்.

(அவருடைய பாக்கியம் எத்தகையது! தேவனைப் புதல்வனாக அடைய வேண்டும் என்ற விருப்பம் மனிதனுக்கு உண்டாவது இயல்பு. பகவான் தனக்குப் புதல்வனாகத் தோன்றவேண்டாம் என்று எந்த மனிதன்தான் எண்ணம் கொள்ளுவான்? ஒருவனுமில்லை. ஆனால் அந்தப் பகவான் இத்தகையவனுக்குத்தான் புதல்வனாகப் பிறக்கவேண்டும், பேரனாகப் பிறவி அடையவேண்டும் என்று ஒருவனை மனதில் நினைத்தால் அதுதான் வர்ணிக்க முடியாத பாக்கியம். மிகப்புண்ணியசாலிக்கல்லவோ அது கிட்டும். அந்த பாக்கியம் வித்யாதிராஜருக்குக் கிடைத்தது. அந்தப் பெயரின் மகிமையா, அல்லது அந்தப்பெயர் அமைந்ததினால் அந்தப் புண்ணியஜீவனுடைய சிறப்பின் வன்மையா? என்னென்று கூறுவது! ஆனால், இதுதான் சிறந்த பாக்கியம் என்று நூல்கள் கூறுகின்றன. தசரதமஹாராஜர் புதல்வரை விரும்பினாரேயன்றி திருமாலைப் புதல்வராக விரும்பவில்லை. திருமாலோவெனில் தசரதனையே தனக்குத் தந்தையாக விரும்பினாரேயன்றி வேறொருவனை அப்படி விரும்பவில்லை என்பது வியக்கத்தக்கதன்றோ. புத்திரனில்லாக்குறை தசரதனுக்கு எத்தகைய புதல்வனாலும் நீங்கும். பிறவியற்ற பரம்பொருள் பிறவியின்மையைத் தனக்குக் குறையாகக் கருதி அதனை நீக்குபவன் தசரதன் என்று உறுதிகொண்டால் மறைகள் கூட அந்த மகாராஜனை வர்ணிக்கமுடியாது என்று கூறுதல் மிகையாகுமோ? இவ்வாறே வசுதேவருடைய பாக்கியம். பிரகிருதத்தில் தந்தையைக்காட்டிலும் பாட்டனாரை பாக்கியவானாக சிவபெருமான் தீர்மானம் கொண்டார். அத்தகையவர் ஒருவனுக்கு புதல்வனாக (வித்தியாதிராஜனுடைய புதல்வனுக்குத்) தோன்றுவதால் இருவர்களுடைய பாக்கியமும் வர்ணிக்க இயலாது. அந்தப் பகவானுடைய ஸங்கற்பமும் அருளும் இல்லாவிடில் உலகம் பாக்கியமற்றது என்றும், அது இருந்தால் தூண்கூட வர்ணிக்கமுடியாத மிக்க பாக்கியமுள்ளது என்பதற்கும், மறைகளால் அறியத்தக்கவரைத் தோற்றுவித்த தூண் (நரசிம்மாவதாரத்தில்) உதாரணம். துறவிகளாலும் தமது தத்துவம் என்றும் தெய்வம் என்றும் கருதி தியானம் செய்யப்பெற்றவரும், மங்களரூபியும், மறைகளின் மறைப்பொருளுமாகிய பகவான் மடங்கல் உருவமெடுத்துத் தூணிலிருந்து உதித்தார் என்றால் அந்தத் தூண் எத்தகைய பாக்கியம் பெற்றது!

அக்னிசயனப் பிரகரணத்தில், தேவர்கள் தன்னை அறிந்துகொள்வதற்காக, கருடசயனம் (என்ற யக்ஞம்) செய்யப்படுவதாகவும் அப்படிச் செய்கின்ற அக்கினிசித்தாகிய தீக்ஷிதனை எல்லா தேவர்களும் அறிந்துகொள்கிறார்கள், என்றும் கூறுகிறது. 'देवा मा वेदन्निति वा अग्निश्चीयते विदुरेनं देवाः' என்று சுருதி. ஒருவன் பிரம்மதேவனை அறிந்துகொள்கிறான், பிரம்மதேவன் ஒருவனை அறிந்துகொள்கிறான். இவ்விரண்டு நிலையில் இரண்டாவது கூறப்பட்டவனான (பிரம்மதேவன் எவனை அறிந்துகொள்கிறானோ) அவன்தான் பாக்கியசாலி, புண்ணியமுள்ளவன் என்றும் வேதத்தில் கூறுகிறது. சுருதி - 'प्रजापतिं त्वो वेद प्रजापतिस्त्वं वेद, यं प्रजापतिर्वेद स पुण्यो भवति' என்று இத்தகைய

சுருதிவாக்கியங்களாலும், ஞானத்தினுல் மிகச் சிறந்த வித்யாதிராஜன், பிறப்பை விரும்பிய பரமசிவனுக்குப் பிதாமகனுக இருக்கவேண்டுமென்று அவரால் விரும்பப்பெற்ருர் என்ற நிலைமையை நினைக்கும் காலத்தில் அந்த மகானுடைய நிர்மலத்தன்மை நிச்சயமாக நிருபணம் செய்யப்படுகின்றதல்லவா? இதுதான் கிட்டவேண்டிய பாக்கியம்.)

पुत्रोऽभवत्तस्य पुरात्तपुण्यैः सुब्रह्मतेजाः शिवगुर्वभिख्यः ।
ज्ञाने शिवो यो वचने गुरुस्तस्यान्वर्थनामाऽकृत लब्धवर्णः ॥ ५

அந்த வித்யாதிராஜனுக்கு, பூர்வபுண்ணியங்களால் ஒரு புதல்வன் தோன்றினுர். அதற்குக் காரணம், பிதா புத்திரர்கள் என்ற இருவர்களுடைய புண்ணியங்களேயாகும். அந்தப் புதல்வன் மிகவும் பிரம்மதேஜஸ்ஸுஉள்ளவர். சிவகுரு என்ற பெயருடையவர். ஞானத்தில் பரமசிவனுகவும், சொற்பொழிவில் குருவாகவும் (பிரஹஸ்பதியாகவும்) இருந்தமையால், சமர்த்தராகிய வித்தியாதிராஜர் இவ்வாறு புதல்வனுக்குப் பெயரளித்தார்.

(திறமைவாய்ந்த புத்திசாலியாதலால், அவரளித்த பெயரின் பொருள் சிவனுக்கும் குருவானவர் என்றும் கூறுதல் சிறந்ததாகும்.)

स ब्रह्मचारी गुरुगेहवासी तत्कर्यकारी विहितान्नभोजी ।
सायंप्रभातं च हुताशसेवी व्रतेन वेदं निजमध्यगीष्ट ॥ ६

அந்த சிவகுரு பிரம்மசாரியாக குருவினுடைய கிருகத்தில் வசித்துக் கொண்டும், ஆசிரியருடைய கட்டளைகளைச் செய்துகொண்டும், முறைப்படியான ஆகாரத்தை உட்கொண்டும், காலையிலும் மாலையிலும் அக்னியை ஆராதித்துக்கொண்டும் (சந்தியாவந்தனம் சமிதாதானம் என்பவைகளை செய்துகொண்டும்) விரதத்துடன் தன்னுடைய வேதத்தை அத்யயனம் செய்துவந்தார். (கற்ருர்).

क्रियाद्यनुष्ठानफलोऽर्थबोधः स नोपजायेत विना विचारम् ।
अधीत्य वेदानथ तद्विचारं चकार दुर्बोधतरो हि वेदः ॥ ७

வேள்வி முதலான அறங்களை நன்கு செய்வதற்கு மறைகளின் பொருட்களைத் தெரிந்துகொள்ளுதல் அவசியம். அதற்கு சர்ச்சை இன்றியமையாதது. ஆகையால், அந்த சிவகுரு வேதங்களைக் கற்றபின் அவைகளின் கருத்தையும் நன்கு சர்ச்சைசெய்து உணர்ந்தார். வேதங்களின் கருத்து எளிதில் அறிதற்கரிதன்ருே.

वेदेष्वधीतेषु विचारितेऽर्थे शिष्यानुरागी गुरुराह तं स्म ।
अपाठि मत्तः सषडङ्गवेदो व्यचारि कालो बहुरत्यगात्ते ॥ ८

சீடர்களிடம் அன்புகொண்ட ஆசிரியர், வேதங்களைக் கற்றுக்கொண்டு அவைகளின் பொருளையும் அறிந்துகொண்ட சிவகுருவிடம் கூறினுர்:- ''என்னிடமிருந்து வேதங்களையும் ஆறு அங்கங்களையும் கற்றுக்கொண்டாய். அவைகளின் கருத்தையும் நன்கு சர்ச்சை செய்து தெரிந்துகொண்டாய். உனக்கு வயதும் அதிகமாகிவிட்டது.

भक्तोऽपि गेहं व्रज संप्रति त्वं जनोऽपि ते दर्शनलालसः स्यात् ।
गत्वा कदाचित्स्वजनप्रमोदं विधेहि मा तात विलम्बयस्व ॥ ९

நீ என்னிடம் பக்தியுள்ளவனுயினும் இப்பொழுது உன்னுடைய இல்லத்திற்குச் செல்வாயாக. உன்னுடைய தாய் தந்தையர்களும் உறவினர்களும் உன்னைப் பார்க்க வேண்டும் என்று மிக ஆவலுள்ளவர்களாக இருப்பார்கள். ஆகையால், சென்று பந்துக்களுக்கு ஆனந்தத்தை அளிப்பாயாக. குழந்தாய், தாமதம் செய்யாதே.

विधातुमिष्टं यदिहापराह्णे विजानता तत्पुरुषेण पूर्वम् ।
विधेयमेवं यदिह श्व इष्टं कर्तुं तदद्येति विनिश्चितोऽर्थः ॥ १०

பிற்பகலில் செய்ய வேண்டுமென்று விரும்புகிற காரியத்தை முற்பகலிலேயே செய்ய வேண்டும். அதுபோல் நாளைக்குச் செய்ய விரும்பிய காரியத்தையும் இன்றே செய்யவேண்டும். இது தீர்மானம்.

फालोप्तबीजादिह यादृशं स्यात्सस्यं न तादृग्विपरीतकालात् ।
तथा विवाहादि कृतं स्वकाले फलाय कल्पेत न चेद्वृथा स्यात् ॥ ११

தகுந்த காலத்தில் விதை விதைத்தால் பயிறு உண்டாவதுபோல், காலம் கடந்த பின் விதைப்பதினுல் பலன் ஏற்படாது. அதுபோலவே, தக்க காலத்தில் மணம் முதலான காரியத்தைச் செய்தால் அதற்குரிய பயன் கிட்டும். இல்லாவிடில் வியர்த்தமே ஆகும்.

आ जन्मनो गणयतो ननु तान्गताब्दान्माता पिता परिणयं तव कर्तुकामौ ।
पित्रोरियं प्रकृतिरेव पुरोपनीतिं यद्ध्यायतस्तनुभवस्य ततो विवाहम् ॥ १२

தாய்தந்தையர்கள் உனக்கு மணம் செய்விப்பதற்கு விருப்பம் கொண்டவர்களாக, பிறந்ததுமுதல் உன்னுடைய வயதை எண்ணிக்கொண்டிருக்கிறுர்கள். தம் புதல்வனுக்கு உபநயனத்தைச் செய்த பிறகு, கல்யாணத்தைப் பற்றி யோசனை செய்தல் தாய்தந்தையர்களுடைய இயற்கை குணம்.

तत्तत्कुलीनपितरः स्पृहयन्ति कामं तत्तत्कुलीनपुरुषस्य विवाहकर्म ।
पिण्डप्रदातृपुरुषस्य ससन्ततित्वे पिण्डाविलोपमुपरि स्फुटमीक्षमाणाः ॥ १३

ஒருவன் புதல்வன் உள்ளவனுகவிருந்தால் தன்னுடைய முன்னேர்களை திருப்திசெய்யக்கூடிய சிராத்தம் முதலான கர்மங்கள் நாசமடையாமல் நிலவுகின்றன என்பது பற்றி அதாதுகுலத்தவர்கள் தமது புதல்வர்களுக்குக் கல்யாணத்தைச் செய்துவைக்க விரும்புகிறுர்கள்.

अर्थावबोधनफलो हि विचार एष तच्चापि चित्रबहुकर्मविधानहेतोः ।
अत्राधिकारमधिगच्छति सद्द्वितीयः कृत्वा विवाहमिति वेदविदां प्रवादः ॥ १४

சர்ச்சைசெய்து வேதங்களின் கருத்தை உணர்தல், வேதங்களில் கூறியுள்ள அநேக யக்ஞயாகாதிகர்மங்களைச் செய்வதற்காகவேயாகும். அப்படிச்செய்வதற்கு

மனையாள் உள்ளவனுக்குத்தான் உரிமை. ஆகையால் மணம் செய்துகொள்ளுதல் மிக அவசியம் என்பது மறைகளை உணர்ந்தவர்களுடைய தீர்மானம்.

सत्यं गुरो न नियमोऽस्ति गुरोरधीतवेदो गृही भवति नान्यपदं प्रयाति ॥
वैराग्यवान्व्रजति भिक्षुपदं विवेकी नो चेद्गृही भवति राजपदं तदेतत् ॥ १५

சிவகுரு கூறுகிறார்:- சரி, குருவே! ஆசிரியரிடமிருந்து வேதங்களையும் அவைகளின் அங்கங்களையும் கற்றுக்கொண்டவன் இல்லறநெறியிலிருக்க வேண்டும். வேறு நெறியை அடையக்கூடாது என்று நியமமில்லையன்றோ! வைராக்கியமுள்ள விவேகி துறவிநெறியை பின்பற்றுகிறான். அப்படியில்லாவிடில் இல்லறமுற்றவனாக ஆகிறான். வைராக்கியம் கிட்டாதவனுக்கு இல்லறம் ராஜமார்க்கம். வைராக்கியம் ஏற்பட்ட விவேகிக்குத் துறவறம் ராஜமார்க்கம் என்றல்லவோ நூல்களின் கொள்கை.

(यदहरेव विरजेत् तदहरेव प्रव्रजेत्, ब्रह्मचर्यादेव प्रव्रजेत् - எந்த தினத்தில் வைராக்கியம் முற்றியதாகிறதோ அன்றையதினமே துறக்க வேண்டும்; பிரம்மசரியாச்ரமத்திலிருந்தே துறக்கலாம் என்று பொருள். இந்த வசனங்களை அடிப்படையாகக்கொண்டு இல்லறவாழ்க்கையில் பற்றற்றவராக சிவகுரு கூறினார்.) மேலும்,

श्रीनैष्ठिकाश्रममहं परिगृह्य यावज्जीवं वसामि तव पार्श्वगतश्चिरायुः ।
दण्डाजिनी सविनयो बुध जुह्वदग्नौ वेदं पठन् पठितविस्मृतिहानिमिच्छन् ॥ १६

அறிஞரே! நீண்ட ஆயுளுள்ள நான் வாழ்க்கைக்காலம் முழுவதும், பலாச தண்டம், மான்தோல் (பிரம்மசர்யாச்ரமத்திற்குரியவை) இவைகளைத் தரித்துக்கொண்டும், அக்னிசேவை (சமிதாதானம்) செய்துகொண்டும் கற்ற கல்விகள் மறக்காமலிருப்பதற்குத் தங்களுடைய சமீபத்தில் பணிவுடன் வசித்துவருகிறேன்.

दारग्रहो भवति तावदयं सुखाय यावत्कृतोऽनुभवगोचरतां गतः स्यात् ।
पश्चाच्छनैर्विरसतामुपयाति सोऽयं किं निह्नुषे त्वमनुभूतिपदं महात्मन् ॥ १७

மனைவியை மணந்து கொள்ளுதல் என்பது பேச்சளவிலும், அதைச் செய்துகொண்டால் அதனாலுண்டாகும் அனுபவம் ஏற்படுமளவிலும்தான் சுகத்திற்கு காரணமாகவிருக்கும். பிறகு காலக்கிரமத்தில் சுகக்குறைவும், சந்தோஷக்குறைவும்தான் நிலவுகிறது. மகானுபாவரே! உங்களுக்கு அனுபவத்திலுள்ள இந்த விஷயத்தை ஏன் மறைக்கிறீர்கள்?

यागोऽपि नाकफलदो विधिना कृतश्चेत्प्रायः समग्रकरणं भुवि दुर्लभं तत् ।
वृष्ट्यादिवन्न हि फलं यदि कर्मणि स्याद्दिष्ट्या यथोक्तविरहे फलदुर्विधत्वम् ॥१८

யாகம் ஸ்வர்க்கமாகிய பயனையளிக்கவேண்டுமாயின் மறைகளின் முறைப்படி செய்யவேண்டும். அதற்குரிய எல்லா அங்கங்களுடன் செய்தலரிது. மழை முதலிய கண்கண்ட பயன் கிட்டாவிடில் தெய்வச்செயலாற் பயனற்றதாகவே ஆகிவிடும். அவைகளால் அதிர்ஷ்டபயனும் (கண்ணுக்குப் புலனாகாத ஸ்வர்க்கம் முதலானதும்) கிடைக்கமாட்டாது.

निःस्वो भवेद्यदि गृही निरयी स नूनं भोक्तुं न दातुमपि यः क्षमतेऽणुमात्रम् ।
पूर्णोऽपि पूर्तिमभिमन्तुमशक्नुवन्यो मोहेन शं न मनुते खलु तत्र तत्र ॥ १९

இல்லற வாழ்க்கையில் இருப்பவன் செல்வமற்று வறுமையுள்ளவனுயின் நரக துக்கத்திற்கே ஆளாகிருன். ஏழ்மையினுல் தனக்கு வேண்டிய அளவு சாப்பிடுவதற்கே சௌகரியம் இல்லாமலிருக்கையில் பிறருக்குத் தானம் செய்ய முடியுமா? தானம் செய்யாதவரையில் புண்யமுமில்லே. நிறைச் செல்வனுக இருக்கையில், அந்தச் செல்வத்திஞல் தன்னுடைய நிறைவில் திருப்தி அடைகிறதில்லே. அவிவேகத்திஞல், பற்பல விஷயங்களாலும் தனக்கு உண்டாகிற சுகத்தைக்கொண்டு திருப்தி அடைகிறதில்லே.

यावत्सु सत्सु परिपूर्तिरथो अमीषां साधो गृहोपकरणेषु सदा विचारः ।
एकत्र संहतवतः स्थितपूर्वनाशस्तच्चापयाति पुनरप्यपरेण योगः ॥ २०

நன்மையைக் கூறுகின்றவரே! இல்லறத்திற்கு வேண்டிய பதார்த்தங்கள் யாவும் நிரம்பியிருந்தாலும் அந்த வாழ்க்கையிலுள்ளவர்களுக்கு எப்பொழுதும் கவலேதான். புதிதாகச் சேமித்து வைத்தால் முன்னறே இருந்தவைகள் நசிக்கின்றன. இவ்வாறு ஒன்றுசேர மற்றென்றின் நாசம் (அழிதல்) நிலவுகின்றது.

एवं गुरौ वदति तज्जनको निनीषुरागच्छदत्र तनयं स्वगृहं गृहेशः ।
तेनानुनीय बहुलं गुरवे प्रदाप्य यत्नान्निकेतनमनायि गृहीतविद्यः ॥ २१

குருவின் வசனத்திற்கு சிவகுரு இவ்வாறு பதில் கூறுகையில் இல்லத்திலிருக்கின்ற அவரது தந்தை புதல்வனே இல்லத்திற்கு அழைத்துச்செல்ல விருப்பமுற்றவராக அங்கே வந்தார். பலவாருன சொற்களால் மகனே சமாதானப்படுத்தி ஆசிரியருக்கு ஏராளமான செல்வங்களேயும் அவனேக்கொண்டு அளிக்கச்செய்து, கல்வி கற்று முடிந்தமையால் மிக முயற்சியுடன் இல்லறத்திற்கு அழைத்துச் சென்ருர்.

गत्वा निकेतनमसौ जननीं ववन्दे साऽऽलिङ्ग्य तद्विरहजं परितापमौज्झत् ।
प्रायेण चन्दनरसादपि शीतलं तद्यत्पुत्रगात्रपरिरम्भणनामधेयम् ॥ २२

இல்லத்திற் புகுந்து அவர், தாயாரை வணங்கினுர். தாயும், அநேக வருஷங்களாகப் பிரிந்திருந்ததினுலுள்ள தாபத்தை அப்புதல்வனே அணேத்துக்கொண்டு நீக்கிக்கொண்டார். மகனே ஆலிங்கனம் செய்து கொள்ளுதல் என்பது சந்தனக்குழம்பைக்காட்டிலும் குளிர்ச்சி உள்ள தன்ருே!

श्रुत्वा गुरोः सदनतश्चिरमागतं तं तद्बन्धुरागमदथ त्वरितेक्षणाय ।
प्रत्युद्गमादिभिरसावपि बन्धुतायाः संभावनां व्यधित वित्तकुलानुरूपाम् ॥ २३

வருஷக்கணக்காக குருகுலத்தில் வாசம் செய்து, திரும்பிவந்த அவரைக் காணக் குதூஹலத்துடன் உறவினர் விரைவாக வந்தனர். அவரவருடைய செல்வம், குலம் முதலியவற்றிற்குத் தகுந்தபடி சிவகுருவும் அவர்களுக்கு உபசாரம் செய்தார்.

वेदे परक्रमजटादिषु तस्य बुद्धिं संवीक्ष्य तज्जनयिता बहुशोऽप्यपृच्छत् ।
यस्याभवत्प्रथितनाम वसुन्धरायां विद्याधिराज इति सङ्गतवाच्यमस्य ॥ २४

வித்தைகளனைத்திலும் சாலச்சிறப்புடன் விளங்குகின்றவர் என்று பொருள்கொண்ட 'வித்தியாதிராஜன்' என்ற தக்க பெயரினுல் விளங்கிய தகப்பனுர் புதல்வனுடைய புத்தியின் சிறப்பையறிந்து வேதத்தில் பதம், கிரமம், ஜடை, கனம் ஆகிய பலவற்றிலும் பல வினுக்களை வினவினுர்.

भाट्टे नये गुरुमते कणभुङ्मतादौ प्रश्नं चकार तनयस्य मतिं बुभुत्सुः ।
शिष्योऽप्युवाच नतपूर्वगुरुः समाधिं पित्रोदितः स्मितमुखो हसिताम्बुजास्यः ॥२५

புதல்வனுடைய புத்தியின் புகழை அறிய விரும்பியவராக பாட்டமதம், குருமதம் (பூர்வமீமாம்சை), கௌதமமதம் (தர்க்கநூல்) முதலியவைகளில் பல விஷயங்களைப்பற்றி வினவினுர். சிவகுருவும் தன்னுடைய முன்னேர்களாகிய ஆசிரியர்கள் யாவரையும் வணங்கி, புன்முறுவல் பூத்த முகமாகவே விடையளித்தார். (தன்னுடைய புன்னகையினுல், தாமரைமலரையும், சந்திரனையும் தோல்வியுற்றவைகளாகச் செய்தார் என்ற அர்த்தத்தை 'ஹஸிதாம்புஜாஸ்யஹ' என்ற பதம் கூறுகிறது. மேன்மேலும் தந்தையால் உற்சாகப்படுத்தப்பட்டவரான அவருடைய முகத்தின் அழகு புகழத்தக்கதாகவிருந்தது.)

वेदे च शास्त्रे च निरीक्ष्य बुद्धिं प्रश्नोत्तरादावपि नैपुणीं ताम् ।
दृष्ट्वा तुतोषातितरां पिताऽस्य स्वतः सुखा या किमु शास्त्रतो वाक् ॥ २६

வேதத்திலும், மற்ற நூல்களிலும் அவருடைய புத்தியின் சிறப்பையும் வினுக்கட்கு விடையளிக்கும் வல்லமையையும் கண்டு தந்தை ஆனந்தமடைந்தார். இயற்கையாகவே இனிய சொற்கூறுகிறவர், கல்வியும் பயின்றிருக்கையில் சொற்களின் சிறப்பைக் கூறவும் வேண்டுமோ?

कन्यां प्रदातुमनसो बहवोऽपि विप्रास्तन्मन्दिरं प्रति ययुर्गुणपाशकृष्टाः ।
पूर्वं विवाहसमयादपि तस्य गेहं संबन्धवत्किल बभूव वरीतुकामैः ॥ २७

அந்த சிவகுருவினுடைய நற்குணங்களாகிய கயிற்றினுல் கட்டி இழுக்கப்பெற்றவர்களாக அநேக அந்தணர்கள் தம் கன்னிகையை அவருக்குக் கொடுக்க விருப்பமுற்றவர்களாக அவருடைய இல்லத்தில் வந்து சேர்ந்தனர். மணம் நடைபெறுவதற்கு முன்னமேயே வரனை வரிக்க விரும்பிவந்தவர்களால் அந்த அகம் சம்பந்திகள் நிரம்பியதாக ஆயிற்று.

बह्वर्थदायिषु बहुष्वपि सत्सु देशे कन्याप्रदातृषु परीक्ष्य विशिष्टजन्म ।
कन्यामयाचत सुताय स विप्रवर्यो विप्रं विशिष्टकुलजं प्रथितानुभावः ॥ २८

கன்னிகையைக் கொடுக்க விரும்பியவர்கள் ஏராளமான செல்வத்தை வரனுக்கு அளிக்க சித்தமாக அவ்வூரில் இருந்தனர். அப்படிப்பட்டவர்கள் அநேகர் இருந்தனர். ஆயினும் கீர்த்திபெற்ற வித்யாதிராஜர் மிகச்சிறந்த குலத்தில் தோன்றிய ஒரு அந்தணரிடம் தன்னுடைய புதல்வனுக்காக கன்னிகையை

யாசித்தார். (இதனால் திருமணத்தில் வரனுக்காக வதுவை யாசிக்க வேண்டியது என்பதுதான் முறை. நூலின் கொள்கையும் அதுதான் என்று விளங்குகிறது. காலத்தினால் அதன் மாற்றம் ஏமாற்றமே என்பதை ஆஸ்திகர்கள் உணரவேண்டியது அவசியம்.)

(முன்காலத்தில், சம்பந்திகளான இருவகையினர்களுக்குமிடையே நேர்ந்த விவாதம் ஆச்சரியப்படத்தக்கது என்பதை இந்தச் செய்யுளினால் தெரிந்துகொள்கிறோம்:-)

कन्यापितुर्वरपितुश्च विवाद आसीदित्थं तयोः कुलजुषोः प्रथितोरुभूत्योः ।
कार्यस्त्वया परिणयो गृहमेत्य पुत्रीमानीय सद्म तनयाय सुता प्रदेया ॥ २९

சிறந்த குலத்தில் தோன்றியவர்களும் மிக்கச் செல்வமுடையவர்களுமாகிய கன்னிகையின் தந்தைக்கும், வரனுடைய தந்தைக்கும் விவாதம்.

கன்னிகையின் தந்தை (மகபண்டிதர்):- என்னுடைய கிருகத்திற்கு வந்து திருமணத்தை நடத்தவேண்டும்.

வரனுடைய தந்தை:- உமது மகளை என்னில்லத்திற்கு அழைத்து வந்து மகனுக்கு அளிக்க வேண்டும்.

सङ्कल्पिताद् द्विगुणमर्थमहं प्रदास्ये मद्गेहमेत्य परिणीतिरियं कृता चेत् ।
अर्थं विना परिणयं द्विज कारयिष्ये पुत्रेण मे गृहगता यदि कन्यका स्यात् ॥ ३०

கன்னிகையின் தந்தை:- என் இல்லத்திற்கு வந்து திருமணத்தைச் செய்வதாகில் தீர்மானம் செய்ததைவிட இருமடங்குப் பொருள் அளிக்கிறேன்.

வரனுடைய தந்தை:- ஐயா, உமது கன்னிகையை என் இல்லத்திற்குக் கொணர்ந்து திருமணத்தை நடத்துவதாகில் பொருளைப் பெற்றுக் கொள்ளாமலேயே புதல்வனுக்கு விவாஹத்தை நடத்துகிறேன்.

कश्चित्तु तस्याः पितरं बभाण मिथः समाहूय विशेषवादी ।
अस्मासु गेहं गतवत्स्वमुष्मै विगृह्य कन्यामपरः प्रदद्यात् ॥ ३१

''இந்த விஷயத்தில் வாதம்செய்து பிணங்கிப் பிரிந்துசென்றால், வேறு ஒருவன் தன் மகளை அளித்துவிடுவான்'' என்று பேச்சில் வல்லமையுள்ள விசேஷ அறிஞர் ஒருவர் கன்னிகையின் தந்தையைத் தனிமையில் அழைத்துச்சென்று கூறினார்.

तेनानुनीतो वरतातभाषितं द्विजोऽनुमेने वररूपमोहितः ।
दृष्टो गुणः संवरणाय कल्पते मन्त्रोऽभिजापाच्चिरकालभावितः ॥ ३२

அவரால் நீதிகூறப்பட்ட அந்த கன்னிகையின் தந்தை வரனுடைய குணங்களுக்கு வசமாகி வரனுடைய தந்தை கூறும் வசனத்தை 'சரி' என்று சம்மதித்தார். காயத்திரி முதலிய மந்திரம் வெகுகாலம் தொடர்ந்து விசேஷமாக ஜபம் செய்யப்பட்டால் முக்தி என்ற கன்னிகையை ஸ்வயம்வரத்தில் அடைகிறதுபோல், நற்குணங்கள் நேரில் காணப்பட்டால் கல்யாணத்திற்கு அதுவே காரணமாகிறது.

विद्याधिराजमघपण्डितनामधेयौ संप्रत्ययं व्यतनुतामभिपूज्य दैवम् ।
सम्यङ्मुहूर्तमवलम्ब्य विचारंणीया मौहूर्तिका इति परस्परमूचिवांसौ ॥ ३३

வித்யாதிராஜரும் மகபண்டிதரும் சுபமுகூர்த்தத்தில் கணபதி பூஜையைச் செய்து, விவாஹத்திற்குரிய சுபலக்னத்தை ஜோதிடர்களிடம் கலந்து தீர்மானம் செய்யவேண்டுமென்று நிச்சயித்தனர்.

उद्वाह्य शास्त्रविधिना विहिते मुहूर्ते तौ संमुदं बहुमवापतुराप्तकामौ ।
तत्रागतो भृशममोदत बन्धुवर्गः किं भाषितेन बहुना मुदमाप वर्गः ॥ ३४

விதிமுறைப்படி சுபமுகூர்த்தத்தில் விவாகத்தை நடத்தினபிறகு அவர்கள் மிகவும் சந்தோஷமடைந்தனர். அங்கு வந்த பந்துக்களும் மிகவும் சந்தோஷமடைந்தனர். ஏறக்கூறுவானேன், எல்லோரும் அந்த சந்தர்ப்பத்தில் சந்தோஷமுற்றனர்.

तौ दंपती सुवसनौ शुभदन्तपङ्क्ती संभूषितौ विकसिताम्बुजरम्यवक्त्रौ ।
सव्रीडहासमुखवीक्षणसंप्रहृष्टौ देवाविवापतुरनुत्तमशर्म नित्यम् ॥ ३५

நல்ல அழகிய ஆடைகளணிந்தவர்களும், விசேஷமான அலங்காரங்களால் விளங்குகின்றவர்களும், மலர்ந்த தாமரை மலர்போல் மனோகரமான முகசோபையுள்ளவர்களும், வெட்கத்துடனும், புன்னகையுடனும் ஒருவர்க்கொருவர் பார்த்துக்கொண்டு மனமகிழ்ச்சியுடையவர்களும், தேவர்கள் போன்றவர்களும் ஆகிய வதூவரர்கள் நிகரற்ற ஆனந்தமடைந்தனர்.

अग्नीनथाधित महोत्तरयागजातं कर्तुं विशेषकुशलैः सहितो द्विजेशः ।
तत्तत्फलं हि यदनाहितहव्यवाहः स्यादुत्तरेषु विहितेष्वपि नाधिकारी ॥ ३६

பிராம்மணர்களில் சிறந்த அந்த சிவகுரு அநேக யக்ஞங்களை அனுஷ்டானம் செய்வதற்கு முதலில் மிக வன்மையுள்ளவர்களுடன் அக்னியாதானம் செய்தார். அக்னி ஆதானம் செய்யாவிடில் அக்கினிஷ்டோமம் முதலான சிறந்த யாகங்களை அனுஷ்டானம் செய்வதற்கு அதிகாரம் கிடையாது.

यागैरनेकैर्बहुवित्तासध्यैर्विजेतुकामो भुवनान्ययष्ट ।
व्यस्मारि देवैरमृतं तदाशैर्दिने दिने सेवितयज्ञभागैः ॥ ३७

பிரவிருத்திமார்க்கத்தில் மிகவும் சிரத்தைகொண்ட அந்த சிவகுரு, தேவலோக சுகங்களனைத்தையும் சம்பாதித்துக்கொள்ள விருப்பத்தினால் ஏராளமான பொருள்களைச் செலவுசெய்து அநேக யாகங்களை அனுஷ்டானம் செய்தார். அமிருதத்தை ஆகாரமாகக் கொண்ட தேவர்கள் அதை (அமிருதத்தை) மறந்துவிட்டனர். அந்த சிவகுரு இடைவிடாது செய்துவந்த யாகங்களில் அர்ப்பணம் செய்யும் அவிஸ்ஸைச் சாப்பிட்டதினால் தேவர்கட்கு அமிருதத்தின் தேவை ஏற்படவில்லை.

(துர்வாச முனிவருடைய சாபத்தினால் தேவர்களுடைய முற்செல்வங்களெல்லாம் நாசமடைந்தன. மறுபடியும் அவர்கள் சமுத்திரத்தைக்

கடைந்து அச்செல்வங்களை அடையவேண்டியதாக இருந்தது. அந்த சாபநிகழ்ச்சிக்கும், பிறகு செல்வமேற்பட்டகாலத்திற்கும் மத்தியிலுள்ள காலத்தில் தேவர்கள் அமிருதமில்லாதவர்களாகவிருந்தனர். ஆயினும், அதனால் அவர்களுக்குக் குறை நிகழவில்லை. ஏனெனில் சிவகுரு என்ற தர்மிஷ்டர் நிரந்தரமாக அனுஷ்டானம் செய்த யாகங்களில் ஹோமம் செய்த ஹவிஸ்ஸே அமரர்களுடைய தேவையைத் தீர்த்தது என்று கருத்துக் கூறவேண்டும். இல்லாவிடில் अमृताशैः என்று தேவர்களுக்கு பெயரெச்சச் சொல் அவசியமில்லாதது. மேற்கூறிய கருத்தைக் கொண்டால் தேவர்கள் அமிருதாகாரம் இல்லாமலிருந்தனர் என்று புலப்படுதலால் பெயரெச்சத்திற்கு பிரயோஜனம் உண்டு.)

संतर्पयन्तं पितृदेवमानुषांस्तत्तत्पदार्थैरभिवाञ्छितैः सह ।
विशिष्टवित्तैः सुमनोभिरञ्चितं तं मेनिरे जङ्गमकल्पपादपम् ॥ ३८

பித்ரு யக்ஞத்தினால் முன்னோர்களாகிய பித்ருக்களையும், தேவயக்ஞத்தினால் தேவர்களையும் அந்த சிவகுரு சந்தோஷமடையும்படி செய்தார். செல்வத்தை அளித்தும் அன்னதானத்தினாலும் மனிதர்களையும் அவர் சந்தோஷமடையும்படி செய்தார். மேலும் வித்வான்களால் ஆதரிக்கப்பட்டார். அத்தகையவரை நடக்கிற கற்பக விருக்ஷம் என்று எல்லோரும் கருதினர். கற்பகவிருக்ஷமும், பித்ருக்களையும், தேவர்களையும், மனிதர்களையும் விருப்பத்தைப் பூர்த்திசெய்து, சந்தோஷமடையும்படி செய்கின்றது. ஸுமனஸ்ஸுக்களால் = தேவர்களால் ஆதரிக்கப்பட்டது. ஸுமனஸ் என்ற சொல் புஷ்பங்களைக் கூறுகின்றது. ஆகவே, புஷ்பங்கள் நிரம்பியது என்று பொருள். சிவகுரு ஸுமனஸ்ஸுக்களால் = வித்வான்களால் ஆதரிக்கப்பட்டவர். ஆனால் தேவலோகத்திய கற்பகவிருக்ஷம் இடம்விட்டு இடம் அசையாத பதார்த்தம். தான் இருக்குமிடத்திற்கு வந்தவர்களுடைய வேண்டுகோளை நிறைவேற்றும் தன்மையுள்ளது. அவரோவெனில் ஆங்காங்கு நடந்து சென்று விரும்பியவர்களுடைய விருப்பத்தை நிறைவேற்றுவதுமல்லாமல், விருப்பமில்லாதவர்களுக்கும் கூட தன்னுடைய தானதர்மங்களால் சந்தோஷத்தை உண்டுபண்ணுபவராக விளங்கினார். (ரூபகாலங்காரம்).

परोपकारव्रतिनो दिने दिने व्रतेन वेदं पठतो महात्मनः ।
श्रुतिस्मृतिप्रोदितकर्म कुर्वतः समा व्यतीयुर्दिनमाससंमिताः ॥ ३९

அனுதினமும் பிறருக்கு உபகாரம் செய்வதையே விரதமாகக்கொண்டவரும் வேதங்களை ஓதிக்கொண்டு அவைகளில் கூறும் தர்மங்களை செய்தவருமாகிய அவருக்கு நாட்கள், மாதங்கள் என்ற முறையில் வருடங்கள் கடந்தன.

रूपेषु मारः क्षमया वसुन्धरा विद्यासु वृद्धो धनिनां पुरःसरः ।
गर्वानभिज्ञो विनयी सदा नतः स नोपलेभे तनयाननं जरन् ॥ ४०

அழகில் மன்மதனும், பொறுமையில் பூமியும், கல்வியில் முதியவரும், செல்வவான்களில் முன்னணியிலுள்ளவரும், செருக்கை அறியாதவரும்,

பணிவுள்ளவரும், எப்பொழுதும் மற்றவர்களால் வணங்கப்பட்டவரும், ஆகிய அவர் முதுமை அடைந்தும் புதல்வனுடைய முகத்தை காணவில்லை.

गावो हिरण्यं बहुसस्यमालिनी वसुन्धरा चित्रपदं निकेतनम् ।
संभावना बन्धुजनैश्च संगमो न पुत्रहीनं बहवोऽप्यमूमुहन् ॥ ४१

எண்ணில்லாப் பசுக்கள், பொற்குவியல், பயிற்செழிப்புள்ள வயல்கள், ஆனந்தத்தையும் ஆச்சரியத்தையும் வளர்க்கின்ற இல்லம், உறவினர்களுடைய உபசாரம், சேர்க்கை இவைகள் புதல்வன் தோன்ருத அவருடைய மனதைக்கவரவில்லை.

अस्यामजाता मम सन्ततिश्चेच्छरद्यवश्यं भवितोपरिष्टात् ।
तत्राप्यजाता तत उत्तरस्यामेवं स कालं मनसा निनाय ॥ ४२

இந்த வருஷத்தில் புதல்வன் பிறக்காவிடில் அடுத்த வருஷத்தில் பிறப்பான். அப்பொழுதும் பிறக்காவிடில் அதற்கு மேல்வருஷத்தில் என்று இவ்வாறு மனதில் எண்ணிக்கொண்டு காலத்தைக் கழித்தார்.

खिन्दन्मनाः शिवगुरुः कृतकार्यशेषो जायामचष्ट सुभगे किमतः परं नौ ।
साङ्गं वयोऽर्धमगमत्कुलजे न दृष्टं पुत्राननं यदिहलोक्यमुदाहरन्ति ॥ ४३

வருந்திய மனமுடையவரும், செய்யவேண்டிய காரியம் நிறைவேற்றியவரும் ஆகிய சிவகுரு மனைவியிடம் கூறினர்:- அழகியவளே! இனிமேல் நாம் என்ன செய்வது. வாழ்க்கையில் பாதி ஆயுள் சென்றுவிட்டது. அங்கங்களின் புஷ்டியும் குன்றிவிட்டது. நல்ல குலத்தில் தோன்றியவளே! இவ்வுலகில் எதை அவசியம் பார்க்கவேண்டும் என்று மறைகள் முறையிடுகின்றனவோ, அந்தப் புத்திர முகம் கண்ணுறப்பெறவில்லை.

('पुत्रेणायं लोको जय्यः' इति சுருதி. இவ்வுலகத்தின் ஜயம் புத்திரனல் என்று பொருள்.)

एवं प्रिये गतवतोः सुतदर्शनं चेत्पञ्चत्वमैष्यदथ नौ शुभमापतिष्यत् ।
अस्याभ्युपायमनिशं भुवि वीक्षमाणो नेक्षे ततः पितृजनिर्विफला ममाभूत् ॥ ४४

இந்த நிலைமையில் புதல்வனைக்கண்டு பிறகு மரணம் ஏற்பட்டால் நன்மை விளையும். இதற்கு வேண்டிய உபாயத்தை உன்னிப்பார்த்தும் நான் அறியேன். இவ்வாருயின் ''வித்யாதிராஜன்'' என கீர்த்திபெற்ற தந்தைக்கு நான் புதல்வனுகப் பிறந்தும் பயனற்றதாயிற்றன்ருே.

भद्रे सुतेन रहितौ भुवि के वदन्ति नौ पुत्रपौत्रसरणिक्रमतः प्रसिद्धिः ।
लोके न पुष्पफलशून्यमुदाहरन्ति वृक्षं प्रवालसमये फलितं विहाय ॥ ४५

நற்குணங்கள் நிறைந்தவளே! புதல்வனில்லா மனிதனை உலகில் யார் புகழ்கிருர்கள். புத்திரன், பேரன் என்பவர்கள் மூலமாகத்தான் மனிதனுக்கு பிரபஞ்சத்தில் பிரசித்தி நிலவுகிறது. ஓங்கித் தழைத்துப் பூத்துக் காய்த்த மரத்தையின்றி பூவும் காயுமில்லாத மரத்தை யார் புகழ்கின்றனர்?

इतीरिते प्राह तदीयभार्या शिवाख्यकल्पद्रुममाश्रयावः ।
तत्सेवनान्नौ भविता सुनाथ फलं स्थिरं जङ्गमरूपमैशम् ॥ ४६

இவ்வாறு அவர் கூறினபொழுது அவருடைய மனைவி, பதில் கூறினாள். நாதா! பரமசிவனாகிய கற்பக விருக்ஷத்தை பூஜிப்போமாக. நடக்கின்ற கற்பகவிருக்ஷமாகிய பரமசிவனை சேவித்தால் அழிவற்ற பயன் நமக்கு உண்டாகுமன்றோ!

भक्तेप्सितार्थपरिकल्पनकल्पवृक्षं देवं भजाव कमितः सकलार्थसिद्ध्यै ।
तत्रौपमन्युमहिमा परमं प्रमाणं नो देवतासु जडिमा जडिमा मनुष्ये ॥ ४७

ஆகையால் சுகத்தை அளிக்கின்றவரும், பக்தர்களுடைய விருப்பத்தை பூர்த்தி செய்வதில் கற்பக விருக்ஷமுமாகிய சிவபெருமானை இஷ்ட சித்தியின் பொருட்டு சரணமடைவோம். இந்த விஷயத்தில் உபமன்யு என்ற முனிவர் உதாரணம். தேவர்களுக்கு ஜடத்தன்மையில்லை. அவ்வாறு நினைப்பவனுக்குத்தான் ஜடத்தன்மை.

इत्थं कलत्रोक्तिमनुत्तमां स श्रुत्वा सुतार्थी प्रणतैकवश्यम् ।
इयेष सन्तोषयितुं तपोभिः सोमार्धमूर्धानमुमार्धमीशम् ॥ ४८

இவ்வாறு மனைவியின் மிகச் சிறந்த வசனத்தைக் கேட்டு புத்திரப் பேறை விரும்பிய சிவகுரு, வணங்கியவர்களுக்கு வசமாகின்றவரும் சந்திரக்கலையை சிரசில் தரித்தவரும், உடலிலொருபாகத்திலுமையை கொண்டவருமாகிய ஈசனை தவங்களால் திருப்திசெய்யத் தீர்மானம் கொண்டார்.

तस्योपधाम किल संनिहिताऽऽपगैका स्नात्वा सदाशिवमुपास्त जले स तस्याः।
कन्दाशनः कतिचिदेव दिनानि पूर्वं पश्चात्तदा स शिवपादयुगाब्जभृङ्गः ॥ ४९

அந்த கோயிலின் அருகில் ஒரு நதி உள்ளது. அதில் ஸ்நானம் செய்து சதாகாலமும் (எப்பொழுதும்) ஸதாசிவனை (எப்பொழுதும் மங்களரூபியை) உபாசனை செய்து வந்தார். முதலில் சிறு தினங்கள் கந்தமூலாதிகளைச் சாப்பிட்டு வந்தார். பிறகு (காலக்கிரமத்தில்) சிவபெருமானுடைய பாதங்களாகிய தாமரை மலர்களில் தங்கும் வண்டாக இருந்தார். (ஆகாரத்தை நிராகரித்து, சங்கரனுடைய சரணங்களையே சரணமாகக்கொண்டார்.)

जायाऽपि तस्य विमला नियमोपतापैश्चिक्लेश कायमनिशं शिवमर्चयन्ती ।
क्षेत्रे वृषस्य निवसन्तमजं स भर्तुः कालोऽत्यगादिति तयोस्तपतोरनेकः ॥ ५०

அவருடைய மனைவியும், பொறிகளையும், மனத்தையும், பிராணனையும் அடக்குதல் முதலான பற்பல நியமனங்களுடன் பரமசிவனைப் பூஜித்துக் கொண்டு உடலை வருத்திக்கொண்டாள். இவ்வாறு விருஷாசலம் என்ற பரிசுத்தமான இடத்தில் எழுந்தருளியிருக்கின்ற பரமேசுவரனை பூஜை செய்து கொண்டிருந்த அவர்களுக்கு அத்தகைய தவத்தினாலேயே காலமநேகம் சென்றது.

देवः कृपापरवशो द्विजवेषधारी प्रत्यक्षतां शिवगुरुं गत आत्तनिद्रम् ।
प्रोवाच भोः किमभिवाञ्छसि किं तपस्ते पुत्रार्थितेति वचनं स जगाद विप्रः ॥५१

கருணை கொண்டவராக பரமசிவனும் பிராம்மண வேடம் தரித்துக் கொண்டு நித்திரையிலிருக்கும்பொழுது சிவகுருவிற்கு முன்தோன்றி 'ஐயா நீ யாது விரும்புகிறாய், எதற்கு தவம் செய்கிறாய்' என்று வினவினார். அந்த பிராம்மணர் 'புத்திரப் பேறில் விருப்பம்' என்று பதிலளித்தார்.

देवोऽप्यपृच्छदथ तं द्विज विद्धि सत्यं सर्वज्ञमेकमपि सर्वगुणोपपन्नम् ।
पुत्रं ददान्यथ बहून्विपरीतकांस्ते भूर्यायुषस्तनुगुणानवदद् द्विजेशः ॥ ५२

पुत्रोऽस्तु मे बहुगुणः प्रथितानुभावः सर्वज्ञतापदमितीरित आबभाषे ।
दद्यामुदीरितपदं तनयं तपो मा पूर्णो भविष्यसि गृहं द्विज गच्छ दारैः ॥ ५३

அந்தணரே! உண்மையாக உலகம் யாவற்றையும் உணர்ந்தவனும், எல்லா நற்குணங்களுடன் விளங்குகிறவனும் ஆனால் நீண்ட அயுள் இல்லாதவனும் ஆகிய ஒரு ''புதல்வனா'' அல்லது இதற்கு மாறாக நீண்ட காலம் நிலைத்திருக்கும் அநேக புதல்வர்களா? இவ்விரண்டில் எதை அளிக்கவேண்டும் என்று கேட்டார். அந்தணர்களில் சிறந்தவர் கூறினார். நற்குணங்கள் நிரம்பி பிரசித்திபெற்ற ''ஸர்வக்ஞன்'' (எல்லாம் அறிந்தவன்) என்ற சொல்லுக்குப்பொருளான புத்திரன் ஒருவன் வேண்டும் என்று அவர் கூறினவுடன், அளிக்கிறேன் என்றருளினார் பரமசிவன். ''தவம் போதும், நீ பாக்கியவானாக விளங்குவாய், மனைவியுடன் மனைக்குச்செல்வாயாக'' என்றும் கூறினார்.

आकर्णयन्निति बुबोध स विप्रवर्यस्तं चाब्रवीन्निजकलत्रमनिन्दितात्मा ।
स्वप्नं शशंस वनितामणिरस्य भार्या सत्यं भविष्यति तु नौ तनयो महात्मा ॥ ५४

மாசற்ற மனமுடையவரும் பிராம்மணர்களில் சிறந்தவருமாகிய அவர், சங்கரருடைய ஆக்ஞையைக் கேட்டுணர்ந்து மனையாளிடம் தன்னுடைய கனவைப்பற்றி கூறினார். அந்தப் பெண்மணியும் (ஆரியாம்பாள் என்ற பெயர்) மகாத்மாவாகிய மகன் நமக்குத் தோன்றுவான் என்று மகிழ்ச்சியடைந்தாள்.

तौ दम्पती शिवपरौ नियतौ स्मरन्तौ स्वप्नेक्षितं गृहगतौ बहुदक्षिणान्नैः ।
संतर्प्य विप्रनिकरं तदुदीरिताभिराशीर्भिरापतुरनल्पमुदं विशुद्धौ ॥ ५५

நியமங்களுடன் கூடியவர்களும், சிவபாதங்களிலேயே சிந்தையைச் செலுத்துகிறவர்களுமான அந்தத் தம்பதிகள் கனவை நினைத்துக்கொண்டு கிரகத்திற்குச் சென்று ஏராளமான பொருட்களைத் தானம் செய்தல், திருப்தியாக அன்னமளித்தல் இவைகளால் அந்தணர்களனைவர்களை ஆனந்திக்கச் செய்து, அவர்களுடைய ஆசிகளையும் பெற்று சித்தம் சிந்தையின்மையால் சுத்தமடைந்தவர்களாக அளவில்லாத ஆனந்தம் அடைந்தார்கள்.

तस्मिन्दिने शिवगुरोरुपभोक्ष्यमाणे भक्ते प्रविष्टमभवत्किल शैवतेजः ।
भुक्तान्नविप्रवचनादुपभुक्तशेषं सोऽभुङ्क्त साऽपि निजभर्तृपदाब्जभृङ्गी ॥ ५६

அன்றைய தினம் சிவகுரு சாப்பிடக்கூடிய அன்னத்தில் பரமசிவனுடைய தேஜஸ் புகுந்தது. அந்தணர்கள் சாப்பிட்டு ஆசியும் கூறின பிறகு அவர்களுடைய ஆக்ஞைப்படி மீதி அன்னத்தைத்தான் சாப்பிட்டார். கணவனுடைய பாத கமலத்திலுள்ள வண்டாகிய அந்த பதிவிரதையும் உணவருந்தினுள்.

गर्भं दधार शिवगर्भमसौ मृगाक्षी गर्भोऽप्यवर्धत शनैरभवच्छरीरम् ।
तेजोऽतीरेकविनिवारितदृष्टिपातविश्वं रवेर्दिवसमध्य इवोग्रतेजः ॥ ५७

சிறப்புச் செல்வியான சுந்தரியும் சிவனைக்கருவில் கொண்டாள். கிரமமாக கரு வளர்ந்தது. அது வளர வளர மங்களையான மங்கைமணியின் உடல், நடுப்பகலில் ஒளிவீசும் கதிரவனுடைய கடினமான கிரணங்களைப் போல் பார்க்கின்றவர்களுடைய கண்களைக் கூசச் செய்கிற பிரகாசத்துடன் விளங்கிற்று.

गर्भालसा भगवती गतिमान्द्यमीषदापेति नाद्भुतमिदं धरते शिवं या ।
यो विष्टपानि बिभृते हि चतुर्दशापि यस्यापि मूर्तय इमा वसुधाजलाद्याः ॥ ५८

கர்ப்பிணியான அந்த அணங்கின் நடை, வேகத்தில் குன்றியது. அதில் என்ன வியப்பிருக்கின்றது? யாதுமில்லை, பதினான்கு உலகங்களையும் தரிக்கின்றவரும் 1. பூமி, 2. ஜலம், 3. அக்னி, 4. வாயு, 5. ஆகாயம், 6. சூரியன், 7. சந்திரன், 8. யக்ஞம் செய்யும் தீக்ஷிதர் என்ற அஷ்டமூர்த்தியுமாகிய பரம்பொருளுக்கு ஆச்ரயமாகவன்றோ அந்த அணங்கு விளங்கினுள்.

संव्याप्तवानपि शरीरमशेषमेव नोपास्तिमाविरसकावकृतात्र कांचित् ।
यत्पूर्वमेव महसा दुरतिक्रमेण व्याप्तं शरीरमदसीयममुष्य हेतोः ॥ ५९

சிவபெருமானை பூஜித்ததின் பயனாக (அவருடைய உடல்) மற்றவர்களால் மீறமுடியாத தேஜஸ்ஸினுல் வியாபிக்கப்பெற்றது. ஆயினும் அந்த சங்கரர் அந்த அணங்கின் உடலில் அதிகமாக தன்னுடைய சக்தியை வைக்கவில்லை. (பூர்த்தியாக தன் தேஜஸ்ஸை வைத்தால் தரிக்க முடியாது என்பதுபற்றி சிறிதளவுமட்டும் புகுத்தினுர்.)

रम्याणि गन्धकुसुमान्यपि गर्धिमस्यै नाधातुमैशत भरात्किमु भूषणानि ।
यद्यद्गुरुत्वपदमस्ति पदार्थजातं तत्तद्विधारणविधावलसा बभूव ॥ ६०

அழகியவைகளும் நறுமணமுள்ளவைகளுமான புஷ்பங்கள் கூட அந்த அணங்கிற்கு விருப்பமளிக்கவில்லை. அவைகளே சுமக்கமுடியாத பாரமாக இருந்தனவென்றால் மற்ற நகைகளைப்பற்றியும் கூறவேண்டுமோ? பளுவாக இருந்த பொருள் (ஒவ்வொன்றையும்) ஒன்றைக்கூட எடுப்பதில் அவள் உற்சாகமற்றவளாக இருந்தாள்.

तां दौहृदं भृशमबाधत दुःशरारिः प्रायः परं किल न मुञ्चति मुञ्चतेऽपि ।
आनीतदुर्लभमपोहति याचतेऽन्यत्तच्चाप्यपोह्य पुनरर्दति साऽन्यवस्तु ॥ ६१

துச்சராரி (ஒருவகை துஷ்டப்பறவை) போல், வயா அந்த அணங்கை வருத்தியது. கைப்பற்றிய பொருளை அந்தப் பறவை விடாமலும், விட்டும்

வருத்துகின்ற தன்மையுள்ளது. அதுபோலவே, வயாவருத்தமுற்ற அந்த அணங்கு அரிய பொருளை விரும்புவாள், கிட்டிய பின் மறுப்பாள். வேறு பொருளை வேண்டுவாள், கையில் கிடைத்தால் நிராகரிப்பாள். இன்னும் வேணும், வேண்டாம் இப்படி விருப்பு வெறுப்புற்றவளானாள்.

तां बन्धुताऽऽगमदुपश्रुतदोहदार्तिरादाय दुर्लभमनर्घ्यमपूर्ववस्तु ।
आस्वाद्य बन्धुजनदत्तमसौ जहर्ष हा हन्त गर्भधरणं खलु दुःखहेतुः ॥ ६२

ஆரியாம்பாளுடைய வயாவைக் கேட்டு பந்துக்களனைவரும் விலைமதிக்க முடியாத அரிய ஆச்சரியப் பொருளைக் கொணர்ந்து சமர்ப்பித்தனர். அந்த அணங்கு அவைகளைப் பெற்றுக்கொண்டு சுவைத்துச் சுகமடைந்தாள். ஆஹா, கஷ்டம்! வயா, வருந்துகின்ற விஷயம் என்று கூறவும் செய்தாள்.

मानुष्यधर्ममनुसृत्य मयेदमुक्तं काऽपि व्यथा शिवमहोभरणे न वध्वाः ।
सर्वव्यथाव्यतिकरं परिहर्तुकामा देवं भजन्त इति तत्त्वविदां प्रवादः ॥ ६३

மேற்கூறியபடி 'ஹா, கஷ்டம்' என்று கூறியது மனிதத்தன்மையைப் பின்பற்றிக் கூறியதாகும். சிவஜோதியை சுமக்கின்ற அணங்கிற்கு ஒருவிதமான வருத்தமும் நிலவவில்லை. எல்லாவித துக்கங்களையும் அகற்றிக்கொள்வதற்கு அந்த தேவனை ஜனங்கள் பூஜிக்கின்றனர் என்று உண்மையை உணர்ந்த உத்தமர்கள் உரைக்கின்றனர்.

(ஆகையால் முன்கூறியது முக்கண்ணனது மகிமையை அறிய வன்மையற்ற மூடமான மனிதத்தன்மையினாலும் மகத்தான மாயையின் செயலான அவிவேகத்தினாலும் என்று பச்சாதாபமடைந்தவராகப் பாபத்திற்கு பரிகாரமாகப் பரமேசுவரனை தாங்கியதனால், பார்வதிக்கும் மேலான பாக்யம் பெற்ற அந்த அணங்கின் மகிமையை மிக மகிழ்ந்து மஹான் வர்ணிக்கிறார்.)

उक्ष्णा निसर्गधवलेन महीयसा सा स्वात्मानमैक्षत समूढमुपात्तनिद्रा ।
संगीयमानमपि गीतविशारदाढ्यैर्विद्याधरप्रभृतिभिर्विनयोपयातैः ॥ ६४

துயிலுங் காலத்தில் அந்த மங்கை, இயல்பாகவே தூயநிறமான சிறந்த விருஷபத்தினால் (நந்திகேசுவரனால்) சுமக்கப்பெற்ற தன்னை, கானவித்தையில் சிறந்த கந்தர்வர்கள், வித்யாதரர்கள், முதலியவர்கள் வணக்கத்துடன் அருகில் வந்து கானம்செய்துப் புகழ்வதைக் கண்ணுற்றாள்.

आकर्णयज्ञय जयेति वरं दधाना रक्षेति शब्दमवलोकय मा दृशेति ।
आकर्ण्य नोत्थितवती पुनरुक्तशब्दं सा विस्मिता किल शृणोति निरीक्षमाणा ॥ ६५

பிறகு, 'வெற்றியடைவாயாக, என்னைக் காப்பாற்றுவாயாக, கண்ணுற்று அருள்வாயாக' என்று கூறுதலைக்கேட்டு வரம் அருளுபவளாக எழுந்தாள். (கனவில்) அதைக் கேட்டு துயில் நீங்கி எழுந்து பார்க்கும்பொழுது அந்த சப்தத்தைக் கேட்கவில்லை. ஆகையால் வியப்புற்றாள்.

नर्मोक्तिकृत्यामपि खिद्यमाना किञ्चापि चञ्चत्तरमञ्चरोहे ।
जित्वा मुदाऽन्यानतिहृद्यविद्यासिंहासनेऽसौ स्थितिमीक्षते स्म ॥ ६६

'அழகிய இந்தக் கட்டிலில் அமர்ந்துகொள்,' என்று வேடிக்கையாக உறவினர் கூறும் வசனத்தைக் கேட்கும்போதே, தேகபாரத்தினுல் அப்படி செய்ய வருந்திய அந்தப் பெண்மணி மற்ற மதஸ்தர்களை வென்று 'வித்யா சிங்காசனம்' என்ற சரஸ்வதியினது சிங்காசனத்தில் அமர்ந்திருந்த தன் உருவத்தைக் கண்டாள்.

समानता सात्विकवृत्तिभाजां विरागता वैषयिकप्रवृत्तौ ।
तस्याः स्त्रिया गर्भगपुत्रचित्रचरित्रशंसिन्यजनिष्ट चेष्टा ॥ ६७

ஸாத்வீகமான செயல்கள் கொண்ட பற்றற்ற துறவிகளுக்கு நிகராக விருக்கும் நிலைமையும், விஷயசுகங்களில் பற்றின்மையும் ஆகிய குணங்கள் அந்த அணங்கினுடைய கர்ப்பத்திலிருக்கும் புதல்வனின் விசித்திர சரித்திரத்திற்கு அறிகுறியாக இருந்தன.

तद्रोमवल्ली रुरुचे कुचाद्र्यावृण्वत्प्रभाधुन्युरुशैवलालिः ।
यत्नाच्छिशोरस्य कृते प्रशस्तो न्यस्तो विधात्रेव नवीनवेणुः ॥ ६८

அந்த அணங்கின் ஸ்தனங்களாகிய மலைகளில் பரவுகின்ற (உடலின்) ஒளியாகிய நதியில் பரவிய பாசமாகிய ரோமாவளி, கருவிலிருக்கும் சிசுவினுடைய துறவறத்திற்குரியதாக பிரம்மதேவனுல் புதிதாகச் செய்யப்பட்ட மூங்கில் தடிபோல் இருந்தது.

पयोधरद्वंद्वमिषादमुष्याः पयः पिबत्यर्थविधानयोग्यौ ।
कुम्भौ नवीनामृतपूरितौ द्वावम्भोजयोनिः कलयांबभूव ॥ ६९

பால் குடிப்பதற்கு உரியவைகளும், புதிதான அமிருதம் நிறைந்தவைகளுமான இரண்டு குடங்கள் என நினைக்கத்தக்கவைகளாக ஸ்தனங்களை பிரம்மதேவர் அமைத்தார்.

द्वैतप्रवादं कुचकुम्भमध्ये मध्ये पुनर्माध्यमिकं मतं च ।
सुभ्रूमणेर्गर्भग एव सोऽर्भो द्रागगर्हयामास महात्मगर्ह्यम् ॥ ७०

இரண்டு தத்துவங்கள் என்று வேற்றுமையை கூறும் த்வைத மதத்தை அந்த அணங்கின் இரு ஸ்தனங்களிலும் அவளுடைய இடையில், மாத்திய மிகமதத்தையும் (சூன்யவாதத்தையும்) கருவிலிருக்கும் காலையிலேயே அந்த சிசு நிராகரித்தார். ஏனெனில், மகான்களால் அது நிந்திக்கத்தக்கது.

लग्ने शुभे शुभयुते सुषुवे कुमारं श्रीपार्वतीव सुखिनी शुभवीक्षिते च ।
जाया सती शिवगुरोर्निजतुङ्गसंस्थे सूर्ये कुजे रविसुते च गुरौ च केन्द्रे ॥ ७१

சுபகிரகத்துடன் கூடியதும், சுபனுடைய திருஷ்டியிலுள்ளதுமாகிய சுபலக்னத்தில் சிவகுருவின் மனைவியான ஆரியாம்பாள் என்ற பதிவிருதா ரத்தினம், ஸ்ரீ பார்வதிதேவி சுப்ரமண்யனைப் பெற்றதுபோல் சுகமாகப் புதல்வனைப் பெற்ருள்.

(சூரியன் மேஷராசியிலும், செவ்வாய் மகரத்திலும், சனி துலாத்திலும், வியாழன் நான்காமிடம் முதலாகிய கேந்திரத்திலுமிருத்தல் உச்சத்திலிருத்தல்)

दृष्ट्वा सुतं शिवगुरुः शिववारिराशौ मग्नोऽपि शक्तिमनुसृत्य जले न्यमांक्षीत् ।
व्यश्राणयद्बहु धनं वसुधाश्च गाश्च जन्मोक्तकर्मविधये द्विजपुंगवेभ्यः ॥ ७२

புதல்வனைக் கண்ணுற்று சிவகுரு ஆனந்தக்கடலில் மூழ்கினர். ஆயினும், முறைப்படி நதியில் ஸ்நானம் செய்து ஜாதகர்மத்திற்கு அங்கமாக அந்தணர்களுக்கு ஏராளமான செல்வத்தையும், பூமியையும், பசுக்களையும் தானம் வழங்கினர்.

तस्मिन्दिने मृगकरीन्द्रतरक्षुसिंहसर्पाखुमुख्यबहुजन्तुगणा द्विषन्तः ।
वैरं विहाय सह चेरुरतीव हृष्टाः कण्डूमपाकृषत साधुतया निघृष्टाः ॥ ७३

அன்றைய தினத்தில், சுபாவமாகவே பகைமையுள்ள மிருகங்கள் விரோதத்தை விலக்கி சந்தோஷத்துடன் சஞ்சாரம் செய்ததுமன்றி ஒன்றுக்கொன்று உபசாரம் செய்துகொண்டன.

वृक्षा लताः कुसुमराशिफलान्यमुञ्चन्नद्यः प्रसन्नसलिला निखिलास्तथैव ।
जाता मुहुर्जलधरोऽपि निजं विकारं भूभृद्गणादपि जलं सहसोत्पपात ॥ ७४

மரங்களும், கொடிகளும் மலர்களையும் பழங்களையும் பொழிந்தன. நதிகளில் சுத்தமான தண்ணீர் பெருகியது. மேகமும் ஜலத்தைப் பொழிந்தது. மலைகளிலிருந்தும் தண்ணீர் தோன்றியது.

अद्वैतवादिविपरीतमतावलम्बिहस्ताग्रवर्तिवरपुस्तकमप्यकस्मात् ।
उच्चैः पपात जहसुः श्रुतिमस्तकानि श्रीव्यासचित्तकमलं विकचीबभूव ॥ ७५

அத்வைதமதத்திற்கு விரோதமான மதத்தைப் பின்பற்றியவர்களின் கையிலிருந்து புஸ்தகம் கீழே விழுந்தது. வேதங்களுடைய சிரஸ்ஸுகளான உபநிஷத்துக்கள் சந்தோஷமடைந்தன. ஸ்ரீ வேதவியாசருடைய இருதய கமலம் மலர்ச்சியடைந்தது.

सर्वाभिराशाभिरलं प्रसेदे वातैरभाव्यद्भुतदिव्यगन्धैः ।
प्रजज्वलेऽपि ज्वलनैस्तदानीं प्रदक्षिणीभूतविचित्रकीलैः ॥ ७६

திசைகள் யாவும் மகிழ்ச்சியடைந்தன. பரிமளவாசனைகளுடன் காற்று ஆனந்தமளித்துக்கொண்டு அடித்தது. எல்லா இடங்களிலும் அக்னிகள் (விசேஷமாக கார்ஹபத்தியம், தக்ஷிணாக்னி, ஆகவனீயம் என்ற மூன்று அக்னிகள்) வலமாகச் சுற்றும் சுடருடன் ஜ்வலித்தன.

सुमनोहरगन्धिनी सतां सुमनोवद्विमला शिवंकरी ।
सुमनोनिकरप्रचोदिता सुमनोवृष्टिरभूत्तदाऽद्भुतम् ॥ ७७

அச்சமயத்தில் ஆச்சரியமாக மலர்மாரி பொழிந்தது. அது மிகவும் பரிமள வாசனையுடையதாக இருந்தது. ஸாதுக்களுடைய சுத்தமான மனம் போல் மங்களத்தைச் செய்கின்றதாகவுமிருந்தது. ஸுமனஸ்ஸுக்களுடைய கூட்டத்தினால் (தேவர்களுடைய கூட்டத்தினால்) செய்யப்பட்டதாகவும் இருந்தது. (நல்ல மனமுடையவர்களான சான்றோர்களால், தமது மனங்களின் நல்ல செயல்கள் அர்ப்பணம் செய்யப்பட்டன.)

लोकत्रयी लोकदृशेव भास्वता महीधरेणेव मही सुमेरुणा ।
विद्या विनीत्येव सती सुतेन सा रराज तत्तादृशराजतेजसा ॥ ७८

உலகங்களுக்கெல்லாம் கண்ணுகிய சூரியனுல் மூன்று உலகங்கள் விளங்குவதுபோலவும், சிறந்த மேருமலையினுல் பூமி விளங்குவதுபோலவும், அடக்கத்தினுல் கல்வி விளங்குவதுபோலவும், உலகில் பிரசித்திபெற்ற ஸ்ரீராமர் முதலிய அரசர்களுடைய தேஜஸ்ஸு அமைந்த அந்தப் புதல்வனுல் ஆரியாம்பாள் விசேஷமாக விளங்கினுள்.

(தேஜஸ்ஸுகளுக்கெல்லாம் ராஜா சூரியன். 'ज्योतिषां रविरंशुमान्' என்று பகவத்கீதை வசனம். ஒளிகளுக்குள் சூரியன் சிறந்தது என்று பொருள். 'नक्षत्राणामहं शशी' என்றும் அந்த நூலில் வசனமுள்ளது. நக்ஷத்திரங்களுக்குள் நான் சந்திரன் என்று பொருள். ஆகையால் இவ்விரண்டும் உலகில் பிரச்சித்தமானவையும் தேஜஸ்ஸுக்களுக்கெல்லாம் ராஜாக்கள் என்றும் கூறப்படுகின்றன. அவை (சூரியனும், சந்திரனும்) அஷ்டமூர்த்தியான பரமசிவனுடைய தேஜஸ்ஸினுல் ஒளியை அடைகின்றன. ஆகையால் பிரசித்திபெற்ற தேஜஸ்ஸுக்களுக்கும் தேஜஸ்ஸை அளிப்பவராகிய சிவபெருமானுல் விளங்கினுள் என்றும் விசேஷமான அர்த்தம்.)

सत्कारपूर्वमभियुक्तमुहूर्तवेदिविप्राः शशंसुरभिवीक्ष्य सुतस्य जन्म ।
सर्वज्ञ एव भविता रचयिष्यते च शास्त्रं स्वतन्त्रमथ वागधिपांश्च जेता ॥ ७९

விசேஷமாக உபசாரம் செய்து ஜோதிடர்களை வினவியபொழுது அவர்களும் அந்த புதல்வனுடைய பிறவிகாலத்துக்குணங்களை கூறினர். இவன் 'ஸர்வக்ஞன்' ஆக விளங்குவான். தனிப்பட்ட சிறந்த நூலை இயற்றுவான். பேசும் திறமை நிறைந்தவர்களை வெல்லுவான் (ஸரஸ்வதியையும் ஜயிப்பான்) என்றும் கூறினர். (வாகதிபாம் என்று பாடபேதம்.)

कीर्तिं स्वकां भुवि विधास्यति यावदेषा किं बोधितेन बहुना शिशुरेष पूर्णः ।
नापृच्छि जीवितमनेन च तैर्न चोक्तं प्रायो विदन्नपि न वक्त्यशुभं शुभज्ञः ॥ ८०

இந்த உலகம் உள்ள வரையில் தன் கீர்த்தி நிலைக்கும்படியான செயலைச் செய்வான். ஏறச் சொல்லவேணுமா? இந்தக் குழந்தை எல்லாவகையிலும் பரிபூர்ணமானவன் என்றும் கூறினுர்கள். தந்தை மகனுடைய ஆயுளைப்பற்றி வினவவில்லை. அவர்கள் கூறவுமில்லை. பொதுவாக சுபத்தை கூறுகின்ற அறிஞன் அசுபத்தை சொல்லான்.

तज्ज्ञातिबन्धूसुहृदिष्टजनाङ्गनास्तास्तं सूतिकागृहनिविष्टमथो निदध्युः ।
सोपायनास्तमभिवीक्ष्य यथा निदाघे चन्द्रं मुदं ययुरतीव सरोजवक्त्रम् ॥ ८१

பிறகு அவருடைய தாயாதிகளுடையவும், பந்துக்களுடையவும், நண்பர்களுடையவும், (सुहृत्) இஷ்டஜனங்களுடையவும் மங்கையர்கள் காணிக்கை பொருள்களை கையிலேந்திவந்து பிரஸவ அறையிலிருந்த அந்த சிசுவை கண்டுத் தியானம் செய்தனர். மலர்ந்த தாமரை மலர்போன்ற முகம்கொண்ட அவரைக்கண்டு, வெயிலினுல் வாடினவர்கள், சந்திரனைக் கண்டு

களிப்பது போல் ஆனந்தமுற்றனர். (बन्धु = பெரிய தப்பிதத்தையும் பொறுத்துக் கொள்கின்றவன், सुहृत् = எப்பொழுதும் பின்பற்றுகிறவன், इष्ट = ஒரே செயலுள்ள மித்திரன் என்றும், உடல் வேருயினும் உயிர் ஒன்று என்ற நிலையிலுள்ள நண்பன் என்ற வகையிலுள்ளவன்.)

तत्सूतिकागृहमवैक्षत न प्रदीपं तत्तेजसा यदवभातमभूत्क्षपायाम् ।
आश्चर्यमेतदजनिष्ट समस्तजन्तोस्तन्मन्दिरं वितिमिरं यदभूददीपम् ॥ ८२

அந்த பிரஸவ அறை தீபத்தை விரும்பவில்லை. இரவில், தீபமில்லாமலேயே அந்தக் குழந்தையினுடைய உடலின் ஒளியினுலேயே இருள் நீங்கியதாகவும், மிகவும் ஒளியுள்ளதாகவும் இருந்ததனுல் எல்லோருக்கும் வியப்புண்டாயிற்று.

यत्पश्यतां शिशुरसौ कुरुते शमग्र्यं तेनाकृतास्य जनकः किल शङ्कराख्याम् ।
यद्वा चिराय किल शङ्करसंप्रसादाज्जातस्ततो व्यधित शङ्करनामधेयम् ॥ ८३

கண்ணுற்றவர்களுக்குச் சிறந்த சுகத்தை (शं = சுகம்) அளிப்பதனுல் தந்தை புதல்வனுக்கு 'சங்கரன்' என்ற பெயர் அளித்தார். மேலும், புதல்வன் தோன்ருமல், துக்கத்தை உய்த்த தமக்கு தேவாதிதேவனுகிய சங்கரனுடைய அருளினுல் தோன்றியது பற்றியும் அவ்வாறு பெயர் அளித்தார்.

सर्वं विदन्सकलशक्तियुतोऽपि बालो मानुष्यजातिमनुसृत्य चचार तद्वत् ।
बालः शनैर्हसितुमारभत क्रमेण सप्तुं शशाक गमनाय पदाम्बुजाभ्याम् ॥ ८४

எல்லாம் அறிந்தவராயினும் குழந்தைப்பருவத்திலுள்ளமையால் மனிதத்தன்மையை அனுசரித்து அதன்படி செயலாற்றினுர். கிரமமாக சிரிக்கத் தொடங்கினுர், தவழ்ந்தார். பிறகு கால்களால் நடந்தார்.

बालेऽथ मञ्चे किल शायितेऽस्मिन्सतां प्रसन्नं हृदयं बभूव ।
संवीक्षमाणे मणिगुच्छवर्यं विद्वन्मुखं हन्त विलीनमासीत् ॥ ८५

குழந்தை கட்டிலில் படுக்கவைக்கப்பட்ட சமயத்தில் சாதுக்களுடைய மனம் ஆனந்தமடைந்தது. மேலே தொங்குகின்ற ரஸகுண்டு முத்து முதலியவைகளைப் பார்க்கும்பொழுது மற்ற வித்வான்களுடைய முகம் ஒளி மங்கியதாயிற்று. ஆச்சரியம்.

संताडयन्हन्त शनैः पदाभ्यां पर्यङ्कवर्यं कमनीयशय्यम् ।
बिभेद सद्यः शतधा समूहान्विभेदवादीन्द्रमनोरथानाम् ॥ ८६

அழகிய படுக்கையமைந்த சிறந்த கட்டிலை கால்களால் உதைத்தார். அதனுல் 'வேற்றுமை வாதம்' கூறுகின்ற மற்ற மதஸ்தர்களுடைய மனதிலுள்ள கொள்கைகளின் கூட்டங்களை பல தூளாகத் துண்டித்தார்.

द्वित्राणि वर्णानि वदत्यमुष्मिन्द्वैतिप्रवीरा दधुरेव मौनम् ।
मुदा चलत्यङ्घ्रिसरोरुहाभ्यां दिशः पलायन्त दशापि सद्यः ॥ ८७

அந்த பாலன் இரண்டு மூன்று எழுத்துக்களை உரைக்கும்பொழுது, த்வைதவாதிகள் மௌனம் அடைந்தனர். பாதகமலங்களால் நடக்கத் துவக்குகையில் அவர்கள் பயமுற்று பத்து திக்குகளிலும் பறந்தனர்.

उदचारयदर्भको गिरः पदचारानतनोदनन्तरम् ।
विकलोऽभवदादिमात्तयोः पिकलोकश्वरमान्मरालकः ॥ ८८

இந்த பாலன் சொற்களை உரைத்தார். பிறகு கால்களால் நடந்தார். அவைகளில் முதலாவதினால் (சொற்சுவையால்) குயில் கூட்டம் குறையுற்றது. இரண்டாவதினால் (நடை அழகினால்) அன்னப்பறவை குறையுற்றது.

नवविद्रुमपल्लवास्तृतामिव काश्मीरपरागपाटलाम् ।
रचयन्नचलां पदत्विषा स चचारेन्दुनिभः शनैः शनैः ॥ ८९

சரத்காலத்து சந்திரன்போல் ஒளியுடைய அவர் மெதுவாக நடக்கும் பொழுது, தன் பாதங்களுடைய காந்தியினால் பூமியை புதிதான பவழத் தளிர்களை பரப்பியதுபோலவும், ரக்தசந்தனத்தூள் பரவியதனால் சிவப்புநிற முள்ளதுபோலவும் செய்தார்.

मूर्धनि हिमकरचिह्नं निटिले नयनाङ्कमंसयोः शूलम् ।
वपुषि स्फटिकसवर्णं प्राज्ञास्तं मेनिरे शंभुम् ॥ ९०

தலையில் சந்திரனுடைய குறியையும், நெற்றியில் கண்ணின் குறியையும், தோள்களில் சூலாயுதத்தின் அடையாளத்தையும், உடலில் படிகத்திற்கு நிகரான நிறத்தையும் கண்ணுற்று புத்திமான்கள் அவரை 'சம்பு=சிவன்' என்று தீர்மானம் செய்தனர்.

राज्यश्रीरिव नयकोविदस्य राज्ञो विद्येव व्यसनदवीयसो बुधस्य ।
शुभ्रांशोश्छविरिव शारदस्य पित्रोः संतोषैः सह ववृधे तदीयमूर्तिः ॥ ९१

சூதாட்டம், வேட்டை, மதுபானம், அதிகமான ஸ்திரீபோகம் ஆகியவைகளிலிருந்து விலகி ராஜ்யத்தை ஆளும் நீதியினால் சிறந்த அரசனுடைய ராஜ்யலக்ஷ்மி போலவும், தீய செயலை விலக்கிய அறிஞனுடைய கல்விபோலவும், சரத்காலத்து சந்திரனுடைய காந்திபோலவும் அவருடைய மேனி தாய் தந்தையருடைய சந்தோஷத்துடன் வளர்ந்தது.

नागेनोरसि चामरेण चरणे बालेन्दुना फालके
पाण्योश्चक्रगदाधनुर्डमरुकैर्मूर्ध्नि त्रिशूलेन च ।
तत्तस्याद्भुतमाकलय्य ललितं लेखाकृते लाञ्छितं
चित्रं गात्रममंस्त तत्र जनता नेत्रैर्निमेषोज्झितैः ॥ ९२

மார்பில் பாம்பின் வடிவமும், காலில் சாமரமும், நெற்றியில் இளஞ்சந்திரனும், கைகளில் சக்ரமும், கதை, வில், டமருகம் (ஒடுக்கு) என்றவைகளும், தலையில் சூலமும் ஆகிய கோடுகள் அமைந்த அவருடைய அழகிய மேனியை, வியப்புற்றவர்களாக இமைகொட்டாத கண்களால் ஜனங்கள் பார்த்தனர்.

सर्गे प्राथमिके प्रयाति विरतिं मार्गे स्थिते दौर्गते
स्वर्गे दुर्गमतामुपेयुषि भृशं दुर्गेऽपवर्गे सति ।
वर्गे देहभृतां निसर्गमलिने जातोपसर्गेऽखिले
सर्गे विश्वसृजस्तदीयवपुषा भर्गोऽवतीर्णो भुवि ॥ ९३

முதல் சிருஷ்டியாகிய (ஸனகாதிகளுடைய) ஞானமார்க்கம் ஒய்வடைந்து துஷ்டமார்க்கம் நிலைக்கையிலும், ஸ்வர்க்கமார்க்கம் கிட்டாமலிருக்கையிலும், மோக்ஷமார்க்கம் அடையாமலிருக்கையிலும், பிரம்மசிருக்ஷ்டியாகிய பிராணிகளின் கூட்டம் தூய்மை நீங்கியதாக நிலவுகையிலும், எல்லா நன்னெறிகளும் பாழடைந்திருக்கையிலும் சிவபெருமான் அந்தப் பால வடிவத்தில் பூமியில் அவதரித்தார்.

इति श्रीमाधवीये तदवतारकथापरः ।
संक्षेपशङ्करजये सर्गः पूर्णो द्वितीयकः ॥ २ ॥

இவ்வாறு ஸ்ரீ மாதவாசாரியர் இயற்றிய ஸ்ரீ சங்கரவிஜயச்சுருக்கத்தில்
அந்த சங்கரருடைய அவதாரத்தைக் கூறுகின்ற
இரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

आदितः श्लोका : 191



# अथ तृतीयः सर्गः

## மூன்ருவது ஸர்க்கம்

### देवावतारः

### *மற்ற தேவர்களின் அவதாரம்*

इति बालमृगाङ्कशेखरे सति बालत्वमुपागते ततः ।
दिविषत्प्रवराः प्रजज्ञिरे भुवि षट्शास्त्रविदां सतां कुले ॥ १

*இவ்வாறு இளஞ்சந்திரக்கலையை அணிந்த பரமசிவன் மண்ணுலகில் பாலத்தன்மையுடன் விளங்குகையில் தேவர்களில் சிறந்தவர்களும், நான்கு வேதங்களும் ஆறு சாஸ்திரங்களும் நன்கு உணர்ந்த சான்றோர்களுடைய குலத்தில் பிறவியுற்றனர்.*

कमलानिलयः कलानिधेर्विमलाख्यादजनिष्ट भूसुरात् ।
भुवि पद्मपदं वदन्ति यं सविपद्येन विवादिनां यशः ॥ २

*திருமகளின் நாயகனுகிய நாராயணன் கலைகளனைத்திற்கும் தங்குமிடமாகிய 'விமலர்' என்ற அந்தணருக்குப் புதல்வனுக பிறவியுற்ருர். அவரை இவ்வுலகத்தவர் 'பத்மபாதர்' என்று கூறுகின்றனர். எதிர்மதத்தினவர்களுடைய கீர்த்தி இவரால் நாசமுற்றது.*

पवमानोऽप्यजनि प्रभाकरात्सवनोन्मीलितकीर्तिमण्डलात् ।
गलहस्तितभेदवाद्यसौ किल हस्तामलकाभिधामधात् ॥ ३

*பிராதஸ்ஸவனம், மாத்யந்தினஸவனம், திருதீயஸவனம் (யாகங்களில் அடங்கியுள்ள கர்மம்) ஆகியவைகளால் உலகமெல்லாம் கீர்த்தியைப் பரவச் செய்த 'பிரபாகரர்' என்ற தர்மிஷ்டருக்கு வாயுபகவான் புத்திரனுகப் பிறந்தார். அவர் பேதவாதம் பேசுகிறவர்களை (கழுத்தில் கையை வைத்து வெளியே தள்ளுவதுபோல்) நிராகரித்தவர். 'ஹஸ்தாமலகர்' என்று பெயர்பெற்ருர்.*

पवमानदशांशतोऽजनि प्लवमानाऽञ्चति यद्यशोम्बुधौ ।
धरणी मथिता विवादिवाक्तरणी येन स तोटकाह्वयः ॥ ४

*வாயுவினுடைய பத்திலோரம்சமாகப் பிறந்தவர் 'தோடகர்' என்று பெயரடைந்தார். அவருடைய கீர்த்தியாகிய சமுத்திரத்தில் பூமி மிதக்கிறது. அவரால் பரமதஸ்தர்களுடைய பிரசங்கங்கள் மூழ்கடிக்கப்பட்டன.*

उदभावि शिलादसूनुना मदवद्वादिकदम्बनिग्रहैः ।
समुदञ्चितकीर्तिशालिनं यमुदङ्कं ब्रुवते महीतले ॥ ५

நந்திகேசுவரரும் இவ்வுலகில் தோன்றி, கர்வத்துடன் வாதம் செய்கின்றவர்களை வாதத்தில் வென்று கீர்த்தியைப் பரவச்செய்தார். இவ்வுலகில் அவரை 'உதங்கர்' என்று கூறுவார்கள்.

विधिरास सुरेश्वरो गिरां निधिरानन्दगिरिर्व्यजायत ।
अरुणः समभूत्सनन्दनो वरुणोऽजायत चित्सुखाह्वयः ॥ ६

பிரம்மதேவர் ஸுரேசுவரராகத் தோன்றினார். பிரகஸ்பதி ஆனந்தகிரியாகவும், அருணர் (சூரியனுடைய சாரதி) ஸனந்தனராகவும், வருணன் சித்சுகர் என்பவராகவும் மண்ணுலகில் தோன்றினார்கள். (ஸனந்தனர் திருமாலினுடைய அவதாரம் என்று சிலர் கூறுவர்.)

अपरेऽप्यभवन्दिवौकसः स्वपरेर्ष्यापरविद्विषः प्रभोः।
चरणं परिसेवितुं जगच्छरणं भूसुरपुङ्गवात्मजाः ॥ ७

இன்னும் மற்ற தேவர்களும், தன்னைச் சேர்ந்தவர்களிடமும், பிறரிடமும் பொறாமை கொண்டவர்களை நிராகரிக்கின்றவரும் (நல்ல உபதேசங்களால் பிறருடைய தீய குணங்களை நாசம் செய்கின்றவரும்) எல்லாம் செய்ய வல்லமையுள்ளவரும் ஆகிய அந்த சங்கரனுடைய சரணத்தை சேவைசெய்வதற்கு மண்ணுலகில் தோன்றினர். ஏனெனில் அந்த சங்கரருடைய சரணம் உலகங்களுக்கெல்லாம் அடைக்கலமானது.

चार्वाकदर्शनविधानसरोषधातृशापेन गीष्पतिरभूद्भुवि मण्डनाख्यः ।
नन्दीश्वरः करुणयेश्वरचोदितः सन्नानन्दगिर्यभिधया व्यजनीति केचित् ॥ ८

அசுரர்களை ஏமாற்றுவதற்காக பிரகஸ்பதி, 'சார்வாக' மதம் என்ற நாஸ்திகமதத்தை இயற்றியதனால் பிரம்மதேவர் சினம்கொண்டவராக அவரை சபித்தார். அந்த பிரகஸ்பதி இவ்வுலகில் 'மண்டன' ராகத் தோன்றினார். பரமேசுவரன் கருணைகூர்ந்து கட்டளையிட்டதனால் நந்திகேசுவரர் 'ஆனந்தகிரி' யாக அவதரித்தார் என்றும் சிலர் கூறுகிறார்கள்.

(மண்டனர், பிரம்மதேவருடைய அவதாரம் என்ற அபிப்ராயத்துடன் மேல்கதையைக் கூறுகிறார்.)

अथावतीर्णस्य विधेः पुरन्ध्री साऽभूद्यदाख्योभयभारतीति ।
सरस्वती सा खलु वस्तुवृत्या लोकोऽपि तां वक्ति सरस्वतीति ॥ ९

பிறகு மண்ணுலகில் அவதரித்த பிரம்மதேவருடைய மனைவியான ஸரஸ்வதி அவதரித்தாள். ஸரஸ்வதியே உண்மையாக உதித்ததனாலும், ஜனங்கள் ஸரஸ்வதி என்ற பெயர் அளித்ததனாலும் அவளுக்கு 'உபயபாரதி' (இருவிதத்திலும் ஸரஸ்வதி) என்ற பிரஸித்தி உண்டாயிற்று.

(ஸரஸ்வதிதேவியின் அவதாரத்திற்கு காரணம் கூறுகிறார்.)

पुरा किलाध्यैषत धातुरन्तिके सर्वज्ञकल्पा मुनयो निजं निजम् ।
वेदं तदा दुर्वसनोऽतिकोपनो वेदानधीयन्क्वचिदस्खलत्स्वरे ॥ १०

முன்ஞெரு காலத்தில் ஸர்வக்ஞனை பகவானுக்குச் சமமான முனிவர்கள் பிரம்மதேவருடைய அருகில் தம் தம் வேதத்தை ஓதினர். இவ்வாறு வேதங்களை ஓதுகையில் மிகவும் கோபஸ்வபாவமுள்ள துர்வாசமுனிவர் ஸ்வரத்தைப் பிழையாக உச்சாரணம் செய்தார்.

तदा जहासेन्दुमुखी सरस्वती यदङ्गमर्णोद्भवशब्दसन्ततिः ।
चुकोप तस्यै दहनानुकारिणा निरैक्षताक्ष्णा मुनिरुग्रशासनः ॥ ११

சந்திரன்போல் ஆனந்தத்தை அளிக்கின்ற முகமுடைய ஸரஸ்வதீ தேவி அப்பொழுது நகைத்தாள். வர்ணங்கள் தொட்டு எல்லா சமயசாஸ்திரங்களாகிய சப்தசமூகங்கள் (சொற்தொகுதிகள்) எந்த தேவியினுடைய உடல் என்று நூற்களின் கொள்கையோ, அந்த வாக்தேவதை நகைத்தாள். (ஏன்? வேதங்களை பிழையில்லாமல் ஓதுவது கடினமான காரியம். அறிஞருக்குக்கூட அது அரிதானது. செருக்கு சிறிது உதித்தால் கூறவேண்டியதில்லை. முறைப்படி வேதங்களைக்கற்ற மாமுனிவர், வாக்தேவதையின் சன்னிதானத்திலேயே பொருள் மாறுபடக்கூடிய ரீதியில் மறையை மாறுபடுத்தி ஓதினுல் சினம் கொள்ளவேண்டிய தேவி, தன்னுடைய இயற்கைக்கு முரணுக சினம் கொள்ளாமல் புன்னகை பூத்தாள். முனிவரது திறமை என்ன? வேதங்களின் அறிதற்கரிய மகிமை என்ன? என்ன ஆச்சரியம்! என்று வியந்தாள். அந்த சந்தர்ப்பத்தில், சினம் அல்லது சிரிப்பு ஏற்படாமலிருக்காதல்லவா? சினம் தகாது என்று சிரித்தாள் ஸரஸ்வதி.) ஆனுல் முனிவர் நெருப்புக்குச்சமமாக ஒளிவீசிய கண்களால் அந்த தேவியைப் பார்த்தார். கடுஞ்சொற்களுள்ள அவர் சாபமளித்தார்.

शशाप तां दुर्विनयेऽवनीतले जायस्व मर्त्येष्वबिभेत्सरस्वती ।
प्रसादयामास निसर्गकोपनं तत्पादमूले पतिता विषादिनी ॥ १२

செருக்கு கொண்டவளே! மண்ணுலகில் மனிதர்களிடையே பிறவியை அடைவாயாக என்று சாபமிட்டார். அது கேட்டு ஸரஸ்வதீதேவி அச்சமடைந்தாள். (தன்னுடைய குற்றத்திஞல் வருந்தியவளாக) அதனை மன்னித்துக்கொள்வதற்கு இயற்கையாகவே சினமுள்ளவராயினும் அவருடைய பாதங்களில் வணங்கிஞள்.

दृष्ट्वा विषण्णां मुनयः सरस्वतीं प्रसादयांचक्रुरिमं तमादरात् ।
कृतापराधा भगवन्क्षमस्व तां पितेव पुत्रं विहितागसं मुने ॥ १३

ஸரஸ்வதீதேவி பச்சாத்தாபமுற்றதைக்கண்டு முனிவர்களும் அந்த துர்வாசமுனிவரிடம் வேண்டினர். 'பகவானே, தப்பிதம் செய்த புத்திரனை தந்தை மன்னிப்பதுபோல் ஸரஸ்வதீதேவியை மன்னிப்பீராக' என்று பிரார்த்தித்தனர்.

प्रसादितोऽभूदथ सम्प्रसन्नो वाण्या मुनीन्द्रैरपि शापमोक्षम् ।
ददौ यदा मानुषशङ्करस्य संदर्शनं स्याद्भवितास्यमर्त्या ॥ १४

ஸரஸ்வதியினுலும், சிறந்த முனிவர்களாலும் பிரார்த்திக்கப்பட்ட துர்வாசமுனிவர், பிறகு சினம் தணிந்து மனம் குளிர்ந்து கூறிஞர். ''மண்ணுலகில்

மானிடசங்கரனை (மனிதனாக அவதரித்த சங்கரனை) சந்திக்கும் பொழுது இந்த சாபத்திற்கு முடிவுண்டாகும்'' என்றார்.

सा शोणतीरेऽजनि विप्रकन्या सर्वार्थवित्सर्वगुणोपपन्ना ।
यस्या बभूवुः सहजाश्च विद्याः शिरोगतं के परिहर्तुमीशाः ॥ १५

அந்த ஸரஸ்வதி, சோணநதியின் கரையில் ஒரு கிராமத்தில் (விஷ்ணுமித்திரன்) என்ற அந்தணருக்குக் கன்னிகையாகத் தோன்றினாள். எல்லாவற்றையும் அறிந்தவள். நற்குணங்கள் நிரம்பியவள். நான்கு வேதங்கள், ஆறு சாஸ்திரங்கள், மற்றும் கலைகள் யாவும் (64 கலைகளும்) அந்த கன்னிக்கு இயற்கையாகத் தோன்றின. விதியை வெல்ல யார் வல்லவர்? (நல்ல அதிருஷ்டத்தினால் செயலின்றியே கலைகள் தோன்றும்படி மற்ற மனிதர்களுக்கு அருள் செய்யும் ஆற்றலுள்ள ஸரஸ்வதிக்கு கலைகள் இயல்பாகவே விளங்குவதில் வியப்பென்ன?)

सर्वाणि शास्त्राणि षडङ्गवेदान्काव्यादिकान्वेत्ति परं च सर्वम् ।
तन्नास्ति नो वेत्ति यदत्र बाला तस्मादभूच्चित्रपदं जनानाम् ॥ १६

எல்லா சாஸ்திரங்களையும், ஆறு வேதாங்கங்களையும், நான்கு வேதங்களையும், இன்னும் சிறந்த உபனிடதங்களின் உண்மையையும் அறிந்த அந்த கன்னியின் அறிவிற்குப் பொருளாகாத பதார்த்தம் பாரிலில்லை. ஆகையால் ஜனங்கள் அவளைக் கண்டு வியந்தனர்.

सा विश्वरूपं गुणिनं गुणज्ञा मनोऽभिरामं द्विजपुङ्गवेभ्यः ।
शुश्राव तां चापि स विश्वरूपस्तस्मात्तयोर्दर्शनलालसाऽभूत् ॥ १७

குணங்களில் சிறந்த அந்த கன்னிகை சிறந்த அந்தணர்கள் மூலமாக, நற்குணங்கள் நிரம்பியவரும் அழகு வாய்ந்தவருமாகிய விசுவரூபனை (மண்டனரை) கேள்வியுற்றாள். அவரும் அவளைக் கேட்டறிந்துகொண்டார். ஆகையால் இருவருக்கும் சந்திப்பில் விருப்புண்டாயிற்று.

अन्योन्यसंदर्शनलालसौ तौ चिन्ताप्रकर्षादधिगम्य निद्राम् ।
अवाप्य संदर्शनभाषणानि पुनः प्रबुद्धौ विरहाग्नितप्तौ ॥ १८

ஒருவருக்கொருவர் பார்த்துக்கொள்வதற்கு மிகவும் ஆசைகொண்ட அவ்விருவரும் எல்லை கடந்த விருப்பத்தினால் சிந்தையின் பிரவாகத்தில் மூழ்கிக் கனவில் சந்திப்பு, சம்பாஷணை முதலியனவைவையைப் பெற்று விழிப்புணர்ச்சியில் வீணானது பற்றி பிரிவாற்றாமையினால் துன்பமடைந்தார்கள்.

दिदृक्षमाणावपि नेक्षमाणावन्योन्यवार्ताहृतमानसौ तौ ।
यथोचिताहारविहारहीनौ तनौ तनुत्वं स्मरणादुपेतौ ॥ १९

சந்தித்துக்கொள்வதற்கு ஆசையிருந்தும் சந்திப்புறுதவர்களும் ஒருவருக்கொருவர் சமாசாரங்களை கேள்வியுற்றதினால் பற்றுதல் கொண்டவர்களுமான அவர்கள் ஆகாரம், வியவகாரம் இல்லாமையாலும் அந்த சிந்தையே தொடர்ச்சியாக நிகழ்ந்ததாலும் உடல் மெலிந்தவர்கள் ஆயினர்.

दृष्ट्वा तदीयौ पितरौ कदाचिदपृच्छतां तौ परिकर्शिताङ्गौ ।
वपुः कृशं ते मनसोऽप्यगर्वो न व्याधिमीक्षे न च हेतुमन्यम् ॥ २०

உடல் மெலிந்த அவர்களைப் பார்த்து தாய்தந்தையர்கள் ஒருநாள் வினவினர். (விசுவரூபனிடம் தந்தை வினவுகிறுர்). உன்னுடைய உடல் மெலிந்ததாக இருக்கிறது. காரணம் யாது? கல்வியின் கர்வத்தினுல் யாரிடமிருந்தாவது அவமதிப்பு ஏற்பட்டதோ என்று சந்தேகிக்க இடமில்லை; வியாதியுமில்லை; வேறு காரணத்தையும் நான் காணவில்லை; (இந்த ரீதியிலேயே பெண்ணின் தந்தையும் அவளிடம் வினவியதாகவும் பொருள் கொள்ள வேண்டும்.)

इष्टस्य हानेरनभीष्टयोगाद्भवन्ति दुःखानि शरीरभाजाम् ।
वीक्षे न तौ द्वावपि वीक्षमाणो विना निदानं नहि कार्यजन्म ॥ २१

விரும்பத்தக்கது இழந்தாலும், வெறுக்கத்தக்கது கிடைத்தாலும் பிராணிகளுக்கு துக்கமுண்டாகும். கவனிக்கும்போது அவ்விரண்டையும் நான் காணேன். காரணமின்றி காரியம் நிலவாது அல்லவா?

न तेऽत्यगादुद्वहनस्य कालः परावमानो न च निःस्वता वा ।
कुटुम्बभारो मयि दुःसहोऽयं कुमारवृत्तेस्तव काऽत्र पीडा ॥ २२

விவாகத்திற்கு உரிய வயதும் மீறவில்லை. பிறரிடமிருந்து அவமதிப்பும் நிகழவில்லை. வறுமையும் கிடையாது. தாங்கமுடியாத குடும்பத்தினுடைய பாரம் என்னிடமிருக்கிறது. குழந்தைப்பருவத்தில் இருக்கிற உனக்குத் துன்பம் யாது?

न मूढभावः परितापहेतुः पराजितिर्वा तव तन्निदानम् ।
विद्वत्सु विस्पष्टतयाऽग्रपाठात्सुदुर्गमार्थादपि तर्कविद्भिः ॥ २३

துக்கத்திற்குக் காரணமான மூடத்தன்மை (அறிவின்மை) இல்லை. அல்லது பிறரிடமிருந்து தோல்வியுமில்லை. தர்க்கநூலில் வல்லமையுள்ளவர்களாலும் அறியமுடியாத விஷயத்தைப்பற்றி அறிஞர்களுடைய முன்னிலையில் நன்கு நீ விளக்குவதனுல் மேற்கூறியவை இல்லையென்று கூறவேண்டுமோ?

आ जन्मनो विहितकर्मनिषेवणं ते स्वप्नेऽपि नास्ति विहितेतरकर्मसेवा ।
तस्मान्न भेयमपि नारकयातनाभ्यः किं ते मुखं प्रतिदिनं गतशोभमास्ते ॥ २४

பிறந்ததுமுதல் முறையான கடமைகளைச் செய்துள்ளாயேயன்றி கனவில்கூட அறத்திற்கு மாறுனதைச் செய்ததில்லை. ஆகையால் நரகலோகத்து தண்டனைகளுக்கு அஞ்சவேண்டியதில்லை. இப்படி இருந்தும் உனது முகம் தினந்தோறும் அழகு குன்றியதாகவே இருக்கிறது. (காரணம் யாது? என்று இருவரிடமும் தாய் தந்தையர்கள் வினவினர்.)

निर्बन्धतो बहुदिनं प्रतिपाद्यमानौ वक्तुं कृपाभरयुताविदमूचतुः स्म ।
निर्बन्धतस्तव वदामि मनोगतं मे वाच्यं न वाच्यमिति यद्वितनोति लज्जाम् ॥ २५

இவ்வாறு அநேகநாட்கள் இடைவிடாமல் வற்புறுத்திக்கேட்டபொழுது மிக வெட்கத்துடன் கூடிய அவர்கள் கூறினுர்கள்: (விசுவரூபன் கூறுகிறுர்)

மனதிலுள்ள விருப்பத்தைச் சொல்லாமலிருப்பதற்குக் காரணம், வெட்கம், அதுதான் தடை செய்கிறது. ஆயினும் தங்களுடைய வற்புறுத்தலினால் கூறுகிறேன்.

शोणाख्यपुंनदतटे वसतो द्विजस्य कन्या श्रुतिं गतवती द्विजपुङ्गवेभ्यः ।
सर्वज्ञतापदमनुत्तमरूपवेषां तामुद्विवक्षति मनो भगवन्मदीयम् ॥ २६

சோணநதியின் கரையில் வாசம் செய்கின்ற அந்தணருடைய புதல்வியை தீர்த்தயாத்திரைக்காக வந்த சிறந்த அந்தணர்கள் மூலமாக 'ஸர்வக்ஞை' என்று கேள்வியுற்றேன். பகவானே! நிகரற்ற அழகும் குணச்செல்வமும் வாய்ந்த அவளை என் மனம் மணந்துகொள்ள விரும்புகிறது.

पुत्रेण सोऽतिविनयं गदितोऽन्वशाद् द्वौ विप्रौ वधूवरणकर्मणि सम्प्रवीणौ ।
तावापतुर्द्विजगृहं द्विजसंदिदृक्षू देशानतीत्य बहुलान्निजकार्यसिद्ध्यै ॥ २७

இவ்வாறு புதல்வனால் மிகப் பணிவுடன் கூறப்பட்டபொழுது அந்த ஹிமமித்திரர் (தகப்பனாரின் பெயர்) மணமகளை வரிப்பதற்கு வல்லமை வாய்ந்த இருவர்களை அனுப்பினார். தம் காரியத்தை நிறைவேற்றுவதற்கு அவர்களும் அநேக தேசங்களைத் தாண்டி விஷ்ணுமித்திரரை (ஸரஸ்வதியின் தந்தையை) காண விரும்பினவர்களாக அந்த கிருஹத்திற்கு வந்தார்கள். (ஸரஸ்வதி தன்னுடைய ஆசையைக் கூறுகிறார்.)

भूभृन्निकेतनगतः श्रुतविश्वशास्त्रः श्रीविश्वरूप इति यः प्रथितः पृथिव्याम् ।
तत्पादपद्मरजसे स्पृहयामि नित्यं साहाय्यमत्र यदि तात भवान्विदध्यात् ॥ २८

எல்லா சாஸ்திரங்களையும் கற்றவரும் ராஜகிருஹத்தில் ஆஸ்தான பண்டிதருமான 'ஸ்ரீ விசுவரூபன்' என்று பிரசித்தமான ஒரு மகான் இருக்கிறார். அவருடைய பாததூளிகளைப் பெற விரும்புகிறேன். தந்தையே! இந்த விஷயத்தில் தாங்கள் உதவி புரிந்தால் என்னுடைய விருப்பம் பயன் பெறும்.

पुत्र्या वचः पिबति कर्णपुटेन ताते श्रीविश्वरूपगुरुणा गुरुणा द्विजानाम् ।
आजग्मतुः सुवसनौ विशदाभयष्टी संप्रेषितौ सुतवरोद्वहनक्रियायै ॥ २९

புதல்வி கூறும் வசனத்தை தந்தை கேட்டுக்கொண்டிருக்கையில் பிராம்மணர்களுக்கு ஆசிரியரான ஹிமமித்திரனால் தன் புதல்வனுடைய கல்யாணத்திற்காக அனுப்பப்பட்டவர்கள் வந்தனர். அவர்கள் நல்ல ஆடைகள் அணிந்தவர்களாகவும், வழியில் பிரயாணம் செய்கையில் உதவிக்காக தண்டத்தை தரித்தவர்களாகவும் இருந்தனர்.

(இந்த சுலோகத்தில் புதல்வி கூறும் வசனத்தைத் தந்தை கேட்டார் என்று உள்ளது. புதல்வி கூறும் வசனத்தைக் கேட்டார் என்று சொன்னாலே தந்தை என்ற பொருள் நிச்சயமாக விளங்குகையில் அந்த 'பதம்' அவசியமில்லை. ஆயினும் ஆசிரியர் கூறியதின் பொருள் வருமாறு:- தக்ஷர் மருமகனாகிய பரமசிவனிடம் வெறுப்பினால் 'ஸதி' என்ற தன் மகளிடம் தகப்பனாருடைய கடமையைக் காண்பிக்கவில்லை. தனது கணவனாகிய சிவபெருமானை தூஷணம்

செய்தபோதிலும், 'தந்தையே! தங்களுக்கு இது தகாது' என்று தன்னுடைய சம்பந்தத்தை உணர்ந்தும் உணர்த்தியும் கூறினுள். தக்ஷனேவெனில் ருத்திரருடைய சம்பந்தம் அவளுக்கு ஏற்பட்டதினுல் அவள் விஷயத்தில் தந்தை என்ற நிலேமையையே வெறுத்தாரன்ருே? பிரகிருதத்தில் விஷ்ணுமித்திரர் புதல்வியிடம் தன்னுடைய அன்பின் மிகுதியை காண்பித்தார் என்பது கருத்து.)

तावार्च्य स द्विजवरौ विहितोपचारैरायानकारणमथो शनकैरपृच्छत् ।
श्रीविश्वरूपगुरुवाक्यत आगतौ स्व इत्यूचतुर्वरणकर्मणि कन्यकायाः ॥ ३०

விஷ்ணுமித்திரர் அந்தணர்களே முறைப்படி நன்கு உபசரித்து (போஜனம் செய்வித்த பின்) வந்த காரணத்தை மெதுவாக வினவினுர்.

('शनकैः' என்ற சொல் தன்னுடைய இல்லத்திற்கு வந்த விருந்தினருக்கு முறைப்படி உபசாரங்கள் யாவும் வழங்கின பிறகு வந்த காரியத்தை தெரிந்துகொள்ள பணிவுடன் வினவுதல் என்றும், தாழ்ந்த குரலில் கிரமமாக என்றும் இருவிதமான பொருள்களேக் கூறுகிறது.) அவர்கள் கூறினர். இம்மையிலும், மறுமையிலும் எல்லா சுகங்களேயும் அனுபவிக்கத்தக்கதான செல்வமுள்ள விசுவரூபனுடைய தந்தையினுல் அனுப்பப்பட்டு வந்துள்ளோம் என்று மணமகளே வரிப்பதில் வல்லமையுள்ள அவர்கள் கூறினர். (இம்மையில் கீர்த்தியும் சுகமும், மறுமையில் இன்பமும் அறம் செய்வதினுல் உண்டாகிறது. அதற்கு செல்வம் இன்றியமையாதது. மறைகளின் மகிமையையும் பொருளேயும் உணராதவன் சரிவர தர்மங்களே செய்ய இயலாது. ஆகவே பொருள் செல்வமும், கல்விச்செல்வமும் மிக அவசியமானவை. 'ऋचः सामानि यजूंषि सा हि श्रीरमृता सताम्' என்று சுருதி. மூன்று வேதங்களும் ஸாதுக்களுடைய அழியாச்செல்வம் என்று அதன் விளக்கம். இவ்விரு செல்வங்களும் நிரம்பியவர் என்பதை 'ஸ்ரீ' என்ற சொல் விளக்குகிறது.)

संप्रेषितौ श्रुतवयःकुलवृत्तधर्मैः साधारणीं श्रुतवता स्वसुतस्य तेन ।
याचावहे तव सुतां द्विज तस्य हेतोरन्योन्यसंघटनमेतु मणिद्वयं तत् ॥ ३१

கல்வி, வயது, குலம், ஆசாரம், தர்மம் இவைகளால் தன்னுடைய புதல்வனுக்குத் தகுந்தவள் என்று கருதி, ஸ்ரீ விசுவரூபருடைய தந்தையினுல் அனுப்பப்பட்டவர்களாக நாங்கள் தங்கள் புத்திரியை அவருடைய புத்திரனுக்கு அளிக்கும்படி யாசிக்கின்ருேம். ஹே, அந்தணரே இந்த இரண்டு இரத்தினங்களும் (ஜகதீசுவரனுடைய கருணேயினுல்) சம்பந்தத்தை அடைய வேண்டும்.

मह्यं तदुक्तमभिरोचत एव विप्रौ पृष्ट्वा वधूं मम पुनः करवाणि नित्यम् ।
कन्याप्रदानमिदमायतते वधूषु नो चेदमूर्व्यसनसक्तिषु पीडयेयुः ॥ ३२

அந்தணர்களே! அவர் கூறுகின்ற வசனம் எனக்கு சம்மதம்தான். ஆயினும் மனேயாளிடம் கூறி (அவளுடைய விருப்பப்படி) செய்கிறேன். ஏனெனில், கன்னியை தானம் செய்தல், பெண்மணிகளுடைய விருப்பத்தை பின்பற்றியது. அப்படிச் செய்யாவிடில் துன்பங்கள் நேருகையில் கடுஞ்சொற்களால் அந்த பெண்கள் புண்படுத்துவார்கள்.

भार्यामपृच्छदथ किं करवाव भद्रे विप्रौ वरीतुमनसौ खलु राजगेहात् ।
एतां सुतां सुतनिभा तव याऽस्ति कन्या ब्रूहि त्वमेकमनुमाय पुनर्न वाच्यम् ॥ ३३

பிறகு அவர் மனைவியை வினவினார். ''மங்களையானவளே! புத்திரன் போல் விளங்குகின்ற உன்னுடைய புத்திரியை வரித்துக்கொண்டு காஷ்மீர தேசத்தரசனுடைய சபையிலிருந்து (ஆஸ்தானபண்டிதரிடமிருந்து) இருவர்கள் வந்துள்ளனர். கொடுப்பதா, கூடாதா என்று நிச்சயம் செய்துகொண்டு உறுதியாகக் கூறவேண்டும். இரண்டு பேச்சு கூடாது'' என்றார்.

भद्रे என்று மனைவியை விளிக்கிறார். உன்னுடைய பாக்யம். இல்லறங்களுக்கு உரியவள் இல்லாளன்றோ! எதிர்பார்க்காமலேயே கிட்டிய பாக்யம் உன்னுடையது. सकृत् कन्या प्रदीयते என்று நூல்களின் கொள்கை. கன்னிகாதானம் ஒரு தடவைதான். வாக்குறுதி மறுக்கத்தக்கதல்ல. வந்த மங்களத்தையும் விலக்கக்கூடாது. ஸ்ரீமத் பாகவதவசனம் उद्यतस्य हि कामस्य प्रतिवादो न शस्यते என்றுள்ளது. வலுவே வந்த விருப்பத்தை மறுத்தல் சிலாக்கியமன்று.

விஷ்ணுமித்திரருடைய மனைவி கூறுகிறாள்:-

दूरे स्थितिः श्रुतवयः कुलवृत्तजातं न ज्ञायते तदपि किं प्रवदामि तुभ्यम् ।
वित्तान्विताय कुलवृत्तसमन्विताय देया सुतेति विदितं श्रुतिलोकयोश्च ॥ ३४

தூரதேசத்தில் வாசம், கல்வி, வயது, குலம், ஆசாரம் இவைபற்றி தெரியாது; தங்களுக்கு நான் கூறுவது யாது? செல்வம், நல்ல குலம், சிறந்த ஆசாரம் இவைகள் பொருந்தியவனுக்கு கன்னிகையைக் கொடுக்கவேண்டும் என்பது நூல்களின் கொள்கை. அவ்வாறே உலகமும் ஒப்புக்கொள்கிறது.

नैवं नियन्तुमनघे तव शक्यमेतत्तां रुक्मिणीं यदुकुलाय कुशस्थलीशे ।
प्रादात्स भीष्मकनृपः खलु कुण्डिनेशस्तीर्थापदेशमटते त्वपरीक्षिताय ॥ ३५

விஷ்ணுமித்திரர் கூறுகிறார் :- மாசற்றவளே! இவ்வாறு நியாயம் கூறுவது சரியன்று. குண்டினதேசத்து அரசனாகிய பீஷ்மர், துவாரகைக்கு நாயகனாகிய ஸ்ரீகிருஷ்ணன் தீர்த்தயாத்திரை செய்யும் காலத்தில் குலம் முதலியவற்றை யோசனை செய்யாமலேயே தனது மகளாகிய ருக்மிணியை அவருக்குக் கொடுக்கவில்லையா? ஆகையால் உலகில் பிரசித்திபெற்றவர்களுடைய குலம் முதலியவற்றை கவனிக்கவேண்டியதில்லை.

किं केन सङ्गतमिदं सति मा विचारीर्यो वैदिकीं सरणिमप्रहतां प्रयत्नात् ।
प्रातिष्ठिपत्सुगतदुर्जयनिर्जयेन शिष्यं यमेनमशिषत्स च भट्टपादः ॥ ३६

எது, எதற்கு சம்பந்தப்பட்டது? ருக்மிணியை ஸ்ரீ கிருஷ்ணன் மணந்து கொண்டது இங்கு பொருந்துமா? அவர் பரமாத்மா, உலகப்பிரசித்தர் என்று யோசனை செய்யாதே. ஸதியே=பதிவிருதையே; இந்த விசுவரூபனும் உலகத்தில் கீர்த்திவாய்ந்தவர்தான். வேதமார்க்கத்திற்குப் பகைவர்களாகிய பௌத்தர்களை வென்று அரிய கீர்த்தியை அடைந்த குமரிலபட்டர் அந்த வேதமார்க்கத்திற்கு விசேஷ பாதுகாப்பை அளித்தார். அத்தகையர் இந்த விசுவரூபனை தன்னுடைய

முக்கிய சீடனுகப் பெற்றுக்கொண்டார். அவருக்கு அந்த வேதங்களையும், அவைகளின் அங்கங்களையும் உபதேசமும் செய்தார்.

(பதிவிருதையாகிய நீ பதியின் பணிவிடையிலேயே ஆழ்ந்தவளாகையால் உலகவியவகாரங்கள் அறியாதவள். மகளிடம் அன்பினுல் சந்தேகப்படுகிருய். அந்த சந்தேகத்தை அகற்றிக்கொள்வாயாக.)

किं वर्ण्यते सुदति यो भविता वरो नो विद्याधनं द्विजवरस्य न बाह्यवित्तम् ।
याऽन्वेति सन्ततमनन्तदिगन्तभाजं यां राजचोरवनिता न च हर्तुमीशाः ॥ ३७

புன்னகை கொண்டவளே! நமக்கு வரனுக வரப்போகிறவரைப்பற்றி வர்ணிக்கமுடியுமா? கல்விச்செல்வமன்றோ நிலையுள்ள செல்வம். பொருள் செல்வமன்று. அந்த கல்விச்செல்வம் அவன் செல்லும் எல்லா திசைகளிலும் கூடவே செல்லுகிறதன்றோ! அரசர்கள், திருடர்கள், பெண்கள் இவர்களெல்லாம் அச்செல்வத்தைப் பறிக்க முடியாதல்லவா?

(சுததி என்ற விளிவேற்றுமையால் புன்னகையும், அதற்குக் காரணம் முன் சுலோகத்தில் அவருடைய கல்வித்திறமையுணர்ந்ததால் உண்டான மனமகிழ்ச்சி என்றும் அறிந்துகொள்க.)

वध्वर्जनावनपरिव्ययगानि तानि वित्तानि चित्तमनिशं परिखेदयन्ति ।
चोरान्नृपात्स्वजनतश्च भयं धनानां शर्मेति जातु न गुणः खलु बालिशस्य ॥ ३८

பெண்மணியே! சம்பாதித்தல், காப்பாற்றல், செலவுசெய்தல் ஆகிய எல்லா விஷயங்களிலும் செல்வம் மனதிற்கு துன்பத்தையே வளர்க்கிறது. செல்வங்களுக்குத் திருடனிடமிருந்தும், அரசனிடமிருந்தும், உறவினரிடமிருந்தும் ஆபத்து உண்டு. கல்வியற்ற மூடனுக்கு சுகம் என்பது ஒருபொழுதுமில்லை.

केचिद्धनं निदधते भुवि नोपभोगं कुर्वन्ति लोभवशगा न विदन्ति केचित् ।
अन्येन गोपितमथान्यजना हरन्ति तच्चेन्नदीपरिसरे जलमेव हर्तृ ॥ ३९

கஞ்சத் தன்மையால் சிலர் செல்வத்தை பூமியில் புதைத்து வைக்கிருர்கள். உபயோகம் செய்தால் குன்றிவிடும் என்ற அச்சம். வேறு சிலர் எதிர்காலத்திற்கு உதவியாக இருக்கும் என்று அப்படி செய்கிருர்கள். ஆனல் தேவையுள்ள காலத்தில் கைக்கு கிடைப்பதில்லை. ஒருவன் மறைத்து வைத்த பொருளை மற்ருெருவன் அபகரிக்கிருன். நதிக்கரையில் புதைத்து வைத்தால் வெள்ளம் கொண்டுபோகிறது.

सर्वात्मना दुहितरो न गृहे विधेयास्ताश्चेत्पुरा परिणयाद्रज उद्गतं स्यात् ।
पश्येयुरात्मपितरौ बत पातयन्ति दुःखेषु घोरनरकेष्विति धर्मशास्त्रम् ॥ ४०

மேலும், புதல்விகளை தமது மனைகளில் தங்கச்செய்யக்கூடாது. சீக்கிரமாக விவாகம் செய்து கணவனில்லத்திற்கு அனுப்பவேண்டும். மணம் நடப்பதற்கு முன் தங்களை ரஜஸ்வலைகளாகக் கண்டால் அந்தப் பெண்கள் தாய்தந்தையர்களை பயங்கரமான நரகத்தில் தள்ளுகிருர்கள்; என்று தர்ம சாஸ்திரம் கூறுகிறது.

मा भूदयं मम सुता कलहः कुमारीं पृच्छाव सा वदति यं भविता वरोऽस्याः ।
एवं विधाय समयं पितरौ कुमार्या अभ्याशमीयतुरितो गदितेष्टकार्यौ ॥ ४१

உனக்கும் எனக்கும் இந்த விஷயத்தில் வாதம் வேண்டாம். மகளிடம் வினவுவோம். அவள் யாரைக் கூறுகிருளோ, அவர் வரனுக வருவார் என்று இருவரும் பிரதிக்ஞை செய்து, புதல்வியின் அருகில் சென்று விஷயத்தைக் கூறினுர்கள்.

श्रीविश्वरूपगुरुणा प्रहितौ द्विजाती कन्यार्थिनौ सुतनु किं करवाव वाच्यम् ।
तस्याः प्रमोदनिचयो न ममौ शरीरे रोमाञ्चपूरमिषतो बहिरुज्जगाम ॥ ४२

''ஸ்ரீ விசுவரூபருடைய தந்தையினுல் அனுப்பப்பட்ட அந்தணர்கள் இருவர், கன்னிகையை யாசிக்கின்றவர்களாக வந்துள்ளனர். அழகியவளே! நாங்கள் செய்யவேண்டிய காரியம் யாதோ, அது உன்னுல் கூறத்தக்கது.'' இவ்வாறு பெற்றோர்களுடைய பேச்சைக் கேட்ட அவளுடைய ஆனந்தம் உடலில் அடங்காமல் ரோமாஞ்சரூபமாக (மயிர் சிலிர்த்தல்) வெளியே பொங்கியது.

तेनैव सा प्रतिवचः प्रददौ पितृभ्यां तेनैव तावपि तयोर्युगलाय सत्यम् ।
आदाय विप्रमपरं पितृगेहतोऽस्यास्तौ जग्मतुर्द्विजवरौ स्वनिकेतनाय ॥ ४३

அந்த மயிர் சிலிர்த்தலினுலேயே ஸரஸ்வதி, தாய்தந்தையர்களுக்கு விடைகூற அவர்களும் அவளுடைய மனவிருப்பை அந்தணர்களிடம் தெரிவித்தனர். கன்னியின் கிருகத்திலிருந்து ஒரு பிராம்மணனை அழைத்துக் கொண்டு, வந்தவர்கள் தம்மிடத்திற்கு திரும்பிச்சென்றனர்.

अस्माच्चतुर्दशदिने भविता दशम्यां जामित्रभादिशुभयोगयुतो मुहूर्तः ।
एवं विलिख्य गणितादिषु कौशलास्या व्याख्यापराय दिशति स्म सरस्वती सा ॥ ४४

(அவர்கள் புறப்படும்பொழுது) கணிதம் முதலியவற்றில் திறமை வாய்ந்த ஸரஸ்வதியாகிய அந்த கன்னிகை, ''இன்றையிலிருந்து பதினுன்காவது தினத்தில் லக்னத்திலிருந்து ஏழாமிடம் சுத்தமாக இருக்கையில் சுபர்களுடைய யோகத்துடன் கூடிய சுபசமயத்தில் சுபமுகூர்த்தம் ஏற்படவேண்டும்'' என்று எழுதி, லக்னபத்திரிகை படிக்கின்ற பிராம்மணருடைய கையில் அளித்தாள்.

तौ हृष्टपुष्टमनसौ विहितेष्टकार्यौ श्रीविश्वरूपगुरुमुत्तममैक्षिषाताम् ।
सिद्धं समीहितमिति प्रथितानुभावो दृष्ट्वैव तन्मुखमसावथ निश्चिकाय ॥ ४५

விரும்பிய விஷயத்தை நிறைவேற்றிய அவர்கள் ஸந்தோஷத்தினுல் சித்தம் பூரித்து, விசுவரூபனுடைய தந்தையைப் பார்த்தனர். பிரசித்தமான மகிமைகொண்ட அவரும் அந்த அந்தணர்களுடைய முகமலர்ச்சியைக் கண்டமாத்திரத்திலேயே தனது விருப்பம் பயனுற்றது என்று உள்ளத்தில் உறுதிகொண்டார்.

अन्यः स्वहस्तगतपत्रमदात्स पत्रं दृष्ट्वा जहास सुखवारिनिधौ ममज्ज ।
विप्रान्यथोचितमपूजयदागतांस्तान्नत्वांऽशुकादिभिरयं बहुवित्तलभ्यैः ॥ ४६

கன்னியின் இல்லத்திலிருந்து வந்த பிராம்மணர் தன் கையிலிருந்த பத்திரிகையைக் கொடுக்கவும் அதனைப் படித்து ஹிமமித்திரர் ஆனந்தக் கடலில் ஆழ்ந்தார். வந்த அந்தணர்களை வணங்கி, உபசரித்து மிக விலையுள்ள வஸ்திரங்களையும், இரத்தினங்களையும் அவர்களுக்கு அளித்தார்.

पित्रानुशिष्टवसुधासुरशंसितेन विज्ञापितः सुखमवाप स विश्वरूपः ।
कार्याण्यथाह पृथगात्मजनान्समेतान्बन्धुप्रियः परिणयोचितसाधनाय ॥ ४७

தான் அனுப்பிய அந்தணர்கள் திரும்பிவந்து கூறிய வசனத்தை தந்தை விசுவரூபனிடம் கூறினர். பந்துக்களிடம் பிரியமுள்ள அவரும், மிக்க உவகைகொண்டவராக விவாகத்திற்குரிய காரியங்களைச் செய்வதற்கு உறவினர்களை ஒவ்வொரு காரியத்திலும் நியமித்தார்.

मौहूर्तिकैर्बहुभिरेत्य मुहूर्तकाले संदर्शिते द्विजवरैर्बहुविद्भिरिष्टैः ।
माङ्गल्यवस्तुसहितोऽखिलभूषणाढ्यः स प्रापदक्षततनुः पृथुशोणतीरम् ॥ ४८

விசேஷ அறிஞர்களான சிறந்த ஜோதிடர்கள், சுபமூகூர்த்தத்தைக் கூறவும், விசுவரூபன் அணிகள் அணிந்து, மங்களபதார்த்தங்களுடன் சோண நதிக்கரைக்கு தாய்தந்தையர்களுடனும், தமர்களுடனும் சென்றார்.

शोणस्य तीरमुपयातमुपाशृणोत्स जामातरं बहुविधं किल विष्णुमित्रः ।
प्रत्युज्जगाम मुमुदे प्रियदर्शनेन प्रावीविशद् गृहममुं बहुवाद्यघोषैः ॥ ४९

விஷ்ணுமித்திரர், மருமகன் பல பந்துக்களுடன் சோணநதியின் கரைக்கு வந்ததைக் கேள்வியுற்றார். அவருடைய பிரியமான காட்சியினால் மகிழ்ந்து, அநேக வாத்தியகோஷங்களுடன் வரவேற்று தனது இல்லத்திற்கு அழைத்துச் சென்றார்.

दत्त्वाऽऽसनं मृदुवचः समुदीर्य तस्मै पाद्यं ददौ समधुपर्कमनर्घपात्रे ।
अर्घ्यं ददावहमियं तनया गृहास्ते गावो हिरण्यमखिलं भवदीयमूचे ॥ ५०

ஆஸனமளித்து, முகமன்கூறி, பாத்யமளித்தார். விலையுயர்ந்த பாத்திரத்தில் அர்க்கியத்தையும் அளித்து, ''நான், என்னுடைய புதல்வி, இந்த இல்லம், பசுக்கள், செல்வங்கள் ஆகிய யாவும் தங்களுடையவை'' என்று கூறினர்.

अस्माकमद्य पवितं कुलमादृताः स्मः संदर्शनं परिणयव्यपदेशतोऽभूत् ।
नोचेद्भवान्बहुविदग्रसरः क्वचाहं भद्रेण भद्रमुपयाति पुमान्विपाकात् ॥ ५१

எமது குலம் இன்று பரிசுத்தமாகச் செய்யப்பெற்றது. யாம் ஆதரவு செய்யப்பட்டோம். மணம் என்ற காரணத்தை முன்னிட்டுத் தங்களுடைய காட்சி, கிட்டியது. இல்லாவிடில், விசேஷ அறிஞர்களின் முன்னணியில் விளங்குகின்ற தாங்கள் எங்கே? யான் எங்கே? மனிதன் புண்யத்தின் வன்மையினால் நன்மையை அடைகிறான்.

यद्यद्गृहेऽत्र भगवन्निह रोचते ते तत्तन्निवेद्यमखिलं भवदीयमेतत् ।
वक्ष्यामि सर्वमभिलाषपदं त्वदीयं युक्तं हि सन्ततमुपासितवृद्धपूगे ॥ ५२

இங்கு தங்களுக்கு விருப்பமுள்ள பொருள் யாதோ அது அனைத்தும் தங்களுடையதேயாகும் என்று அறியவும். இவ்வாறு கூறிய விஷ்ணுமித்திரருக்கு ஹிமமித்திரன் பதில் கூறினார். எப்பொழுதும் அநேக முதியோர்களையும், சான்றோர்களையும் சேவிக்கின்ற தாங்கள் இவ்வாறு கூறுவது ஆச்சரியமில்லை. இந்த கிருகம் தங்களுடையதே. எனக்கு விருப்பமுள்ளதைக் கூறி, பெற்றுக்கொள்கிறேன்.

एवं मिथः परिनिगद्य विशेषमृद्व्या वाचा युतौ मुदमवापतुरुत्तमां तौ ।
अन्ये च संमुमुदिरे प्रियसत्कथाभिः स्वेच्छाविहारहसनैरुभये विधेयाः ॥ ५३

இனிய சொல்லை கூறுகிற விஷ்ணுமித்திரரும் ஹிமமித்திரரும் இவ்விதம் சம்பாஷணை செய்துகொண்டு சந்தோஷமடைந்தனர். (மற்றவர்களும்) இரு குலத்தைச் சேர்ந்த ஏனையோரும், தண்ணீர் வீழ்ச்சி, நந்தவனம், தாமரைக்குளம் மற்றும் அற்புதமான விஷயங்களை கண்ணுற்றும், இனிய சொற்களையும், சரித்திரங்களையும் கூறிக்கொண்டு மிகவும் சந்தோஷமடைந்தனர். யாருக்கும் ஒருவிதக் குறையும் ஏற்படவில்லை.

कन्यावरौ प्रकृतिसिद्धसुरूपवेषौ दृष्ट्वोभयेऽपि परिकर्म विलम्बमानाः ।
चक्रुर्विधेयमिति कर्तुमनीश्वरास्ते शाभाविशेषमपि मङ्गलवासरेऽस्मिन् ॥ ५४

மணமகளும், மணமகனும் இயற்கையிலேயே நல்ல அழகும், அமைப்பும், ஒளியுமுள்ளவர்களாக விளங்கினர். ஆகையால் அவர்களுக்கு அணிகளால் அழகு செய்ய ஜனங்கள் விரும்பவில்லை. கல்யாணத்தில் கனகாலங்காரம் செய்வது முறையாதலால் அணிகளை அணிவித்தனர். அப்படி செய்தலும் தாமதமாகவே ஏற்பட்டது. அவர்களுடைய இயற்கை அழகு வியப்பைத் தந்து தாமதப்படுத்தியது.

एतत्प्रभाप्रतिहतात्मविभूतिभावादाकल्पजातमपि नातिशयं वितेने ।
लोकप्रसिद्धिमनुसृत्य विधेयबुद्ध्या भूषां व्यधुस्तदुभये न विशेषबुद्ध्या ॥ ५५

அவர்களுடைய தேகத்தின் ஒளியினால் நகைகளின் பிரகாசம் மங்கியது. அப்படியிருக்கையில் அந்த அணிகள் எவ்வாறு அழகைத் தோற்றுவிக்கும்? இல்லை. அழகிற்காக அணிகளை அணியவில்லை. பொன்னணிகள் அணிவித்துப் பெண்மணியை அளிக்கவேண்டும். அலங்காரம் செய்து கொண்டு ஆடவன் மணமகளைப் பெற்றுக்கொள்ளவேண்டும் என்ற நூல்களின் விதிப்படியும் உலகவழக்கின்படியும் வழங்கப்பெற்றது.

मौहूर्तिका बहुविदोऽपि मुहूर्तकालमप्राक्षुरक्षतधियं खिलतीं सखीभिः ।
पश्चात्तदुक्तशुभयोगयुते शुभांशे मौहूर्तिकाः स्वमतितो जगृहुर्मुहूर्तम् ॥ ५६

அநேக விஷயங்களை உணர்ந்த ஜோதிடர்களும், ஒரு விஷயத்திலும் தடைபெறாத புத்தியுள்ள அந்த மணமகள் தோழிகளுடன் சந்தோஷமாக விளையாடிக்கொண்டிருக்கையில், விவாகமுகூர்த்தத்தை வினவினர். அவள் கூறிய பின் தங்களுடைய புத்தியினால் அதை சரி என்று அறிந்துகொண்டனர்.

जग्राह पाणिकमलं हिममित्रसूनुः श्रीविष्णुमित्रदुहितुः करपल्लवेन ।
भेरीमृदङ्गपटहाध्ययनाब्जघोषैर्दिङ्मण्डले सुपरिमूर्च्छति दिव्यकाले ॥ ५७

பேரிகை, மிருதங்கம், படகம் முதலிய வாத்தியங்களுடைய துவனிகளும், வேதகோஷங்களும், சங்குகளின் சப்தங்களும், ஒலித்து திசைகள் எல்லாம் விசேஷமாக முழங்கும்பொழுது ஹிமமித்திரருடைய புதல்வன் (விசுவரூபன்) மலர்போன்ற தன் கையினால், ஸ்ரீ விஷ்ணுமித்திரருடைய புதல்வியான (ஸரஸ்வதியின்) மலர்போன்ற கையைப் பிடித்தார்.

यं यं पदार्थमभिकामयते पुमान्यस्तं तं प्रदाय समतूतुषतां तदीड्यौ ।
देवद्रुमाविव महासुमनस्त्वयुक्तौ संभूषितौ सदसि चेरतुरात्मलाभौ ॥ ५८

யார் யார் எந்தெந்த பொருள்களை விரும்பினரோ அவைகளெல்லாவற்றையும் அளித்து அவர்களால் புகழப்பெற்றனர். அந்த மணமக்களால் பூஜிக்கத்தகுந்த தாய்தந்தையர்கள் இருவரும் தங்களுடைய விருப்பம் வெற்றி பெற்றதினால் ஆனந்தமடைந்தனர். பல நகைகளுமணிந்துகொண்ட அவர்கள் உதாரகுணமுடையவர்களாகவும் மேலும் ஏனையோருடைய வேண்டுகோளை வெற்றிபெறச்செய்ய ஆசைகொண்டவர்களாகவும் கற்பகவிருக்ஷங்கள்போல் சபையில் (விவாகமண்டபத்தில்) சஞ்சரித்தனர். (அவர்கள் அசைகின்ற கற்பகவிருக்ஷங்கள் என்று கவி வியதிரேகாலங்காரமாகக் கூறுகிறார். வேற்றுமை அணி).

आधाय वह्निमथ तत्र जुहाव सम्यग्गृह्योक्तमार्गमनुसृत्य स विश्वरूपः ।
लाजाञ्जुहाव च वधूः परिजिघ्रति स्म धूमं प्रदक्षिणमथाकृत सोऽपि चाग्निम् ॥ ५९

பிறகு அந்த விசுவரூபர் தன்னுடைய சூத்திரப்படி அக்னியை வளர்த்து ஹோமம் செய்து, மணமகளைக்கொண்டு லாஜ(பொரி)ஹோமம் செய்வித்தார். அவள் அந்தப் புகையை முகர்ந்தாள். அக்னியை பிரதக்ஷிணம் செய்தாள். மணமகனும் பிரதக்ஷிணம் செய்தார்.

होमावसानपरितोषितविप्रवर्यः प्रस्थापिताखिलसमागतबन्धुवर्गः ।
संरक्ष्य वह्निमनया सममग्निगेहे दीक्षाधरो दिनचतुष्कमुवास हृष्टः ॥ ६०

விவாகஹோமம் முடிந்த பிறகு வந்த பந்துக்களை உபசாரம் செய்து அனுப்பினார். பிறகு விசுவரூபர் விவாகதீக்ஷைகொண்டவராக மனைவியுடன் நான்கு நாட்கள் அக்னிசாலையில் சந்தோஷமாகவும், நியமத்துடனும் வாசம் செய்தார்.

प्रतिष्ठमाने दयिते वरेऽस्मिन्नुपेत्य मातापितरौ वरायाः ।
आभाषिषातां शृणु सावधानो बालेव बाला न तु वेत्ति किञ्चित् ॥ ६१

மறுநாள், மருமகன் பிரயாணத்திற்குத் தயாராக இருக்கையில், வதுவினுடைய தாய்தந்தையர்கள் அருகில் வந்து உரைத்தனர். ''கவனமாக கேட்பீராக. எங்கள் மகள் சிறு குழந்தையைப்போல் ஒன்றும் அறியாதவள்.

बालैरियं क्रीडति कन्दुकाद्यैर्जातक्षुधा गेहमुपैति दुःखात् ।
एकेति बाला गृहकर्म नोक्ता संरक्षणीया निजपुत्रितुल्या ॥ ६२

இவள் சிறு குழந்தைகளுடன் பந்து முதலிய விளையாட்டுக்களைச்செய்து கொண்டு பசி ஏற்படும்போது வருந்தி இல்லத்திற்கு வருவது வழக்கம். ஒரே மகளாதலால் யாம் இவளைக்கொண்டு வீட்டுவேலை செய்விக்கவில்லை. அத்தகையவளை தங்களுடைய புதல்விபோல் காப்பாற்றவேண்டும்.

बालेयमङ्ग वचनैर्मृदुभिर्विधेया कार्या न रूक्षवचनैर्न करोति रुष्टा ।
केचिन्मृदूक्तिवशगा विपरीतभावाः केचिद्विहातुमनलं प्रकृतिं जनो हि ॥ ६३

ஐயா! இனிய சொற்களைக் கூறி, இவளை இல்லத்தில் வேலை செய்யும்படி தூண்டவேண்டும். கடூரவார்த்தைகளால் செய்விக்கக்கூடாது. சினம் கொண்டால் வேலை செய்யாள். உலகில் சிலர் இனிய சொற்களுக்குத்தான் வசமாகின்றனர். வேறுசிலர் கடுஞ்சொற்களுக்குத்தான் வசப்படுவார்கள். உலக இயல்பை விடமுடியாதன்றோ?

कश्चिद् द्विजातिरधिगम्य कदाचिदेनामुद्वीक्ष्य लक्षणमवोचदनिन्दितात्मा ।
मानुष्यमात्रजननं निजदेवभावेत्यस्माच्च वो वचनमुग्रमयोज्यमस्याम् ॥ ६४

(உண்மையான ரகசியத்தைக் கூறுகின்றார் தந்தை.) மாசற்ற ஒரு அந்தணர் ஒருநாள் எமது கிருகத்திற்கு வந்து இவளுடைய சரீரலக்ஷணத்தைக் கண்டு கூறினார். ''இந்தக் குமாரி மானிடப்பிறவியில் பிறந்தவளேயன்றி உண்மையில் தெய்வத்தன்மை வாய்ந்தவள்''. அந்தக் காரணத்தினாலும் அவளிடம் கடுஞ்சொற்களைக் கூறலாகாது.

सर्वज्ञतालक्षणमस्ति पूर्णमेषा कदाचिद्वदतोः कथायाम् ।
तत्साक्षिभावं व्रजिताऽनवद्या संदिश्य नावेवमसौ जगाम ॥ ६५

'ஸர்வக்ஞை' என்பதற்குள்ள லக்ஷணம் இவளுக்கு பூர்த்தியாக அமைந்துள்ளது. ஒரு தருணத்தில் வாதம் செய்கின்ற சிறந்த அறிஞர்கள் இருவருடைய வாதத்தில் சாக்ஷியாக விளங்குவாள். குறையில்லாதவள் என்று கூறிவிட்டுச் சென்றார்.

श्वश्रूर्वराया वचनेन वाच्या स्नुषाभिरक्षाऽऽयतते हि तस्याम् ।
निक्षेपभूता तव सुन्दरीयं कार्या गृहे कर्म शनैः शनैस्ते ॥ ६६

மருமகளுடைய மாமியார் (தங்களுடைய தாயார்) எமது வசனத்தின்படி கூறத்தகுந்தவள். ஏனெனில் மருமகளின் பாதுகாப்பு அவளைச்சேர்ந்ததன்றோ? இந்த அழகிய பெண் தங்களுடைய அடைக்கலப்பொருள். மிகவும் மெதுவாக வீட்டு வேலையைச் செய்விக்கத்தகுந்தவள்.

बाल्येषु बाल्यात्सुलभोऽपराधः स नेक्षणीयो गृहिणीजनेन ।
वयं सुधीभूय हि सर्व एव पश्चाद्गुरुत्वं शनकैः प्रयाताः ॥ ६७

இளமையில் சிறுவர்களுக்குத் தப்பிதம் உண்டாவது எளிது. அந்த தவறை வீட்டிலுள்ள முதியோர் பொருட்படுத்தக்கூடாது. நாம் எல்லோரும் காலக்கிரமத்தில் புத்திமான்களாகி, பிறகுதான் குருஸ்தானத்தைப் பெற்றுள்ளோம். (உயர்ந்த நிலைமை பெற்றுள்ளோம்).

(இவ்வாறு மருமகனை நோக்கிக் கூறியபொழுது இந்த விஷயத்தை என் தாயாரிடம் தாங்களே நேரில் கூறலாமல்லவா என்று வினு எழ அதற்கு விடை கூறுகிறுர்.)

दृष्ट्वाऽभिधातुमनलं च मनोऽस्मदीयं गेहाभिरक्षणविधौ न हि दृश्यतेऽन्यः ।
दृष्ट्वाऽभिधानफलमेव यथा भवेन्नो ब्रूयात्तथेष्टजनता जननीं वरस्य ॥ ६८

இல்லறத்தை நடத்துபவள் உமது தாயாயினும் நாம் நேரில் இந்த விஷயத்தை அவளிடம் கூற இயலாது. ஆகையால் பந்துஜனங்கள் அவர்களுக்கு இதைக் கூறி நாங்களே நேரில் சொன்னுல் என்ன பயனோ அது ஏற்படவேண்டும்.

(இப்பொழுது தமது புதல்விக்கு புத்திமதி கூறுகிறுர்.)

वत्से त्वमद्य गमिताऽसि दशामपूर्वां तद्रक्षणे निपुणधीर्भव सुभ्रु नित्यम् ।
कुर्यान्न बालविहृतिं जनतोपहास्यां सा नाविवापरमियं परितोषयेत्ते ॥ ६९

குழந்தாய், நீ இப்பொழுது அபூர்வமான நிலைமையை அடைந்துள்ளாய். அழகியவளே! அந்த நிலைமையை காப்பாற்றிக்கொள்ள திறமையுள்ள புத்திசாலியாக இருக்கவேண்டும். ஜனங்கள் ஏளனம் செய்யக்கூடிய குழந்தை விளையாட்டை செய்யக்கூடாது. உன்னுடைய அந்த விளையாட்டு எங்களைப்போல் மற்றவர்களை சந்தோஷிக்கச் செய்யாது.

पाणिग्रहात्स्वाधिपती समीरितौ पुरा कुमार्याः पितरौ ततः परम् ।
पतिस्तमेकं शरणं व्रजानिशं लोकद्वयं जेष्यसि येन दुर्जयम् ॥ ७०

விவாகம் நடப்பதற்கு முன் பெண்ணிற்கு தாய்தந்தையர்கள் மேல் அதிகாரிகள். விவாகத்திற்குப் பிறகு கணவன் எஜமானன். அந்தக் கணவனையே எப்பொழுதும் சரணமாகக் கொள்ள வேண்டும். அதனுல் வெல்ல முடியாத இரண்டு லோகங்களையும் ஜெயிப்பாய். (அதாவது இம்மையில் புகழும் மறுமையில் புண்யப்பயனும் அடைவாய்.)

पत्यावभुक्तवति सुन्दरि मा स्म भुङ्क्ष्व याते प्रयातमपि मा स्म भवेद्विभूषा ।
पूर्वापरादिनियमोऽस्ति निमज्जनादौ वृद्धाङ्गनाचरितमेव परं प्रमाणम् ॥ ७१

அழகு நிறைந்தவளே! கணவன் சாப்பிடுவதற்குமுன் சாப்பிடாதே. கணவன் தூரதேச யாத்திரை செல்லும்பொழுது நகை அணிதல் கூடாது. ஸ்நானம் முதலிய காரியங்களில் முன் பின் என்ற சில நியமங்கள் உண்டு. அதற்கு முதியோர்களான மங்கைகளின் செய்கையே உதாரணமாகும்.

रुष्टे धवे सति रुषेह न वाच्यमेकं क्षन्तव्यमेव सकलं स तु शाम्यतीत्थम् ।
तस्मिन्प्रसन्नवदने चकितेव वत्से सिध्यत्यभीष्टमनघे क्षमयैव सर्वम् ॥ ७२

கணவன் சினம்கொண்டபொழுது நீயும் கோபமாக ஒரு சொல்லும் சொல்லக்கூடாது. பொறுமையாக இருக்கவேண்டும். அவ்வாறு இருந்தால் அவருடைய கோபம் தணியும். அவர் முகமலர்ச்சியுடன் இருக்கும் பொழுது அவரிடம் கூறும் விஷயத்தை பயமுடையவளாகக் கூறவேண்டும். மாசற்றவளே! பொறுமையால் எல்லா விருப்பமும் நிறைவேறும்.

भर्तुः समक्षमपि तद्वदनं समीक्ष्य वाच्यो न जातु सुभगे परपूरुषस्ते ।
किं वाच्य एष रहसीति तवोपदेशः शङ्का वधूपुरुषयोः क्षपयेद्धि हार्दम् ॥ ७३

கணவனுக்கு எதிரில்கூட வேறு புருஷனிடம் பேசக்கூடாது. அப்படி இருக்கையில் கணவர் இல்லாத சமயத்தில் இவ்வாறு செய்யக்கூடாது என்பது பற்றி உனக்கு புத்திமதி கூறவேண்டுமா? கணவன், மனைவி இவர்களுக்குள் விகல்பம் ஏற்பட்டால் அது அன்பைக் குறைக்கும்.

आयाति भर्तरि तु पुत्रि विहाय कार्यमुत्थाय शीघ्रमुदकेन पदावनेकः ।
कार्यो यथाभिरुचि हे सति जीवनं वा नोपेक्षणीयमणुमात्रमपीह कं ते ॥ ७४

கணவன் வெளியே சென்று இல்லத்திற்கு வருகையில் வேலையில் அமர்ந்திருந்தாலும், அதை விலக்கி எழுந்து அவருக்கு தண்ணீர் முதலியவைகளைக் கொடுக்க வேண்டும். அவருக்கு சந்தோஷம் உண்டாக்கும்படி பணிவிடை செய்ய வேண்டும். இந்த வாழ்க்கையில் கணவனுக்கு சுகத்தை அளிக்கக்கூடியதும் வாழ்க்கைக்கு உரியதுமான சிறு விஷயத்தில்கூட உதாசீனம் செய்யக்கூடாது.

धवे परोक्षेऽपि कदाचिदेयुर्गृहं तदीया अपि वा महान्तः ।
ते पूजनीया बहुमानपूर्वं नो चेन्निराशाः कुलदाहकाः स्युः ॥ ७५

கணவன் இல்லத்தில் இல்லாமல் இருக்கையில் அவருடைய நண்பர்களும், மற்றும் சான்றோர்களும் சிலசமயங்களில் வருவார்கள். அவர்களுக்கு முகமன் கூறுதல் முதலான முறைப்படி உள்ள உபசாரங்களை வழங்கவேண்டும். அவர்களுடைய விருப்பம் நிறைவேறாவிடில் குலத்தையே அழித்து விடுவார்கள்.

पित्रोरिव श्वशुरयोरनुवर्तितव्यं तद्वन्मृगाक्षि सहजेष्वपि देवरेषु ।
ते स्नेहिनो हि कुपिता इतरेतरस्य योगं विभिद्युरिति मे मनसि प्रतर्कः ॥ ७६

தாய்தந்தையர்களை அனுசரிப்பதுபோல், மாமியார், மாமனார், அவர்களையும் அனுசரிக்கவேண்டும். சுந்தரியே! கணவனுடைய சகோதரர்களிடமும் அனுகூலமாக நடந்துகொள்ள வேண்டும். அன்புள்ள அவர்கள் கோபமடைந்தால் தம்பதிகளுக்கு பிளவை உண்டாக்குவார்கள் என்று என்னுடைய அபிப்பிராயம்.

हितोपदेशे विनिविष्टमानसौ वधूवरौ राजगृहं समीयतुः ।
लब्धानुमानौ गुरुबन्धुवर्गतो बभूव संक्षोभयभारतीति ॥ ७७

இவ்வாறு பெற்றோர்களுடைய புத்திமதியைப் பெற்றுக்கொண்டு, அவர்களாலும், பந்துஜனங்களாலும் அனுமதிக்கப்பட்ட மணமக்கள் இருவரும்

தமது நகரத்திற்குச் சென்று அரசனுடைய அரண்மனைக்கும் சென்றனர். பிறந்த குலத்திலும், புகுந்த குலத்திலும் 'உபயபாரதி' என்ற பெயர் ஸரஸ்வதிக்கு பிரஸித்தமாயிற்று.

सा भारती दुर्वसनेन दत्तं पुनः प्रसन्नेन पुराऽऽत्तहर्षा ।
शापावधिं संसदि वत्स्यंते यत्सर्वज्ञतानिर्वहणाय साक्ष्यम् ॥ ७८

மேற்கூறப்பட்ட அந்த ஸரஸ்வதி முன்காலத்தில் துர்வாசமுனிவரால் சாபமளிக்கப்பெற்று, பிறகு சாந்தமடைந்த அவர் குறிப்பிட்ட சாபத்தின் முடிவுகாலத்தை சந்தோஷத்துடன் அறிந்துகொண்டாள். அந்த சாபத்திற்கு முடிவை செய்யக்கூடியது சங்கரருடைய சம்பாஷணைக்கு சாக்ஷியாக இருத்தல். சபையில் நடக்கும் தனது கணவனுடையவும், சங்கரருடையவும் வாதத்திற்கு மத்யஸ்தம் செய்யப்போகிறுள். (ஆகையால் ஸ்ரீ சங்கரசரிதத்தில் அந்த சாரதையின் வரலாறு இடம்பெற்றது.)

स भारतीसाक्षिकसर्ववित्त्वोऽप्यात्मीयशक्त्या शिशुवद्विभातः ।
स्वशैशवस्योचितमन्वकांक्षीत्स केशवो यद्वदुदारवृत्तः ॥ ७९

வருங்காலத்தில் தன்னுடைய ஸர்வக்ஞத்வம் ஸரஸ்வதிதேவியினுல் தீர்மானம் செய்யப்படப் போவதாயினும், அந்த சங்கரன், குழந்தைபோலவே விளங்கினுர். உலகங்களால் புகழப்பட்ட மகிமையுள்ள திருமால், திருவவதாரம் செய்து, பால்யலீலைகளை விரும்பியதுபோல் சங்கரனும் தன்னுடைய பால்யப்பருவத்து லீலைகளைக் காட்ட விரும்பினுர்.

शैशवे स्थितवता चपलाशे शार्ङ्गिणेव वटवृक्षपलाशे ।
आत्मनीदमखिलं विलुलोके भाविभूतमपि यत्खलु लोके ॥ ८०

ஆலமரத்தின் இலையில் இருந்த திருமால், உலகமனைத்தையும் தன்னிடத்தில் கண்டதுபோல், சபலங்களான (நிலையில்லாத) ஆசைகளுக்கு தங்குமிடமாகிய குழந்தைப்பருவத்தில் இருந்த அந்த சங்கரரால் எதிர்காலத்தில் ஏற்படப்போகின்றதெல்லாம் தன்னிடத்தில் தெரிந்துகொள்ளப்பட்டது.

तं ददर्श जनताऽद्भुतबालं लीलयाऽधिगतनूतनदोलम् ।
वासुदेवमिव वामनलीलं लोचनैरनिमिषैरनुवेलम् ॥ ८१

லீலைகளைக் காண்பிக்கப் புதிதான தொட்டிலில் படுத்திருந்த ஆச்சரியமான அந்த பாலனை, மனத்தைக்கவருகின்ற லீலைகளை விளைவித்த வாசுதேவனைப் பார்த்ததுபோல் அடிக்கடி ஜனங்கள் இமை கொட்டாத கண்களால் பார்த்தனர்.

कोमलेन नवनीरदराजिश्यामलेन नितरां समराजि ।
केशवेशतमसाऽधिकमस्य केशवेशचतुरास्यसमस्य ॥ ८२

திருமால், சிவபெருமான், நான்முகக்கடவுள் இவர்களுக்கு நிகரான அவருடைய கூந்தல் கார்மேகக்கூட்டம்போல் தாபத்தை தணித்து ஆனந்தத்தை அளிப்பதனுல் விசேஷமாக விளங்கிற்று.

(நாராயணனுடைய அவதாரமாகிய ஸ்ரீராமரை வால்மீகிமுனிவர் வர்ணிக்கையில் 'विष्णुना सदृशो वीर्ये' (संक्षेपरामायणे) என்று கூறுகிறார். அது போலவே சிவபெருமானுடைய அவதாரமாகிய சங்கரரையும் சிவபெருமானுக்குச் சமம் என்று கூறுகிறார். மும்மூர்த்திகளில் ஒருவரை விலக்குவது விதியல்ல என்பது பற்றி இவ்வாறு கூறுகிறார். அத்துடன் கேசவன், ஈசன், சதுராஸ்யன் (நான்முகங்களுள்ளவர்) இவர்கள் சங்கரருக்குச் சமானமானவர்கள் என்று கூறுதல் சிறந்தது. உபமேயத்தைக்காட்டிலும் உபமானம் சிறந்தது என்பது பிரசித்தம். அவதாரரூபத்திற்கு மூலரூபத்தைக்காட்டிலும் சிறப்பு உண்டு என்பது பிரம்மஸ்துதி முதலான இடங்களில் (ஸ்ரீமத் பாகவதத்தில்) விளக்கப்படுகிறது.)

शाक्यैः पाशुपतैरपि क्षपणकैः कापालिकैर्वैष्णवै -
रप्यन्यैरखिलैः खलैः खलु खिलं दुर्वादिभिर्वैदिकम् ।
पन्थानं परिरक्षितुं क्षितितलं प्राप्तः परिक्रीडते
घोरे संसृतिकानने विचरतां भद्रंकरः शङ्करः ॥ ८३

பௌத்தர்களாலும், திகம்பரர்களாலும், பாசுபதர்களாலும், காபாலிகர்களாலும், வைஷ்ணவர்களாலும், மற்றும் வேறு குதர்க்கங்கள் கூறுகின்ற நாஸ்திகர்களாலும் வேதமார்க்கம் அழிக்கப்பட்டது. அதை காப்பாற்றுவதற்காக மண்ணுலகில் அவதரித்த சங்கரன், பயங்கரமான ஸம்ஸாரமாகிய காட்டில் சஞ்சாரம் செய்கின்றவர்களுக்கு நன்மையைச் செய்து கொண்டு சஞ்சாரம் செய்கிறார்.

इति श्रीमाधवीये तत्तद्देवावतारार्थकः ।
संक्षेपशङ्करजये तृतीयः सर्ग आभवत् ॥ ३ ॥

இவ்வாறு ஸ்ரீமாதவாசாரியர் இயற்றிய ஸ்ரீ சங்கரவிஜயச்சுருக்கத்தில்
அந்தந்த தேவர்களின் அவதாரத்தைப்பற்றிக் கூறுகின்ற
மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

आदितः श्लोकाः 274



# अथ चतुर्थः सर्गः

## நான்காவது ஸர்க்கம்

## कौमारचरितवर्णनम्

## ஸ்ரீசங்கரருடைய இளமைப்பருவத்தின் வர்ணனை

अथ शिवो मनुजो निजमायया द्विजगृहे द्विजमोदमुपावहन् ।
प्रथमहायन एव समग्रहीत्सकलवर्णमसौ निजभाषिकाम् ॥ १

பிறகு, அந்த பரமசிவன் தன்னுடைய மாயையினால் பாலவடிவம் கொண்டு அந்தணர்களுக்கு ஆனந்தத்தை வளர்த்துக்கொண்டு அந்த சிவகுருவினுடைய கிருஹத்தில் விளங்கினார். அவர் முதல் வயதிலேயே எல்லா லிபிகளையும் தன்னுடைய தாய்பாஷையைப்போல் சிரமமில்லாமல் அறிந்து கொண்டார்.

द्विसम एव शिशुर्लिखिताक्षरं गदितुमक्षमताक्षरवित्सुधीः ।
अथ स काव्यपुराणमुपाशृणोत्स्वयमवैत्किमपि श्रवणं विना ॥ २

எழுத்துக்களையறிந்த புத்திமானாகிய அந்தக் குழந்தை இரண்டு வயதிலேயே எழுதிய எழுத்துக்களைக் கூற வல்லமை பெற்றார். பிறகு காவ்ய புராணங்களைக் கேட்டார். கேள்வியின்றியே சிலவற்றை அறிந்துகொண்டார்.

(இந்த சுலோகத்தில் अक्षरवित् என்ற சொல் அழிவற்ற பரமாத்மாவை அறிந்தவர் என்றும் பொருள் கொண்டது. सुधीः என்ற சொல்லிற்கு பிறருக்கு, சோபனமான (धी) புத்தி, யாருடைய கருணையினால் உண்டாகிறதோ அத்தகைய பரமாசாரியர் என்றும் பொருள்.)

अजनि दुःखकरो न गुरोरसौ श्रवणतः सकृदेव परिग्रही ।
सहनिपाठजनस्य गुरुः स्वयं स च पपाठ ततो गुरुणा विना ॥ ३

கூறிய விஷயத்தை ஒரு தடவை கேட்பதினாலேயே நன்கு உணர்ந்து கொள்வதினால் அவருக்கு கல்வி கற்பிக்கும் ஆசிரியருக்கு சிரமம் ஏற்படவில்லை. தான் கற்ற விஷயத்தை கற்பிப்பதில் ஸகபாடி (தன்னுடன் சேர்ந்து படிக்கிறவர்) களுக்கு தான் குருவாக இருந்தார். பிறகு மேற்கொண்ட விஷயங்களை ஆசிரியர் இல்லாமலேயே தெரிந்துகொண்டார்.

रजसा तमसाऽप्यनाश्रितो रजसा खेलनकाल एव हि ।
स कलाधरसत्तमात्मजो सकलाश्चापि लिपीरविन्दत ॥ ४

ரஜஸ்ஸினுலும், தமஸ்ஸினுலும் (ரஜோகுணத்துடனும், தமோகுணத்துடனும்) சம்பந்தப்படாவிடினும் அவர் விளையாட்டுக்காலத்தில் ரஜஸ்ஸை தூசியை பெற்ருர். கலைகளுக்கு = கல்விகளுக்கு இருப்பிடமானவருடைய புதல்வரான அவர் ஸகல லிபிகளையும் அறிந்துகொண்டார்.

सुधियोऽस्य विदिद्युतेऽधिकं विधिवच्चौलविधानसंस्कृतम् ।
ललितं करणं घृताहुतिज्वलितं तेज इवाशुशुक्षणेः ॥ ५

புத்திமானுகிய அவருடைய அழகிய உடல் முறைப்படி சௌளம் என்ற விசேஷ கர்மாவினுல் ஸம்ஸ்காரத்தைப் பெற்று, இயற்கையிலேயே ஜ்வலிக்கின்ற அக்னியின் பிரகாசம் நெய் ஹோமம் செய்யப்பெற்ருல் எவ்வாறே அவ்வாறு மேலும் அதிகம் விளங்கியது.

उपपादननिर्व्यपेक्षधीः स पपाठाहृतिपूर्वकागमान् ।
अधिकाव्यमरंस्त कर्कशेऽप्यधिकांस्तर्कनयेऽत्यवर्तत ॥ ६

பிறருடைய விளக்கத்தை எதிர்பார்க்காமலேயே பூ: புவ: ஸுவ: என்ற வியாஹிருதிகளுடையவும், ஆகமங்களுடையவும் கருத்துக்களை உணர்ந்தார். காவ்யங்களில் மனமகிழ்ச்சி பெற்ருர். கடினமான தர்க்கநூலில் வல்லவர்களை வென்ருர்.

हरतस्त्रिदशेज्यचातुरीं पुरतस्तस्य न वक्तुमीश्वराः ।
प्रभवोऽपि कथासु नैजवाग्विभवोत्सारितवादिनो बुधाः ॥ ७

தமது திறமையினுல், சாஸ்திரங்களில் வாதம் செய்பவர்களை வென்றவர்களான வித்வான்கள் கூட, பிருகஸ்பதியின் வாக்விலாஸத்தின் வல்லமையை வீழும்படி செய்த அவருக்கு எதிரில் சொல்வல்லமையற்றவராயினர்.

अमुकक्रमिकोक्तिधोरणीमुरगाधीशकथावधीरिणीम् ।
मुमुहुर्निशमय्य वादिनः प्रतिवाक्योपहृतौ प्रमादिनः ॥ ८

ஆதிசேஷனுடைய சொற்திறமையை அறவே அழித்த அவருடைய சொற்பொழிவின் சிறப்பைப் பார்த்து பாரிலுள்ள பண்டிதர்கள் பதில் கூற முடியாதவர்களாக மயங்கினர்.

कुमतानि च तेन कानि नोन्मथितानि प्रथितेन धीमता ।
स्वमतान्यपि तेन खण्डितान्यतियत्नैरपि साधितानि कैः ॥ ९

பாரில் பிரசித்தி பெற்ற புத்திமானுகிய அவரால் கெட்ட மதங்கள் எவைதான் கண்டனம் செய்யப்படவில்லை? அவரால் நிராகரிக்கப்பட்ட தங்களுடைய மதங்கள் எவைதான் பண்டிதர்களால் பெரிய முயற்சியினுல் நிலைநிறுத்தப்பட்டன? (ஒன்றுமில்லை.)

अमुना तनयेन भूषितं यमुनाताताससमानवर्चसा ।
तुलया रहितं निजं कुलं कलयामास स पुत्रिणां वरः ॥ १०

புதல்வனுள்ளவர்களில் சிறந்த அந்த சிவகுரு, சூரியனுக்குச் சமமான தேஜஸ் உள்ள புதல்வனால் தனது குலம் விளங்கியதுபற்றி அந்த குலத்தை ஒப்பற்றதாக எண்ணினார்.

(யமுனை நதியின் தந்தை = சூரியன்.)

शिवगुरुः स जरंस्त्रिसमे शिशावमृत कर्मवशः सुतमोदितः ।
उपनिनीषितसूनुरपि स्वयं न हि यमोऽस्य कृताकृतमीक्षते ॥ ११

புத்திரப்பேறினால் ஆனந்தமடைந்த சிவகுரு, பையனுக்கு உபநயனத்தை செய்ய விருப்பமுள்ளவராக இருந்தும், வயது முதிர்ந்ததினால், வினைக்குட்பட்டவராக மரணமடைந்தார். எமன் ஒருவனுடைய காரியாகாரியங்கள், மீதி இருப்பதை கவனிப்பதில்லை.

इह भवेत्सुलभं न सुतेक्षणं न सुतरां सुलभं विभवेक्षणम् ।
सुतमवाप कथञ्चिदयं द्विजो न खलु वीक्षितुमैष्ट सुतोदयम् ॥ १२

இவ்வுலகில் ஸத்புத்திரனைப் பெறுதல் அரிது. பாக்கியத்தினால் அது ஏற்பட்டபோதிலும் அந்த புத்திரனுடைய வைபவத்தை காண்பது மிகவும் அரிது. இந்த சிவகுரு புதல்வனை அடைந்தார். ஆயினும் அப்புதல்வனுடைய மஹிமையைக் கண்டு ஆனந்திக்க பாக்கியம் பெறவில்லை.

(வெகுகாலம் தவம் செய்ததின் பயனாக சிவகுருவிற்கு சிவபெருமான் புத்திரனாகத் தோன்றியதே அவருடைய அளவிடமுடியாத பாக்கியம். ஸத்தியசங்கல்பனான சங்கரன் தன் தந்தைக்கு மறுபிறப்பில்லாத முக்திசுகத்தை அளித்தார், என்பது உண்மை. சிவபெருமான் பூமியில் உருவம்பெற்று, செய்யவேண்டிய காரியம் ஞானமார்க்கத்தின் பிரதிஷ்டை. அதற்கு உரியது துறவறம். அத்தகைய தர்மத்தை ஏற்றுக்கொள்ளுகையில் தந்தை இவ்வுலகிலேயே பாஞ்சபௌதிக உடலுடன் இருந்தால் தன்னுடைய ஸங்கல்பத்திற்கு அது இடையூறாகும். शिव என்ற நாமத்தின் உச்சாரணத்திற்கும், தியானத்திற்குமே கூறமுடியாத சிறந்த சுகலாபம் பயன் என்று சாஸ்திரங்கள் கோஷிக்கையில், அந்த பரம்பொருள் ஒருவரை தந்தை என்று அபிமானித்தால் அவருக்கு மரணம் என்று கூறலாமா? தன்னை ஆராதித்த மார்க்கண்டேயருக்கு மரணத்தை விலக்கி 'மிருத்யுஞ்ஜயர்' என்ற தனது பெயரினாலேயே மற்றவர்களுக்கும் மரணமில்லாமல் காப்பாற்றுபவரன்றோ அந்த பரமேசுவரன்! நூல் ஆசிரியர் இங்கு கூறியது மானிடத்தன்மையைப் பின்பற்றி என்று தாழ்ந்த வணக்கத்துடன் தெரிவிக்கப்படுகிறது. இந்த அபிப்பிராயம் தப்பாயின் பரமேசுவரர் மன்னித்து பிரஸாதம் செய்வாராக.

स्वतन्त्रेच्छस्य मुनेर्नियोगपर्यनुयोगानर्हत्वम् என்று நியாயம். ஸ்வதந்திரமான விருப்பம்கொண்ட முனிவராகிய நூலாசிரியர் கூறிய விஷயத்தைப் பற்றி ஆக்ஷேபம் செய்வதற்கு குன்றிய அறிவுடைய நமக்கு தகுதியில்லை. நமது பிழையைப் பரமேசுவரன் பரிகரித்துப் பிரஸாதம் செய்யும்படி மறுபடியும் பிரார்த்திக்கிறோம்.)

मृतमदीदिहदात्मसनाभिभिः पितरमस्य शिशोर्जननी ततः ।
समनुनीतवती धवखण्डितां स्वजनता मृतिशोकहरैः पदैः ॥ १३

பிறகு குழந்தையினுடைய தாயார், தாயாதிகள் மூலமாக தகனக்கிரியை முதலியவைகளை செய்வித்தாள். கணவனுடைய மரணத்தினுல் வருந்திய ஆரியாம்பாளை தாயாதி ஜனங்கள் நல்ல சொற்களைக் கூறி சமாதானம் செய்தனர்.

कृतवती मृतचोदितमक्षमा निजजनैरपि कारितवत्यसौ ।
उपनिनीषुरभूत्सुतमात्मनः परिसमाप्य च वत्सरदीक्षणम् ॥ १४

ஈமச்சடங்குகள், செய்யவேண்டியவைகளை தான் செய்தும், தனக்குச் செய்ய அதிகாரமில்லாததை தாயாதிகள் மூலமாகச் செய்வித்தும் முடிக்கச் செய்தாள். ஒரு வருஷகாலம் தந்தையின் தீக்ஷையைக் காப்பாற்றச் செய்து, பிறகு மகனுக்கு உபநயனம் செய்ய விரும்பினுள்.

उपनयं किल पञ्चमवत्सरे प्रवरयोगयुते सुमुहूर्तके ।
द्विजवधूर्नियता जननी शिशोर्व्यधित तुष्टमनाः सह बन्धुभिः ॥ १५

ஐந்தாவது வயதில் சுபமுகூர்த்தத்தில் பையனுக்கு முறைப்படி பந்துக்களுடன் உபநயனத்தையும் செய்து முடித்து தாய் சந்தோஷமடைந்தாள்.

अधिजगे निगमांश्चतुरोऽपि स क्रमत एव गुरोः सषडङ्गकान् ।
अजनि विस्मितमत्र महामतौ द्विजसुतेऽल्पतनौ जनतामनः ॥ १६

மிக புத்திமானுகிய அவர் நான்கு வேதங்களையும், ஆறு சாஸ்திரங்களையும் கிரமமாகவே குருவினிடமிருந்து கற்றுக்கொண்டார். (சிறு உடலமைந்த) சிறு பாலனுகிய அந்த சங்கரனுடைய அந்த வயதுக்குமீறிய எல்லையில்லா மதியின் திறமையைக் கண்டு ஜனங்கள் வியந்தனர்.

(திறமையுள்ளவராயினும் மறைகளை ஆசிரியரிடமிருந்தே கற்றுக்கொண்டார் என்றும் பொருள் கூறலாம். மறைகளால் புகழப்பட்ட பரமன் மனிதர்களுக்கு உபதேசம் செய்வதை நடைமுறையிலேயே காட்டினுர். चतुरः निगमानपि = நான்கு வேதங்களையும், चतुरोऽपि = சமர்த்தனுயிருந்தும், सषडङ्गकान् निगमान् क्रमत एव =ஆறு அங்கங்களுடன் கூடிய நான்கு வேதங்களை முறையாகவே (ऋक्, यजुः, साम என்ற முறையாகவே), गुरोः एव = (அவைகளை) குருவினிடமிருந்தே, என்று இவ்வாறு, अपि एव என்ற சொற்களை மாற்றிக் கூறுதல் தகும்.)

सहनिपाठयुता बहवः समं पठितुमैशत न द्विजसूनुना ।
अपि गुरुर्विशयं प्रतिपेदिवान्क इव पाठयितुं सहसा क्षमः ॥ १७

ஸகபாடிகள் அந்த சங்கரருடன் வேதங்களை கற்றுக்கொள்ள வல்லமையில்லாதவர்கள் ஆயினர். ஆசிரியரும் கூட அவருக்குக் கற்பிப்பதில் ஐயம் கொண்டார். எந்த மனிதன்தான் திடீரென்று சீடர்களுக்கு கல்வியைக் கற்பிக்க முடியும்?

अत्र किं स यदशिक्षत सर्वांश्चित्रमागमगणाननुवृत्तः ।
द्वित्रिमासपठनादभवद्यस्तत्र तत्र गुरुणा समविद्यः ॥ १८

உபநயனத்திற்கு முன் இரண்டு அல்லது மூன்று மாதங்கள் கல்வி கற்கையிலே குருவிற்கு நிகராக விளங்கிய அந்த சங்கரன் உபநயனத்திற்குப் பிறகு குருவிற்குப் பணிவிடை செய்து வேதங்களைக் கற்கையில் எல்லா வேதங்களையும் அவைகளின் அங்கங்களையும் கற்றுக் கொண்டார் என்று சொல்வதில் வியப்பு என்ன இருக்கிறது?

वेदे ब्रह्मसमस्तदङ्गनिचये गार्ग्योपमस्तत्कथा -
तात्पर्यार्थविवेचने गुरुसमस्तत्कर्मसंवर्णने ।
आसीज्जैमिनिरेव तद्वचनजप्रोद्बोधकन्दे समो
व्यासेनैव स मूर्तिमानिव नवो वाणीविलासैर्वृतः ॥ १९

வாக்விலாஸத்தில் வல்லமையுள்ள அவர், வேதவித்தையில் நான்முகக் கடவுளுக்கும், அவைகளுடைய அங்கங்களின் ஞானத்தில் கார்க்யமுனிவருக்கும், வேதங்களின் பொருளை விளக்குவதில் பிருஹஸ்பதிக்கும், மறைகளில் கூறும் தர்மங்களை வர்ணிப்பதில் ஜைமினிக்கும், வேதங்களின் சிரஸ்ஸுகளாகிய உபநிஷத்துக்களின் அர்த்தத்தை அறிவதினுலுண்டாகும் ஆத்ம ஞானத்தில் வியாஸமுனிவருக்கும் நிகராக விளங்கினுர்.

आन्वीक्षिक्यैक्षि तन्त्रे परिचितिरतुला कापिले काऽपि लेभे
पीतं पातञ्जलाम्भः परमपि विदितं भाट्टघट्टार्थतत्वम् ।
यत्तैः सौख्यं तदस्यान्तरभवदमलाद्वैतविद्यासुखेऽस्मि -
न्कूपे योऽर्थः स तीर्थे सुपयसि वितते हन्त नान्तर्भवेत्किम् ॥ २०

தர்க்கநூலில் நல்ல திறமை ஏற்பட்டது. சாங்க்யசாஸ்திரத்தில் சந்தேகமின்றி சாமர்த்தியத்தைப் பெற்றுர். பதஞ்சலிமுனிவருடைய நூலில் பாண்டித்யம் புகழத்தக்கதாக பிரகாசித்தது. பாட்டமதமாகிய மீமாம்சா நூலின் பரமரகசியமும் மதியில் ஒளித்தது. அந்த நூல்களின் உணர்வினுல் உண்டாகின்ற உல்லாசம், அத்வைத ஞானத்தினுல் நிலவிய அவருடைய பேரானந்தமாகிய கடலில் அடங்கியது என்றே கூறவேண்டும். கிணற்றிலிருந்து கிட்டும் லாபம் பெரிய சமுத்திரத்தினுல் உண்டாகிய லாபத்தை மீறுமா? அதற்குள் அடங்காதா?

स हि जातु गुरोः कुले वसन्सवयोभिः सह भैक्षलिप्सया ।
भगवान्भवनं द्विजन्मनो धनहीनस्य विवेश कस्यचित् ॥ २१

குருகுலத்தில் வாசம் செய்யும்பொழுது அந்த சங்கரர் பிக்ஷை எடுக்க விரும்பியவராக பணமில்லாத ஒரு அந்தணருடைய இல்லத்தில் புகுந்தார்.

तमवोचत तत्र सादरं यतिवर्यं गृहिणः कुटुंबिनी ।
कृतिनो हि भवादृशेषु ये वरिवस्यां प्रतिपादयन्ति ते ॥ २२

(பவதி, பிக்ஷாம்தேஹி என்று சங்கரர் கூறியதைக் கேட்ட) அந்தணருடைய மனைவி, பிரம்மசாரிகளில் சிறந்த அவரிடம் ஆதரவுடன் கூறினாள். தங்களைப் போன்றவர்களுக்கு உபசாரம் செய்கின்றவர்கள் பாக்கியசாலிகள்.

विधिना खलु वञ्चिता वयं वितरीतुं वटवे न शक्नुमः ।
अपि भैक्षमकिञ्चनत्वतो धिगिदं जन्म निरर्थकं गतम् ॥ २३

ஏழ்மையினால், ஒரு சிறிய பிரம்மசாரிக்குச் சிறிது அன்னம்கூட அளிக்க ஆற்றல் இல்லாத நாங்கள் இவ்வாறு படைக்கப்பட்டு பிரம்மதேவரால் ஏமாற்றப்பட்டோமன்றோ? இந்த ஜன்மம் பாழ். தனது வினையின் வலிமையிருக்கையில் பிரம்மதேவனை பழிப்பது பிசகு. ஆனதுபற்றி வேறு பொருள், விதியினால் = முன்ஜன்ம வினையினால் வஞ்சிக்கப்பட்டோம் என்று கொள்ளத்தக்கது. முன்ஜன்மத்தில் தானம் செய்யாததின் பயனாக இவ்வளவு வறுமையால் வருத்தமுற்றவர்களாகி, மாசற்ற மாணவனொருவனுக்கு மனமாற பிக்ஷான்னமளிக்க வல்லமையற்ற பாழான ஜன்மம் இது (என்று வருந்தினாள்).

इति दीनमुदीरयन्त्यसौ प्रददावामलकं व्रतीन्दवे ।
करुणं वचनं निशम्य सोऽप्यभवज्ज्ञाननिधिर्दयार्द्रधीः ॥ २४

இவ்வாறு எளிய வசனத்தை கூறி அந்த மங்கை சிறந்த பிரம்மசாரியான சங்கரருக்கு நெல்லிக்கனியொன்றை அளித்தாள். ஞானக்கடலான சங்கரரும் பரிதாபமான வசனத்தைக் கேட்டு கருணைகூர்ந்த மனமுற்றார்.

स मुनिर्मुरभित्कुटुम्बिनीं पदचित्रैर्नवनीतकोमलैः ।
मधुरैरुपतस्थिवांस्तवैर्द्विजदारिद्र्यदशानिवृत्तये ॥ २५

அந்த முனிவர், முரன் என்ற அசுரனைக்கொன்ற மஹாவிஷ்ணுவின் மனைவியாகிய மகாலக்ஷ்மியை, பிராம்மணருடைய வறுமை நீங்குவதற்காக வெண்ணையைக்காட்டிலும் மிருதுவானவையும், இனியவையுமான துதிகளால் துதித்தார்.

(ஸ்ரீ சங்கரர் அருளிய செய்யுட்களை ஆஸ்திகர்களுடைய ஸௌகரியத்தின் பொருட்டு இங்கு கூறுகின்றோம்.)

## ॥ श्रीकनकधारास्तोत्रम् ॥

अङ्गं हरेः पुलकभूषणमाश्रयन्ती भृङ्गाङ्गनेव मुकुलाभरणं तमालम् ।
अङ्गीकृताखिलविभूतिरपाङ्गलीला माङ्गल्यदाऽस्तु मम मङ्गलदेवतायाः ॥ १

मुग्धा मुहुर्विदधती वदने मुरारेः प्रेमत्रपाप्रणिहितानि गतागतानि ।
माला दृशोर्मधुकरीव महोत्पले या सा मे श्रियं दिशतु सागरसंभवायाः ॥ २

आमीलिताक्षमधिगम्य मुदा मुकुन्दमानन्दकन्दमनिमेषमनङ्गतन्त्रम् ।
आकेकरस्थित कनीनिकपक्ष्मनेत्रं भूत्यै भवेन्मम भुजङ्गशयाङ्गनायाः ॥ ३

बह्वन्तरे मधुजितः श्रितकौस्तुभे या हारावलीव हरिनीलमयी विभाति ।
कामप्रदा भगवतोऽपि कटाक्षमाला कल्याणमावहतु मे कमलालयायाः ॥ ४

कालाम्बुदालिललितोरसि कैटभारेर्धाराधरे स्फुरति या तडिदङ्गनेव ।
मातुः समस्तजगतां महनीयमक्षि भद्राणि मे दिशतु भार्गवनन्दनायाः ॥ ५

प्राप्तं पदं प्रथमतः खलु यत्प्रभावान्माङ्गल्यभाजि मधुमाथिनि मन्मथेन ।
मय्यापतेत्तदिह मन्थरमीक्षणार्धं मन्दालसाक्षि मकराकरकन्यकायाः ॥ ६

विश्वामरेन्द्रपदविभ्रमदानदक्षमानन्दहेतुरधिकं मधुविद्विषोऽपि ।
ईषन्निषीदतु मयि क्षणमीक्षणार्धमिन्दीवरोदरसहोदरमिन्दिरायाः ॥ ७

इष्टा विशिष्टमतयोऽपि यया द्राग्दृष्टास्त्रिविष्टपपदं सुलभं लभन्ते ।
दृष्टिः प्रहृष्टकमलोदरदीप्तिरिष्टां पुष्टिं कृषीष्ट मम पुष्करविष्टरायाः ॥ ८

दद्याद्दयानुपवनो द्रविणाम्बुधारामस्मिन्नकिञ्चनविहङ्गशिशौ विषण्णे ।
दुष्कर्मघर्ममपनीय चिराय दूरान्नारायणप्रणयिनीनयनाम्बुवाहः ॥ ९

गीर्देवतेति गरुडध्वजभामिनीति शाकंभरीति शशिशेखरवल्लभेति ।
सृष्टिस्थितिप्रलयकेलिषु संस्थितायै तस्यै नमस्त्रिभुवनैकगुरोस्तरुण्यै ॥ १०

संपत्कराणि सकलेन्द्रियनन्दनानि साम्राज्यदानविभवानि सरोरुहाक्षि ।
त्वद्वन्दनानि दुरिताहरणोद्यतानि मामेव मातरनिशं कलयन्तु मान्ये ॥ ११

यत्कटाक्षसमुपासनाविधिः सेवकस्य सकलार्थसंपदः ।
सन्तनोति वचनाङ्गमानसैस्त्वां मुरारिहृदयेश्वरीं भजे ॥ १२

सरसिजनयने सरोजहस्ते धवलतरांशुकगन्धमाल्यशोभे ।
भगवति हरिवल्लभे मनोज्ञे त्रिभुवनभूतिकरि प्रसीद मह्यम् ॥ १३

दिग्धस्तिभिः कनककुम्भमुखावसृष्टस्वर्वाहिनीविमलचारुजलाप्लुताङ्गीम् ।
प्रातर्नमामि जगतां जननीमशेषलोकाधिनाथगृहिणीममृताब्धिपुत्रीम् ॥ १४

कमले कमलाक्षवल्लभे त्वं करुणापूरतरङ्गितैरपाङ्गैः ।
अवलोकय मामकिञ्चनानां प्रथमं पात्रमकृत्रिमं दयायाः ॥ १५

श्रुत्यै नमोऽस्तु शुभकर्मफलप्रसूत्यै रत्यै नमोऽस्तु रमणीयगुणाश्रयायै ।
शक्त्यै नमोऽस्तु शतपत्रनिकेतनायै पुष्ट्यै नमोऽस्तु पुरुषोत्तमवल्लभायै ॥ १६

नमोऽस्तु नालीकनिभाननायै नमोऽस्तु दुग्धोदधिजन्मभूम्यै ।
नमोऽस्तु सोमामृतसोदरायै नमोऽस्तु नारायणवल्लभायै ॥ १७

नमोऽस्तु हेमाम्बुजपीठिकायै नमोऽस्तु भूमण्डलनायिकायै ।
नमोऽस्तु देवादिदयापरायै नमोऽस्तु शार्ङ्गायुधवल्लभायै ॥ १८

नमोऽस्तु देव्यै भृगुनन्दनायै नमोऽस्तु विष्णोरुरसि स्थितायै ।
नमोऽस्तु लक्ष्म्यै कमलालयायै नमोऽस्तु दामोदरवल्लभायै ॥ १९

नमोऽस्तु कान्त्यै कमलेक्षणायै नमोऽस्तु भूत्यै भुवनप्रसूत्यै ।
नमोऽस्तु देवादिभिरर्चितायै नमोऽस्तु नन्दात्मजवल्लभायै ॥ २०

स्तुवन्ति ये स्तुतिभिरमीभिरन्वहं त्रयीमयीं त्रिभुवनमातरं रमाम् ।
गुणाधिका गुरुधनभाग्यभागिनो भवन्ति ते भवमनुभाविताशयाः ॥ २१

(कमलासनपाणिना ललाटे लिखितामक्षरपङ्क्तिमस्य जन्तोः ।
परिमार्जय मातरङ्घ्रिणा ते धनिकद्वारनिवासदुःखदोग्ध्रीम् ॥ )



अथ कैटभजित्कुटुम्बिनी तटिदुद्दामनिजाङ्गकान्तिभिः ।
सकलाश्च दिशः प्रकाशयन्त्यचिरादाविरभूत्तदग्रतः ॥ २६

பிறகு, கைடபனைக்கொன்ற கேசவனுடைய காந்தை மின்னல்போல் பிரகாசிக்கின்ற தன்னுடைய தேகத்தின் காந்தியினால் திசைகளனைத்தையும் விளக்கிக்கொண்டு விரைவில் அவருக்கு முன் தோன்றினாள்.

अभिवन्द्य सुरेन्द्रवन्दितं पदयुग्मं पुरतः कृताञ्जलिम् ।
ललितस्तुतिभिः प्रहर्षिता तमुवाच स्मितपूर्वकं वचः ॥ २७

தேவேந்திரனாலும் வணங்கப்பட்ட தேவியினுடைய பாதங்களைத் தொழுது சங்கரர் கைகூப்பி நின்றார். அவருடைய இனிய சொற்களால் மகிழ்ச்சியை அடைந்த பூமகள், புன்னகை செய்து பேசலானாள்.

विदितं तव वत्स हृद्गतं कृतमेभिर्न पुरा भवे शुभम् ।
अधुना मदपाङ्गपात्रतां कथमेते महितामवाप्नुयुः ॥ २८

குழந்தாய்! உன் மனதிலுள்ளதை அறிந்துகொண்டேன். இவர்கள் முன்ஜன்மத்தில் நன்மையைச் செய்யவில்லையே. அப்படியிருக்கையில், புகழத்தக்கதான என்னுடைய கடைக்கண்பார்வையை எவ்வாறு அடைவார்கள்?

इति तद्वचनं स शुश्रुवान्निजगादाम्ब मयीदमर्पितम् ।
फलमद्य ददस्व तत्फलं दयनीयो यदि तेऽहमिन्दिरे ॥ २९

திருமகளுடைய அந்த வசனத்தைச் செவியுற்று சங்கரன் சொன்னார்: தாயே! இவர்களால் இப்பொழுது இந்தப்பழம் எனக்கு அளிக்கப்பட்டது. ஹே லக்ஷ்மியே! என்னிடத்தில் கருணை இருந்தால் இவர்கள் அளித்த இந்த தானத்திற்கு பயன் அளிப்பாயாக.

(தான் பிக்ஷைக்காகச் சென்றவிடத்தில் தலைவிரித்துத் தாண்டவமாடிய வறுமைநோயைக் கண்டு கருணைகொண்ட காமாக்ஷீகாந்தனாகிய சங்கரன்,

திருமகளுடைய திருமனதையும் கூட திருத்தி அமைக்கும்படித் திருச்சொல் கூறியது, பக்தர்களுக்கு மயிர்ச்சிலிர்த்தலை உண்டாக்கக்கூடியது. முன்ஜன்மத்தில் நன்மை செய்யாததால் வறுமை என்ற வார்த்தைக்கு இப்பொழுது என்னிடமளித்த தானத்திற்கு பயனை எனக்காக நீ கொடுக்கவேண்டும் என்ற கம்பீரமான வசனத்தின் கருத்து உள்ளத்தை மகிழச் செய்கின்றது. நான் இவர்களிடமிருந்து ஒரு பொருளை பெற்றுக்கொண்டேன். இதற்குத் தக்க பயனை அளிக்கும்படி இப்பொழுது உன்னிடம் வேண்டுகிறேன். தாயே! என்று விளித்தார். அவிவேகத்தினுல் மக்கள் செய்த அபராதத்தை மன்னிப்பது தாயின் கடமையன்றோ! எனக்கு கொடுக்கும் திறமையிருந்த போதிலும் உன்னுடைய பெயரின் கௌரவத்தைக் காப்பாற்றிக்கொள்ள உன்னைக்(கொண்டு) கொடுக்கும்படிக் கோருகிறேன். அவ்வாறு நீ கொடுத்தால், நான் ஏற்றுக்கொண்ட தானத்திற்கு பயன் என்னுல் அளிக்கப்பட்டதேயாகும். பிரம்மசரியத்திலிருக்கிற எனக்கு தானத்தைப் பெற்றுக்கொள்ள உரிமையேயன்றி கொடுக்கும் அதிகாரம் இல்லை. அந்த அதிகாரம் உனக்கிருக்கையில் எனக்கு கவலை ஏது? மேலும் பூர்வஜன்மத்தில் தமது நன்மை செய்யாமையை உணர்ந்து பச்சாத்தாபம் ஏற்பட்ட பின் அந்தக் குறை நீங்கவில்லையா? பச்சாத்தாபம்தான் பாபத்திற்குப் பிராயச்சித்தம். பச்சாத்தாபப்படுவதுமன்றி எனக்கு கனியை அளித்தாளன்றோ! அந்த தானத்திற்கு பயனில்லாமை எவ்வாறு தகும்?)

अमुना वचनेन तोषिता कमला तद्भवनं समन्ततः ।
कनकामलकैरपूरयज्जनताया हृदयं च विस्मयैः ॥ ३०

சங்கரனுடைய இன்சொற்களால் சந்தோஷமடைந்த திருமகள், அந்த இல்லம் முழுவதையும் தங்கக்கட்டிகளாகிய நெல்லிக்கனிகளால் நிரப்பினுள். ஜனங்களுடைய மனமும் வியப்பினுல் நிரம்பியது.

अथ चक्रभृतो वधूमये सुकृतेऽन्तर्धिमुपागते सति ।
प्रशशंसुरतीव शङ्करं महिमानं तमवेक्ष्य विस्मिताः ॥ ३१

நாராயணனுடைய அணங்காகிய புண்யம் மறைந்து சென்றபொழுது சங்கரனுடைய மகிமையைக் கண்ணுற்ற ஜனங்கள் வியந்து அவரைப் புகழ்ந்தனர்.

दिवि कल्पतरुर्यथा तथा भुवि कल्याणगुणो हि शङ्करः ।
सुरभूसुरयोरपि प्रियः समभूदिष्टविशिष्टवस्तुदः ॥ ३२

தேவலோகத்தில் கற்பகவிருக்ஷம்போல் பூலோகத்தில் சங்கரர் சகல கல்யாணகுணங்களுடன் விளங்கினுர். ஆனுல் தேவலோகத்துக் கற்பகம் தேவர்களுக்கு மட்டும் பிரியமானது. சங்கரரோவெனில் ஸுரர்களுக்கும் (தேவர்களுக்கும்) பூசுரர்கட்கும் (அந்தணர்கட்கும்) விருப்பமான விசேஷப் பொருள்கள் அனைவற்றையும் அளிப்பவர்.

अमरस्पृहणीयसम्पदं द्विजवर्यस्य निवेशमात्मवान् ।
स विधाय यथापुरं गुरोः सविधे शास्त्रवराण्यशिक्षत ॥ ३३

நிலைபெற்ற மனமுடைய அவர் அந்தணருடைய மனையை தேவர்கள்கூட விரும்பக்கூடிய செல்வமுள்ளதாகச் செய்து பிறகு ஆசிரியரிடத்தில் சென்று சிறந்த சாஸ்திரங்களைக் கற்றுக் கொண்டார்.

वरमेनमवाप्य भेजिरे परभागं सकलाः कला अपि ।
समवाप्य निजोचितं पतिं कमनीया इव वामलोचनाः ॥ ३४

கண்ணழகு அமைந்த மங்கையர்கள் தமக்குத் தக்க கணவனை அடைந்து சந்தோஷமாக பிணங்குவதுபோல் கலைகள் யாவும் சிறந்தவரான அவரை அடைந்து நன்கு விளங்கின. (மற்ற மனிதர்களுக்கு கலை அழகை அளிக்கின்றது. ஆனால் இந்த சங்கரரோவெனில் கலைகளுக்கு அழகையளித்தார்.)

सरहस्यसमग्रशिक्षिताखिलविद्यस्य यशस्विनो वपुः ।
उपमानकथाप्रसङ्गमप्यसहिष्णुश्रियमन्वपद्यत ॥ ३५

நுண்ணிய நுட்பங்களுடன் கலைகளனைத்தையும் கற்றவரும் கீர்த்தி பெற்றவருமான அவருடைய உடல், உபமானம் கூறத்தக்க ஒப்பான பொருளில்லாமையால் விசேஷமாக விளங்கிற்று.

(அந்தப் பரமசிவனுடைய பரிசுத்தமான பாதம் முதலாக தலைவரையுள்ள அங்கங்களை வர்ணிக்கிறார்.)

जयति स्म सरोरुहप्रभामदकुण्ठीकरणक्रियाचणम् ।
द्विजराजकरोपलालितं पदयुग्मं परगर्वहारिणः ॥ ३६

பிறருடைய = பேதவாதம், வேதங்கட்குப் புறம்பான வாதம் ஆகியவற்றைப் பேசுகிறவர்களுடைய, செருக்கையறுக்கின்ற அவருடைய பாதங்கள் இரண்டும் வெற்றியுடன் விளங்கிற்று. தாமரை மலரின் ஒளியின் இறுமாப்பை இழக்கச் செய்வதில் வன்மையுள்ளதாக விளங்கிற்று. ஏனெனில், அவருடைய பாதங்கள் த்விஜராஜர்களுடைய = சிறந்த அந்தணர்களுடைய, கரங்களால் = கைகளால், உபலாளிதம் = விசேஷமாக லாளனை செய்யப்பட்டது. தாமரை மலரோவெனில் அவ்வாறு இல்லை. ஏனெனில், த்விஜராஜன் என்ற சொல்லிற்கு சிலேடையாக சந்திரன் என்று பொருள். ''तस्मात्सोमराजानो ब्राह्मणाः'' என்று சுருதி கூறுகின்றது. அதன் பொருள் ''சந்திரன் பிராம்மணர்களுக்கு அரசன்''. அவனுடைய கரம் = கிரணம், அதனால் உபலாளிதம் என்று கூறமுடியாது. சந்திரகிரணம் தாமரையை மூடச் செய்கின்றது. சந்திரசேகரருடைய அவதாரமாகிய சங்கரருடைய சரணம் சந்திரகிரணத்தால் லாளனம் செய்யப்பட்டது என்ற அர்த்தமும் உபமேயத்திற்குப் பொருந்தும்.

जलमिन्दुमणिं स्रवेद्यदि यदि पद्मं दृषदः ततः सरः ।
यदि तत्र भवेत्कुशेशयं तदमुष्यांघ्रितुलामवाप्नुयात् ॥ ३७

தண்ணீர் சந்திரகாந்தக்கல்லை உருக்கி, உருகிய அந்தக் கல்லிலிருந்து ஒரு தாமரை மலர் தோன்றி, அந்த மலரிலிருந்து ஒரு குளம் உண்டாகி, அந்தக் குளத்தில் ஒரு தாமரை மலர் தோன்றினால் அதனை அந்த சங்கரருடைய பாதத்திற்கு

உவமை கூறலாம். அவ்வாறு இல்லாமையால் அவருடைய பாதங்கள் நிகரற்றவை.

पादौ पद्मसमौ वदन्ति कतिचिच्छ्रीशङ्करस्यानघौ
वक्त्रं च द्विजराज-मण्डलनिभं नैतद् द्वयं साम्प्रतम् ।
प्रेष्यः पद्मपदः किल त्रिजगति ख्यातः पदं दत्तवा -
नम्भोजे द्विजराजमण्डलशतैः प्रेष्यैरुपास्यं मुखम् ॥ ३८

ஸ்ரீ சங்கரருடைய மாசற்ற அந்தப் பாதங்களை பத்மங்களுக்கு = தாமரைகளுக்கு சமமாக கூறுகிறார்கள். முகத்தை த்விஜராஜ மண்டலத்திற்கு = சந்திரமண்டலத்திற்கு சமமாகக் கூறுகிறார்கள். இந்த இருவகைச் சொல்லும் சரியன்று. தாமரை போன்ற பாதமுள்ளவர் என்றால் பத்மபாதர் என்று அர்த்தம். மூன்று உலகங்களிலும் கீர்த்தி பெற்ற இவருடைய சிஷ்யர் பத்மத்தில் பாதத்தை வைத்து பத்மபாதர் என்ற பெயரை (காரணப் பெயரை) பெற்றிருக்கையில் குருவிற்கும் அதே பெயர் என்பது பொருந்தாது. சிஷ்யனைவிட குருவிற்கு சிறப்பு வேண்டாமா? முகம் த்விஜராஜ மண்டலத்திற்கு சமம் என்று கூறுகையில் சிலேடையாக ''சிறந்த பிராம்மண சமூகத்திற்கு'' நிகர் என்ற பொருள் விளங்குகிறது. த்விஜராஜர்கள் = சிறந்த பிராம்மணர்கள், அவர்களுடைய மண்டலத்தினால் (சமூகத்தினால்) உபாசனை செய்யப்பட்டது என்றுதான் கூறவேண்டும். உபாசனை செய்கிறவர்கள் பிராம்மணர்கள் என்று ஏற்படுகிறது. உபாசனை செய்யப்பட்டவர் சங்கரர் என்றும் பொருள் விளங்குகிறது. அவ்வாறு வித்யாசம் இருக்கையில் உபமானம் உபமேயம் என்ற நிலையில் கூறுவது சரியன்று. இவ்வாறு நூலாசிரியர் அற்புதமாக கூறுகின்றார். (இது பிரதீபாலங்காரம்.)

मुहुः सन्तो नैजं हृदयकमलं निर्मलतरं
विधातुं योगीन्द्राः पदकमलमस्मिन्निदधति ।
दुरापां शक्राद्यैर्वमति वदनं यन्नवसुधां
ततो मन्ये पद्मात्पदमधिकमिन्दोश्च वदनम् ॥ ३९

சிறந்த யோகிகள் தங்களுடைய ஹிருதயகமலத்தைச் சுத்தம் செய்து கொள்வதற்கு அதில் அந்த சங்கரருடைய பாதகமலத்தை வைக்கின்றனர். (தியானம் செய்கின்றனர்). ஒரு கமலம் மற்றொரு கமலத்தைச் சுத்தம் செய்யாதல்லவா? அதுபற்றியும் கமலத்தை உபமானமாகக் கூறுவதற்கில்லை. சந்திரன் முகத்திற்கும் உபமானமாகாது. ஏனெனில், சந்திரன் தேவர்கட்கு கிடைக்கின்ற அமிருதத்தைப் பெருக்குகின்றான். இவருடைய முகமோ எனில் தேவர்கட்கும் கிட்டாத புதிதான அமிருதத்தை (நிரதிசயானந்தத்தையளிக்கும் சொற்பொழிவை) பெருக்குகின்றது. ஆகையால் நிகராகாது.

तत्वज्ञानफलेग्रहिर्घनतरव्यामोहमुष्टिंधयो
निःशेषव्यसनोदरंभरिरघप्राग्भारकूलंकषः ।
लुण्टाको मदमत्सरादिविततेस्तापत्रयारंतुदः
पादः स्यादमितंपचः करुणया भद्रंकरः शङ्करः ॥ ४०

ஸ்ரீசங்கரருடைய பாதம் ஆத்மதத்வஞ்ஞானமாகிய பலனை அளிக்கின்றதாகவும், ஆத்மதத்வத்தை மறைக்கின்ற அஞ்ஞானமாகிய இருளை நீக்குவதும், எல்லாத் துன்பங்களையும் தொலைக்கின்றதும், பாபக்கும்பலை கொலை செய்கின்றதும், மதம் மாத்ஸரியம் ஆகிய ஆறு எதிரிகளை அறவே அறுக்கின்றதும், தாபங்களைத் தணிப்பதும், கருணையினால் கரைகடந்த சுகத்தை அளிக்கின்றதுமான மங்களகரமான உயர்ந்த பொருள்.

पादाघातस्फोटव्रणकिणितकार्तान्तिकभुजं
प्रघाणव्याघातप्रणतविमतद्रोहबिरुदम् ।
परं ब्रह्मैवासौ भवति तत एवास्य सुपदं
गतापस्मारार्तीञ्जगति महतोऽद्यापि तनुते ॥ ४१

மார்க்கண்டேய முனிவரை எமனிடமிருந்து காப்பாற்றும் சமயத்தில் அவனை உதைத்து, விருணம் (காயம்) செய்ததும், பக்கத்தில் நெருங்கி வணங்குகின்றவர்களுடைய பகைவரை வென்றமையால் விருதுகொண்டதுமாகிய அந்த மூர்த்தி (ஸ்ரீசங்கரர்) பரப்பிரம்மவஸ்துவேயாகும். ஆகையால் அவருடைய அந்த திவ்ய சரணம் அடைந்தவர்களை மஹான்களாகவும், அபஸ்மாரம் என்ற நோய் அல்லது அசுரன் என்பவனுடைய துன்பம் இல்லாதவர்களாகவும் செய்கின்றது. (அபஸ்மாரம் என்றால் மறதி. ஆத்மரூபத்தை மறத்தல். அதுவே ஆர்த்தி (துன்பம்) அல்லது அதனால் உண்டாகும் துன்பங்கள். அவை நீங்கியவர்களாகச் செய்கின்றது என்றும் பொருள்.)

प्राप्तस्याभ्युदयं नवं कलयतः सारस्वतोज्जृम्भणं
स्वालोकेन विधूतविश्वतिमिरस्यासन्नतारस्य च ।
तापं नस्त्वरितं क्षिपन्ति घनतापन्नं प्रसन्ना मुने -
राह्लादं च कलाधरस्य मधुराः कुर्वन्ति पादक्रमाः ॥ ४२

புதிதான வளர்ச்சியை அடைந்தவனும், சமுத்திரத்திற்கு சந்தோஷத்தை விருத்தி செய்கின்றவனும், தன்னுடைய ஒளியினால் உலகத்திலுள்ள இருளை நீக்குகின்றவனும், நக்ஷத்திரங்களுடன் கூடியவனும், பதினாறு கலைகளுடன் கூடியவனுமாகிய சந்திரனுடைய கிரணங்களின் வீச்சுக்கள் (வெயிலினாலுண்டான) மிகுந்த தாபத்தை நீக்கி, நமக்கு ஆனந்தத்தை வளர்க்கின்றன. அதுபோலவே சங்கரருடைய பாதக்கிரமங்களும், (கால் நடைகளும்) செய்கின்றன என்று உபமானமூலமாக சிலேடையினால் கூறுகிறார். பிறவியற்றவர் பிறவியைப் பெற்றுப் புதிய வளர்ச்சியை அடைந்துள்ளார். न कर्मणा वर्धते नो कनीयान् என்று சுருதி. கர்மத்தினால் வளருகிறவருமல்லர் குறைகிறவருமல்லர் என்று பொருள். அத்தகையர் உடலைப்பெற்று வளர்ச்சியை அடைதல் புதிதல்லவா? ஸாரஸ்வதத்தின் உஜ்ஜ்ரும்பணம் = ஸரஸ்வதியின் விலாசத்தை (பேச்சு வன்மையை) காண்பிக்கின்றவர். உலகம் எல்லாம் வியாபித்துள்ள திமிரம் = இருள் = அஞ்ஞானம். ஸ்வரூபத்தைக் கண்டதினால் (ஆத்மஞானத்தினால்) அஞ்ஞானமாகிய இருளை நாசம் செய்தவர்.

மற்றவர்களுடைய அஞ்ஞானத்தையும் அறவே அறுத்தவர். தாரம் (தாரகம் = ஓங்காரப் பொருள்). அதனை எப்பொழுதும் அப்பியாஸம் செய்கின்றவர். எல்லாக் கலைகளையும் = அறுபத்துநான்கு கலைகளையும் கொண்டவர். அத்தகையருடைய நடைகள் மிகுந்த தாபத்தைத் தணித்து, ஆனந்தத்தை அளிக்கின்றன.

नतिर्दत्ते मुक्तिं नतमुत पदं वेति भगव -
त्पदस्य प्रागल्भ्याज्जगति विवदन्ते श्रुतिविदः ।
वयन्तु ब्रूमस्तद्भजनरतपादाम्बुजरजः-
परीरम्भारम्भः सपदि हृदि निर्वाणशरणम् ॥ ४३

1) நிறைச்செல்வம், 2) குறையில்லா அறம், 3) மாசற்ற புகழ், 4) மிக்க அழகு, 5) அறிவு, 6) வைராக்கியமாகிய ஆறு குணங்கள் நிறைந்த அந்த பகவானது பாதத்தினுடைய வன்மையைப் பற்றி மறைகளில் வல்லவர்களான முனிவர்கள் வாதிக்கின்றனர். அதாவது - பகவானாகிய அவருடைய பாதத்தில் செய்யும் வணக்கம் முக்தியை அளிக்கின்றது என்று சிலரும், வணங்கப்பட்ட பாதம்தான் முக்தியை அளிக்கின்றது என்று வேறுசிலரும் கூறுகின்றனர். யாம் கூறுகின்றோம், யாதெனில், அந்த பகவானுடைய பாதத்தை பஜிக்க விருப்பம் கொண்டவருடைய பாதாரவிந்தத்தின் தூசியை இருதயத்தில் பெறுவதற்குள்ள முயற்சியே முக்திக்கு விரைவான காரணம் என்பது.

धवलांशुकपल्लवावृतं विललासोरुयुगं विपश्चितः ।
अमृतार्णवफेनमञ्जरीच्छुरितैरावतहस्तशस्तिभृत् ॥ ४४

தளிர்போல் தூய வெண்மையான வஸ்திரமணிந்த வித்வானாகிய அவருடைய துடைகளிரண்டும், அமிருதக்கடலின் நுரைக்குவியல் பூசப்பெற்ற ஐராவதயானையின் துதிக்கையின் சிறப்புள்ளதாயிற்று.

यदि हाटकवल्लरीत्रयीघटिता स्फाटिककूटभृत्तटी ।
स्फुटमस्य तया कटीतटी तुलिता स्यात्कलितत्रिमेखला ॥ ४५

படிகமலையின் ஒரு சிகரம் மூன்று தங்கக்கொடிகளால் சூழப்பட்டதாக விருந்தால், நிச்சயமாக அது மூன்று சுற்றுள்ள முஞ்சிக்கயிற்றினால் மிக்க ஒளி வீசுகிற மத்திய இடமாகிய இடுப்பிற்கு சமமாக விளங்கும்.

आदाय पुस्तकवपुः श्रुतिसारमेकहस्तेन वादिकृततद्गतकण्टकानाम् ।
उद्धारमारचयतीव विबोधमुद्रामुद्बिभ्रता निजकरेण परेण योगी ॥ ४६

(அவருடைய கைகளை இரண்டு சுலோகங்களால் வர்ணிக்கிறார்.) சுருதிகளின் சாரமடங்கிய புஸ்தகமாகிய உடலை ஒரு கையில் (இடது கையில்) பிடித்து, வாதிகள் ஏற்றிய வேற்றுமை வாதங்களாகிய முட்களை அதிலிருந்து ஞானமுத்திரையைக் கொண்ட மற்றொரு கையினால் எடுக்கிறார் என்று நினைக்குமாறு அந்த யோகி விளங்கினார்.

(ஆள்காட்டி விரலினுடையவும், கட்டை விரலினுடையவும் நுனிகளின் சந்திப்பு ஞானமுத்திரை என்று கூறப்படுகின்றது. உடலில் புகுந்த முட்களை

வெளியே எடுக்க அந்த விரல்களின் சேர்க்கைதான் உதவுகின்றது. புஸ்தகத்தை படிக்கும்போது இடது கையில் பிடித்து வலது கை இரண்டு விரல்களையும் மேற்கூறியபடி அமைத்திருப்பதை கவி உத்ப்ரேக்ஷாலங்காரமாகக் கூறுகின்றார்.)

सुधीराजः कल्पद्रुमकिसलयाभौ करवरौ
करोत्येतौ चेतस्यमलकमलं यत्सहचरम् ।
रुचेश्चोरावेतावहनि किमु रात्राविति भिया
निशादेराप्रातर्निजदलकवाटं घटयति ॥ ४७

''புத்திமான்களில் மிகச் சிறந்தவரான அந்த சங்கரருடைய சிறந்த கைகள் கற்பகவிருக்ஷத்தின் தளிர்போன்றவை'' என்று மனதில் எண்ணி கைகளுக்கு நிகரான தாமரை மலர் அஞ்சியது. ''இந்தக் கைகள் பகலிலேயே என்னுடைய அழகை அபகரிக்கின்றன. இரவில், கூறவேண்டுமா?'' என்று இவ்வாறு பீதி ஏற்பட்டதினால்தான், சூரியன் அஸ்தமனமானவுடன் மறுநாள் காலைவரையில் தனது இதழாகிய கதவை (அந்த திருடர்கள் புகாமலிருப்பதற்கு) மூடிக்கொள்ளுகிறது என்று உத்ப்ரேக்ஷை.

(இந்தச் செய்யுளில் ''கல்பத்ருமகிஸலயாபௌ'' என்று கரங்களுக்கு விசேஷணம் கொடுத்துள்ளார். வேண்டுகிறவர்களுடைய வேண்டுகோளை அளிக்கும் தன்மையுள்ளது கற்பகம். அவருடைய கைகளும் சீடர்களுடைய சிரஸ்ஸில் வைக்கப்பட்டு அவர்களுடைய குறைகளையெல்லாம் நீக்கி விருப்பங்கள் அனைத்தையுமளித்து அருளும் ஆற்றலும் உள்ளவை.)

(அவருடைய மார்பிடத்தை வர்ணிக்கின்றார்.)

रुचिरा तदुरस्थली बभावररस्फालविशालमांसला ।
धरणीभ्रमणोदितश्रमात्पृथुशय्येव जयश्रियाऽऽश्रिता ॥ ४८

கதவுபோல் விசாலமும், மாமிசபுஷ்டியுள்ளதும், அழகியதுமான அவருடைய மார்பு, பூமியெங்கும் சுற்றிச் சோர்வடைந்த ஜயலக்ஷ்மிக்குத் தங்குமிடமாகத் தோன்றியது.

परिघप्रथिमापहारिणौ शुशुभाते शुभलक्षणौ भुजौ ।
बहिरन्तरशत्रुनिग्रहे विजयस्तंभयुगीधुरन्धरौ ॥ ४९

உள்ளேயும் வெளியேயும் இருக்கின்ற எதிரிகளை வென்றதினால் நாட்டப்பட்ட ஜயஸ்தம்பங்கள் இரண்டுபோல் அமைந்த கைகள் பரிகாயுதத்தின் அழகை வென்று நல்ல லக்ஷணமுள்ளவைகளாக காட்சியளித்தன.

उपवीतममुष्य दिद्युते बिसतन्तुक्रियमाणसौहृदम् ।
शरदिन्दुमयूखपाण्डिमातिशयोल्लङ्घनजाङ्घिकप्रभम् ॥ ५०

தாமரைத் தண்டினுடைய நூலுக்கு நிகரான யக்ஞோபவீதம் சரத்காலத்து சந்திரனுடைய கிரணங்களின் சோபையை மீறுவதில் மிக வன்மையுடைய சோபையுள்ளதாக ஜ்வலித்தது.

समराजत कण्ठकम्बुराड् भगवत्पादमुनेर्यदुद्भवः ।
निनदः प्रतिपक्षनिग्रहे जयशङ्खध्वनितामविन्दत ॥ ५१

பகவத்பாதராகிய அந்த முனிவருடைய கழுத்தாகிய சிறந்த சங்கு சோபையுள்ளதாகவிருந்தது. அங்கிருந்து கிளம்பிய ஒலி, எதிரிகளை வென்றதைத் தெரிவித்த வெற்றி ஒலியாகவிருந்தது.

अरुणाधरसंगताऽधिकं शुशुभे तस्य हि दन्तचन्द्रिका ।
नवविद्रुमवल्लरीगता तुहिनांशोरिव शारदी छविः ॥ ५२

சிவப்பான உதட்டில் சம்பந்தப்பட்ட பற்களின் நிலாபோன்ற காந்தி, புதிதான பவழவிருக்ஷத்தினுடைய கொடியில் விழுந்த சரத்கால சந்திரனுடைய ஒளிபோல் விளங்கிற்று.

सुकपोलतले यशस्विनः शुशुभाते सितभानुवर्चसः ।
वदनाश्रितभारतीकृते विधिसङ्कल्पितदर्पणाविव ॥ ५३

கீர்த்திபெற்றவரும், சந்திரன்போல் சோபிக்கின்றவருமான அவருடைய கன்னங்கள், முகத்தில் வாசம் செய்கின்ற ஸரஸ்வதீதேவிக்கு கண்ணாடிகள் போல் காணப்பட்டன.

समासीत्तस्यास्यं सुकृतजलधेः सर्वजगतां
पयःपारावारादजनि रजनीशो बहुमतात् ।
सुधाधारोद्गारः सुसदृगनयोः किन्तु शशभृ -
त्सतां तेजःपुञ्जं हरति वदनं तस्य दिशति ॥ ५४

அந்த சங்கரருடைய முகம் உலகமனைத்தினுடையவும் புண்ணியமாகிய கடலிலிருந்து தோன்றியது. நாராயணன் சயனம் செய்கின்றதினுல் உலகங்களால் மதிக்கப்பட்ட கடலிலிருந்து சந்திரன் தோன்றினுன். இவ்விரண்டிலிருந்தும் (முகம், சந்திரன்) அமிருதப் பொழிவு சமம்தான். ஆனுல் ஸத்துக்களுடைய (நக்ஷத்திரங்களுடைய) ஒளியை சந்திரன் அபகரிக்கின்ருன். மேலும் முக்தியை விரும்புகின்ற சாதுக்களுக்கு, காமவிகாரத்தை விளைவித்து, தேஜஸ்ஸை மங்கச்செய்கின்ருன். இவருடைய முகமோவெனில் சாதுக்களுக்கு விவேகத்தை வளர்த்தி, ஊக்கமளிக்கின்றது. (சொற்பொழிவு = முகத்திலிருந்து வருகிற அமிருதப்பொழிவு.)

पुरा क्षीराम्भोधेरहह तनया यद्विषयता -
जुषो दीनस्याग्रे घनकनकधाराः समकिरत् ।
इदं नेत्रं पात्रं कमलनिलयाप्रीतिवितते -
र्मुनीशस्य स्तोतुं कृतसुकृत एव प्रभवति ॥ ५५

ஆச்சரியம்! முன்னொருநாள், எந்த மாமுனிவருடைய கண்ணுக்கெதிரில் நின்றமையால் ஏழ்மை நீங்கும்படி ஒரு மங்கைக்கு எதிரில் திருமகள்

பொன்கட்டிகளை பொழிந்தாளோ, அத்தகையருடைய கண் லக்ஷ்மியின் கடாக்ஷப்பிரவாகத்திற்கு உற்பத்தியிடமன்றோ! அதனை மிக்கப் புண்ணியமுள்ளவன்தான் துதிக்கத் தகுதியுள்ளவன்.

दुर्वारप्रतिपक्षदूषणसमुन्मेषक्षितौ कल्पने
सेतोरप्यनघस्य तापसकुलैणाङ्कस्य लङ्कारयः ।
अपघ्नानतिकायविभ्रममुषः संसारिशाखामृगान्
पुष्णन्त्यचछपयोब्धिवीचिवदलङ्काराः कटाक्षाङ्कुराः ॥ ௫௬

அடக்கமுடியாத பகைவனான தூஷணன் என்ற அரக்கனை அழித்தல் குறையில்லாத சேதுவை (அணையை) கட்டுதல் என்பவைகளில் மாசற்றவரும், தவம் செய்கின்ற முனிவர்களுடைய குலத்திற்குச் சந்தோஷத்தை செய்கின்ற சந்திரனும் ஆகிய ஸ்ரீ ராமச்சந்திரனுடைய கடைக்கண் பார்வைகள் அதிகாயன் (முதலான அரக்கர்களுடைய) அதிகமான கர்வத்தை அடக்கியவைகளும், பாற்கடலின் அலைகள்போல் அழகியவைகளும், இலங்கையின் பகைவர்களும் ஆக இருக்கின்றவை. போரில் அங்குமிங்கும் குதித்து தாவி அரக்கர்களைக் கொன்றவர்களும் இறந்தவர்களுமான வானரர்களைக் கருணையினால் உய்வித்தன. அதுபோல் அந்த சங்கரருடைய கடைக்கண் பார்வைகளும் உள. மற்றவர்களால் வெல்லுதற்கரியவைகளும் மறைகளை மறுக்கின்றவைகளுமாகிய வாதங்களின் வாதுகளை அறுத்தவர். உலகநிலைமையை காப்பாற்றுவதற்குரிய அறநெறியாகிய அணையை அமைத்தவர். முனிவர்களுடைய கூட்டத்திற்கு சந்தோஷத்தை உண்டுபண்ணுகிறவர். ஸ்தூலசரீரத்தில் (அதிகாய பெருத்த உடல்) நான் என்ற அபிமானத்தை அபகரிக்கின்றவர் சங்கரர். அத்தகையரின் கடைக்கண் பார்வைகள் தாவுகளில் தாவுகின்ற மிருகங்கள்போல், வேதசாகைகளில் கூறும் பயனை அடைவதற்காக தாவும் தன்மையுள்ள ஸம்ஸாரிகள், தன்னை சரணம் அடைந்தால் அவர்களுடைய பேத ஞானத்தை பேதித்து முக்தி சுகத்தையளிக்கின்றன. பாற்கடலின் அலைகள்போல் அழகியவைகள், செடியின் முளைகள் சீதம், சுத்தம், பசுமையுள்ளவைகள். அதுபோல் கடைக்கண் பார்வைகளும் குளிர்ச்சியளித்து சுத்தம் செய்து அன்பு ததும்பி அருள்புரிகின்றன.

निःशङ्कक्षतिरूक्षकण्टककुलं मीनाङ्कदावानल -
ज्वालासंकुलमार्तिपङ्किलतरं व्यध्वं धृतिध्वंसिनम् ।
संसाराकृतिमामयच्छलचलद्दुर्वारदुर्वारणं
मुष्णन्ति श्रममाश्रिता नवसुधावृष्ट्यायिता दृष्टयः ॥ ௫௭

எதிர்பாராமல் பரவுகின்ற ஆபத்துக்களான முட்கள் நிறைந்ததும், காமமாகிய காட்டுத்தீயின் சுடர்கள் சூழ்ந்ததும், துன்பங்களாகிய சேற்றினால் செம்மையற்றதும், தைரியத்தைத் தொலைக்கின்றதும், வியாதிகளாகிய தடுப்பதற்கரிய மதயானைகள் நிரம்பியதும் ஆகிய சம்சாரமாகிய பயங்கரமான வழியில் நடப்பதினால் நிலவுகின்ற சிரமத்தை, ஆச்சரியமான அமிருதப் பொழிவாகிய கடைக்கண் பார்வைப் பிரவாகம் நீக்குகின்றது.

त्रिपुण्ड्रं तस्याहुः सितभसितशोभि त्रिपथगां
कृपापारावारं कतिचन मुनिं तं श्रितवतीम् ।
वयं त्वेतद् ब्रूमो जगति किल तिस्रः सुरुचिरा -
स्त्रयीमौलिव्याकृत्युपकृतिभवाः कीर्तय इति ॥ ५८

அந்தப் பரமனுடைய நெற்றியில் விளங்குகின்ற விபூதியை (வெண்மையான விபூதியினுலமைந்த மூன்று கோடுகளின் வடிவத்தை) சிலர் கூறுகின்றுர்கள். யாதெனில், ''கருணைக்கடலாகிய அந்த முனிவரை, மூன்று வழியாகச் செல்லுகின்ற கங்காநதி அடைந்துள்ளது'' என்று. நாம் கூறுவது யாதெனில், ''மூன்று வேதங்களின் சிரஸ்ஸுக்களாகிய உபநிடதங்களை வியாக்யானம் செய்தலான உபகாரத்தினுல் அமைந்து, மூன்று உலகங்களுக்கும் செல்லுதற்குரிய கீர்த்திகள் மூன்று கோடுகளாக அமைந்துள்ளன'' என்று.

असौ शंभोर्लीलावपुरिति भृशं सुन्दर इति
द्वयं सम्पत्येतज्जनमनसि सिद्धं च सुगमम् ।
यदन्तः पश्यन्तः करणमदसीयं निरुपमं
तृणीकुर्वन्त्येते सुषममपि कामं सुमतयः ॥ ५९

இவர் சங்கரருடைய லீலாசரீரம் (தன்னுடைய லீலைகளைக் காட்டுவதற்குப் பெற்ற உடல்) என்றும் மிகவும் அழகியவர் என்றும் இரண்டு விஷயங்கள் ஜனங்களுடைய மனதில் புகுந்தன. எளிதில் அறிந்துகொள்ளக் கூடியவையாகவும் ஆயின. ஏனெனில், நிகரற்றதான அவருடைய சரீரத்தை மனதில் தியானம் செய்கின்ற புத்திமான்கள் சுந்தரனுகிய மன்மதனைக்கூட புல்லாக மதிக்கின்றனர். (காமனை வென்ற சங்கரனுடைய அவதாரமான அவருடைய உருவத்தை உள்ளத்தில் உட்கொண்டவருக்கு மன்மதனுடைய உருவம் உவப்பை ஊன்றுமா?)

अज्ञानान्तर्गहनपतितानात्मविद्योपदेशै -
स्त्रातुं लोकान्भवदवशिखातापपापच्यमानान् ।
मुक्त्वा मौनं वटविटपिनो मुलतो निष्पतन्ती
शम्भोर्मूर्तिश्चरति भुवने शङ्कराचार्यरूपा ॥ ६०

அஞ்ஞானமாகியவன் காட்டில் அகப்பட்டு ஸம்ஸாரமாகிய காட்டுத்தீயின் ஜ்வாலையினுல் எரிக்கப்பட்ட உலகங்களை ஆத்மஞானத்தைப் புகட்டும் புத்திமதிகளால் காப்பாற்றுவதற்காக, மௌனவிரதத்தையகற்றி, ஆலமரத்தினடியிலிருந்து அசைந்து, விரைவில் கிளம்பிய சம்புவின் வடிவம் சங்கராசாரியர் என்ற உருவமாக உலகில் உலாவுகின்றது.

उच्चण्डाहितवावदूककुहनापाण्डित्यवैतण्डिकं
जाते देशिकशेखरे पदजुषां सन्तापचिन्तापहे ।
कातर्यं हृदि भूयसाऽकृत पदं वैभाषिकादेः कथा-
चातुर्यं कलुषात्मनो लयमगाद्वैशेषिकादेरपि ॥ ६१

மிக்க சினங்கொண்டவர்களும், நன்னெறிக்கு எதிரிகளுமாகிய வாதிகளுடைய கொடிய கொள்கைகளை கற்பிப்பதிலுள்ள திறமையை ஒழிக்க வன்மையுள்ளவரும், தன்னுடைய பாதங்களை பஜித்தவர்களுடைய தாபங்களையும், கவலைகளையும் அறுக்கின்றவருமாகிய பரமாசாரியராகிய அவர் தோன்றியபொழுது, வைபாஷிகன், ஸௌத்திராந்திகன், யோகாசாரன், மாத்தியமிகன், ஜைனன், சார்வாகன் என்பவர்களுடைய மனதில் அதிகமான அச்சம் இடம் பெற்றது. கவலையுற்ற வைசேஷிகன், சாங்கியன், மீமாம்சகன், பாதஞ்சலன், நையாயிகன் முதலியவர்களுடைய திறமை அறவே அறுந்தது.

अमुना क्रतवः प्रसाधिताः क्रतुविभ्रंशकरः स शङ्करः ।
इयमेव भिदाऽनयोर्जितस्मरयोः सर्वविदोर्बुधेड्यचयोः ॥ ६२

இவரால் வேள்விகள் நிலைநிறுத்தப்பட்டன. (தர்மமார்க்கத்தை உபதேசம் செய்து, ஆஸ்திகமதத்தின் பாதுகாப்பளிக்கப்பட்டது). அந்த சங்கரரோவெனில் வேள்விக்கு நாசத்தை விளைவித்தார். (தக்ஷயாகத்தை யழித்தார்). காமனையெரித்தவரும் (காமவிகாரத்தையகற்றியவரும்) எல்லாமறிந்தவர்களும், தேவர்களால் துதிக்கப்பட்டவரும், (வித்வான்களால் துதிக்கப்பட்டவரும்) ஆகிய இருவர்களுக்கும் மேற்கூறிய வித்யாசம் ஒன்றுதான்.

(नहि निन्दा निन्द्यं निन्दितुं प्रवृत्ता, परन्तु स्तुत्यं स्तोतुम् என்று நியாயம். ஒருவரை குறைத்துக் கூறுதல், புகழவேண்டிய பிரகிருதத்தைப் புகழ்வதற்கேயன்றி, அதனைக் குறை கூறுவதைக் கருத்தாகக் கொண்டதல்ல என்ற விஷயம் இங்கு அறியத்தக்கது.)

कलयाऽपि तुलानुकारिणं कलयामो न वयं जगत्त्रये ।
विदुषां स्वसमो यदि स्वयं भविता नेति वदन्ति तत्र के ॥ ६३

மூன்று உலகங்களிலுமுள்ள வித்வான்களில், ஒரு அம்சத்திலும் இவருக்கு நிகராக இருப்பவனொருவனைக்கூட யாம் அறியவில்லை. ஆனால் தனக்குத்தானே நிகரானவர் என்று கூறுவதாயின் அதை யார் மறுப்பார்?

(இராம-ராவணர்களுடைய போர் இராம-ராவணர்களுடைய போர் போன்றது என்பது போல். இது அனன்வயம் என்ற அலங்காரம்.)

द्युवनान्त इवामरद्रुमा अमरद्रुष्विव पुष्पसञ्चयाः ।
भ्रमरा इव पुष्पसञ्चयेष्वतिसंख्याः किल शङ्करे गुणाः ॥ ६४

தேவலோகத்தின் நடுவில் கற்பகவிருக்ஷங்கள் போலவும், அந்த கற்பக விருக்ஷங்களில் பூக்களின் குவியல்போலவும், பூக்குவியல்களில் எண்ணிக்கையில்லா வண்டுகள்போலவும், சங்கரருடைய குணங்கள் கணிக்கப்பட்டன. (ஒன்றைத் தொட்டுவிட்டுக் கூறுதல் ஏகாவளி என்ற அலங்காரம்.)

कामं वस्तुविचारतोऽच्छिनदयं पारुष्यहिंसाक्रुधः
क्षान्त्या दैन्यपरिग्रहानृतकथालोभांस्तु सन्तोषतः ।
मात्सर्यं त्वनसूयया मदमहामानौ चिरं भावित-
स्वान्योत्कर्षगुणेन तृप्तिगुणतस्तृष्णां पिशाचीमपि ॥ ६५

இவர், விஷயவிருப்பத்தை, அப்பொருள்களின் குறையை (புரிந்து கொண்டு) புறக்கணித்தார். அவ்வாறே கடுஞ்சொல், பிறருக்குத் துன்பம் கொடுத்தல், சினம், என்பவைகளை பொறுமையினுல் பரிகரித்தார். விரும்பிய பொருள் கிட்டாவிடின் மனக்குறை; கிட்டியது அகன்ருல் பரிதாபம்; பொருள்களைச் சேமித்தலில் ஆசை, பொய் பேசுதல், பிறருடைய பொருளில் விருப்பம், தக்கவிடத்தில் தானம் செய்யாமை என்பவைகளை சந்தோஷத்தினுல் நாசம் செய்தார். (अनसूयया) அழுக்காருமையினுல் பிறரிடம் பகையையும் விலக்கினுர். தன்னைக்காட்டிலும், பிறனுடைய மேன்மையை நீண்டகால யோசனையினுலறிந்து, அபிமானத்தையும் கர்வத்தையும் தடுத்தார். சந்தோஷத்தினுல் பேராசையாகிய பிசாசை நாசம் செய்தார்.

कामं यस्तु समूलघातमवधीत्स्वर्गापवर्गापहं
रोषं यः खलु चूर्णपेषमपिषन्निःशेषदोषावहम् ।
लोभादीनपि यः परांस्तृणसमुच्छेदं समुच्चिच्छिदे
स्वस्यान्तेवसतां सतां स भगवत्पादः कथं वर्ण्यते ॥ ६६

சுவர்க்கத்திற்கு தடையும், முத்திக்கு முட்டுக்கட்டையுமானது காமம்; மற்ற தோஷங்களனைவற்றையும் வளர்க்கின்றது வெகுளி; அப்படிப்பட்ட குறைகள் தன்னை அடைந்த சாதுக்களான சீடர்களுக்குக்கூட பாதிக்காமலிருக்கும்படி வேருடன் அறுத்து புற்போல் பிடுங்கி எறிந்தார் என்ருல் அத்தகைய பகவத்பாதரை எவ்வாறு வர்ணிக்கமுடியும்?

திக்கஜங்களுடைய சம்பாஷணையாக அந்த சங்கரருடைய கீர்த்தியை கீர்த்தனம் செய்கிருர் :-

केऽमी कान्त दिवा निशाकरकरा घर्मस्य मर्मच्छिदो
मुग्धे शम्भुनवावतारसुगुरोरेते गुणानां गणाः ।
कस्मादुत्पलसन्ततिर्विकसिता विस्मेरदिग्योषिता -
मेषाऽपाङ्गझरीति दिग्गजवधूप्रश्नोत्तरे रेजतुः ॥ ६७

பெண்யானை வினவிற்று:- காந்தா! கோடைகாலத்துக் கதிரவனுடைய கிரணங்களைக்கூட வெல்லுகின்ற இந்த சந்திரகிரணங்கள் பகலில் யாவை? (சந்திரகிரணங்களா அல்லது வேறு பொருள்களா?)

ஆண்யானை விடையளித்தது:- மூடமே, இது சந்திரகிரணங்களல்ல. பரமசிவனுடைய புதிய அவதாரமாகிய சங்கரருடைய குணங்களின் குவியல்கள்.

பெண்யானை:- ஆனுல் இப்பொழுது உற்பலமலர்கள் ஏன் மலர்ந்துள்ளன? (சந்திரகிரணமுள்ளபொழுதல்லவா அவை மலரும்.)

ஆண்யானே:- உற்பலப்பூக்களல்ல இவை. சங்கரருடைய குணங்களைக் கண்டு வியப்புற்ற திசைகளாகிய மங்கையர்களின் கடைக்கண்பார்வைகளின் பரப்பு என்று இவ்வாறு திக்கஜதம்பதிகளுடைய சம்பாஷணை சோபித்தது.

नाक्ष्णा माक्षिकमीक्षितं क्षणमपि द्राक्षा मुहुः शिक्षिता
क्षीरेक्षू समुपेक्षितौ भुवि यया सा शङ्करश्रीगुरोः ।
कान्तानन्तदिगन्तलङ्घनकलाजङ्घालतत्तद्गुण -
श्रेणी निर्भरमाधुरीमदधुरा धन्येति मन्यामहे ॥ ௬௮

அநேக திசைகளின் எல்லைகளில் மிக விரைவாகப் பரவி, அந்த திசைகளையெல்லாம் அழகியதும், பரிமளவாசனையுள்ளதுமாகச் செய்த குணங்களின் கூட்டம், இனிப்புச்சுவையின் மிகுதியால் மதங்கொண்டுள்ளது. மேலும், அந்த குணங்களின் கூட்டமிருப்பதினால், ஜனங்கள் இனிய தேனைக்கண்களால் கணநேரம்கூட பார்க்கவேயில்லை. திராக்ஷையை ''இங்கு நீ இருக்க வேண்டாம். அவ்வாறு உனக்கு இருக்கவிருப்பமிருக்குமாயின் நீ சங்கரருடைய குணங்களிடத்திலிருந்து சுவையைப் பெற்றுக்கொள்'' என்று கண்டித்தனர். பால், கரும்பு இவைகளை உதாசீனம் செய்தனர். ஆகையால் அந்த குணக்கூட்டம் மிகவும் பாக்கியமுள்ளது என்று நினைக்கின்றோம்.

क्षान्तिश्चेद्वसुधा जहातु महतीं सर्वसहत्वप्रथां
विद्याश्चेद्विरहन्तु षण्मुखमुखाः स्वाखर्गगर्वावलीम् ।
वैराग्यं यदि बादरायणि यशःकार्श्यं परं गाहतां
किं जल्पैर्मुनिशेखरस्य न तुलां कुत्रापि मन्यामहे ॥ ௬௯

பொறுமையை கூறுகையில், பூமிதேவி, எல்லாவற்றையும் பொறுத்துக்கொள்ளும் தன்மையினால் தனக்கு உண்டான புகழை இழக்க வேண்டும். கல்வியை கவனித்தால், கந்தக்கடவுள் முதலானவர்களும், கர்வத்தை கைவிட்டுவிட வேண்டும். வைராக்கியத்தை வர்ணிக்கையில், வியாசமுனிவருடைய புதல்வன் குறைகொள்ளவேண்டும். ஏறச்சொல்வானேன். முனிகுலங்களுக்கு மகுடமாகிய அவருக்கு நிகராக ஒன்றையும் ஓரிடத்திலும் யாம் காணோம்.

या मूर्तिः क्षमया मुनीश्वरीमयी गोत्रासगोत्रायते
विद्याभिर्निरवद्यकीर्तिभिरलं भाषाविभाषयते ।
भक्ताभीप्सितकल्पनेन नितरां कल्पादिकल्पायते
कस्तां नान्यपृथग्जनैस्तुलयितुं मन्दाक्षमन्दायते ॥ ௭௦

சிறந்த முனிவருடைய உருவம்பெற்ற எந்த மூர்த்தி, பொறுமை விஷயத்தில் பூமிக்குச் சமமாகவும், மாசற்ற கீர்த்தியைச் சொரிகின்ற கல்விகளால் ஸரஸ்வதியோ என சந்தேகத்தை கொடுக்கின்றதாகவும், பக்தர்களுக்கு பிரியமான பொருள்களைப் பொழிவதில் கற்பகம் என்று கற்பனை செய்து கூறத்தக்கதாகவும் விளங்குகிறதோ, அத்தகைய மூர்த்தியை பாமர ஜனங்களுக்கு சமமாக கூறுவதில் எவர்கள் தான் வெட்கமடையமாட்டார்கள்?

न बभूव पुरातनेषु तत्सदृशो नाद्यतनेषु दृश्यते ।
भविता किमनागतेषु वा न सुमेरोः सदृशो यथा गिरिः ॥ ७१

சுமேருமலேக்கு நிகரான மலே எவ்வாறு இல்லேயோ, அதுபோன்று அவருக்கு சமமானவர் முன்காலங்களிலும் இருக்கவில்லே. இக்காலத்தில் உள்ளவர்களிலும் சமமாக ஒருவரும் காணப்படவில்லே. வருங்காலத்திலும் ஏற்படப்போவதில்லே.

समशोभत तेन तत्कुलं स च शीलेन परं व्यरोचत ।
अपि शीलमदीपि विद्यया ह्यपि विद्या विनयेन दिद्युते ॥ ७२

அந்த சங்கரரால், அவருடைய குலமும், நல்ல சுபாவத்திஞல் அவரும், அவருடைய நல்ல சுபாவம் கல்வியிஞலும், அந்தக் கல்வி பணிவிஞலும் விளங்கிற்று.

सुयशःकुसुमोच्चयः श्रयद्विबुधालिर्गुणपल्लवोद्गमः ।
अवबोधफलः क्षमारसः सुरशाखीव रराज सूरिराट् ॥ ७३

அறிஞர்களுக்கு அரசஞகிய அவர் நல்ல கீர்த்தியாகிய மலர்கள் உள்ளவரும், தன்னே அடைகின்ற அறிஞர்களாகிய வண்டுகளே உடையவரும், நற்குணங்களாகிய தளிர் நிரம்பியவரும், அறிவாகிய பலனேகொண்டவரும், பொறுமையாகிய ரசம் நிரம்பியவருமாக இருந்ததால் கல்பகவிருக்ஷம்போன்று விளங்கிஞர்.

न च शेषभवी न कापिली गणिता काणभुजी न गीरपि ।
फणितिष्वितरासु का कथा कविराजो गिरि चातुरीजुषि ॥ ७४

கவிகளுக்கு அரசஞகிய அவருடைய திறமை வாய்ந்த சொல், சுவைக்கப்பட்டபொழுது பதஞ்சலியின் சொல் கவனிக்கப்படவில்லே. கௌதமருடைய சொல் கௌரவிக்கப்படவில்லே. அப்படியிருக்க நாஸ்திகர்களான மற்றவர்களுடைய சொல்லேப்பற்றிக் கூறவேண்டுமா?

भट्टभास्करविमर्ददुर्दशामज्ञदागमशिरः करग्रहा ।
हन्त शङ्करगुरोर्गिरः क्षरन्त्यक्षरं किमपि तद्रसायनम् ॥ ७५

பட்டபாஸ்கரர் என்பவரால் ஏற்பட்ட குழப்பத்திஞல் வேதங்களுக்கு ஆபத்து ஏற்படுகையில் அதை நாசம் செய்த சங்கரருடைய வசனத்திலிருந்து வர்ணிக்கமுடியாத ஒரு ரசாயனம் உதயமாயிற்று. ஆச்சரியம்!

जाटाटङ्कजटाकुटीरविहरन्नैलिम्पकल्लोलिनी -
क्षोणीशप्रियकृन्नवावतरणावष्टम्भगुम्फच्छिदः ।
गर्जन्तोऽवतरन्ति शङ्करगुरुक्षोणीधरेन्द्रोदरा -
द्राणीनिर्झरिणीझराः क्व नु भयं दुर्भिक्षुदुर्भिक्षतः ॥ ७६

சிவபெருமானுடைய ஜடையாகிய குகையில் உல்லாசமாக விளேயாடிய பிறகு, பகீரதனுடைய விருப்பத்தைப் பூர்த்திசெய்வதற்காக கீழேவிழுந்த

தேவகங்கையின் செருக்கைக் குறைக்கின்றவைகளான, வாக்விலாஸத்தின் பிரவாஹங்கள், ஸ்ரீ சங்கராசாரியராகிய மலையின் குகையிலிருந்து கர்ஜித்துப் பெருகுகையில், துஷ்டர்களாகிய (நாஸ்திகர்கள்) பஞ்சத்திலிருந்து பயம் யாது?

वारी चित्तमतङ्गजस्य नगरी बोधात्मनो भूपते -
दूरीभूतदुरन्तदुर्वदझरी हारीकृता सूरिभिः ।
चिन्तासन्ततितूलवातलहरी वेदोल्लसचातुरी
संसाराब्धितरीरुदेति भगवत्पादीयवाग्वैखरी ॥ ௭௭

ஸ்ரீ பகவத்பாதருடைய வாக்காகிய ஸரஸ்வதி, மனமாகிய மதயானையை அடக்குகின்ற கட்டுக்கயிறு; ஞானமாகிய அரசன் அமரத்தக்க நகரம்; எல்லையில்லா துஷ்டவாதங்களாகிய அழுக்குகளை அகற்றும் தண்ணீர்ப் பெருக்கு; அறிஞர்களால் கழுத்தில் அணியப்பெற்ற முத்துமாலை; கவலைக் கூட்டங்களைப் பறக்கடிக்கின்ற புயல்; மறைகளால் விளங்குகின்ற மகிமை உள்ளது; சம்சார சமுத்திரத்தைத் தாண்டுவதற்குரிய தோணி.

कथादर्पोत्सर्पत्कथकबुधकण्डूलरसना -
सनालाधःपाते स्वयमुदयमन्त्रो व्रतिपतेः ।
निगुम्फः सूक्तीनां निगमशिखराम्भोजसुरभिः
जयत्यद्वैतश्रीजयबिरुदघण्टाघणघणः ॥ ௭௮

விரதங்களைக் காப்பாற்றுபவர்களில் சிறந்தவரான ஸ்ரீ சங்கரருடைய திவ்யவசனங்களின் தொகுதி, பேச்சில் செருக்குக்கொண்டு பேச முயலுகின்றவர்களுடைய நாவை வேருடன் அறுப்பதற்குரிய மந்திரமாகவும் (வாக்ஸ்தம்பனம் செய்கின்ற 36 வர்ணங்களுள்ள பகளா என்ற மந்திரம்) வேதங்களின் தலைகளாகிய (உபநிஷத்துக்கள்) தாமரை மலரின் பரிமளவாசனையாகவும், அத்வைத லக்ஷ்மியினுடைய வெற்றி விருதை தெரிவிக்கின்ற ஜயகண்டையினுடைய ''கண கண'' என்ற ஓசையாகவும் விளங்குகிறது.

कस्तूरीघनसारसौरभपरीरंभप्रियंभावुका -
स्तापोन्मेषमुषो निशाकरकराहंकारकूलंकषाः ।
द्राक्षामाक्षिकशर्करामधुरिमग्रामाविसंवादिनो
व्याहारा मुनिशेखरस्य न कथंकारं मुदं कुर्वते ॥ ௭௯

கஸ்தூரி, பச்சைக்கற்பூரம் இவைகளின் பரிமளவாசனையைப் பெறும்போது போல் சந்தோஷத்தை அளிப்பவைகளும், ஆத்யாத்மிகம், ஆதிதெய்விகம், ஆதிபௌதிகமாகிய உற்பாதங்கள் மூன்றையும் அகற்றுகின்றவைகளும், ஆகையினாலேயே வெளித்தாபத்தை மட்டும் நீக்குகின்ற நிலாவின் கர்வத்தை அழிப்பவைகளும், திராக்ஷை, தேன், சர்க்கரை என்பவைகளுக்குச் சமமான சுவையுள்ளவைகளும் ஆகிய மாமுனிவருடைய சொற்கள் ஆனந்தத்தை அளிக்காமலிருக்குமா?

अद्वैते परिमुक्तकण्टकपथे कैवल्यघण्टापथे
स्वाहंपूर्वकदुर्विकल्परहितप्राज्ञाध्वनीनाकुले ।
प्रस्कन्दन्मकरन्दवृन्दकुसुमस्रक्तोरणप्रक्रिया -
माचार्यस्य वितन्वते नवसुधासिक्ताः स्वयं सूक्तयः ॥ ८०

ஸ்வயமாக அமிருதரஸம் நிரம்பிய ஆசாரியரின் இனிய சொற்கள், (பேதவாதங்களாகிய) முட்கள் நிறைந்த வழியைக்காட்டிலும் வேறானதும், நான், என்னுடையது என்ற அபிமானமற்ற புத்திசாலிகளாகிய யாத்ரீகர்கள் சஞ்சாரம் செய்யத்தக்கதுமாகிய மோக்ஷத்தின் ராஜமார்க்கத்தில், தேன் ஒழுகுகின்ற புஷ்பத்தொகுதிகளாலமையும் தோரணங்களின் செயலாற்றுகின்றன.

दूरोत्सारितदुष्टपांसुपटलीदुर्नीतयोऽनीतयो
वाता देशिकवाङ्मयाः शुभगुणग्रामालया मालयाः ।
मुष्णन्ति श्रममुल्लसत्परिमलश्रीमेदुरा मे दुरा -
यासस्याऽऽधिहविर्भुजो भवमये धीप्रान्तरे प्रान्तरे ॥ ८१

துஷ்டர்களுடைய (நாஸ்திகர்களுடைய) கெட்ட நீதிகளாகிய தூசிகளின் கூட்டத்தை தூரத்தில் அகற்றுகிறவைகளும், ஈதிபாதைகளில்லாதவைகளும் (ஈதிபாதைகளை நாசம் செய்கின்றவைகளும்) குளிர்ச்சி, மந்தத்தன்மை = இலேசாக விருத்தல், நல்ல மணம் ஆகிய குணங்கள் உள்ளவைகளும், தூய்மை = ஐயமின்றி பொருள் விளக்கம் முதலிய குணங்கள் உள்ளவைகளும், மலயமலையிலிருந்து உண்டானவைகளும் (மாலயாः = இலக்குமியின் தங்குமிடங்களும்) பரிமளவாசனையாகிய செல்வம் நிறைந்தவைகளுமாகிய காற்றுக்கள், ஸம்ஸாரமாகிய காட்டில் புத்தியாகிய புதரில் மனோதுக்கங்களாகிய நெருப்பினால் தாபத்தை அடைந்த என்னுடைய துக்கத்தை தொலைக்கின்றன.

नृत्यन्त्या रसनाग्रसीमनि गिरां देव्याः किमङ्घ्रिक्वण-
न्मञ्जीरोर्जितसिञ्जितान्युत नितम्बालम्बिकाञ्चीरवाः ।
किं वल्गत्करपद्मकङ्कणझणत्कारा इति श्रीमतः
शङ्कामङ्कुरयन्ति शङ्करकवेः सद्युक्तयः सूक्तयः ॥ ८२

ஸ்ரீமானாகிய ஸ்ரீ சங்கரருடைய நல்ல யுக்திகள் விளங்கும் நற்சொற்கள், கேட்கின்றவர்களுக்கு இவ்வாறு சந்தேகங்களை விளைவிக்கின்றன. ''நாவின் நுனியில் நடனம் செய்கின்ற நாமகளுடைய கால்களில் அணிந்த சலங்கைகளின் இனிமையான ஓசைகளா, நடுவில் கட்டியிருக்கின்ற ஒட்டியாணத்தின் சலங்கை மணிகளுடைய ஒலிகளா, மலர்போன்ற கைகளால் மிக அழகைக் கொண்ட ரத்தின வளையங்களுடைய வன்மை உள்ள சப்தங்களா'' என்று விகல்பங்களை விளைவிக்கின்றன.

वर्षारम्भविजृम्भमाणजलमुग्गम्भीरघोषोपमो
वात्यातूर्णविघूर्णदर्णवपयःकल्लोलदर्पापहः ।
उन्मीलन्नवमल्लिकापरिमलाहंतानिहन्ता निरा- ८३
तङ्कः शङ्करयोगिदेशिकगिरां गुम्फः समुज्जृम्भते ॥

மழைக்காலத்து மேகமாலை போன்று முழங்குகின்றதும், புயலினால் புணரியில் புரண்ட அலைகளின் ஆரவாரத்தின் அகங்காரத்தை அபகரிக்கின்றதும், புதிதாக மலர்ந்த மல்லிகை மலர்களின் மணத்தை மாரணம் செய்கின்றதும், ஆதங்கத்தை அகற்றுகின்றதுமான சங்கரயோகீஸ்வரருடைய சொற்பொழிவின் முழக்கம் ஓங்குகின்றது.

हृद्या पद्यविनाकृता प्रशमिताविद्याऽमृषोद्या सुधा-
स्वाद्या माद्यदरातिचोद्यभिदुराऽभेद्या निषद्यायिता ।
विद्यानामनघोद्यमा सुचरिता साद्यापदुद्यापिनी
पद्या मुक्तिपदस्य साऽद्य मुनिवाङ्नुद्यादनाद्या रुजः ॥ ८४

அந்த முனிவருடைய வாக்கு, செய்யுட்களில்லாவிடினும், செவ்வியதாக விருக்கின்றது; அவித்தையை அடக்குகின்றது; பொய்யான பொருளில்லாதது; அமிருதத்தைக்காட்டிலும் சுவையுள்ளது; மதம் பிடித்த வாதிகளின் வாதங்களைப் பிளக்கின்றது; மற்றவர்களால் பிளக்கத்தகாதது; எல்லா கல்விகளும் கிட்டுமிடமான கடைத்தெருவாக விளங்குகின்றது; வீண் முயற்சியற்றது; நல்ல செயல் கொண்டது; தோன்றும் அல்லல்களை அறவே அறுக்கின்றது; முத்திக்கு மார்க்கம். அத்தகைய வாக்கு, இப்போது எம்முடைய அனாதிகாலமாகவுள்ள அவித்தையையும் அதனாலுண்டாகும் துன்பங்களையும் நீக்குமாக!

आयासस्य नवाङ्कुरं घनमनस्तापस्य बीजं निजं
क्लेशानामपि पूर्वरङ्गमलघुप्रस्तावनाडिण्डिमम् ।
दोषाणामनृतस्य कार्मणमसच्चिन्ताततेर्निष्कुटं
देहादौ मुनिशेखरोक्तिरतुलाऽहंकारमुत्कृन्तति ॥ ८५

தேகம் முதலிய அநாத்மவஸ்துக்களில் 'நான்' என்ற அபிமானம் அல்லலுக்கு புதுமுளை. அடர்ந்த மனோவியாதிக்கு முக்கியமான மூலகாரணம் கஷ்டங்களாகிய நடிகர்களும், நடிகைகளும் நாடகமாடும் மேடை. அவைகள் பயனை விளைவித்தல் ஆகிய நாடகத் துவக்கத்திற்கு அறிகுறியான டிண்டிமம் என்ற வாத்தியத்தினுடைய ஒலிமுழக்கம் பொய்க்கு முதற்காரணம். கெட்ட கவலைகளின் கும்பலுக்கு இருப்பிடம். நிகரற்ற நாசகாரணம். அத்தகைய அகங்காரத்தை, ஆத்மஸ்வரூபத்தையே மனனம் செய்யும் சுபாவமுள்ள முனிசிரோமணியான ஸ்ரீ சங்கரருடைய சொல் அறுக்கின்றது.

तथागतपथाहतक्षपणकप्रथालक्षणप्रतारणहतानुवर्त्यखिलजीवसञ्जीवनी ।
हरत्यतिदुरत्ययं भवभयं गुरूक्तिर्नृणामनाधुनिकभारतीजरठशुक्तिमुक्तामणिः ॥ ८६

பௌத்தர்களுடைய வழியில் சென்றதால் அடிக்கப்பட்டவர்களும், வைநாசிகர்களுடைய பிரசித்தியான ஏமாற்றுவசனங்களால் அழிவுபெற்றவர்களும், அதனை பின்பற்றுவதால் முக்திமார்க்கத்திற்கு தகுதியில்லாதவர்களுமான ஜனங்களை உய்விக்கின்ற ஆசிரியருடைய சொல் கடூரமான ஸம்சார தாபத்தை அபகரிக்கின்றது. மேலும் அது அநாதிகாலமாகவுள்ள சிப்பியிலிருந்து வெளியே தோன்றிய முத்தாக இருக்கின்றமையால் முக்தியை அளிப்பதில் ஐயமில்லை.

झंझामारुतवेल्लितामरधुनीकल्लोलकोलाहल -
प्राग्भारैकसगर्भ्यनिर्भरजरीजृम्भद्वचोनिर्झराः ।
नैकालीकमतालिधूलिपटलीमर्मच्छिदः सद्गुरो -
रुद्यद्दुर्मतिघर्मदुर्मतिकृताशान्तिं निकृन्तन्ति नः ॥ ८७

புயலடித்துப் பரவுகின்ற கங்கையின் அலைத்திரளின் பேராரவாரத்திற்கு ஒப்பாக தடையின்றி வெளியே கிளம்பிய அந்த வாக்விலாசமாகிய வெள்ளம் பற்பல மதங்களில் கூறியுள்ள கெட்ட கொள்கையாகிய தூசிக்கூட்டத்தை மூழ்கச் செய்து, கெட்ட புத்தியினுலுண்டாகும் மனதின் தாபத்தைத் தணிக்கின்றது.

उन्मीलन्नवमल्लिसौरभपरीरम्भप्रियंभावुकाः
मन्दारद्रुमरन्दबृन्दविलुठन्माधुर्यधुर्या गिरः ।
उद्गीर्णा गुरुणा विपारकरुणावाराकरेणाऽऽदरात्
सचेतो रमयन्ति हन्त मदयन्त्यामोदयन्ति द्रुतम् ॥ ८८

எல்லைகடந்த கருணைக்கடலாகிய குருவினுல் கூறப்படுகின்ற சொற்கள், அன்றலர்ந்த மல்லிமலரின் பரிமளவாசனையைப் பெற்றுக்கொள்வதிலுள்ள பிரியத்தைச் சுரக்கின்றவையும், மந்தாரமரத்தின் மகரந்தத்தேன்பொழிவை காட்டிலும் சுவை ததும்புகின்றவையுமாக பரவுகின்றன. அவை சாதுக்களுடைய மனதைக் கவருகின்றன. ஆச்சரியம்! மற்ற பொருள்களை மறக்கும் படியும் விரைவில் அளவற்ற ஆனந்தத்தை அடையும்படியும் செய்கின்றன.

धारावाहिसुखानुभूतिमुनिवाग्धरासुधाराशिषु
क्रीडन्द्वैतिवचःसु कः पुनरनुक्रीडेत मूढेतरः ।
चित्रं काञ्चनमम्बरं परिदधच्चित्ते विधत्ते मुहुः
कच्चित्कचरदुष्पटचरजरत्कन्थानुबद्धादरम् ॥ ८९

(காற்றில்லாதவிடத்தில் அசைவின்றி ஜ்வலிக்கும் தீபஜ்வாலைபோன்றும், பாத்திரத்திலிருந்து தாரையாக விழுகின்ற தேன்போன்றும்) ஒரே நிலையான பேரானந்தத்தொடர்ச்சியைத் தோற்றுவிக்கின்ற அந்த முனிவருடைய சொற்பொழிவாகிய அமிருதக்கடலில் விளையாடுகின்ற புத்திமானுகிய எவன் தான், அச்சத்திற்கும், துன்பத்திற்கும் காரணமாகிய வேற்றுமை புத்தியை புகட்டுகின்ற வசனங்களில் விருப்பம் கொள்ளுவான். அரும்பொன்னுடை அணிந்தவனுடைய மனம் அழுக்குப்படிந்ததும் வெறுப்பைத் தருகின்றதுமாகிய கந்தலை கட்டிக்கொள்ள விரும்புமா?

तत्तादृक्षमुनिक्षपाकरवचः शिक्षासपक्षाशयः
क्षारं क्षीरमुदीक्षते बुधजनो न क्षौद्रमाकांक्षति ।
रूक्षां क्षेपयति क्षितौ खलु सितां नेक्षुं क्षणं प्रेक्षते
द्राक्षां नापि दिदृक्षते न कदलीं क्षुद्रां जिघृक्षत्यलम् ॥ ९०

சந்திரன்போன்று சந்தோஷத்தைத் தருகின்ற அத்தகைய முனிவருடைய வசனங்களை அப்பியாசம் செய்வதனுல் அத்வைதசுகத்தில் ஈடுபட்ட மனமுள்ள

புத்திமான், பால் உவர்ப்பு என்று உணர்கின்ருன். தேன் தெவிட்டுகிறதில்லே. கற்கண்டைக் கையிலெடுத்து கசப்பு என்று கூறி கீழே எறிகிருன். கரும்பைக் கணநேரம் கூட கண்ணுறுகிறதில்லே. இன்றளவு திராக்ஷையைத் தேடுகிறதில்லே. விருபாக்ஷி வகையான வாழைப்பழத்தை விரும்புகிறதேயில்லே.

विक्रीता मधुना निजा मधुरता दत्ता मुदा द्राक्षया
क्षीरैः पात्रधियाऽर्पिता युधि जिताल्लब्धा बलादिक्षुतः ।
न्यस्ता चोरभयेन हन्त सुधया यस्मादतस्तद्गिरां
माधुर्यस्य समृद्धिरद्भुततरा नान्यत्र सा वीक्ष्यते ॥ ९१

தேன் தன்னுடைய சுவையை அவருக்கு விற்றுவிட்டது. திராக்ஷ சந்தோஷமாக தன் செல்வத்தை அவருக்குத் தானமளித்தது. இவர்தான் தக்க பாத்திரம் என்று பால்களெல்லாம் ஒன்றுசேர்ந்து தம்முடைய நற்சுவையாகிய பணத்தை அர்ப்பணம் செய்தன. அந்தோ! போரில் வென்று, கரும்பின் சுவையை பலாத்காரமாகப் பறித்துக்கொண்டது அவருடைய வசனம். ஆச்சரியம்! திருடர்கள் திருடிவிடுவார்கள் என்று பயந்து அமிர்தம் தன்னுடைய தனத்தை அவரிடம் ஒப்படைத்தது. ஆகையால், இனிப்புச்சுவையின் மிகுதி அவருடைய சொல்லிலல்லாமல் வேறு ஓரிடத்திலும் காணப்படுகிறதில்லே.

कर्पूरेण ऋणीकृतं मृगमदेनाधीत्य सम्पादितं
मल्लीभिश्चिरसेवनादुपगतं क्रीतं तु काश्मीरजैः ।
प्राप्तं चौरतया पटीरतरुणा यत्सौरभं तद्गिरा-
मक्षय्यं महि तस्य तस्य महिमा धन्योऽयमन्यादृशः ॥ ९२

அவருடைய சொற்களின் பரிமளமணம் கற்பூரத்திஞல் கடனுகப் பெற்றுக்கொள்ளப்பட்டது. கஸ்தூரி அவரிடமிருந்து கற்றுக்கொண்டு வாசனே அடைந்தது. மல்லிமலர்கள் வெகுகாலம் சேவை செய்து வாசனே சேமித்துக்கொண்டது. காஷ்மீரத்தில் பிறந்த கோரோசனம், குங்குமப்பூ தங்கள் நறுமணத்தை விலேக்கு வாங்கிக்கொண்டன. சந்தனமோவெனில் சோரத்தனமாக (திருடி) தயாரித்துக்கொண்டது. அத்தகைய சொற்களில் மாகாத்மியம் குறையற்றது. அவைகளுக்குத் தங்குமிடமாகிய சங்கரர் நிகரற்ற பாக்கியநிதியன்ருே!

अप्सां द्रप्सं सुलिप्सं चिरतरमचरं क्षीरमद्राक्षमिक्षुं
साक्षाद्द्राक्षामचक्षं मधुरसमधयं प्रागविन्दं मरन्दम् ।
मोचामाचाममन्यो मधुरिमगिरमा शङ्कराचार्यवाचा -
माचान्तो हन्त किं तैरलमपि सुधासारसीसारसीम्ना ॥ ९३

சுவையுள்ள திரவப்பொருளே சாப்பிட்டுள்ளேன். வெகுகாலம் பாலேக் குடித்திருக்கிறேன். கரும்பைக் கண்டுள்ளேன். திராக்ஷையைத் தாஞகவே சுவைத்திருக்கிறேன். தேனேயுமருந்தினேன். முன்காலம் மகரந்த ரசத்தையும் குடித்திருக்கிறேன். வாழைப்பழத்தையும் புசித்தேன். சங்கராசாரியாருடைய சொற்களின் சுவையும் என்ஞல் சுவைக்கப்பட்டது. ஆச்சரியம்!

அவைகளைப்பற்றிக் கூறுவானேன். அமிருதத்தின் மதுரரஸத்தின் மிகுதிகூட உபயோகமற்றது.

संतप्तानां भवदवथुभिः स्फारकर्पूरवृष्टिः
मुक्तायष्टिः प्रकृतिविमला मोक्षलक्ष्मीमृगाक्ष्याः ।
अद्वैतात्मानवधिकसुखासारकासारहंसी
बुद्धेः शुद्ध्यै भवतु भगवत्पाददिव्योक्तिधारा ॥ ९४

ஸம்ஸாரதாபங்களால் வருந்தியவர்களுக்கு கற்பூரப்பொடியின் பரவுதலும், முக்தியாகிய அணங்கிற்கு அணியான முத்துமாலையும், உண்மையாக ஆத்மதத்துவத்தை உணர்வதாலுண்டாகும் ஆனந்தத்தண்ணீர் நிறைந்த தாமரைக்குளத்தில் விளையாடும் அன்னப்பறவையுமாகிய பகவத்பாதாளுடைய சிறந்த சொற்பொழிவு புத்திக்கு சுத்தியை விளைவிக்குமாக.

आम्नायान्तालवला विमलतरसुरेशादिसूक्ताम्बुसिक्ता
कैवल्याशापलाशा विबुधजनमनःसालजालाधिरूढा ।
तत्वज्ञानप्रसूना स्फुरदमृतफला सेवनीया द्विजैर्या
सा मे सोमावतंसावतरगुरुवचोवल्लिरस्तु प्रशस्त्यै ॥ ९५

சந்திரக்கலையை தலையிலணிந்த சிவபெருமானுடைய அவதாரமாகிய பரமாசாரியருடைய வாக்காகிய கொடி, உபநிஷதங்களாகிய பாத்தியில் வளர்ந்து, பரிசுத்தர்களான சுரேச்ஸ்வரர் முதலானவர்களுடைய வசனங்களாகிய தண்ணீர் பாய்ச்சப்பெற்று, மோக்ஷத்தில் விருப்பமாகிய இலைகள் தழைத்து, வித்வான்களுடைய மனமாகிய தேக்குமரமென்ற படர்கொழுகொம்பில் படர்ந்து, தத்துவஞானம் ஆகிய பூ மலர்ந்து, மோக்ஷமாகிய பழம் கனிந்து, பிராம்மணர்களாலும் (பறவைகளாலும்) சேவிக்கப்படுகிறது. அந்தக்கொடி எனக்கு புகழை அளிக்குமாக.

नृत्यद्भूतेशवल्गन्मुकुटतटरटत्स्वर्धुनीस्पर्धिनीभि -
र्वाग्भिर्न्निर्भिन्नकूलोचलदमृतसरःसारिणीधोरणीभिः ।
उद्वेलदद्वैतवादिस्वमतपरिणताहंक्रियाहुंक्रियाभि -
र्भाति श्रीशङ्करार्यः सततमुपनिषद्वाहिनीगाहिनीभिः ॥ ९६

நடனம் செய்கின்ற சிவபெருமானுடைய ஜடையில் கர்ஜனம் செய்கின்ற கங்கையுடன் போர் செய்கின்றவைகளும், கரைகளை உடைத்துப் பெருகுகின்ற அமிருதநதியின் பிரவாகத்திற்குச் சமானமானவைகளும் வேதமார்க்கத்தை மீறி வாதிக்கின்றவர்களுடைய கர்வத்தையடக்குவதற்கு ஹுங்காரம்செய்கின்றவைகளும், உபநிஷத்துக்களின் கருத்துக்களை விளக்குகின்றவைகளுமான வாக்குகளால் ஸ்ரீசங்கரராகிய மகான் விளங்குகின்றார்.

साहङ्कारसुरासुरावलिकराकृष्टभ्रमन्मन्दर-
क्षुब्धक्षीरपयोब्धिवीचिसचिवैः सूक्तैः सुधावर्षणात् ।
जङ्गालैर्भवदावपावकशिखाजालैर्जटालात्मनां
जन्तूनां जलदः कथं स्तुतिगिरां वैदेशिको देशिकः ॥ ९७

மிக உற்சாகத்துடன் தேவர்களும், அசுரர்களும் மந்தரமலையை இட்டு கடைந்த பாற்கடலின் அலைகளுக்கு நிகரான நல்ல உபதேசங்களால் அமிருதத்தைப் பொழிவதனுல் தாபத்திரயங்களான காட்டுத்தீயின் சுடர்கள் விரைவாகப் பரவியதினுல் வெப்பமுற்றுத் தவிக்கின்ற பிராணிகளுக்கு கார்மேகமாகத் தோன்றிய ஆசிரியரை எவ்வாறு நாம் துதிக்கமுடியும்?

कलशाब्धिकचाकचिक्षमं क्षणदाधीशगदागदिप्रियम् ।
रजताद्रिभुजाभुजिक्रियं चतुरं तस्य यशः स्म राजते ॥ ९८

அவருடைய வன்மையுள்ள கீர்த்தி, பாற்கடலுடன், கூந்தலைப் பிடித்து போர்புரியும் தன்மை உள்ளதாகவும், சந்திரனுடன் கதாயுத்தம் செய்து வெற்றியடைந்ததாகவும், கைலாசமலையுடன் கைகலந்து கலகம் செய்ய வல்லமையுள்ளதாகவும் பிரகாசித்தது.

परिशुद्धकथासु निर्जितो यशसा तस्य कृताङ्कनः शशी ।
स्वकलङ्कनिवृत्तयेऽधुनाऽप्युदधौ मज्जति सेवते शिवम् ॥ ९९

சந்திரன் பரிசுத்தமானவனு, சங்கரருடைய கீர்த்திதான் பரிசுத்தமானதா, என்ற வாதம் ஏற்படுகையில், பரீக்ஷை நடந்து, அதில் சங்கரனுடைய கீர்த்தி வென்றது. ஆகையால் சந்திரன் தன்னுடைய மாசை நீக்கிக்கொள்வதின் பொருட்டு, சமுத்திரத்தில் ஸ்நானம் செய்து சங்கரனை சேவிக்கிருன்.

धम्मिल्ले नवमल्लिवल्लिकुसुमस्रक्कल्पनाशिल्पिनो
भद्रश्रीरसचित्रचित्रितकृतः कान्ते ललाटान्तरे ।
तारावल्यनुहारिहारलतिकानिर्माणकर्माणुकाः
कण्ठे दिक्सुदृशां मुनीश्वरयशःपूराः नभःपूरकाः ॥ १००

முனிவர்களில் சிறந்தவராகிய அந்த சங்கரருடைய கீர்த்திகள் ஆகாயம் முழுவதும் பரவி பிரகாசித்தன. அதனுல் திசைகளாகிய மங்கையர்களின் கூந்தலில் மல்லிமலர்களாகவும், அவர்களுடைய அழகிய நெற்றியில் சந்தனக் குழம்புப் பூச்சுக்களாகவும், கழுத்தில் அணியப்பட்ட முத்துமாலைகளாகவும் அவை விளங்கின.

उत्सङ्गेषु दिगङ्गना निदधते ताराः कराकर्षिकाः
रागाद् द्यौरवलम्ब्य चुम्बति वियद्गङ्गा समालिङ्गति ।
लोकालोकदरी प्रसीदति फणी शेषोऽस्य दत्ते रतिं
त्रैलोक्ये गुरुराजकीर्तिशशिनः सौन्दर्यमत्यद्भुतम् ॥ १०१

மூன்று உலகங்களிலும் பிரசித்திபெற்றுப் பரவியுள்ள பரமாசாரியாருடைய புகழாகிய சந்திரனுடைய சௌந்தரியம் மிகவும் அற்புதமானது. திசைகளாகிய பெண்மணிகள் அந்தக் கீர்த்தியாகிய சந்திரனை தங்களுடைய மடியில் வைத்துக்கொள்ளுகிருர்கள். உலகிலுள்ள (பிரசித்தமான) சந்திரனை அவ்வாறு செய்கிறதில்லை. நக்ஷத்திரங்கள் ஒரேகாலத்தில் கைகளால் இழுக்கின்றன. பிரசித்த சந்திரனேவெனில் நாட் கிரமமாகத்தான் அவைகளுடைய சம்பந்தத்தை

அடைகிறான். ஆகாயம் ஆவலுடன் அணைத்து முத்தம் கொடுக்கிறது. பிரசித்த சந்திரன் இந்த சுகத்தை அடைகிறானில்லை. எப்பொழுதும் அங்கே இருப்பதில்லையல்லவா? ஆகாய கங்கை புகழாகிய சந்திரனை அணைத்துக்கொள்கிறது; அந்த சந்திரனை அவ்வாறு செய்கிறதில்லை. லோகாலோக பர்வதத்தினுடைய குகை, கீர்த்தியாகிய சந்திரனுடைய வரவினால் சந்தோஷமடைகிறது; பிரசித்த சந்திரன் அங்கே புகுவதில்லை. (சந்திரசூரியர்களுக்கு அவ்விடத்தில் சஞ்சாரமில்லை என்று கூறுதல் கவி சங்கேதம்.) சர்ப்பராஜனாகிய ஆதிசேஷன் இதனால் ஆனந்தமடைகிறான்; பிரசித்த சந்திரனுக்கு அவனுடன் சந்திப்பில்லை. ஆகையால் புகழாகிய சந்திரனுடைய அழகு அற்புதம்.

संप्राप्ता मुनिशेखरस्य हरितामन्तेषु सांकाशिनं
कल्लोला यशसः शशाङ्ककिराणानालक्ष्य सांहासिनम् ।
कुर्वन्ति प्रथयन्ति दुर्मदसुधावैदग्ध्यसंलोपिनं
सम्यग् घ्नन्ति च विश्वजांधिकतमःसंघातसांघातिनम् ॥ १०२

முனீசுவரருடைய அந்த கீர்த்திகளாகிய திருப்பாற்கடலின் அலைகள், எல்லா திசைகளுடைய எல்லைகளிலும் பிரகாசமடைந்தன. சந்திரனுடைய கிரணங்களைக்கண்டு நகைக்கின்றன. மிகச் செருக்கையடைந்த அமிருதத்தின் வல்லமையை லோபம் செய்கின்றன. உலகமெங்கும் பரவிய அஞ்ஞானமாகிய இருள் கும்பலைத் தொலைக்கின்றன.

सोत्कण्ठाकुण्ठकण्ठीरवनखवरक्षुण्णमत्तेभकुम्भ -
प्रत्यग्रोन्मुक्तमुक्तामणिगणसुषमाबद्धदोर्युद्धलीला ।
मन्थाद्रिक्षुब्धदुग्धार्णवनिकटसमुल्लोलकल्लोलमैत्री -
पात्रीभूता प्रभूता जयति यतिपतेः कीर्तिमाला विशाला ॥ १०३

மிகவும் ஆவேசத்துடன் கூடியதும், தடுக்கமுடியாததுமாகிய சிங்கம் கடினமான நகங்களால் யானையின் மஸ்தகத்தை பிளக்கையில், அங்கிருந்து விழுகின்ற அழகான முத்துக்களுடன் போர்செய்து, அவைகளை வென்றதும், முத்துக்களுக்கு நிகரானதும், மந்தரமலையை போட்டுக்கடைந்த பாற்கடலின் அலைகளுடைய அன்பைப்பெற்றதும், விசாலமுமாகிய அந்த முனிவருடைய கீர்த்திமாலை ஒளிவீசுகிறது.

लोकालोकदरि प्रसीदसि चिरात्किं शङ्करश्रीगुरु-
प्रोद्यत्कीर्तिनिशाकरं प्रियतमं संश्लिष्य संतुष्यसि ।
त्वं चाप्युत्पलिनि प्रहृष्यसि चिरात्कस्तत्र हेतुस्तयो -
रित्थं प्रश्नगिरां परस्परमभूत्स्मेरत्वमेवोत्तरम् ॥ १०४

''லோகாலோக மலையின் குகையே! வெகுகாலமாக மலர்ச்சியுள்ளவளாக விளங்குகிறாய். சங்கரராகிய ஸ்ரீ குருவின் சிறந்த கீர்த்தியாகிய கணவனை அணைத்துக்கொள்வதினால் ஆனந்தமுறுகிறாய்போலும்'' என்று கமலினீ (தாமரைக்குளம்) வினவுகின்றது -

ஹே கமலினியே! நீயும் வெகுகாலமாக சந்தோஷமுற்றவளாகவே இருக்கிறாய். அதன் காரணம் யாது? என்று லோகாலோக குகை வினவியது.

(கணவனைக்கண்டு களிக்கும் பெண்மணிகள் தன் சந்தோஷத்திற்கு அதைக் காரணமாகக் கூறுவதில் வெட்கமடைவது இயல்பு. தரீ = குகை, பெண்பால் கமலினீ என்ற சொல்லும் அவ்வாறே. ஆனதுபற்றி கவியின் கூற்று, சந்திரகிரணம் இரவில்தானிருக்கும். சூரியக்கிரணம் பகலில்தான்; சங்கரகுருவின் கீர்த்தி இரவும் பகலும் ஒருபோல் ஒளியுடன் விளங்குகிறது.)

दुर्वाराखर्वगर्वाहितबुधजनतातूलवातूलवेगो
निर्बाधागाधबोधामृतकिरणसमुन्मेषदुग्धाम्बुराशिः ।
निष्प्रत्यूहं प्रसर्पद्भवदवदहनोद्भूतसन्तापमेघो
जागर्ति स्फीतकीर्तिर्जगति यतिपतिः शङ्कराचार्यवर्यः ॥ १०५

துறவிகளுக்கரசனும் சிறந்த ஆசிரியருமாகிய ஸ்ரீ சங்கரர் அடக்கமுடியாத செருக்குற்ற அற்ப அறிஞக்கூட்டமாகிய பஞ்சைப் பறக்கடிக்க புயலாகவும், எல்லையில்லா தூய ஆத்மஞானமாகிய சந்திரனுடைய உற்பத்தியிடமான சமுத்திரமாகவும், சுற்றிப் பரவிச் சுடர்விட்டு எரிகின்ற ஸம்ஸாரமாகிய காட்டுத்தீயினால் உண்டாகும் தாபத்தைத் தணிக்கின்ற மேகமாகவும், உலகமெல்லாம் பரவிய கீர்த்தியுள்ளவராகவும் விளங்குகின்றார்.

इतिहासपुराणभारतस्मृतिशास्त्राणि पुनःपुनर्मुदा ।
विबुधैः सुबुधो विलोकयन्सकलज्ञत्वपदं प्रपेदिवान् ॥ १०६

விசேஷ அறிஞராகிய அவர் இதிகாசம், புராணங்கள், பாரதம், ஸ்மிருதி, சாஸ்திரங்கள் என்பவைகளை சந்தோஷத்துடன் மற்ற அறிஞர்களுடன் ஆராய்ந்து ''ஸர்வக்ஞன்'' என்ற பெயரடைந்தார்.

स पुनः पुनरैक्षतादराद्वरवैयासिकशान्तिवाक्कतीः ।
समगादुपशान्तिसंभवां सकलज्ञत्ववदेव शुद्धताम् ॥ १०७

வியாசமுனிவரால் இயற்றப்பட்டதும், மனதிற்கு சாந்தியை விளைவிக்கின்றதுமாகிய செய்யுட்தொகுதியை அடிக்கடி ஆர்வத்துடன் ஆராய்ந்து சாந்திகுணமடைந்ததினால் ''ஸர்வக்ஞன்'' என்பதுபோல் ''ஸர்வசுத்தன்'' எல்லாவிதங்களிலும் (திரிகரணங்களிலும்) தூய்மை உள்ளவர் என்ற பெயரையுமடைந்தார்.

असत्प्रपञ्चश्चतुराननोऽपि सन्नभोगयोगी पुरुषोत्तमोऽपि सन् ।
अनङ्गजेताऽप्यविरूपदर्शनो जयत्यपूर्वो जगदद्वयीगुरुः ॥ १०८

சதுராननன் ஆயினும் = நான்முகக்கடவுளாயினும் பிரபஞ்சத்தினுடைய சம்பந்தமற்றவர். அவர் பிரபஞ்சத்தைப் படைப்பதனால் பிரபஞ்ச சம்பந்தமுற்றவர். புருஷோத்தமனாயினும், போகசம்பந்தமற்றவர். புருஷோத்தமர் = நாராயணன். போகயோகம் = பாம்பினுடைய உடலின் சம்பந்தம். ஆதிசேஷனுடைய உடலில் பள்ளிகொண்டவர், புருஷோத்தமனாகிய

விஷ்ணு. அனங்கஜேதா = காமனை வென்றவர், பரமசிவன். ஆனால் அவர் விரூபதர்சனன் = விகாரமான திருஷ்டியுள்ளவர், (முக்கண்ணன்) இவர் அத்தகையரன்று. சிலேடையை முன்னிட்டு உபமாலங்காரமும், விரோதாபாசமும். உபமேயத்தில் பொருள் விளக்கம்:-

சதுரானனன் - சதுரமான வல்லமையுடைய முகமுடையவர் = நல்ல சொற்பொழிவு ஆற்றுகிறவர். அஸத்பிரபஞ்சன் = பிரபஞ்சப்பற்றற்றவர்; அபோகயோகீ = சிற்றின்பங்களின் சம்பந்தமில்லாதவர்.

அவிரூபதர்சனன் = விஷமமான = விபரீதமான தர்சனம் = அறிவு, இல்லாதவர் (விரூபாக்ஷன் என்று பரமசிவனுக்குப் பெயர். 'அக்ஷ' என்பதும் 'தர்சன' என்பதும் ஒரே பொருள் விளக்கும் சொற்கள்). ஆகவே, மும்மூர்த்திகளைக்காட்டிலும் விசேஷமுள்ளதுபற்றி நிகரற்ற அத்துவைதாசாரியர் விளங்குகிறார்.

आलोक्याननपङ्कजेन दधतं वाणीं सरोजासनं
शश्वत्सन्निहितक्षमाश्रियममुं विश्वम्भरं पूरुषम् ।
आर्याराधितकोमलाङ्घ्रिकमलं कामद्विषं कोविदाः
शंकन्ते भुवि शङ्करं व्रतिकुलालङ्कारमङ्कागताः ॥ १०९

அவருடன் நெருங்கிய வித்வான்கள் அந்த ஆச்சாரிய சிகாமணியை மும்மூர்த்திகளாகவே எண்ணினர். பிரம்மதேவர் ஸரஸ்வதியை அடைந்தவர். இவரும் தன்னுடைய முககமலத்தில் ஸரஸ்வதிவிலாசமுற்றவர். விச்வம்பரர் எனக் கூறப்படுகிறவரும், புருஷசப்தத்தின் பொருளுமாகிய விஷ்ணு, எப்போதும் க்ஷமா=பூமி, ஸ்ரீ=திருமகள், என்பவர்களை அருகிலமைத்தவர். இவருக்கும், க்ஷமா=பொறுமை; ஸ்ரீ=அழிவில்லாச் செல்வம்; அல்லது, க்ஷமா ஸ்ரீ=பொறுமையாகிய இலக்குமி, என்பவைகள் எப்பொழுதும் உள. சங்கரன் ஆரியையினால்=பார்வதியினால், பூஜிக்கப்பெற்ற பாதகமலமுடையவர். இவர் ஆரியர்களால்=பூஜிக்கத்தக்கவர்களால் பூஜிக்கப்பெற்ற பாதகமலமுடையவர். ஆகையால் உவமை.

एकस्मिन् पुरुषोत्तमे रतिमतीं सत्तामयोन्युद्भवां
मायाभिक्षुहृतामनेकपुरुषासक्तिभ्रमान्निष्ठुराम् ।
जित्वा तान् बुधवैरिणः प्रियतया प्रत्याहरद्यश्चिरा -
दास्ते तापसकैतवात् त्रिजगतां त्राता स नः शङ्करः ॥ ११०

புருஷசிரேஷ்டனை ஒருவரிடத்தில் (ஸ்ரீராமசந்திரனிடத்தில்) அன்பைக் கொண்டவளும், யோனிசம்பந்தமில்லாமல் தோன்றியவளும், பதிவிரதா ரத்னமுமாகிய சீதாதேவி, மாயையினால் சந்நியாசிவேடம் தரித்த இராவணனால் அபகரிக்கப்பட்டாள். ஆதலால் அற்பனை வேறு புருஷனிடம் பற்றுள்ளவள் என்ற சந்தேகம் ஏற்பட்டதனால் ஸ்ரீராமசந்திரனுக்கு அவளிடம் சினமும், தன்னிடம் நம்பிக்கையை இழந்த கணவனுடைய எண்ணத்தைக்கண்டு சீதாதேவிக்கு சினமும் ஏற்பட்டு அவள் அக்னிப்பிரவேசம் செய்தாள்.

தேவர்களுக்கு எதிரிகளான அரக்கர்களைக் கொன்ற இராமபிரான், பிறகும் பிரம்மாதிகளுடைய பிரார்த்தனைக்கிணங்கிப் பெற்றுக்கொண்டார் என்பதை உபமானமாகக்கொண்டு கூறுகிறுர். சிவபெருமான் இராமாவதாரம் கொண்டார் என்பது கந்தபுராணத்தில் உள்ளதாகும்.

ஒரே பரமாத்மனிடத்தில் நிலைகொண்டது பாரமார்த்திகத்தன்மை. அதற்கு உற்பத்தியில்லாமையால் யோனியிலிருந்து தோன்ருதது. அந்த பரமார்த்தத்தன்மையை, மாயையினுல் துறவிவேடம் கொண்ட விபரீத மதஸ்தர்கள் பற்பல விதமாக சிதறடித்தனர். அதனுல் வருத்தமடைந்த அது மறைந்துவிட்டது. பிரம்மாதிகளுடைய வேண்டுகோளுக்குச் செவி கொடுத்துச் சங்கரன், அந்த பரமார்த்தத்தன்மையைக் காப்பாற்றுவதற்கு அவதரித்து, வேதங்களுடையவும், தேவர்களுடையவும் பகைவர்களை வென்று அதனை நிலைநாட்டினுர். அப்படி தபஸ்வியின் வேடம் தரித்து, பாரமார்த்திக ஸத்தை என்ற பதிவிரதையைக் காப்பாற்றியதால் மூன்று உலகங்களை காப்பாற்றியவராகிய அந்த சங்கரர் நம்மைக் காப்பாற்றுவாராக.

इति श्रीमाधवीये तदाशुद्धाष्टमवृत्तगः ।
संक्षेपशङ्करजये चतुर्थः सर्ग आभवत् ॥ ४ ॥

இவ்வாறு ஸ்ரீமாதவாசாரியரியற்றிய சுருக்கமான
சங்கரவிஜயத்தில் அவருடைய ஏழு வயதுவரையிலுள்ள
திவ்ய சரித்திரவர்ணனையாகிய
நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

आदितः श्लोकाः 384



# अथ पञ्चमः सर्गः

# ஐந்தாவது ஸர்க்கம்

## संन्यासग्रहणम्

## துறவறம் பெறுதல்

इति सप्तमहायनेऽखिलश्रुतिपारंगततां गतो वटुः ।
परिवृत्य गुरोः कुलाद् गृहे जननीं पर्यचरन्महायशाः ॥ १

மிக்க கீர்த்திசாலியான அந்த பிரம்மச்சாரி இவ்வாறு ஏழாவது வயதிலேயே வேதங்களின் கரையைக் கண்டவராக ஆசிரியருடைய கிருகத்திலிருந்து திரும்பிச்சென்று தனது இல்லத்தில் தாய்க்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தார். (புத்திசாலியாகிய அவர் மாதாவிற்குப் பணிவிடை செய்தமையால் மிக்க கீர்த்திசாலியாக வளர்ந்தார் என்று கீர்த்திவளர்ச்சிக்கும் மாத்ருசுச்ரூஷைக்கும் காரியகாரணம் கூறுதலும் பொருத்தமுள்ளது.)

परिचरञ्जननीं निगमं पठन्नपि हुताशरवी सवनद्वयम् ।
मनुवरैर्नियतं परिपूजयञ्छिशुरवर्तत संस्तरणिर्यथा ॥ २

தாயாருக்குப் பணிவிடை செய்துகொண்டும், வேதங்களையோதிக் கொண்டும், காலையும் மாலையும் சூரியனையும் அக்கினியையும் வேதமந்திரங்களால் பூஜித்துக்கொண்டும் இருந்த அந்த பாலராகிய ஸ்ரீ சங்கரர் கதிரவன் போல் விளங்கினர்.

शिशुमुदीक्ष्य युवाऽपि न मन्युमान् दिशति वृद्धतमोऽपि निजासनम् ।
अपि करोति जनः करयोर्युगं वशगतो विहिताञ्जलि तत्क्षणात् ॥ ३

அந்தப் பையனைப் பார்த்து வாலிபனும் (எளிதில் சினம் வரக்கூடிய காளைப்பருவத்தியனும்) கோபம் கொள்ளுவதில்லை. முதியவனும், தன்னுடைய ஆசனத்தையளிக்கின்றான். கண்டவுடனேயே, வசப்பட்டவராகி உலகத்தவர் கைகூப்புகின்றனர்.

मृदु वचश्चरितं कुशलां मतिं वपुरनुत्तममास्पदमोजसाम् ।
सकलमेतदुदीक्ष्य सुतस्य सा सुखमवाप निरर्गलमम्बिका ॥ ४

தாயார் மகனுடைய இன்சொல்லையும், நன்னடத்தையையும் திறமையுற்ற புத்திவன்மையையும், ஒப்பற்று மிக்க ஒளியினால் விளங்குமுடலையும் கண்ணுற்று எல்லையில்லாச் சுகத்தையடைந்தனர்.

जातु मन्दगमनाऽस्य हि माता स्नातुमम्बुनिधिगां प्रतियाता ।
आतपोग्रकिरणे रविबिंबे सा तपःकृशतनुर्विललम्बे ॥ ५

புதல்வப்பேறுக்காக வெகுநாட்கள் தவம் செய்தமையாலும், பிறகு கணவனிறந்த வருத்தமுற்றுத் தவம் செய்தமையாலும், கிழப்பருவத்தாலும் உடல் மெலிந்தவளாகிய இவருடைய மாதா ஒருநாள் மெல்ல மெல்ல நடந்து ஸ்நானத்திற்கு ஆற்றுக்குச் சென்றாள். கதிரவன் கடுமையாகக் காய்ந்தமையால் தாபம் தாங்கமுடியாதவளாக வருவதற்குத் தாமதித்தாள்.

शङ्करस्तदनु शङ्कितचित्तः पङ्कजैर्विगतपङ्कजलार्द्रैः ।
वीजयन्नुपगतो गतमोहां तां जनेन सदनं सह निन्ये ॥ ६

பிறகு மனதில் சந்தேகமுற்றவராக ஸ்ரீசங்கரர் தாயாரை தேடிச்சென்று மயக்கமுற்று வழியில் படுத்திருந்த அவளைக் கண்ணுற்று, சுத்தமான தாமரைமலர்களால் தண்ணீர் தெளித்தும் வீசியும் தனது தாய்க்கு உபசாரம் செய்தார். மயக்கம் நீங்கிய பின் பந்துக்களுடன் மனைக்கும் அழைத்துச் சென்றார்.

सोऽथ नेतुमनवद्यचरित्रः सद्मनोऽन्तिकमृषीश्वरपुत्रः ।
अस्तवीज्जलधिगां कविहृद्यैर्वस्तुतः स्फुरदलंकृतपद्यैः ॥ ७

தூய செயலாற்றுகின்றவரும், சிறந்த இரிஷியின் குமாரருமாகிய அவர், பிறகு நதியை தன்னுடைய கிருகத்திற்கு அருகாமையில் கொண்டுவருவதற்காக, கவிகளின் மனதைக் கவருகின்றவையும், விசேஷ அலங்காரங்களுள்ளவைகளுமாகிய இனிய செய்யுட்களால் பிரம்மவஸ்துவாகவே அந்த நதியைத் துதித்தார்.

ईहितं तव भविष्यति काल्ये यो हितं जगत इच्छसि बाल्ये ।
इत्यवाप्य स वरं तटिनीतः सत्यवाक् सदनमाप विनीतः ॥ ८

''இளமையிலேயே உலகத்தின் நன்மையை விரும்புகின்ற உமது விருப்பம் விடியற்காலையில் பயன்பெறும்'' என்று கங்கைநதியினிடமிருந்து வரம்பெற்ற ஸத்யமான சொல்லையுடையவராகிய அவர் பணிவுடன் கிருகத்திற்கு சென்றார். (தனது வேண்டுகோளுக்கிணங்கி கங்காதேவி வரமருளினாள் என்ற கர்வமின்மையை ''विनीतः'' என்ற சொல்லினால் நூலாசிரியர் விளக்குகின்றார்.)

प्रातरेव समलोकत लोकः शीतवातहृतशीकरपूतः ।
नूतनामिव धुनीं प्रवहन्तीं माधवस्य समया सदनं ताम् ॥ ९

காலையில் குளிர்ந்த காற்றினால் கொண்டுவரப்பெற்ற நீர்த்திவலைகளால் பரிசுத்தியடைந்த ஜனங்கள், ஸ்ரீகிருஷ்ணர்கோவிலுக்கருகில் பிரவகிக்கின்ற புதிதான நதியை வியப்புடன் கண்ணுற்றனர்.

एवमेनमतिमर्त्यचरित्रं सेवमानजनदैन्यलवित्रम् ।
केरलक्षितिपतिर्हि दिदृक्षुः प्राहिणोत्सचिवमादृतभिक्षुः ॥ १०

இவ்வாறு மனிதர்களுக்கு மீறிய செயலாற்றலுள்ளவரும், தன்னை அணுகுகின்ற ஜனங்களுடைய குறையை அறுக்கின்றவருமாகிய அவரை, பிரம்மசாரிகளையும், ஸன்னியாசிகளையும் பராமரிக்கும் சுபாவமுள்ள கேரள தேச

அரசன் பார்க்க விருப்பமுற்றவனுகி அழைத்துவரும்படி மந்திரியை அனுப்பினான்.

सोऽप्यतन्द्रितमभीरुपदाभिः प्राप्य तं यदनु सद्विरदाभिः ।
उक्तिभिः सरसमञ्जुपदाभिः शक्तिभृत्सममजिज्ञपदाभिः ॥ ११

அந்த மந்திரியும் அச்சமற்றவனாக உற்சாகத்துடன் யானையும் மற்றும் வேறு காணிக்கைப் பொருள்களுடனும் அங்கு சென்று பரமசிவனுக்குச் சமமான அவரிடம் இனிய சொற்களால் விக்ஞாபனம் செய்தான்.

(அந்தச் சொற்களை மேல் கவிகளால் கூறுகிறார்.)

यस्य नैव सदृशो भुवि बोद्धा दृश्यते रणशिरःसु च योद्धा ।
तस्य केरलनृपस्य नियोगाद् दृश्यसे मम च सत्कृतियोगात् ॥ १२

பகவானே! உலகில் எந்த அரசனுக்கு நிகரான அறிஞனும், போர்க்களத்தில் போர் செய்யும் திறமையுள்ள ஒப்பான வீரனும் இல்லையோ, அந்த கேரளராஜனுடைய ஆக்ஞையினாலும், யான் செய்த புண்யத்தினாலும் தங்களை பார்க்கும்படி பாக்கியமடைந்தேன்.

राजिताभ्रवसनैर्विलसन्तः पूजिताः सदसि यस्य वसन्तः ।
पण्डिताः सरसवादकथाभिः खण्डितापरगिरोऽवितथाभिः ॥ १३

உண்மையை விளக்குகின்றவைகளும், மனதைக் கவருகின்றவைகளுமான சொற்பொழிவுகளால் எதிர்வாதங்களின் வாதுகளை அறுக்கின்ற வித்வான்கள் எவருடைய சபையில் பொன்னுடைகளணிந்தவர்களாக பராமரிக்கப் படுகின்றனரோ.

सोऽयमाजिजितसर्वमहीपः स्तूयमानचरणः कुलदीपः ।
पादरेणुमवनं भवभाजामादरेण तव विन्दतु राजा ॥ १४

போரில் பகைவர்களனைவரையும் வென்று புகழ்பெற்ற செயலுள்ளவனும், குலத்திற்கு விளக்குமாகிய அந்த அரசன், ஸம்ஸார துன்பங்களையனு பவிக்கிறவர்களுடைய பாபங்களைப் போக்கி, பாலனம் செய்கின்ற தங்களுடைய பாததூளியைப் பெற வேண்டுகிறேன். (அந்த அரசன், தங்களுடைய பாததூளியைப் பெறும்படி அருளுவீராக.)

एष सिन्धुरपरो मदपूर्णो दोषगन्धरहितः प्रवितीर्णः ।
अस्तु तेऽद्य रजसा परिपूतं वस्तुतो नृपगृहं शुचिभूतम् ॥ १५

குறையற்ற இந்த சிறந்த குஞ்சரம் (யானை) பக்தியினால் தங்களுக்கு அளிக்கப்பட்டுள்ளது. பரிசுத்தமான அரசனுடைய அரண்மனை தங்களுடைய பாததூளியைப் பெற்று பன்மடங்கு சுத்தத்தை அடையுமாறு அருள்புரிக.

इत्युदीर्य परिसाधितदौत्यं प्रत्युदीरितसदुक्तिममात्यम् ।
अत्युदारमृषिभिः परिशस्तं प्रत्युवाच वचनं क्रमशस्तम् ॥ १६

''நீர் யார், எங்கிருந்து, ஏன் வந்துள்ளீர்?'' என்ற வினாக்களுக்கு நன்கு விடையளித்து தூதனுடைய கடமையை நிறைவேற்றிய அந்த மந்திரியினிடம் ஸ்ரீசங்கரர் கூறினார். அவருடைய வசனம் முனிவர்களாலும் புகழப்பட்டதாகவிருந்தது.

भैक्षमन्नमजिनं परिधानं रूक्षमेव नियमेन विधानम् ।
कर्म दातृवर शास्ति वटूनां शर्मदायिनिगमाप्तिपटूनाम् ॥ १७

வள்ளலே! வேதங்களைக் கற்றுக்கொள்ள அதிகாரம் பெற்ற பிரம்மசாரிகளுக்கு பிக்ஷையெடுத்துக் கிட்டும் அன்னமும், மான்தோல் முதலிய ஆடைகளும், சுகத்தில் விருப்பமின்றிக் கஷ்டமனுபவித்துச் செய்யவேண்டிய மூன்று வேளை ஸ்நானமும் ஸந்தியாவந்தனம் முதலிய கடமைகளும்தான் நன்மையை விளைவிக்கின்றன.

कर्म नैजमपहाय कुभोगैः कुर्महेऽह किमु कुम्भिपुरोगैः ।
इच्छया सुखममात्य यथेतं गच्छ नाथमसकृत्कथयेत्थम् ॥ १८

அமைச்சரே! ஆஹா! அத்தகைய பிரம்மசரியத்திலிருக்கின்ற யாம் ஸ்வதர்மத்தை விட்டு, யானை முதலிய அற்பங்களான போகப்பொருள்களை எதற்காக விரும்புகிறோம்? வந்த வழியே சுகமாகச் செல்லுக. அடிக்கடி அரசனிடம் இவ்வாறு கூறவும் வேண்டும்.

प्रत्युत क्षितिभृताऽखिलवर्णा वृत्त्युपाहरणतो विगतर्णाः ।
धर्मवर्त्मनिरता रचनीयाः कर्म वर्ज्यमिति नो वचनीयाः ॥ १९

அரசன் செய்யவேண்டிய கடமை யாதெனில், இப்பொழுது கூறியதற்கு மாறாக, எல்லா வர்ணத்தவரும் தம் கடமைகளைச் செய்யும்படி நியமிக்க வேண்டும். கடமைகளைச் செய்வதால் கடன் நீங்கியவர்களாகவும், அறநெறியிலிருக்கின்றவர்களாகவும் அவர்களைச் செய்ய வேண்டும். அப்படியின்றி ஸ்வதர்மத்தைக் கைவிடும்படிச் செய்தல் தகாது.

इत्यमुष्य वचनादकलङ्कः प्रत्यगात्पुनरमात्यमृगाङ्कः ।
वृत्तमस्य स निशम्य धरापः सत्तमस्य सविधं स्वयमाप ॥ २०

இவ்வாறு அந்த ஸ்ரீசங்கரருடைய வசனத்தைக் கேட்டு, சந்திரன் போன்றவரும் மாசற்றவருமாகிய அமைச்சர் திரும்பிச் சென்றார். அந்த அரசனும் அந்த ஸ்ரீசங்கரருடைய சரித்திரத்தைக் கேட்டு தானே அவருடைய சமீபத்திற்குச் சென்றான். (சந்திரனுக்கு மாசுண்டு. இவருக்கு அது இல்லை என்பதைக் கவி ''अकलङ्कः'' என்ற சொல்லினால் விளக்குகின்றார்.)

भूसुरार्भकवरैः परिवीतं भासुरोडुपगभस्त्युपवीतम् ।
अच्छजह्नुसुतया विलसन्तं सुच्छविं नगमिव द्रुमवन्तम् ॥ २१

चर्म कृष्णहरिणस्य दधानं कर्म कृत्स्नमुचितं विदधानम् ।
नूतनाम्बुदनिभाम्बरवन्तं पूतनारिसहजं तुलयन्तम् ॥ २२

जातरूपरुचिमुञ्जसुधाम्ना छातरूपकटिमद्भुतधाम्ना ।
नाकभूजमिव सत्कृतिलब्धं पाकपीतलतिकापरिरब्धम् ॥ २३

सस्मितं मुनिवरस्य कुमारं विस्मितो नरपतिर्बहुवारम् ।
संविधाय विनतिं वरदाने तं विधातृसदृशं भुवि मेने ॥ २४

சிறந்த அந்தணகுமாரர்களால் சூழப்பட்டவரும், சந்திரகிரணம் போல் ஒளி வீசுகின்ற யக்ஞோபவீதத்தை தரித்தவரும், மரங்கள் அடர்ந்துப் பரிசுத்தமான கங்கையின் பிரவாகத்துடன் கூடிய இமயமலேப்போல் விளங்குகின்றவரும், கிருஷ்ணமானின் தோலே தரித்துத் தன்னுடைய ஆசிரமத்திற்குரிய காரியங்களேச் செய்கின்றவரும், (ஆகையால்) நீலமேகம் போன்ற ஆடையணிந்த பலராமருக்குச் சமமான தோற்றமளிக்கின்றவரும், பொற் காந்தியுள்ள முஞ்சிக்கயிற்றை இடுப்பில் கட்டிக்கொண்டதினுல் முதிர்ந்து மஞ்சள் நிறம்கொண்ட கொடிகளால் சூழப்பட்டதும், புண்யச் செயலினுல் அடையக்கூடியதுமான கற்பகவிருக்ஷம்போன்றவரும், புன்முறுவல் கொண்டவரும் முனிகுமாரருமாகிய அவரைக்கண்டு அரசன் வியப்புற்றுப் பல வணக்கங்கள் செய்து, அவரை மண்ணுலகில் வரமளிக்க வல்லமையுள்ள நான்முகக்கடவுளென்று எண்ணினுன்.

(23-வது செய்யுளில் கூறியுள்ள 'सत्कृतिलब्धम्' என்ற சொல், உபமானத்திற்குப் போல் உபமேயத்திற்கும் பொருத்தமுள்ளது. புண்ணியவிசேஷங்களால் கற்பகவிருக்ஷம் பார்க்கப்படுகின்றதுபோலவே, இந்த மகானும் புண்ணியவிசேஷங்களுள்ளவர்களால்தான் பார்க்கப்படுகிருர்.)

तेन पृष्टकुशलः क्षितिपालः स्वेन सृष्टमथ शात्रवकालः ।
हाटकायुतसमर्पणपूर्वं नाटकत्रयमवोचदपूर्वम् ॥ २५

பகைவர்களுக்குக் காலனுகிய அந்த அரசன் அவரால் குசலம் கேட்கப்பட்ட பிறகு பதினுயிரம் பொற்களேச் சமர்ப்பித்து தன்னுலியற்றப்பெற்ற அற்புதமான நாடகங்கள் மூன்றையும் காணிக்கையாகச் சமர்ப்பித்தார்.

तद्रसार्द्रगुणरीतिविशिष्टं भद्रसन्धिरुचिरं सुकवीष्टम् ।
संग्रहेण स निशम्य सुवोचं तं गृहाण वरमित्यमुमूचे ॥ २६

ஒன்பது ரஸங்களும், அவைகளின் குணங்களும், வைதர்ப்பி, கௌடீ, பாஞ்சாலி என்ற ரீதிகளும், அழகிய சந்திகள் ஐந்தும், அமைந்து கவிகளால் ஆமோதிக்கத்தக்க சொற்சுவையுள்ள நாடகங்களேச் செவியுற்று அந்த ஸ்ரீ சங்கரர் ''வரம் பெற்றுக்கொள்க'' என்று அரசனிடம் கூறினுர்.

तां नितान्तहृदयङ्गमसारां गां निशम्य तुलितामृतधाराम् ।
भूपतिः स रचिताञ्जलिबन्धः स्वोपमं सुतमियेष सुसन्धः ॥ २७

மனதிற்கு மகிழ்ச்சியையளிக்கின்றதும், அமிருதப்பிரவாகத்திற்குச் சமமுமான அந்த வசனத்தைக் கேட்டு, நன்னெறியில் நடக்கின்ற மன்னன் கைகூப்பியவனுக தனக்கு அனுரூபனுன நல்ல புதல்வன் தோன்றவேண்டு மென்ற வரத்தை வேண்டினுன்.

नो हिताय मम हाटकमेतद्देहि नस्तु गृहवासिजनाय ।
ईहितं तव भविष्यति शीघ्रं याहि पूर्णमनसेत्यवदत्तम् ॥ २८

எமக்கு இந்தப் பொன் அவசியமில்லை. கிருகத்திலுள்ள மற்ற ஜனங்களுக்கு கொடுப்பீராக. தமது விருப்பம் விரைவில் கைகூடும். சந்தோஷமனதுடன் போகலாம் என்று ஸ்ரீசங்கரர் அரசனிடம் கூறினார்.

राजवर्यकुलवृद्धिनिमित्तां व्याजहार रहसि श्रुतिवित्ताम् ।
इष्टिमस्य सकलेष्टविधातुस्तुष्टिमाप हि तया क्षितिनेता ॥ २९

மற்றவர்களிருந்த சபையில் இவ்வாறு கூறிப் பிறகு அரசகுலம் வளர்ச்சியடைதற்குரிய காரியத்தைத் தனிமையில் அரசனிடம் கூறினார். ''அரசே! எல்லோருடையவும் விருப்பங்களைப் பூர்த்தி செய்து அருள்புரியும் புருஷோத்தமனை 'புத்திரகாமேஷ்டி' என்று மறைகள் கூறும் வேள்வியினால் ஆராதிப்பீராக.'' அரசன் அதைக் கேட்டுச் சந்தோஷமடைந்தான்.

स विशेषविदा सभाजितः कविमुख्येन कलाभृतां वरः ।
अगमत्कृतकृत्यधीर्निजां नगरीमस्य गुणानुदीरयन् ॥ ३०

கல்வி கற்றவர்களில் சிறந்த அரசன், கவிகளுக்குத் தலைவரும் அறிவின் மிகுதியில் ஒப்பற்றவருமாகிய அவரால் உபசரிக்கப்பட்டமையால் தன்னை பாக்கியவானாகத் தீர்மானம் செய்துகொண்டும், அவருடைய குணங்களைப் புகழ்ந்துகொண்டும் தன்னுடைய நகரத்திற்குத் திரும்பிச் சென்றான்.

बहवः श्रुतिपारदृश्वनः कवयोऽध्यैषत शङ्करादुरोः ।
महतः सुमहान्ति दर्शनान्यधिगन्तुं फणिराजकौशलीम् ॥ ३१

அறிஞர்களநேகர்கள், வேதங்களின் கரையைக் கண்ட மகானாகிய அந்த ஸ்ரீசங்கரகுருவினிடமிருந்து ஆதிசேஷனுடைய சொல் வன்மையைத் தாங்களும் பெறவேண்டுமென்ற விருப்பமுற்றவர்களாக, சிறந்த சாஸ்திரங்களைக் கற்றுக்கொண்டனர்.

('महान्तं विभुमात्मानं मत्वा धीरो न शोचति'' என்று உபநிஷத்துக் கூறுகின்றது. அந்த வசனத்தில் 'महत्' என்ற பதம் எந்தப் பொருளைக் கூறுகின்றதோ, அந்தப் பொருள்தான் பிரகிருதத்தில் வர்ணிக்கப்படும் ஸ்ரீசங்கரர் என்ற விஷயத்தை இந்தச் செய்யுளிலுள்ள 'महतः' என்ற ஐந்தாம் வேற்றுமையிலுள்ள பதம் போதிக்கின்றது. ஸர்வவ்யாபியாகிய அந்த ஆத்மாவை அறிந்த புத்திமான் துன்பங்களை அனுபவிப்பதில்லை என்று மேற்கூறிய உபநிஷத்தின் பொருள். அந்த மகானையே ஆசிரியராகப் பெற்றவர்களுடைய பாக்கியம் கூறத்தக்கதோ?)

पठितं श्रुतमादरात्पुनः पुनरालोक्य रहस्यनूनकम् ।
प्रविभज्य निमज्जतः सुखे स विधेयान् विदधेतमां सुधीः ॥ ३२

சிறந்த ஆத்மஞானியான அவர் கற்ற கல்வியை அடிக்கடித் தனிமையில் ஆராய்ந்தும் சீடர்களுக்குப் பொருள் விளக்கியும் அந்த சீடர்களைப் பரமானந்தக்கடலில் ஆழ்த்தினார்.

सर्वार्थतत्त्वविदपि प्रकृतोपचारैः शास्त्रोक्तभक्त्यतिशयेन विनीतशाली ।
सन्तोषयन् स जननीमनयत्कियन्ति संमानितो द्विजवरैर्दिवसानि धन्यः ॥ ३३

உண்மையை உணர்ந்த உத்தமராகவும், நூல்களில் கூறும் பக்தியின் வன்மையால் உலகக்கட்டுப்பாடுகளிலிருந்து வேறுபட்டவராகவுமிருந்தபோதிலும் அவர் கிழப்பருவத்திலிருந்த தாயை வணங்கி தக்கவாறு உபசரித்தும் அவளே மகிழச்செய்தும், சான்றோர்களால் ஸத்காரம் செய்யப்பட்டவருமாக சில நாட்கள் கழித்தார்.

सा शङ्करस्य शरणं स च तज्जनन्या अन्योन्ययोगविरहस्त्वनयोरसह्यः ।
नो वोढुमिच्छति तथाऽप्यमनुष्यभावान्मेरुं गतः किमपि वाञ्छति दुष्प्रदेशम् ॥३४

பால்லியத்திலிருந்த (ஏழுவயதிற்குட்பட்டகாலம்) அந்த சங்கரருக்கு அந்த தாயார்தான் புகலிடம். ஒரே புதல்வனே யீன்று, கணவனுடைய காலமும் முடிந்து, முதிர்ந்த வயதிலிருக்கும் அந்தத் தாயாருக்கு அந்த குழந்தைதான் தஞ்சம். இவ்வாறு இருவருடைய பந்தமும் பிரிதற்கரியது. ஆனுல், மகாதேவன் இந்த வடிவமடைந்தமையால் மானிடத்தன்மைக்கு மேலான நிலைமையிலுள்ள அந்த ஸ்ரீசங்கரர் துறவறத்தை விரும்பினரேயன்றி இல்லறத்தை விரும்பவில்லை. சிறந்த மேருசிகரத்தைப் பிடித்தவன் கீழான கீகடதேசத்தையடைய விரும்புவானு?

कृतविद्यममुं चिकीर्षवः श्रितगार्हस्थ्यमथाप्तबन्धवः ।
अनुरूपगुणामचिन्तयन्ननवद्येषु कुलेषु कन्यकाम् ॥ ३५

கல்விக்கரையைக் கண்ட அந்தக் குமாரரை அறநெறியிலமர்த்த ஆர்வமுள்ளவர்களாக இனிய இல்லாள் ஒருத்தியை இணைப்பதற்கு உயர்ந்த குலத்தில் உதித்து உத்தமகுணங்களுற்ற உத்தமியை உற்ற உறவினர் தேடினர்.

अथ जातु दिदृक्षवः कलाववतीर्णं मुनयः पुरद्विषम् ।
उपमन्युदधीचिगौतमत्रितलागस्त्यमुखाः समाययुः ॥ ३६

பிறகு ஒருநாள் உபமன்யு, ததீசி, கௌதமர், த்ரிதலர், அகஸ்தியர் முதலிய முனிவர்கள், முப்புரங்களையெரித்த பரமேசுவரர் கலிகாலத்தில் காலடிக்கிராமத்தில் அவதரித்து களங்கமற்ற குமாரராக விளங்குவதை அறிந்து காண விரும்பியவர்களாக வந்தனர்.

(பரமசிவன் முப்புரங்களை எரித்தது உபாக்கியானமாகவிருப்பதுடன் உண்மையான தத்வத்தையும் கொண்டது. தங்கம், வெள்ளி, இரும்பு இவைகளால் அமைக்கப்பட்டவை மூன்று புரங்கள் என்று மறை கூறுகின்றது. அவை முறையே காரணம், சூக்ஷ்மம், ஸ்தூலம் என்ற மூன்று சரீரங்களுக்கு ஒப்பானவை. அவைகளில் வாசம் செய்தவர்கள் அசுரர்கள் என்பதற்கு மூன்று சரீரங்களிலும் அபிமானங்கொண்டு அவைகளுடன் சம்பந்தமுற்ற ஜீவன் என்று கருத்து. பல எண்ணங்களும், நிலைமைகளும், விசேஷமாக மூன்று குணங்களால் (ஸத்வம், ரஜஸ், தமஸ்) நிலவும் செயல்களுடன் சம்பந்தப்படுவதால் பன்மையாகக் கூறப்படுகிருன். அல்லது சரீரங்களுடைய வேற்றுமையைப் பின்பற்றி ஜீவர்களும் வேறுபடுகின்றனர். 'அஸுக்களில்' தன்னுடைய

பிராணன்களிலேயே 'ர' சந்தோஷமடைகிறவன் அஸுரன் என்ற சொல்லிற்கு விளக்கம். அந்த அஸுரத்தன்மை நீங்கவேண்டுமானால் தேகங்களில் (மூன்றுகளிலும்) நான் என்ற அபிமானம் நீங்கவேண்டும். அது ஆத்மஞானமின்றி உண்டாகாது. அந்த ஆத்மஞானம் பரமனுடைய அருளின்றிக் கிட்டாது. ஆகையால், அந்தப் பரமனே தன் பதத்திலிருந்து நழுவி மண்ணுலகில் மானிடனாகத் தோன்றி அஞ்ஞானத்தை விலக்கி, ஞானத்தைப் புகட்டி, ஜீவர்களுடைய தேகசம்பந்தத்தையும் விலக்கி அவர்களுக்கு முக்தியைக் கொடுக்கச் சித்தமாகவிருக்கிறார் என்ற கருத்தை நூலாசிரியர் மேற்கூறியுள்ள செய்யுளில் 'पुरद्विषम्' என்ற சொல்லினால் விளக்குகிறார்.)

प्रणिपत्य स भक्तिसंनतः प्रसवित्र्या सह तान्विधानवित् ।
विधिवन्मधुपर्कपूर्वया प्रतिजग्राह सपर्यया मुनीन् ॥ ३७

முறைகளையறிந்த அந்த ஸ்ரீசங்கரர் தாயாருடன் அந்த முனிவர்களை வணங்கி மதுபர்க்கம் முதலியவைகளையளித்து உபசரித்தார்.

विहिताञ्जलिना विपश्चिता विनयोक्त्याऽर्पितविष्टरा अमी ।
ऋषयः परमार्थसंश्रया अमुना साकमचीकरन् कथाः ॥ ३८

வித்வானாகிய அவரால் கைகூப்பி அளிக்கப்பட்ட ஆசனத்தில் அமர்ந்த ஆத்மஞானிகளாகிய மாமுனிவர்கள் அவருடன் சம்பாஷணை செய்தனர்.

निजगाद कथान्तरे मुनीञ्जननी तस्य समस्तदर्शिनः ।
वयमद्य कृतार्थतां गता भगवन्तो यदुपागता गृहान् ॥ ३९

பற்பல அரிய விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கையில் ஸர்வக்ஞரான அந்த ஸ்ரீசங்கரருடைய தாயார் கூறினாள். ''பகவான்களே, தாங்கள் அனைவரும் எமது இல்லத்திற்கு வந்தருளியதனால் யாம் பாக்கியசாலிகளானோம்.''

क्व कलिर्बहुदोषभाजनं क्व च युष्मच्चरणावलोकनम् ।
तदलभ्यत चेत्पुराकृतं सुकृतं नः किमिति प्रपञ्चये ॥ ४०

அநேக தோஷங்களுக்குத் தங்குமிடமாகிய கலிகாலம் எங்கே? தங்களுடைய பாதகமலங்களைக் காணுதல் எங்கே? இக்காலத்திற்கு அரிதான அது கிட்டியதனால் எமது பாக்கியம் பகரத்தக்கதோ?

शिशुरेष किलातिशैशवे यदशेषागमपारगोऽभवत् ।
महिमाऽपि यदद्भुतोऽस्य तद् द्वयमेतत्कुरुते कुतूहलम् ॥ ४१

இந்தப் புதல்வன் பாலியத்திலேயே வேதங்களெல்லாவற்றினுடையவும் கரையைக் கண்டவனாகிவிட்டான். இவனுடைய மகிமையும் அற்புதமாகவிருக்கிறது. இவ்விரண்டு விஷயங்களும் எனக்கு வியப்பையளிக்கின்றன.

करुणार्द्रदृशाऽनुगृह्यते स्वयमागत्य भवद्भिरप्ययम् ।
वदतास्य पुराकृतं तपः क्षममाकर्णयितुं मया यदि ॥ ४२

தவவலிமையின் பயனைப் பூர்த்தியாகப்பெற்ற பரமபரிசுத்தர்களான தாங்கள் அனைவரும் நேரில் வந்து, கருணையினால் குளிர்ந்த கண்களையிட்டு அனுக்கிரகம் செய்கிறீர்கள். எனக்குக் கேட்டு அறிந்துகொள்ள வாய்மை உண்டுமேயாகில், இவனுடைய முற்பிறவியின் 'தவம் யாது' என்று கூறுவீர்களாக.

इति सादरमीरितां तया गिरमाकर्ण्य महर्षिसंसदि ।
प्रतिवक्तुमभिप्रचोदितो घटजन्मा प्रवयाः प्रचक्रमे ॥ ४३

மாமுனிவர்களுடைய அவையில் அந்த ஆரியாம்பாள் இவ்வாறு உரைத்ததை உணர்ந்து, உத்தமர்களான முனிவர்களால் ஏவப்பட்டவரும் வயது முதிர்ந்தவருமாகிய அகஸ்தியமாமுனிவர் கூறத்துவக்கினார்.

तनयाय पुरा पतिव्रते तव पत्या तपसा प्रसादितः ।
स्मितपूर्वमुपाददे वचो रजनीवल्लभखण्डमण्डनः ॥ ४४

பதிவிரதையே! முன்னாட்களில் புதல்வனைப் பெற விருப்பம்கொண்டு நுமது கணவன் தவத்தினால் சந்திரசேகரனையாராதித்தார். அவருடைய தவத்தினால் உவகைபெற்று உமையின் கொழுனர் புன்முறுவல் பூத்துப் பகர்ந்தார்.

वरयस्व शतायुषः सुतानपि वा सर्वविदं मितायुषम् ।
सुतमेकमितीरितः शिवं सति सर्वज्ञमयाचतात्मजम् ॥ ४५

மாசற்றவளே! ''நூறு வயது ஆயுளுள்ள அநேக புத்திரர்களையாவது, நீண்ட ஆயுளில்லாத ஒரு புதல்வனையாவது வேண்டுவாயாக. யாது வேண்டும்'' என்று சிவபெருமான் அருளினார். ஸர்வக்ஞனான ஒரு புதல்வனை யளிக்கும்படி அவர் பிரார்த்தித்தார். (ஸர்வக்ஞனான சிவபெருமானையே தனக்குப் புதல்வனாக யாசித்தார் என்றும், சிவபெருமானிடத்தில், ஸர்வக்ஞனான புத்திரனையளிக்கும்படி யாசித்தார் என்றும் இருவிதமாக பொருள் கூறுதல் தகும்.)

तदभीप्सितसिद्धये शिवस्तव भाग्यात्तनयो यशस्विनि ।
स्वयमेव बभूव सर्वविन्न ततोऽन्योऽस्ति यतः सुरेष्वपि ॥ ४६

கீர்த்திவாய்ந்தவளே! தேவர்களில் பரமசிவனைத் தவிர ஸர்வக்ஞன் வேறு ஒருவருமில்லாமையால் அந்த சிவபெருமானே அவருடைய விருப்பத்தை நிறைவேற்றுவதற்குப் புதல்வனாகத் தோன்றினார். இது நுமது பாக்கியம். (புதல்வனுடைய பெருமை யாவற்றையும் கண்ணுற்று அனுபவிக்கும் பாக்கியம் தாயாகிய ஆரியாம்பாளுக்கு மட்டும் நிலவியதுபற்றி இங்கு அகஸ்தியமுனிவர் நுமது பாக்கியம் என்று அவளிடம் கூறினார்.)

इति तद्वचनं निशम्य सा मुनिवर्यं पुनरप्यवोचत ।
कियदायुरमुष्य भो मुने सकलज्ञोऽस्यनुकम्पया वद ॥ ४७

இவ்வாறு முனிவர் கூறியதைக் கேட்டு மறுபடியும் வினவினுள். ''மாமுனிவரே! இவனுடைய ஆயுட்காலம் எவ்வளவு? எல்லாமறிந்தவராக இருக்கிறீர், கருணை கூர்ந்து கூறுவீராக (என்று வினவினுள்).

शरदोऽष्ट पुनस्तथाऽष्ट ते तनयस्यास्य तथाऽप्यसौ पुनः ।
निवसिष्यति कारणान्तराद्भुवनेऽस्मिन् दश षट् च वत्सरान् ॥ ४८

எட்டு வயது. மறுபடியும் உம்முடைய புதல்வனுக்கு எட்டு வயது ஆயுள். மேலும், வேறொரு காரணத்தினுல் இவ்வுலகில் பதினறு வருடங்கள் நிலைத்திருப்பார்.

इति वादिनि भाविनीं कथामृषिमुख्ये घटजे निवार्य तम् ।
ऋषयः सह तेन शङ्करं समुपामन्त्र्य ययुर्यथागतम् ॥ ४९

இவ்வாறு சிறந்த முனிவராகிய அகஸ்தியர், வருங்காலத்திய விஷயத்தைக் கூறியபொழுது மற்ற முனிவர்கள், அவரை (இதைப்பற்றி மேலும் கூருமலிருக்கும்படி) தடுத்து ஸ்ரீசங்கரரிடம் விடை பெற்றுக்கொண்டு, அகஸ்தியருடன் வந்த வழியே சென்றனர்.

सृणिना करिणीव साऽर्दिता शुचिना शैवलिनीव शोषिता ।
मरुता कदलीव कम्पिता मुनिवाचा सुतवत्सलाऽभवत् ॥ ५०

புதல்வனிடம் அன்புமிக்க பதிவிரதையாகிய அந்த ஆரியாம்பாள் முனிவருடைய வசனத்தைக் கேட்டு, குழந்தையின் குன்றிய ஆயுளை உணர்ந்தமையால், ஈட்டியினுல் குத்தப்பட்ட பெண்யானைபோலவும், கோடையினுல் வற்றிய தாமரைக்குளம் போலவும், காற்றினுல் அசைக்கப்பட்ட வாழைமரம் போலவும் நடுங்கி வருந்தினுள்.

अथ शोकपरीतचेतनां द्विजराडित्थमुवाच मातरम् ।
अवगम्य स संसृतिस्थितिं किमकाण्डे परिदेवना तव ॥ ५१

பிறகு, முனிவர்களுடைய வசனத்தினுல் வருத்தமுற்ற தாயாரிடம் அந்த ஸ்ரீசங்கரர் கூறினுர். ''தாயே! ஸம்ஸாரத்தினுடைய நிலைமையை உணர்ந்தும் ஏன் வீணுக வருந்துகிறீர்கள்?

प्रबलानिलवेगवेल्लितध्वजचीनांशुककोटिचञ्चले ।
अपि मूढमतिः कलेबरे कुरुते कः स्थिरबुद्धिमम्बिके ॥ ५२

தாயே! கொடுங்காற்றினுல் எப்பொழுதும் அசைந்துகொண்டேயிருக்கின்ற கொடியின் கோடியில் கட்டப்பட்டுள்ள, சீனதேசத்தியத் துணிபோல் ஒருகாலும் நிலையற்ற துச்சமான இந்த தேகத்தில் நீண்டகாலம் நிலைக்கக் கூடியது என்ற நம்பிக்கையை மூடபுத்தியுள்ள யார்தான் நாட்டுவான்?

कति नाम सुता न लालिताः कति वा नेह वधूरभुञ्जि हि ।
क्व नु ते क्व च ताः क्व वा वयं भवसंगः खलु पान्थसंगमः ॥ ५३

எவ்வளவு புதல்வர்களை லாலனை செய்யவில்லை? எவ்வளவு பெண்களுடன் இன்பமனுபவிக்கவில்லை? அந்தப் புத்திரர்களும் பெண்மணிகளும் எங்கே? நாம் எங்கே? ஸம்ஸாரத்தில் சந்திப்பு வழிப்போக்கர்களுடைய சந்திப்பன்றோ?

भ्रमतां भववर्त्मनि भ्रमान्न हि किंचित्सुखमम्ब लक्षये ।
तदवाप्य चतुर्थमाश्रमं प्रयतिष्ये भवबन्धमुक्तये ॥ ५४

தாயே! அஞ்ஞானத்தினால் ஸம்ஸாரமார்க்கத்தில் ஸஞ்சாரம் செய்கின்றவர்களுக்குச் சிறிதேனும் சுகத்தைக் காணேன். ஆகையால், நான்காவது ஆசிரமத்தையடைந்து (ஸன்னியாஸத்தைப் பெற்றுக்கொண்டு) ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுதலைக்கு முயற்சி செய்யப்போகிறேன்.''

इति कर्णकठोरभाषणश्रवणाद्बाष्पपिनद्धकण्ठया ।
द्विगुणीकृतशोकया तया जगदे गद्गदवाक्यया मुनिः ॥ ५५

இவ்வாறு மிக்கக் கொடிய சொல்லைச் செவியுற்றதினால், கண்ணீர்த்ததும்பி துக்கம் இரட்டித்து, திக்கித்திக்கிக்கொண்டு அந்த தாய் தபசியாகிய ஸ்ரீசங்கரரிடம் கூறினாள்.

त्यज बुद्धिमिमां शृणुष्व मे गृहमेधी भव पुत्रमाप्नुहि ।
यज च क्रतुभिस्ततो यतिर्भवितास्यङ्ग सतामयं क्रमः ॥ ५६

குழந்தாய்! இந்த எண்ணத்தையகற்றுவாயாக. என்னுடைய சொல்லைக் கேள். இல்லறத்தைப் பெற்றுப் புதல்வனையடைந்து, வேள்விகளைச் செய்து, பிறகு துறவியாகச் செல்வாய். இதுதான் சான்றோர்களின் முறை.

कथमेकतनूभवा त्वया रहिता जीवितुमुत्सहेऽबला ।
अनयैव शुचौर्ध्वदेहिकं प्रमृतायां मयि कः करिष्यति ॥ ५७

ஒரே புதல்வனைப் பெற்ற அபலையாகிய யான் உன்னைப் பிரிந்தால் எவ்வாறு உயிர்நிலைத்தவளாகுவேன். புத்திரனே! உன் பிரிவாற்றாமையினாலேயே யான் உயிர் துறந்தால், ஈமச்சடங்குகளை யார் செய்வார்?

त्वमशेषविदप्यपास्य मां जरठां वत्स कथं गमिष्यसि ।
द्रवते हृदयं कथं न ते न कथंकारमुपैति वा दयाम् ॥ ५८

எல்லாமறிந்தவனாகவிருந்தும், குழந்தாய்! வயது முதிர்ந்த கிழவியான என்னை உதறித்தள்ளி எவ்வாறு துறப்பாய்? உன்னுடைய மனம் உருகவில்லையா? எப்படித்தான் இந்த நிலைமையிலுள்ள என்னிடம் தயை கொள்ளாமலிருக்கின்றது?

एवं व्यथां तां बहुधाऽऽश्रयन्तीमपास्तमोहैर्बहुभिर्वचोभिः ।
अम्बामशोकां व्यदधाद्विधिज्ञः शुद्धाष्टमेऽचिन्तयदेतदन्तः ॥ ५९

இவ்வாறு மிக்க வருத்தமுற்ற மாதாவை அவளுடைய அஞ்ஞானம் நீங்கும்படி வசனங்கள் பலவற்றைக் கூறி சமாதானமடையும்படிச் செய்தார்.

சாஸ்திரமுறைகளையும், உலகவியவகாரங்களையும் நன்கு உணர்ந்த அந்த ஸ்ரீசங்கரர் சுத்தமான எட்டாவது வயதில் யோசனை செய்தார்.

(சுத்தமான எட்டாவது வயது என்பதற்கு (1) கர்ப்பசம்பந்தம்விட்ட பிறகு உள்ள 8-வது வயது என்றும், (2) கலிதோஷமற்றதான வயது என்றும், (3) தூய துறவறத்தை ஏற்றுக்கொள்ளுவதற்குரியதால் சுத்தமானது என்றும், (4) சுத்தமான காரியங்களனைவற்றிற்கும் உதயகாலம் என்றும், (5) பந்தத்திலிருந்து அறுபட்டு உலகத்தின் உய்த்தலுக்காக உற்சாகத்தை விளக்கக்கூடியதுபற்றியும் சுத்தமானது என்றும் பல கருத்துக்கள் உணரத்தக்கவை.)

मम न मानसमिच्छति संसृतिं न च पुनर्जननी विजिहासति ।
न च गुरुर्जननी तदुदीक्षते तदनुशासनमीषदपेक्षितम् ॥ ६०

என்னுடைய மனம் ஸம்ஸாரப்பற்றை விரும்புகிறதில்லை. தாயாரோ என்னைப் பிரிய விரும்புகிறதுமில்லை. அந்தத் தாயார் என்னுடைய மனதின் நிலைமையை உணருகிறாரில்லை. ஆயினும் அவள் குருவன்றோ? தர்மங்களை யறிந்து அனுஷ்டித்தும், ஞானத்தையும் அடைந்து பல சுகங்களையும், நித்தியசுகமான முக்தியையும் அனுபவிப்பதற்குக் காரணமாகிய இந்த உடலை உதரத்தில் உய்வித்து அருளிய அத்தகைய தாயாரன்றோ முதல் தெய்வம்? அவளுக்கு விரோதமான காரியத்தில் முயலுவது மூடத்தனமன்றோ? ஆனதுபற்றி எனது விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்ள தாயாகிய குருவினுடைய அனுமதிவேண்டும். அந்த அனுமதி பூர்த்தியாகக் கிட்டாவிடினும் அரைமனதுடனாவது கிட்டுவதும் போதுமானது. அதுதான் என்னால் எதிர்பார்க்கப்படுகின்றது.

इति विचिन्त्य स जातु मिमंक्षया बहुजलां सारेतं समुपाययौ ।
जलमगाहत तत्र समग्रहीज्ञलचरश्चरणे जलमीयुषः ॥ ६१

இவ்வாறு யோசனைசெய்து, ஒருநாள் அவர் ஸ்நானம் செய்வதற்கு நதிக்குச் சென்றார். வெள்ளப்பெருக்குள்ள நதியிலிறங்கவும் முதலையொன்று அவருடைய கால்களைப் பிடித்து இழுத்தது.

स च रुरोद जले जलचारिणा धृतपदो ह्रियतेऽम्ब करोमि किम् ।
चलितुमेकपदं न पारये बलवता विवृतोरुमुखेन ह ॥ ६२

விசாலமான வாயைத்திறந்துக் கால்களைக் கவ்விக்கொண்டு மிக்க பலமுள்ள முதலையினால் இழுக்கப்பட்ட அவர் ''ஹோ'' என்று கதறியழுது கொண்டு ''அம்மா! என் செய்வேன். ஒரு அடிகூட வைக்கவல்லேனல்லன். எவ்வாறு மேலே எழுவேன்'' என்று உரக்கக் கத்தினார்.

गृहगता जननी तदुपाशृणोत्परवशा द्रुतमाप सरित्तटम् ।
मम मृतेः प्रथमं शरणं धवस्तदनु मे शरणं तनयोऽभवत् ॥ ६३

கிருகத்திலிருந்த தாயார் அந்தக் குரலைக் கேட்டு துக்கத்திலாழ்ந்து விரைவில் ஆற்றின் கரைக்கு வந்துப் புதல்வனுடைய நிலைமையைப் பார்த்துக் கூறினாள்.

கொழுனன் இருக்குங்கால் அவரே எனக்கு அடைக்கலமாகவிருந்தார். அதற்குப்பின் புதல்வன் புகலிடமாகவானுன்.

स च मरिष्यति नक्रवशं गतः शिव न मेऽजनि हन्त पुरा मृतिः ।
इति शुशोच जनन्यपि तीरगा जलगतात्मजवक्त्रगतेक्षणा ॥ ६४

அந்தப் புத்திரனும் முதலையின் வாயில் சிக்கிக்கொண்டு உயிர் இழக்கப் போகிறுன். ஹா சிவமே! முந்தியே எனக்கு மரணம் ஏற்படாமல் போயிற்றே! என்று கூறிக்கொண்டு, தண்ணீரில் நின்றுகொண்டிருக்கும் புதல்வனிடமே கண்களைச் செலுத்திக் கரையில் நின்றுகொண்டு அந்த மாது விம்மினுள்.

त्यजति नूनमयं चरणं चलो जलचरोऽम्ब तवानुमतेन मे ।
सकलसंन्यसने परिकल्पिते यदि तवानुमतिः परिकल्पये ॥ ६५

தாயே! உமது அநுமதியினுல் எல்லாவற்றையும் துறத்தல் என்பதை யான் தீர்மானம் செய்துகொண்டால், சஞ்சலஸ்வபாவமுள்ள இந்த ஜலஜந்து என் காலை விட்டுவிடும். உமது அநுமதியிருந்தால் அந்த துறவறத்தை தரித்துக்கொள்ளுகிறேன். (துக்கம் பாபத்தின் பயன் என்பதில் ஐயமில்லை. அந்தப் பாபம் பயனையனுபவிப்பதனுலும், புண்ணியத்தைச் செய்வதனுலும் அறுபடுகிறது. அந்தப் புண்ணியம் யாதெனில், ஸன்னியாஸமேயாகும். பற்பல தர்மங்களைக் கூறுகின்ற உபநிடதங்கள் துறவறத்தையே ஒப்பற்றதாக கோஷிக்கின்றன. எண்ணில்லா வினைகளால் விளையும் துன்பங்களனைத்தையும் தொலைப்பது துறவறம். சிறந்த புண்ணியத்தையும் அளிப்பது அதுதான். ''நான்'' என்ற தேகாபிமானம் கொண்டவனுக்கு மற்றவனிடத்திலிருந்தும், மற்றவர்களுக்கு அவனிடத்திலிருந்தும் அச்சமுண்டாவது நிச்சயம். अभयं सर्वभूतेभ्यो मत्तः स्वाहा (அபயம் ஸர்வபூதேப்யோ மத்த: ஸ்வாஹா) என்று துறவறத்தைப் பெற்றுக்கொள்ளுவதற்கு முதலில் கூறவேண்டிய மூலமந்திரம். என்னிடமிருந்து ஒரு பிராணிக்கும் அச்சம் ஏற்படக்கூடாது. எல்லா பிராணிகளுக்கும் அபயம். எனக்கும் மற்ற பிராணிகளிடமிருந்து பயமில்லை என்பது அந்த மந்திரத்தின் பொருள். இந்த சங்கற்பம் உறுதியாக ஏற்பட்டவனுக்கு உலகமனைத்தும் வசமாகுமேயன்றி தீமை விளைவிக்காது. அதற்குத் தாயின் அநுமதி முக்கிய அவசியம். ஆகையால், ஸ்ரீசங்கரர் இவ்வாறு கூறினுர்: ஸர்வசக்தரும், ஸர்வக்ஞருமாகிய ஸ்ரீசங்கரர், தன்னையே தஞ்சம்கொண்ட தாயாருக்குத் தன் பிரிவாற்ருமையினுலுள்ள வருத்தத்தையகற்ற வேறுவழி காணுதவர்போல இவ்வாறு அபிநயித்தது உலகநாடகமாடுதல் என்று உணரவேண்டும். பகவானுடைய சங்கற்பத்தின் காரணத்தைத் தீர்மானம் செய்வதில் அற்பபுத்தியுள்ள நாம் எம்மாத்திரம்.)

इति शिशौ चकिता वदति स्फुटं व्यधित साऽनुमतिं द्रुतमम्बिका ।
सति सुते भविता मम दर्शनं मृतवतस्तदु नेति विनिश्चयः ॥ ६६

புதல்வன் இவ்வாறு தெளிவாக கூறுகையில் நடுங்கிக்கொண்டு தாயார் விரைவில் அநுமதியளித்தாள். துறவியாகவாவது உய்த்திருந்தால் எனக்கு தரிசனம் கிட்டும். (அதற்கு அநுமதிக்காத குறையினுல்) இறந்துவிட்டால் அந்தக் காட்சிகூட கிட்டாது என்பது திண்ணம் (என்று எண்ணினுள்).

तदनु संन्यसनं मनसा व्यधादथ मुमोच शिशुं खलनक्रकः ।
शिशुरुपेत्य सरित्तटमत्रसन् प्रसुवमेतदुवाच शुचाऽऽवृताम् ॥ ६७

உடனே மனதினுல் ஸன்னியாஸத்தைச் செய்தார். अभयं सर्वभूतेभ्यो मत्तः स्वाहा என்ற प्रैषमन्त्रोच्चारणं செய்தார். (அபயம் ஸர்வபூதேப்யோ மத்த: ஸ்வாஹா என்ற பிரைஷமந்திரத்தின் உச்சாரணத்தைச் செய்தார்.) பிறகு துஷ்ட முதலேயும் காலே விட்டது. பாலனுகிய ஸ்ரீசங்கரர் சிறிதுகூட அச்சமில்லாதவராக கரைக்கு வந்து வருத்தமுற்ற தாயாரிடம் கூறினர். (இது ஆபத் ஸன்னியாஸம் என்று கூறப்படுகிறது.)

मातर्विधेयमनुशाधि यदत्र कार्यं संन्यःसिना तदु करोमि न सन्दिहेऽहम् ।
वस्त्राशने तव यथेष्टममी प्रदद्युर्गृह्णन्ति ये धनमिदं मम पैतृकं यत् ॥ ६८

தாயே! துறவியான யான் இங்கு இப்பொழுது செய்யவேண்டிய காரியத்தை உத்தரவளிப்பீராக. சந்தேகமின்றிச் செய்கின்றேன். தங்களுடைய பராமரிப்பைப்பற்றிக் கவலேகொள்ள வேண்டாம். தந்தையின் செல்வம் என்னேச் சேரவேண்டியது யாதோ, அதனே உரிமையுடன் பெற்றுக்கொள்ளுகின்ற உற்ற உறவினர் தங்களுக்கு வேண்டிய ஆடை, ஆகாரம் முதலியவற்றையளித்துப் பராமரிப்பார்கள். (இந்தச் செய்யுளினுல் ஸ்ரீசங்கரருடைய முன்னேர்கள் மிக்கச் செல்வம் நிறைந்தவர்கள் என்பது தெளிவாகின்றது.)

देहेऽम्ब रोगवशगे च सनाभयोऽमी द्रक्ष्यन्ति शक्तिमनुसृत्य मृतिप्रसङ्गे ।
अर्थग्रहाज्जनभयाच्च यथाविधानं कुर्युश्च संस्कृतिममी न बिभेयमीषत् ॥ ६९

தாயே! உடல் நலம் குன்றினுல் தாயாதிகள் இயன்றவாறு கவனித்துக் கொள்வார்கள். மரணம் நேர்ந்தால் செல்வத்தைப் பெற்றுக்கொண்டதினுலும், ஜனங்கள் பழிப்பார்கள் என்ற அச்சத்தினுலும், அந்த தாயாதிகள் தகுந்த முறையில் ஸம்ஸ்காரத்தையும் செய்வார்கள். ஆகையால், தாயே! சிறிதுகூட கவலேப்படவேண்டாம்.

(மரணமுற்ருல் தனக்கு ஸம்ஸ்காரத்தை தாயாதிஜனங்கள் செய்வார்கள் என்று புத்திரன் கூறிய புதுமையைக் கேட்டுத் தாங்கமுடியாத துயரத்துடன் தாயார் கூறுகிருள்.)

यज्जीवितं जलचरस्य मुखात्तदिष्टं संन्याससंगरवशान्मम देहपाते ।
संस्कारमेत्य विधिवत्कुरु शङ्कर त्वं नो चेत्प्रसूय मम किं फलमीरय त्वम् ॥ ७०

ஸன்னியாஸத்திற்குள்ள (உன்னுடைய) மன உறுதியை நான் அநுமதித்தது, முதலேவாயிலிருந்து தப்பித்து, நீ உயிர் வாழவேண்டுமென்று என்னுடைய விருப்பத்தினுலன்ருே! அவ்வாறு நீ தப்பித்துக்கொள்ளுவதற்கு உன் வசனப்படியே நேர்ந்த ஒப்பந்தம், உன்னே ஸன்னியாஸத்திற்கு அநுமதித்தலேயல்லாது எனக்கு மரணமேற்படும்பொழுது செய்தற்குரிய ஸம்ஸ்காரம் தாயாதிகள் மூலமாக நடைபெறுதல் என்ற ஒப்பந்தமில்லேயல்லவா? ஆகையால், எனது உடல் உயிரிழந்தால், அருகில்

வந்து, சங்கர! முறைப்படி ஸம்ஸ்காரத்தை நீயே செய்யவேண்டும். இல்லாவிடில் உன்னை ஈன்றதற்கு எனக்கு பயன் யாது? சங்கர! நீயே கூறுவாயாக.

(நாமத்தையும், மகிமையையும் காதினுல் கேட்டு, மனதில் நினைத்து, வாக்கினுல் கூறுபவர்களுக்கெல்லாம் சம்:ஸௌகத்தை (அகண்டசுகத்தை) அளிக்கின்ற பரமேசுவரனை ஒன்பது மாதங்கள் கருவில்கொண்டு, பிறந்த பின் பராமரித்த அந்தத் தாயாருக்கு தன்னுடைய விருப்பத்தை அத்தகைய புதல்வனிடம் வேண்டுவதற்கு உரிமையில்லையா? விதியையும் வெல்ல வல்லமையுள்ளவரிடம் தன் விருப்பத்தைப் பூர்த்திசெய்யும்படி அந்த மாதுவிதிக்கின்ருள். பாக்கியவதியாகிய அந்தத் தாயார் ''ஸம்ஸ்காரத்தை நீயே செய்'' என்று விதித்ததினுல், துறவிக்கு அந்த ஸம்ஸ்காரத்தைச் செய்ய உரிமையில்லை என்று மறுக்கக்கூடாது என்று உரிமையுள்ள உத்தரவு.)

தன் கையினுலேயே ஸம்ஸ்காரத்தை விரும்பிய தாயாருடைய வற்புறுத்தலைக் கேட்டு ஸ்ரீசங்கரர் கூறுகின்ருர்:-

अह्न्यम्ब रात्रिसमये समयान्तरे वा संचिन्तय स्ववशगाऽवशगाऽथवा माम् ।
एष्यामि तत्र समयं सकलं विहाय विश्वासमाप्नुहि मृतावपि संस्करिष्ये ॥ ७१

தாயே! பகலிலோ, இரவிலோ, சந்தியாகாலத்திலோ, தன் நினைவுடனே, நினைவிழந்தோ, துக்கபரவசத்தினுலோ என்னைத் தாங்கள் நினைத்தமாத்திரத்திலேயே என்னுடைய கடமைகளனைத்தையும் விட்டு, வந்து விடுகிறேன். தங்களுடைய உடல் உயிரிழந்தால், என் கையினுலேயே ஸம்ஸ்காரத்தையும் செய்கிறேன். நம்பிக்கைக்கொள்வீர்களாக. (விரைவில் வருவதிலும், தானே ஸம்ஸ்காரம் செய்வதிலும் அவநம்பிக்கைகொள்ள வேண்டாம் என்பதை உறுதிப்படுத்துவதற்கு, அந்த வசனத்தை இரண்டிற்கும் நடுவிலமைத்துக் கூறினுர். காகாக்ஷிநியாயம்=காகம் ஒரே கண்ணினுல் இரு பக்கங்களிலும் பார்ப்பதுபோல், विश्वासमाप्नुहि (விசுவாஸமாப்னுஹி) என்பது, தான் வருவதிலும் ஸம்ஸ்காரம் செய்வதிலும் நம்பிக்கை கொள்வீர்களாக என்று விளக்குகின்றது. संस्करिष्ये (ஸம்ஸ்கரிஷ்யே) என்ற பதம், செய்கிற காரியத்தின் பயன் தன்னைச் சேரும் என்று காண்பிக்கிறது. स्वरितञितः कर्त्रभिप्राये क्रियाफले (ஸ்வரிதஞித: கர்த்ரபிப்ராயே கிரியாபலே) என்று பாணினி முனிவருடைய ஸூத்திரம். பற்றற்ற துறவியாயினும், மாத்ருகாரியம் விலக்கற்கரிது என்பதை நடைமுறையில் உலகங்களுக்கு உபதேசம் செய்தார்.)

துறவிக்குத் தகுதியில்லாத காரியத்தை தாயாரின் கட்டளைக்கிணங்கி ஏற்றுக்கொண்டு, தன்னுடைய வேண்டுகோளை ஏற்குமாறு தாயாரிடம் கூறுகிருர்:-

संन्यस्तवाञ्छिशुरयं विधवामनाथां क्षिप्त्वेति मां प्रति कदाऽपि न चिन्तनीयम् ।
यावन्मया स्थितवता फलमापनीयं मातस्ततः शतगुणं फलमापयिष्ये ॥ ७२

இந்த பாலன் விதவையான தாயாரை கதியற்றவளாக விட்டுவிட்டு, ஸன்னியாசியாகச் சென்று விட்டான் என்று ஒருகாலும் என்மீது குற்றம் நினைக்கக்கூடாது. (என்று வேண்டுகோள்). நான் அருகிலிருந்தால் எவ்வளவு

பயன் ஏற்படுமோ, அதைக்காட்டிலும் நூறுமடங்கு அதிகமான பயனை தூரத்திலிருந்துகொண்டே விளைவிப்பேன்.

इत्थं स्वमातरमनुग्रहणेच्छुरुक्त्वा प्रोचे सनाभिजनमेष विचक्षणाग्र्यः ।
संन्यासकल्पितमना व्रजितोऽस्मि दूरं तां निक्षिपामि जननीमधवां भवत्सु ॥ ७३

திறமை வாய்ந்தவர்களில் சிறந்த ஸ்ரீசங்கரர், அருள்பெற விரும்பியவராகத் தாயாரிடம் இவ்வாறு கூறி, பந்துஜனங்களிடம் கூறினார். ''ஸன்னியாஸத்தில் ஸங்கற்பம் கொண்டவனாக யான் தூரதேசத்திற்குச் செல்லுகின்றேன். விதவையாகிய தாயை தங்களிடம் ஒப்படைத்துள்ளேன்.

एवं सनाभिजनमुत्तममुत्तमाग्र्यः श्रीमातृकार्यमभिभाष्य करद्वयेन ।
सम्प्रार्थयन् स्वजननीं विनयेन तेषु न्यक्षेपयन्नयनजाम्बु निषिञ्चमानाम् ॥ ७४

சான்றோர்களில் சான்றவராகிய அவர் உத்தமர்களான உறவினரிடம் இவ்வாறு தாயின் பாதுகாப்பைச் செய்யுமாறு கூறி பணிவுடன் இரண்டு கைகளையும் கூப்பி பிரார்த்தித்து, பிரிவாற்றாமையினால் கண்ணீர் பொழிகின்ற தாயாரை அவர்களிடம் ஒப்பித்துவிட்டு, வணங்கி, விடைபெற்றுக் கொண்டார்.

आत्मीयमन्दिरसमीपगतामथासौ चक्रे विदूरगनदीं जननीहिताय ।
तत्तीरसंश्रितयदूद्वहधाम किंचित्सा निम्नगाऽऽरभत ताडयितुं तरङ्गैः ॥ ७५

தூரத்தில் பெருகிக்கொண்டிருந்த எந்த நதியை தாயாருடைய சௌகரியத்திற்காக தன்னுடைய கிருகத்திற்கு அருகில் வரச்செய்தாரோ அந்த நதி பக்கத்திலிருந்த ஸ்ரீகிருஷ்ணன்கோவிலை அலைகளால் அடிக்க ஆரம்பித்தது.

वर्षासु वर्षति हरौ जलमेत्य किंचिदन्तःपुरं भगवतोऽपनुनोद मृत्स्नाम् ।
आरब्ध मूर्तिरनघा चलितुं क्रमेण देवोऽबिभेदिव न मुञ्चति भीरुहिंसाम् ॥ ७६

மழைகாலத்தில் மழை பொழியவும், வெள்ளம் உள்ளே புகுந்து மண்ணைப்பறிக்கவும், மாசற்ற மூர்த்தி அசைவுற்றது. அந்த வெள்ளத்தினால் தேவர் பயமடைந்தார். வெள்ளமும் பெருகித் துன்பத்தை அதிகமாகச் செய்தது. பயந்தவனை ஒருவனும் துன்பப்படுத்தாமலிருப்பதில்லை. (வேறு பொருள், தன் தாயாருடைய சௌகரியத்திற்காக நதியை அண்டையில் கொண்டுவந்தவர் ஸ்ரீசங்கரர். அவரே தனக்குத் துன்பமில்லாமல் செய்வார் என்று எண்ணி ஸ்ரீகிருஷ்ணன் வாளாயிருந்தாரேயன்றி வேறு காரணமில்லை. தான் அந்த வெள்ளத்திற்குப் பயப்படவில்லை. பீருவாகிய=பெண்ணாகிய நதியை, ஹிம்ஸை செய்யக்கூடாது என்று கருதி அந்தக்காரியத்தைக் கைவிட்டார். ஒருவர் (ஸ்ரீசங்கரர்) தன் தாயாருக்கு துன்பம் கூடாது என்று எண்ணிக்கொண்டு அருகில் வரவழைத்த நதி என்ற பெண்ணை தான் துன்பப்படுத்தக்கூடாது என்று ஸ்ரீகிருஷ்ணன் மனதில் கருதினார். ஸ்ரீராமாவதாரத்தில் சமுத்திரராஜனை நடுங்கச்செய்தவருக்கு அந்த வெள்ளத்தைத் தடுப்பது முடியாத காரியமன்று. அதனை ஸ்ரீசங்கரருடைய செயலாற்றலுக்கு விட்டார்.)

प्रस्थातुकाममनघं भगवाननङ्गवाचाऽवदत्कथमपि प्रणिपत्य मातुः ।
पादारविन्दयुगलं परिगृह्य चाज्ञां श्रीशङ्करं जनहितैकरसं स कृष्णः ॥ ७७

தாயாருடைய பாதகமலங்களை வணங்கி மிக வருத்தத்துடன் அவளுடைய அநுமதியையும் பெற்றுப் புறப்படத் தயாராகவிருந்தவரும், மாசற்றவரும், உலகங்களுக்கு ஹிதத்தையேச் செய்வதில் ஆர்வம்கொண்டவருமாகிய ஸ்ரீசங்கரரிடம் ஸ்ரீகிருஷ்ணபகவான் அசரீரிவாக்கினுல் உரைத்தார்.

आनेष्ट दूरगनदीं कृपया भवान् यां सा माऽतिमात्रमनिशं बहुलोर्मिहस्तैः ।
क्लिश्नाति ताडनपरा वद कोऽभ्युपायो वस्तुं क्षमे न नितरां द्विजपुत्र यासि ॥ ७८

தூரத்தில் ஓடிக்கொண்டிருந்த எந்த நதியை தாயாரிடம் கருணை கொண்டு இங்கு வரவழைத்தாயோ, அந்த நதி எப்பொழுதும் அலைகளாகிய கைகளால் என்னையடித்துத் துன்பப்படுத்துகின்றது. சொல்; என்னவழி? நான் இங்கு வசிக்கவல்லேனல்லன். பிராம்மணகுமாரனே! நீயோ போகிருய்.

आकर्ण्य वाचमिति तामतनुं गुरुर्नः प्रोद्धृत्य कृष्णमचलं शनकैर्भुजाभ्याम् ।
प्रातिष्ठिपन्निकट एव न यत्र बाधा वद्येत्युदीर्य सुखमास्स्व चिराय चेति ॥ ७९

அந்தச் சிறந்த அசரீரிச் சொல்லைக் கேட்டு நமது ஆசாரியர் (நூலாசிரியரின் சொல்) தனது இரு கைகளாலும் அந்தக் கிருஷ்ணவிக்கிரகத்தை ஆதரவுடன் எடுத்து நதியின் வெள்ளத்தினுல் அபாயம் நிலவாத இடத்தில் ''நீண்ட காலம் இங்கு சுகமாக இருப்பீராக'' என்று கூறி பத்திரமாகப் பிரதிஷ்டை செய்தார்.

तस्मात्स्वमातुरपि भक्तिवशादनुज्ञामादाय संसृतिमहाब्धिविरक्तिमान् सः ।
गन्तुं मनो व्यधित संन्यसनाय दूरं किं नौस्थितः पतितुमिच्छति वारिराशौ ॥ ८०

அந்த ஸ்ரீசங்கரர் பக்தியினுல், ஸ்ரீகிருஷ்ணரிடமிருந்தும் தாயாரிடமிருந்தும் அநுமதிபெற்று, கடல்போன்ற ஸம்ஸாரத்தில் வைராக்கியமுற்றமையால், கிரமஸன்னியாஸத்தைப் பெறுவதற்கு தொலைவில் செல்ல விரும்பினுர். கடப்பதற்கு ஓடமிருக்கையில் ஒருவன் அதன் மூலமாகக் கடலைத் தாண்டுவானேயன்றி சமுத்திரத்தில் விழுவதற்கு விரும்புவாஞ? அது போல உறுதியான வைராக்கியம் பெற்றவர் ஸம்ஸார சமுத்திரத்தில் உழலமாட்டார்.

इत्थं सुधीः स निरवग्रहमातृलक्ष्मीशानुग्रहो घटजबोधितभाविवेदी ।
एकान्ततो विगतभोगपदार्थतृष्णः कृष्णे प्रतीचि निरतो निरगान्निशान्तात् ॥ ८१

சிறந்த புத்திமானுகிய அவர் தாயாருடையவும், திருமகளின் நாயகராகிய ஸ்ரீகிருஷ்ணபரமாத்மாவினுடையவும் அழிவற்ற அனுக்கிரகத்தைப் பெற்றுக்கொண்டு, அகஸ்தியமுனிவரால் கூறப்பட்ட தனது ஆயுட்காலத்தை அறிந்ததினுல் விஷயங்களில் வைராக்கியம் கொண்டவராகி, பரமாத்மாவாகிய ஸ்ரீகிருஷ்ணரை உள்ளத்தில் தியானம் செய்துகொண்டு இல்லத்திலிருந்து புறப்பட்டார்.

यस्य त्रिनेत्रापरविग्रहस्य कामेन नास्थीयत दृक्पथेऽपि ।
तन्मूलकः संसृतिपाशबन्धः कथं प्रसज्येत महानुभावे ॥ ८२

முக்கண்ணனுடைய மாறு உருவமுற்றவராகத் தோன்றிய அவருடைய கண்ணுக்கெதிரில் காமனே நிற்கவில்லை. அப்படியிருக்கையில், அந்தக்காமனைக் காரணமாகக் கொண்ட ஸம்ஸாரபந்தம் மகானுபாவராகிய அவருக்கு ஏற்படுமா? (காரணமில்லாவிடில் காரியம் எவ்வாறு உண்டாகும்?)

அவதாரரூபியாகிய அந்த ஸ்ரீசங்கரர் மூலரூபியாகிய சங்கரரைக்காட்டிலும் சிறப்புள்ளவர் என்று கூறுகிறார்:-

स्मरेण किल मोहितौ विधिविधू च जातूत्पथौ
तथाऽहमपि मोहिनीकुचकचादिवीक्षापरः ।
अगामहह मोहिनीमिति विमृश्य सोऽजागरीत्
यतीशवपुषा शिवः स्मरकृतार्तिवार्तोज्झितः ॥ ८३

''ஒரு காலத்தில் பிரம்மதேவரும் சந்திரனும் காமத்தினால் மயங்கியவர்களாகத் தவறான வழியில் கால்வைத்தனர். (அவர்களைக் கூறுவானேன்.) ஆஹா, மோகினியின் கூந்தலையும் குசங்களையும் கண்ணுற்ற நானே அந்த மோகினியினிடம் போகத்தை விரும்பினேன்'' என்றுணர்ந்து, நன்கு யோசனையும் செய்து 'காமத்தின் துன்பம்' என்ற பேச்சுக்கூட தன்னை பாதிக்காமலிருக்கும்படி அகற்றித் துறவிவேஷத்தில் விளங்கினார்.

निष्पत्राकुरुतासुरानपि सुरान् मारः सपत्राऽकरो -
दप्यन्यानिह निष्कुलाऽकृततरां गन्धर्वविद्याधरान् ।
यो धानुष्कवरो नराननलसात्कृत्वोदलासीदलं
यस्तस्मिन्नशुशूरतैष मुनिभिर्वर्ण्यः कथं शङ्करः ॥ ८४

தனுர்வித்தையில் வெற்றிபெற்ற காமதேவன் அசுரர்களைத் தன்னுடைய அம்புக்கு இலக்காக்கி அவர்களுடைய இறக்கைகளையறுத்தான். தேவர்களை அம்பெய்து இறக்கைகளுள்ளவர்கள்போல் ஆங்காங்கு பறக்கச் செய்தான். கந்தர்வர்களையும் வித்யாதரர்களையும், குலமற்றவர்களாகச் செய்தான். (சிற்றின்பத்திற்கு ஈடுபடுத்தி அழகையழித்தான், குலத்தைக்கெடுத்தான், உடல்நலம் குன்றச் செய்தான்.) நரர்களை நெருப்பிற்கிரையாக்கினான். அத்தகைய மன்மதனிடத்தில் தன் சௌரியத்தைக் காண்பித்த ஸ்ரீசங்கரர் முனிவர்களாலும் வர்ணிக்கத்தக்கவரோ?

शान्तो दान्त उपरतस्तितिक्षुः समाहितः श्रद्धावित्तो भूत्वा, तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत् என்று உபனிஷத்தில் கூறியுள்ள ஆறு குணங்களைப் பெற்றவர் என்று கூறுகிறார்:-

शान्तिश्चावशयन्मनो गतिमुखा दान्तिर्न्यरुद्ध क्रियाः
आधात्ता विषयान्तरादुपरतिः क्षान्तिर्मृदुत्वं व्यधात् ।
ध्यानैकोत्सुकतां समाधिविततिश्चक्रे तथाऽऽस प्रिया
श्रद्धा हन्त वसुप्रथाऽस्य तु कुतो वैराग्यतो वेद्मि नो ॥ ८५

சாந்தி என்ற குணம் அவருடைய மனதைக் கைப்பற்றியது. தமம்=பொறிகளையடக்குதல், என்ற அந்த குணம் ஆத்மதத்துவத்தையுணருவதற்கு விரோதமான செயல்களைத் தடுத்தது. சிரவணம், மனனம், நிதித்தியாஸனம் என்பவைகளைத் தவிர மற்றவிஷயங்களிலிருந்துப் பின்வாங்குதல் ஞானத்திற்குரிய செயல்களை வளர்த்தது. பொறுமை மிருதுத்தன்மையையளித்தது. சமாதி, ஆத்மத்தியானத்திலேயே மனதை நிலைநாட்டியது. ஞானியின் செல்வமாகக் கூறப்படுகின்ற சிரத்தை தன்னை இணைபிரியாத மனைவியாகவிருந்தது. மேற்கூறிய ஆறு குணங்களும் இந்த பால்லியத்தில் அவருக்கு எத்தகைய வைராக்கியத்தினால் உண்டாயின என்பதை அறிவோமில்லை.

विजनतावनितापरितोषितो विधिवितीर्णकृतात्मतनुस्थितिः ।
परिहरन् ममतां गृहगोचरां हृदयगेन शिवेन समं ययौ ॥ ८६

விஜனதையாகிய=ஜனஸஞ்சாரமின்மையாகிய மனைவியினால் சந்தோஷமடையும்படி செய்யப்பட்டவராகவும், தெய்வச்செயலால் கிடைத்ததைக் கொண்டு உடலைவளர்த்துகிறவராகவும், கிருகத்தில் ஆசையைத் துறந்தவராகவும் அவர் மனதில் விளங்கிக்கொண்டிருக்கும் பரமசிவனுடன் வழி நடந்தார்.

गच्छन्वनानि सरितो नगराणि शैलान् ग्रामाञ्जनानपि पशून् पथि सोऽपि पश्यन् ।
नन्वैन्द्रजालिक इवाद्भुतमिन्द्रजालं ब्रह्मैवमेव परिदर्शयतीति मेने ॥ ८७

காடுகளையும், ஆறுகளையும், நகரங்களையும், மலைகளையும், கிராமங்களையும் கடந்து செல்லுகையில் மனிதர்களையும், விலங்குகளையும் மற்றுமனைவற்றையும் கண்ணுற்று, ''இந்திரஜாலக்காரன் ஜாலவித்தை காண்பிப்பது போல பிரம்மவஸ்து ஒன்றே இவ்வாறு பலவிதமாகத் தோற்றமளிக்கின்றது'' என்று அவர் நினைத்தார்.

वादिभिर्निजनिजाध्वकर्शितां वर्तयन् पथि जरद्गवीं निजे ।
दण्डमेकमवहज्जगद्गुरुर्दण्डिताखिलकदध्वमण्डलः ॥ ८८

கெட்ட நெறிகளை (மதங்களை) அறுத்த உலககுருவாகிய அவர் பற்பல வாதிகளால் தம் வழியிலிழுத்துச் செல்லப்பட்ட அநாதிகாலத்திலிருந்துள்ள வேதவாக்கியமாகிய கிழப்பசுவை, உண்மையான வழியில் அழைத்துச் செல்லுவதற்காகவோ என்று தோன்றுமாறு, கையில் ஒரு தண்டத்தை தரித்தார். (ஸன்யாசிக்கு உரியதான தண்டம் தரித்தலை சிலேடை உவமை என்ற அலங்காரங்களாக கூறுகிறார்.)

सारङ्गा इव विश्वकद्रुभिरहंकुर्वद्भिरुच्छृंखलै -
जल्पाकैः परमर्मभेदनकलाकण्डूलजिह्वाञ्चलैः ।
पाखण्डैरिह कान्दिशीकमनसः कं नाप्नुयुर्वैदिकाः
क्लेशं दण्डधरो यदि स्म न मुनिस्त्राता जगद्देशिकः ॥ ८९

உலககுருவாகிய அந்த முனிவர், தண்டத்தை தரித்து நம்மைக் காப்பாற்ருவிடில், பிறருடைய பிராணனையெடுப்பதற்கு ''துறுதுறு'' என்று துடிக்கும் தன்மையுள்ள நாவையுடையவர்களும், பலவாறு உளருகிறவர்களுமாகிய பாஷண்டர்களால் கட்டிலிருந்து விடுபட்ட வேட்டைநாய்களால் மான்கள் பயமுற்றுத் துன்பப்படுவதுபோல் வேதமார்க்கத்தையே பின்பற்றிய ஆஸ்திகர்களாகிய ஸாதுக்கள் எத்தகைய துன்பத்தையடைந்திருக்கமாட்டார்கள்.

(விசேஷணங்கள் உபமானத்திற்கும் உபமேயத்திற்கும் பொருந்தும். கட்டுக்கு அடங்காத வேட்டைநாய்கள்போல் ஆஸ்திகமதத்திற்கு அடங்காதவர்களும், ஆஸ்திகமதத்தை நிந்தித்து, மனதிற்கு துன்பத்தையும் விளைவிக்கின்றவர்கள் பாஷண்டர்கள்.)

दण्डान्वितेन धृतरागनवाम्बरेण गोविन्दनाथवनमिन्दुभवातटस्थम् ।
तेन प्रविष्टमजनिष्ट दिनावसाने चण्डत्विषा च शिखरं चरमाचलस्य ॥ ९०

தண்டம் தரித்தவரும் காஷாயவஸ்திரமணிந்தவருமாகிய அந்த சங்கரர் நர்மதை நதியின் கரையிலுள்ள ''கோவிந்தபகவத்பாதர்'' வாசம் செய்யும் வனத்தில் புகுந்தார். சூரியனும் அஸ்தமனமலையை அடைந்தான்.

तीरद्रुमागतमरुद्विगतश्रमः सन् गोविन्दनाथवनमध्यतलं लुलोके ।
शंसन्ति यत्र तरवो वसतिं मुनीनां शाखाभिरुज्ज्वलमृगाजिनवल्कलाभिः ॥ ९१

அழகிய மான்தோல், மரவுரி இவைகள் தொங்குகின்ற மரங்களின் தாவுகள் முனிவர்களுடைய வாசத்திற்கு அறிகுறியாகவிருந்தன. அந்த வனத்தின் மத்தியில் சென்று, நதிக்கரையிலுள்ள மரங்களின் காற்றினல் வழிநடந்த களைப்பு நீங்கியவராக கோவிந்தநாதபாதருடைய வாசஸ்தலத்தைக் கண்டார்.

आदेशमेकमनुयोक्तुमयं व्यवस्यन् प्रादेशमात्रविवरप्रतिहारभाजम् ।
तत्र स्थितेन कथितां यमिनां गणेन गोविन्ददेशिकगुहां कुतुकी ददर्श ॥ ९२

ஆத்மஸ்வரூபத்தையுணர்த்தும் உபநிஷத்தின் பரமரஹசியத்தை உபதேசம் பெற்று அறிந்துகொள்ள முயற்சிக்கின்றவரும், அதற்குக் குருவைக் காணக் குதூகலம் கொண்டவருமான ஸ்ரீசங்கரர், அங்கிருந்த முனிவர்களால் கூறப்பட்டதும், சிறிய துவாரத்தையே துவாரபாலகனகக்கொண்டதுமான கோவிந்தநாதபாதராகிய ஆசாரியருடைய குகையைக் கண்ணுற்ருர்.

यस्य प्रपन्नपरितोषदुहो गुहायाः स त्रिः प्रदक्षिणपरिक्रमणं विधाय ।
द्वारं प्रति प्रणिपतञ्जनतापुरोगं तुष्टाव तुष्टहृदयस्तमपास्तशोकम् ॥ ९३

தன்னைத் தஞ்சம் கொண்டவர்களுக்குச் சந்தோஷத்தைச் சுரக்கின்ற அவருடைய குகைக்கு மூன்று தடவை வலம்வந்து வாயிலை வணங்கி, சந்தோஷித்த மனமுள்ளவராக, ஜனங்களுக்குத் தலைவரும் சீடர்களுடைய சகல சோகங்களையும் சிதறடிக்கின்றவருமான அவரைத் துதித்தார்.

पर्यङ्कतां भजति यः पतगेन्द्रकेतोः पादाङ्गदत्वमथवा परमेश्वरस्य ।
तस्यैव मूर्ध्नि धृतसाब्धिमहीध्रभूमेः शेषस्य विग्रहमशेषमहं भजे त्वाम् ॥ ९४

கருடனை வாகனமாகக்கொண்ட மகாவிஷ்ணுவிற்குப் படுக்கையாகவும், பரமசிவனுடைய பாதங்களுக்கு அணியாகவும், சமுத்திரங்களும் மலைகளுமடங்கிய சகல பூமண்டலத்தையும் தலையில் தாங்கிக்கொண்டுள்ளவருமாகிய ஆதிசேஷனுடைய அவதாரமாகிய தங்களை பஜிக்கின்றேன்.

दृष्ट्वा पुरा निजसहस्रमुखीमभैषुरन्तेवसन्त इति तामपहाय शान्तः ।
एकाननेन भुवि यस्त्ववतीर्य शिष्यानन्वग्रहीन्ननु स एव पतञ्जलिस्त्वम् ॥ ९५

ஆயிரம் முகங்களுள்ள தன்னுடைய உருவத்தைக்கண்டு சீடர்கள் பயமுற்றதை உணர்ந்து அந்த உருவத்தை மறைத்து ஒரு முகத்துடன் மண்ணுலகில் தோன்றி சீடர்களையனுக்கிரகம் செய்த பதஞ்சலிமுனிவரன்றோ தாங்கள்.

उरगमुखादधीत्य साक्षात्स्वयमवनेर्विवरं प्रविश्य येन ।
प्रकटितमचलातले सयोगं जगदुपकारपरेण शब्दभाष्यम् ॥ ९६

பாதாளலோகத்தில் புகுந்து ஆதிசேஷனிடமிருந்து கல்வியைக் கற்று, உலகத்திற்கு உபகாரத்தைச் செய்யக்கருதி யோகசாஸ்திரமும், வியாகரண மகாபாஷ்யமும் எவரால் இயற்றப்பட்டதோ?

तमखिलगुणपूर्णं व्यासपुत्रस्य शिष्यादधिगतपरमार्थं गौडपादान्महर्षेः ।
अधिजिगमिषुरेष ब्रह्मसंस्थामहं त्वां प्रसृमरमहिमानं प्रापमेकान्तभक्त्या ॥ ९७

மேலும், வியாஸமாமுனிவரின் புதல்வரான சுகயோகியினுடைய சீடராகிய கௌடபாதமாமுனிவரிடமிருந்து பரமாத்மதத்வத்தை உணர்ந்தவரும், எல்லா நற்குணங்களும் நிரம்பியவரும், உலகமெங்கும் பரவிய கீர்த்தியுள்ளவருமாகிய தங்களை யான் பிரம்மநிஷ்டையை அடைய விரும்பியவனாக உறுதியான பக்தியுடன் அடைந்துள்ளேன்.

तस्मिन्निति स्तुवति कस्त्वमिति ब्रुवन्तं दिष्ट्या समाधिपदरुद्धविसृष्टचित्तम् ।
गोविन्ददेशिकमुवाच ततो वचोभिः प्राचीनपुण्यजनितात्मविबोधचिह्नैः ॥ ९८

அவர் இவ்விதம் துதித்தசமயத்தில் ஸமாதியிலேயே வந்தவரை உண்மையாக அறிந்தமையால் உவகையுடன் தியானநிஷ்டையிலிருந்து எழுந்து ''நீர் யார்'' என்று கோவிந்தபாதர் வினவினர். பூர்வபுண்ணியங்களால் நிலவிய ஆத்மஞானத்தை விளக்கும் வசனங்களால் அதற்கு ஸ்ரீசங்கரர் விடையளித்தார்.

स्वामिन्नहं न पृथिवी न जलं न तेजो न स्पर्शनो न गगनं न च तद्गुणा वा ।
नापीन्द्रियाण्यपि तु विद्धि ततोऽवशिष्टो यःकेवलोऽस्ति परमः स शिवोऽहमस्मि ॥९९

ஸ்வாமி! நான் பூமியல்லன், ஜலமுமல்லன், தேஜஸ்ஸுமல்லன், வாயுவுமல்லன், ஆகாயமுமல்லன். அவைகளுடைய குணங்களுமல்லன். பொறிகளுமல்லன். அவைகளுக்கெல்லாம் மேலான கேவலம் சிவமாகவிருக்கிறேன். (எப்பொழுதும் மங்களமான பொருள்.)

### நீர் யார் என்று வினவியதற்கு
### ஸ்ரீ சங்கரபகவத்பாதர்
### ஸ்ரீ கோவிந்தநாதகுருநாதரிடம் கூறிய சுலோகங்கள்

न भूमिर्न तोयं न तेजो न वायुर्न खं नेन्द्रियं वा न तेषां समूहः ।
अनैकान्तिकत्वात्सुषुप्त्येकसिद्धस्तदेकोऽवशिष्टः शिवः केवलोऽहम् ॥ १

न वर्णा न वर्णाश्रमाचारधर्मा न मे धारणा ध्यानयोगादयोऽपि ।
अनात्माश्रयोऽहं ममाध्यासहानात्तदेकोऽवशिष्टः शिवः केवलोऽहम् ॥ २

न माता पिता वा न देवा न लोका न वेदा न यज्ञा न तीर्थं ब्रुवन्ति ।
सुषुप्तौ निरस्तातिशून्यात्मकत्वात्तदेकोऽवशिष्टः शिवः केवलोऽहम् ॥ ३

न सांख्यं न शैवं न तत्पाञ्चरात्रं न जैनं न मीमांसकादेर्मतं वा ।
विशिष्टानुभूत्या विशुद्धात्मकत्वात्तदेकोऽवशिष्टः शिवः केवलोऽहम् ॥ ४

न चोर्ध्वं न चाधो न चांतर्न बाह्यं न मध्यं न तिर्यङ् न पूर्वापरा दिक् ।
वियद्व्यापकत्वादखण्डैकरूपस्तदेकोऽवशिष्टः शिवः केवलोऽहम् ॥ ५

न शुक्लं न कृष्णं न रक्तं न पीतं न कुब्जं न पीनं न ह्रस्वं न दीर्घम् ।
अरूपं तथा ज्योतिराकाशकत्वात्तदेकोऽवशिष्टः शिवः केवलोऽहम् ॥ ६

न शास्ता न शास्त्रं न शिष्यो न शिक्षा न च त्वं न चाहं न चायं प्रपञ्चः ।
स्वरूपावबोधो विकल्पासहिष्णुस्तदेकोऽवशिष्टः शिवः केवलोऽहम् ॥ ७

न जाग्रन्न मे स्वप्नको वा सुषुप्तिर्न विश्वो न वा तैजसः प्राज्ञको वा ।
अविद्यात्मकत्वात् त्रयाणां तुरीयस्तदेकोऽवशिष्टः शिवः केवलोऽहम् ॥ ८

अपि व्यापकत्वाद्धितत्वप्रयोगात् स्वतःसिद्धभावादनन्याश्रयत्वात् ।
जगत्तुच्छमेतत् समस्तं तदन्यत्तदेकोऽवशिष्टः शिवः केवलोऽहम् ॥ ९

न चैकं तदन्यद् द्वितीयं कुतः स्यान्न वा केवलत्वं न चाकेवलत्वम् ।
न शून्यं न चाशून्यमद्वैतकत्वात् कथं सर्ववेदान्तसिद्धं ब्रवीमि ॥ १०



आकर्ण्य शङ्करमुनेर्वचनं तदित्थमद्वैतदर्शनसमुत्थमुपात्तहर्षः ।
स प्राह शङ्कर स शङ्कर एव साक्षाज्जातस्त्वमित्यहमवैमि समाधिदृष्ट्या ॥ १००

அத்வைதஞானத்தையுணர்த்தும் அந்த வசனங்களைக் கேட்டு உவகையுற்றவராக அந்த கோவிந்தபகவத்பாதர் கூறுகின்றார்:- ''சங்கர! கைலாசவாசியான அந்த சங்கரரேதான் நீ (உலகத்தின் நன்மைக்காக) இவ்வுலகில் தோன்றியுள்ளாய் என்பதை யான் ஞானக்கண்ணினால் உணருகிறேன்.''

तस्योपदर्शितवतश्चरणौ गुहाया द्वारे न्यपूजयदुपेत्य स शङ्करार्यः ।
आचार इत्युपदिदेश स तत्र तस्मै गोविन्दपादगुरवे स गुरुर्मुनीनाम् ॥ १०१

இவ்வாறுகூறி குகைக்குவெளியே பாதங்களைக்காண்பித்தார். ஸ்ரீசங்கரரும் பக்கத்தில் நெருங்கிப் பணிவுடன் பூஜைசெய்தார். ''சீடன் செய்யவேண்டிய முதல் கடமை குருபாதங்களின் பூஜைதான்'' என்பதை ஸ்ரீசங்கரர் மற்றவர்களுக்குத் தன் செய்கையினால் விளக்கினார். யதீசுவரர்களுக்கு குருவாகிய ஸ்ரீ கோவிந்தபகவத்பாதரும் அந்த பூஜை செய்வித்தலே தனது செயலினால் கோவிந்தபாத=தன்னை குருவாகக்கொண்ட ஸ்ரீ சங்கரருக்கு உபதேசித்தார்.

शङ्करः सविनयैरुपचारैरभ्यतोषयदसौ गुरुमेनम् ।
ब्रह्म तद्विदितमप्युपलिप्सुः सम्प्रदायपरिपालनबुद्ध्या ॥ १०२

பரமாத்மவஸ்துவை உணர்ந்தவராயினும் ''ஆசாரியர் மூலமாகக் கற்றுக் கொண்ட வித்தைதான் பயனளிக்கும்'' என்று உலகங்களுக்குப் போதனை செய்து அந்த ஸம்பிரதாயத்தை நிலைநிறுத்துவதற்காக ஸ்ரீ சங்கரர் பணிவுடன் உபசாரங்களனைத்தையும் செய்து அந்த ஆசாரியரை மகிழச்செய்தார்.

भक्तिपूर्वकृततत्परिचर्यातोषितोऽधिकतरं यतिवर्यः ।
ब्रह्मतामुपदिदेश चतुर्भिर्वेदशेखरवचोभिरमुष्मै ॥ १०३

பக்தியுடன் செய்த உபசாரத்தினால் மிக்க மகிழ்ச்சியுற்ற யதிசிரேஷ்டர் *(1)* प्रज्ञानं ब्रह्म *(ப்ரக்ஞானம் பிரம்ம), (2)* अहं ब्रह्मास्मि *(அஹம் பிரம்மாஸ்மி), (3)* तत्त्वमसि *(தத்வமஸி), (4)* अयमात्मा ब्रह्म *(அயமாத்மா பிரம்ம)* என்ற நான்கு மகாவாக்யங்களை அவருக்கு உபதேசம் செய்தார்.

साम्प्रदायिकपराशरपुत्रप्रोक्तसूत्रमतगत्यनुरोधात् ।
शास्त्रगूढहृदयं हि दयालोः कृत्स्नमप्ययमबुद्ध सुबुद्धिः ॥ १०४

வியாஸமுனிவராலியற்றப்பட்டவைகளும், சம்பிரதாயத்தைப் பின்பற்றியவைகளுமாகிய ''अथातो ब्रह्मजिज्ञासा'' என்றுதொட்டுள்ள அநேக சூத்திரங்களுடைய பொருள் அனைத்தையும் புத்திமானாகிய அவர் கருணைகூர்ந்த ஆசாரியரிடமிருந்து தெரிந்துகொண்டார். (தயாளுவாகிய வியாஸ முனிவருடைய கூடமான அபிப்பிராயத்தையும் அறிந்துகொண்டார் என்றும் பொருள்.)

व्यासः पराशरसुतः किल सत्यवत्यां तस्यात्मजः शुकमुनिः प्रथितानुभावः ।
तच्छिष्यतामुपगतः किल गौडपादो गोविन्दनाथमुनिरस्य च शिष्यभूतः ॥ १०५

ஸத்தியவதியினிடத்தில் பராசரமுனிவருடைய புதல்வராக வியாஸமுனிவர் தோன்றினார். அந்த வியாஸருக்கு பிரசித்தமகிமையுள்ள சுகமுனிவர் புத்திரனாக உதித்தார். அந்த சுகயோகிக்கு கௌடபாதமுனிவர் சீடராக விளங்கினார். அந்த கௌடபாதருடைய சீடர் கோவிந்தநாதமுனிவர்.

शुश्राव तस्य निकटे किल शास्त्रजालं यश्चाशृणोद्भुजगसद्मगतस्त्वनन्तात् ।
शब्दाम्बुराशिमखिलं समयं विधाय यश्चाखिलानि भुवनानि बिभर्ति मीर्ध्ना ॥ १०६

கோவிந்தநாதர் பாதாள உலகத்திற்குச் சென்று உலகங்களனைத்தையும் தன்னுடைய தலையில் தாங்குகின்ற ஆதிசேஷனிடம் ''தங்களுடைய சாஸ்திரத்தை மண்ணுலகில் பரவச்செய்கிறேன்'' என்று உறுதிவசனம்கூறி அவரிடமிருந்து வியாகரணசாஸ்திரத்தைக் கற்றுக்கொண்டு, அதனை இயற்றி, பிரசாரம் செய்வித்தார். அத்தகையரிடமிருந்து ஸ்ரீ சங்கரர் வேதாந்த நூல்களனைத்தையும் கற்றுக்கொண்டார்.

सोऽधिगम्य चरमाश्रममार्यः पूर्वपुण्यनिचयैरधिगम्यम् ।
स्थानमर्च्यमपि हंसपुरोगैरुन्नतं ध्रुव इवैत्य चकाशे ॥ १०७

அநேகப் பிறவிகளில் செய்த எண்ணில்லாப் புண்ணியகர்மங்களால் அடையக்கூடிய நான்காவது ஆசிரமத்தையடைந்து, அந்த மகான், சூரியன் முதலியவர்களாலும் பூஜிக்கத்தக்கதான ஒப்புயர்வற்ற ஸ்தானத்தை அடைந்த துருவன்போல், ஹம்ஸர்களாகிய யதீசுவரர்களால் புகழ்ந்து புகலக் கூடிய பதவியை அடைந்து விளங்கினர்.

छन्नमूर्तिरतिपाटलशाटीपल्लवेन रुरुचे यतिराजः ।
वासरोपरमरक्तपयोदाच्छादितो हिमगिरेरिव कूटः ॥ १०८

காஷாயவஸ்திரமாகிய சிவந்த தளிரினுல் அலங்காரம் செய்யப்பட்ட அவர், மாலைவெயிலினுல் வியாபிக்கப்பட்ட இமயமலையின் சிகரம்போல் விளங்கினர்.

एष धूर्जटिरबोधमहेभं संनिहत्य रुधिराप्लुतचर्म ।
उद्यदुष्णकिरणारुणशाटीपल्लवस्य कपटेन बिभर्ति ॥ १०९

இந்த சிவபெருமான் அஞ்ஞானமாகிய பெரிய மதயானையைக்கொன்று, அதன் இரத்தத்தினுல் சிவப்பான அந்த யானைத்தோலை, உதயகாலத்துக் கதிரவன் கிரணங்களை தரிப்பதுபோல் சிவந்த காஷாயவஸ்திரம் என்ற உருவத்தில் அணிந்துள்ளார்.

श्रुतीनामाक्रीडः प्रथितपरहंसोचितगति -
र्निजे सत्ये धाम्नि त्रिजगदतिवर्तिन्यभिरतः ।
असौ ब्रह्मैवास्मिन्न खलु विशये किन्तु कलये
बृहेरर्थं साक्षादनुपचरितं केवलतया ॥ ११०

சுருதிகளெல்லாம் விளையாடுமிடமும், பிரசித்திபெற்ற பரமஹம்ஸர்களுடன் ஸகவாசம் செய்கின்றவரும், (பரமஹம்ஸர்கள் அடையவேண்டிய இடமும்) மூன்று உலகங்களிலுமுள்ள சுகபோகங்களைக்காட்டிலும் உயர்ந்த ஸத்தியமான பதவியில் நிலைத்தவரும் ஆகிய அவர் பிரம்மவஸ்துவேயாவார். அந்த விஷயத்தில் ஐயமில்லை. 'பிரம்ம' என்ற சொல் 'பிருஹ' என்ற தாதுவிலிருந்து உண்டானது. காலத்தினுலும், இடத்தினுலும், பொருளினுலும் அளவுபெறுதது. அந்த பிரம்மவஸ்துவைத்தான் எல்லா வேதங்களும் கூறுகின்றன. பரமஹம்ஸர்களுக்கு அதுதான் புகலிடம். மூன்று உலகங்களுக்கும் மேலான உண்மையான தன்னுடைய உருவத்திலேயே நிலைத்துள்ளது. அந்தத் தன்மை யாவும் இவருக்கு இருப்பதுபற்றி

பிரம்மவஸ்துவேதான் இவர் என்பது உறுதி. ஸகுணராகவும், ஸத்யலோகாதிபதியாகவும் விளங்கும் நான்முகக்கடவுள் பிரம்மசப்தத்தினுல் கூறப்பட்ட போதிலும், 'பிரம்மம்' என்ற சொல்லிற்கு நேரடியான பொருள் ஆகுவதில்லை. அவர் நான்கு வேதங்களும் தங்குமிடம், பிரசித்தமான சிறந்த ஹம்ஸப்பறவையில் ஏறிச்செல்லுகிறவர்; மூன்று உலகங்களுக்கும் மேலான தன்னுடைய ஸத்தியலோகம் என்ற பதத்தில் விளங்குகிறவர் என்ற குணங்கள் செய்யுளில் கூறப்பட்டுள்ளபோதிலும் ஸகுணரூபியானதால் 'பிரம்ம' என்ற சொல்லின் நேரடியான பொருளல்லர். ஆனதுபற்றி ஸ்ரீ சங்கரருக்கு அந்த ஸகுணரூபத்தைக்காட்டிலும் விசேஷம். இது व्यतिरेकालङ्कारम्.

मितं पादेनैव त्रिभुवनमिहैकेन महसा
विशुद्धं यत्सत्वं स्थितिजनिलयेष्वप्यनुगतम् ।
दशाकारातीतं स्वमहिमनि निर्वेदरमणं
ततस्तद्विष्णोः परमपदमाख्याति निगमः ॥ १११

'तद्विष्णोः परमं पदम्' (தத்விஷ்ணோ: பரமம் பதம்) என்ற சுருதியின் கருத்தும் (அது விஷ்ணுவின் சிறந்த ஸ்தானம்) இந்த சங்கரரையேச் சேருகின்றது. 'पादोऽस्य विश्वा भूतानि' (பாதோஸ்ய விச்வா பூதானி) என்ற வாக்கியம் விஷ்ணுவின் மகிமையைக் கூறுகின்றது. உலகமனைத்தும் இவருடைய மகிமையின் நாலில் ஒரு பாகம் என்று அந்த வசனத்தின் பொருள். இந்த சங்கரரும் தன்னுடைய மகிமையாகிய ஒரு பாதத்தினுல் அதாவது அறிய வேண்டிய ஒரு பொருளினுல் (पद्यते = அடையப்படுகிறது, அறியப்படுகிறது.) மூன்று உலகத்தையும அளந்தார் (வியாபித்தார்). வைகுண்டவாசியாகிய விஷ்ணுவோவெனில், வாமனுவதாரத்தில் இரண்டு பாதங்களால் அளந்தார். இவருடைய ஸத்துவம் (ஸத்தை) ஆக்கல், ஆளுதல், அழித்தல் என்ற மூன்று செயல்களிலும் சம்பந்தமுடையது. அந்த விஷ்ணுவின் ஸத்துவம் (ஸத்வகுணம்) ஆளுதலில்மட்டும் சம்பந்தமுடையது. மேலும் அவருடைய (விஷ்ணுவினுடைய) ஸத்துவம், தனது மஹிமைவிஷயத்தில் தச ஆகார=பத்து விதங்களான உருவங்களை (அவதார உருவங்களைக்கொண்டது.) இவருடைய ஸத்வமோவெனில் (ஸத்தை) தசா=நிலைமை, ஆகாரம்=வடிவம் இவைகளை மீறியது=என்றும் அழியாதது. விஷ்ணுவிற்கு ரமை=இலக்குமி, ரமணி=மனைவி. அவளுடன் சந்தோஷமடைகிருர். இவருக்கு சிறந்த வைராக்கியம், சந்தோஷத்தையளிக்கிறது. ஆகையால், வைஷ்ணவ பரமபதம் என்பது இவரையே குறிக்கின்றது. (எங்கும் வியாபித்த சிறந்த பதம்.)

न भूतेष्वासङ्गः क्वचन न गवा वा विहरणं
न भूत्या संसर्गो न परिचितता भोगिभिरपि ।
तदप्याम्नायान्तस्त्रिपुरदहनात्केवलदृशा
तुरीयं निर्द्वन्द्वं शिवमतितरां वर्णयति तम् ॥ ११२

பரமசிவனுக்கு பூதஸங்கம்=பூதங்களுடன் ஸகவாசம், கோவினுல்=மாட்டினுல் (நந்திகேசுவரன் மீது) ஸஞ்சாரம்,

பூதியினுடைய=விபூதியினுடைய சம்பந்தம், போகிகளுடன்=பாம்புகளுடன் பரிசயம் இவைகள் உண்டு. இந்த சங்கரருக்கு பூதங்களுடன்=ஐந்து பூதங்களுடன் அல்லது பிராணிகளுடன், சங்கம்=பற்றுதல் இல்லை. கோவினுல்=பொறியினுல் ஸஞ்சாரமில்லை. ஐம்பொறிகளுக்கு ஈடுபடும் நிலைமையில்லை. பூதியுடன் சம்பந்தம்=பொருள் செல்வத்தில் சம்பந்தம் இல்லை. போகிகளுடன் பரிசயம்=சிற்றின்பங்களில் பற்றுள்ளவர்களுடன் பரிசயமுமில்லை. பரமசிவன் த்ரிபுரங்களை=முப்புரங்களை எரித்தார். ஆனுல் அவைகளை எரித்தது திருஷ்டியினுல்மட்டுமல்ல, மற்றக்கருவிகளின் உதவியைக்கொண்டு எரித்தார். இவரோவெனில் த்ரிபுரங்களை (ஸ்தூலம், சூக்ஷ்மம், காரணம் என்ற மூன்று சரீரங்களை), கேவலமான=வேறு உதவியற்ற, திருசா=திருஷ்டியினுல் (ஆத்மஞானத்தினுல்) எரித்தார். ஆகையால், शिवमद्वैतं शान्तं तुरीयं मन्यन्ते' என்ற உபநிஷத்து இவரையே கூறுகின்றது. (ஸகுணமூர்த்திகளைக்காட்டிலும் நான்காவதாகவும், சாந்தரூபமாகவும், நிகரற்றதாகவும், மங்களரூபமாகவும் கருதுகின்றனர் என்று அந்த வசனத்தின் பொருள்.)

(த்ரிபுரசங்காரம் என்ற விஷயத்தின் கருத்து முந்தியே விளக்கப்பட்டுள்ளது. 5-ஆவது ஸர்க்கம் 36-வது செய்யுளில் காண்க.)

न धर्मः सौवर्णो न पुरुषफलेषु प्रवणता
न चैवाहोरात्रस्फुरदरियुतः पार्थिवरथः ।
असाहाय्येनैवं सति विततपुर्यष्टकजये
कथं तं न ब्रूयान्निगमनिकुरम्बं परशिवम् ॥ ११३

மேலும், பொன்மலை வில்லாகவும், விஷ்ணு பலநுனியுள்ள அம்பாகவும், சந்திரசூரியர்கள் இரதத்தின் இரு சக்கரங்களாகவும், பூமி இரதமாகவும் அமைய அவைகளின் உதவியைக்கொண்டு முப்புரங்களையெரித்தப் பரமசிவனைப் புகழும் மறைகள் அந்த சங்கரரைப் புகழாமலிருக்குமா? ஏனெனில், இவர் எட்டுப்புரங்களை வென்றுர். அதற்கு பொன் வில் உதவியில்லை. (சுவர்ணமயமான=வர்ணங்களுக்குச் சம்பந்தமான, தர்மம்=கடமை, புருஷபலேஷு=நான்கு புருஷார்த்தங்களில் பிரவணதா=ஆசை, அஹோராத்திர ஸ்புரதரியுத: பார்த்திவரத: ந=அல்லும் பகலும் விளங்குகின்ற அகங்கார மமகாரங்களாகிய பகைவர்களுள்ள உடலாகிய ரதத்தின் சம்பந்தமுமில்லை. வெளிக்கருவியில்லாமல் ஞானத்தினுலேயே (1) ஐந்து பிராணன்கள், (2) ஞானேந்திரியங்கள் ஐந்து, (3) கர்மேந்திரியங்கள் ஐந்து, (4) நான்கு நிலையுள்ள மனது, (5) அவித்தை, (6) காமம், (7) கர்மம், (8) வாஸனை என்ற எட்டுப் புரங்களை வென்றுர்.)

மழைகாலத்தில் ஹம்ஸப்பறவைகள் மானஸஸரஸிற்குச் செல்லுகின்றனவென்றும், தாமரைத்தண்டை உணவுப்பொருளாக உட்கொள்ளுகின்றனவென்றும் கவிகளுடைய சங்கேதம். அதையநுஸரித்து வர்ணிப்பதுடன் பரமஹம்ஸராகிய ஸ்ரீ சங்கரகுரு தன்னுடைய மனதில் எல்லையற்ற கருணையுடன் விளங்குகின்றுர் என்று பக்தியுடன் கூறுகிறுர்:-

दुःखासारदुरन्तदुष्कृतघनां दुःसंसृतिप्रावृषं
दुर्वारामिह दारुणां परिहरन्दूरादुदाराशयः ।
उच्चण्डप्रतिपक्षपण्डितयशोनालीकनालाङ्कुर -
ग्रासो हंसंकुलावतंसपदभाक् सन्मानसे क्रीडति ॥ ११४

துக்கங்களாகிய தண்ணீரைப் பொழிகின்ற எண்ணில்லாப் பாபங்களாகிய முகில்களால் மூடப்பட்டதும், தடுக்கமுடியாததும், பயங்கரமுமாகிய ஸம்ஸாரம் தன்னை பாதிக்காமலிருக்கும்படி விலக்கியவரும், செருக்கு கொண்ட துஷ்டபண்டிதர்களுடைய கீர்த்தியாகிய தாமரைத்தண்டைச் சாப்பிடுகின்றவருமாகிய, ஹம்ஸகுலத்தில் சிறந்த பதத்தைப் பெற்ற சிறந்த ஹம்ஸம் (பரமஹம்ஸர்=சன்னியாசி) நல்ல (என்னுடைய) மானஸ=மனமாகிய ஸரஸில் (ஏரியில்) உதாரமனமுற்றவராக விளையாடுகின்றார்.

क्षीरं ब्रह्म जगच्च नीरमुभयं तद्योगमभ्यागतं
दुर्भेदं त्वितरेतरं चिरतरं सम्यग्विभक्तीकृतम् ।
येनाशेषविशेषदोषलहरीमासेदुषीं शेमुषीं
सोऽयं शीलवतां पुनाति परमो हंसो द्विजात्यग्रणीः ॥ ११५

பிரம்மமாகிய பால், ஜகத்தாகிய ஜலம், இவ்விரண்டும் ஒன்றாகக் கலந்துள்ளது. வெகுகாலமாகப் பிரிக்கமுடியாமலிருந்த அவ்விரண்டையும் தனித்தனியாகப் பிரித்தவர் சிறந்த ஹம்ஸமாகிய பரமாசாரியர். அந்தணர்களில் சிறந்த அத்தகையர் நற்சுபாவமுள்ளவர்களுடைய புத்தியின் தோஷங்களை நீக்கிச் சுத்தம் செய்கின்றார்.

नीरक्षीरनयेन तथ्यवितथे संपिण्डिते पण्डितै -
र्दुर्बोधे सकलैर्विवेचयति यः श्रीशङ्कराख्यो मुनिः ।
हंसोऽयं परमोऽस्तु ये पुनरिहाशक्ताः समस्ताः स्थिताः
जृम्भान्निम्बफलाशनैकरसिकान् काकानमून्मन्महे ॥ ११६

நீரும் பாலும் என்றவாறு உண்மையான ஆத்மாவும் பொய்யான உலகமும் ஒன்றாக இருக்கையில் மற்றப் பண்டிதர்களால் பிரித்தறிவதற்கரிய அதனை ஸ்ரீசங்கரராகிய முனிவர் பிரித்துக்காண்பிப்பதனால் அவர்தான் 'பரமஹம்ஸர்' என்று ஒப்புக்கொள்ளவேண்டும். அதற்கு வல்லமையற்ற மற்றவர்கள் வாயைத் திறக்கும்பொழுதே அவர்களை வேப்பின்பழங்களைச் சுவைப்பதில் மிக்க விருப்பமுற்ற காகங்களென்றே கருதுகின்றோம்.

दृष्टिं यः प्रगुणीकरोति तमसा बाह्येन मन्दीकृतां
नालीकप्रियतां प्रयाति भजते मित्रत्वमव्याहतम् ।
विश्वस्योपकृतेर्विलुम्पति सुहृच्चक्रस्य चार्तिं घनां
हंसः सोऽयमभिव्यनक्ति महतां जिज्ञास्यमर्थं मुहुः ॥ ११७

வெளியிருளினால் மந்தமடைந்த கண்களை சூரியன் ஒளியுண்டாக்கிப் பார்க்கும்படிச்செய்கிறான். இந்த சங்கரர் உள்ளிருளினால் (அஞ்ஞானத்தினால்) மந்தமான மனதை (ஞானம் குன்றிய மனதை) ஞானத்தினால் குணமுற்றதாகச்

செய்கிறார். சூரியன் நாளீகப்பிரியனாக=தாமரைக்குப் பிரியனாக இருக்கிறான். இவரும் ந+அளீகப்பிரியன். அதாவது அளீகம்=பொய், பொய்யான பிரபஞ்சத்தில் பிரியம் உள்ளவரல்ல. உலகத்திற்கு உபகாரம் செய்வதால் இவர் மித்திரன்=நண்பர். சூரியனும் மித்திரன் என்ற சொல்லால் கூறப்படுகிறான். சக்ரம்=சக்ரவாகம் என்ற பறவை. அது இரவில் மனைவியின் பிரிவினால் வருந்துகிறது. சூரியன் உதித்தால் அதன் வருத்தம் நீங்குகிறது. ஆகையால் நல்ல ஹிருதயத்தையடைகிறது. ஆகவே சூரியன் நல்ல மனமுடையதாகச் சக்ரவாகப்பறவையைச்செய்து அதன் வருத்தத்தையும் நீக்குகின்றான். ஸ்ரீசங்கரரும், நல்ல ஹிருதயமுள்ளவர்களுடைய கூட்டத்தின் அதிகமான வருத்தத்தை = ஸம்ஸாரத்துன்பத்தை நாசம் செய்கிறார். தெரிந்துகொள்ள வேண்டிய பொருள்களை சூரியன் விளக்குகிறான். இந்த சங்கரர் பெரியோர்களுக்கும்கூட அறியத்தக்க பொருளை விளக்குகின்றான். (ஆகையால் இவர் ஹம்ஸரூபி=சூரியன், துறவி.)

மழைகாலத்தை வர்ணிக்கிறார்:-

हंसभावमधिगम्य सुधीन्द्रे तं समर्चति च संसृतिमुक्त्यै ।
संचचाल कथयन्निव मेघश्चञ्चलाचपलतां विषयेषु ॥ ११८

புத்திமான்களில் சிறந்த அந்த சங்கரபகவத்பாதர் ஹம்ஸத்தன்மையை=ஸன்யாஸத்தை அடைந்து ஸம்ஸாரபந்தத்தின் விடுதலைக்காக அந்த ஹம்ஸனையே=பரமாத்மாவையே தியானத்தினால் பூஜிக்கும்பொழுது விஷயங்களுடைய நிலையின்மையைக் காண்பிப்பதற்கு உதாகரணம்போல் மேகம் மின்னல்களின் சஞ்சலகுணத்தைக் காண்பித்துக்கொண்டு ஸஞ்சரித்தது. (மின்னல்போல் விஷயங்களும் நிலையற்றவை என்று மேகம் புத்திமதி கூறியது.)

एष नः स्पृशति निष्ठुरपादैस्तत्तु तिष्ठतु वितीर्णमवन्यै ।
अस्मदीयमपि पुष्पमनैषीदित्यरोधि नलिनीपतिरब्दैः ॥ ११९

இந்த சூரியன் கடூரமான தன் பாதங்களால் (கால்களால்), அதாவது கிரணங்களால் நம்மைத் தாக்குகிறான். அதுகிடக்கட்டும், நாம் பூமி என்ற ஒரு அபலைக்கு=பெண்ணிற்கு கொடுத்த புஷ்பத்தை=தண்ணீரை அபகரித்துவிட்டான் என்ற கோபத்தினால் மேகங்களால் சூரியன் தாக்கப்பட்டான் (மறைக்கப்பட்டான்). (मेघपुष्पम् = தண்ணீர்.)

वारिवाहनिवहे क्षणलक्ष्यश्रीररोचत किलाचिररोचिः ।
अन्तरङ्गगतबोधकलेव व्यापृतस्य विदुषो विषयेषु ॥ १२०

சிற்றின்பங்களில் ஈடுபட்ட அறிஞனுடைய உண்மையான ஆத்மஞானம் சிறிதுநேரம்மட்டும் விளங்குவதுபோல, முகில்கூட்டத்தில் மின்னல் ஒரு கணநேரம்மட்டும் ஒளியுடன் தோன்றியது.

किं नु विष्णुपदसंश्रयतोऽब्दा ब्रह्मतामुपदिशन्ति सुहृद्भ्यः ।
यन्निशम्य निखिलाः स्वनमेषां बिभ्रति स्म किल निर्भरमोदान् ॥ १२१

விஷ்ணுபதத்தை = பரமாத்மபதத்தை (ஆகாயத்தை) ஆசிரயித்த மேகங்கள் தங்களுடைய நண்பர்களுக்கு (நல்ல மனமுடையவர்களுக்கு) பிரம்மதத்துவத்தை உபதேசித்தனபோல். எந்த சப்தத்தைக் கேட்டவளவிலேயே எல்லோரும் அளவற்ற சந்தோஷத்தை அடைந்துள்ளனரோ அப்படிப்பட்ட தத்வத்தை உபதேசித்தன. பிரம்மதத்வத்தை உபதேசிக்கும் வேதங்களின் சொற்களை கேட்பதினுலேயே ஞானிகள் ஆனந்தத்தை அடைகின்றனர். உலகஜனங்களும் மேகங்களின் கர்ஜனையைக் கேட்டு மகிழ்ச்சியுறுகின்றனர்.

देवराजमपि मां न यजन्ति ज्ञानगर्वभरिता यतयोऽमी ।
इत्यमर्षवशगेन पयोदस्यन्दनेन धनुराविरकारि ॥ १२२

ஞானத்தினுல் கர்வமடைந்த இந்த யதிகள், தேவர்களுக்கெல்லாமரசனுக விருந்தபோதிலும் என்னைப் பூஜிப்பதில்லை என்று கோபமடைந்தவன் போல் இந்திரன் மேகமாகிய இரதத்தில் ஏறிக்கொண்டு அவர்களுடன் போர் செய்யத் துணிந்தவனுக வில்லை வெளிக்காட்டினுன்.

आववुः कुटजकन्दलबाणास्फीतरेणुकलिता वनवात्याः ।
सत्वमध्यमतमोगुणमिश्रा मायिका इव जगत्सु विलासाः ॥ १२३

குடஜம் = காட்டுமல்லிமலர், பாணு = நீலநிறமான புஷ்பம். இவைகளுடைய மகரந்தத்துள் ஏராளமாகக் கலந்துக் காட்டுக் காற்றுகள், ஸத்துவம், ரஜஸ், தமஸ் என்று மூன்று குணங்களுள்ள மாயாவிலாசங்கள் உலகில் பரவியிருப்பதுபோல் வீசின.

बभ्रमुस्तिमिरसच्छविगात्राश्चित्रकार्मुकभृतः खरघोषाः ।
ध्यानयज्ञमथनाय यतीनां विद्युदुज्ज्वलदृशो घनदैत्याः ॥ १२४

இருளுக்குச்சமானமான உடலின் நிறம்கொண்டு, பலநிறங்களுள்ள வில்லை (வானவில்லை) தரித்தவர்களும், கடூரமான ஒலியுண்டாக்குகிறவர்களும், மின்னலாகிய ஜ்வலிக்கின்ற கண்களையுடையவர்களுமான மேகங்களாகிய அரக்கர்கள் துறவிகளுடைய தியானமாகிய யக்ஞத்தை அழிப்பதற்காக ஸஞ்சரித்தனர்.

उत्ससर्जुरसकृज्जलधारा वारिदा गगनधाम पिधाय ।
शङ्करो हृदयमात्मनि कृत्वा संजहार सकलेन्द्रियवृत्तीः ॥ १२५

மேகங்கள் ஆகாயத்தை மறைத்துத் தண்ணீர் பொழிந்தன. அந்த மழைகாலத்தில் ஸ்ரீ சங்கரர் மனதை ஆத்மாவினிடத்தில் நிலைபடுத்திப் பொறிகளின் செயல்களை அடக்கினுர்.

शनैः सान्त्वालापैः सनयमुपनीतोपनिषदां
चिरायत्तं त्यक्त्वा सहजमभिमानं दृढतरम् ।
तमेत्य प्रेयांसं सपदि परहंसं पुनरसा -
वधीरा संस्प्रष्टुं क्वनु सपदि तद्धीर्लयमगात् ॥ १२६

தலைவனைப்பிரிந்த தலைவி வெகுநாட்களுக்குப் பிறகு தோழிமார்களுடைய இனிய சொற்களால் தன்னுடைய அபிமானத்தை விட்டுத் தலைவனை அடைந்தபோதிலும் வெட்கத்தினுல் அவரைத் தொடுவதற்குத் துணியாமல் மனதில் லயமடைவதுபோல, அவருடைய புத்தி (பெண்பாலானதுபற்றி நாயகிக்கு உவமை) நியாயங்களுடன் கூடிய உபநிஷத்துக்களின் வாக்கியங்களை (உபநிஷத்துக்கள் பெண்பால், ஆகையால் தோழிமார்களுடன் உவமை) உணர்ந்ததால் 'நான்' என்ற அபிமானத்தை விட்டு பரமப் பிரியனுகிய பரமஹம்ஸனை அடைந்து, தொடுதலுக்கு தைரியமற்றதாக லயமடைந்தது. (அந்தப்பரமஹம்ஸராகிய ஸ்ரீ சங்கரர் அஸம்பிரக்ஞாதசமாதியை அடைந்தார். வேற்றுமையற்றதாக அவருடைய புத்தி பரமாத்மனிடம் லயம் பெற்றது என்று கருத்து.)

न सूर्यो नैवेन्दुः स्फुरति न च ताराततिरियं
कुतो विद्युल्लेखा कियदिह कृशानोर्विलसितम् ।
नो विद्यो रोदस्यौ न च समयमस्मिन्न जलदे
चिदाकाशे सान्द्रस्वसुखरसवर्ष्मण्यविरतम् ॥ १२७

இடைவிடாது ஒளிவீசிக்கொண்டிருக்கும் பரமானந்தரஸஸ்வரூபியாகிய அவர் விஷயத்தில் சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள் ஆகிய ஒளிகள் தங்களுடைய செயலாற்ற முடியவில்லை. அப்படியிருக்கையில், மின்னல், அக்னி இவைகள் எம்மாத்திரம்? பூமி, ஆகாயம், காலம் என்ற வேற்றுமைகளும் பரமாத்மரூபியான அவரிடம் நிகழவில்லை.

किमादेयं हेयं किमिति सहजानन्दजलधा-
वतिस्वच्छे तुच्छीकृतसकलमाये परशिवे ।
तदेतस्मिन्नेव स्वमहिमनि विस्मापनपदे
स्वतः सत्ये नित्ये रहसि परमे सोऽकृत कृती ॥ १२८

கிருதார்த்தராகிய அந்த சங்கரர் நிஜமான நித்யானந்தசமுத்திரமும், நிர்மலமும், மாயையின் விலாசங்களையகற்றியதும், பரமமங்களமும், தன்னுடைய மகிமையிலேயே நிலையுள்ளதும், வியக்கத்தக்கதும் ஸத்யமானதும், அழிவற்றதும், ரகசியமும் ஆகிய அந்தப் பரமாத்மவஸ்துவில் விருப்பு வெறுப்புக்களை அகற்றினுரன்ருே! (தியானநிஷ்டை கலைந்த பிறகும் வேற்றுமைபுத்தி கொள்ளவில்லை.)

மறுபடியும் மழைகாலத்தை வர்ணிக்கிருர்:-

प्राप विष्णुपदभागपि मेघः प्रावृडागमनतो मलिनत्वम् ।
विद्युदुज्ज्वलरुचाऽनुसृतश्च कोऽध्यवन्यपि भजेन्न विरागम् ॥ १२९

ஆகாயத்திலுள்ள மேகம் மின்னலாகிய விசேஷ ஒளியினுல் பின்பற்றப்பட்டு மழைகாலம் வந்ததினுல் கறுநிறத்தையடைந்தது. அந்தக் காலத்தில் மண்ணுலகிலுள்ள யார்தான் அதிகமான அனுராகத்தையடைவதில்லை. மழைகாலத்தில் எல்லோரும் காமத்திற்கு வசப்படுகிருர்கள். அந்தக் காலத்தில்

யதீசுவரர்கள் ஐம்பொறிகளை அடக்குவதில் மிகவும் கவனம் செலுத்தவேண்டும் (समासोक्तिः, अर्थान्तरन्यासः என்ற அலங்காரங்கள். மேகம் என்ற ஒரு தலைவன் विष्णुपदभागपि = விஷ்ணுவின் பாதங்களை பஜிக்கின்றவனுயினும் प्रावृडागमनतः =விசேஷமாக வருஷிக்கின்ற=மழைகாலமாகிய தலைவியின் வருகையினுல் मलिनत्वं प्राप =மனதில் காமவிகாரத்தினுல் அழுக்கை அடைந்தான். மின்னல்போன்ற ஒளியுடன் கூடிய மங்கையினுல் அனுசரிக்கப்பட்டால் மண்ணுலகில் யார்தான் விசேஷமாக காமத்திற்கு வசப்படாமலிருப்பான்.)

आशये कलुषिते सलिलानां मानसोत्कहृदयाः कलहंसाः ।
कोऽन्यथा भवति जीवनलिप्सुर्नाश्रये भजति मानसचिन्ताम् ॥ १३०

மழையினுல் தாமரைக்குளங்கள் தண்ணீர் கலக்கமுள்ளவைகளாக ஆயின. ஆகையால் அங்கு தங்கியிருந்த அன்னப்பறவைகள் மானஸஸரஸ்ஸிற்குப் புறப்பட்டன. தங்குமிடத்தில் துன்பம் ஏற்பட்டால் எவன்தான் மனதில் கவலைகொள்ளுவதில்லை.

अभ्रवर्त्मनि परिभ्रममिच्छञ्शुभ्रदीधितिरदभ्रपयोदे ।
न प्रकाशनमवाप कलावान् कश्चकास्ति मलिनाम्बरवासी ॥ १३१

சந்திரன் பிரகாசமான கிரணங்களுடன்கூடியவனுயினும் கார்முகில் கூட்டம் நிரம்பிய ஆகாயத்தில் ஸஞ்சாரஞ்செய்ய விரும்பியதினுல் நன்கு விளங்கவில்லை. கல்விக்கலைகள் உள்ளவனுயினும் அழுக்குள்ள ஆடையை அணிந்திருந்தால் எவன்தான் உலகில் விளங்குவான்? (மலினும்பரம்=கறுத்த ஆகாயம், அழுக்கான ஆடை. கலாவான்=15 கலைகளுள்ள சந்திரன், கல்விகளாகிய கலைகளுள்ள அறிஞன்.)

चातकावलिरनल्पपिपासा प्राप तृप्तिमुदकस्य चिराय ।
प्राप्नुयादमृतमप्यभिवाञ्छन् कालतो बत घनाश्रयकारी ॥ १३२

வெகுகாலமாகத் தண்ணீர்தாகத்துடன் கூடியச் சாதகப்பறவைகளின் கூட்டம் தண்ணீரைப்பெற்று மிகவும் சந்தோஷமடைந்தது. சிறந்த ஆசிரயத்தைப் பெற்றவன் விரும்பினுல் அமிருதத்தையும் பெறுவான். (கனுசிரயம்=மேகத்தை ஆசிரயித்தல், சான்றோர்களை ஆசிரயித்தல். அமிருதம்=தண்ணீர், தேவாமிருதம், மோக்ஷம்.)

इत्युदीर्णजलवाहविनीले स्फीतवातपरिधूततमाले ।
प्राणभृत्प्रचरणप्रतिकूले नीडनीलघनशालिनि काले ॥ १३३

अग्रहारशतसंभृतशोभे सुग्रहाक्षतुरगः स महात्मा ।
अध्युवास तटमिन्दुभवायाः सुध्युपास्यचरणं गुरुमर्चन् ॥ १३४

இவ்வாறு அதிகமாகத்தோன்றிய முகில்களால் உலகமெல்லாம் கறுத்தும், அதிகமான காற்றினுல் தமாலமரங்கள் எப்பொழுதும் அசைந்துகொண்டும், ஜனங்கள் வெளியே ஸஞ்சாரம் செய்வதற்கு இடையூறுகவும், இந்திரநீலமலைபோல் அடர்ந்த முகிற்கூட்டம் நிரம்பியதுமாகியகாலத்தில்,

அநேக அக்ரகாரங்களின் அழகும் நிரம்பியிருக்கும் ஸந்தர்ப்பத்தில், ஆத்மஞானத்திஞல் பொறிகளாகிய குதிரைகளே அடக்கிய மகாத்மாவாகிய அந்த சங்கரர் புத்திமான்களால் சேவிக்கத்தகுந்த பாதங்களேயுடையவரான ஆசாரியரை ஆராதித்துக்கொண்டு நர்மதைநதிக்கரையில் வாசஞ்செய்தார்.

त्रस्तमर्त्यगणमस्तमिताशं हस्तिहस्तपृथुलोदकधाराः ।
मुञ्चति स्म समुदञ्चितविद्युत्पञ्चरात्रमहिशत्रुरजस्रम् ॥ १३५

ஜனங்களுக்கு நடுக்கத்தையும் திசைகளுக்கெல்லாம் அழிவையும் உண்டாக்கிக்கொண்டு இடி, மின்னல் இவைகளுடன் இந்திரன் ஐந்து தினங்கள் இடைவிடாமல் யானையின் துதிக்கைபோன்ற நீர்தாரைகளேப் பொழிந்தான்.

तीरभूरुहततीरपकर्षन्नग्रहारनिकरैः सह पूरः ।
आययावधिकघोषमनल्पः कल्पवार्धिलहरीव तटिन्याः ॥ १३६

கரைகளிலுள்ள மரங்களின் கூட்டங்களேயும், அநேக அக்ரகாரங்களேயும் பறித்துக்கொண்டுப் பிரளயகாலத்துச் சமுத்திரம்போல் அந்த நர்மதை நதியின் வெள்ளம் பெரிய ஓசையை உண்டுபண்ணிற்று.

घोषवारिझरभीरुनराणां घोषमेष कलुषं स निशम्य ।
देशिकं ध्रुवसमाधिविधानं वीक्ष्य च क्षणमभूदविवक्षुः ॥ १३७

பயங்கரமான வெள்ளத்தின் ஒலியினுல் பயமுற்ற ஜனங்களுடைய ஸங்கடமான சப்தத்தைக்கேட்டு அந்த சங்கரர், தனது ஆசாரியர் நிச்சலமான தியானத்தில் இருந்தமையால் இந்த விஷயத்தை அவரிடம் கூற விருப்பமற்றவராகச் சிறிது நேரம் வாளாயிருந்தார்.

सोऽभिमन्त्र्य करकं त्वरमाणस्तत्प्रवाहपुरतः प्रणिधाय ।
कृत्स्नमत्र समवेशयदम्भः कुम्भसंभव इव स्वकरेऽब्धिम् ॥ १३८

அந்த சங்கரபகவத்பாதர், கமண்டலத்தை அந்த வெள்ளத்திற்கெதிரில் பிரணவமந்திரத்தை ஜபித்து வைத்து, அகஸ்தியமுனிவர் கடல்தண்ணீரை தனது கையில் ஏந்தியதுபோல் அந்த வெள்ளத்தைக் கமண்டலத்தில் புகுத்திஞர்.

तं निशम्य निखिलैरपि लोकैरुत्थितोऽस्य गुरुरुक्तमुदन्तम् ।
योगसिद्धिमचिरादयमापेत्यभ्यपद्यततरां परितोषम् ॥ १३९

உலகத்திலுள்ள யாவரும் அந்த நிகழ்ச்சியை வியந்து கூறக்கேட்டு ஆசாரியர் (கோவிந்த பகவத்பாதர்) தியானம் கலேந்து எழுந்து ''இவர் முன்னமேயே யோகசித்தியைப் பெற்றுள்ளார்'' என்று எல்லேயில்லா மகிழ்ச்சியடைந்தார்.

छात्रमुख्यममुमाह कियद्भिर्वासरैर्गतघने गगने सः ।
पश्य सौम्य शरदा विमलं खं विद्ययेव विशदं परतत्वम् ॥ १४०

சிறிது நாட்களில் மேகங்கள் நீங்கி ஆகாயம் சுத்தமானபொழுது, அந்த கோவிந்தபகவத்பாதர் சீடர்களில் சிறந்த சங்கரரை நோக்கிக் கூறிஞர்:

''பிரியமான தோற்றமுள்ளவனே! உண்மையான ஆத்மஞானத்தினுல் பரதத்துவம் நன்கு விளங்குவதுபோல் சரத்காலத்தினுல் ஆகாயம் சுத்தமாக விளங்குகிறது.

वारिदा यतिवराश्च सुपाथोधारया सदुपदेशगिरा च ।
ओषधीरनुचरांश्च कृतार्थीकृत्य सम्प्रति हि यान्ति यथेच्छम् ॥ १४१

மேகங்கள் ஏராளமான தண்ணீரைப் பொழிந்து பயிர்களை வளரச் செய்தும் யதீச்வரர்கள் நல்ல உபதேசங்களால் சிடர்களை அனுக்கிரகம் செய்தும் பயன் அடைந்தவர்களாகச் செய்து, இப்பொழுது தமது இஷ்டம் போல் வெளியே ஸஞ்சாரம் செய்கின்றனர். (மழைகாலத்தில் யதீஸ்வரர்கள் ஒரே இடத்தில் இருந்துகொண்டு சாதுர்மாஸ்யம் அனுஷ்டானம் செய்ய வேண்டும். இரண்டு மாதங்களுக்குப் பிறகுதான் வெளியே ஸஞ்சாரம் செய்யவேண்டும் என்று விதி.)

शीतदीधितिरसौ जलमुग्भिर्मुक्तपद्धतिरतिस्फुटकान्तिः ।
भाति तत्वविदुषामिव बोधो मायिकावरणनिर्गमशुभ्रः ॥ १४२

மாயையின் குணங்களால் உண்டாகும் ஆவரணங்கள் (மறைக்கும் விஷயங்கள்) நீங்கியதனுல் சுத்தமான ஆத்மஞானம் தத்துவத்தை உணர்ந்தவர்களுக்கு விளங்குவதுபோல், சந்திரன் மேகங்கள் நீங்கியதனுல் சுத்தமான ஒளியுடன் ஆகாயமார்க்கத்தில் விளங்குகிறுன்.

वारिवाहनिवहे प्रतियाते भान्ति भानि शुचिभानि शुभानि ।
मत्सरादिविगमे सति मैत्रीपूर्वका इव गुणाः परिशुद्धाः ॥ १४३

பகைமை முதலிய தீயகுணங்கள் நீங்க, மைத்ரீ = நட்பு, முதலிய நற்குணங்கள் தோன்றுவதுபோல, முகிற்மண்டலம் நீங்க நல்ல நக்ஷத்திரங்கள் சுத்தமான ஒளியுடன் விளங்குகின்றன.

(''मैत्रीकरुणामुदितोपेक्षाणां सुखदुःखपुण्यापुण्यविषयाणां भावनातश्चित्त प्रसादनम्'' என்று பாதஞ்சலயோகசூத்திரம். நட்பு, கருணை, ஸந்தோஷம், உதாசீனம் என்று நான்கு குணங்கள், முறையே சுகமனுபவிக்கிறவன், துக்கமனுபவிக்கிறவன், புண்ணியம் செய்கிறவன், பாபம் செய்கிறவன் என்பவர்கள் மீது ஏற்பட்டால் மனம் தூய்மை நிலைகொள்ளுகிறது என்று அந்த சூத்திரத்தின் பொருள்.)

मत्स्यकच्छपमयी धृतचक्रा गर्भवर्तिभुवना नलिनाढ्या ।
श्रीयुताऽद्य तटिनी परहंसैः सेव्यते मधुरिपोरिव मूर्तिः ॥ १४४

மீன், ஆமை என்பவைகளுடைய உருவமுள்ளதும், சக்கரம் (சுதர்சன சக்ரம்) உடையதும், (சக்ரம் = ஒருவித பூச்சி) அவைகளைக் கொண்டதும், கர்ப்பத்தில் உலகங்களை தரித்ததும், (நடுவில் ஜலமுள்ளதும்) தாமரையினுல் அழகியதும், திருமகளுடன் கூடியதும், (அழகுவாய்ந்ததும்) ஆகிய நாராயணனுடைய விக்ரஹம் சிறந்த ஹம்ஸர்களால்=யதீச்வரர்களால் ஆசிரயிக்கப்படுவதுபோல் இந்த நதியும் சிறந்த அன்னப்பறவைகளாலும், யதீச்வரர்களாலும் ஆசிரயிக்கப்படுகிறது. (சிலேடையும் உவமையும் அணிகள்.)

नीरदाः सुचिरसंभृतमेते जीवनं द्विजगणाय वितीर्य ।
त्यक्तविद्युदबलाः परिशुद्धाः प्रव्रजन्ति घनवीथिगृहेभ्यः ॥ १४५

மேகங்கள், வெகுகாலமாகத் தாம் சம்பாதனை செய்துச் சேமித்து வைத்த வாழ்க்கைக்குரிய ஜலமாகிய செல்வத்தை பிராம்மணர்களுக்கும், பறவைகளுக்கும் (மற்ற பிராணிகளுக்கும் என்பது உபலக்ஷணம்) அளித்து, மின்னல்களாகிய மனைவிமார்களையும் பிரிந்து, சுத்தமானவைகளாக=தூய்மை பெற்றவைகளாக அடர்ந்த ஆகாயநெறிகளாகிய இல்லங்களிலிருந்து துறவிகளாக=செல்வங்களில் பற்றற்றவைகளாகச் செல்லுகின்றன.

चन्द्रिकाभसितचर्चितगात्रश्चन्द्रमण्डलकमण्डलुशोभी ।
बन्धुजीवकुसुमोत्करशाटीसंवृतो यतिरिवायमनेहाः ॥ १४६

இந்த சரத்காலம், நிலாவெளிச்சமாகிய நீறைப்பூசிக்கொண்டு, சந்திரனாகிய கமண்டலுவையும் தரித்து, செம்பருத்திமலர்களின் கூட்டமாகிய கக்ஷாயவஸ்திரத்தையும் அணிந்து, ஸன்னியாசிபோல் விளங்குகிறது.

हंससंगतिलसद्विरजस्कं क्षोभवर्जितमपह्नुतपङ्कम् ।
वारि सारसमतीव गभीरं तावकं मन इव प्रतिभाति ॥ १४७

ஹம்ஸப் பறவைகள் வாஸம்செய்வதற்குரியதாக தூசிகளில்லாமல் சுத்தமுடையதும் (ஹம்ஸர்கள் = யதீஸ்வரர்கள். அவர்களுடைய சகவாஸத்தினால் ரஜோகுணமற்றதும்) அலைகளின் ஆரவாரமில்லாததும் (மனக் குழப்பமில்லாததும்,) சேறு நீங்கியதும் (பாபமற்றதும்,) கம்பீரமுமாகிய குளத்தண்ணீர் நுமது மனம்போல் விளங்குகின்றது.

(கோவிந்தபகவத்பாதர், தனது சீடராகிய ஸ்ரீ சங்கரருடைய மனதை தூய தண்ணீருக்கு உபமானப்படுத்திக் கூறுதல், சீடருடைய சிறப்பை உணர்த்துவதுமன்றி, உலகத்தில் இத்தகைய பெருமையும், பாக்கியமும் பெறுவதுதான் நமது உயர்ந்த லக்ஷியமாகவிருக்கவேண்டுமென்றும் உணர்த்துகிறது.)

शारदाम्बुधरजालपरीतं भ्राजते गगनमुज्ज्वलभानु ।
लिप्तचन्दनरजः समुदञ्चत्कौस्तुभं मुररिपोरिव वक्षः ॥ १४८

சரத்காலத்து வெண்ணிறமான மேகங்கள் நிரம்பியதும், பிரகாசிக்கின்ற சூரியனையுடையதுமான ஆகாயம், சந்தனப்பூச்சுடன் கூடியதும், கௌஸ்துப ரத்தினத்தையுடையதுமான திருமாலின் மார்புபோல் விளங்குகின்றது.

पङ्कजानि समुदूढहरीणि प्रोद्गतानि विकचानि कनन्ति ।
सौम्य योगकलयेव विफुल्लान्युन्मुखानि हृदयानि मुनीनाम् ॥ १४९

சாந்தகுணமுள்ளவனே! சூரியகிரணங்கள் வீசி மலர்ந்தெழுந்த தாமரைமலர்கள், யோகப்பயிற்சியினால் மலர்ந்து, திருமால் விளங்கும் முனிவர்களுடைய ஹிருதயகமலங்கள்போல் பிரகாசிக்கின்றன. (ஹரி = சூரியன், திருமால்.)

रेणुभस्मकलितैर्दलशाटीसंवृतैः कुसुमलिङ्जपमालैः ।
वृन्तकुड्मलकमण्डलुयुक्तैर्धार्यते क्षितिरुहैर्यतितौल्यम् ॥ १५०

புஷ்பங்களின் மகரந்தத்தூள் பூசப்பெற்று, மலர்களின் சிவந்த இதழ்களாகிய ஆடைகளையுமணிந்து, வண்டுகளாகிய ருத்திராக்ஷமாலையையும் தரித்து, காம்புகளிலிருக்கும் அரும்பாகிய கமண்டலத்தையும் கையில் பிடித்து மரங்கள் சன்னியாசிகளுக்கு நிகராகத் தோற்றமளிக்கின்றன.

धारणादिभिरपि श्रवणाद्यैर्वार्षिकाणि दिवसान्यपनीय ।
पादपद्मरजसाऽद्य पुनन्तः संचरन्ति हि जगन्ति महान्तः ॥ १५१

தாரணை, தியானம், சமாதி, சிரவணம், மனனம், நிதித்தியாசனம் ஆகியவைகளைச் செய்து மழைக்கால நாட்களைக் கழித்து, சான்றோர்கள் (துறவிகள்) தங்களுடைய பாதாரவிந்தங்களின் தூசிகளால் உலகங்களைப் பரிசுத்தம் செய்வதற்காக ஸஞ்சாரம் செய்கின்றனர்.

तद्भवान् व्रजतु वेदकदम्बादुद्भवां भवदवाम्बुदमालाम् ।
तत्वपद्धतिमभिज्ञ विवेक्तुं सत्वरं हरपुरीमविविक्ताम् ॥ १५२

ஆகையால், அறிஞரே! மறைகளால் வெளியிடப்பட்டதும், ஸம்ஸாரமாகிய காட்டுத்தீயைத் தணிக்க முகிற்கூட்டமுமாகிய உண்மைநெறி (ஞான மார்க்கம்) பிறரால் அறிதற்கரிதாக இருக்கின்றது. அதனை உணர்த்தி பிறருக்குப் பயனளிக்கும்படிச் செய்வதற்காகப் பரமசிவனுடைய புரமாகிய காசிநகருக்குச் செல்வீராக.

अत्र कृष्णमुनिना कथितं मे पुत्र तच्छृणु पुरा तुहिनाद्रौ ।
वृत्रशत्रुमुखदैवतजुष्टं सत्रमत्रिमुनिकर्तृकमास ॥ १५३

புத்திரனே! இந்த விஷயத்தில் வியாஸமுனிவரால் என்னிடம் கூறப்பட்ட விஷயத்தைப் புகலுகின்றேன், கேட்பீராக. இமயமலையில் அத்திரிமுனிவர் செய்த ஸத்திரயாகம் நிகழ்ந்தது. இந்திரன் முதலிய தேவர்கள் அனைவரும் பிரசன்னமாயிருந்தனர்.

संसदि श्रुतिशिरोऽर्थमुदारं शंसति स्म पराशरसूनुः ।
इत्यपृच्छमहमत्रभवन्तं सत्यवाचमभियुक्ततमं तम् ॥ १५४

அந்த அவையில் பராசரமுனிவருடைய புதல்வராகிய வியாஸமாமுனிவர் வேதங்களின் சிரஸ்ஸுக்களாகிய உபநிஷத்துக்களின் கருத்தை நன்கு விளக்கினார். உலகங்களுக்கு உற்ற நண்பரும், பூஜிக்கத்தக்கவரும், ஸத்யத்தையே கூறுகிறவருமான அவரிடம் அப்பொழுது யான் வினவினேன்.

आर्य वेदनिकरः प्रविभक्तो भारतं कृतमकारि पुराणम् ।
योगशास्त्रमपि सम्यगभाषि ब्रह्मसूत्रमपि सूत्रितमासीत् ॥ १५५

ஐயா! தங்களால் வேதங்கள் வகுக்கப்பட்டன. மகாபாரத நூல் இயற்றப்பட்டது. புராணம் புகலப்பட்டது. யோகசாஸ்திரமும் நன்றாக விரித்து உரைக்கப்பட்டது. பிரம்மசூத்திரமும் தொகுக்கப்பட்டது.

अत्र केचिदिह विप्रतिपन्नाः कल्पयन्ति हि यथायथमर्थान् ।
अन्यथाग्रहणनिग्रहदक्षं भाष्यमस्य भगवन् करणीयम् ॥ १५६

இவ்வுலகில், விகற்பம்கொண்டவர்களாகச் சிலர் தமக்குத் தோன்றியபடி இந்த பிரம்மசூத்திரங்களின் கருத்தைக் கூறுகின்றனர். பகவானே! விபரீதஞானத்தை அகற்றக்கூடிய சிறந்த பாஷ்யம் இதற்கு இயற்றற்குரியது.

मद्वचः स च निशम्य सभायां विद्वदग्रसर वाचमवोचत् ।
पूर्वमेव दिविषद्भिरुदीर्णः पार्वतीपतिसदस्ययमर्थः ॥ १५७

அறிஞர்களின் அணித்தலைவரே! என்னுடைய வசனத்தைக் கேட்டு அவர் கூறினார்:- ''இந்த விஷயம் பரமசிவனுடைய சபையில் முன்னமேயே கூறப்பட்டுள்ளது.''

वत्स तं शृणु समस्तविदेको मत्समस्तव भविष्यति शिष्यः ।
कुम्भ एव सरितः सकलं यः संहरिष्यति महोल्बणमम्भः ॥ १५८

மகனே! கேள்! என்னைப்போல் எல்லாமறிந்த ஒரு சிஷ்யன் உன்னிடம் அணுகுவான். அவன் நதியின் கோரமான வெள்ளத்தை கமண்டலுவிலேயே புகுத்துவான்.

दुर्मतानि निरसिष्यति सोऽयं शर्मदायि च करिष्यति भाष्यम् ।
कीर्तयिष्यति यशस्तव लोकः कार्तिकेन्दुकरकौतुकि येन ॥ १५९

அவன் துஷ்டமதங்களை நிராகரிப்பான். வேதாந்த நூலுக்கு அழகிய பாஷ்யத்தை இயற்றுவான். கார்த்திகைமாதத்துச் சந்திரகிரணம்போன்ற உனது கீர்த்தியை அவன் காரணமாக உலகம் கீர்த்தனம் செய்யும்.

इत्युदीर्य मुनिराट् स वनान्ते पत्युराप सुगिरिं गिरिजायाः ।
तन्मुखाच्छ्रुतमशेषमिदानीं सन्मुनिप्रिय मया त्वयि दृष्टम् ॥ १६०

முனிவர்களுக்கு அரசராகிய அவர் நைமிசவனத்தின் நடுவில் நடந்த அவையில் இவ்வாறு கூறி மலையின் மகளாகிய பார்வதியினுடைய கணவனுகிய பரமசிவன் தங்கும் கைலாஸமலையை அடைந்தார். முனிவர்களுக்குப் பிரியத்தை அளிப்பவனே! அந்த வியாஸமுனிவரிடமிருந்து கேட்டறியப்பட்ட யாவும் இப்பொழுது என்னால் உன்னிடம் காணப்பட்டன.

स त्वमुत्तमपुमानसि कश्चित्तत्त्ववित्प्रवर नान्यसमानः ।
तद्यतस्व निरवद्यनिबन्धैः सद्य एव जगदुद्धरणाय ॥ १६१

தத்துவஞானிகளின் தலைவரே! அத்தகைய நீர் ஒப்புயர்வற்றவராக இருக்கிறீர். ஆகையால் குறையற்ற நூல்களை இயற்றி விரைவில் உலகத்தின் உய்விற்காக முயல்வீராக.

गच्छ वत्स नगरं शशिमौलेः स्वच्छदेवतटिनीकमनीयम् ।
तावता परमनुग्रहमाद्या देवता तव करिष्यति तस्मिन् ॥ १६२

மகனே! நிர்மலமான தேவகங்கையினுல் சிறப்புற்றதும், சந்திரசேகரன் ஸன்னிதானம்கொண்டதுமாகிய காசிக்ஷேத்திரத்திற்குச் செல்வீராக. அங்கு சென்ற அளவிலேயே முதல்தெய்வமாகிய சிவபெருமான் அருள் புரிவார்.''

एवमेनमनुशास्य दयालुः पावयन्निजदृशा विससर्ज ।
भावतः स्वचरणाम्बुजसेवामेव शश्वदभिकामयमानम् ॥ १६३

மனதினுல் எப்பொழுதும் குருவின் பாதாரவிந்தங்களுக்குப் பணிவிடை செய்வதையே விரும்புகின்ற சங்கரரை கோவிந்தபகவத்பாதர் கருணை பூரித்த கண்ணினுல் அனுக்கிரகம்செய்து, மேற்கூறியபடி விடையளித்தார்.

पङ्कजप्रतिभटं पदयुग्मं शङ्करोऽस्य निरगादसहिष्णुः ।
तद्वियोगमभिवन्द्य कथंचित्तद्विलोकनमयन् हृदयाब्जे ॥ १६४

ஸ்ரீசங்கரர், அவருடைய தாமரைபோன்ற பாதங்களை வணங்கி, அவருடைய பிரிவாற்ருமையைத் தாங்கமுடியாதவராயினும் தன்னுடைய ஹிருதயகமலத்தில் அந்த ஆசாரியருடைய கடாக்ஷங்களை தியானம்செய்து கொண்டு அங்கிருந்து புறப்பட்டார்.

प्राप तापसवरः स हि काशीं नीपकाननपरीतसमीपाम् ।
आपगानिकटहाटकचञ्चद्यूपपङ्क्तिसमुदञ्चितशोभाम् । १६५

தபஸ்விகளின் தலைவராகிய சங்கரர், கதம்பவனத்தையருகில்கொண்டதும், ஆற்றின்கரையில் பொன்னுலாகிய யூபஸ்தம்பங்களால் மிக்கக் காந்தியுள்ளதுமாகிய காசீநகரத்தை அடைந்தார்.

संददर्श स भगीरथतप्तामन्दतीव्रतपसः फलभूताम् ।
योगिराडुचिततीरनिकुञ्जां भोगिभूषणजटातटभूषाम् ॥ १६६

யோகசித்திபெற்றவர்களுக்குத் தலைவராகிய அவர், பகீரதனுடைய கடும் தவத்தின் பயனுக விளங்குகின்றதும், அரவையணியாகக்கொண்ட சிவபெருமானுடைய ஜடைக்கு அலங்காரமும் ஆகிய கங்கையைக் கண்ணுற்ருர்.

विष्णुपादनखराञ्जननाद्वा शंभुमौलिशशिसंगमनाद्वा ।
या हिमाद्रिशिखरात्पतनाद्वा स्फाटिकोपमजला प्रतिभाति ॥ १६७

விஷ்ணுவினுடைய கால்களின் நகங்களிலிருந்து தோன்றியதனுலோ, சங்கரருடைய தலையிலிருக்கும் சந்திரனுடைய சம்பந்தம் ஏற்பட்டதினுலோ, அல்லது இமயமலையின் சிகரத்திலிருந்து வீழ்ந்ததினுலோ அந்த நதி பளிங்குக்கல்போல் பளபளப்புள்ள ஜலத்துடன் விளங்கிற்று.

गायतीव कलषट्पदनादैर्नृत्यतीव पवनोच्चलिताब्जैः ।
मुञ्चतीव हसितं सितफेनैः श्लिष्यतीव चपलोर्मिकरैर्या ॥ १६८

(தன்னுடைய இடத்திற்கு வந்த மகானைக்கண்டு மிக்க உவகையுற்ற) உத்தம கங்கை நதி, வண்டுகளுடைய இனிய குரல்களால் கானம் செய்கின்றவள்போலவும், காற்றினுல் அசைகின்ற தாமரைமலர்களால் நர்த்தனம்

செய்கின்றவள்போலவும், தூயநிறமுள்ள நுரைகளால் புன்முறுவல் பூத்தவள் போலவும், அசைகின்ற அலைகளாகிய கைகளால் அணைத்துக்கொள்ளுகிறவள் போலவும் விளங்கினாள்.

श्यामला क्वचिदपाङ्गमयूखैश्चित्रिता क्वचन भूषणभाभिः ।
पाटला कुचतटीगलितैर्या कुङ्कुमैः क्वचन दिव्यवधूनाम् ॥ १६९

ஸ்நானம் செய்யும் அணங்குகளின் கண்களுடைய ஒளிகளால் சில இடங்களில் கறுமையாகவும், அவர்களுடைய நகைகளால் சிலவிடங்களில் சித்திரநிறமாகவும், ஸ்தனங்களிலுள்ள குங்குமம் கரைந்ததினால் சிலவிடங்களில் சென்னிறமாகவும் விளங்கினாள்.

सोऽवगाह्य सलिलं सुरसिन्धोरुत्ततार शितिकण्ठजटाभ्यः ।
जाह्नवीसलिलवेगहृतस्तद्योगपुण्यपरिपूर्ण इवेन्दुः ॥ १७०

அந்த சங்கரர் அந்த தேவகங்கையின் நீரில் மூழ்கி எழுந்தார். அப்பொழுது, சிவபெருமானுடைய ஜடையிலிருக்கும் கங்கையின் வேகத்தினால் இழுக்கப்பட்டு அந்த கங்காநதியின் சம்பந்தத்தினால் புண்ணியம் நிரம்பிப் பூர்ணசந்திரன் வெளிவந்ததுபோல் அவர் தோற்றமளித்தார்.

स्वर्णदीजलकणाहितशोभा मूर्तिरस्य सुतरां विललास ।
चन्द्रपादगलदम्बुकणाङ्का पुत्रिका शशिशिलारचितेव ॥ १७१

தேவகங்கையின் நீர்த்திவிலைகளால் அழகுவாய்ந்த அவருடைய உடல், சந்திரகாந்தக்கல்லினால் செய்யப்பட்ட பதுமை, சந்திரகிரணங்களாலுண்டான தண்ணீர்த்துளிகளுடன் இருப்பதுபோல் ஒளிவீசியது.

विश्वेशश्चरणयुगं प्रणम्य भक्त्या हर्याद्यैस्त्रिदशवरैः समर्चितस्य ।
सोऽनैषीत्प्रयतमना जगत्पवित्रे क्षेत्रेऽसाविह समयं कियन्तमार्यः ॥ १७२

மிக்கப் பரிசுத்தமான மனமுடைய அந்த ஸ்ரீ சங்கரர், விஷ்ணு, இந்திரன் முதலிய தேவர்களால் பூஜிக்கப்பெற்ற விசுவநாதருடைய பாதங்களை பக்தியுடன் வணங்கி உலகில் பரிசுத்தமான இந்த க்ஷேத்திரத்தில் சில நாட்கள் கழித்தார்.

इति श्रीमाधवीये तत्सुखाश्रमनिवासगः ।
संक्षेपशङ्करजये सर्गोऽयं पञ्चमोऽभवत् ॥ ५ ॥

இவ்வாறு ஸ்ரீ மாதவாசாரியர் இயற்றிய சங்கரவிஜயகிரந்தத்தில்
அவருடைய சிறந்த துறவறத்தைக்கூறும்
ஐந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

आदितः श्लोकाः 556



# अथ षष्ठः सर्गः

## ஆருவது ஸர்க்கம்

## आत्मविद्याप्रतिष्ठा

## ஆத்மவித்யையை நிலைநாட்டுதல்

(ஜீவன்முக்தியை அளிக்கக்கூடிய நான்காவது ஆச்ரமமாகிய துறவறத்தை ஸ்ரீசங்கரர் பெற்றுக்கொண்ட வரலாற்றைக் கூறி, இந்த ஸர்க்கத்தில் அந்தப் பரமாசாரியர் செய்த பிரம்மவித்தையின் பிரதிஷ்டையைக் கூறுவதற்கு ஆரம்பிக்கின்ருர்.)

अथागमद्ब्राह्मणसूनुरादरादधीतवेदो दलयन् स्वभासा ।
तेजांसि कश्चित्सरसीरुहाक्षो दिदृक्षमाणः किल देशिकेन्द्रम् ॥ १

ஸ்ரீ சங்கரர் காசிக்ஷேத்திரத்தை அடைந்து அங்கு வாசம் செய்ய ஆரம்பித்த பிறகு, ஒரு நாள், வேதங்களைக் கற்றறிந்தவரும், தன்னுடைய உடலின் ஒளியினுல் சூரியன் முதலிய ஒளிகளைக்கூட மங்கச்செய்கின்றவரும், தாமரை இதழ்போல் கண்களையுடையவரும் ஆகிய ஒரு பிராம்மணகுமாரன் ஆசாரியர்களில் சிறந்தவரான அவரைக்காண விருப்பமுற்றவராக பணிவுடன் வந்தார்.

(सरसीरुहाक्षः = தாமரைக்கண்ணன். இது முக்கியமாகத் திருமாலுக்குத்தான் அடைமொழியாகக் கூறுவது மரபு. இங்கு, அந்தச்சொல் அமைந்துள்ளதால் சாமுத்திரிகாலக்ஷணம் பொருந்திய இவர் திருமாலின் அவதாரம் என்பது கவனிக்கத்தக்கது.)

आगत्य देशिकपदाम्बुजयोरपप्तत् संसारवारिधिमनुत्तरमुत्तितीर्षुः ।
वैराग्यवानकृतदारपरिग्रहश्च कारुण्यनावमधिरुह्य दृढां दुरापाम् ॥ २

பெறற்கரிதான ஆசாரியரின் கருணையாகிய ஓடத்தில் ஏறிக்கொண்டு, கரைகாணமுடியாத ஸம்ஸாரமாகிய கடலைத்தாண்டவேண்டும் என்ற விருப்புற்றவரும், வைராக்கியம் பெற்றவரும், மனைவியை மணக்காதவருமாகிய அவர் அணுகி ஆசாரியருடைய பாதாரவிந்தங்களில் (ஸாஷ்டாங்கமாக) வணங்கினுர்.

(उरसा शिरसा दृष्ट्या मनसा वचसा तथा । पद्भ्यां कराभ्यां कर्णाभ्यां प्रणामोऽष्टाङ्ग उच्यते ॥ என்று நமஸ்காரம் எட்டு அங்கங்களுடன் இருக்க வேண்டும் என்று சான்ருேர்கள் கூறுகின்றனர். 1) மார்பு, 2) தலை, 3) கண்கள், 4) மனது, 5) வசனம், 6) கால்கள், 7) கைகள், 8) செவிகள் என்று எட்டு அங்கங்களுடன் அமையவேண்டும்.)

उत्थाप्य तं गुरुरुवाच गुरुर्द्विजानां कस्त्वं क्व धाम कुत आगत आत्तधैर्यः ।
बालोऽप्यबालधिषणः प्रतिभासि मे त्वमेकोऽप्यनेक इव नैकशरीरभावः ॥ ३

பிராம்மணர்களுக்கெல்லாம் குருவாகிய அந்தப் பரமாசாரியர், அவரை எழும்படிக்கூறி, வினவினர்:- ''நீர் யார்? யாது இடம்? தைரியத்துடன் இங்கு வந்த காரணம் யாது? சிறுவனுயினும் முதியவனுடைய புத்தியுடையவராக விளங்குகிறீர். ஒருவராகவிருந்தபோதிலும், அநேக ரூபமுள்ள பரமாத்மாவைப்போலவும், ஒரு சரீரத்தில்கூட 'நான், என்னுடையது' என்ற அபிமானமில்லாதவராகவும் எனக்குத் தோற்றமளிக்கிறீர்.''

पृष्टो बभाण गुरुमुत्तरमुत्तरज्ञो विप्रो गुरो मम गृहं बुध चोलदेशे ।
यत्रापगा वहति तत्र कवेरकन्या यस्याः पयो हरिपदाम्बुजभक्तिमूलम् ॥ ४

விடை கூறுவதில் வன்மையுள்ள அந்த அந்தணர் ஸ்ரீ சங்கரரால் வின வப்பட்டவராகக் கூறினர்:- ''ஆத்மஞானியாகிய ஆசாரியரே! என்னுடைய இல்லம் சோழதேசத்தில் உள்ளது. நாராயணனுடைய பாதகமலங்களில் பக்தியை அளிக்கும் காவேரியாறு பெருகும் இடமமைந்தது என்னுடைய ஜன்மபூமி.

(मोक्षमिच्छेज्जनार्दनात्, முக்தியை அடையவேண்டுமானல் முகுந்தனை பஜிக்கவேண்டும். அந்த முக்திக்கு பக்தி சிறந்த உபாயம் என்று அதன் பொருள். அதற்குச் சிறந்த இடத்தில் பிறவியும் முக்கிய காரணம். காவேரியின் மகிமை, कावेरीतीरमाश्रित्य वातो यत्र प्रवर्तते । तद्देशवासिनां मुक्तिः किमुतत्तीरवासिनाम् ॥ என்று கூறப்படுகிறது. காவேரிக்கரையில் சம்பந்தமுற்று வீசுகின்ற காற்று எந்த தேசங்களில் பரவுகின்றதோ, அந்த தேசங்களில் வசிக்கின்றவர்களுக்கெல்லாம் முக்தி உண்டாகிறது. அங்ஙனமிருக்க அதன் கரையில் வாசம் செய்கிறவர்களுக்குக் கூறவேண்டுமா? (என்று பொருள்.)

अटाट्यमानो महतो दिदृक्षुः क्रमादिमं देशमुपागतोऽस्मि ।
बिभेमि मज्जन् भववारिराशौ तत्पारगं मां कृपया विधेहि ॥ ५

சான்றோர்களைச் சந்திக்கச் சித்தம் கொண்டவனுக சிறந்த தேசங்களில் ஸஞ்சாரம் செய்கின்ற யான் சிறந்த குருவாகிய தங்களுடைய ஸன்னிதானம் கொண்ட இந்த தேசத்திற்குச் சிறந்த பாக்கியத்தினுல் வந்துள்ளேன். ஸம்ஸாரமாகிய பெரும் கடலிலிருந்து பயமடைந்த என்னை கருணையினுல் அதன் கரையை அடைந்தவனுகச் செய்வீராக.

अपाङ्गैरुत्तुङ्गैरमृतझरभङ्गैः परगुरो
शुचा दूनं दीनं कलय दयया मामविमृशन् ।
गुणं वा दोषं वा मम किमपि संचिन्तयसि चेत्
तदा कैव श्लाघा निरवधिकृपानीरधिरिति ॥ ६

பரமகுருவே! ஸம்ஸாரத்திற்கு அஞ்சி வருந்திய என்னை, அமிருதப் பிரவாஹத்திற்கு ஒப்பானசிறந்த கடைக்கண்பார்வைகளால், எனது எளிமையை (தகுதியின்மையை) யோசனை செய்யாமல் அருள்வீர்களாக. என்னுடைய குணத்தையோ தோஷத்தையோ தாங்கள் யோசனைசெய்வீர்களேயாகில், அப்பொழுது, எல்லையில்லாக்கருணைக்கடல் தாங்கள் என்பதில் என்ன புகழ் இருக்கிறது.

स्यात्ते दीनदयालुताकृतयशोराशिस्त्रिलोकीगुरो
तूर्णं चेद्दयसे ममाद्य न तथा कारुण्यतः श्रीमति ।
वर्षन् भूरि मरुस्थलीषु जलभृत्सद्भिर्यथा पूज्यते
नैवं वर्षशतं पयोनिधिजले वर्षन्नपि स्तूयते ॥ ७

மூவுலகங்களின் குருவே! விரைவில் என்னிடம் கருணை கூர்வீர்களேயாகில், ''எளியவர்களிடம் கருணைகொண்டவர்'' என்ற புகழ் எவ்வாறு ஏற்படுமோ, அதுபோல் செல்வமுள்ளவனிடத்தில் தாங்கள் கருணைகொள்வதால் புகழ் ஏற்படாது. பாலைவனத்தில் மழைபொழிகின்ற மேகத்தை ஜனங்கள் புகழ்வதுபோல், கணக்கில்லாமல் கடலில் நூறு வருஷங்கள் தண்ணீர் பொழிகின்ற மேகத்தைப் புகழ்வதில்லை.

त्वत्सारस्वतसारसारससुधाकूपारसत्सारस -
स्रोतः संभृतसंततोज्ज्वलजलक्रीडा मतिर्मे मुने ।
चञ्चत्पञ्चशरादिवञ्चनहतं न्यञ्चं प्रपञ्चं हित -
ज्ञानाकिञ्चनमा विरिञ्चमखिलं चालोचयन्त्यञ्चतु ॥ ८

முனிவரே! தங்களுடைய சொற்பொழிவாகிய அமிருதக்கடலின் அலைகளில், (ஸரஸ்ஸில் ஸந்தோஷத்துடன் விளங்கும், ஸாரஸப்பறவைகள், கமலங்கள் என்பவைகள்போல) களிப்புடன் விளங்கும் விவேகிகளுடன் விளையாட்டை விரும்புகின்ற என்னுடைய மனம், விவேகத்துடன் விளங்கக் கடவது. அதாவது, பிரம்மதேவர் உள்பட உலகமனைத்தும் மன்மதனுடைய வஞ்சனைக்கு அடிமைப்பட்டு, தனக்கு ஹிதம் யாது என்பதை உணர வல்லமையற்றது, என்பதால் அற்பத்தன்மையுள்ளது என்று உணர்ந்து விளங்கக்கடவது.

सौरं धाम सुधामरीचिनगरं पौरन्दरं मन्दिरं
कौबेरं शिबिरं हुताशनपुरं सामीरसद्मोत्तरम् ।
वैधं चाऽऽवसथं त्वदीयफणितिश्रद्धासमिद्धात्मनः
शुद्धाद्वैतविदो न दोग्धि कुतुकं विरतिश्रीघातुकं कौतुकम् ॥ ९

சூரியனுடைய ஸ்தானம், சந்திரனுடைய நகரம், தேவேந்திரனுடைய பதவி, குபேரனுடைய கிருகம், அக்னிபகவானுடைய அந்தஸ்து, வாயுபகவானுடைய வாசகிருஹம், பிரும்மதேவருடையதான ஸத்யலோகம் என்பவைகளை அடைந்து அங்கு அனுபவிக்கத்தக்க சுகம், தங்களுடைய சொற்பொழிவில் சிரத்தை வளர்ந்து அதனுல் ஆத்மஞானத்தை அடைந்த மனிதனுடைய மனதிலுள்ள வைராக்யலக்ஷ்மியின் ஆற்றலை அறுக்கவல்லமை உள்ளதாக விளங்காது.

न भोमा रामाद्याः सुषमविषवल्लीफलसमाः
समारम्भन्ते नः किमपि कुतुकं जातु विषयाः ।
न गण्यं नः पुण्यं रुचिरतररम्भाकुचतटी - १०
परीरम्भारंभोज्ज्वलमपि च पौरन्दरपदम् ॥

தங்களுடைய உபதேசத்தைக்கேட்டு மகிழ்ச்சியைப்பெற விரும்புகிறவர்களுக்கு, விஷக்கொடிகளில் விளையும் பழங்களுக்கு நிகரான இவ்வுலகச் சிற்றின்பங்கள் துன்பமளிக்கமாட்டா. அப்ஸரப்பெண்களுடன் போகத்தை அனுபவிக்கக் காரணமாகிய வேள்விகளாலாகிய புண்ணியங்களும் அவர்களால் மதிக்கப்படுவதில்லை.

न चञ्चद्वैरिञ्चं पदमपि भवेदादरपदं
वचो भव्यं नव्यं यदकृत कृती शङ्करगुरुः ।
चकोरालीचञ्चूपुटदलितपूर्णेन्दुविगल -
त्सुधाधाराकारं तदिह वयमीहेमहि मुहुः ॥ ११

பிரும்மதேவருடைய அழகான பதவியும் விருப்பமளிப்பதில்லை. ஸ்ரீசங்கரராகிய பரமாசாரியர் எந்த வசனத்தை இயற்றியுள்ளாரோ, அது, சகோரப்பறவைகள் ஆகாரத்தை விரும்பித் தங்களுடைய அலகுகளால் கொத்தி துவாரம் செய்தமையால் அதன் வழியாக சந்திரனிடமிருந்து பொழியும் அமிருதப்பிரவாஹத்திற்கு நிகராக இருக்கின்றது. அதனைத்தான் அடிக்கடி விரும்புகிறோம். (சகோரப்பறவை சந்திரகிரணங்களைப் பானம்செய்கின்றது என்பது கவி மரபு.)

द्यावाभूमिशिवकरैर्नवयशःप्रस्तावसौवस्तिकैः
पूर्वारवर्वतपः पचोलिमफलैः सर्वाधिमुष्टिंधयैः ।
दीनाढ्यंकरणैर्भवाय नितरां वैरायमाणैरलं-
कर्मीणं प्रसितं त्वदीयभजनैः स्यान्मामकीनं मनः ॥ १२

இம்மையிலும் மறுமையிலும் நன்மையை விளைவிக்கின்றதும், புதிதான புகழ்வளர்ச்சியை அளிக்கின்றதும், பூர்வஜன்மத்தில் செய்த சிறந்த தவத்தின் பயனாக கிடைக்கின்றதும், மனோவியாதிகளனைத்தையும் அறுக்கின்றதும், எளியவர்களைச் சிறந்த செல்வவான்களாகச் செய்கின்றதும், ஸம்ஸார துக்கங்களைப் பகைக்கின்றதும் ஆகிய தங்களுடைய சேவைக்கு ஈடுபட்டு என்னுடைய மனம் அதை நிறைவேற்றுவதில் வெற்றியுள்ளதாக விளங்க வேண்டும்.

संसारबन्धामयदुःखशान्त्यै स एव नस्त्वं भगवानुपास्यः ।
भिषक्तमं त्वां भिषजां शृणोमीत्युक्तस्य योऽभूदुदितावतारः ॥ १३

''தங்களை வைத்தியர்களுக்கு அரசனாகக்கேள்வி உறுகிறேன்'' என்று யாரைப்பற்றி வேதம் கூறுகின்றதோ, அந்தப் பரமேசுவரனே இவ்வாறு அவதாரம் செய்துள்ளார். அத்தகைய பகவானாகிய தாங்கள் ஸம்ஸார பந்தத்தினாலுண்டாகும் துக்கம் அறவே அறுபடுவதற்காக எங்களால் உபாஸிக்கத்தக்கவர்.

इत्युक्तवन्तं कृपया महात्मा व्यदीपयत्संन्यसनं यथावत् ।
प्राहुर्महान्तः प्रथमं विनेयं तं देशिकेन्द्रस्य सनन्दनाख्यम् ॥ १४

இவ்வாறு கூறிய அவருக்கு மகாத்மாவாகிய அந்த ஸ்ரீ சங்கரர் முறைப்படி ஸன்யாசமந்திரத்தை உபதேசம் செய்து அருளினர். இவரைத்தான் அந்த பரமாசாரியருடைய முதல் சீடரான 'ஸனந்தனர்' என்று சான்ருேர்கள் கூறுகின்றனர்.

संसारघोरजलधेस्तरणाय शश्वत्सांयात्रिकीभवनमर्दयमानमेनम् ।
हन्तोत्तमाश्रमतरीमधिरोप्य पारं निन्ये निपातितकृपारसकेनिपातः ॥ १५

ஸம்ஸாரமாகிய கடலேக்கடப்பதற்கு எப்பொழுதும் ஓடக்காரன் ஒருவனைத் தேடிக்கொண்டிருந்த இவரை சிறந்த 'துறவறம்'' என்ற ஓடத்திலேற்றி கருணையாகிய பாய்மரத்தை போட்டுக் கரைக்குக் கொண்டு சென்ருர். அவருடைய பாக்கியம்!

येऽप्यन्येऽमुं सेवितुं देवतांशा यातास्तेऽपि प्राय एवं विरक्ताः ।
क्षेत्रे तस्मिन्नेव शिष्यत्वमस्य प्रापुः स्पष्टं लोकरीत्याऽपि गन्तुम् ॥ १६

இன்னும், ஆலமரத்தினடியில் அமர்ந்திருந்த அந்த தக்ஷிணமூர்த்தியின் சீடர்களான தேவாம்சம் பொருந்தியவர்கள் மண்ணுலகில் அவதரித்து பாக்யத்திளுல் வைராக்கியம் அடைந்தவர்களாக அந்த ஸனந்தனரைப் போலவே மனிதர்களுக்குத் தெரியுமாறு அந்த காசிக்ஷேத்திரத்தில் வசிக்கும் பரமாசாரியராகிய ஸ்ரீசங்கரருக்குச் சீடர்களாக அவரை வந்தடைந்தனர்.

व्याख्या मौनमनुत्तराः परिदलच्छङ्काकलङ्काङ्कुरा -
श्छात्रा विश्वपवित्रचित्रचारितास्ते वामदेवादयः ।
तस्यैतस्य विनीतलोकततिमुद्धर्तुं धरित्रीतलं
प्राप्तस्याद्य विनेयतामुपगता धन्याः किलान्यादृशाः ॥ १७

''चित्रं वटतरोर्मूले वृद्धाः शिष्या गुरुर्युवा। गुरोस्तु मौनं व्याख्यानं शिष्यास्तु छिन्नसंशयाः ॥'' என்று தக்ஷிணமூர்த்தி தேவருடைய மகிமையைப் புகழ்கின்றது. இந்தச் செய்யுளின் கருத்து மேற்கூறிய செய்யுளுடன் ஒப்பிடத்தக்கது. ஆச்சரியம், ஆலமரத்தினடியில் குரு ஒருவர் (தக்ஷிணமூர்த்தி தேவர்) விளங்குகிருர். குரு இளேயவர்; சீடர்கள் முதியோர்கள்; குரு மௌனமாகவிருக்கிருர். சீடர்கள் ஸந்தேகங்கள் நீங்கி சாஸ்திரத்தின் நுட்பத்தை நன்கு உணர்ந்தவர்களாகவும், உலகங்களைப் பரிசுத்தம் செய்யும் செய்கையுள்ளவர்களாகவும் விளங்குகின்றனர். அந்த தக்ஷிணமூர்த்திதேவரே இவ்வுலகிலுள்ள சீடர்களை உய்விப்பதற்கு அவதரித்து விளங்குகையில் (ஸ்ரீசங்கரராக) அவருக்குச்சீடர்களாக இருப்பவர்கள் இணையில்லா பாக்கியம் பெற்றவர்கள்.

शेषः साधुभिरेव तोषयति नॄञ्छब्दैः पुमर्थार्थिनो
वाल्मीकिः कविराज एष वितथैरर्थैर्मुहुः कल्पितैः ।
व्याचष्टे किल दीर्घसूत्रसरणिर्वाचं चिरादर्थदां
व्यासः शङ्करदेशिकस्तु कुरुते सद्यः कृतार्थानहो ॥ १८

ஆதிசேஷன் (மகாபாஷ்யமியற்றி) இலக்கணப்பிழையில்லாத சொற்களை உபதேசித்து, புருஷார்த்தங்களை விரும்புகின்ற மனிதர்களைச் சந்தோஷமடையும்படிச் செய்கிறார். (சொற்களைச் சுத்தமாகச் சொல்வதினால் மட்டும் புருஷார்த்தம் பயன்படாது, ஆனதுபற்றி) சிறந்த கவியாகிய வால்மீகி முனிவர் சிறந்த பொருளடங்கிய காவ்யத்தை கற்பனைகளாலியற்றினார். அது கற்பனை மிகுந்தது. வியாஸமுனிவர் ஸூத்திரத்தொகுதியை இயற்றினார். அவருடைய சொல் மிகக் கஷ்டப்பட்டவர்களுக்குத்தான் பொருளை விளக்குகின்றது. ஸ்ரீசங்கரபகவத்பாதரோவெனில், இலக்கணப்பிழையற்று, உண்மையை விளக்குகின்றவையும், எளிதில் பொருள்விளக்க முள்ளவைகளுமாகிய சொற்களால் பரமபுருஷார்த்தமாகிய முக்தியை விரைவிலேயே அளித்து, படிக்கின்றவர்களை கிருதார்த்தர்களாகச் செய்கிறார். ஆச்சரியம்!

चक्रितुल्यमहिमानमुपासांचक्रिरे तमविमुक्तनिवासाः ।
वक्रसृत्यनुसृतामपि साध्वीं चक्रुरात्मधिषणां तदुपास्त्या ॥ १९

ஸுதர்சனசக்ரத்தை தரித்த விஷ்ணுவிற்குச் சமமான மகிமைகொண்ட அவரை அவிமுக்தக்ஷேத்திரமாகிய காசியில் வாஸம் செய்கின்றவர் உபாஸித்தனர். கோணலான நெறியில் சென்ற தங்களுடைய புத்தியை அவருடைய உபாஸனையினால் நல்ல வழியில் கொண்டுவந்தனர்.

(अवि = பாபங்கள், அவைகளிலிருந்து मुक्त = விடப்பட்டது. ஆகையால், என்னால் = பரமசிவனால், न विमुक्तम्, अविमुक्तम् = ஒருநாளும் விடப்படாதது என்று காசியின் மகிமையைப் பரமசிவன் பார்வதியிடம் கூறுகிறார்.)

चण्डभानुरिव भानुमण्डलैः पारिजात इव पुष्पजाततः ।
वृत्रशत्रुरिव नेत्रवारिजैश्छात्रपङ्क्तिभिरलं ललास सः ॥ २०

கிரணக்கூட்டங்களால் சூரியன்போலவும், மலர்க்கூட்டங்களால் பாரிஜாதமரம்போலவும், கண்களின் கூட்டங்களால் தேவேந்திரன் போலவும், அவர் சீடர்களுடைய ஸமூகங்களால் விளங்கினார்.

एकदा खलु वियत्त्रिपुरद्विड्भाललोचनहुताशनभानोः ।
विस्फुलिङ्गपदवीं दधतीषु प्रज्ज्वलत्तपनकान्तिशिलासु ॥ २१

दर्शयत्युरुमरीचिसरस्वत्पूरसृज्यपरमायिनि भानौ ।
साधुनैकमणिकुट्टिममूर्च्छद्रश्मिजालकशिखावलपिच्छम् ॥ २२

पङ्कजावलिविलीनमराले पुष्करान्तरभिगत्वरमीने ।
शाखिकोटरशयालुशकुन्ते शैलकन्दरशरण्यमयूरे ॥ २३

शङ्करो दिवसमध्यमभागे पङ्कजोत्पलपरागकषायाम् ।
जाह्नवीमभिययौ सह शिष्यैराह्निकं विधिवदेष विधित्सुः ॥ २४

ஒருநாள், ஆகாயமாகிய மகாதேவனின் நெற்றிக்கண்ணுகிய அக்கினியினுடைய கிரணங்கள் = அக்கினிஜ்வாலைக்குச் சமமான சூரியகிரணங்கள் சுடர் விட்டெரிகின்ற சூரியகாந்தக்கற்களில் நெருப்புப் பொறிகளைப் பரவச் செய்தும், சூரியனுகிய இந்திரஜாலக்காரன் கிரணக்கூட்டமாகிய மாயையினுல் ரத்தினக்கற்களாலமைக்கப்பட்ட திண்ணைகளில் பலநிறங்களான மயில்பீலிகளை (கிரணங்களை) பரவச்செய்தும் இருக்கிறவேளையில், தாபம் தாங்கமுடியாமல் அன்னப்பறவைகள் தாமரைமலர்களில் மறைந்தும், மீன்கள் தண்ணீருக்குள் ஒளிந்தும், மற்றப்பறவைகள் மரங்களின் பொந்துகளிலும், மயில்கள் மலைகளின் குகைகளிலும் ஒளிந்திருக்கும் நடுப்பகலில் ஸ்ரீசங்கரர், மத்தியான்னத்தில் செய்யவேண்டிய கடமைகளை முறைப்படிச் செய்ய விரும்பியவராக சீடர்களுடன், செந்தாமரைகளாலும், நீலத்தாமரைகளாலும் பல நிறமுள்ள கங்கையை அடைந்தார்.

सोऽन्त्यजं पथि निरीक्ष्य चतुर्भिर्भीषणैः श्वभिरनुद्रुतमारात् ।
गच्छ दूरमिति तं निजगाद प्रत्युवाच च स शङ्करमेनम् ॥ २५

அவர், வழியில் பயங்கரங்களான நான்கு நாய்களால் பின்தொடரப்பட்ட ஒரு சண்டாளன் அருகில் அணுக ''தூரத்தில் செல்'' என்று கூறினுர். அவனும் இந்த சங்கரரிடம் கூறினுன்.

(சங்கரரான இவரிடம் கூறினுன் என்று சம்பந்தப்படுத்திக் கூறலாம். அந்தச் சண்டாளனுக்கும் இவர் தன்னுடைய வசனங்களால் சங்கரராகவே = சுகத்தை அளித்தவராகவே இருந்தார். அது அவர்களுடைய சம்பாஷணையினுல் விளங்குகிறது.)

சண்டாளன் கூறிய வசனத்தைப் புகலுகிறுர்:-

अद्वितीयमनवद्यमसङ्गं सत्यबोधसुखरूपमखण्डम् ।
आमनन्ति शतशो निगमान्तास्तत्र भेदकलना तव चित्रम् ॥ २६

உபநிஷத்துக்கள், ஆத்மாவை அத்விதீயனுகவும் (வேற்றுமையற்றவன்) தோஷங்களில்லாதவனுகவும், பற்றில்லாதவனுகவும், ஸத்யனுகவும், ஞான ரூபனுகவும், சுகரூபியாகவும், வியாபகனுகவும் கூறுகின்றன. அப்படிப்பட்ட ஆத்மாவினிடத்தில் வேற்றுமை உமக்கு உண்டானது ஆச்சரியம்!

दण्डमण्डितकरा धृतकुण्डाः पाटलाभवसनाः पटुवाचः ।
ज्ञानगन्धरहिता गृहसंस्थान् वञ्चयन्ति किल केचन वेषैः ॥ २७

கையில் தண்டத்தையும் கமண்டலத்தையும் தரித்து, கஷாயத்துணியையும் அணிந்து, அழகாகப் பேசுகின்ற சிலர், உண்மையான ஞானத்தின் வாசனைகூட இல்லாவிடினும், இல்லறத்தில் இருக்கின்றவர்களை வேஷத்தினுல் ஏமாற்றுகின்றனர்.

गच्छ दूरमिति देहमुताहो देहिनं परिजिहीर्षसि विद्वन् ।
भिद्यतेऽन्नमयतोऽन्नमयं किं साक्षिणश्च यतिपुंगव साक्षी ॥ २८

அறிஞரே! தூரத்தில் செல் என்று விலகும்படித் தாங்கள் தேகத்தைப் பற்றியா, அல்லது அதைக்காட்டிலும் வேறுபட்ட ஆத்மாவைப்பற்றியா கூறுகிறீர்? தேகத்தைப்பற்றி என்றால், அன்னமயத்திற்குள் வித்யாஸமுண்டா? பஞ்சபூதங்களின் விகாரமாகிய ஒரு தேகத்திற்கும் மற்றொரு தேகத்திற்கும் அமைப்பில் என்ன மாறுதல் இருக்கின்றது? ஆத்மாவைக் கருதுகிறதாயின், 'யதிகளில் சிறந்தவரே! (ஐம்பொறிகளையடக்கி ஆத்மஞானத்தை அடைந்தவர்களில் சிறந்தவரே!) எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியாகி செயலற்றவனாக விளங்கும் ஆத்மா ஒன்றல்லவா? அவனுக்கும் பேதமில்லையே'.

ब्राह्मणश्वपचभेदविचारः प्रत्यगात्मनि कथं तव युक्तः ।
बिम्बितेऽम्बरमणौ सुरनद्यामन्तरं किमपि नास्ति सुरायाम् ॥ २९

பிராம்மணன், சண்டாளன் என்ற வேற்றுமை விசாரம் பரமாத்ம விஷயத்தில் நிலவத்தகாதது உமக்கு எவ்வாறு ஏற்பட்டது? ஆகாயத்தில் விளங்கும் சூரியன் கங்கையில் பிரதிபலித்தாலும், கள்ளில் பிரதிபலித்தாலும் மாறுதலில்லையல்லவா?

शुचिर्द्विजोऽहं श्वपच व्रजेति मिथ्याग्रहस्ते मुनिवर्य कोऽयम् ।
सन्तं शरीरेष्वशरीरमेकमुपेक्ष्य पूर्णं पुरुषं पुराणम् ॥ ३०

நான் பரிசுத்தனான பிராம்மணன், நீ சண்டாளன். அருகில் அணுகாதே, போ என்ற வீண் அபிமானம், முனிவர்களில் சிறந்தவரே! உமக்கு ஏன் உண்டாயிற்று? சரீரங்களில் இருப்பவனாயினும், பிறப்பற்ற புருஷனான ஆத்மா எங்கும் நிறைந்தவன் என்பதை உணராமலன்றோ இந்த வேற்றுமையுண்டாயிற்று.

अचिन्त्यमव्यक्तमनन्तमाद्यं विस्मृत्य रूपं विमलं विमोहात् ।
कलेवरेऽस्मिन्करिकर्णलोलाकृतिन्यहंता कथमाविरास्ते ॥ ३१

சிந்திக்கமுடியாதவரும், அவ்யக்தரும், அழிவற்றவரும், எல்லாவற்றிற்கும் ஆதியிலேயே இருக்கிறவரும், மாசற்றவருமாகிய பரமாத்மாவை அறிவின்மையினால் மறந்து, யானையின் செவிபோல் நிலையற்றுச் சஞ்சலத்தன்மையுள்ள இந்த தேகத்தில் 'நான்' என்ற ஆத்மபுத்தி உமக்கு எவ்வாறு உதிக்கின்றது?

विद्यामवाप्यापि विमुक्तिपद्यां जागर्ति तुच्छा जनसंग्रहेच्छा ।
अहो महान्तोऽपि महेन्द्रजाले मज्जन्ति मायाविवरस्य तस्य ॥ ३२

முக்தியை அளிக்கும் வல்லமையுள்ள வித்யையைப்பெற்றும், ஜனங்களை தன் வசப்படுத்திக்கொள்ளவேண்டுமென்ற விருப்பம் அவர்களுக்கு உதிக்கின்றது. ஆச்சரியம், கஷ்டம்! மகான்கள்கூட மாயாவிகளில் சிறந்தப் பரமனுடைய மகேந்திரஜாலமாகிய மாயையில் மூழ்கின்றனர்.

इत्युदीर्य वचनं विरतेऽस्मिन् सत्यवाक्तदनु विप्रतिपन्नः ।
अत्युदारचरितोऽन्त्यजमेनं प्रत्युवाच स च विस्मितचेताः ॥ ३३

இவ்வாறு இவர் கூறி முடித்தபொழுது, ''இவன் சண்டாளனல்லன்'' என்ற நிச்சயங்கொண்டு, உண்மையைக் கூறுகின்ற சங்கரரும் வியப்புற்றுத் தன்னுடைய உதாரமான செயலை வெளிப்படுத்துவதற்காகப் பதில் கூறினர்.

सत्यमेव भवता यदिदानीं प्रत्यवादि तनुभृत्प्रवरैतत् ।
अन्त्यजोऽयमिति सम्प्रति बुद्धिं संत्यजामि वचसाऽऽत्मविदस्ते ॥ ३४

உடலுற்றவர்களில் உத்தமரே! நீர் இப்பொழுது உரைத்த உத்தரம் உண்மையே. ஆத்மஞானியாகிய உமது வசனத்தைச் செவியுற்று 'நீர் சண்டாளன்' என்ற எண்ணத்தை அகற்றிவிட்டேன்.

जानते श्रुतिशिरांस्यपि सर्वे मन्वते च विजितेन्द्रियवर्गाः ।
युञ्जते हृदयमात्मनि नित्यं कुर्वते न धिषणामपभेदाम् ॥ ३५

சுருதிகளின் சிரஸ்ஸுக்களாகிய உபநிஷத்துக்களை எல்லோரும் உணருகிறார்கள். ஐம்பொறிகளையும் அடக்கி மனதில் மனனமும் செய்கின்றனர். அத்வைதமான ஆத்மவஸ்துவில் மனதைச் செலுத்தி தியானம் செய்வதிலும் ஐயமில்லை. ஆயினும் வேற்றுமைகொள்ளாமலிருப்பதில்லை.

(ஆத்மஞானம் நிலைத்துத் துறவியாகுதல், ஆத்மஞானத்தை அடைய வேண்டுமென்ற விருப்பத்தினால் துறவியாகுதல் என்று துறப்பு இருவிதம். இவை முறையே வித்வத்ஸன்னியாஸம், விவிதிஷாஸன்னியாஸம் என்று கூறப்படும். ஞானியாகத் துறந்தால், அவனுக்குக் கர்மங்களும் உலகவியவகாரங்களும் பாதகமாகாது. ஞானத்திற்காகத் துறக்கிறவன் சில தர்மங்களைச் செய்ய வேண்டியதுண்டு. சில உலகவியவகாரங்களுக்கும் உட்பட்டிருக்க வேண்டும். வெளிவேஷத்தினால் அவர்களுடைய அறிவின் வன்மையை மற்றவர்களால் உணரமுடியாது. ஸ்ரீசங்கர பகவத்பாதர் பரமேசுவரருடைய அவதாரமாகத் தோன்றித் துறவறத்தைக் காப்பாற்றுவதுமட்டுமன்றி அவனவனுடைய நிலைமைக்குத் தக்கபடி வர்ணாச்ரமதர்மங்களை உபதேசித்தும் நடைமுறையிலும் நிலைநாட்டுவதை தன்னுடைய அதிகாரமாகக் கொண்டவர். அப்படிச் செய்தால்தான் உலகத்திற்கு பாதுகாப்பு, ஆஸ்திகமதத்தின் ரக்ஷை, பிரவ்ருத்திமார்க்கத்திற்கும் நிவ்ருத்திமார்க்கத்திற்கும் வரைவகுத்து நிலைநிறுத்தல் என்பவை உண்டாகும். அதைப் பின்பற்றி 'தூரத்தில் செல்' என்ற வசனத்தைக் கூறினர். அதனைக் கேட்டவர் கடுஞ்சினத்துடன் கடினச் சொற்களைக் கூறினர். ஆயினும் தான் சினங்கொள்ளாமலும் மன மாறுபாடு ஏற்படாமலும் அவருக்கு பதில் கூறினர். அந்த வசனத்தின்படி அவரைச் சந்தித்த சண்டாளன் ஆத்மதத்துவத்தை அறிந்தவன் என்பது திண்ணம். ஆயினும், ஞானியான தன்னை நோக்கி இவ்வாறு கூறிவிட்டாரல்லவா என்ற சினம் அந்தச் சண்டாளனுடைய வசனத்தில் ததும்புகிறது. உண்மையான தத்வஞானிக்கு இவ்வளவு கோபம் உண்டாகுதலும், அதனால் பிறரைக் கொடிய சொற்களால் புண்படுத்தலும் தகுமா? என்பதுபற்றி யோசித்தால் இதற்கு சமாதானம் கூறுதல் அந்தச் சண்டாளனுடையவும் பொறுப்பான காரியமாகும். ஆயினும், தானே அதற்கு விடைகூறும் முறையில் ஸ்ரீசங்கரர் மேற்கூறிய பதில் புகன்றார். துறவிக்கும் சில வரம்புகளைக் காப்பாற்றுதல் முக்கிய கடமையாகும் என்று கருத்து.)

भाति यस्य तु जगद् दृढबुद्धेः सर्वमप्यनिशमात्मतयैव ।
स द्विजोऽस्तु भवतु श्वपचो वा वन्दनीय इति मे दृढनिष्ठा ॥ ३६

உறுதியான ஆத்மஞானத்தைப்பெற்ற எந்த மகானுக்கு உலகமனைத்தும் ஆத்மரூபமாகவே விளங்குகின்றதோ, அவர் தோற்றத்தில் சண்டாளனாயினும், பிராம்மணனாயினும் வணங்கத்தக்கவர் என்று என்னுடைய உறுதியான நிச்சயம்.

या चितिः स्फुरति विष्णुमुखे सा पुत्तिकावधिषु सैव सदाऽहम् ।
नैव दृश्यमिति यस्य मनीषा पुल्कसो भवतु वा स गुरुर्मे ॥ ३७

விஷ்ணு முதலிய சிறந்த ஸகுணமூர்த்திகள் முதல் புழுக்கள் வரையிலுள்ள மிக அற்பமான உடல்களிலும் விளங்குகின்ற சைதன்யம்தான் 'நான்' என்ற பொருள் என்றும், புலன்களுக்கு விஷயமான பிரபஞ்சமல்ல என்றும் உறுதியான தீர்மானம் எவனுக்கு உள்ளதோ, அவன் சண்டாளனாயினும் எனக்கு குருவேயாவார்.

यत्र यत्र च भवेदिह बोधस्तत्तदर्थसमवेक्षणकाले ।
बोधमात्रमवशिष्टमहं तद्यस्य धीरिति गुरुः स नरो मे ॥ ३८

எந்தெந்தப் பொருள்விஷயமாக ஞானமுண்டாகின்றதோ, அவைகளை உணருகையில் அப்பொருள்கள் நாசமுற்றபோதிலும், அழிவில்லாத ஞானமே 'अहं पदार्थ' (நான் என்ற பொருள்) என்ற நிலையான புத்தியுள்ளவன் என்னுடைய குரு என்பது தீர்மானம்.

(ஆகையால், தூரச்செல் என்று தேகத்தையா, ஆத்மாவையா, எதனைப் பற்றிக் கூறுகிறாய் என்ற கேள்விக்கு இங்கு விடை கூறியதாகும். ஆத்மாவையுமன்று, தேகத்தையுமன்று. தேகம், பொறிகள் என்ற முதலியவற்றில் அத்யாஸஸம்பந்தத்தினால், 'நான், என்னுடையது' என்று அபிமானமுற்றவனையே கூறியதாகும். அந்த அத்யாஸஸம்பந்தத்தை விலக்கி அதிஷ்டானமாகிய சுத்த சைதன்யத்தை உண்மையாக உணர்ந்தவன் சிறந்த குரு என்றும் கருத்து. ஸத்யமான பொருளுக்கும் பொய்மையான பொருளுக்கும் இணைப்புப்பற்றி ஒன்றை மற்றொன்றாகத் தெரிந்து கொள்ளுவது அத்யாஸஞானம், இரும்பு சுடுகிறது என்பதுபோல்.)

**ஸ்ரீ சங்கரபகவத்பாதர் பதில் கூறியதாகப் பிரசித்திபெற்ற செய்யுட்கள்**

जाग्रत्स्वप्नसुषुप्तिषु स्फुटतरा या संविदुज्जृंभते
या ब्रह्मादिपिपीलिकान्ततनुषु प्रोता जगत्साक्षिणी ।
सैवाहं न च दृश्यवस्त्विति दृढप्रज्ञाऽपि यस्यास्ति चेत्
चण्डालोऽस्तु स तु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषा मम ॥ १

ब्रह्मैवाहमिदं जगच्च सकलं चिन्मात्रविस्तारितं
सर्वं चैतदविद्यया त्रिगुणया शेषं मया कल्पितम् ।
इत्थं यस्य दृढा मतिः सुखतरे नित्ये परे निर्मले
चण्डालोऽस्तु स तु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषा मम ॥ २

शश्वन्नश्वरमेव विश्वमखिलं निश्चित्य वाचा गुरोः
नित्यं ब्रह्म निरन्तरं विमृशता निर्व्याजशान्तात्मना ।
भूतं भावि च दुष्कृतं प्रदहता संविन्मये पावके
प्रारब्धाय समर्पितं स्ववपुरित्येषा मनीषा मम ॥ ३

या तिर्यङ्नरदेवताभिरहमित्यन्तः स्फुटा गृह्यते
यद्भासा हृदयाक्षदेहविषया भान्ति स्वतोऽचेतनाः ।
तां भास्यैः पिहितार्कमण्डलनिभां स्फूर्तिं सदा भावयन्
योगी निर्वृतमानसो हि गुरुरित्येषा मनीषा मम ॥ ४

सत्सौख्याम्बुधिलेशलेशत इमे शक्रादयो निर्वृताः
यच्चित्ते नितरां प्रशान्तकलने लब्ध्वा मुनिर्निर्वृतः ।
यस्मिन्नित्यसुखाम्बुधौ गलितधीर्ब्रह्मैव न ब्रह्मवित्
यः कश्चित्स सुरेन्द्रवन्दितपदो नूनं मनीषा मम ॥ ५



भाषमाण इति तेन कलावानेष नैक्षत तमन्त्यजमग्रे ।
धूर्जटिं तु समुदैक्षत मौलिस्फूर्जदैन्दवकलं सह वेदैः ॥ ३९

இவ்வாறு கூறிக்கொண்டிருக்கையிலேயே சகல கலைகளிலும் வல்லவராகிய அந்தப் பரமாசாரியர் எதிரில் சண்டாளனைக் கண்டாரில்லை. ஆனால், தலையில் சந்திரக்கலை விளங்கும் காசிவிசுவநாதரையும், உருவமெடுத்து விளங்கும் நான்கு வேதங்களையும் கண்டார்.

भयेन भक्त्या विनयेन धृत्या युक्तः स हर्षेण च विस्मयेन ।
तुष्टाव शिष्टानुमतः स्तवैस्तं दृष्ट्वा दृशोर्गोचरमष्टमूर्तिम् ॥ ४०

சான்றோர்களில் சான்றவரான அவர் அஷ்டமூர்த்தியான அந்தப் பரமசிவனைக் கண்டவுடனேயே, பயம், பக்தி, பணிவு, தைரியம், உவகை, வியப்பு என்ற பல மனோவிகாரங்களுடன் கூடியவராக அவரைத் துதித்தார்.

(தான் கேவலமாகக் கூறியதினால் பயம், அத்விதீய ஆத்மஞானத்தின் பொருளைக் கண்டமையால் பக்தி, மனிதத்தன்மையைப் பின்பற்றிப் பணிவு, தத்துவவிசாரத்தின் வன்மையினால் தைரியம், அருள்புரிந்து அருமையான உருவத்தைத் தோற்றியதினால் உவகை, திடீரென தான் கண்ட நாய்களும், சண்டாளனும் மறைந்து, சிவபெருமானுடையவும் மறைகளுடையவும் உருவம் தோன்றியதினால் வியப்பு.)

दासस्तेऽहं देहदृष्ट्याऽस्मि शंभो जातस्तेंऽशो जीवदृष्ट्या त्रिदृष्टे ।
सर्वस्यात्मन्नात्मदृष्ट्या त्वमेवेत्येवं मे धीर्निश्चिता सर्वशास्त्रैः ॥ ४१

சம்புவே! = சுகம் விளையும் பூமியே! தேகத்தைப் பற்றி யோசித்தால் நான் தங்களுடைய தாஸன். மூன்று தேஜஸ்ஸுக்களை (சூரியன், சந்திரன், அக்னி) கண்களாகக்கொண்டவரே! ஜீவனைப்பற்றினவரையில் தங்களுடைய அம்சம்.

ஆத்மதத்துவத்தை அனுசரித்துப் பார்க்கையில், ஸர்வஸ்வரூபியாகிய தாங்களேதான் யான், என்று எல்லா நூல்களாலும் யான் உணர்ந்துள்ளேன்.

(பேதபுத்தியுடன் தான் கூறியதற்குக் காரணம் அந்தச் சிவபெருமானேயாகும் என்ற கருத்தைச் சமத்காரமாக ''त्रिदृष्टे'' என்ற விளிவேற்றுமையால் வெளிப்படுத்தியுள்ளார். வியவகாரகாலத்தில் வேற்றுமையை மறுத்தலியலாது. दृष्टि = கண், எண்ணம்.)

यदालोकादन्तर्बहिरपि च लोको वितिमिरो
न मञ्जूषा यस्य त्रिजगति न शाणो न च खनिः ।
यतन्ते चैकान्तं रहसि यतयो यत्प्रणयिनः
नमस्तस्मै स्वस्मै निखिलनिगमोत्तंसमणये ॥ ४२

உலகத்தில் பிரசித்தமான இரத்தினம் தன்னுடைய ஒளியினால் வெளியிருளை அகற்றுகின்றது. இந்த இரத்தினமோவெனில் உள்ளும் வெளியுமுள்ள இருளை நீக்குகின்றது. அந்த இரத்தினத்தைக் காப்பாற்றுவதற்கு பெட்டி ஒன்று தேவை. இந்த ஆத்மவஸ்துவாகிய இரத்தினத்தின் பாதுகாப்பிற்குப் பெட்டி தேவையில்லை. உலகப்பிரசித்த இரத்தினத்திற்கு பிரகாசமும் அழகும் கடைக்கல்லிலிட்டு சுத்தம் செய்வதால் உண்டாகின்றன. இதற்கு அவ்வாறில்லை. இயற்கையில் பிரகாசமும் அழகுமேயன்றி செயற்கையினாலில்லை. அந்த இரத்தினத்தைத் துறவிகள் விருப்பத்துடன் பெற முயலுகின்றனரில்லை. ஆனால் இந்த இரத்தினத்தை ஆர்வத்துடன் அடைய விரும்புகின்றனர். ஸகல சுருதிகளுடையவும் சிரஸ்ஸுக்களாகிய உபநிஷத்துக்களில் அணியாக விளங்குகின்றதும், ஸர்வஸ்வரூபமுமாகிய அத்தகைய ஆத்மாவாகிய இரத்தினத்திற்கு வணக்கம்.

अहो शास्त्रं शास्त्रात्किमिह यदि न श्रीगुरुकृपा
चिता सा किं कुर्यान्ननु यदि न बोधस्य विभवः ।
किमालम्बश्चासौ न यदि परतत्त्वं मम तथा
नमः स्वस्मै तस्मै यदवधिरिहाश्चर्यधिषणा ॥ ४३

ஆஹா! சாஸ்திரம் சிறந்த அற்புதமான பொருள். ஆனால், அத்தகைய சாஸ்திரம் இருந்தும் அதனை உணர்த்துகின்ற குருவின் கிருபை கிட்டாவிடின் என்ன பயன்? குரு, கிருபை செய்யத் தயாராக இருந்தாலும் துரதிருஷ்டத்தினால் இடையூறு நேர்ந்து அறிவு ஏற்படாவிடில் என்ன பயன்? அறிவு நிலவியபோதிலும், அந்த அறிவு உண்மையாக உணரவேண்டிய உயர்ந்த பரதத்துவத்தை முக்கியப்பொருளாகப் பெருவிடில் அந்த அறிவும் பயனற்றதேயாகும். (ஆகவே, சாஸ்திரங்கள் விளக்கும் பொருளை குருவின் பூர்ணமான கருணையினால் உணர்ந்து ஏற்படவேண்டிய சிறந்த ஞானமும் உண்டாகி, அந்த ஞானம் எந்தப் பொருளைப் பெறவேண்டுமோ, அதுதான் எனக்கு இப்பொழுது புலப்பட்டது.) யாது ஆச்சரியத்திலும் ஆச்சரியமோ, எதனைக் கண்டால் பிறகு காணவேண்டிய பொருள் மீதி ஒன்றுமில்லையோ, யாது ஆச்சரியத்தின் எல்லையோ அத்தகைய பரம்பொருளுக்கு வணக்கம்.

इत्युदारवचनैर्भगवन्तं संस्तुवन्तमथ च प्रणमन्तम् ।
बाष्पपूर्णनयनं मुनिवर्यं शङ्करः सबहुमानमुवाच ॥ ४४

இவ்வாறு சிறந்த சொற்களால் துதித்து வணங்கி ஆனந்தக்கண்ணீர் ததும்பிய கண்களுடன் கைகூப்பி நிற்கின்ற சிறந்த முனிவரை நோக்கி சிவபெருமான் கௌரவமான வசனத்தை அருளினுர்.

अस्मदादिपदवीमभजस्त्वं शोधिता तव तपोधननिष्ठा ।
बादरायण इव त्वमपि स्याः सद्वरेण्य मदनुग्रहपात्रम् ॥ ४५

எங்களுக்குச் சமமான பதவியை அடைந்துள்ளாய். உன்னுடைய தவத்தின் உறுதியான நிலைமை உற்றவிதத்தில் சோதனை செய்யப்பட்டது. சான்றோர்களில் சிறந்தவனே! வேதவியாஸர்போல் நீயும் என்னுடைய அனுக்கிரகத்திற்கு உரியவனுக இருக்கிருய்.

(இந்த வசனம் வியப்பையளிக்கின்றது. ஸ்ரீசங்கரபகவத்பாதரை மனிதனுக பாவனை செய்தபோதிலும், இத்தகைய பாக்கியம்பெற்றவரை புகழ நமக்குத் தகுதியுண்டோ? இல்லறவாழ்க்கையிலிருந்த மகா வீரனுகிய அர்ஜுனனுடைய தவத்தினுல் மகிழ்ச்சியடைந்த மகாதேவன் அவனிடம் கௌரவமாகக் கூறியதுபோலவே துறவறத்திலிருக்கிற பரமாசாரியரிடமும் கூறினுர். மாபெரும் பாக்கியமன்ருே இது! வேடனுடைய வேஷத்தில் தோன்றி சிவபெருமான் அர்ஜுனனுடன் போர்செய்து அவனுடைய வீரியத்தினுல் சந்தோஷமடைந்து, பிறகு தன்னுடைய நிஜ உருவத்தைக் காண்பித்து கூறிய வசனம்:

भो भोः फाल्गुन तुष्टोऽस्मि कर्मणाऽप्रतिमेन ते । शौर्येणानेन धृत्या च क्षत्रियो नास्ति ते समः ॥ समं तेजश्च वीर्यं च ममाद्य तव चानघ । प्रीतस्तेऽहं महाबाहो पश्य मां भरतर्षभ ॥ (वनपर्व - अध्याय 39, श्लोक 68-69.) அர்ஜுனு! நிகரற்றதான உன்னுடைய செயலினுல் உவகைகொண்டேன். சௌரியத்திலும், தைரியத்திலும் உனக்கு நிகரான க்ஷத்திரியன் இல்லை. மாசற்றவனே! என்னுடைய தேஜஸ்ஸிற்கும், வீரியத்திற்கும் சமமாகவுள்ளவை உனது தேஜஸ்ஸும், வீரியமும். பரதகுலத்தில் சிறந்தவனே! சிறந்த கைகளுள்ளவனே! உன்மீது நான் சந்தோஷமடைந்தேன்; என்னைப்பார்.)

संविभज्य सकलश्रुतिजालं ब्रह्मसूत्रमकरोदनुशिष्टः ।
यत्र काणभुजसांख्यपुरोगाण्युद्धृतानि कुमतानि समूलम् ॥ ४६

வேதங்களை வகுத்த பிறகு வியாஸமுனிவர், எம்மால் அனுமதிக்கப்பட்டு பிரம்மஸ்வரூபத்தை உணர்த்துகின்ற சூத்திரத்தொகுதியை இயற்றியுள்ளார். அந்த நூலில் கௌதமமதம், சாங்கியமதம் முதலியன வேருடன் நிராகரிக்கப்பட்டுள்ளன.

तत्र मूढमतयः कलिदोषाद् द्वित्रवेदवचनोद्वलितानि ।
भाष्यकाण्यरचयन् बहुबुद्धैर्दूष्यतामुपगतानि च कैश्चित् ॥ ४७

கலிதோஷத்தினுல் மூடபுத்தியுள்ள சிலர் இரண்டு அல்லது மூன்று வேதவசனங்களை பிரமாணமாக வைத்துக்கொண்டு அவைகளுக்கு பாஷ்யங்களை

எழுதியுள்ளனர். அநேக விஷயங்களையறிந்த அறிஞர்களால் அவைகள் தோஷமுள்ளவைகளாகக் கூறப்பட்டுள்ளன.

तद्भवान्विदितवेदशिखार्थस्तानि दुर्मतिमतानि निरस्य ।
सूत्रभाष्यमधुना विदधातु श्रुत्युपोद्बलितयुक्त्यभियुक्तम् ॥ ४८

ஆகையால், உபநிஷத்துக்களின் சாரத்தையறிந்த நீ அந்த சூத்திரத் தொகுதிக்கு, சுருதி யுக்தி இவைகளைப் பின்பற்றி சிறந்த பாஷ்யத்தை இயற்ற வேண்டும்.

एतदेव विबुधैरपि सेन्द्रैरर्चनीयमनवद्यमुदारम् ।
तावकं कमलयोनिसभायामप्यवाप्स्यति वरां वरिवस्याम् ॥ ४९

தேவேந்திரன் முதலிய தேவர்களாலும் புகழத்தக்கதும், மாசற்றதும், கம்பீரமுமாகிய உனது பாஷ்யம்தான், பிரம்மதேவருடைய அவையில் விசேஷமான ஆதரவைப் பெறும்.

भास्कराभिनवगुप्तपुरोगान्नीलकण्ठगुरुमण्डनमुख्यान् ।
पण्डितानथ विजित्य जगत्यां ख्यापयाद्वयमते परतत्वम् ॥ ५०

பட்டபாஸ்கரர், அபினவகுப்தர், நீலகண்டர், பிரபாகரர், மண்டனர் முதலிய வித்வான்களை வாதத்தில் வென்று, உலகில் ஆத்மதத்துவத்தை அத்வைதமதத்தில் கொணர்ந்து பிரசித்தியடையச் செய்வாயாக.

मोहसंतमसवासरनाथांस्तत्र तत्र विनिवेश्य विनेयान् ।
पालनाय परतत्त्वसरण्या मामुपैष्यसि ततः कृतकृत्यः ॥ ५१

பரதத்துவத்தின் அறிவாகிய ஞானமார்க்கத்தின் பாதுகாப்பிற்காக அஞ்ஞானமாகிய இருளை நீக்க வல்லமையுள்ள கதிரவன்போன்ற சிஷ்யர்களை ஆங்காங்கு அமர்த்திச் செய்யவேண்டியதைச் செய்து முடித்தமையினால் 'கிருதார்த்தனாக' என்னை அடைவாய்.

एवमेनमनुगृह्य कृपावानागमैः सह शिवोऽन्तरधत्त ।
विस्मितेन मनसा सह शिष्यैः शङ्करोऽपि सुरसिन्धुमयासीत् ॥ ५२

சிவபெருமான் கருணைகூர்ந்து இவ்வாறு அருள்புரிந்து மறைகளுடன் மறைந்தார். ஸ்ரீசங்கரகுருவும் உவகையுண்டு சீடர்களுடன் கங்கைக்குச் சென்றார்.

संनिवर्त्य विधिमाह्निकमीशं ध्यायतो गुरुमथाऽखिलभाष्यम् ।
कर्तुमुद्यतमभूद् गुणसिन्धोर्मानसं निखिललोकहिताय ॥ ५३

கடன்முறைகளைச் செய்து குருவாகிய சிவபெருமானையே மனதில் தியானம் செய்கின்றவரும், நற்குணக்கடலுமாகிய அவருடைய மனம் உலகத்தின் நன்மைக்காக பாஷ்யத்தை இயற்ற முயன்றது.

कर्तृत्वशक्तिमधिगम्य स विश्वनाथात् काशीपुरान्निरगमत्त्वविकासभाजः ।
प्रीतः सरोजमुकुलादिव चञ्चरीकनिर्बन्धतः सुखमवाप यथा द्विजेन्द्रः ॥ ५४

வண்டுகளின் வற்புறுத்தலினால் அன்னப்பறவை தாமரைமலரிலிருந்து வெளியே செல்லுவதுபோல், காசீவிசுவநாதருடைய அருளினால் பாஷ்யமியற்றும் திறமையைப் பெற்று, அவருடைய கட்டளை மீறத்தகாததால் காசியிலிருந்து புறப்பட்டார். (द्विजेन्द्रः = பறவைகளில் சிறந்தது, அந்தணர்களில் சிறந்தவர்.)

(अविकासभाजः என்பது காசிக்குப் பெயருரிச்சொல். அங்கு இறந்தால் அந்த ஜீவன் பிரபஞ்ச பந்தத்தை அடைகிறானில்லை என்று கருத்து.)

अद्वैतदर्शनविदां भुवि सार्वभौमो यात्येष इत्युडुपबिम्बसितातपत्रम् ।
अस्ताचले वहति चारु पुरः प्रकाशव्याजेन चामरमधादिव दिक्सुकान्ता ॥ ५५

அத்வைத நூலையறிந்த வித்வான்களுடைய சக்ரவர்த்தி விஜயயாத்திரை புறப்பட்டுள்ளார் என்று கருதி அஸ்தமனமலை சந்திரமண்டலமாகிய வெண் கொற்றக்குடை பிடிக்க, திசையாகிய அழகிய பெண் நிலாவெளிச்சமென்ற உருவத்தில் சாமரம் வீசுகிறவள்போல் ஒளியுடன் விளங்கினாள்.

शान्तां दिशं देवनृणां विहाय नान्या दिगस्मै समरोचताद्धा ।
तत्रत्यतीर्थानि निषेवमाणो गन्तुं मनोऽधाद्बदरीं क्रमात्सः ॥ ५६

வடதிசையைத்தவிர வேறு திசைகளை அவர் விரும்பவில்லை. ஆதலால் அந்த திசையிலுள்ள தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து கிரமமாக பதரிக்குச் செல்ல விரும்பினார். ("एषा वै देवमनुष्याणां शान्ता दिक्" என்று சுருதி. வடதிசையை தேவர்களுடையவும், மனிதர்களுடையவும் சாந்தமான திசை என்று கூறுகிறது.)

तेनान्ववर्ति महता क्वचिदुष्णशालि शीतं क्वचित्क्वचिदृजु क्वचिदप्यरालम् ।
उत्कण्टकं क्वचिदकण्टकवत्क्वचिच्च तद्वर्त्म मूर्खजनचित्तमिवाव्यवस्थम् ॥ ५७

மகானாகிய அவர், சிலவிடத்தில் அதிகமான உஷ்ணமும், அதிகமான சீதமும், நேர்மையுள்ளதும், நேர்மையின்மையும், சிலவிடங்களில் முட்கள் நிரம்பியதும், முட்களில்லாததும் இவ்வாறு மூடர்களுடைய மனநிலைமை போல் வியவஸ்தைகெட்ட பல வழிகளிலும் யாத்திரை செய்தார்.

आत्मानमक्रियमपव्ययमीक्षितापि पान्थैः समं विचलितः पथि लोकरीत्या ।
आदत्फलानि मधुराण्यपिबत्पयांसि प्रायादुपाविशदशेत तथोदतिष्ठत् ॥ ५८

தன்னை (ஆத்மாவை) செயலற்றவனாகவும், விகாரமற்றவனாகவும், அழிவற்றவனாகவும் அறிந்தவராயினும் வழியாத்திரிகர்களுடன் யாத்திரை செய்யுங்கால் உலகரீதியைப் பின்பற்றி வழியில் நல்ல சுவையுள்ள பழங்களை உட்கொண்டார்; நல்ல ஜலத்தையருந்தினார்; நடந்தார்; உட்கார்ந்தார்; படுத்தார்; எழுந்தார்.

तेन व्यनीयत तदा पदवी दवीयस्यासादिता च बदरी वनपुण्यभूमिः ।
गौरीगुरुस्रवदमन्दझरीपरीता खेलत्सुरीयुतदरी परिभाति यस्याम् ॥ ५९

அவர் மிக்க தூரவழி நடந்து கடைசியில், தேவகன்னிகைகள் ஸ்நானம் செய்கின்றதும், இமயமலையிலிருந்து பெருகுகின்றதுமாகிய கங்கையின் பிரவாகத்துடன் கூடிய பரிசுத்தமான வனங்களுள்ள பதரியை அடைந்தார்.

स द्वादशे वयसि तत्र समाधिनिष्ठैर्ब्रह्मर्षिभिः श्रुतिशिरो बहुधा विचार्य ।
षड्भिश्च सप्तभिरथो नवभिश्च खिन्नैर्भव्यं गभीरमधुरं फणति स्म भाष्यम् ॥ ६०

அங்கு அவர் பிரம்மநிஷ்டர்களாகிய பிரம்மரிஷிகளுடன் உபநிஷத்துக்களின் அர்த்தத்தை நன்கு ஆராய்ந்து, பன்னிரண்டாவது வயதில் இனிமையான சூத்திரபாஷ்யத்தை இயற்றினர். 1. பசி, 2. தாகம், 3. பிறப்பு, 4. இறப்பு, 5. சோகம், 6. மோகம் என்ற ஆறு குணங்களாலும், 1. த்வக்கு, 2. சர்மம், 3. மாமிசம், 4. எலும்பு, 5. மேதஸ், 6. மஜ்ஜை, 7. ரேதஸ் என்ற ஏழு பொருள்களாலும் (சர்மம் அல்லது ரக்தம் என்றும் கொள்ளலாம்) 1. ஞானேந்திரியங்கள் ஐந்து, 2. கர்மேந்திரியங்கள் ஐந்து, 3. பிராணன் ஐந்து, 4. அந்தக்கரணம் நான்கு, 5. பஞ்சபூதங்கள், 6. அவித்தை, 7. கர்மம், 8. காமம், 9. கர்மவாசனை ஆகிய ஒன்பது பொருள்களாலும் அல்லது ஒன்பது துவாரங்களாலும் துன்பமுற்றவர்கள் படிப்பதற்குரியது அந்த பாஷ்யம். கம்பீரமானது. வேறு பொருள், 1. சார்வாகன், 2. ஆர்கதன், 3. ஸௌத்ராந்திகன், 4. வைநாசிகன், 5. வைபாஷிகன், 6. யோகாசாரன் என்ற ஆறு மதஸ்தர்களும், 1. கௌதமன், 2. காணுதன், 3. கபிலன், 4. பதஞ்ஜலி, 5. ஜைமினி என்ற ஆஸ்திகதர்சனங்களியற்றியவருடன் 6. ஸாங்கியத்தில் ஒரு வகையினர், 7. மீமாம்சையில் ஒரு வகையினர் ஆகிய ஏழு மதஸ்தர்களும், 1. ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் பேதம், 2. ஈசுவரனுக்கும் ஜகத்திற்கும் பேதம், 3. ஜீவர்களுக்குள் பேதம், 4. ஜகத்திற்குள் பேதம், 5. ஜீவனுக்கும் ஜகத்திற்கும் பேதம் என்ற கொள்கைகளும், 6. அவித்தை, 7. காமம், 8. கர்மம், 9. வாஸனை என்பவைகளுமாகிய ஒன்பதும் இந்த பாஷ்யத்தில் உண்மையல்லனவென்று நிராகரிக்கப்படுகின்றன. அத்தகைய கம்பீரமான பாஷ்யத்தை இயற்றினர்.

करतलकलिताद्वयात्मतत्वं क्षपितदुरन्तचिरन्तनप्रमोहम् ।
उपचितमुदितोदितैर्गुणौघैरुपनिषदामयमुज्जहार भाष्यम् ॥ ६१

அத்விதீயமான ஆத்மதத்துவத்தை உள்ளங்கைக் கனிபோல் காண்பிக்கின்றதும், அனாதிகாலமாகவுள்ள அவித்யையை நாசம் செய்கின்றதும், தாத்பரியத்தை விளக்கும் ஆறு பிரமாணங்களுடன் கூடியதும் ஆகிய உபநிஷத் பாஷ்யத்தையும் இயற்றினர். (उपक्रमोपसंहारावभ्यासोऽपूर्वता फलम्। अर्थवादोपपत्ती च लिङ्गं तात्पर्यनिर्णये ॥ என்று கூறப்பட்டுள்ளது. 1. ஆரம்பமும் முடிவும் ஒரு பொருளையே கொண்டவைகளாகவிருத்தல், 2. அடிக்கடி கூறுதல், 3. மற்ற பிரமாணங்களால் உணரமுடியாத விஷயத்தைக் கூறுதல், 4. அதனை உணர்ந்தமையால் பயன், 5. தக்க உபாக்கியானங்களால் விளக்கம், 6. தகுந்த யுக்தி என்ற ஆறு விஷயங்கள் கருத்தை விளக்குகின்றன.

(उप + नि + सादयति इति = उपनिषत्) தேகாபிமானத்தை அறவே நாசம் செய்து, மிகப் பக்கத்தில் பிரம்மத்வத்தை அடையும்படிச் செய்கின்றது பிரம்மவித்தை.

ஆகையால் உபநிஷத்து என்று அதற்குப் பெயர். அதனை உணர்த்தும் நூல்களுக்கும் 'உபநிஷத்துக்கள்' என்பது காரணப்பெயராக வழங்கப்படுகிறது.)

ततो महाभारतसारभूताः स व्याकरोद्भागवतीश्च गीताः ।
सनत्सुजातीयमसत्सुदूरं ततो नृसिंहस्य च तापनीयम् ॥ ६२

பிறகு, மகாபாரதத்தின் ஸாரமாகிய பகவத்கீதையையும், மூடர்களால் அறிய முடியாத ஸநத்ஸுஜாதீயத்தையும் வியாக்கியானம் செய்தார். நரஸிம்மதாபனீய உபநிஷத்திற்கும் பாஷ்யம் இயற்றினர்.

ग्रन्थानसंख्यांस्तदनूपदेशसाहस्रिकादीन्व्यदधात्सुधीड्यः ।
श्रुत्वाऽर्थविद्यानविवेकपाशान्मुक्ता विरक्ता यतयो भवन्ति ॥ ६३

புத்திமான்களால் புகழத்தக்கவரும் சிறந்த தத்வத்தை அறிந்தவருமாகிய அவர், பிறகு ''உபதேசஸாஹஸ்ரி'' முதலிய எண்ணில்லா நூல்களை இயற்றினர். அவைகளை கேட்டறிந்தவர்கள், அவிவேகமாகிய பாசத்திலிருந்து விடுபட்டு வைராக்கியமுற்றத் துறவிகளாக ஆகின்றனர்.

श्रीशङ्कराचार्यरवावुदेत्य प्रकाशमाने कुमतिप्रणीताः ।
व्याख्यान्धकाराः प्रलयं समीयुर्दुर्वादिचन्द्रप्रभयाऽवियुक्ताः ॥ ६४

ஸ்ரீசங்கராசாரியராகிய கதிரவன் உதித்துப் பிரகாசிக்கையில் துர்ப்புத்திகளால் இயற்றப்பட்ட வியாக்கியானங்களாகிய இருள்கள், துஷ்டவாதம் செய்கின்ற அவர்களுடைய கீர்த்தியாகிய நிலாவெளிச்சத்துடன் நாசம் அடைந்தன.

अथ व्रतीन्दुर्विधिवद्विनेयानध्यापयामास स नैजभाष्यम् ।
तर्कैः परेषां तरुणैर्विवस्वन्मरीचिभिः सिन्धुवदप्रशोष्यम् ॥ ६५

பிறகு, ஸன்னியாசிகளில் சிறந்தவராகிய அவர், கதிரவனுடைய கிரணங்களால் வற்றாத கடல்போல் பிறருடைய யுக்திவாதங்களால் அழிக்க முடியாத தன்னுடைய பாஷ்யத்தை முறைப்படி (சாந்திபாடபூர்வமாக) சீடர்களுக்கு உபதேசம் செய்தார்.

निजशिष्यहृदब्जभास्वतो गुरुवर्यस्य सनन्दनादयः ।
शमपूर्वगुणैरशुश्रुवन्कतिचिच्छिष्यगणेषु मुख्यताम् ॥ ६६

தன்னுடைய சிஷ்யர்களின் ஹிருதயகமலத்திற்குச் சூரியனாகிய பரமாசாரியருக்கு ஸனந்தனர் முதலிய சிலர், சாந்தம் முதலிய நற்குணங்களுடன் முக்கிய சிஷ்யர்களாக விளங்கிக்கொண்டுப் பணிவிடை செய்தனர்.

स नितरामितराश्रवतो लसन्नियममदद्भुतमाप्य सनन्दनः ।
श्रुतनिजश्रुतिकोऽप्यभवत्पुनः पिपठिषुर्गहनार्थविवित्सया ॥ ६७

அந்த ஸனந்தனர் தன்னுடைய வேதசாகையின் சிரஸ்ஸாகிய உபநிஷத்தின் கருத்தைக் கற்றபோதிலும், இன்னும் கூடமான நுட்பத்தையும் அறிய விரும்பியவராக, ஆசிரியருக்கு விசேஷமான பணிவிடை செய்தும், நியமங்களைப் பின்பற்றிக்கொண்டும், சிறப்பாக ஆத்மதியானத்தைச் செய்து கொண்டும் மற்றவர்களைக்காட்டிலும் புகழ் பெற்ருர்.

(''शौचसन्तोषतपःस्वाध्यायेश्वरप्रणिधानानि नियमाः'' (पातञ्जलसूत्रम् पाद २, सूत्र ३२) பாதஞ்சலயோகஸூத்திரம் இரண்டாவது பாதம், 32-வது ஸூத்திரத்தில் நியமங்கள் கூறப்பட்டுள்ளன. மண், ஜலம் முதலியவைகளால் சரீரத்தின் வெளிச்சுத்தியும், மைத்ரி முதலிய குணங்களால் மனச்சுத்தியும், கிட்டிய பொருளினுல் சந்தோஷமும், சீதம், உஷ்ணம், பசி, தாகம், சுகம், துக்கம் என்ற த்வந்த்வங்களைப் பொறுத்துக்கொள்ளுதலும், மோக்ஷ நூல்களை பயிலுதலும், ஈசுவரத்தியானமும் ஆகியவை.)

अद्वंद्वभक्तिममुमात्मपदारविन्दद्वंद्वे नितान्तदयमानमना मुनीन्द्रः ।
आम्नायशेखररहस्यनिधानकोशमात्मीयकोशमखिलं त्रिरपाठयत्तम् ॥ ६८

தன்னுடைய பாதாரவிந்தங்களில் நிகரற்ற பக்திகொண்ட அந்த ஸனந்தனரிடம் விசேஷ கருணைகொண்ட மனமுள்ளவராக அந்த முனிசிரேஷ்டர் உபநிஷத்துக்களின் தத்துவத்திற்கு பொக்கிஷமாகிய தன்னுடைய கிருதிகளனைத்தையும் மூன்றுதடவை அவருக்கு உபதேசித்தார்.

ईर्ष्याभराकुलहृदामितराश्रवाणां प्रख्यापयन्ननुपमामदसीयभक्तिम् ।
अभ्रापगापरतटस्थममुं कदाचिदाकारयन्निगमशेखरदेशिकेन्द्रः ॥ ६९

உபநிஷத்துக்களின் தத்வத்தை உபதேசம் செய்கின்ற அந்தப் பரமாசாரியர் ஸனந்தனரிடம் பொருமைகொண்ட மற்ற சீடர்களுக்கு அவருடைய ஒப்பற்ற பக்தியை வெளிப்படுத்த விரும்பியவராக, ஒருநாள் கங்கையின் மறுகரையிலிருந்த ஸனந்தனரை தன்னருகில் வருமாறு அழைத்தார்.

संतारिकाऽनवधिसंसृतिसागरस्य किं तारयेन्न सरितं गुरुपादभक्तिः ।
इत्यञ्जसा प्रविशतः सलिलं द्युसिन्धुः पद्मान्युदञ्चयति तस्य पदे पदे स्म ॥ ७०

எல்லையில்லா ஸம்ஸாரக்கடலையே தாண்டச் செய்கின்ற ஆசாரியபாதகமலங்களில் செய்யப்படும் பக்தி இந்த ஒரு ஆற்றைத் தாண்டச் செய்யாதா என்று கூறிக்கொண்டு மனதில் ஆசாரியபாதகமலங்களைத் தியானம் செய்து கொண்டு, அந்த ஆசாரியருடைய ஆக்ஞைக்கு மறுத்துக்கூருமல் உடனேயே நதியில் இறங்கவும், அந்த கங்கையும் அவர் கால்வைக்குமிடத்திலெங்கும் தாமரைகளைத் தோற்றுவித்தது.

पाथोरुहेषु विनिवेश्य पदं क्रमेण प्राप्तोपकण्ठममुमप्रतिमानभक्तिम् ।
आनन्दविस्मयनिरन्तनिरन्तरोऽसावाश्लिष्य पद्मपदनामपदं व्यतानीत् ॥ ७१

தாமரைமலர்களில் கால்களை வைத்துக்கொண்டே தமது அருகில் வந்தவரும், நிகரற்ற பக்தியுள்ளவருமாகிய அவரை, ஆசிரியர் உவகையும்

வியப்பும் நிரம்பிய மனம் கொண்டவராகி ஆலிங்கனம் செய்துகொண்டு 'பத்மபாதர்' என்று அவருக்கு நாமமளித்தார்.

तं पाठयन्तमनवद्यतमात्मविद्यां ये तु स्थिताःसदसि तत्वविदां सगर्वाः ।
आचिक्षिपुः कुमतपाशुपताभिमानाः केचिद्विवेकविटपोग्रदवायमानाः ॥ ७२

அந்த சங்கரர் சீடர்களுக்கு மாசற்ற ஆத்மவித்தையைக் கற்பிக்கையில் விவேகமாகிய மரக்கிளைக்குக் காட்டுத்தீ போன்ற பாசுபதம் முதலிய மதத்தினர் கர்வம் கொண்டவர்களாக ஆக்ஷேபங்களை எழுப்பினர்.

तद्विकल्पनमनल्पमनीषः श्रुत्युदाहरणतः स निरस्य ।
ईषदस्तमितगर्वभराणामागमानपि ममन्थ परेषाम् ॥ ७३

அந்தப் பரமாசாரியர், வேதங்களைப் பிரமாணமாக எடுத்துக்கூறி அவர்களுடைய ஆக்ஷேபங்களுக்குச் சமாதானமும் உரைத்து, அவர்களுடைய கல்விச்செருக்கையும் சிதறடித்து, பிறகு அவர்கள் கூறும் ஆகமங்களையும் நிராகரித்தார்.

பாசுபதமதத்தை நிராகரிக்கிறார்:-

अद्वितीयनिरता सति भेदे मुक्तिरीशसमतैव कथं स्यात् ।
ध्यानजा किमिति सा न विनश्येद्भावकार्यमखिलं हि न नित्यम् ॥ ७४

உமது கொள்கையில் 'முக்தி' ஈசுவரனுக்குச் சமமாகவிருத்தல் என்பதேயாகும். பேதம் ஸத்யமென்று கூறுகையில் அத்தகைய முக்தி ஏற்பட முடியாது. தியானத்தினால் அந்த முக்தி நிலவுகின்றது என்று கூறினால், அதற்கு நாசமுண்டு என்று ஒப்புக்கொள்ளவேண்டும். ஜனிக்கின்ற பொருள்களுக்கு நாசமுண்டாவது நிச்சயம். ஆகையால், அப்பாசுபதமதத்தின்படி 'மோக்ஷசுகம்' அழிவுள்ளது என்று கூறியபடியாகும். அது சரியன்று.

किंच संक्रमणमीशगुणानामिष्यते पशुषु मोक्षदशायाम् ।
तन्न साध्ववयवैर्विधुराणां संक्रमो न घटते हि गुणानाम् ॥ ७५

மேலும், மோக்ஷகாலத்தில் ஈசுவரனுடைய குணங்கள் ஜீவனிடத்தில் வருகின்றன என்ற கொள்கையும் சரியன்று. அவயவமற்ற குணங்கள் ஓரிடம் விட்டு வேறு இடத்திற்குச் செல்லுகின்றன என்று கூறுதல் சரியல்ல.

पद्मगन्ध इव गन्धवहेऽस्मिन्नात्मनीश्वरगुणोऽस्त्विति चेन्न ।
तत्र गन्धसमवायि नभस्वत्संयुतं दिशति गन्धधियं यत् ॥ ७६

தாமரைமலரின் வாஸனை காற்றில் சம்பந்தப்படுகிறது. வாஸனை அவயவமற்றதாயினும் காற்றில் புகுந்திருப்பதுபோல், ஈசுவரகுணங்கள் ஜீவனிடம் புகுகின்றன என்று ஏன் கூறக்கூடாது? என்ற வினா சரியன்று. உதாரணத்தில், வாசனையுள்ள மிகச் சூக்ஷ்மமான மகரந்தத்துாள் காற்றில் சம்பந்தப்பட்டு காற்று பரிமளவாஸனையுடன் வீசுகிறதேயன்றி, பொருள் ஸம்பந்தமற்று பரிமளவாஸனைமட்டும் காற்றில் நேராகச் சேருகிறதில்லை.

किंचैकदेशेन समाश्रयन्ते कार्त्स्न्येन वा शंभुगुणा विमुक्तान् ।
पूर्वे तु पूर्वोदितदोषसङ्गस्त्वन्तेऽज्ञतादिः परमेश्वरे स्यात् ॥ ௭௭

நிற்க, பசுபதியின் குணங்கள் ஜீவனிடம் புகுகின்றதாக ஒப்புக்கொள்வதாயின் சில குணங்கள் மட்டும் புகுகின்றனவா? எல்லா குணங்களுமா? முதல் விகற்பத்தில் முன்கூறிய தோஷம் (அவயவமற்ற குணங்கள் ஓரிடத்தில் புகுதலியலாது). இரண்டாவது விகற்பத்தின்படி, எல்லா குணங்களும் புகுந்தால் அக்ஞானியான ஜீவனுகவே பசுபதி மாறிவிட்டதாக அர்த்தம். அப்பொழுது அந்தப் பரமேசுவரன் ஜீவனுடையதான அக்ஞத்வத்தையும் அடைந்தார் என்ருல், அவர் அக்ஞர் என்றல்லவா அர்த்தம்?

इत्थं तर्कैः कुलिशकठिनैः पण्डितं मन्यमाना
भिद्यत्स्वार्थाः स्मयभरमदं तत्यजुस्तान्त्रिकास्ते ।
पक्षाघातैरिव रयभरैस्ताड्यमानाः फणासु
क्ष्वेडज्वालां खगकुलपतेः पन्नगाः साभिमानाः ॥ ௭௮

இவ்வாறு வஜ்ராயுதம்போல் கடினங்களான யுக்திகளால் கொள்கை தொலைக்கப்படுகையில், தங்களைத் தாமே பண்டிதர்கள் என்று எண்ணி மிக்கச் செருக்குக்கொண்ட தாந்திரிகர்கள், கருடனுடைய இறக்கைக்காற்றின் வேகத்தால் அடிக்கப்பட்ட பாம்புகள் விஷஜ்வாலையை இழப்பதுபோல் செருக்கை அகற்றிக்கொண்டனர்.

व्याख्याजृम्भितपाटवात्फणिपतेर्मन्दाक्षमुद्दीपयन्
संख्यालङ्घितशिष्यहृद्वनरुहेष्वादित्यतामुद्वहन् ।
उद्वेलस्वयशःसुमैः स भगवत्पादो जगद्भूषयन्
कुर्वन्वादिमृगेषु निर्भरमभाच्छार्दूलविक्रीडितम् ॥ ௭௯

வியாக்கியானம் கூறுவதில் சிறந்த சாமர்த்தியத்தினுல் மகாபாஷ்யம் இயற்றிய ஆதிசேஷனுக்கும் வெட்கத்தை வளரச் செய்கின்றவரும், சீடர்களுடைய முகங்களாகிய மலர்களுக்குக் கதிரவனும், கரைகடந்த கீர்த்தியாகிய புஷ்பத்தினுல் உலகத்திற்கு பூஷணம் செய்கின்றவருமாகிய பகவத்பாதர், வாதிகளாகிய மிருகங்களிடம் புலியின் பராக்கிரமத்தைப் பரவச் செய்துப் பிரகாசித்தார். (சுலோகத்தின் விருத்தம் சார்தூலவிக்ரீடிதம்.)

वेदान्तकान्तारकृतप्रचारः सुतीक्ष्णसद्युक्तिनखाग्रदंष्ट्रः ।
भयङ्करो वादिमतंगजानां महर्षिकण्ठीरव उल्ललास ॥ ௮௦

வேதாந்தங்களாகிய காட்டில் ஸஞ்சாரம் செய்கின்றதும், மிகக் கூர்மையான யுக்திகளாகிய நகங்களையும் பற்களையும் கொண்டதும், எதிர்வாதிகளாகிய மதயானைகளுக்கு பீதியைச் செய்கின்றதுமான மாமுனிவராகிய சிங்கம் விசேஷமாக விளங்கிற்று.

अमानुषं तस्य यतीश्वरस्य विलोक्य बालस्य सतः प्रभावम् ।
अत्यन्तमाश्चर्ययुतान्तरङ्गाः काशीपुरस्था जगदुस्तदेत्थम् ॥ ௮௧

சிறுவயதினவராயினும் துறவிகளில் சிறந்தவராகிய அவருடைய பிரபாவத்தைக் கண்ணுற்ற காசிவாசிகளாகிய ஜனங்கள் வியப்புற்ற மனம்கொண்டவராக அப்பொழுது இங்ஙனம் கூறினர்.

अस्मान्मुहुर्द्योतितसर्वतन्त्रात्पराभवं पण्डितपुण्डरीकाः ।
प्रपेदिरे भास्करगुप्तमिश्रमुरारिविद्येन्द्रगुरुप्रधानाः ॥ ८२

எல்லா நூல்களிலும் தனது திறமையைத் திரட்டித் தோற்றுவித்த இவரிடமிருந்து பாஸ்கரர், குப்தர், மிச்ரமுராரி, மண்டனர், குரு (பிரபாகரர்) முதலிய சிறந்த பண்டிதர்கள் தோல்வியுற்றனர்.

अस्यात्मनिष्ठातिशयेन तुष्टः प्रादुर्भवन् कामरिपुः पुरस्तात् ।
प्रचोदयामास किल प्रणेतुं वेदान्तशारीरकसूत्रभाष्यम् ॥ ८३

இவருடைய ஆத்மஞானத்தின் சிறப்பினுல் சந்தோஷமடைந்த சிவபெருமான் எதிரில் தோன்றி பிரம்மஸூத்திரங்களுக்கு பாஷ்யமியற்றும்படி பிரேரணை செய்தார்.

कुदृष्टितिमिरस्फुरत्कुमतपङ्कमग्नां पुरा
पराशरभुवा चिराद् बुधमुदे बुधेनोद्धृताम् ।
अहो बत जरद्गवीमनघभाष्यसूक्तामृतै -
रपङ्कयति शङ्करः प्रणतशङ्करः सादरम् ॥ ८४

வணங்கியவர்களுக்கு ஆனந்தத்தையளிக்கின்ற சங்கரர், துஷ்டபுத்தியான இருள் நிரம்பிய துஷ்டவாதங்களாகிய சேற்றில் மூழ்கியதும், வெகுகாலத்திற்குப்பிறகு, அறிஞராகிய வியாஸமுனிவரால் அதிலிருந்து வெளியே தூக்கிவிடப்பட்டதுமாகிய கிழப்பசுவை (அனுதிகாலத்திலிருந்தே உள்ள சுருதியாகிய பசுவை) மாசற்ற இனிய பாஷ்ய வசனங்களாகிய அமிருதத்தினுல் கழுவிச் சேறு நீங்கியதாகச் செய்கின்ருர். ஆச்சரியம்!

त्रैलोक्यंससुखं क्रियाफलपयो भुङ्क्ते ययाऽऽविष्कृतं
यस्या वृद्धतरे महीसुरगृहे वासः प्रवृद्धाध्वरे ।
तां पङ्कप्रसृते कुतर्ककुहरे घोरैः खरैः पातितां
निष्पङ्कामकरोत्स भाष्यजलधेः प्रक्षाल्य सूक्तामृतैः ॥ ८५

சுருதியாகிய பசு அளிக்கும் புண்ணியப்பயனுகிய பாலை மூன்று உலகமும் தடையின்றிச் சாப்பிட்டு வந்தது. அப்பசு விசேஷ வேள்விகளை அடிக்கடிச் செய்துவந்த பிராம்மணர்களுடைய பழைய இல்லங்களில் வசித்து வளர்ந்துவந்தது. துரதிருஷ்டவசமாக அப்பசு நாஸ்திகவாதம் கூறுகின்றவர்களும் கடும் சொற்கள் கூறுகின்றவர்களுமாகிய கழுதைகளால் குதர்க்கங்கள் நிறைந்த கெட்டகொள்கையாகிய சேற்றுப்பள்ளத்தில் தள்ளப்பட்டது. அதனை அந்த சங்கரர், மேலே தூக்கிவிட்டு தன்னுடைய பாஷ்யமாகிய ஸமுத்திரத்தின் இனிய சொற்களாகிய ஜலத்தினுல் கழுவிச் சுத்தம் செய்தார்.

मिथ्या वक्तीति कैश्चित्पुरुषमुपनिषद्दूरमुत्सारिताऽभू -
दन्यैरस्मिन्नियोज्यं परिचरितुमसावर्हतीति प्रणुन्ना ।
अर्थाभासं दधानैर्मृदुभिरिव परैर्वञ्चिता चोरितार्थे -
विन्दत्यानन्दमेषा सुचिरमशरणा शङ्करार्यं प्रपन्ना ॥ ८६

பொய் கூறுகின்றது என்று சிலர், (வேதநெறிக்குப் புறம்பானவர்கள்) உபநிஷத்தை நிராகரித்துவிட்டனர். கர்மங்களைச் செய்ய அதிகாரம் பெற்ற ஜீவனைக் கூறுகின்றது என்று சிலர் வேறுவிதமாகப் பொருள் கூறினர். சர்க்கரைவார்த்தை கூறி ஏமாற்றுகின்றவர்கள் போல் சிலர், तत्त्वमसि முதலிய வசனங்களுக்கு, அவனிடமிருந்து தோன்றினாய், அவனுக்காக இருக்கிறாய் என்று முதலான தப்பான பொருள் கூறி ஏமாற்றினர். அப்படிப்பட்ட உபநிஷத்து, சங்கர பகவத்பாதரை அடைந்தபிறகுதான் தனது பொருள் கிட்டியதினால் முகமலர்ச்சியடைந்தது.

हन्तुं बौद्धोऽन्वधावत्तदनु कथमपि स्वात्मलाभः कणादा -
ज्ञातः कौमारिलार्यैर्निजपदगमने दर्शितं मार्गमात्रम् ।
सांख्यैर्दुःखं विनीतं परमथ रचिता प्राणधृत्यर्हताऽन्यै-
रित्थं खिन्नं पुमांसं व्यधित करुणया शङ्करार्यः परेशम् ॥ ८७

பௌத்தன், புருஷனாகிய ஒரு யாத்திரிகனைக் கொல்ல விரும்பினான். (ஜீவன், ஈசுவரன் என்பவர்கள் இல்லை என்று பௌத்தன் கூறினான்.) கௌதமமதத்தினவன் அந்த யாத்திரிகனுக்கு ஒரு விதத்தில் உயிரளித்தான். (ஆத்மா இல்லை என்று பௌத்தன் கூறியதை நிராகரித்து நையாயிகன் உண்டு என்று தீர்மானித்தான்.) குமரிலபட்டரைச் சேர்ந்தவர்கள் அந்த யாத்திரிகனுக்குப் போகும் தடத்தைக் காண்பித்தனர். (ஜீவன் புண்யபாபங்களின் பயன்களையனுபவிக்க உரிமையுள்ளவன் என்று போதித்தனர்.) அவனுடைய துக்கத்தை ஸாங்கியர்கள் நீக்கினர். (துக்கசம்பந்தமற்றவன் என்று போதித்தனர்.) பாதஞ்சலர்கள், யோகானுஷ்டானம் செய்வதினால், அவனுக்கு முக்திசுகத்திற்கு யோக்யதை நிலவுகின்றது என்று கூறினர். (வீட்டிற்கு நெறியைக் காண்பித்தனர்.) ஸ்ரீசங்கராசாரியரோவெனில், அந்த ஜீவனைப் பரமேசுவரனாகவே செய்தார். (ஜீவனுக்கும், பரமாத்மனுக்கும் பேதமில்லையென்ற உண்மையை உபதேசித்தார். स्वरूपावस्थानं मोक्षः = உண்மையான தனது உருவத்தில் = பரமாத்மத்வத்தில் இருப்பதுதான் மோக்ஷம் என்று விளக்கினார்.)

ग्रस्तं भूतैर्न देवं कतिचन ददृशुः के च दृष्ट्वाऽप्यधीराः
केचिद्भूतैर्वियुक्तं व्यधुरथ कृतिनः केऽपि सर्वैर्विमुक्तम् ।
किन्त्वेतेषामसत्वं न विदधुरजहान्नैव भीतिं ततोऽसौ
तेषामुच्छिद्य सत्तामभयमकृत तं शङ्करः शङ्करांशः ॥ ८८

சிலர் (சார்வாகர்கள்) தேவனாகிய (பிரகாசரூபியான) ஆத்மாவை பூதங்களால் விழுங்கப்பட்டமையால் காணவில்லை. (பஞ்சபூதங்களைக்

காட்டிலும் ஆத்மா வேறு என்று உணரவில்லை.) வேறு சிலர், (பௌத்தர்கள்) அந்த ஆத்மாவை வேறுபட்டவனாக கண்டும் தைரியம் இழந்தனர். (நிலையில்லாதவன் என்று கூறினர்.) காணாதர்கள், ஐந்து பூதங்களிலிருந்து வேறுபட்ட நிலையுள்ளவன் என்றனர். அவர்கள் புண்யவான்கள். இன்னும் மற்றவர்கள், (ஸாங்கியர்கள்) பூதங்களுடையவும் அவைகளின் குணங்களுடையவும் சம்பந்தமற்றவன் என்றனர். ஆயினும், அவைகள் உண்மையல்லன என்று அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. ஆகையால், எதிர்காலத்தில் அவைகளின் சம்பந்தம் உண்டாகக்கூடும் என்று எண்ணியதினால் அச்சம் நீங்கவில்லை. சங்கரருடைய அம்சமாகிய இந்த ஸ்ரீ சங்கராசாரியர், 'நீ பயப்படவேண்டாம். பூதங்களும் அவைகளின் குணங்களும் நிலையற்றவை; (பொய்யானவை) ஆகையால், நித்யனாகிய உனக்கு அவைகளுடன் சம்பந்தமும் பொய்யானது,' என்று கூறி அந்த ஜீவனுக்கு அபயமளித்தார்.

चार्वाकैर्निह्नुतः प्राग्बलिभिरथ मृषा रूपमापाद्य गुप्तः
काणादैर्हा नियोज्यो व्यरचि बलवताऽऽकृष्य कौमारिलेन ।
सांख्यैराकृष्य हृत्वा मलमपि रचितो यः प्रधानैकतन्त्रः
कृष्ट्वा सर्वेश्वरं तं व्यतनुत पुरुषं शङ्करः शङ्करांशः ॥ ८९

முன்காலத்தில், சார்வாகர்களால் ஆத்மா மறுக்கப்பட்டான். (இல்லை என்று கூறப்பட்டான்.) காணாதர்களால், பொய்வேஷம் அணியப்பட்டு கூடமாகக் காப்பாற்றப்பட்டான். (கர்த்தாபோக்தா என்ற குணங்களைச் சுமத்தி இல்லாத வேஷத்தை அணிந்து கொள்ளும்படி செய்யப்பட்டான்.) அது கஷ்டம். குமரிலரால், பூதங்களிலிருந்து வேறுபடுத்தி கர்மங்களின் தாசனாக நியமிக்கப்பட்டான். ஸாங்கியர்கள் மலங்களை (அழுக்குகளை) அவனிடமிருந்து நீக்கி மாயைக்கு உட்பட்டவன் என்று கூறினர். (மந்திரியின் வேலையில் அமர்த்தினர். பிரதான சப்தத்திற்கு மாயை, மந்திரி என்று இரு பொருள்.) அந்த ஆத்மாவை சங்கரருடைய அவதாரமாகிய ஸ்ரீசங்கராசாரியர் இழுத்து = வேறுபடுத்தி உணர்த்தி, 'ஸர்வேசுவரன்' என்று கூறினார்.

वाचः कल्पलताः प्रसूनसुमनः सन्दोहसन्दोहनाः
भाष्ये भूष्यतमे समीक्षितवतां श्रेयस्करे शांकरे ।
भाष्याभासगिरो दुरन्वयगिराऽऽश्लिष्टा विसृष्टा गुणै -
रिष्टाः स्युः कथमम्बुजासनवधूदौर्भाग्यगर्भीकृताः ॥ ९०

ஸ்ரீசங்கரபகவத்பாதரால் இயற்றப்பட்டு நன்மையையளிப்பதில் வல்லமையுள்ள சிறந்த பாஷ்யத்தைப் படித்தவர்களுக்கு மற்ற பாஷ்யங்களைப் படிப்பதில் பிரியம் உண்டாகுமா? இந்த பாஷ்யம் கற்பகக்கொடிகள்போல் இனிய சொற்களாகிய பரிமளமணமுள்ள மலர்களையும், விரும்பிய பொருளாகிய பயனையுமளிக்கின்றது. மற்றவைகளோவெனில் தூரான்வயம் = தூரத்திலுள்ள சொற்களுடன் சம்பந்தப்படுதல், குணங்களின்மை என்ற குறைகளிருப்பதுமன்றி ஸரஸ்வதிதேவியின் துரதிருஷ்டத்தை விளக்குகின்றன.

कामं कामकिरातकार्मुकलतापर्यायनिर्यातया
नाराचच्छटया विपाटितमनोधैर्यैर्धिया कल्पितान् ।
आचार्याननवर्यनिर्यदभिदासिद्धान्तशुद्धान्तरो
धीरो नानुसरीसरीति विरसान्ग्रन्थानबन्धापहान् ॥ ९१

ஸ்ரீசங்கராசாரியருடைய முகத்திலிருந்து தோன்றியவைகளும் அத்வைதத்தை நிரூபணம் செய்கின்றவையும் உறுதியுமான நூற்களைக்கற்ற தீரனான புருஷன், காமமாகிய வேடனுடைய வில்லிலிருந்து கிளம்புகிற அம்புகளால் மனோதைரியத்தை இழந்தவர்கள் தமது புத்தியின் போக்கின்படி கற்பனை செய்து இயற்றிய மற்ற நூல்களை பின்பற்றுகிறானில்லை. ஏனெனில், அவைகள் ஸம்ஸாரபந்தத்தை அறுக்க வன்மையற்றவை.

सुधास्यन्दाहन्ताविजयिभगवत्पादरचना
समस्कन्धान् ग्रन्थान् रचयति निबद्धा यदि तदा ।
विशङ्कां भङ्गानां मृडमुकुटशृङ्गाटसरितः
कृतौ तुल्या कुल्या नियतमुपशल्यादृतगतिः ॥ ९२

அமிருதச்சுவையின் கர்வத்தையறுத்த சங்கரருடைய சொற்களுக்கு நிகரான சொற்களுடன் நூல் ஒன்றை ஒருவன் இயற்றிவிட்டானேயாகில், குக்கிராமத்தின் எல்லையிலிருக்கும் அற்பமான ஒரு வாய்க்கால் பரமசிவனுடைய ஜடையில் விளங்கும் கங்கைக்குச் சமமானது என்ற புகழடைந்து விடும்.

यया दीनाधीना घनकनकधारा समरचि
प्रतीतिं नीताऽसौ शिवयुवतिसौन्दर्यलहरी ।
भुजङ्गो रौद्रोऽपि श्रुतभयहृदाधायि सुगुरो -
र्गिरां धारा सेयं कलयति कवेः कस्य न मुदम् ॥ ९३

எந்த வசனம் அடர்த்தியான செல்வப்பொழிவை எளியவருக்கு அருளியதோ, (கனகதாரை என்ற ஸ்தோத்திரத்தை இயற்றிச் செல்வத்தைப் பொழியும்படிச் செய்ததோ) சிவபெருமானுடைய மனைவியின் அழகினுடைய பிரவாகத்தை வெளியிட்டதோ, ('ஸௌந்தரியலகரி' என்ற துதியைத் தொகுத்ததோ) அச்சத்தை உண்டாக்கும் பாம்பு, கேட்கும்பொழுதே அச்சத்தை நீக்குகின்றதாக இயற்றப்பட்டதோ, (புஜங்கம்=பாம்பு, புஜங்கம் என்ற ஒரு விருத்தம். ரௌத்திரம்=பயங்கரமானது, ருத்திரரைச் சேர்ந்தது, அதாவது 'சிவபுஜங்கம்' என்ற ஸ்துதி). அத்தகைய சங்கரருடைய சொல் யாருக்குத்தான் ஆனந்தத்தை அளிப்பதில்லை.

(காசியிலிருந்த வித்வான்கள் ஸ்ரீசங்கரருடைய மகிமையைக் கூறும் இச்சந்தர்ப்பத்தில் 'சிவபுஜங்கஸ்தோத்திரம்' இயற்றப்பட்டதாகக் கூறுதல் சரி. ஏனெனில், அவர் அங்கிருக்கையில் அது இயற்றப்பட்டது. 'ஸௌந்தரியலகரி' இயற்றியது மூகாம்பிக்ஷேத்திரத்தில் அம்பிகையை தர்சனம் செய்யும் காலத்தில் நிகழ்ந்தது. அந்த விஷயம் இதற்குப் பிறகுதான் கூறப்படுகின்றது. முன்பே அதனைப்பற்றியறியாத அந்த அறிஞர்கள் இங்கு கூறுதல் முரணாகும். ஆயினும்,

நூலாசிரியர் இதனையறிந்தவராகையாலும், ஆசாரியபாதகமலங்களில் இணையில்லா பக்திக்கடலில் மூழ்கியதனுலும் இங்கு அதனைக் கூறுகின்ருர் என்று உணருக.)

गिरां धारा कल्पद्रुमकुसुमधारा परगुरो -
स्तदर्थाली चिन्तामणिकिरणवेण्या गुणनिका ।
अभङ्गव्यङ्ग्योघः सुरसुरभिदुग्धोर्मिसहभू-
र्दिवं भव्यैः काव्यैः सृजति विदुषां शङ्करगुरुः ॥ ९४

பரமகுருவாகிய ஸ்ரீ சங்கரருடைய வசனங்களின் பிரவாகம் கற்பகவிருக்ஷங்களின் மலர்களின் பொழிவு. அவைகளின் பொருள்த் தொகுதி சிந்தாமணிரத்தினத்தினுடைய கிரணங்களின் வீச்சு. தூயவியங்கியக்கருத்துக்கள் காமதேனுவின் பாலினுடைய அலைகளுக்குச் சகோதரர்கள் (சமமானவை). ஆகவே, இனிய செய்யுட்களால் இவ்வுலகையே வித்வான்களுக்குச் சுவர்க்கமாக அமைத்தருளினர்.

वाचा मोचाफलाभाः श्रमशमनविधौ ते समर्थास्तदर्था
व्यङ्ग्यं भङ्ग्यन्तरं तत्खलु किमपि सुधामाधुरीसाधुरीतिः ।
मन्ये धन्यानि गाढं प्रशमिकुलपतेः काव्यगव्यानि भव्या -
न्येकश्लोकोऽपि येषु प्रथितकविजनानन्दसन्दोहकन्दः ॥ ९५

சொற்கள் வாழைப்பழம்போலினியவை. அவைகளின் பொருள்கள் சிரமத்தையறுப்பதில் திறமை வாய்ந்தவை. வியங்கியார்த்தம் வர்ணிக்க இயலாதது. ரீதி அமிருதச்சுவையேயாகும். யதீசுவரருடைய அந்தக் காவ்யவசனங்கள் மிகமிகச் சிறப்புற்றவை. ஒரு செய்யுளே சிறந்த கவிஞர்களுக்கு ஆனந்தப்பிரவாகத்தையளிக்கப் போதுமான சிறப்புக்கொண்டது.

वागुम्भैः कुरुविन्दकन्दलनिभैरानन्दकन्दैः सता-
मर्थौघैररविन्दवृन्दकुहरस्यन्दन्मरन्दोज्ज्वलैः ।
व्यङ्ग्यैः कल्पतरुप्रफुल्लसुमनः सौरभ्यगर्भीकृतै-
र्दत्ते कस्य मुदं न शङ्करगुरोर्भव्यार्थकाव्यावलिः ॥ ९६

பத்மராகமணியின் கிரணங்கள்போன்ற சொற்தொகுதிகளாலும், ஸாதுக்களுடைய ஆனந்தத்திற்கு மூலகாரணமும், தாமரை மலர்க்கூட்டங்களுடைய மத்தியிலிருந்து பெருகுகின்ற தேன் சுவையுள்ளவைகளுமாகிய பொருள்களாலும், கற்பகவிருக்ஷத்தின் மலர்களுடைய பரிமளவாஸனைகொண்ட வியங்கியார்த்தங்களாலும் அந்த ஸ்ரீ சங்கரபகவத்பாதருடைய காவ்யத் தொகுதி யாரைத்தான் ஆனந்திக்கச் செய்வதில்லை?

तत्तादृग्यतिशेखरोद्धृतनिषद्भाष्यं निशम्येर्ष्यया
केचिद्देवनदीतटस्थविदुषामक्षांघ्रिपक्षश्रिताः ।
मौर्ख्यात्खण्डयितुं प्रयत्नमनुमानैकेक्षणा विक्षमा
श्चक्रुर्भाव्यविचार्य चित्रकिरणं चित्राः पतङ्गा इव ॥ ९७

அத்தகைய யதீசுவரர் இயற்றிய உபநிஷத்பாஷ்யத்தைக் கேட்டறிந்த காசிவாசிகளாகிய சில தார்க்கிகர்கள் பொருமைகொண்டு மூடத்தனமாக அதைக் கண்டனம் செய்ய முயன்றனர். அவர்கள் பயனையறியாத விளக்குப் பூச்சிகள் தீபஜ்வாலையுடன் போர் செய்வதின் பயனையுமடைந்தனர்.

निघर्षणच्छेदनतापनाद्यैर्यथा सुवर्णं परभागमेति ।
विवादिभिः साधु विमथ्यमानं तथा मुनेर्भाष्यमदीपि भूयः ॥ ९८

உரைத்தல், அடித்தல், காய்ச்சுதல் என்பவைகளால் தங்கத்தின் பளபளப்பு விளங்குவதுபோல், வாதம் செய்து கண்டனம் செய்கையில் முனிவருடைய பாஷ்யம் மேலுமதிகமாக விளங்கிற்று.

स भाष्यचन्द्रो यतिदुग्धसिन्धोरुत्थाय दास्यन्नमृतं बुधेभ्यः ।
विधूय गोभिः कुमतान्धकारानतर्पयद्विप्रमनश्चकोरान् ॥ ९९

யதீசுவரராகிய பாற்கடலிலிருந்து தோன்றிய பாஷ்யமாகிய அந்த சந்திரன் தேவர்களுக்கு அமிருதத்தை (புத்திமான்களுக்கு அமிருதமாகிய மோக்ஷத்தை) அளித்துக்கொண்டும், கிரணங்களால் இருளையகற்றிக்கொண்டும், (வசனங்களால் எதிர் வாதங்களை நிராகரித்துக்கொண்டும்) சகோரப்பறவைகளை (அந்தணர்களாகிய சகோரப்பறவைகளை) ஆனந்திக்கச்செய்தது.

अनादिवाक्सागरमन्थनोत्था सेव्या बुधैर्धिक्कृतदुःसपत्नैः ।
विश्राणयन्ती विजरामरत्वं विदिद्युते भाष्यसुधा यतीन्दोः ॥ १००

அனாதிகாலத்திலிருந்தேயுள்ள உபநிஷத்துக்களாகிய சமுத்திரத்தைக் கடைந்ததினால் தோன்றியதும், எதிர்வாதிகளாகிய பகைவர்களை விலக்கி புத்திமான்களால் (தேவர்களால்) சேவிக்கத்தக்கதும், முதுமை மரணங்களை விலக்கி இறப்பின்மையாகிய முக்தியையளிக்கின்றதுமாகிய அந்த சாங்கர பாஷ்யமான அமிருதம் ஒளி வீசிற்று.

सतां हृदब्जानि विकासयन्ती तमांसि गाढानि विदारयन्ती ।
प्रत्यर्थ्युलूकान् प्रविलापयन्ती भाष्यप्रभाऽभाद्यतिवर्यभानोः ॥ १०१

ஸாதுக்களுடைய மனமாகிய மலரை மலரச்செய்துகொண்டும், அஞ்ஞானமாகிய அடர்ந்த இருளையறுத்துக்கொண்டும், எதிரிகளாகிய கோட்டான்களை மறையும்படி செய்துகொண்டும் அந்த யதிசிரேஷ்டருடைய பாஷ்யமாகிய கதிரவனுடைய ஒளி பரவியது.

न्यायमन्दरविमन्थनजाता भाष्यनूतनसुधा श्रुतिसिन्धोः ।
केवलश्रवणतो विबुधेभ्यश्चित्रमत्र वितरत्यमृतत्वम् ॥ १०२

நியாயமாகிய மந்தரபர்வதத்தினால் கடைந்து சுருதியாகிய சமுத்திரத்திலிருந்து தோன்றிய பாஷ்யமென்னும் புதிதான அமிருதம், கேள்வியுறுதலினாலேயே வித்வான்களுக்கு அமரத்தன்மையை (இறப்பின்மையை) அளிக்கின்றது. மிக ஆச்சரியம். பாற்கடலிலிருந்து தோன்றிய அமிருதமோவெனில் உணவாக உட்கொண்டதனால்தான் தேவர்களுக்கு அமரத்துவத்தை=மரணமின்மையையளித்தது.

पादादासीत्पद्मनाभस्य गङ्गा शंभोर्वक्त्राच्छांकरी भाष्यसूक्तिः ।
आद्या लोकान्दृश्यते मज्जयन्तीत्यन्या मग्नानुद्धरत्येष भेदः ॥ १०३

பத்மநாபருடைய காலிலிருந்து கங்கை தோன்றியது. சிவபெருமானுடைய வாயிலிருந்து சாங்கரியான=சுகத்தையளிக்கின்றதும், சங்கராசாரியருடையதுமான பாஷ்யமென வாக்பிரவாகம் தோன்றியது. முதலில் கூறப்பட்ட கங்கை ஜனங்களை மூழ்கடிக்கின்றதாக உலகில் காணப்படுகிறது. இரண்டாவதாகிய வாக்பிரவாகம் மூழ்கியவர்களை (ஸம்ஸாரதுக்கங்களில் ஆழ்ந்தவர்களை) உத்தாரணம் செய்கின்றது என்ற வித்தியாசம்.

(''नहि निन्दान्यायम्'' இங்கு உணரத்தக்கது.)

व्यासो दर्शयति स्म सूत्रकलितन्यायौघरत्नावली-
र्र्थालाभवशान्न कैरपि बुधैरेता गृहीताश्चिरम् ।
अर्थाप्त्या सुलभाभिराभिरधुना ते मण्डिताः पण्डिता
व्यासश्चाऽऽप कृतार्थतां यतिपतेरौदार्यमाश्चर्यकृत् ॥ १०४

(வியாபாரி ஒருவன் விலைமதிக்கமுடியாத ரத்தினமாலைகளை விற்க வேண்டுமானால் தக்க செல்வவான்களிருக்கவேண்டும். செல்வம் எல்லோருக்கும் கிட்டுமா? ஒரு வள்ளல் செல்வத்தையளிக்க, அதனால் ஜனங்கள் ரத்தினமாலைகளை விலைக்கு வாங்கிக்கொண்டு சந்தோஷமடைகின்றனர். அந்த மாலையையணிந்து கொள்ளவும் செய்கின்றனர். வியாபாரியும் தனது ரத்தினமாலைகள் விலைக்குச்சென்றதால்தான் செல்வத்தையும் சந்தோஷத்தையுமடைகிறான் என்ற உதாரணத்தின்மூலம் நூலாசிரியர் விஷயத்தை விளக்குகின்றார்.)

ஸூத்திரம் = நூல். பிரம்மஸூத்திரங்களாகிய நூல்களில் நியாயங்களாகிய இரத்தினங்களைக் கோர்த்து, வியாஸமுனிவர் தோற்றுவித்தார். (விரும்புகிறவர்கள் பெற்றுக்கொள்ளலாம் என்ற கருத்துடன்.) அர்த்தம் = பொருள், விளங்காமையால் (செல்வமில்லாமையால்) புத்திமான்களாலும் வெகுநாள்வரையில் பெற்றுக்கொள்ளப்படவில்லை. யதீசுவரராகிய வள்ளல் பொருளையளித்தார்=விளக்கினார் (செல்வத்தைக் கொடுத்தார்). பொருள் விளங்கவே பிரம்மஸூத்திரங்களைக் கற்றுக்கொண்டு மனதில் அணிந்து அறிஞர்கள் ஆனந்தமுற்றனர். அது செல்வம் கிட்டியதினால் இரத்தினமாலையை விலைக்கு வாங்கி அணிந்து ஆனந்தமுறுவதுபோலாகும். தன்னுடைய சாஸ்திரம் பயனடைந்தமையால் வியாசமுனிவருக்குச் சந்தோஷம் உண்டாயிற்று. வியாபாரிக்கு வியாபாரப்பொருள் விலைக்குச் சென்றாலன்றோ உவகையுண்டாகும். இவ்வளவும் பணமுதவி செய்பவனுடைய கொடையின் வலிமைபோல், சங்கரகுருவினுடைய உதாரகுணம் மிகப் புகழத்தக்கது.

विद्वज्जालतपःफलं श्रुतिवधूधम्मिल्लमल्लीस्रजं
सद्वैयासकसूत्रमुग्धमधुरागण्यातिपुण्योदयम् ।
वाग्देवीचिरभोग्यभाग्यविभवप्राग्भारकोशालयं
भाष्यं ते निपिबन्ति हन्त न पुनर्येषां भवे संभवः ॥ १०५

வித்வான்களுடைய கூட்டங்களின் தவப்பயனும், சுருதியாகிய மங்கையின் கூந்தலுக்குப் பரிமளவாசனையளிக்கும் மல்லிகைமலர் மாலையும், ஸாதுவாகிய வியாஸமுனிவருடைய நல்ல ஸூத்திரத்தொகுதியென்கிற மதுராநகரத்தின் அளவில்லாப்புண்ணியத்தின் உற்பத்தியும், வாக்தேவியின் வெகுகால சுகபோகத்திற்குரிய பாக்கியத்தொடர்ச்சியின் பொக்கிஷமும் ஆகிய அற்புதமான பாஷ்யத்தை விசேஷமாகப் பரிசீலனம் செய்ய பாக்கியம்பெற்றவர்களுக்கு கர்ப்பவாஸம் ஏற்படாது என்பது நிச்சயம், ஆச்சரியம்.

मन्थानाद्रिधुरंधरा श्रुतिसुधासिन्धोर्यतिक्ष्मापते -
ग्रन्थानां फणितिः परावरविदामानन्दसंधायिनी ।
इन्धानैः कुमतान्धकारपटलैरन्धीभवच्चक्षुषां
पन्थानं स्फुटयन्त्यकाण्डकमभात्तर्कार्कविद्योतितैः ॥ १०६

வேதங்களாகிய பாற்கடலைக் கடைவதற்கு கடைகோலாகிய மந்தரபர்வதம்போன்ற ஸ்ரீ சங்கரருடைய சொற்பொழிவு, விவேகிகளுக்கு ஆனந்தத்தையளித்துக்கொண்டும், அற்பமதங்களாகிய இருளினால் கண்களுடைய திருஷ்டி குறைந்தவர்களுக்கு (உபநிஷத்துக்களின் உண்மைப் பொருள் விளங்காதவர்களுக்கு) விளங்கும் நல்ல யுக்திகளாகிய கதிரவக் கிரணங்களால் நல்ல மார்க்கத்தைக் காண்பித்துக்கொண்டும் விசேஷமாக விளங்குகின்றது.

आ सीतानाथनेतुः स्थलकृतसलिलद्वैतमुद्रात्समुद्रा-
दारुद्राकर्षणाद्द्रागवनतशिखराद्भोगसान्द्रान्नगेन्द्रात् ।
आ च प्राचीनभूमीधरमुकुटतटादातटात्पश्चिमाद्रे-
रद्वैताद्यापवर्गा जयति यतिधरापोद्धृता ब्रह्मविद्या ॥ १०७

யதிசக்கரவர்த்தியாகிய அந்த சங்கரபகவத்பாதரால் உத்தாரணம் செய்யப்பட்டு முக்தியையளிக்கும் வன்மையுள்ள பிரம்மவித்தை, தெற்கில் சேதுவை அமைத்து சமுத்திரஜலத்தின் வேற்றுமையைக் காண்பிக்கும் (எல்லையைக்குறிக்கும்) ராமேசுவரக்ஷேத்திரம் வரையிலும், வடக்கில் திருபுர சங்காரகாலத்தில் பரமசிவனால் இழுக்கப்பட்டு சிகரங்கள் வளைந்த மேருமலை வரையிலும், கிழக்கில் உதயமலைவரையிலும், மேற்கில் அஸ்தமன மலைவரையிலும் பரவி விளங்கிற்று.

इति श्रीमाधवीये तद्ब्रह्मविद्याप्रतिष्ठितिः ।
संक्षेपशङ्करजये षष्ठः सर्ग उपारमत् ॥ ६ ॥

இவ்வாறு ஸ்ரீ மாதவர் இயற்றிய சங்கரவிஜயச்சுருக்கத்தில்
அந்த சங்கரர் பிரம்மவித்தையின் பிரதிஷ்டை
செய்ததைக் கூறும் ஆறாவது ஸர்க்கம்
முற்றிற்று.

आदितः श्लोकाः 663.



# अथ सप्तमः सर्गः

## ஏழாவது ஸர்க்கம்

### व्यासदर्शनादिचरितवर्णनम्

### வியாஸமுனிவருடைய தர்சனம் முதலிய சரித்திரத்தின் வர்ணனை

स जातु शारीरकसूत्रभाष्यमध्यापयन्नभ्रसरित्समीपे ।
शिष्यालिशङ्काः शमयन्नुवास यावन्नभोमध्यमितो विवस्वान् ॥ १

அவர் கங்கை நதிக்கரையில் ஒரு நாள் சாரீரகஸூத்திரபாஷ்யத்தை சீடர்களுக்கு உபதேசம் செய்துகொண்டும், அவர்களுடைய சந்தேகங்களனைத்தையும் நீக்கிக்கொண்டும் இருக்கையில் சூரியன் ஆகாயத்தின் நடுவில் வர,

(शारीरकसूत्रं :- சரீரம்: ஸ்தூலம், சூக்ஷ்மம், காரணம் (அக்ஞானம்) என்ற மூன்று வகை. அதில் அபிமானம் கொண்டு அங்கே வாசம் செய்கிறவன். சாரீரன் ஜீவன். அவனுக்கு ''கம்'' = ''சுகம்'' எதனால் உண்டாகிறதோ அத்தகைய உண்மையான அறிவைப் புகட்டும் நூல்.)

श्रान्तेष्वथाधीत्य शनैर्विनेयेष्वाचार्य उत्तिष्ठति यावदेषः ।
तावद् द्विजः कश्चन वृद्धरूपः कस्त्वं किमध्यापयसीत्यपृच्छत् ॥ २

சீடர்களும் படித்துக் களைப்படைந்தபொழுது, இந்த ஆசிரியர் எழுந்தார். அச்சமயத்தில் கிழவேஷம் கொண்ட ஒரு அந்தணர் வந்து ''நீ யார்? போதனை செய்வது யாது?'' என்று வினவினார்.

शिष्यास्तमूचुर्भगवानसौ नो गुरुः समस्तोपनिषत्स्वतन्त्रः ।
अनेन दुरीकृतभेदवादमकारि शारीरकसूत्रभाष्यम् ॥ ३

''இவர் எங்களுடைய குரு. பகவான் இவர். எல்லா உபநிஷத்துக்களுடையவும் கருத்துக்களை உணர்ந்தவர். தடையில்லாப் புத்திவன்மை கொண்டவர். இவரால் பேதவாதத்தையகற்றி சாரீரகசூத்திரங்களுக்குப் பாஷ்யம் இயற்றப்பட்டுள்ளது'' என்று சிஷ்யர்கள் பதில் உரைத்தனர்.

स चाब्रवीद्भाष्यकृतं भवन्तमेते वदन्त्यद्भुतमेतदास्ताम् ।
अथैकमुच्चारय पारमार्षं यतेऽर्थतत्वं यदि वेत्थ सूत्रम् ॥ ४

அவர் (பாஷ்யமியற்றிய) சங்கரரை நோக்கிக் கூறினர்:-- ''இவர்கள் உம்மை பாஷ்யமியற்றியவராகக் கூறுகின்றனர். இது ஆச்சரியமான விஷயம். இது இருக்கட்டும். யதியே சூத்திரத்தின் பொருளை நன்கு உணர்ந்தவனுயின் மாமுனியின் சூத்திரங்களில் ஒன்றை உரைப்பாயாக.''

तमब्रवीद्भाष्यकृदग्र्यवाचं सूत्रार्थविद्भ्योऽस्तु नमो गुरुभ्यः ।
सूत्रज्ञताहंकृतिरस्ति नो मे तथाऽपि यत्पृच्छसि तद्ब्रवीमि ॥ ५

பேச்சுவன்மைகொண்ட அவரிடம் சங்கரர் கூறினர்:- ''பிரம்மசூத்திரங்களின் பொருளையுணர்ந்த ஆசிரியர்களுக்கு நமஸ்காரம். சூத்திரத்தை அறிந்தவன் யான் என்ற எண்ணம் எனக்குக் கிடையாது. ஆயினும் தாங்கள் என்ன வினவுகிறீர்களோ அதற்கு விடையளிக்கிறேன்.

पप्रच्छ सोऽध्यायमथाधिकृत्य तृतीयमारम्भगतं यतीशम् ।
'तदन्तरे' त्यादिकमस्ति सूत्रं ब्रूह्येतदर्थं यदि वेत्थ किञ्चित् ॥ ६

அவர் அந்த யதீச்வரரிடம் ''மூன்றுவது அத்தியாயத்தைப்பற்றியுள்ள அதன் ஆரம்பத்திலிருக்கும், 'ததந்தர பிரதிபத்தௌ ரம்ஹதி ஸம்பரிஷ்வக்தஹ பிரச்னநிரூபணுப்யாம்' என்ற சூத்திரத்தின் பொருளைத் தெரிந்திருந்தால் விளக்குவீராக'' என்று வினவினர்.

स प्राह जीवः करणावसादे संवेष्टितो गच्छति भूतसूक्ष्मैः ।
ताण्डिश्रुतौ गौतमजैवलीयप्रश्नोत्तराभ्यां प्रथितोऽयमर्थः ॥ ७

அவர் கூறினர்:- ஜீவன் சரீரத்தை இழக்கும்போது சூக்ஷ்மபூதங்களுடன் கூடியவனுக வேறு உலகத்திற்குப் போகிறுன். இந்த விஷயம் தாண்டி உபநிஷத்தில் கௌதமருடையவும் ஜைவலியினுடையவும் வினுவிடைகளால் கூறப்பட்டுள்ளது.

इत्युक्तमर्थं निशमय्य तेन स वावदूकः शतधा विकल्प्य ।
अखण्डयत्पण्डितकुञ्जराणां मध्ये महाविस्मयमादधानः ॥ ८

இவ்வாறு அந்த சூத்திரத்தின் அர்த்தத்தைக் கூறவும், அதைக்கேட்டு பேச்சுவன்மையுற்ற கிழவர் பண்டிதர்களுக்கெல்லாம் வியப்பு உண்டாகுமாறு பலவிதத்தில் ஆக்ஷேபணைசெய்து கண்டனம் செய்தார்.

अनूद्य सर्वं फणितं तदीयं सहस्रधा तीर्थकरश्चखण्ड ।
तयोः सुराचार्यफणीन्द्रवाचोर्दिनाष्टकं वाक्कलहो जजृम्भे ॥ ९

அந்தக் கிழவர் கூறியதையெல்லாம் அநுவாதம் செய்துகொண்டு தக்க யுக்திகளால் ஆயிரக்கணக்கில் கண்டனங்களான சமாதானங்களும் கூறினர். பிரகஸ்பதிபகவான், ஆதிசேஷன் இவர்களுடைய பேச்சின் திறமைகொண்ட அவ்விருவர்களுக்கும் வாக்வாதம் எட்டு நாள் நடந்தது.

एवं वदन्तौ यतिराड्द्विजेन्द्रौ विलोक्य पार्श्वस्थितपद्मपादः ।
आचार्यमाहेति महीसुरोऽयं व्यासो हि वेदान्तरहस्यवेत्ता ॥ १०

இவ்வாறு வாதம் செய்கிற யதீச்வரரையும், சிறந்த அந்தணரையும் நோக்கிப் பக்கத்தில் இருந்த பத்மபாதர், ''இந்த அந்தணர், வேதாந்த நூல்களின் நுட்பத்தை நுகர்ந்த வியாசமுனிவர்தான்'' என்று ஆசாரியரிடம் கூறினர்.

त्वं शङ्करः शङ्कर एव साक्षात् व्यासस्तु नारायण एव नूनम् ।
तयोर्विवादे सतते प्रसक्ते किं किङ्करोऽहं करवाणि सद्यः ॥ ११

''சங்கரரே, தாங்கள் கைலாசவாசியாகிய சங்கரரேயாகுவீர். நாராயணன்தான் வியாசமுனிவர். அத்தகைய தாங்கள் இருவரும் இவ்வாறு வாக்வாதம் செய்துகொண்டிருந்தால் கிங்கரனாகிய யான் இப்போது யாது செய்வேன்'' (என்று கூறினர்).

इतीदमाकर्ण्य वचो विचित्रं स भाष्यकृत्सूत्रकृतं दिदृक्षुः ।
कृताञ्जलिस्तं प्रयतः प्रणम्य बभाण वाणीं नवपद्यरूपाम् ॥ १२

அந்த பத்மபாதருடைய ஆச்சரியமான இந்த சொல்லை உணர்ந்து உத்தமராகிய ஸ்ரீ சங்கரர் கைகூப்பி அந்தக் கிழவரை வணங்கி சூத்திரக்காரரை உண்மை உருவத்தில் காண விருப்பமுற்றவராகி புதிதான செய்யுட்களால் துதித்தனர்.

भवांस्तडिचारुजटाकिरीटप्रवर्षुकाम्भोधरकान्तिकान्तः ।
शुभ्रोपवीती धृतकृष्णचर्मा कृष्णो हि साक्षात्कलिदोषहन्ता ॥ १३

தாங்கள் மின்னல்கொடிபோல் விளங்கும் ஜடையாகிய கிரீடங்களை யணிந்து கார்முகில்போல் அழகிய சோபையுடன் விளங்குகின்றவரும், சுத்தமான யக்ஞோபவீதம் அணிந்தவரும், மான்தோலையுடுத்தவரும், கலி தோஷங்களை நீக்குகின்றவருமான கிருஷ்ணத்வைபாயனரன்றே! (प्रवर्षुकाम्भोधर = விருப்பங்களை பொழிகின்ற மேகம் என்றமையால் மேகம் மழை பொழிவதுபோல் பக்தர்களுக்கு இஷ்டங்களைப் பொழிகிறவர் என்று கருத்து.)

भावत्कसूत्रप्रतिपाद्यताद्दक्परापरार्थप्रतिपादकं सत् ।
अद्वैतभाष्यं तव संमतं चेत्सोढ्वा ममाऽगः पुरतो भवाऽऽशु ॥ १४

தங்களுடைய பிரம்மசூத்திரங்களின் பொருளை விளக்குகின்ற அத்வைத பாஷ்யம் என்னுல் இயற்றப்பட்டது. தங்களுக்கு சம்மதமாயின் என்னுடைய இந்தக் குற்றத்தைப் பொறுத்துக்கொண்டு நிஜமான உருவத்தில் காட்சியளிப்பீராக.

एवं वदन्नयमथैक्षत कृष्णमाराद्यामीकरव्रततिचारुजटाकलापम् ।
विद्युल्लतावलयवेष्टितवारिदाभं चिन्मुद्रया प्रकटयन्तमभीष्टमर्थम् ॥ १५

இவ்வாறு கூறிக்கொண்டிருக்கையிலேயே ஸ்ரீ சங்கரர் பொற்குவியல் போலழகிய ஜடைக்கூட்டங்களுடனும், மின்னல்கொடிகளால் சூழப்பட்ட நீர்மேகம்போல் காந்தியுடன் கூடியவரும், சின்முத்திரையினுல் தன்னுடைய கருத்தை விளக்குகின்றவருமாகிய அந்த வியாசமாமுனிவரை அருகில் கண்டார்.

गाढोपगूढमनुरागजुषा रजन्या गर्हापदं विदधतं शरदिन्दुबिम्बम् ।
तापिच्छरीतितनुकान्तिझरीपरीतं कान्तेन्दुकान्तघटितं करकं दधानम् ॥ १६

सप्ताधिकाच्छदरविंशतिमौक्तिकाढ्यां सत्यस्य मूर्तिमिव बिभ्रतमक्षमालाम् ।
तत्तादृशस्वपतिवंशविवर्धनात्प्राक्तारावलीमुपगतामिव चानुनेतुम् ॥ १७

शार्दूलचर्मोद्वहनेन भूतेरुद्धूलनेनापि जटाच्छटाभिः ।
रुद्राक्षमालावलयेन शम्भोरर्धासनाध्यासनसख्यपात्रम् ॥ १८

अद्वैतविद्यासृणितीक्ष्णधारावशीकृताहंकृतिकुञ्जरेन्द्रम् ।
स्वशास्त्रशङ्कूज्ज्वलसूत्रदामनियन्त्रिताकृत्रिमगोसहस्रम् ॥ १९

तत्तादृगत्युज्ज्वलकीर्तिशालिशिष्यालिसंशोभितपार्श्वभागम् ।
कटाक्षबीक्षामृतवर्षधारानिवारिताशेषजनानुतापम् ॥ २०

विलोक्य वाचंयमसार्वभौमं स शङ्करोऽशङ्कितदर्शनं तम् ।
गुरुं गुरूणामपि हृष्टचेताः प्रत्युद्ययौ शिष्यगणैः समेतः ॥ २१

அன்புடன் கூடிய இரவினால் இறுக அணைத்துக்கொள்ளப்பட்ட சந்திரனுடைய காந்தியை கேலிசெய்கிறதும், தாபிஞ்ச(பச்சிலை) மரம்போன்ற தன்னுடைய உடலின் ஒளி பரவியதும் சந்திரகாந்தக்கல்லினால் அமைக்கப்பட்டதுமான கமண்டலத்தைக் கையில் வைத்திருக்கிறவரும், ஸத்தியத்தின் உருவமென்று நினைக்கத்தக்கவரும், பிரசித்திபெற்ற தமது=நக்ஷத்திரங்களுடைய கணவனாகிய சந்திரனுடைய வம்சத்தை வளரச்செய்யவேண்டுமென்ற வேண்டுகோளுடன் முன்னமேயே தன்னையணுகிய இருபத்தேழு நக்ஷத்திரங்களை 'அவ்வாறு செய்கின்றேன்' என்று சமாதானப்படுத்துகிறவர்போல் இருபத்தேழு மணிகளாகிய அக்ஷமாலையை அணிந்தவரும், புலித்தோலணிந்ததினாலும், விபூதிபூசியதினாலும், ஜடைக்கூட்டங்களாலும், ருத்திராக்ஷமாலையினாலும் பரமசிவனுடன் ஒரே ஆஸனத்தில் அமரத்தக்க நட்புக்குரியவரும், அத்வைதஞானமாகிய அங்குசத்தினால் ''அகங்காரமாகிய'' மதயானையை அடக்கி வசப்படுத்தியவரும், தன்னுடைய சாஸ்திரமாகிய தூணில் பிரம்மஸூத்திரங்களாகிய கயிறுகளால் அநேக உபநிஷத்துக்களின் சொற்களாகிய கோக்களை = பசுக்களை கட்டியடக்கியவரும், பிரசித்திபெற்ற கீர்த்தியுடன் விளங்கும் சீடர்களால் பக்கத்தில் சூழப்பட்டவரும், கடைக்கண் பார்வையாகிய அமிருதப்பொழிவினால் எல்லோருடையவும் தாபத்தைத் தணிக்கின்றவரும், பொறிகளையடக்கியவர்களின் சக்கரவர்த்தியும், அரிய காக்ஷியளித்தவரும், ஆசாரியர்களுக்கும் ஆசாரியராகிய அவரைக் கண்ணுற்று ஸ்ரீசங்கரர் சீடர்களுடன் சேர்ந்து அவரை வரவேற்றார்.

अत्यादराच्छात्रगणैः सहासौ प्रत्युद्गतस्तच्चरणौ प्रणम्य ।
यत्यग्रगामी विनयी प्रहृष्यन्नित्यब्रवीत्सत्यवतीसुतं सः ॥ २२

யதிகளில் சிறந்தவராகிய அந்த சங்கரர் ஆதரவுடன் சீடர்களுடன் எதிர்சென்று பக்தியுடன் அவருடைய பாதங்களில் வணங்கி, மிகவுமுவகை பூண்டு ஸத்தியவதியின் புதல்வராகிய அவரிடம் கூறினர்.

द्वैपायन स्वागतमस्तु तुभ्यं दृष्ट्वा भवन्तं चरिता मयाऽर्थाः ।
युक्तं तदेतत्त्वयि सर्वकालं परोपकारव्रतदीक्षितत्वात् ॥ २३

ஹே! த்வைபாயனரே! தங்களுக்கு நல்வரவு. தங்களை தரிசித்ததினால் எனது புண்யங்களனைத்தும் பயனுற்றன. இவ்வாறு என்னை புண்ய பலன்கள் அடைந்தவனாகச் செய்தல் தங்களுக்கு உரியதேயாகும், ஏனெனில், தாங்கள் எப்பொழுதும் பிறருக்கு உபகாரம் செய்தலையே விரதமாகக் கொண்டுள்ளீரன்றோ!

मुने पुराणानि दशाष्ट साक्षाच्छ्रुत्यर्थगर्भाणि सुदुष्कराणि ।
कृतानि पद्यद्वयमत्र कर्तुं को नाम शक्नोति सुसंगतार्थम् ॥ २४

முனிவரே! வேதங்களின் கருத்துக்கள் கொண்ட அரிய புராணங்கள் பதினெட்டும் தங்களால் இயற்றப்பட்டன. இவ்வுலகில், நல்ல பொருள் விளக்கும் இரண்டு செய்யுட்களைத் தொகுப்பதற்கு வல்லமையுள்ளவன் எவன் உள்ளான்?

वेदार्णवं व्यतियुतं व्यदधाश्चतुर्धा शाखाप्रभेदनवशादपि तान् विभक्तान् ।
मन्दाः कलौ क्षितिसुरा जनितार एते वेदान् ग्रहीतुमलसा इति चिन्तयित्वा ॥ २५

ஒன்றுக்கொன்று கலந்திருந்த வேதங்களாகிய கடலை நான்காகப் பிரித்து, மேலும், கலிகாலத்தில் அந்தணர்கள் இவைகளையறிந்துகொள்ள வல்லமையற்ற மூடர்களாகவும், சோம்பேறிகளாகவும் பிறப்பார்கள் என்று எண்ணி, அந்த வேதங்களைப் பல சாகைகளாகவும் வகுத்தீர்கள்.

एष्यद्विजानासि भवन्तमर्थं गतं च सर्वं न न वेत्सि यत्तत् ।
नो चेत्कथं भूतभवद्भविष्यत्कथाप्रबन्धान् रचयेरजानन् ॥ २६

வருங்காலத்தியவைகளை அறிகிறீர். நிகழ்காலத்தியதும் தங்களுக்கு விளங்குகின்றது. இறந்தகாலத்தியவைகளையறியாதவரல்லர். அவைகளை அறியாதவராயின், இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்ற மூன்று காலக்கதைகளையும் எவ்வாறு இயற்ற முடியும்?

आभासयन्नन्तरमङ्गमान्ध्यं स्थूलं च सूक्ष्मं बहिरन्तरं च ।
अपानुदन् भारतशीतरश्मिरभूदपूर्वो भगवत्पयोधेः ॥ २७

மனதை விளங்கச்செய்கின்றதும், ஸ்தூலமும், சூக்ஷ்மமும், உள்ளும் வெளியுமுள்ள இருளை நீக்குகின்றதுமாகிய 'பாரதம்' என்ற அற்புதமான சந்திரன், பகவானாகிய சமுத்திரத்தினின்று (தங்களிடமிருந்து) தோன்றியது.

वेदाः षडङ्गं निखिलं च शास्त्रं महान् महाभारतवारिराशिः ।
त्वत्तः पुराणानि च संबभूवुः सर्वं त्वदीयं खलु वाङ्मयाख्यम् ॥ २८

நான்கு வேதங்கள், ஆறு வேதாங்கங்கள் (சிக்ஷை, கல்பம், வியாகரணம், சந்தஸ், ஜோதிடம், நிருக்தம்) ஏனைய சாஸ்திரங்கள், மகாபாரதமாகிய மாபெரும் கடல், புராணங்கள் ஆகிய வாக்ரூபமாகிய அனைத்தும் தங்களுடையதன்றோ!

द्वीपे क्वचित् समुदयन्नृतमेव धाम शाखासहस्रसचिवः शुकसेव्यमानः ।
उल्लासयत्यहह यस्तिलको मुनीनामुच्चैः फलानि सुदृशां निजपादभाजाम् ॥ २९

ஒரு தீவில் தோன்றி உண்மையான பதவியை விளக்கிக்கொண்டு ஆயிரம் கிளைகளுடன் கூடியதும், (அநேக வேதசாகைகளை பிரமாணமாகக்கொண்டவரும்) சுகங்களால் = கிளிகளால் சேவிக்கப்பட்டதும், (தனது புதல்வனாகிய சுகயோகியால் சேவிக்கப்பட்டவரும்) முனிவர்களுக்கு தங்குமிடமாகையால் திலகம்போல் சிறந்ததும், (முனிவர்களில் சிறந்தவரும்) ஆகிய வியாசமுனிவராகிய விருக்ஷம் தன்னுடைய அடியில் வருகின்ற நல்ல அறிவுள்ள ஜனங்களுக்கு சிறந்த பழங்களை அளிக்கின்றது. (தன் பாதங்களை அண்டிய சிறந்த ஞானிகளுக்கு முக்திசுகங்களையளிக்கிறார். 1. ஸாலோக்யம் = பகவானுடைய உலகத்தில் வாசம், 2. ஸாமீப்யம் = அவருடைய அண்டையிலிருத்தல், 3. ஸார்ஷ்டி = அந்த பகவானுக்குச் சமமான ஐசுவரியம், 4. ஸாயுஜ்யம் = அவருடன் ஐக்கியமாகுதல் என்று நான்கு ஸகுணமுக்திகளும், 5. ஸ்வரூபாவஸ்தானம் = நிஜரூபத்திலேயே இருத்தல் என்ற கைவல்யமுக்தியும் ஆகிய பேதங்களைப் பின்பற்றிப் பன்மை.)

धत्से सदाऽऽर्तिशमनाय हृदा गिरीशं गोपायसेऽधिवदनं च चिरन्तनीर्गाः ।
दूरीकरोषि नरकं च दयार्द्रदृष्ट्या कस्ते गुणान् गदितुमद्भुतकृष्ण शक्तः ॥ ३०

அற்புதமான கிருஷ்ணரே! தங்களுடைய குணங்களை வர்ணிப்பதற்கு யார்தான் வல்லமையுள்ளவர்? ஏனெனில், பிரசித்தமான கிருஷ்ணரைக் காட்டிலும் தங்களுக்கு விசேஷங்கள் உள. ஸத்துக்களுடைய துன்பங்களைத் தொலைப்பதற்கு ஸ்ரீ கிருஷ்ணர் கைவிரலில் கிரீசனை = சிறந்த மலையை (கோவர்த்தனகிரியை) தாங்கினார். தாங்கள், கிரீசனை = சிவபெருமானை துன்பங்கள் நீங்குவதற்காக எப்பொழுதும் மனதில் தரித்துக்கொண்டுள்ளீர். चिरंतनीः गाः = பழைய பசுக்களை (அனாதிகாலத்திலிருந்துள்ள வேதங்களை) முகத்தில் தரித்துள்ளீர். அவர் புதிய பசுக்களை (பிறந்த பசுக்களை) மேய்த்துக்காப்பாற்றினார். தாங்கள் கருணை நிரம்பிய பார்வையினாலேயே நரகதுக்கத்தை அகற்றுகிறீர்கள். அவர் போரில் நரகாசுரனைக் கொன்றார். ஆகையால் தாங்கள் ஆச்சரியமான கிருஷ்ணர்.

यमामनन्ति श्रुतयः पदार्थं न सन्न चासन्न बहिर्न चान्तः ।
स सच्चिदानन्दघनः परात्मा नारायणस्त्वं पुरुषः पुराणः ॥ ३१

ஸத்தல்லாததாகவும், அஸத்தல்லாததாகவும், உள்ளும் வெளியுமற்றதாகவும் எந்தப் பொருளை சுருதிகள் கூறுகின்றனவோ, அத்தகைய ஸச்சிதானந்தகனமாகிய பரம்பொருளும் புராணபுருஷனுமாகிய நாராயணன் தாங்கள் தான்.

इति स्तुतस्तेन यथाविधानमासेदिवान् विष्टरमात्मनिष्ठः ।
द्वैपायनः प्रश्रयनम्रपूर्वकायं यतीशानमिदं बभाषे ॥ ३२

இவ்வாறு துதிக்கப்பட்ட ஆத்மநிஷ்டராகிய வியாஸமுனிவர் முறைப்படியளிக்கப்பட்ட ஆஸனத்திலமர்ந்தார். பிறகு வணங்கிய யதிசிரேஷ்டரிடம் கூறினார். (ஆத்மநிஷ்டர் = ஆத்மனிடத்திலேயே, நி = விசேஷமாக, ஸ்த = நிலைத்துள்ளவர். வேறு ஆஸனத்தை எதிர்பார்க்காதவர். பக்தன் கொடுத்தமையால் அந்த ஆஸனத்தில் ஆதரவுடன் அமர்ந்தார்.)

त्वमस्मदादेः पदवीं गतोऽभूरखण्डपाण्डित्यमबोधयं ते ।
शुकर्षिवत् प्रीतिकरोऽसि विद्वन् पुरेव शिष्यैः सह मा भ्रमीस्त्वम् ॥ ३३

எங்களைப்போன்றவர்களுடைய (மும்மூர்த்திகளுடைய) நிலைமையை அடைந்துள்ளாய். உனது பூர்ணமான ஞானத்தின் வன்மையைத் தெரிந்து கொண்டேன். சுகமுனிபோல் எனக்கு ஆனந்தத்தையளிக்கின்றாய். வித்வானே! முன்போல் சிஷ்யர்களுடன் ஸஞ்சாரம் செய்யவேண்டாம். (अबोधयम् என்ற பதம் மற்றவர்களுக்குத் தெரியப்படுத்தினேன் என்ற பொருளைக் கொண்டது.)

कृतं त्वया भाष्यमितीन्दुमौलेः सभाङ्गणे सिद्धमुखान्निशम्य ।
हृदा प्रहृष्टेन दिदृक्षया ते दृगध्वनीनः प्रशमिन्नभूवम् ॥ ३४

சாந்தகுணம் நிறைந்தவனே! பிரம்மஸூத்திரங்களுக்கு பாஷ்யம் இயற்றியுள்ளாய் என்று சிவபெருமானுடைய அவையில் ஸித்தர்கள் கூறக் கேள்வியுற்ற நான் உவகை பூரித்த மனதுடன் காணக் குதூகலங்கொண்டு உன் கண்களுக்கு முன்னால் தோன்றியுள்ளேன்.

इत्थं मुनीन्द्रवचनश्रवणोत्थहर्षं रोमाञ्चपूरमिषतो बहिरुत्प्लवन्तम् ।
बिभ्रत्तमभ्ररुचिमाख्यददभ्रशक्तिं श्रीशङ्करः शुकमतार्णवपूर्णचन्द्रः ॥ ३५

சுகமுனிவருடைய மதமாகிய கடலுக்குப் பூர்ணசந்திரனாகிய (ஸந்தோஷவளர்ச்சியையளிக்கின்ற) அந்த சங்கரர் வியாஸமுனிவருடைய வசனத்தைச் செவியுற்றதினாலுள்ள ஆனந்தம் அகத்தில் அடங்காமல் மயிர்சிலிர்த்தல் உருவத்தில் வெளியே பொங்கி எழ கார்மேகத்தின் அழகை கொண்டவரும் கரைகூற முடியாத தவவன்மையுள்ளவருமாகிய அவரிடம் கூறினார்.

सुमन्तुपैलप्रथमा मुनीन्द्रा महानुभावा ननु यस्य शिष्याः ।
तृणाल्लघीयानपि तत्र कोऽहं तथाऽपि कारुण्यमदर्शि दीने ॥ ३६

பகவானே! மகானுபாவர்களாகிய ஸுமந்து, பைலர் முதலிய முனிசிரேஷ்டர்கள் தங்களுக்குச் சீடர்களாகவிருக்கையில் புல்லினும் புல்லனாகிய யானும் ஒரு பொருளோ! ஆயினும், எளியவனிடத்தில் கருணை காண்பிக்கப்பட்டது. (இங்கு, பரமஹம்ஸபரிவ்ராஜகராகிய பரமாசாரியருடைய பணிவின் பெருமை புகழத்தக்கது.)

सोऽहं समस्तार्थविवेचकस्य कृत्वा भवत्सूत्रसहस्ररश्मेः ।
भाष्यप्रदीपेन महर्षिमान्य नीराजनं धृष्टतया न लज्जे ॥ ३७

மாமுனிவர்களால் பூஜிக்கத்தக்கவரே! அந்த நான், எல்லாப் பொருட்களையும் நன்கு விளக்குகின்ற தங்களுடைய சூத்திரமாகிய சூரியனுக்கு பாஷ்யமாகிய தீபத்தினல் ஆரத்தி எடுத்து அத்தகைய துணிவிற்கு வெட்க மற்றவனுக உள்ளேன்.

अकारि यत्साहसमात्मबुद्ध्या भवत्प्रशिष्यव्यपदेशभाजा ।
विचार्य तत्सूक्तिदुरुक्तिजालमर्हः समीकर्तुमिदं कृपालुः ॥ ३८

தங்களுடைய சிஷ்யருடைய சிஷ்யருக்கு சிஷ்யரின் சிஷ்யனுகிய (வியாசர், சுகர், கௌடபாதர், கோவிந்தர், சங்கரர் என்று சிஷ்யபரம்பரை) நான் துணிந்து என்னுடைய அற்பபுத்தியினுல் செய்த இந்த பாஷ்யத்தில் கெட்ட சொற்களைத் திருத்தி, தயாளுவாகிய தாங்கள் அதனைச் செம்மையாக அமைத்து அருளுவீராக.

इत्थं निगद्योपरतस्य हस्ताद्धस्तद्वयेनाऽऽदरतः स भाष्यम् ।
आदाय सर्वत्र निरैक्षतासौ प्रसादगांभीर्यगुणाभिरामम् ॥ ३९

இவ்வாறு கூறிமுடித்த அவருடைய கையிலிருந்து அந்த பாஷ்யத்தை மிக்க ஆதரவுடன் இரு கைகளாலும் பெற்றுக்கொண்டு, பிரஸாதம் = ஐயமின்றி பொருள் விளக்கம், காம்பீரியம் (சமுத்திரம்போல் ஆழம் = ஆழ்ந்த கருத்து) என்ற குணங்களால் மிகவும் அழகமைந்த அதை எல்லாவிடங்களிலும் கண்ணுற்ருர்.

सूत्रानुकारिमृदुवाक्यनिवेदितार्थं स्वीयैः पदैः सह निराकृतपूर्वपक्षम् ।
सिद्धान्तयुक्तिविनिवेशिततत्स्वरूपं दृष्ट्वाऽभिनन्द्य परितोषवशादवोचत् ॥ ४०

ஸூத்திரத்திலுள்ள பதங்களையனுஸரித்த தன்னுடைய சொற்களால் பொருள்களை விளக்குவதுடன், பூர்வபக்ஷத்தினுடையவும், ஸித்தாந்தத்தினுடையவும் யுக்திகளை ஸூத்திரத்திலுள்ள பதங்களுக்குத் தக்கதாகிய தன்னுடைய சொற்றொகுதியாலும் விளக்குவதினுல் மிகச் சிறந்த அந்த பாஷ்யத்தைப் புகழ்ந்து மகிழ்ச்சியுடன் கூறினுர்.

न साहसं तात भवानकार्षीद्यत्सूत्रभाष्यं गुरुणा विनीतः ।
विचार्यतां सूत्रदुरुक्तमत्रेत्येतन्महत्साहसमित्यवैमि ॥ ४१

குழந்தாய்! ஆசிரியரால் கற்பிக்கப்பட்ட நீ ஸூத்திரபாஷ்யம் எழுதியது துணிவானகாரியமன்று. ஆனுல் ''இதில் தப்பிதமிருப்பதைத் திருத்தவேண்டும்'' என்று கூறியதுதான் பெரிதான துணிவு என்று நான் அறிகிறேன்.

मीमांसकानामपि मुख्यभूतो वेत्थाखिलव्याकरणानि विद्वन् ।
विनिःसरेत्ते वदनाद्यतीन्दो गोविन्दशिष्यस्य कथं दुरुक्तम् ॥ ४२

மீமாம்ஸா சாஸ்திரத்தையறிந்தவர்களில் சிறந்தவனும், வியாகரண சாஸ்திரம் எல்லாவற்றையுமறிந்தவனுமாக இருக்கிருய். அறிஞனே!

கோவிந்தனுடைய சிஷ்யனுகிய உனது முகத்திலிருந்து தப்பிதமான விஷயம் எவ்வாறு வெளியே வரும்?

न प्राकृतस्त्वं सकलार्थदर्शी महानुभावः पुरुषोऽसि कश्चित् ।
यो ब्रह्मचर्याद्विषयान्निवार्य पर्यव्रजः सूर्य इवान्धकारान् ॥ ४३

சூரியன் இருள் கூட்டங்களை நீக்குவதுபோல், பிரம்மசாரியாகவிருக்கையிலேயே விஷயசுகங்களையறுத்துத் துறவியாக வெளியே கிளம்பிய நீ பிரகிருதியாகிய மாயைக்கு வசப்பட்டவனல்லன். எல்லாவற்றையுமறிந்த மகானுபாவனுன ஒரு புருஷன் நீ.

बह्वर्थगर्भाणि लघूनि यानि निगूढभावानि च मत्कृतानि ।
त्वामेवमित्थं विरहय्य नास्ति यस्तानि सम्यग्विवरीतुमीष्टे ॥ ४४

அநேகக் கருத்துக்கள் அடங்கி கூடமான அபிப்பிராயங்களைக்கொண்ட என்னுடைய ஸூத்திரங்களுக்கு பாஷ்யமியற்ற வல்லமையுள்ளவன் உன்னைக் காட்டிலும் வேறு ஒருவனுமில்லை.

निसर्गदुर्ज्ञानतमानि को वा सूत्राण्यलं वेदितुमर्थतः सन् ।
क्लेशस्तु तावान् विवरीतुरेषां यावान् प्रणेतुर्विबुधा वदन्ति ॥ ४५

இயற்கையாகவே பொருள் அறிதற்கரிதான ஸூத்திரத்தொகுதியின் உண்மையான கருத்தை யார் அறிந்துகொள்ள வல்லமையுள்ளவன்? ஸூத்திரங்களியற்றுபவனுக்கு எவ்வளவு கஷ்டம் இருக்கின்றதோ, அவ்வளவு கஷ்டம் வியாக்கியானம் செய்கிறவனுக்கும் உண்டு என்று வித்வான்கள் கூறுகின்றனர்.

भावं मदीयमवबुध्य यथावदेवं भाष्यं प्रणेतुमनलं भगवानपीशः ।
सांख्यादिनाऽन्यथयितं श्रुतिमूर्धवर्त्मोद्धर्तुं कथं परशिवांशमृते प्रभुः स्यात् ॥ ४६

என் மனதிலுள்ளதை அறிந்து இவ்வாறு பாஷ்யத்தை இயற்றுவதற்கு ஸர்வக்ஞனும், ஸர்வசக்தனுமாகிய பகவானும் வல்லமையுள்ளவனல்லன். ஸாங்கியன், நையாயிகன் முதலியவர்களால் வெவ்வேறு வழியில் தவறுதலாகத் திருப்பப்பட்ட வேதமார்க்கத்தைக் காப்பாற்றுவதற்கு பரமசிவனுடைய அம்சமல்லாதவரால் எவ்வாறு முடியும்?

**30**-வது சுலோகத்தில் அற்புதமான கிருஷ்ணர் தாங்கள் என்று ஸ்ரீ சங்கரர் வேதவியாஸரைப் புகழ்ந்துள்ளார். அதைப் பின்பற்றி வியாஸ முனிவர் ஸ்ரீசங்கரரை அற்புதமான சங்கரர் என்று புகழ்ந்து கூறுகிறூர்:-

रोषानुषङ्गकलयाऽपि सुदूरमुक्तो धत्सेऽधिमानसमहो सकलाः कलाश्च ।
सर्वात्मना गिरिजयोपहितस्वरूपः शक्यो न वर्णयितुमद्भुतशङ्करस्त्वम् ॥ ४७

கைலாஸவாசியாகிய சங்கரர், காமனையெரித்தல், த்ரிபுரஸங்காரம் செய்தல் முதலிய காரியங்களில் சினங்கொண்டார். நீயோவெனில், மிகச்சிறிதளவேனும் சினம் பக்கத்தில் அணுகாமல் தூரத்திலேயே அதனையகற்றியுள்ளாய். அவர்

தலையில் ஒரு கலையை (சந்திரக்கலையை) தரித்துள்ளார். நீயோவெனில், எல்லாக் கலைகளையும் = கல்விகளையும் மனதில் தரித்தவன். சிவபெருமான் இடதுபக்கத்தில், गिरिजया = மலையின் மகளாகிய பார்வதீ தேவியால் उपहितस्वरूपः = ஆலிங்கனஞ்செய்யப்பட்ட உருவமமைந்துள்ளவர். நீ எல்லாவிதத்திலும் गिरि = வசனத்தில் (வேதாந்த நூல்களில்) जया = விளங்கும் ஆத்மவித்தையினுல் उपहितस्वरूपः = வியாபிக்கப்பட்ட உருவமுடையவன். ஆகையால், நீ அற்புதமான சங்கரன்.

व्याख्याप्यसंख्यैः कविभिः पुरैतद्व्याख्यास्यते कैश्चिदितः परं च ।
भवानिवास्मद्धृदयं किमेते सर्वज्ञ विज्ञातुमलं निगूढम् ॥ ४८

இதற்கு முன் எண்ணில்லாத அறிஞர்களால் இந்த ஸூத்திரங்களுக்கு வியாக்கியானம் செய்யப்பட்டுள்ளது. எதிர்காலத்திலும் அநேகர்களால் வியாக்கியானம் செய்யப்படும். ஆயினும், ஸர்வக்ஞனே! அவர்களனைவரும் உன்னைப்போல் என்னுடைய மனதிலுள்ள அபிப்பிராயத்தை உணர வல்லமையுள்ளவரல்லர்.

व्याख्याहि भूयो निगमान्तविद्यां विभेदवादान् विदुषो विजित्य ।
ग्रन्थान् भुवि ख्यापय सानुबन्धानहं गमिष्यामि यथाभिलाषम् ॥ ४९

பேதவாதம் கூறுபவர்களை வென்று, வேதாந்த நூலை இன்னும் ஆங்காங்கு பிரசாரம் செய்வாயாக. விஷயம் (பொருள்), பிரயோஜனம் (பயன்), அதிகாரி (உரியவன்), சம்பந்தம் (நூலுக்கும் கற்பவனுக்குமுள்ள சம்பந்தம்) என்ற நான்கு அனுபந்தங்களுடன் விளங்குகின்ற சிறந்த வேதாந்த நூல்களை இவ்வுலகில் பிரதிஷ்டை செய்வாயாக. நான் எனது விருப்பப்படிப் போகின்றேன்.

இவ்வாறு கூறிய வியாஸமுனிவரிடம் ஸ்ரீ சங்கரர் கூறினர்:-

इत्युक्तवन्तं तमसाववोचत् कृतानि भाष्याण्यपि पाठितानि ।
ध्वस्तानि सम्यक्कुमतानि धैर्यादितः परं किं करणीयमस्ति ॥ ५०

பாஷ்யங்கள் இயற்றப்பட்டன. கற்பிக்கவும்பட்டன. அவைகளில் தைரியமாக மற்ற மதங்களும் அறவே அறுக்கப்பட்டுள்ளன. இனிமேல் யான் செய்யவேண்டியது யாது? (ஒன்றுமில்லை.)

मुहूर्तमात्रं मणिकर्णिकायां विधेहि सद्वत्सल सन्निधानम् ।
चिराद्यतेऽहं परमायुषोऽन्ते त्यजामि यावद्वपुरद्य हेयम् ॥ ५१

ஸத்துக்களிடம் அன்புகொண்டவரே! ஒரு முகூர்த்தநேரம் மணிகர்ணிகையில் ஸன்னிதானம் கொள்வீராக. (அருள் புரிந்து அருகில் இருப்பீராக.) இதற்காகத்தான் நான் வெகுகாலமாக முயற்சி செய்துவருகிறேன். ஆயுளின் முடிவில் தியாகம் செய்யத்தகுந்த இந்த உடலை இப்பொழுது தியாகம் செய்கிறேன்.

इतीदमाकर्ण्य वचो विचिन्त्य स शङ्करं प्राह कुरुष्व मैवम् ।
अनिर्जिताः सन्ति वसुन्धरायां त्वया बुधाः केचिदुदारविद्याः ॥ ५२

இவ்வாறு சங்கரருடைய வசனத்தைக் கேட்டு, யோசனை செய்து அந்த வியாஸமுனிவர் கூறினார்:- பூமியில் கல்வியில் திறமை வாய்ந்த அறிஞர்கள் சிலர் உன்னால் வெல்லப்படாதவர்களாக உளர்.

जयाय तेषां कति हायनानि वस्तव्यमेव स्थिरधीस्त्वयाऽपि ।
नो चेन्मुमुक्षा भुवि दुर्लभा स्यात् स्थितिर्यथा मातृधुतस्य बाल्ये ॥ ५३

ஸ்திரமான புத்தியுள்ளவனே! அத்தகைய வித்வான்களை வெல்லுதற்கு, சில வருஷங்கள் நீ இவ்வுலகில் இருக்கவேண்டியதவசியம். இல்லாவிடில், தாய் இழந்த சேய்க்கு உயிர் நிலைப்பது எவ்வாறு அரிதோ, அது போல் சான்றோர்களுக்கு முக்தியில் விருப்பமும் அதன் நெறியும் நிலைப்பது அரிதேயாகிவிடும்.

प्रसन्नगम्भीरभवत्प्रणीतप्रबन्धसन्दर्भभवः प्रहर्षः ।
प्रोत्साहत्यात्मविदामृषीणां वरेण्य विश्राणयितुं वरं ते ॥ ५४

ஆத்மஞானிகளான முனிவர்களில் சிறந்தவனே! தெளிவாயும், நல்ல கருத்துக்களடங்கியதுமாகிய உன்னுடைய கிரந்தத்திலுள்ள அதாது ஸந்தர்ப்பங்களைக் கண்ணுற்றதினால் பொங்கிய ஆனந்தம் உனக்கு வரமளிக்கச் செய்கிறது.

अष्टौ वयांसि विधिना तव वत्स दत्तान्यन्यानि चाष्ट भवता सुधियाऽऽर्जितानि ।
भूयोऽपि षोडश भवन्तु भवाज्ञया ते भूयाच्च भाष्यमिदमारविचन्द्रतारम् ॥ ५५

மகனே! உனக்கு விதிப்படி ஏற்பட்ட வயது எட்டு வருஷங்கள். புத்திசாலியாகிய உன்னால் (துறப்பினால்) எட்டு வயது அதிகமாக சம்பாதித்துக் கொள்ளப்பட்டது. மேலும், பரமசிவனது ஆக்ஞையினால் பதினாறு வருஷங்கள் ஆயுள் நீடித்தது. உன்னால் இயற்றப்பட்ட இந்த பாஷ்யம் சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள் உள்ளளவும் விளங்குக.

त्वमायुषाऽनेन विरोधिवादिगर्वाङ्कुरोन्मूलनजागरूकैः ।
वाक्यैः कुरुष्वोज्झितभेदबुद्धीनद्वैतविद्यापरिपन्थिनोऽन्यान् ॥ ५६

இந்த ஆயுளில் அத்வைத மதத்திற்கு மாறுகப் பேசுகின்ற எதிரிகளுடைய செருக்கின் முளையை அறுக்க வல்லமையுள்ள சொற்களால் அந்த எதிர்வாதிகளை வென்று, பேதபுத்தியை இழக்கச்செய்து அவர்களை அத்வைதமார்க்கத்திற்குக் கொண்டுவருவாயாக.

इतीरयन्तं प्रति वाचमूचे स शङ्करः पावितसर्वलोकः ।
त्वत्सूत्रसम्बन्धवशान्मदीयं भाष्यं प्रचारं भुवि यातु विद्वन् ॥ ५७

உலகங்களனைத்தையும் பரிசுத்தஞ்செய்த சங்கரர், இவ்வாறு கூறிய வியாஸமுனிவரிடம் கூறினார்:- ''வித்வானே! தங்களுடைய ஸூத்திரத்தின் சம்பந்தத்தினால் என்னுடைய பாஷ்யம் பிரசாரத்தைப் பெறுமாக. (ஸூத்திரம் என்ற சொல்லிற்கு நார் என்னும் பொருள் உள்ளமையால், பூவுடன் நாருக்கு மணம் என்ற பழமொழியை ஸ்ரீ சங்கரபகவத்பாதாசாரியர், நாரினால் பூவிற்கு மணம் என்று பணிவுடன் அழகாக அமைத்துக்கூறினார்.)

इतीरयित्वा चरणौ ववन्दे यतिर्मुनेः सर्वविदो महात्मा ।
प्रदाय संभाव्य वरं मुनीशो द्वैपायनः सोऽन्तरधाद्यतात्मा ॥ ५८

இவ்வாறு கூறி மகாத்மாவாகிய ஸ்ரீ சங்கரர் முனிவருடைய பாதங்களில் வணங்கினார். பொறிகளையடக்கிய மாமுனிவராகிய வியாஸரும் அவருக்கு வரமளித்து அனுக்கிரகம் செய்து மறைந்தார்.

इत्थं निगद्य ऋषिवृष्णि तिरोहितेऽस्मिन्नन्तर्विवेकनिधिरप्यथ विव्यथे सः ।
हृत्तापहारिनिरुपाधिकृपारसानां तत्तादृशां कथमहो विरहो विषह्यः ॥ ५९

இவ்வாறு கூறி முனிசிரேஷ்டராகிய வியாஸபகவான் மறைந்தபொழுது, ஆத்மஞானக்கடலாக இருந்தபோதிலும் அந்த ஸ்ரீ சங்கரர் வருந்தினார். மனதின் தாபங்களைத் தணிக்கச்செய்கின்ற கபடமற்ற கருணை நிரம்பிய அத்தகையவர்களுடைய பிரிவாற்றாமை பொறுக்கத்தக்கதோ?

तत्पादपद्मे निजचित्तपद्मे पश्यन् कथंचिद्विरहं विषह्य ।
यतिक्षितीशोऽपि गुरोर्नियोगान्मनो दधे दिग्विजये मनीषी ॥ ६०

புத்திமானாகிய யதிசக்ரவர்த்தி அவருடைய பாதகமலங்களை தனது ஹிருதயகமலத்தில் தியானம் செய்வதினால் பிரிவாற்றாமையை ஒருவாறு பொறுத்துக்கொண்டு, குருவாகிய அந்த மாமுனிவருடைய உத்தரவின்படி திக்விஜயம் செய்வதற்குத் தீர்மானங்கொண்டார்.

भाष्यस्य वार्तिकमथैष कुमारिलेन भट्टेन कारयितुमादरवान् मुनीन्द्रः ।
वन्ध्यायमानदरविन्ध्यमहीधरेण वाचंयमेन चरितां हरितं प्रतस्थे ॥ ६१

பிறகு, அந்த மாமுனியாகிய ஸ்ரீ சங்கரர் தன்னுடைய பாஷ்யத்திற்கு வார்த்திகத்தை (வியாக்கியானத்தை) குமரிலபட்டரைக்கொண்டு இயற்றச் செய்ய விரும்பியவராக, விந்த்யமலையின் வளர்ச்சியைக் குறைத்த அகஸ்திய முனிவர் வாஸஞ்செய்த திசைக்கு (தென் திசைக்கு) புறப்பட்டார்.

ततः स वेदान्तरहस्यवेत्ता भेत्ताऽमतानां तरसा मतानाम् ।
प्रयागमागात्प्रथमं जिगीषुः कुमारिलं साधितकर्मजालम् ॥ ६२

பிறகு வேதாந்தங்களின் நுட்பத்தை நுகர்ந்தவரும், அவைகளுக்குப் புறம்பான மதங்களை நிராகரிப்பவருமாகிய அவர் கர்மமார்க்கத்தைப் பாதுகாத்தக் குமரிலரை வாதத்தில் வெல்ல விரும்பியவராக முதலில் பிரயாகையை அடைந்தார்.

आमज्जतां किल तनूमसितां सितां च कर्तुं कलिन्दसुतया कलितानुषङ्गाम् ।
अह्नाय जह्नुतनयामथ निह्नुताघां मध्येप्रयागमगमन्मुनिरर्थमार्गम् ॥ ६३

தன்னிடத்தில் மூழ்கின்றவர்களுடைய உடலைக் கறுப்பாகவும் (திருமாலுக்கு நிகராகவும்) வெண்மையாகவும் (சிவபெருமானுக்குச் சமமாகவும்) (செய்வதற்காகவோ என்று தோன்றுமாறு) யமுனையுடன் சம்பந்தமுற்றதும், பாபங்களை நாசம் செய்கின்றதும், பிரயாகையின் மத்தியில்

விளங்குகின்றதும், புருஷார்த்தங்கள் நான்கையுமளிக்கின்றதுமாகிய கங்கைக்குச் சென்றார். (கங்காயமுனாசங்கமத்திற்குச் சென்றார்.)

गङ्गाप्रवाहैरुपरुद्धवेगा कलिन्दकन्या स्तिमितप्रवाहा ।
अपूर्वसख्यागतलज्जयेव यत्राधिकं भाति विचित्रपाथाः ॥ ६४

அந்த பிரயாகையில், கங்கையின் பிரவாகத்தினால் வேகம்குன்றிய யமுனை, விரைவாகச் சென்றுகொண்டிருந்த ஒரு பெண்மணி புதிதாக ஒரு தோழியை ஸந்திக்கும்பொழுது நடைகுன்றியவள்போல் விளங்குகின்றது. கங்கையின் சேர்க்கையினால் தண்ணீர் அந்தவிடத்தில் அதிகமாகவிருக்கின்றது.

अन्तेवसद्भिरमलच्छविसम्प्रदायमध्येतुमाश्रितजलां कुहचिन्मरालैः ।
चक्रद्वयेन रजनीसहवाससौख्यसंशीलनाय किल संवलितां परत्र ॥ ६५

சுத்தமான ஒளிபெறுதல் என்ற ஸம்பிரதாயத்தைக் கற்றுக் கொள்ளுவதற்காக சிலவிடங்களில் அன்னப்பறவைகள் வாசம் செய்கின்றதும் குமுதப்புஷ்பங்களுடன் வாசத்தைக் கற்றுக்கொள்ளுவதற்கு தம்பதிகளாகச் சக்ரப்பறவைகள் வாசம் செய்கின்றதுமாக அந்த ஸங்கமம் விளங்கிற்று.

यत्राप्लुता दिव्यशरीरभाज आचन्द्रतारं दिवि भोगजातम् ।
संभुञ्जते व्याधिकथानभिज्ञाः प्राहेममर्थं श्रुतिरेव साक्षात् ॥ ६६

எந்த இடத்தில் ஸ்நானம் செய்தவர்கள் திவ்யசரீரத்தையடைந்து வியாதியின் பேச்சைக்கூட அறியாதவர்களாக சந்திரசூரியர்கள் விளங்கும் காலமளவு தேவலோகத்தில் போகங்களை அனுபவிக்கின்றனர் என்று மறையே கூறுகின்றதோ அந்த இடத்திற்குச் சென்றார். (''सितासिते सरितौ यत्र सङ्गते तत्राप्लुतासो दिवमुत्पतन्ति'' என்று சுருதி. வெண்ணிறமாகிய கங்கையும், கருநிறமாகிய யமுனையும் சேருகின்ற இடத்தில் ஸ்நானஞ்செய்கின்றவர்கள் சுவர்க்கத்தை அடைகின்றனர் என்று பொருள்.)

अज्ञातसंभवतिरोधिकथाऽपि वाणी यस्याः सितासिततयैव गृणाति रूपम् ।
भागीरथीं यमुनया परिचर्यमाणामेतां विगाह्य मुदितो मुनिरित्यभाणीत् ॥ ६७

உற்பத்திநாசங்களற்ற வசனமாகிய வேதம் எந்த ஸங்கமநதியின் உருவத்தை 'ஸிதம் = வெண்மை, அஸிதம் = கருநிறம்' என்று கூறுகின்றதோ, அப்படிப்பட்டவிடத்தில் யமுனாநதியினால் உபசாரம் செய்யப்பட்ட கங்கையில் இறங்கி முனிவராகிய ஸ்ரீ சங்கரர் இவ்வாறு கூறினார்.

सिद्धापगे पुरविरोधिजटोपरोधक्रुद्धा कुतः शतमदःसदृशान् विधत्से ।
बद्धा न किं नु भवितासि जटाभिरेषामद्धा जडप्रकृतयो न विदन्ति भावि ॥ ६८

ஹே தேவகங்கையே! முப்புரங்களையெரித்த பரமசிவனுடைய ஜடையில் கட்டுண்டதினால் கோபமுற்ற நீ ஏன் அவருக்கு நிகராக நூற்றுக்கணக்கான மூர்த்திகளை சிருஷ்டி செய்கிறாய்? அப்படிச்செய்வதால் அவர்களாலும் ஜடையில் கட்டப்படமாட்டாயா? ஆஹா! ஜடசுபாவமுள்ளவர்கள் எதிர்காலத்தில் நிகழும்

பயனே அறிகிறதில்லே. (ஜடம் = ஜலம்; ட, ல என்ற எழுத்துக்களே சிலசமயங்களில் பேதமின்றி உபயோகிப்பது வழக்கம். அந்த த்ரிவேணீசங்கமத்தில் ஸ்நானம் செய்பவர்கள் சிவஸாரூப்யம் அடைகின்றனர் என்ற கொள்கையைப் பின்பற்றி இங்ஙனம் கூறியுள்ளார்.)

सन्मार्गवर्तनपराऽपि सुरापगे त्वमस्थीनि नित्यमशुचीनि किमाददासि।
आ ज्ञातमम्ब हृदयं तव सज्जनानां प्रायः प्रसाधनकृते कृतमज्जनानाम् ॥ ६९

ஹே தேவகங்கையே! நன்நெறியிலிருப்பவளாயினும் (மற்றவர்களே நன்நெறியில் நடத்துபவளாயினும்) நீ அசுத்தங்களான எலும்புகளே ஏன் ஏற்றுக்கொள்ளுகிருய்? ஆஹா! தாயே! விஷயம் தெரிந்தது. தன்னிடம் மூழ்கின்ற சான்ருேர்களுக்கு அணியாக அமைப்பதற்கு அவ்வாறு ஏற்றுக் கொள்ளுகிருய்போலும். (இறந்தவர்களுடைய எலும்புகளே அந்த ஸங்கமத்தில் போட்டால் அவர்களுக்கு சிவஸாரூப்யம் கிட்டுகின்றது என்ற கருத்தை சமத்காரமாக கூறுகின்ருர்.)

स्वापानुषङ्गजडताभरिताञ्जनौघान् स्वापानुषङ्गजडताविधुरान्विधत्से ।
दूरीभवद्विषयरागहृदोऽपि तूर्णं धूर्तावतंसंयसि देवि क एष मार्गः ॥ ७०

துயிலின் சம்பந்தத்தால் ஜடத்தன்மையையடைந்த மனிதர்களே தன்னுடைய சுத்தமான ஜலத்தின் சம்பந்தமுறுவதால் அந்த ஜடத்தன்மையற்றவர்களாக (தேவர்களாக) செய்கிருய். இது உசிதமே! ஆனல் விஷயங்களில் பற்றற்ற மனமுள்ளவர்களேக்கூட தூர்த்தர்களில் சிறந்தவர்களாக (விடர்களாக) செய்கின்ருயே! இதென்ன சுபாவம்! ஆச்சரியம்! உன்னுடைய இயல்புக்கு முரணுகவிருக்கிறது. சிலேடையாக, தூர்த்தம் = ஊமத்தம்பூ. அதனே அலங்காரமாக அணிந்த சிவபெருமானுக மாற்றிவிடுகிருய் என்று சமாதானம்.

इति स्तुवंस्तापसराट् त्रिवेणीं शाट्या समाच्छाद्य कटीं कृपीटे ।
दोर्दण्डयुग्मोद्धृतवेणुदण्डोऽघमर्षणस्नानमना बभूव ॥ ७१

தபஸ்விகளுக்கு அரசனுகிய ஸ்ரீசங்கரர் அந்த த்ரிவேணியை இவ்வாறு துதித்து இடுப்பில் காஷாயவஸ்திரத்தைக் கட்டி இருகைகளாலும் மூங்கில் தண்டத்தைப் பிடித்துக்கொண்டு, அகமர்ஷண (பாபங்களே விலக்கும்) மந்திரத்தை ஜபம் செய்து ஸ்நானம் செய்ய ஸித்தமானுர்.

सस्नौ प्रयागे सह शिष्यसंघैः स्वयं कृतार्थो जनसंग्रहार्थी ।
अस्मारि माताऽपि च सा पुपोष दधार या दुःखमसोढ भूरि ॥ ७२

உலகப்பற்றற்ற அவர் ஸ்நானம் முதலிய கர்மங்களேச் செய்து அனுபவிக்க வேண்டிய பயன் இல்லாதபோதிலும், உலகத்திலுள்ள ஜனங்களுக்கு நடைமுறையில் உபதேசம் செய்ய விரும்பியவராக அவர் சீடர்களுடன் அந்த த்ரிவேணியில் ஸ்நானம் செய்தார். தன்னே கர்ப்பத்தில் தரித்து மிகத் துன்பங்களனுபவித்தவளும், போஷணே செய்வதற்காக முயற்சி செய்தவளுமாகிய தாயார் அச்சந்தர்ப்பத்தில் உலககுருவாகிய பரமஹம்ஸரால் மனதில் தியானம் செய்யப்பட்டாள்.

(அண்மையில் இருந்துகொண்டு அளிக்கும் பயனைக்காட்டிலும் நூறு மடங்கு அதிகப்பயனை தூரத்தில் இருந்துகொண்டு அளிக்கின்றேன் என்று தாயாரிடம் பிரதிக்ஞை கூறித் துறவியாக வெளியே கிளம்பி குருபதேசம் பெற்று அவருடைய அனுக்கிரகத்தையும் துணையாகக் கொண்டு, காசியில் வாசஞ்செய்யுங்கால் காசிவிச்வனாதருடைய பரிபூர்ணமான அருளும் கிட்ட, வியாஸமுனிவருடைய பிரஸாதத்தினால் மேலும் ஆயுள் நீடித்ததுமன்றி மற்ற மதங்களை வெல்லுவதற்கு அனுக்கிரகமும் கிடைத்து பிறகு பரமஹம்ஸராகிய பரமாசாரியர் த்ரிவேணியில் நீராடுகையில் தனது தாயாரை தியானஞ்செய்தார் என்பது அத்தகைய மாதின் பாக்கியத்தின் வன்மையன்றோ.

कुलं पवित्रं जननी कृतार्था विश्वम्भरा पुण्यवती च तेन। अपारसंवित्सुखसागरेऽस्मिन् लीनं परे ब्रह्मणि यस्य चेतः ॥ என்று சான்றோர்கள் கூறுகின்றனர். யாருடைய மனது நிரதிசயமான ஸச்சிதானந்தக்கடலில் லயத்தை அடைகின்றதோ, அத்தகையருடைய குலம் பரிசுத்தமானது. அவருடைய தாயார் பாக்கியமுற்றவள் (மறுபிறப்பற்றவள்). பூமி அவரால் புண்ணியமுற்றது என்று பொருள். அநேக சீடர்களை முக்தியடையும்படி செய்ய வன்மைபெற்ற பரமாசாரியராகிய ஸ்ரீசங்கரர் தனது தாயாரை இந்த சந்தர்ப்பத்தில் தியானம் செய்ததால் அந்த ஸ்நானத்தின் பயன் அந்தத் தாயாரைச் சேரவேண்டுமென்பது பரமசிவனுடைய ஸங்கற்பம் என்று கூறுவதில் மிகையில்லை.)

अनुष्ठितिं द्रागवसाय्य वातैः कल्हारशीतैरुपसेव्यमानः ।
तीरे विशश्राम तमालमालिन्यत्रान्तरेऽश्रूयत लोकवार्ता ॥ ௭௩

விரைவில் கடமைகளை முடித்து, குளிர்ந்த காற்றினால் சேவிக்கப்பட்டவராக தமாலமரங்கள் நிரம்பிய நதிக்கரையில் அமர்ந்தார். இந்த சமயத்தில் ஒரு உலகவதந்தி செவியில் விழுந்தது.

गिरेरवप्लुत्य गतिः सतां यः प्रामाण्यमाम्नायगिरामवादीत् ।
यस्य प्रसादात्त्रिदिवौकसोऽपि प्रपेदिरे प्राक्तनयज्ञभागान् ॥ ௭௪

सोऽयं गुरोरुन्मथनप्रसक्तं महत्तरं दोषमपाकरिष्णुः ।
अशेषवेदार्थविदास्तिकत्वात्तुषानलं प्राविशदेष धीरः ॥ ௭௫

சான்றோர்களுக்குப் பாதுகாப்பளித்த எவர் மலையிலிருந்து கீழே குதித்து வேதங்கள் பிரமாணங்கள் என்று நிரூபித்தாரோ, எவருடைய தயவினால் தேவர்கள் தங்களுடைய ஹவிர்ப்பாகங்களை மறுபடியும் அடைந்தனரோ, எவர் வேதங்களின் பொருளனைத்தையும் நன்கு உணர்ந்தாரோ, அத்தகையர் தான் செய்த குருத்ரோகமாகிய மாபெரும் பாபத்தை நீக்கிக்கொள்ளுவதற்கு ஆஸ்திகத்தன்மையால் மிக்க தைரியத்துடன் உமித்தீயில் புகுந்துள்ளார்.

अयं ह्यधीताखिलवेदमन्त्रः कूलंकषालोडितसर्वतन्त्रः ।
नितान्तदूरीकृतदुष्टतन्त्रस्त्रैलोक्यविभ्रामितकीर्तियन्त्रः ॥ ௭௬

இவர் வேதங்களிலுள்ள மந்திரங்கள் யாவற்றையுமுணர்ந்தவர். தந்திரங்கள் (சாஸ்திரங்கள்) அனைத்தையும் நுண்ணிய நுட்பங்களுடன் நுகர்ந்தவர்.

துஷ்டர்களுடைய துஷ்டமதங்களெல்லாவற்றையும் நிராகரித்தவர். தனது கீர்த்தியாகிய யந்திரத்தை உலகங்கள் மூன்றிலும் பரவச்செய்தவர்.

श्रुत्वेति तां सत्वरमेष गच्छन् व्यालोकयत्तं तुषराशिसंस्थम् ।
प्रभाकराद्यैः प्रथितप्रभावैरुपस्थितं साश्रुमुखैर्विनेयैः ॥ ௭௭

அந்த வார்த்தையைக் கேட்டவுடனேயே இந்த சங்கரகுரு, விரைவில் சென்று பிரசித்தமான புகழ்பெற்ற பிரபாகரர் முதலிய சீடர்கள் நீர்நிரம்பிய கண்களுடன் சுற்றிலும் நின்று கைகூப்பிச் சேவிக்க உமித்தீயில் உயிருடன் போராடும் நிலைமையிலிருந்த அந்தக் குமரிலரைக் கண்ணுற்றார்.

धूमायमानेन तुषानलेन संदह्यमानेऽपि वपुष्यशेषे ।
सन्दृश्यमानेन मुखेन बाष्पपरीतपद्मश्रियमादधानम् ॥ ௭௮

புகைமிகுந்த உமித்தீயினால் உடல் வெந்துகொண்டிருக்கையில், பனித்துளியினால் வாடிய தாமரைமலரின் காந்திபோல் முகத்தில் ஒளிமங்கிய நிலைமையிலிருக்கும் அந்தக் குமரிலரைக் கண்டார்.

दूरे विधूताघमपाङ्गभङ्ग्या तं देशिकं दृष्टिपथावतीर्णम् ।
ददर्श भट्टो ज्वलदग्निकल्पो जुगोप यो वेदपथं जितारिः ॥ ௭௯

நாஸ்திகர்களை வென்று வேதமார்க்கத்தைப் பாலனம் செய்தவரும், அக்னிக்கு நிகரான தேஜஸ்ஸுடையவருமாகிய குமரிலர், கடைக்கண் பார்வையின் திறமையினாலேயே பாபங்களை விலக்கும் வல்லமையுற்ற அந்த ஆசிரியரை கண்களுக்கெதிரில் கண்டார்.

अदृष्टपूर्वं श्रुतपूर्ववृत्तं दृष्ट्वाऽतिमोदं स जगाम भट्टः ।
अचीकरच्छिष्यगणैः सपर्यामुपाददे तामपि देशिकेन्द्रः ॥ ௮௦

இதற்குமுன் நேரில் காணப்படாவிடினும் கேள்வியுற்று தன்னால் அறிந்துகொள்ளப்பட்ட அந்த சங்கரரை கண்களாலும் இப்பொழுது கண்டதினால் குமரிலர் மிகுந்த மகிழ்ச்சியுற்றார். அவருக்கு உபசாரம் செய்யும்படி சீடர்களுக்குக் கட்டளையளித்தார். ஆசிரியர்களில் சிறந்த சங்கரரும் அவர் அளித்த ஆதரவைப் பெற்றுக்கொண்டார்.

उपात्तभिक्षः परितुष्टचित्तः प्रदर्शयामास स भाष्यमस्मै ।
सर्वो निबन्धो ह्यमलोऽपि लोके शिष्टेक्षितः संचरणं प्रयाति ॥ ௮௧

உபசாரத்தைப் பெற்றுக்கொண்டு மனமகிழ்ச்சியுற்று ஸ்ரீசங்கரர் பிரம்ம ஸூத்திரபாஷ்யத்தை அந்தக் குமரிலருக்குக் காண்பித்தார். குற்றமற்றதாயினும் எத்தகைய நூலும் சான்றோரால் சோதிக்கப்பட்டால் பிரசாரத்தையடைகின்றது.

दृष्ट्वा भाष्यं हृष्टचेताः कुमारः प्रोचे वाचं शङ्करं देशिकेन्द्रम् ।
लोके त्वल्पो मत्सरग्रामशाली सर्वज्ञानो नाल्पभावस्य पात्रम् ॥ ௮௨

பாஷ்யத்தைப் பார்த்து சந்தோஷமுற்ற மனதுடன் குமரிலர், சிறந்த ஆசிரியராகிய சங்கரரிடம் கூறினர். பகவானே! உலகில் அற்பன், பொறுமை முதலிய தீயகுணங்கள் நிரம்பியவனக இருக்கின்றான். எல்லாமறிந்தவன் அற்பத்தன்மையற்றவனகவே விளங்குகின்றான்.

अष्टौ सहस्राणि विभान्ति विद्वन् सद्वार्तिकानां प्रथमेऽत्र भाष्ये ।
अहं यदि स्यामगृहीतदीक्षो ध्रुवं विधास्ये सुनिबन्धमस्य ॥ ८३

அறிஞரே! தங்களுடைய இந்த நூலில் முதல் பாஷ்யத்திற்கு (முகவுரையாகிய அத்யாஸபாஷ்யத்திற்கு) மட்டும் எண்ணாயிரம் இனிய செய்யுட்களால் வியாக்கியானம் செய்தலுக்குத் தகுதியுண்டு. இப்பொழுது யான் இந்த தீக்ஷையை (உயிரை தியாகம் செய்தலாகிய விரதத்தை) ஏற்றுக் கொள்ளாவிடில் கட்டாயமாக இதற்கு நல்ல உரை இயற்றியிருப்பேன்.

भवादृशां दर्शनमेव लोके विशेषतोऽस्मिन् समये दुरापम् ।
पुराऽऽर्जितैः पुण्यचयैः कथंचित्त्वमद्य मे दृष्टिपथं गतोऽभूः ॥ ८४

தங்களைப்போன்றவர்களுடைய தர்சனம் கிடைப்பது அரிது. விசேஷமாக இத்தருணத்தில் மிகவுமரிது. எனது முன் ஜன்மங்களின் எண்ணில்லாப் புண்யக்குவியலால், எவ்விதத்திலோ தாங்கள் எனது கண்களுக்குப் புலப்பட்டுள்ளீர்.

असारसंसारपयोब्धिमध्ये निमज्जतां सद्भिरुदारवृत्तैः ।
भवादृशैः संगतिरेव साध्या नान्यस्तदुत्तारविधावुपायः ॥ ८५

எல்லையில்லா ஸம்ஸாரக்கடலில் உழலுகின்றவர்களுக்கு அதனைத் தாண்டுவதன்பொருட்டு உதாரகுணமுள்ள தங்களைப்போன்றவர்களுடைய ஸகவாஸந்தான் சம்பாதிக்கத்தக்கது. அதைக்காட்டிலும் வேறு மார்க்கம் இல்லை.

चिरं दिदृक्षे भगवन्तमित्थं त्वमद्य मे दृष्टिपथं गतोऽभूः ।
नह्यत्र संसारपथे नराणां स्वेच्छाविधेयोऽभिमतेन योगः ॥ ८६

வெகுகாலமாகத் தங்களைப் பார்க்கவேண்டுமென்று விரும்புகின்றேன். இன்றுதான் என் கண்ணுக்கெதிரில் தோன்றியுள்ளீர். (இன்றுவது எனக்கு தர்சனம் கிடைத்ததன்றோ!) இந்த ஸம்ஸாரநெறியிலிருக்கின்ற மனிதர்களுக்கு விரும்பிய பொருளின் லாபம் தமது இஷ்டம்போல் ஏற்படாதன்றோ!

युनक्ति कालः क्वचिदिष्टवस्तुना क्वचित्त्वरिष्टेन च नीचवस्तुना ।
तथैव संयोज्य वियोजयत्यसौ सुखासुखे कालकृते प्रवेश्यतः ॥ ८७

காலம், சிற்சில ஸந்தர்ப்பத்தில் விரும்பிய பொருளேயும், விருப்பமில்லாத அற்பப்பொருளேயும் சேர்க்கவும் பிரிக்கவும் செய்கின்றது. ஆகையால் சுகதுக்கங்கள் காலத்தினுல் ஏற்படுகின்றவை என்றறிகின்றேன்.

कृतो निबन्धो निरणायि पन्था निरासि नैयायिकयुक्तिजालम् ।
तथाऽन्वभूवं विषयोत्थजातं न कालमेनं परिहर्तुमीशे ॥ ८८

வேதங்களின் பாதுகாப்பிற்காக தக்க நூல்கள் இயற்றப்பட்டு ஆஸ்திகமார்க்கம் சீர்திருத்தி நிலைநாட்டப்பட்டது. நையாயிகர்களுடைய யுக்திவாதங்கள் யாவும் கண்டிக்கப்பட்டன. விஷயசுகங்களும் நன்கு அனுபவிக்கப்பட்டன. ஆயினும், இந்தக்காலத்தைத் தடுக்க வல்லேனல்லன்.

இவ்வாறு உமித்தீயில் உயிர் துறப்பதற்குள்ள காரணத்தைக் கூறுகின்றார்:-

निरास्थमीशं श्रुतिलोकसिद्धं श्रुतेः स्वतोमात्वमुदाहरिष्यन् ।
न निह्नुवे येन विना प्रपञ्चः सौख्याय कल्पेत न जातु विद्वन् ॥ ८९

''ईशानो भूतभव्यस्य'' என்று முதலிய வேதவசனங்களாலும், யுக்திகளாலும் ஈசுவரன் உள்ளார் என்று தீர்மானம் செய்யப்பட்ட கொள்கையை நிராகரித்தேன். மறைகள் இறைவனால் இயற்றப்பட்டவைகளல்ல. ஸ்வயமாகவே தோன்றியவை என்ற கொள்கையைப் பின்பற்றி வேதங்கள் ஸ்வயமாகவே பிரமாணங்கள் என்ற சித்தாந்தத்தை நிலைநிறுத்துவதற்காக ஈசுவரவாதத்தை நிராகரித்தேன். யார் இல்லாவிடில் உலகம் உய்யாதோ அத்தகைய ஈசுவரன் இல்லை என்று கூறுதல் என்னுடைய உண்மையான கருத்தல்ல. ஆயினும் இவ்வாறு கூறவேண்டியதாக நேர்ந்தது. (இது ஒரு பாபம்.) மேலும்,

तथागताक्रान्तमभूदशेषं स वैदिकोऽध्वा विरलीबभूव ।
परीक्ष्य तेषां विजयाय मार्गं प्रावर्तिषि त्रातुमनाः पुराणम् ॥ ९०

வேதவிரோதமாகிய மதத்தினவரான பௌத்தர்களால் வேதமார்க்கம் நாசமுற்றதையறிந்து அநாதிகாலத்திலிருந்தே உள்ள அந்த நெறியைக் காப்பாற்றுவதற்காக பௌத்தர்களை வெல்லுவதற்கு முயன்றேன்.

सशिष्यसङ्घाः प्रविशन्ति राज्ञां गेहं तदादि स्ववशे विधातुम् ।
राजा मदीयोऽजिरमस्मदीयं तदाद्रियध्वं न तु वेदमार्गम् ॥ ९१

वेदोऽप्रमाणं बहुमानबाधात् परस्परव्याहतवाचकत्वात् ।
एवं वदन्तो विचरन्ति लोके न काचिदेषां प्रतिपत्तिरासीत् ॥ ९२

பௌத்தர்கள் சீடர்களின் கூட்டங்களுடன் அரசனுடைய அறையில் புகுந்து அரசன் அரண்மனை முதலிய எல்லாவற்றையும் தமது கைவசம் செய்துகொள்ளுவதற்கு, ''அரசன் எங்களைச் சேர்ந்தவன். தேசம் எம்முடையது. எமது மதத்தைப் பின்பற்றுங்கள், வேதநெறியை ஆதரிக்காதீர்கள். ஒன்றுக்கொன்று முரணாகக்கூறுவதினாலும் பிரத்யக்ஷம் முதலிய மற்ற பிரமாணங்களுக்கு விரோதமாகக் கூறுவதினாலும் வேதம் பிரமாணமன்று'' என்று கோஷமிட்டனர். இதற்குப் பரிகாரம் ஒன்றும் ஏற்படவில்லை.

अवादिषं वेदविघातदक्षैस्तन्नाशकं जेतुमबुध्यमानः ।
तदीयसिद्धान्तरहस्यवार्धीन्निषेध्यबोधाद्धि निषेध्यबाधः ॥ ९३

வேதங்களுக்கு எதிரிகளாகிய அவர்களுடன் வாதித்தேன். ஆயினும் அவர்களுடைய சித்தாந்தங்களெல்லாவற்றையும் அறிந்துகொள்ளாமையால்

அவர்களுடைய மதத்தை நிராகரிக்க வன்மையில்லாதவனுக இருந்தேன். நிராகரிக்கவேண்டிய கொள்கையை நன்கு கற்றுணர்ந்தால்தான் நிராகரிக்க முடியும்.

तदा तदीयं शरणं प्रपन्नः सिद्धान्तमश्रौषमनुद्धतात्मा ।
अदूदुषद्वैदिकमेव मार्गं तथागतो जातु कुशाग्रबुद्धिः ॥ ९४

அப்பொழுது அவர்களுடைய இல்லத்தில் புகுந்து பணிவுடன் அவர்களுடைய கொள்கையைக் கேட்டுக் கற்றுணர்ந்தேன். தர்ப்பையின் நுனிபோல் கூர்மையான புத்தியுள்ள பௌத்தன் வைதிகமார்க்கத்தை தூஷணம் செய்தான்.

तदाऽपतन्मे सहसाऽश्रुबिन्दुस्तच्चाविदुः पार्श्वनिवासिनोऽन्ये ।
तदाप्रभृत्येव विवेश शङ्का मय्याप्तभावं परिहृत्य तेषाम् ॥ ९५

அப்பொழுது திடீரென என் கண்களிலிருந்து கண்ணீர் விழுந்தது. அண்மையிலிருந்தவர்கள் அதையறிந்துகொண்டனர். அன்றுமுதல் அவர்களுக்கு நம்பிக்கை நீங்கி என்னிடம் ஸந்தேகம் நிலவியது.

विपक्षपाठी बलवान् द्विजातिः प्रत्याददद्दर्शनमस्मदीयम् ।
उच्चाटनीयः कथमप्युपायैर्नैतादृशः स्थापयितुं हि योग्यः ॥ ९६

இவன் நமக்கு எதிர்வாதம் கூறுவதில் திறமைவாய்ந்த அந்தணன். நமது இல்லத்தில் புகுந்து நம்முடைய கொள்கையைக் கற்கிருன். எவ்வித தந்திரங்களாலும் இவனை இங்கிருந்து தள்ள வேண்டும். இத்தகையவன் இவ்விடம் வைத்துக்கொள்ளத்தக்கவனல்லன்.

संमन्त्र्य चेत्थं कृतनिश्चयास्ते ये चापरेऽहिंसनवादशीलाः ।
न्यपातयन्नुच्चतरात् प्रमत्तं मामग्रसौधाद्विनिपातभीरुम् ॥ ९७

இவ்வாறு கலந்து யோசனை செய்து தீர்மானத்திற்கு வந்த அந்த பௌத்தர்கள் உயரமான மாடியிலிருந்து என்னை கீழே தள்ளினர். நான் வீழ்ச்சிக்கு அஞ்சினேன்.

(''अहिंसनवादशीलाः'' என்று பௌத்தர்களுக்கு பெயருரிச்சொல் கூறியுள்ளார். அந்தச் சொல்லினுல், அஹிம்ஸாதர்மத்தை மேடைமேலேறி பிரஸங்கம் செய்கின்றவர்களேயன்றி செயலில் சிறிதேனும் சம்பந்தப்படாதவர்கள் என்பதைச் சுட்டிக்காட்டுகின்ருர்.)

पतन् पतन् सौधतलान्यरोहं यदि प्रमाणं श्रुतयो भवन्ति ।
जीवेयमस्मिन् पतितोऽसमस्थले मज्जीवने तच्छ्रुतिमानता गतिः ॥ ९८

பலதடவை பௌத்தர்களால் தள்ளப்பட்ட யான் உயிருக்கு அஞ்சியவனுக ''வேதங்கள் பிரமாணமேயாகில், உயரமான மாடியிலிருந்து விஷமமான (மிகவும் கீழேயுள்ள) இடத்தில் வீழுகின்ற யான் உய்வேன்'' என்று கூறிக்கொண்டு அபாயம் நேராமலே விழுந்து பிறகும் மாடிமேலேறினேன். உயிர்

நீங்காமல் என்னுடைய நிலைத்த வாழ்விற்குக் காரணம் வேதங்களில் நம்பிக்கையேயாகும்.

यदीह सन्देहपदप्रयोगाद्व्याजेन शास्त्रश्रवणाच्च हेतोः ।
ममोच्चदेशात्पततो व्यनंक्षीत्तदेकचक्षुर्विधिकल्पना सा ॥ ९९

'வேதங்கள் பிரமாணமேயாகில்' என்று ஸந்தேகத்தைக் கூறும் சொல்லாகிய 'यदि' என்பதை உபயோகம் செய்ததாலும், கபடமாக நூலைக் கற்றுக்கொண்டதாலும், உயரமானவிடத்திலிருந்து வீழ்ந்ததாலும் என்னுடைய ஒரு கண் நாசமுற்றது. அது விதியின் பயனன்றோ!

एकाक्षरस्यापि गुरुः प्रदाता शास्त्रोपदेष्टा किमु भाषणीयम् ।
अहं हि सर्वज्ञगुरोरधीत्य प्रत्यादिशे तेन गुरोर्महागः ॥ १००

ஒரு எழுத்தைக் கற்பித்தவர்கூட குருவேயாவார். (அவருக்கு மரியாதை செய்யவேண்டும். துரோகம் செய்தல் கூடாது.) அப்படியிருக்கையில் ஒரு நூலைக் கற்பித்தவரைப்பற்றிக் கூறவேண்டுமா? யான் ஸர்வக்ஞனுகிய (பௌத்தாசாரிய) குருவினிடமிருந்து கற்றுக்கொண்ட கொள்கையை நிராகரித்துள்ளேன். ஆகையால் குருவிற்கு மாபெரும் குற்றத்தைச் செய்தவன்.

तदेवमित्थं सुगतादधीत्य प्राघातयं तत्कुलमेव पूर्वम् ।
जैमिन्युपज्ञेऽभिनिविष्टचेताः शास्त्रे निरास्थं परमेश्वरं च ॥ १०१

ஆகையால், இவ்வாறு ஸுகதரிடமிருந்து அவருடைய கொள்கையைக் கற்றுக்கொண்டு, அந்த மதத்தினவரையே முன்பு கொல்லச்செய்தேன். ஜைமினிமுனிவரை மூலகாரணமாகக்கொண்ட பூர்வமீமாம்ஸா சாஸ்திரத்தில் மனப்பற்றுகொண்டு ''பரமேசுவரன் இல்லை'' என்று நிராகரித்து நிர்ணயம் செய்தேன்.

दोषद्वयस्यास्य चिकीर्षुरर्हन् यथोदितां निष्कृतिमाश्रयाशम् ।
प्राविक्षमेषा पुनरुक्तभूता जाता भवत्पादनिरीक्षणेन ॥ १०२

பூஜிக்கத்தக்கவரே! மேற்கூறிய இரண்டு தோஷங்களுக்கும் (பாபங்களுக்கும்) பரிகாரத்தைச் செய்துகொள்ள விரும்பியவனுக யான் முறைப்படி இந்த அக்னியில் புகுந்தேன். என்னுடைய இந்த பிராயச்சித்தம் தங்களுடைய பாதகமலங்களின் தர்சனம் கிட்டியதால் இரட்டிப்பாயிற்று. (இது என்னுடைய பாக்கியமேயாகும். ''आश्रयाशम्'' என்று அக்னிக்கு பெயருரிச்சொல் கூறியுள்ளார். ''தான் கைப்பற்றிய பொருளைச் சாப்பிடுகிறவன்'' என்று அந்தச் சொல்லின் அவயவார்த்தம். தான் கைக்கொண்ட கொள்கையை கொலைசெய்த பாபத்திற்கு அத்தகைய குணமுள்ள அக்னியில் உயிர் நீக்குவதுதான் தகுந்த பிராயச்சித்தம் என்று உறுதிகொண்டார் போலும்.)

भाष्यं प्रणीतं भवतेति योगिन्नाकर्ण्य तत्रापि विधाय वृत्तिम् ।
यशोऽधिगच्छेयमिति स्म वाञ्च्छा स्थिता पुरा सम्प्रति किं तदुक्त्या ॥ १०३

யோகியே! தங்களால் பிரம்மஸூத்திரபாஷ்யமியற்றப்பட்டுள்ளது என்று கேள்வியுற்ற நான் அதற்கும் ஒரு வியாக்கியானம் இயற்றிப் புகழ்பெற வேண்டுமென்று விருப்பங்கொண்டிருந்தேன். இப்பொழுது அதனைக் கூறி என்ன பயன்?

जाने भवन्तमहमार्यजनार्थजातमद्वैतरक्षणकृते विहितावतारम् ।
प्रागेव चेन्नयनवर्त्म कृतार्थयथाः पापक्षयाय न तदेदृशमाचरिष्यम् ॥ १०४

அத்வைதமதத்தை நிலைநிறுத்தி சான்றோர்களுக்கு பரமபுருஷார்த்தமாகிய முக்தியையளிப்பதற்கும், ஆஸ்திகர்களுடைய மேன்மையனைவற்றிற்கும் காரணமாகிய இத்தகைய உடலை உட்கொண்டு அவதரித்த பரமேசுவரர் தாம் என்று யான் அறிவேன். இதற்கு முன்னமேயே தாம் எனக்கு தர்சனமளித்து என்னுடைய கண்களை பயனுற்றவைகளாகச் செய்திருந்தால், பாபத்தைத் தொலைக்க இத்தகைய பிராயச்சித்தத்தைச் செய்திருக்கமாட்டேன். (தங்களுடைய தரிசனத்தைக்காட்டிலும் சிறந்த பிராயச்சித்தம் யாதுள்ளது?)

प्रायोऽधुना तदुभयप्रभवाघशान्त्यै प्राविक्षमार्य तुषपावकमात्तदीक्षः ।
भाग्यं न मऽजनि हि शाबरभाष्यवत्त्वद्भाष्येऽपि किंचन विलिख्य यशोऽधि-
गन्तुम् ॥ १०५

ஸ்வாமி! அந்த இரண்டு செயல்களால் நேர்ந்த பாபத்தின் நாசத்திற்காக விரதம் ஏற்று இப்பொழுது உமித்தீயில் புகுந்துள்ளேன். சாபரபாஷ்யத்திற்கு வார்த்திகம் (செய்யுள் உருவத்தில் வியாக்கியானம்) இயற்றியதுபோல் தங்களுடைய பாஷ்யத்திற்கும் அவ்வாறு இயற்றி புகழ்பெறுவதற்கு எனக்கு பாக்கியமில்லாமல் ஆகிவிட்டது.

इत्यूचिवांसमथ भट्टकुमारिलं तमीषद्विकस्वरमुखाम्बुजमाह मौनी ।
श्रुत्यर्थकर्मविमुखान् सुगतान्निहन्तुं जातं गुहं भुवि भवन्तमहन्तु जाने ॥ १०६

இவ்வாறு கூறிப் புன்முறுவல் பூத்த முகமுடையவராகிய குமாரிலரை நோக்கி முனிவராகிய ஸ்ரீசங்கரர் கூறினார்:- ''மறைகளின் பொருள்களுக்கு மாறான கொள்கையைக் கூறும் ஸௌகதர்களை மறுக்க மண்ணுலகில் மானிடவடிவம் பெற்ற முருகன் நீ என்று யான் அறிவேன்.

संभावनाऽपि भवतो न हि पातकस्य सत्यं व्रतं चरसि सज्जनशिक्षणाय ।
उज्जीवयामि करकाम्बुकणोक्षणेन भाष्येऽपि मे रचय वार्तिकमङ्ग भव्यम् ॥ १०७

உன்னிடம் பாபம் ஏற்படுமா என்று ஸந்தேகத்திற்குக் கூட இடமில்லை. ஆயினும், ஸாதுக்களுக்கு ஸன்மார்க்கத்தை உணர்த்துவதற்காக இந்த விரதத்தை கைக்கொண்டுள்ளாய். ''உத்தமனே! கமண்டலத்திலுள்ள தண்ணீரைத் தெளித்து உன்னை உய்விக்கின்றேன். என்னுடைய பாஷ்யத்திற்கும் உயர்ந்த உரை இயற்றுவாயாக'' (என்று கூறினார்).

इत्यूचिवांसं विबुधावतंसं स धर्मविद्ब्रह्मविदां वरेण्यम् ।
विद्याधनः शान्तिधनाग्रगण्यं सप्रश्रयं वाचमुवाच भूयः ॥ १०८

அறிஞர்களுக்கணியும், பிரம்மஞானிகளில் பெரியாரும், சாந்த குணத்தையே செல்வமாகக்கொண்டவர்களின் முன்னணியில் விளங்குகின்ற வருமாகிய அந்தப் பரமஹம்ஸர் இவ்வாறு கூறியதைக் கேட்டு அறநெறியிலாற்றலுள்ளவரும், கல்விச்செல்வவானுமாகிய அவர் (குமரிலர்) பணிவுடன் பிறகும் கூறினூர்.

नार्हामि शुद्धमपि लोकविरुद्धकृत्यं कर्तुं मयीड्य महितोक्तिरियं तवार्हा ।
आजानतोऽतिकुटिलेऽपि जने महान्तस्त्वारोपयन्ति हि गुणं धनुषीव शूराः ॥१०९

புகழத்தக்கவரே! தூயதாயினும் உலகத்திற்கு விரோதமாகிய காரியத்தை கைக்கொள்ள யான் தகுதியுள்ளவனல்லன். என் விஷயத்தில் தங்களால் கூறப்பட்ட மகிழத்தக்க இந்தச் சொல் தங்களுக்குத் தகுதியுள்ளதேயாகும். கோணலான வில்லில் வீரர்கள் குணத்தை = நாணை ஏற்றுவது போல், சான்றோர்கள் இயற்கையில் கோணலான பொருளிலும் (குறையுள்ள பதார்த்தத்திலும்) குணத்தையே (செம்மையையே) ஏற்றிக் கூறுகிறூர்கள்.

संजीवनाय चिरकालमृतस्य च त्वं शक्तोऽसि शङ्करादयोर्मिलद्दृष्टिपातैः ।
आरब्धमेतदधुना व्रतमागमोक्तं मुञ्चन् सतां न भविताऽस्मि बुधाविनिन्द्यः॥ ११०

சங்கரரே! அறிஞரே! உயிரிழந்து வெகுநேரமான பிறகுகூட ஒருவனைத் தாங்கள் கருணை நிரம்பிய கடைக்கண் பார்வைகளால் பிராணனையளித்து உய்விக்க வல்லமையுள்ளவர்களாக இருக்கிறீர்கள். ஆனூல், வேதங்களில் கூறியுள்ள இந்த விரதத்தை ஆரம்பம் செய்து பூர்த்தியாவதற்கு முன் மத்தியில் கைவிட்டால் அறிஞர்களாகிய சான்றோர்களுடைய நிந்தைக்கு உட்படுவேனன்றூ! அதனை யான் விரும்பவில்லை.

जाने तवाहं भगवन् प्रभावं संहृत्य भूतानि पुनर्यथावत् ।
स्रष्टुं समर्थोऽसि तथाविधो मामुज्जीवयेश्चेदिह किं विचित्रम् ॥ १११

பகவானே! நான் தங்களுடைய மகிமையை அறிவேன். ஸம்ஹாரம் செய்து மறுபடியும் உலகமனைத்தையும் சிருஷ்டிசெய்ய வன்மையுள்ள தாங்கள் என்னை உய்விப்பதில் என்ன வியப்புள்ளது.

नाभ्युत्सहे किन्तु यतिक्षितीन्द्र सङ्कल्पितं हातुमिदं व्रताग्र्यम् ।
तत्तारकं देशिकवर्य मह्यमादिश्य तद्ब्रह्म कृतार्थयेथाः ॥ ११२

துறவிகளுக்கரசே! ஆனூல், உறுதிகொண்ட இந்த சிறந்த விரதத்தை கைவிடுவதற்கு யான் விரும்புகிறேனில்லை. ஆகையால், தாரகமந்திரத்தை உபதேசஞ்செய்து என்னை கிருதார்த்தனுக செய்வீர்களாக.

அத்வைதவித்தையை பிரசாரஞ்செய்ய விருப்பமுற்றுத் தன்னை வாதத்தில் வெல்லவந்துள்ளார் ஸ்ரீசங்கரர், என்று உள்ளத்தில் உணர்ந்து அதற்கு வழி கூறுகிறூர்:-

अयं च पन्था यदि ते प्रकाश्यः सुधीश्वरो मण्डनमिश्रशर्मा ।
दिगन्तविश्रान्तयशा विजेयो यस्मिञ्जिते सर्वमिदं जितं स्यात् ॥ ११३

பகவானே! தங்களுடைய இந்த ஞானமார்க்கம் உலகில் பிரசித்தி பெற வேணுமாகில், புத்திசாலிகளில் முதல்வனுகிய ''மண்டனமிச்ரர்'' என்ற சிறந்த அறிஞர் ஜயிக்கப்படவேண்டும். எல்லா திசைகளிலும் பரவிய புகழ்பெற்ற அவர் வெல்லப்பட்டாராயின் மற்ற மதங்கள் யாவும் தங்களால் வெல்லப்பட்டனவையேயாகும்.

सदा वदन् योगपदं च साम्प्रतं स विश्वरूपः प्रथितो महीतले ।
महागृही वैदिककर्मतत्परः प्रवृत्तिशास्त्रे निरतः सुकर्मठः ॥ ११४

எப்பொழுதும் கர்மமார்க்கத்தையே புகழ்கின்ற அவர் இப்பொழுது இவ்வுலகில் விசுவரூபர் என்று பிரசித்திபெற்றுள்ளார். அவர் சிறந்த இல்லறத்தினவர். வேதங்களில் கூறும் வேள்விகளைச் செய்வதில் மிகுந்த ஊக்கங்கொண்டு பிரவிருத்திமார்க்கத்திலேயே ஆழ்ந்த சிரத்தையுள்ளவர்.

निवृत्तिशास्त्रे नकृतादरः स्वयं केनाप्युपायेन वशं स नीयताम् ।
वशं गते तत्र भवेन्मनोरथस्तदन्तिकं गच्छतु मा चिरं भवान् ॥ ११५

இயற்கையாகவே நிவிருத்திமார்க்கத்தில் ஆதரவில்லாத அவர் எவ்வித உபாயத்தினுலாவது சுவாதீனம் செய்யப்படவேண்டும். அவ்வாறு அவர் சுவாதீனம் செய்யப்பட்டால் தங்களுடைய விருப்பம் பயன்படும். ஆகையால், தாமதமின்றி அங்கு செல்லுங்கள்.

उंवेक इत्यभिहितस्य हि तस्य लोकैरुवेति बान्धवजनैरभिधीयमाना ।
हेतोः कुतश्चिदिह वाक्सुरुषाऽभिशप्ता दुर्वाससाऽजनि वधूर्द्वयभारतीति ॥ ११६

'உம்வேகர்' என்று உலகத்தோர்களால் வேறு பெயரினுல் கூப்பிடப்படுகின்ற அவருடைய இல்லாள் பந்துஜனங்களால் 'உம்வை' என்று விளிக்கப்படுகிருள். அவள் யாதோ ஒரு காரணத்தினுல் முனிந்த துர்வாசமுனிவரால் சாபமளிக்கப்பெற்ற ஸரஸ்வதீதேவியே அந்த உருவத்தில் தோன்றியவளாவாள்.

सर्वासु शास्त्रसरणीषु स विश्वरूपो मत्तोऽधिकः प्रियतमश्च मदाश्रवेषु ।
तत्प्रेयसीं शमधनेन्द्र विधाय साक्ष्ये वादे विजित्य तमिमं वशगं विधेहि ॥ ११७

அந்த விசுவரூபர் எல்லாசாஸ்திரங்களிலும் என்னைக்காட்டிலும் மிகுந்த வல்லமை வாய்ந்தவர். சாந்தகுணச்செல்வம் நிரம்பியவரே! அவருடைய மனையாளை ஸாக்ஷியாக நியமித்து வாதத்தில் வென்று அவரை சுவாதீனம் செய்யுங்கள்.

तेनैव तावककृतिष्वपि वार्तिकानि कर्मन्दिवर्यतम कारय मा विलम्बम् ।
त्वं विश्वनाथ इव मे समये समागास्तत्तारकं समुपदिश्य कृतार्थयेथः ॥ ११८

யதிசிரேஷ்டரே! அவரைக்கொண்டே தங்களுடைய பாஷ்யங்களுக்கு வார்த்திகத்தை இயற்றச் செய்வீர்களாக. தாமதம் செய்யவேண்டாம். காசிவிசுவனுதர்போல் தக்க தருணத்தில் தாங்கள் தரிசனமளித்தீர்கள். ஆகையால்

தாரகபிரம்மத்தை எனக்கு உபதேசம் செய்து என்னை கிருதார்த்தனுகச் செய்வீர்களாக.

निर्व्याजकारुण्य मुहूर्तमात्रमत्र त्वया भाव्यमहं तु यावत् ।
योगीन्द्रहृत्पङ्कजभाग्यमेतत् त्यजाम्यसून् रूपमवेक्षमाणः ॥ ११९

வியாஜமற்ற (கபடமற்ற) கருணைக்கடலே! இங்கு ஒரு முகூர்த்தகாலம் தங்குவீர்களாக. சிறந்த யோகிகளுக்கும்கூட பாக்யத்தினுல் கிடைக்கக்கூடிய தங்களுடைய உருவத்தை கண்ணுற்றுக்கொண்டு உயிர் நீக்குகின்றேன்.

इत्यूचिवांसमिममिद्धसुखप्रकाशं ब्रह्मोपदिश्य बहिरन्तरपास्तमोहम् ।
तन्वन्दयानिधिरसौ तरसाऽभ्रमार्गाच्छ्रीमण्डनस्य निलयं स इयेष गन्तुम् ॥ १२०

கருணைக்கடலாகிய குருநாதர், இவ்வாறு கூறிய அந்தக் குமரிலருக்கு ஸ்வயம்பிரகாசமாகிய பிரம்மவஸ்துவை உபதேசம் செய்து அகத்திலும் புறத்திலுமுள்ள இருளையகற்றி விரைவில் மண்டனமிச்ரருடைய மனைக்குச் செல்ல மனமுற்ருர்.

अथ गिरमुपसंहृत्यादराद्भट्टपादः शमधनपतिनासौ बोधिताद्वैततत्वः ।
प्रशमितममतः संस्तत्प्रसादेन सद्यो विदलदखिलबन्धो वैष्णवं धाम पेदे ॥ १२१

பிறகு, அந்த குமரிலபட்டபாதர் வசனத்தையொடுக்கி, யதிகளில் சிறந்தவரும் பரமாசாரியருமாகிய ஸ்ரீசங்கரகுருவினுல் உபதேசம் செய்யப்பட்ட அத்விதீயமான ஆத்மதத்வத்தையுணர்ந்தமையால் அகங்காரமமகாரங்களை விலக்கி பந்தமற்றவராக சீக்கிரத்தில் சிறந்த வைகுண்டபதத்தை எய்தினுர்.

इति श्रीमाधवीये तद्व्यासंदर्शचित्रगः ।
संक्षेपशङ्करजये सर्गोऽसौ सप्तमोऽभवत् ॥ ७ ॥

இவ்வாறு ஸ்ரீமாதவாசாரியரியற்றிய சங்கரவிஜயச் சுருக்கத்தில்
அந்த சங்கரருக்கும் வியாஸமுனிவருக்குமுள்ள
தரிசனம் முதலிய விசேஷஸம்பவங்களைக்
கூறும் ஏழாவது ஸர்க்கம் முற்றிற்று.

आदितः श्लोकाः 784



# अथाष्टमः सर्गः

## எட்டாவது ஸர்க்கம்

### श्रीमदाचार्यमण्डनमिश्रसंवादः

### ஸ்ரீசங்கராசாரியருடையவும் மண்டனமிச்ர ருடையவும் ஸம்வாதம்

अथ प्रतस्थे भगवान् प्रयागात्तं मण्डनं पण्डितमाशु जेतुम् ।
गच्छन् खसृत्या पुरमालुलोके माहिष्मतीं मण्डनमण्डितां सः ॥ १

பிறகு, பகவானாகிய ஸ்ரீசங்கரர் வித்வானாகிய மண்டனரை வாதத்தில் வெல்லுவதற்காக ஆகாயநெறியாகச் சென்று மண்டனமிச்ரரால் அழகுவாய்ந்ததாகச் செய்யப்பட்ட மாகிஷ்மதி என்ற நகரத்தைக் கண்ணுற்ருர்.

अवातरद्रत्नविचित्रवप्रां विलोक्य तां विस्मितमानसोऽसौ ।
पुराणवत्पुष्करवर्तनीतः पुरोपकण्ठस्थवने मनोज्ञे ॥ २

இரத்தினமயமான மதில்சுவரினுல் ஆச்சரியமான அந்த நகரத்தைக் கண்ணுற்று வியப்புற்றவராகி புராணபுருஷனுகிய விஷ்ணுபோல் ஆகாயநெறியாகச் சென்று பட்டணத்தினருகாமையிலமைந்த அழகிய நந்தவனத்தில் இறங்கினுர்.

(புராணபுருஷன்போல் என்பதற்கு, திருமாலின் அவதாரமாகிய பரசுராமர் முன்காலத்தில் மாகிஷ்மதிநகரத்தில் அரசுபுரிந்த கார்த்தவீரியார்ஜுனனே ஜெயிப்பதற்காகச் சென்று வெற்றியடைந்ததுபோல், புராணராகிய பரமேசுவரருடைய அவதாரமாகிய ஸ்ரீசங்கராசாரியரும் மண்டனருடன் வாதஞ்செய்து வெற்றிபெறுதல் திண்ணம் என்று கருத்து.)

प्रफुल्लराजीववने विहारी तरङ्गरिङ्गत्कणशीकरार्द्रः ।
रेवामरुत्कम्पितसालमालः श्रमापहृद् भाष्यकृतं सिषेवे ॥ ३

மலர்ந்த தாமரைமலர்களில் ஸஞ்சாரம் செய்கின்றதும், அலைகளால் அசைகின்ற நீர்துளிகளால் குளிர்ச்சிபெற்றதும், ஸாலமரங்களின் கூட்டங்களை அசையச்செய்கின்றதுமாகிய ரேவாநதியின் காற்று, பாஷ்யத்தை இயற்றியப் பரமாசாரியருடைய களைப்பையகற்றி உபசரித்தது.

तस्मिन् स विश्रम्य कृताह्निकः सन् खस्वस्तिकारोहणशालिनीने ।
गच्छन्नसौ मण्डनपण्डितौको दासीस्तदीयाः स ददर्श मार्गे ॥ ४

அந்த நந்தவனத்தில் களைப்பாறி சூரியன் ஆகாயத்தின் மத்தியில் விளங்குகையில் தன்னுடைய கடமைகளை முறைப்படி முடித்துக்கொண்டு மண்டனபண்டிதருடைய கிருகத்திற்குப் புறப்படுகையில் வழியில் அவருடைய வீட்டுவேலைக்காரிகளைக் கண்டார்.

कुत्रालयो मण्डनपण्डितस्येत्येताः स पप्रच्छ जलाय गन्त्रीः ।
ताश्चापि दृष्ट्वाऽद्भुतशङ्करं तं सन्तोषवत्यो ददुरुत्तरं स्म ॥ ५

தண்ணீருக்காகச் செல்லுகின்ற அவர்களிடம் ''மண்டனபண்டிதருடைய மனை எங்குள்ளது'' என்று வினவினார். அவர்களும் அற்புதமான தோற்றத்தையளிக்கின்ற அவருக்கு சந்தோஷத்துடன் விடையளித்தனர்.

स्वतःप्रमाणं परतः प्रमाणं कीराङ्गना यत्र गिरं गिरन्ति ।
द्वारस्थनीडान्तरसंनिरुद्धा जानीहि तन्मण्डनरपण्डितौकः ॥ ६

फलप्रदं कर्म फलप्रदोऽजः कीराङ्गना यत्र गिरं गिरन्ति ।
द्वारस्थनीडान्तरसंनिरुद्धा जानीहि तन्मण्डनपण्डितौकः ॥ ७

जगद् ध्रुवं स्याज्जगदध्रुवं स्यात्कीराङ्गना यत्र गिरं गिरन्ति ।
द्वारस्थनीडान्तरसंनिरुद्धा जानीहि तन्मण्डनपण्डितौकः ॥ ८

பகவானே! வேதங்கள் ஸ்வயமாகப் பிரமாணங்கள் இல்லை. பரனான பரமாத்மனால் உச்சாரணம் செய்யப்பட்டமையால்தான் பிரமாணம் என்றும், நல்வினைத் தீவினைகள் பயனளிக்கின்றவை என்றும், ஈசுவரன் பயனளிக்கின்றவன் வினைகளல்ல என்றும், உலகம் நித்யம் என்றும், நித்யமில்லை அநித்யம் என்றும் ஆகிய விஷயங்களைப்பற்றி வெளிவாயிலில் தொங்குகின்ற கூண்டுகளில் இருக்கும் பெண்கிளிகள் எந்தவிடத்தில் சர்ச்சைசெய்கின்றனவோ, அதுதான் மண்டனபண்டிதருடைய மனை என்று அறிந்துகொள்வீராக.

पीत्वा तदुक्तीरथ तस्य गेहाद्गत्वा बहिः सद्म कवाटगुप्तम् ।
दुर्वेशमालोच्य स योगशक्त्या व्योमाध्वनाऽवातरदङ्गणान्तः ॥ ९

அவர்களுடைய அந்த வசனத்தை உவகையுடனும் வியப்புடனும் கேட்டு, அவ்விடம் சென்று, அந்த இல்லத்தின் வெளிவாயில் கதவு மூடியிருப்பதைக்கண்டு அந்த வழியாகப் புகமுடியாது என்றறிந்து, அந்த யோகீந்திரர் யோகசக்தியினால் ஆகாயமார்க்கமாகக் குதித்து இல்லத்திற்குள் இறங்கினார்.

तदा स लेखेन्द्रनिकेतनाभं स्फुरन्मरुच्चञ्चलकेतनाभम् ।
समग्रमालोकत मण्डनस्य निवेशनं भुतलमण्डनस्य ॥ १०

முனிசிரேஷ்டராகிய அந்த சங்கரர் பூமிக்கு அலங்காரமாக விளங்குகின்ற மண்டனருடைய மனையை முழுவதும் கண்ணுற்றார். அந்த மனை தேவேந்திரனுடைய கிருகத்திற்கு நிகராகவும், நன்கு விளங்குகின்றதும் காற்றினால் அசைகின்றதுமாகிய வெற்றிக்கொடியின் அழகுடன் கூடியதுமாக விளங்கியது.

(ஏழாவது ஸர்க்கத்தில் 114-வது சுலோகத்தில் குமரிலபட்டர் மண்டனரைப்பற்றிக் கூறுகையில் ''महागृही'' என்று கூறியுள்ளார். இல்லறத்தையேச் சிறந்ததாக மதிக்கின்றவர் என்று அதற்குப் பொருள் கூறப்பட்டது. பெரிய இல்லமுடையவர் என்றும் அதனுடைய பொருள். அதற்கேற்ப இந்தச் செய்யுளில் தேவேந்திரனுடைய கிருகத்திற்கு நிகரானது என்றும் பிரவிருத்திமார்க்கத்தை நிலைநாட்டியதற்கு அறிகுறியாக கொடி கட்டப்பட்டுள்ளது என்றும் மற்ெருரு விசேஷணத்திளுல் வெளியிட்டார். ஆளுல், பரமார்த்தத்தையுணர்ந்த பரமஹம்ஸபரிவ்ராஜகருடைய கருத்தின்படி அந்த விசேஷணத்தின் பொருள் மாறுபடுகின்றது. அதாவது, காற்று அடித்துக்கொண்டிருக்கையில் ஓய்வின்றி அசைந்துகொண்டிருக்கும் கொடிக்கு நிகரானது அந்த இல்லம். ஆகையால் நிலையற்றது என்று பொருள் கூறுதல் தகும்.)

सौधाग्रसंच्छन्ननभोवकाशं प्रविश्य तत्प्राप्य कवेः सकाशम् ।
विद्याविशेषात्तयशःप्रकाशं ददर्श तं पद्मजसन्निकाशम् ॥ ११

வானளாவி ஓங்கி உயர்ந்துள்ள மாடியின் சிகரத்துடன் கூடிய அந்த இல்லத்தில் புகுந்து, அறிஞராகிய அவருடைய அருகில் அணுகி கல்வித்திறமையினுல் நிலவிய புகழாகிய ஒளியுடன்கூடியவரும் மலர்மகனுகிய பிரம்மனுக்கு நிகரானவருமாகிய அந்த மண்டனரைக் கண்டார்.

तपोमहिम्नैव तपोनिधानं सजैमिनिं सत्यवतीतनूजम् ।
यथाविधि श्राद्धविधौ निमन्त्र्य तत्पादपद्मान्यवनेजयन्तम् ॥ १२

தனது தவத்தின் வன்மையினுல் ஜைமினிமுனிவரையும், வியாஸமுனிவரையும் முறைப்படி சிராத்தத்தில் வரவழைத்து அவர்களுடைய பாதங்களை சுத்தம் செய்கின்றவருமாகிய அவரைக் கண்டார்.

तत्रान्तरिक्षादवतीर्य योगिवर्यः समागम्य यथार्हमेषः ।
द्वैपायनं जैमिनिमप्युभाभ्यां ताभ्यां सहर्षं प्रतिनन्दितोऽभूत् ॥ १३

யோகிகளில் சிறந்தவராகிய ஸ்ரீ சங்கரர் ஆகாயமார்க்கமாக அந்த இல்லத்தில் இறங்கிப் புகுந்து தகுந்த மரியாதையுடன் வியாஸமுனிவரையும், ஜைமினி முனிவரையும் அணுகவும், அவர்களால் ஸந்தோஷத்துடன் ஆமோதிக்கவும் செய்யப்பெற்ருர்.

अथ द्युमार्गादवतीर्णमन्तिके मुन्योः स्थितं ज्ञानशिखोपवीतिनम् ॥
संन्यास्यसावित्यवगत्य सोऽभवत्प्रवृत्तिशास्त्रैकरतोऽपि कोपनः ॥ १४

பிறகு ஆகாயமார்க்கமாக இறங்கி இரு முனிவர்களுடைய அருகில் நின்றவரும், ஞானத்தையே சிகையாகவும் (கூந்தல்) யக்ஞோபவீதமாகவும் கொண்டவரும் (சிகையும் யக்ஞோபவீதமுமில்லாதவரும்) ஆகிய அவரை, 'இவர் ஸன்யாசி' என்று அறிந்து ப்ரவிருத்திமார்க்கத்தில் விசேஷ சிரத்தையுள்ளவராயினும் அந்த மண்டனபண்டிதர் சினமுற்ருர். (अपि என்ற சொல் செய்கையின் முரண்பாட்டைக் குறிக்கின்றது. अक्रोधनैः शौचपरैः सततं ब्रह्मचारिभिः । भवितव्यं भवद्भिश्च मया च श्राद्धकर्मणि ॥ என்று தர்மசாஸ்திரம் கூறுகின்றது. நீங்களும்,

யானும் கோபமற்றவர்களாகவும், சுத்தமுள்ளவர் களாகவும், எப்பொழுதும் பிரம்மசரியம் உள்ளவர்களாகவும் சிராத்தகர்மத்தில் இருக்கவேண்டும் என்று, சிராத்தம் செய்கின்றவர்களும் அந்தக் கர்மத்தில் உடன்பட்டவர்களும் செய்துகொள்ளுகிற ஒப்பந்தம் என்று மேற்கூறிய வசனத்தின் பொருள். இவ்வாறு இருந்தும் சினம் கொண்டது ஆச்சரியமான நிகழ்ச்சி.)

तदाऽतिरुष्टस्य गृहाश्रमेशितुर्यतीश्वरस्यापि कुतूहलंभृतः ।
क्रमात्किलैवं बुधशस्तयोस्तयोः प्रश्नोत्तराण्यासुरथोत्तरोत्तरम् ॥ १५

அறிஞர்களால் புகழப்பட்ட அவ்விருவர்களில் இல்லறத்தினவராகிய ஒருவர் மிகக் கோபமுடையவர். துறவிகளில் சிறந்த மற்றவர் மனதில் குதூஹலம் கொண்டவராகவிருந்தார். அத்தகைய அவ்விருவர்களுக்கும் அப்பொழுது இவ்வாறு வினவிடைகள் மேல் மேல் நிலவின.

कुतो मुण्ड्यागलान्मुण्डी पन्थास्ते पृच्छ्यते मया ।
किमाह पन्थास्त्वन्माता मुण्डेत्याह तथैव हि ॥ १६

மண்டனமிச்ரர்: - कुतो मुण्डी? மொட்டையன் எவ்வாறு (அல்லது) ஏன், எங்கிருந்து (வந்தீர்)?

कुतः என்ற சொல்லிற்கு எதுவரையில் என்ற பொருளைக்கொண்டு விடையளித்தார்.

ஸ்ரீசங்கரர்:- आगलान्मुण्डी கழுத்துவரையில் வபனம் செய்து கொண்டவன் (யான்).

மண்டனர்: - पन्थास्ते पृच्छ्यते मया = உமது வழி என்னால் கேட்கப்படுகிறது.

ஸ்ரீசங்கரர்: - किमाह पन्थाः = வழி என்ன (பதில்) கூறுகிறது?

மண்டனர்:- त्वन्माता मुण्डेत्याह = உமது தாய் முண்டை என்று, (மிகக் கோபத்துடன் கூறுகிறார்.)

ஸ்ரீசங்கரர் (புன்முறுவலுடன்): - तथैव हि = அது சரித்தான். (ஏனெனில்,)

पन्थानं त्वमपृच्छस्त्वां पन्थाः प्रत्याह मण्डन ।
त्वन्मातेत्यत्र शब्दोऽयं न मां ब्रूयादपृच्छकम् ॥ १७

மண்டனரே! நீர் வழியிடம் வினவினீர். வழி உமக்கு விடையளித்தது. அந்த வழி ''உன் தாயார்'' என்று உன்னைப் பார்த்துக் கூறுகையில், ''உன்'' என்ற சொல் வினவாத என்னைக் குறிக்காது. (உம்மைத்தான் குறிக்கும்.)

अहो पीता किमु सुरा नैव श्वेता यतः स्मर ।
किं त्वं जानासि तद्वर्णमहं वर्णं भवान् रसम् ॥ १८

(சினம் மீறியவராக)
மண்டனர்: - अहो पीता किमु सुरा = கஷ்டம்! கள் குடிக்கப்பட்டதா?

முகமலர்ச்சியுடன்
முனிசிரேஷ்டர்: - नैव, श्वेता यतः स्मर = இல்லை. கள் மஞ்சள் நிறமில்லை.

வெண்மை நிறம். ஏனெனில், யோசனை செய். (पीता என்ற சொல்லிற்கு மஞ்சள் நிறம் என்றும், पा = குடித்தல் என்ற பொருள்கொண்ட தாதுவிலிருந்து क्त प्रत्यय த்தில் குடிக்கப்பட்டது என்ற பொருளும் உண்டு.)

(சினம் சிறிதும் தணியாமலேயே) மண்டனர்: - किं त्वं जानासि तद्वर्णम् = அதன் நிறத்தை அறிவீரோ?

(முகமலர்ச்சி குன்றாமலேயே) யதீசுவரர்: - अहं वर्णं भवान् रसम् = யான் நிறத்தை அறிவேன். தாங்கள் சுவையறிவீர்கள்.

मत्तो जातः कलञ्जाशी विपरीतानि भाषते ।
सत्यं ब्रवीति पितृवत्त्वत्तो जातः कलञ्जभुक् ॥ १९

(மேலும் சீறிய சினத்துடன்)
மண்டனபண்டிதர்: - मत्तो जातः कलञ्जाशी विपरीतानि भाषते = கஞ்சாவைக்குடித்து மதம் பிடித்துத் தாறுமாறாகப் பேசுகிறார். (என்று முகத்தைச் சிணிக்கி மத்யமபுருஷனாக (முன்னிலையாக) கூறாமல் பிரதமபுருஷனாக (படர்க்கையாக) கூறுகிறார்.

(சிறிதேனும் முகமலர்ச்சி குறையாமல் பண்டிதருடைய சினத்தை சிதறவைக்க புன்முறுவலுடன்) முனிசிரேஷ்டர்: - सत्यं ब्रवीति पितृवत्त्वत्तो जातः कलञ्जभुक् = உண்மை கூறுகின்றீர். உம்மிடமிருந்து தோன்றிய புதல்வனும் தந்தையாகிய உம்மைப்போலவே கஞ்சாக் குடித்துத் தாறுமாறாகவே பேசுகிறான். (मत्तः = மதம் கொண்டவன், என்னிடமிருந்து என்று இரு பொருள் கொண்டமையால், இவ்வாறு வினாவிடைகள் நிலவியன.)

பிறகு மண்டனர் வியக்தியை விட்டு ஆச்ரமத்தைப் பின்பற்றி தூஷணை செய்யத் தொடங்கினார்:-

कन्थां वहसि दुर्बुद्धे गर्दभेनापि दुर्वहाम् ।
शिखायज्ञोपवीताभ्यां कस्ते भारो भविष्यति ॥ २०

துர்ப்புத்தியுள்ளவரே! கழுதைகூட சுமக்கப் பிரியப்படாத கந்தலைச் சுமக்கின்றீர். சிகையும் யக்ஞோபவீதமும் உமக்கு பாரமாகவிருந்ததா?

कन्थां वहामि दुर्बुद्धे तव पित्रापि दुर्वहाम् ।
शिखायज्ञोपवीताभ्यां श्रुतेर्भारो भविष्यति ॥ २१

துர்ப்புத்தியுள்ளவனே! (பெண்ணினால் அவமதிக்கப்பட்டுக் கழுதைக்குச் சமமாக நடத்தப்பட்டபோதிலும் அவளிடம் அன்பையே பாராட்டும் தன்மையினால் கழுதைக்கு நிகரான) நும் தந்தையால்கூட சுமக்க முடியாத கந்தலை யான் கட்டியுள்ளேன். (உமது தந்தைக்கே இத்தகைய சிறந்த துறவறத்தைப் பெற்றுக்கொள்ளத் தகுதியில்லை.) சிகையினாலும், யக்ஞோபவீதத்தாலும் மறைக்கு பாரம் ஏற்படும். (மறைகள் துறவறத்தைத் துதித்துக் கூறுகையில், அதனைப் பின்பற்றி சிகையையும் யக்ஞோபவீதத்தையும் தியாகம்

செய்யவேண்டியிருக்க அப்படிச் செய்யாமல் அவைகளை தரித்தால் மறைகளுக்கு மாறுபாடாக நடத்தல் என்ற குற்றம் உண்டாகின்றது. அது சரியன்று. ''अथ परिव्राट् विवर्णवासा मुण्डोऽपरिग्रहः'' என்று சுருதி கூறுகிறது. துறவி உபகரணங்கள் அனைத்தையும் விடுவதுடன் முண்டனம் செய்துகொள்ள வேண்டும் என்றும், அந்த ஆச்ரமத்திற்கு யக்ஞோபவீதம் தேவையில்லையென்றும் அதன் பொருள். ஆகவே அதற்கு முரணான காரியம் செய்யத்தகாது என்று கருதி சிகையும் யக்ஞோபவீதமும் தியாகம் செய்யப்பட்டன.)

துறத்தலின்றி பிரம்மஞானம் ஏற்படாது என்று ஸ்ரீ குருவினுடைய வசனத்தைக் கேட்டு மண்டனமிச்ரர்:-

त्यक्त्वा पाणिगृहीतीं स्वामशक्त्या परिरक्षणे ।
शिष्यपुस्तकभारेच्छोर्व्याख्याता ब्रह्मनिष्ठता ॥ २२

அக்னிஸாக்ஷியாகக் கையைப் பிடித்துக் காப்பாற்ற வேண்டிய இல்லாள் ஒருத்தியைக் காப்பாற்றத் தகுதியில்லாமையால், அந்த நெறியைக் கைவிட்டு அநேக சீடர்களின் கையில் புஸ்தகச் சுமையை ஏற்றி அவர்களையும் அவைகளையும் பராமரிக்க விரும்பியவருடைய பிரம்மநிஷ்டை, ஆகா! மிகத் தெளிவாயிற்று.

ஸ்ரீ சங்கரர்:-

गुरुशुश्रूषणालस्यात्समावर्त्य गुरोः कुलात् ।
स्त्रियः शुश्रूषमाणस्य व्याख्याता कर्मनिष्ठता ॥ २३

குருகுலத்திலேயே வாஸம் செய்வதாகில் (நைஷ்டிகப் பிரம்மசரியத்தில்) அந்த குருவிற்குப் பணிவிடைசெய்யவேண்டுமாகையால், அதில் சோம்பல் கொண்டு, அந்த குருகுலத்திலிருந்து திரும்பிச்சென்று பெண்டிற்குப் பணிவிடை செய்கின்றவருடைய தர்மசிரத்தை மிகத் தெளிவாகவுள்ளது.

தாங்கமுடியாத சினத்துடன் மண்டனர் கூறுகிறார்:-

स्थितोऽसि योषितां गर्भे ताभिरेव विवर्धितः ।
अहो कृतघ्नता मूर्ख कथं ता एव निन्दसि ॥ २४

ஸ்திரீகளுடைய கருவில் வாஸம் செய்தும், அவர்களாலேயே வளர்க்கப்பட்டும்கூட அவர்களையே நிந்திக்கிறீர். ஆஹா! மூடரே! உமது நன்றியின்மை வியக்கத்தக்கது.

யதீசுவரர் - விஷயங்களில் வைராக்கியத்தைப் பெறுவதற்கு அவைகளின் உண்மையை உணரவேண்டியது அவசியமெனக் கூறுகிறார்:-

यासां स्तन्यं त्वया पीतं यासां जातोऽसि योनितः ।
तासु मूर्खतम स्त्रीषु पशुवद्रमसे कथम् ॥ २५

மூடர்களில் மிகச் சிறந்தவனே! எவர்களுடைய ஸ்தன்யம் பானம் செய்யப்பட்டதோ, எவர்களுடைய யோனியிலிருந்து தோன்றினையோ, அவர்களிடமே = அவ்வினத்தினரிடமே மாடுகள்போல் அன்புடன் களிக்கின்றாய்.

மண்டனர்:-

वीरहत्यामवाप्तोऽसि वह्नीनुद्वास्य यत्नतः ।

''वीरहा वा एष देवानां योऽग्निमुद्वासयते'' என்று மறை முறையிடுகின்றது. வேள்விகளைச் செய்யாமல் எவன் அக்னிகளை தியாகம் செய்கிருனே; அவன் வீரஹத்தி செய்தவன் என்று அதன் பொருள். ஆகையால் அந்த அக்னிகாரியத்தை முயற்சியுடன் தியாகம் செய்துள்ள நீர் அத்தகைய பாபத்தை அடைந்துள்ளீர்.

ஸ்ரீசங்கரர் கூறுகின்ருர்:-

आत्महत्यामवाप्तस्त्वमविदित्वा परं पदम् । २६

(असुर्या नाम ते लोका अन्धेन तमसाऽऽवृताः । तांस्ते प्रेत्याभिगच्छन्ति ये के चात्महनो जनाः । अन्यथा सन्तमात्मानं योऽन्यथा प्रतिपद्यते । किं तेन न कृतं पापं चोरेणात्मापहारिणा ॥ என்று உபநிஷத்துக்கள் கோஷிக்கின்றன. ஆத்மஹத்தி செய்த ஜனங்கள் பேரிருளினல் மூடப்பட்டவைகளும், அசுரர்களுக்குரியவைகளுமான நரகங்களை அடைகின்றனர். ஞானரூபியான ஆத்மாவை ஜடமாகிய தேகமென உணருகிறவன் திருடன் என்றும், அவன் எல்லா பாபப்பயன்களையுமனுபவிக்க உரியவன் என்றும் மேற்கூறிய வசனங்களின் கருத்து.) அதன்படி உண்மையான ஆத்மதத்துவத்தை உணராத நீ ஆத்மஹத்தியினலுள்ள பாபத்தை அடைந்துள்ளாய்.

மண்டனர் - (மண்டுகிருர்):-

दौवारिकान्वञ्चयित्वा कथं स्तेनवदागतः ।

வாயில் காப்போர்களை ஏமாற்றித் திருடன்போல் எவ்வாறு உட்புகுந்தீர் ?

ஸ்ரீசங்கரர்:-

भिक्षुभ्योऽन्नमदत्वा त्वं स्तेनवद्भोक्ष्यसे कथम् ॥ २७

ஸன்யாசிகளுக்கு அன்னமளிக்காமல் திருடன்போல் சாப்பிட எவ்வாறு துணிகிறீர்?

(यतिश्च ब्रह्मचारी च पक्वान्नस्वामिनावुभौ । तयोरन्नमदत्वा तु भुक्त्वा चान्द्रायणं चरेत् ॥ என்று ஸ்மிருதி கூறுகின்றது. ஸன்யாசியும், பிரம்மசாரியும் இல்லறத்தியவனுடைய பக்குவமான அன்னத்தில் உரிமையுள்ளவர்கள். அவர்களுக்கு அன்னமளிக்காமல் தான் மட்டும் உணவு உட்கொள்ளுகிறவன் சாந்திராயணவிருதம் என்ற பிராயச்சித்தம் செய்ய வேண்டும் என்று அந்த வசனத்தின் பொருள். தமது தேசத்தில் துறவி ஒருவர் வந்துள்ளதை அறிந்து, தக்கபடி அவரை எதிர்கொண்டு இல்லத்திற்குக் கொணர்ந்து உபசரித்தல், இல்லறத்தில் சிறந்த ஊக்கம்கொண்ட நுமது கடமையாகவிருக்க அதனைச் செய்யாமலிருக்கையில், துறவியாயினும் ஸம்ஸாரிகளுடைய தாபங்களைத் தணித்து அவர்களையும் சிறந்த முக்திமார்க்கத்திற்குக் கொணர வேண்டிய கடமையிருப்பது பற்றி, திருட்டுத் தொழிலாலுண்டான நுமது பாபத்தை விலக்க இவ்விதம் திருட்டுத்தனமாகவே நுமது இல்லத்தில் புகுதல் எனக்கு நிந்தனையாகாது என்று ஸ்ரீ பரமஹம்ஸபரிவ்ராஜகாசாரியருடைய கருத்து.)

ஒவ்வொரு சொல்லிற்கும் மறுத்துக் கூறியதைக் கேட்டு, மேல் கூற முடியாமையால் மண்டனர் நிந்திக்கிறார்:-

कर्मकाले न संभाष्य अहं मूर्खेण सम्प्रति ।

சிராத்தகர்மம் நடக்கும் இந்த வேளையில், மூடனுடன் சம்பாஷணை செய்தல் தகுதியன்று.

தன்னை மூடன் என்று கூறியதற்கு ஸ்ரீ சங்கரர் பதில் கூறுகிறார்:-

अहो प्रकटितं ज्ञानं यतिभङ्गेन भाषिणा ॥ २८

ஆஹா! யதிபங்கத்துடன் பேசுகிறவருடைய அறிவின் திறமை வெளியாயிற்று. (செய்யுளில் நிறுத்தவேண்டிய இடமாகிய संभाष्यः अहम् என்றவிடத்தில் சந்திசேர்த்துக் கூறவேண்டிய முறையை விலக்கி புணர்ச்சியின்றி இலக்கணத்திற்கு முரணாகச் செய்யுள் கூறுபவருக்கு நூலறிவு எவ்வளவு நுண்ணியது என்று கேலியாகக் கூறுகின்றார்.)

தனக்குச் சிறிது தருணம் கிட்டியதென்று சந்தோஷத்துடன் மண்டனர் கூறுகிறார்:-

यतिभङ्गे प्रवृत्तस्य यतिभङ्गो न दोषभाक् ।

यतिः = செய்யுட்களில் நிற்கவேண்டிய இடம் என்றும், ஸன்யாசி என்றும் இரு பொருள் கொண்டது. ஸன்யாசியின் பங்கத்திற்காக = அவமதிப்பிற்காக முயன்ற என்னுடைய செய்யுளில் யதிபங்கம் என்ற செய்யுளிலுள்ள குறை குற்றமாகாது.

ஸ்ரீசங்கரர்:-

यतिभङ्गे प्रवृत्तस्य पञ्चम्यन्तं समस्यताम् ॥ २९

யதிபங்கம் என்ற சொல்லிற்கு யதியினிடமிருந்து = துறவியினிடமிருந்து, அவமதிப்பு என்று பொருள் கொள்க.

பிறகு, மண்டனர்:-

क्व ब्रह्म क्व च दुर्मेधाः क्व संन्यासः क्व वा कलिः ।
स्वाद्वन्नभक्षकामेन वेषोऽयं योगिनां धृतः ॥ ३०

பிரம்மவஸ்து எங்கே, மனிதனுடைய துர்ப்புத்திகள் எங்கே, ஸன்யாஸம் எங்கே, கலிகாலம் எங்கே. நல்ல உணவில் விருப்பம் கொண்டமையால் யோகிகளுடைய இந்த வேஷம் உம்மால் பெற்றுக்கொள்ளப்பெற்றது.

क्व स्वर्गः क्व दुराचारः क्वाग्निहोत्रं क्व वा कलिः ।
मन्ये मैथुनकामेन वेषोऽयं कर्मिणां धृतः ॥ ३१

ஸ்வர்க்கம் எங்கே, கெட்ட ஆசாரம் எங்கே, அக்னிஹோத்ரம் எங்கே, கலிகாலம் எங்கே, ஸ்திரீசுகத்தில் விருப்பம் கொண்டதினால் இல்லறத்தியவர்களுடைய இந்த வேஷம் ஏற்றுக்கொள்ளப்பெற்றது.

इत्यादिदुर्वाक्यगणं ब्रुवाणे रोषेण साऽहंकृतिविश्वरूपे ।
श्रीशङ्करे वक्तरि तस्य तस्योत्तरं च कौतूहलतश्च चारु ॥ ३२

तं मण्डनं सस्मितजैमिनीक्षितं व्यासोऽब्रवीज्जल्पसि वत्स दुर्वचः ।
आचारणा नेयमनिन्दितात्मनां ज्ञातात्मतत्त्वं यमिनं धुतैषणम् ॥ ३३

இவ்வாறு செருக்குடன் விசுவரூபர் கடுஞ்சொற்களைக் கூற அவைகளொவ்வொன்றிற்கும் கோபமின்றிக் குதூஹலத்துடன் ஸ்ரீ சங்கரர் பதிலளிக்கையில், ஜைமினிமுனிவரும் புன்னகையுடன் மண்டனரைக் கண்ணுறுகையில், வியாஸமாமுனிவர் அந்த மண்டனரிடம் புகன்றார், ''மகனே! ஐம்பொறிகளை அடக்கியவரும், ஏஷணைகளைத் (ஆசைகளை) துறந்தவரும் ஆகிய யதீசுவரரை நோக்கி இவ்விதம் தவறான வார்த்தைகளைக் கூறுதல் சான்றோர்களின் முறையன்று.

अभ्यागतोऽसौ स्वयमेव विष्णुरित्येव मत्वाऽऽशु निमन्त्रय त्वम् ।
इत्याश्रवं ज्ञातविधिं प्रतीतं सुध्यग्रणीः साध्वशिषन्मुनिस्तम् ॥ ३४

''எதிர்பாராமல் தானாகவே வந்த இவர் விஷ்ணுதான் என்று கருதி விரைவில் நீ அவரை சிராத்தகாரியத்தில் நியமிப்பாயாக'' என்று ஞானிகளில் சிறந்த வியாஸமுனிவர், கடன் முறையையறிந்த சிஷ்யனுக்கு நன்கு கட்டளையளித்தார்.

अथोपसंस्पृश्य जलं स शान्तः ससंभ्रमं मण्डनपण्डितोऽपि ।
व्यासाज्ञया शास्त्रविदर्चयित्वा न्यमन्त्रयद्भैक्ष्यकृते महर्षिम् ॥ ३५

நூல்களையுணர்ந்த மண்டனபண்டிதரும், பிறகு வியாஸமுனிவருடைய ஆக்ஞையினால் சாந்தமடைந்து ஆசமனம் செய்து, அச்சத்தினால் பரபரப்படைந்து அந்த மாமுனிவரைப் பூஜித்து, பிக்ஷையேற்றுக்கொள்ளும்படி பிரார்த்தித்தார்.

स चाब्रवीत्सौम्य विवादभिक्षामिच्छन् भवत्संनिधिमागतोऽस्मि ।
साऽन्योन्यशिष्यत्वपणा प्रदेया नास्त्यादरः प्राकृतभक्तभैक्ष्ये ॥ ३६

பிக்ஷையேற்றுக்கொள்ளும்படி வேண்டிய மண்டனரிடம் ஸ்ரீசங்கரர் கூறினார்: - ''பிரியமான காக்ஷியளிப்பவனே! வாதபிக்ஷையை விரும்பித் தமது இல்லத்திற்கு வந்துள்ளேன். அது ஒருவருக்கொருவர் சிஷ்யனாகுதல் என்ற ஒப்பந்தத்தைக் கொண்டதாக அளிக்கப்படவேண்டும். உலகப்பிரசித்தமான இந்த அன்னரூபமான பிக்ஷையில் எனக்கு ஆதரவில்லை.

मम न किंचिदपि ध्रुवमीप्सितं श्रुतिशिरःपथविस्तृतिमन्तरा ।
अवहितेन मखेष्ववधीरितः स भवता भवतापहिमद्युतिः ॥ ३७

வேள்விகளில் விசேஷமான சிரத்தைகொண்டுள்ள நீர், ஸம்ஸாரதாபத்தைத் தணிக்கின்ற சந்திரனாகிய பரமேசுவரரை ''இல்லை'' என்று மறுத்துள்ளீர். அந்த ஈசுவரன் 'உளார்' என்ற கொள்கையை நிலைக்கச் செய்ய வேண்டும். அதுதான் உபநிஷத்துக்களின் நெறி. அதனைக் காப்பாற்றுதல்தான் என்னுடைய விருப்பமேயன்றி வேறு ஒன்றுமில்லை.

जगति सम्प्रति तं प्रथयाम्यहं समभिभूय समस्तविवादिनम् ।
त्वमपि संश्रय मे मतमुत्तमं विगद वा वद वाऽस्मि जितस्त्विति ॥ ३८

அதற்கு எதிர்வாதம் கூறுபவரனைவரையும் வென்று, அந்த உபநிஷத்தின் மார்க்கத்தை உலகில் பிரசாரம் செய்யப்போகின்றேன். என்னுடைய உயர்ந்த கொள்கையை நீரும் பின்பற்றுவீர். வாதம் செய்வீர். அல்லது தோல்வியுற்றேன் என்ருவது கூறுவீராக.

इति यतिप्रवरस्य निशम्य तद्वचनमर्थवदागतविस्मयः ।
परिभवेन नवेन महायशाः स निजगौ निजगौरवमास्थितः ॥ ३९

இவ்வாறு துறவிகளில் சிறந்தவராகிய ஸ்ரீ சங்கரருடைய, கருத்து நிரம்பிய சொல்லேச் செவியுற்று மிகக் கீர்த்திவாய்ந்த அவர் தனக்குப் புதிதாக நேர்ந்த அவமதிப்பினுல் வியப்படைந்தவராக தனது கௌரவத்தைக் காப்பாற்றிக் கொண்டு கூறினுர்.

अपि सहस्रमुखे फणिनामके न विजितस्त्विति जातु फणत्ययम् ।
न च विहाय मतं श्रुतिसम्मतं मुनिमते निपतेत्परिकल्पिते ॥ ४०

ஆயிரம் முகங்களுள்ள ஆதிசேஷன் வாதம் செய்யத் தயாராயினும் ''தோல்வியுற்றேன்'' என்று இவன் கூருன். வேதத்திற்குச் சம்மதமான இல்லறமல்லாததும், கற்பனை செய்யப்பட்டதும், முனியின் (துறவியின்) கொள்கையுமாகிய துறவறத்திலும் இறங்கான்.

अपि कदाचिदुदेष्यति कोविदः सरसवादकथाऽपि भविष्यति ।
इति कुतूहलिनो मम सर्वदा जयमहोऽयमहो स्वयमागतः ॥ ४१

யாராவது ஒருவன் திறமையுள்ளவனுகத் தோன்றுவானு, மனதிற்கு உவகையளிக்கும் ரஸமான ஸம்பாஷணை ஏற்படுமா என்று வெகு நாட்களாக மிக்க ஆவலுடன் எதிர்பார்க்கின்ற எனக்கு இந்த வெற்றிவிழா தானுக வந்துள்ளது. ஆச்சரியம்!

भवतु सम्प्रति वादकथाऽऽवयोः फलतु पुष्कलशास्त्रपरिश्रमः ।
उपनता स्वयमेव न गृह्यते नवसुधा वसुधावसथेन किम् ॥ ४२

நம்மிருவருக்கும் வாதம் நிகழட்டும். சாஸ்திரங்களில் நல்ல பயிற்சி பயனளிக்கட்டும். வலுவே வந்த அமிருதத்தை மண்ணுலகிலுள்ள எவன்தான் அருந்தாமலிருப்பான் ?

अयमहं यमहन्तुरपि स्वयं शमयिता मयि तावकसद्गिराम् ।
सुकलहं कलहंसकलाभृतां दिश सुधांशुसुधामलसत्तनो ॥ ४३

சந்திரகிரணம்போலவும் அமிருதம்போலவும் வெண்மையான உடலேயுடையவரே! இந்த யான், யமனை வென்ற பரமசிவனுடைய பேச்சுவன்மையையும் பறிக்கத்திறமை பெற்றவன். அத்தகைய என்னுடன் அன்னப்பறவைகளின் இனிய குரலுக்கு நிகரான தங்களுடைய பேச்சுக்களினுல் போர் தொடுப்பீராக.

अपि तु दुर्हृदयस्मयकाननक्षतिकठोरकुठारधुरन्धरा ।
न पटुता मम ते श्रवणान्तिकं ननु गताऽनुगताखिलदर्शना ॥ ४४

ஆனுல், நூல்களனைவற்றினுடையவும் நுண்ணிய நுட்பங்களை நுகர்ந்ததும், துஷ்டர்களுடைய கர்வமாகிய காட்டை வெட்டியொழிக்க வன்மை பெற்றதுமாகிய என் பேச்சுச் சிறப்பு தங்களுடைய செவிகளுக்கு நிச்சயம் எட்டவில்லை.

अत्यल्पमेतद्भवतेरितं मुने भैक्ष्यं प्रकुर्वे यदि वाददित्सुता ।
गतोद्यमोऽहं श्रुतवादवार्तया चिरेप्सितेयं वदिता न कश्चन ॥ ४५

முனிவரே! ''வாதம் செய்ய சித்தமாயிருக்கிறீரேயாகில் பிக்ஷை பெற்றுக்கொள்ளுகிறேன்'' என்ற நுமது சொல் புல்லியது. வாதம் செய்தல் என்ற சொல்லைக் கேட்டவுடனேயே யான் மிக்க ஊக்கமுற்றேன். இது என்னுடைய வெகுகாலத்திய விருப்பம். ஆனுல், வாதம் செய்பவன் ஒருவனும் இதுகாலம்வரையில் கிடைக்கவில்லை.

वादं करिष्यामि न संदिहेऽत्र जयाजयौ नौ वदिता न कश्चित् ।
न कण्ठशोषैकफलो विवादो मिथो जिगीषू कुरुतस्तु वादम् ॥ ४६

வாதம் செய்கிறேன். இதில் ஐயமில்லை. (ஆனுல்) நம்மிருவருடையவும் வெற்றிதோல்விகளை தீர்மானம் செய்பவன் ஒருவனும் இல்லை. வாதம் செய்தல் தொண்டைத்தண்ணீர் வற்றுவதற்காக மட்டும் இருக்கக்கூடாது. ஒருவருக்கொருவர் வெற்றியை விரும்பித்தானன்ருே வாதம் செய்கின்றனர்.

वादे हि वादिप्रतिवादिनौ द्वौ विपक्षपक्षग्रहणं विधत्तः ।
का नौ प्रतिज्ञा वदतोश्च तस्यां किं मानमिष्टं वद कः स्वभावः ॥ ४७

மேலும் வாதத்தில், வாதிப்பிரதிவாதிகள் இருவர். ஒருவர் தன்னுடைய மதத்தைக்கூற மற்றவர் அதனை மறுத்து எதிர்மதத்தைக் கூறி நிலைநிறுத்த வேண்டும். நம்முடைய பிரதிக்ஞை யாது? அதற்கு பிரமாணம் யாது? நம்மிருவருடைய வாதப்பிரதிவாதம் எத்தகையது?

कः पार्ष्णिकोऽहं गृहमेधिसत्तमस्त्वं भिक्षुराजो वदतामनुत्तमः ।
जयाजयौ नौ सुपणौ विधीयतां ततः परं साधु वदाव सुस्मितौ ॥ ४८

மத்தியஸ்தம் செய்பவர் யார்? நான் இல்லறத்தினவரில் சிறந்தவன். தாங்கள் துறவிகளில் சிறந்தவர்கள். பேச்சுவன்மையில் ஒப்புயர்வற்றவர். நம்முடைய வெற்றிதோல்விகளுக்குப் பந்தயம் தீர்மானம் செய்யவேண்டும். பிறகு, சினமின்மையால் புன்முறுவலுள்ளவர்களாக வாதம் செய்வோம்.

अद्यातिधन्योऽस्मि यदार्यपादो मया सहाभ्यर्थयते विवादम् ।
भविष्यते वादकथाऽपरेद्युर्माध्याह्निकं सम्प्रति कर्म कुर्याम् ॥ ४९

பூஜிக்கத்தக்கவர்களாகிய தாங்கள் என்னுடன் வாதத்தை விரும்புவதினுல் நான் இன்று மிக்க பாக்கியமுடையவனுனேன். வாதம் நாளையதினம்

நடைபெறட்டும். மத்தியானத்தில் செய்யவேண்டிய காரியங்களை இப்பொழுது நான் செய்கிறேன்.

तथेति सूक्ते स्मितशङ्करेण भविष्यते वादकथा श्व एव ।
तत्साक्षिभावं व्रजतं मुनीन्द्रावित्यर्थयद्बादरजैमिनी सः ॥ ५०

சரி என்று ஸ்ரீசங்கரர் புன்னகையுடன் இனிதாகக் கூற ''நாளையதினமே வாதம் நடக்கப்போகிறது. முனிவர்களில் சிறந்தவர்களே! அதற்கு தாங்கள் இருவர்களும் ஸாக்ஷிகளாக இருக்க வேண்டும்'' என்று அந்த மண்டனர் வியாஸமுனிவரையும் ஜைமினியையும் வேண்டினர்.

विधाय भार्यां विदुषीं सदस्यां विधीयतां वादकथा सुधीन्द्र ।
इत्थं सरस्वत्यवतारताज्ञौ तद्धर्मपत्न्यास्तमभाषिषाताम् ॥ ५१

அவருடைய மனைவி ஸரஸ்வதீதேவியின் அவதாரம் என்பதையறிந்த வியாஸமுனிவரும், ஜைமினிமுனிவரும் ''புத்திமான்களில் சிறந்தவரே! உமது மனையாளை மத்தியஸ்தையாக அமைத்து வாதம் செய்யுங்கள்'' என்று மண்டனரிடம் கூறினர்.

अथानुमोद्याभिहितं मुनिभ्यां स मण्डनार्यः प्रकृतं चिकीर्षुः ।
आनर्च दैवोपगतान्मुनीन्द्रानग्नीनिव त्रीन्मुनिशेखरांस्तान् ॥ ५२

பிறகு மண்டனபண்டிதரும் அவர்கள் கூறிய அபிப்பிராயத்தை ஆமோதித்து, பிருகிருதத்தில் செய்யவேண்டிய சிராத்தகாரியத்தைத் தொடங்கி, தனது பாக்கியத்தினுல் வந்தவர்களும், மூன்று அக்னிகளுக்கு = கார்ஹபத்யம், தக்ஷிணுக்னி, ஆஹவநீயம் என்பவைகளுக்கு நிகரானவர்களும், சிறந்தவர்களுமாகிய மூன்று முனிவர்களை உபசரித்தார்.

भुक्त्वोपविष्टस्य मुनित्रयस्य श्रमापनोदाय तदीयशिष्यौ ।
अतिष्ठतां पार्श्वगतौ वटू द्वौ सचामरौ वीजनमाचरन्तौ ॥ ५३

போஜனம் செய்தபின் ஆஸனத்திலமர்ந்த மூன்று முனிவர்களை இளைப்பாற்ற அந்த மண்டனபண்டிதருடைய சீடர்களாகிய பிரம்மசாரிகள் சாமரம் வீசிக்கொண்டு பக்கத்தில் நின்றனர்.

अथ क्रियान्ते किल सूपविष्टास्त्रय्यन्तवेद्यार्थविदस्त्रयोऽमी ।
अमन्त्रयंश्चारु परस्परं ते मुहूर्तमात्रं किमपि प्रहृष्टाः ॥ ५४

சிராத்தகர்மம் முடிந்தபிறகு, மூன்று மறைகளுடைய முடிவை நன்கு உணர்ந்த முனிவர்கள் மூவரும் முகூர்த்தநேரம்வரையில் முகமலர்ச்சியுடன் மிக்க ரகஸியமாக ஒரு விஷயத்தை மந்திராலோசனை செய்து முடிவிற்கு வந்தனர்.

तेषां द्विजेन्द्रालयनिर्गतानामदर्शनं जग्मतुरञ्जसा द्वौ ।
रेवातटे रम्यकदम्बजाले देवालयेऽवस्थितवांस्तृतीयः ॥ ५५

சிறந்த அந்தணராகிய மண்டனமிச்ரருடைய இல்லத்திலிருந்து வெளி வந்த மூன்று முனிவர்களில் இருவர் திடீரென மறைந்தனர். மூன்றுமவராகிய ஸ்ரீசங்கரர், அழகிய கதம்பமரங்கள் அடர்ந்த ரேவாநதியின் கரையிலுள்ள கோயிலில் தங்கினார்.

इति स यतिवरेण्यो दैवयोगाद्गुरूणामितरजनदुरापं दर्शनं प्राप्य हृष्टः ।
तदुदितवचनानि श्रावयन्नात्मशिष्याननयदमृततुल्यान्यात्मवित्तां त्रियामाम् ॥ ५६

மற்றவர்களுக்கு கிடைப்பதற்கரிதான ஆசிரியர்களின் தர்சனம் தெய்வச்செயலால் தனக்குக் கிடைத்ததுபற்றி உவகைகொண்டவரும், துறவிகளுக்கு அரசனும், ஆத்மதத்வத்தை உணர்ந்தவருமாகிய ஸ்ரீசங்கரர், அமிருதச்சுவை நிரம்பிய அவர்களுடைய சொற்களை சிடர்களுக்கு கூறிக்கொண்டு அந்த இரவைக் கழித்தார்.

प्रातः शोणसरोजबान्धवरुचिप्रद्योतिते व्योमनि
प्रख्यातः स विधाय कर्म नियतं प्रज्ञावतामग्रणीः ।
साकं शिष्यवरैः प्रपद्य सदनं सन्मण्डितं माण्डनं
वादायोपविवेश पण्डितसभामध्ये मुनिर्ध्येयवित् ॥ ५७

மறுநாள் காலையில், தாமரையின் பந்துவாகிய சூரியனுடைய கிரணங்களால் ஆகாயம் பிரகாசிக்கையில், பிரசித்திபெற்றவரும் புத்திமான்களுடைய முன்னணியில் விளங்குகின்றவருமாகிய ஸ்ரீசங்கரர் தன்னுடைய அனுஷ்டானங்களை முடித்து, சிறந்த சிஷ்யர்களுடன் கிளம்பி, சான்றோர்கள் அமர்ந்தமையால் அழகுவாய்ந்த மண்டனருடைய மனையை அடைந்து, தியானம் செய்வதற்குரிய பரவஸ்துவை நன்கு உணர்ந்த அவர், வாதத்தின் பொருட்டு பண்டிதர்களின் அவையின் மத்தியில் அமர்ந்தார்.

ततः समादिश्य सदस्यतायां सधर्मिणीं मण्डनपण्डितोऽपि ।
स शारदां नाम समस्तविद्याविशारदां वादसमुत्सुकोऽभूत् ॥ ५८

பிறகு, அந்த மண்டனபண்டிதரும், கல்விகள் யாவற்றிலும் திறமை வாய்ந்து ''சாரதை'' என்று பிரசித்திபெற்ற தனது துணையாளை மத்தியஸ்தையாக நியமித்து உவகையுடன் வாதத்திற்கு அமர்ந்தார்.

पत्या नियुक्ता पतिदेवता सा सदस्यभावे सुदती चकाशे ।
तयोर्विवेक्तुं श्रुततारतम्यं समागता संसदि भारतीव ॥ ५९

புன்னகை பூத்த பதிவிரதையாகிய அந்த அணங்கு, அவ்விருவர்களுடைய கல்வித்திறமையை பகுத்தறிவதற்கு அந்தச் சபையில் ஸன்னிதானம் கொண்ட ஸரஸ்வதீதேவிபோல் விளங்கினாள்.

प्रवृद्धवादोत्सुकतां तदीयां विज्ञाय विज्ञः प्रथमं यतीन्द्रः ।
परावरज्ञः स परावरैक्यपरां प्रतिज्ञामकरोत्स्वकीयाम् ॥ ६०

வாதம் செய்வதில் அந்த மண்டனருக்கு மிக்க ஊக்கமிருப்பதை அறிந்து விசேஷ அறிஞரும், ஸ்தூலஸூக்ஷ்மங்கள், உயர்வு, தாழ்வு, இம்மை, மறுமை முதலியவைகள் யாவற்றையும் நன்கு உணர்ந்தவரும், துறவிகளில் சிறந்தவருமாகிய ஸ்ரீசங்கரர் ''பரமாத்மனுக்கும் ஜீவனுக்கும் அபேதம் (பேதமின்மை)'' என்ற தன்னுடைய உறுதிவாக்கியத்தை உரைத்தார்.

ब्रह्मैकं परमार्थसच्चिदमलं विश्वप्रपञ्चात्मना
शुक्ती रूप्यपरात्मनेव बहलाज्ञानावृतं भासते ।
तज्ज्ञानान्निखिलप्रपञ्चनिलया स्वात्मव्यवस्था परं
निर्वाणं जनिमुक्तमभ्युपगतं मानं श्रुतेर्मस्तकम् ॥ ६१

இருள் பரவியிருக்க, கண்களின் காக்ஷிக்குறையினாலும், தூரத்திலிருப்பதாலும் கிளிஞ்சல் எவ்வாறு வெள்ளியாகத் தோற்றம் அளிக்கின்றதோ, அதுபோல் ஸத்தும், சித்தும், சுத்தமுமாகிய பரப்பிரம்மவஸ்து ஒன்றே அஞ்ஞானத்தினுல் மூடப்பட்டு ஸகல பிரபஞ்ச உருவமாகத் தோற்றமளிக்கின்றது. உண்மையான அதன் உருவத்தை உணர்ந்தால் பிரபஞ்சங்கள் யாவற்றினுடையவும் உருவம் லயமடைந்து (நாசமடைந்து) ஞானவடிவமாகிய பிரம்மஸ்வரூபம் மட்டும் நிலவுகின்றது. அதுதான் இறப்பற்றதாகிய முக்திசுகம். இந்த விஷயத்திற்கு உபநிஷத்துக்கள் பிரமாணம்.

बाढं जये यदि पराजयभागहं स्यां संन्यासमङ्ग परिहृत्य कषायचेलम् ।
शुक्लं वसीय वसनं द्वयभारतीयं वादे जयाजयफलप्रतिदीपिकाऽस्तु ॥ ६२

ஹே மண்டனரே! இந்த விஷயத்தில் எமது மதத்திற்கு வெற்றி உறுதி. ஒருக்கால் தோல்வி ஏற்பட்டால் நான் துறப்பையகற்றி, காக்ஷாய வஸ்திரத்தையும் விலக்கி வெண்மையான வஸ்திரத்தைக் கட்டிக்கொள்கிறேன். இந்த வாதத்தில் உமது இல்லாளாகிய 'உபயபாரதி' வெற்றித் தோல்விகளை தீர்மானம் செய்வாளாக.

इत्थं प्रतिज्ञां कृतवत्युदारां श्रीशङ्करे भिक्षुवरे स्वकीयाम् ।
स विश्वरूपो गृहमेधिवर्यश्चक्रे प्रतिज्ञां स्वमतप्रतिष्ठाम् ॥ ६३

யதிகளில் சிறந்தவரான ஸ்ரீசங்கரர் இவ்வாறு கம்பீரமாக தனது பிரதிக்ஞையைக் கூற, இல்லறத்தினவர்களில் சிறந்தவராகிய மண்டனபண்டிதரும் தனது மதத்தின் உறுதியை விளக்கும் பிரதிக்ஞையை உரைத்தார்.

वेदान्ता न प्रमाणं चितिवपुषि पदे तत्र संगत्ययोगा -
त्पूर्वो भागः प्रमाणं पदचयगमिते कार्यवस्तुन्यशेषे ।
शब्दानां कार्यमात्रं प्रति समधिगता शक्तिरभ्युन्नतानां
कर्मभ्यो मुक्तिरिष्टा तदिह तनुभृतामाऽऽयुषः स्यात्समाप्तेः ॥ ६४

சித்ரூபியான பரமாத்மாவைப்பற்றிக் கூறும் விஷயத்தில் வேதாந்த வசனங்கள் பிரமாணமன்று. தனிப்பட்ட ஒரு பதம் மட்டும் ஸித்தமான ஒரு

பொருளை விளக்குகின்றதில்லை. செயலுடன் சம்பந்தப்பட்ட பொருளைத்தான், பதங்களின் தொகுதியான வாக்கியம் உணர்த்துகிறது. (உதாரணமாக - அரசன், குதிரை, குடம் என்ற சொற்கள் மட்டும் கூறப்படுகையில் எவ்விதமான உணர்வும் ஏற்படுகிறதில்லை. அந்த சொற்களையே, அரசன் போகிறான், குதிரையைக் கட்டு, குடத்தைக் கொண்டுவா என்பதுபோன்ற செயல்களுடன் அமைத்துக் கூறினால் பொருள்விளக்கம் உண்டாகிறது. இது எல்லோருக்கும் அனுபவமான விஷயம்.) ஆகையால் செயலில் சம்பந்தப்படாத ஸச்சிதானந்தவஸ்துவை உணர்த்துவதற்கு வேதாந்தவசனங்கள் சக்தியற்றவை. கர்மங்களினால்தான் முக்தி ஏற்படுகிறது. அந்தக் கர்மங்கள் வாழ்க்கைகாலம் முழுவதும் செய்யப்படவேண்டும்.

वादे कृतेऽस्मिन्यदि मे जयान्यस्त्वयोदितात्स्याद्विपरीतभावः ।
येयं त्वयाऽभूद्गदिता प्रसाक्ष्ये जानाति चेत्सा भविता वधूर्मे ॥ ६५

வாதம் செய்கையில் எனக்குத் தோல்வி நேர்ந்தால் தாங்கள் கூறியதற்கு மாறாக யான் வெண்மை வஸ்திரத்தை அகற்றி காஷாயத்துணியை தரிக்கின்றேன். தாங்கள் கூறியபடி எனது இல்லாள் இவ்விஷயத்தில் அறிவுள்ளவளாயின் ஸாக்ஷியாக இருக்கட்டும்.

जेतुः पराजित इहाश्रममादददीतेत्येतौ मिथः कृतपणौ यतिविश्वरूपौ ।
अम्बामुदारधिषणामभिषिच्य साक्ष्ये जल्पं वितेनतुरथो जयदत्तदृष्टी ॥ ६६

''வெற்றிபெற்றவருடைய ஆச்ரமத்தை தோல்வியடைந்தவர் பெறுதல்'' என்று ஒப்பந்தம் கூறி யதீசுவரரும், விசுவரூபரும், சிறந்த புத்தியுடையவளும் உலகமாதாவுமாகிய ஸரஸ்வதியை வாதத்திற்கு ஸாக்ஷியாக நியமித்து, வெற்றிபெறுவதில் நோக்கம் கொண்டவர்களாக வாதம் துவக்கினர்.

आवश्यकं परिसमाप्य दिने दिने तौ वादं समं व्यतनुतां किल सर्ववेदौ।
एवं विजेतुमनसोरुपविष्टयोस्तां मालां गले न्यधित सोभयभारतीयम् ॥ ६७

அனுதினமும் அவசியம் செய்யவேண்டிய நித்தியகர்மங்களைச் செய்து முடித்து, அவர்கள் வாதத்திற்கு உட்கார்ந்தனர். வேதங்கள் யாவற்றிலும் திறமைவாய்ந்த அவ்விருவர்கள் வாதத்திற்கு உட்கார்ந்தவுடன் 'உபயபாரதி' சிறந்த புஷ்பமாலையை இருவருக்கும் அளித்தாள். (கணவன் கழுத்தில் மாலையிட்டாள். யதீசுவரருக்கு அர்ப்பணம் செய்து அணிந்துகொள்ளும்படி வேண்டினாள், அல்லது கணவன் மூலமாக அணிந்து கொள்ளும்படி செய்தாள்.)

माला यदा मलिनभावमुपैति कण्ठे यस्यापि तस्य विजयेतरनिश्चयः स्यात् ।
उक्त्वा गृहं गतवती गृहकर्मसक्ता भिक्षाशने पिचरितुं गृहिमस्करिभ्याम् ॥ ६८

''எவருடைய கழுத்திலுள்ள மாலை எப்பொழுது வாடுகிறதோ அப்பொழுது அவருக்கு வெற்றிக்கு மாறுதல் நிலவிற்று என்பது திண்ணம்'' என்று கூறி, ஸரஸ்வதி, இல்லறத்தினவருக்கு உரிய ஆகாரத்தையும், துறவிக்கு உரிய பிக்ஷையையும் தயாரிக்க வீட்டுவேலையில் ஆர்வம் கொண்டாள். (தனது உயர்ந்த தெய்வமாகிய கணவனும், ஒப்புயர்வற்ற ஸ்ரீசங்கரராகிய பரமாசாரியரும் செய்கின்ற வாதத்தில் அவர்களால் தனக்கு அளிக்கப்பட்ட 'மத்தியஸ்தம்' என்ற

பதவி மிகச் சிறந்ததாயினும் பதிவிருதையின் பணிவைப் பராமரித்துக்கொண்டு, பரமஹம்ஸருக்கும் பதிக்கும் முன்னிலையில் சமமாக உட்காருதல் தகாது என்று அந்த அணங்கு கருதினுள். அரிய ஸந்தர்ப்பம் வாய்ந்திருக்கையில், ஸன்னியாசிச் சக்ரவர்த்தியாகிய ஸ்ரீசங்கரருக்கு பிக்ஷை தயாரித்தல் தனது கைகளாலேயே சிறந்தது என்று சிறந்த சித்தம் கொண்ட 'சாரதை' சான்ருேர்களின் கடமையை நடைமுறையில் காண்பித்து உலகத்திற்கு உபதேசமளித்தலாகும். மேலும், தனது கணவனுக்கு 'தோல்வி' அல்லது சிறந்த துறவிச்சக்ரவர்த்திக்கு 'தோல்வி' என்று கூறுவதற்கு அஞ்சினவளாக மாலை வாடினவருக்கு 'வெற்றிக்கு மாறுதல்' என்று சமத்காரமாக கூறியுள்ளாள்.)

अन्योन्यसञ्जयफले विहितादरौ तौ वादं विवादपरिनिर्णयमातनिष्टाम् ।
ब्रह्मादयः सुरवरा अपि वाहनस्थाः श्रोतुं तदीयसदने स्थितवन्त ऊर्ध्वम् ॥ ६९

ஒருவர் மற்றவரை வெல்லவேண்டுமென்ற ஆர்வத்துடன் இருவரும் வாதத்தைத் தொடர்ந்தனர். அந்த ஸம்பாஷணையைக் கேட்க விருப்பம் கொண்டவர்களாக பிரம்மா முதலான தேவர்களும் தம் தம் வாகனங்களில் அமர்ந்தவர்களாக அந்த இல்லத்தின் உயர்ந்த இடத்தில் வீற்றிருந்தனர்.

ततस्तयोरास महान्विवादः सदस्यविश्राणितसाधुवादः ।
स्वपक्षसाक्षीकृतसर्ववेदः परस्परस्यापि कृतप्रमोदः ॥ ७०

அவையிலுள்ளோர்கள் ஆமோதிக்கவும், தமது கொள்கைக்குத் தக்கபடி மறைவசனங்களை பிரமாணமாகக் கூறி ஒருவருக்கொருவர் உற்சாகத்தையும் வளர்த்திக்கொண்டு இருவருக்கும் வாதம் நடந்தது.

दिने दिने चाधिगतप्रकर्षो भूरीभवत्पण्डितसन्निकर्षः ।
अन्योन्यभङ्गाहिततीव्रतर्षस्तथाऽपि दूरीकृतजन्यमर्षः ॥ ७१

பிரதிதினமும் வாதத்தில் உற்சாகம் மேல்மேல் வளர்ந்தும், பண்டிதர்களின் கூட்டம் சேர்ந்தும், ஒருவர் மற்றவரைக் கண்டிப்பதில் ஊக்கம் ஓங்கியும், வாதப்போராயினும் பகைமை நீங்கியும் அவர்களுடைய வாதம் நடந்தது.

दिने दिने वासरमध्यमे सा ब्रूते पतिं भोजनकालमेव ।
समेत्य भिक्षुं समयं च भैक्ष्ये दिनान्यभूवन्निति पञ्चषाणि ॥ ७२

தினந்தோறும் அந்த அணங்கு மத்தியானத்தில் கணவனுக்கருகில் அணுகிபோஜனகாலம் வந்து விட்டது என்றும், சன்னியாசியின் சமீபத்திற்கு சென்று பிக்ஷசமயம் அணுகிவிட்டது என்றும் கூறுவாள். இவ்வாறு ஐந்தாறு தினங்கள் நடந்தன.

अन्योन्यमुत्तरमखण्डयतां प्रगल्भं बद्धासनौ स्मितविकासिमुखारविन्दौ ।
न स्वेदकम्पगगनेक्षणशालिनौ वा न क्रोधवाक्छलमवादि निरुत्तराभ्याम् ॥ ७३

ஆஸனத்தில் அசைவற்று அமர்ந்து, புன்னகைபூத்த முககமலமுடையவர்களாக அவர்கள் ஒருவர் மற்றவருடைய மதத்தை

கம்பீரமான முறையில் கண்டித்து மறுத்தனர். உத்தரம் உரைக்க முடியாமையால் வேர்வை, உடல் நடுக்கம், ஆகாயம் நோக்குதல், சினந்து சொற் கூறுதல், ஒன்றுக்கொன்று சம்பந்தமின்றி அவச் சொல் உரைத்தல் முதலியவை ஒன்றும் நிலவவில்லை.

ततो यतिक्ष्माभृदवेक्ष्य दाक्ष्यं क्षोदक्षमं तस्य विचक्षणस्य ।
चिक्षेप तं क्षोभितसर्वपक्षं विद्वत्समक्षाप्रतिभातकक्ष्यम् ॥ ७४

பிறகு யதிச்சக்ரவர்த்தியாகிய ஸ்ரீசங்கரர், எல்லா ஆக்ஷேபங்களுக்கும் பதில் கூறும் மண்டனருடைய திறமையைக்கண்டு மகிழ்ந்து கடைசியில் தன் வன்மையினுல் அவருடைய கொள்கையை அறவே அறுத்து, அறிஞர்கள் நிரம்பிய அந்த அவையில் அவரை மேலே யுக்திகூற வன்மையற்றவராகச் செய்தார். ஆயினும் மனதிலுள்ளதை கூறும்படி தூண்டினுர்.

ततः स्वसिद्धान्तसमर्थनाय प्रागल्भ्यहीनोऽपि स सभ्यमुख्यः ।
जगाद वेदान्तवचः प्रसिद्धमद्वैतसिद्धान्तमपाकरिष्णुः ॥ ७५

அறிஞர்களின் அவையில் நன்கு விளங்குகின்ற அந்த மண்டனபண்டிதர் தனது மதத்தின் சித்தாந்தத்தை சிறப்பிக்க முடியாதவராயினும் வேதாந்தங்களில் கூறும் அத்வைதமான பரமாத்மவஸ்துவை நிராகரிக்க வசனத்தை தொடர்ந்தார்.

भो भो यतिक्ष्माधिपते भवद्भिर्जीवेशयोर्वास्तवमैकरूप्यम् ।
विशुद्धमङ्गीक्रियते हि तत्र प्रमाणमेवं न वयं प्रतीमः ॥ ७६

யதிகளுக்கரசே! ஜீவனுக்கும் பரமாத்மனுக்கும் உண்மையான அபேதம் உங்களால் கூறப்படுகிறதன்றோ! அதற்கு யாம் பிரமாணத்தைக் காணோம்.

स प्रत्यवादीदिदमेव मानं यच्छ्वेतकेतुप्रमुखान्विनेयान् ।
उद्दालकाद्या गुरवो महान्तः संग्राहयन्त्यात्मतया परेशम् ॥ ७७

ஸ்ரீசங்கரர் கூறினுர்: - ''உத்தாலகர், யாக்ஞவல்க்யர் முதலிய ஆசிரியர்கள் சுவேதகேது, ஜனகர் முதலிய சிஷ்யர்களுக்கு (1) तत्त्वमसि श्वेतकेतो, (2) अभयं वै जनक प्राप्तोऽसि, (3) अहं ब्रह्मास्मि என்றவைபோன்ற வசனங்களால் ஜீவனுக்கும் பரமாத்மனுக்கும் பேதமில்லை என்று உபதேசம் செய்கின்றனர். அந்த வசனங்களே பிரமாணமாகும்.''

((1) ஹே சுவேதகேதுவே! நீ அந்த பிரம்மவஸ்துவாகவே இருக்கிருய். (2) ஹே ஜனகரே! அந்த பிரம்மவஸ்துவை 'நான்' என்று உண்மையாக அறிந்தமையால் பயமற்ற நிலைமையை அடைந்துள்ளீர். (3) நான் பிரம்மமாகவே இருக்கிறேன், என்று மேற்கூறிய வசனங்களின் பொருள்.)

மண்டனபண்டிதர் ஆக்ஷேபிக்கின்ருர்:-

वेदावसानेषु हि तत्त्वमादिवचांसि जप्तान्यघमर्षणानि ।
हुंफण्मुखानीव वचांसि योगिन्नैषां विवक्षाऽस्ति कुहस्विदर्थे ॥ ७८

''யோகியே! खट् फट् जहि, हुं फट् स्वाहा என்றவைபோல் சில வசனங்கள் உள்ளனவல்லவா? அவைகளுக்கு தனிப்பட்டமுறையில் பொருள் இல்லை. ஆயினும் அவைகளை ஜபம் செய்தால் பாபங்கள் விலகுகின்றன. அதுபோலவே உபநிஷத்துக்களும் ஜீவபரமாத்மாக்களின் அபேதத்தை உணர்த்தாவிடினும் ஜபம் செய்வதினால் பாபங்களை நீக்குகின்றனவேயன்றி உண்மையான 'அபேதம்' என்ற பொருளை கொண்டவையல்ல.''

ஸ்ரீ சங்கரர் கண்டிக்கிறார்:-

अर्थाप्रतीतौ किल हुंफडादेर्जपोपयोगित्वमभाणि विज्ञैः ।
अर्थप्रतीतौ स्फुटमत्र सत्यां कथं भवेत्प्राज्ञ जपार्थतैव ॥ ७९

புத்திமானே! 'हुं फट्' போன்ற சொற்களுக்கு பொருளில்லாமையால் ஜபத்திற்கு மட்டும் உபயோகமானவை என்று சிறந்த அறிஞர்களால் தீர்மானம் செய்யப்பட்டுள்ளது. இங்கு (உபநிஷத்துக்களில்) ஜீவபரமாத்மாக்களின் 'அபேதம்' என்ற பொருள் இருக்கையில் அப்படிக்கூறுதல் சரியன்று.

(செயலில் சம்பந்தப்படாத (ஸித்தமான) பொருளை பிரமாணம் கூறாது என்ற கொள்கை அர்த்தமற்றது. ஏனெனில், பிரத்யக்ஷப்பிரமாணம் எவ்வித செயலிலும் சம்பந்தப்படாத பொருள்களை விளக்குகின்றதல்லவா? அவ்விதமே வேதமும் ஸித்தமான பிரம்மவஸ்துவை உணர்த்துகின்றது என்ற கொள்கையை முன்னிட்டு ஸ்ரீ சங்கரர் மண்டனமதத்தை மறுக்கிறார்.)

आपाततस्तत्त्वमसीति वाक्याद्यतीश जीवेश्वरयोरभेदः ।
प्रतीयतेऽथाऽपि मखादिकर्तृप्रशंसया स्याद्विधिशेष एव ॥ ८०

மண்டனர்:-யதீசுவரரே! 'தத்வமஸி' போன்ற வாக்கியங்களில் ஜீவனுக்கும், பரமாத்மனுக்கும் அபேதம் ஸ்தூலமாகத் தோன்றியபோதிலும், அதனை உண்மையெனக் கருத்துக்கொள்ளக்கூடாது. யாகம் முதலிய கர்மங்களைச் செய்கின்றமையால் கர்த்தாவான ஜீவனை 'ஈசுவரன்' என்று புகழ்ந்து கூறுகின்றது எனவே கருத்து. ஆகையால், பிரவிருத்திமார்க்கத்தை போதிக்கும் வசனங்களை பின்பற்றியதேயாகும் உபநிஷத்துக்களும். ஆத்மாவிற்கு வேள்விகளில் தொடர்புள்ளமையால் அந்த ஆத்மாவும் கர்மமார்க்கத்திற்கு அங்கம்.

क्रत्वङ्गयूपादिकमर्यमादिदेवात्मना वाक्यगणः प्रशंसन् ।
शेषः क्रियाकाण्डगतो यदि स्यात्काण्डान्तरस्थोऽपि भवेत्कथं सः ॥ ८१

ஸ்ரீ சங்கரர்:-வேள்விகளில் சம்பந்தப்பட்டமையால் 'யூபம்' முதலிய பொருள்களை 'आदित्यो युपः' என்றவைபோன்ற வசனங்கள் 'யூபஸ்தம்பம் சூரியன்' என்று புகழ்ந்து கூறுகின்றன என்பது சரி. மேற்கூறிய வசனங்கள் கர்மகாண்டங்களில் உள. அவைகளிலிருந்து வேறான ஞானகாண்டத்திலுள்ள வசனங்களை கர்மகாண்டங்களுடன் சம்பந்தப்படுத்தி பொருள் விளக்கம் எவ்வாறு தகும்?

तर्ह्यस्तु जीवे परमात्मदृष्टिविधायकः कर्मसमृद्धयेऽर्हन् ।
अब्रह्मणि ब्रह्मधियं विधत्ते यथा मनोऽन्नार्कनभस्वदादौ ॥ ८२

மண்டனர்:- பூஜிக்கத்தக்கவரே! (1) मनो ब्रह्मेत्युपासीत, (2) आदित्यो ब्रह्मेत्युपासीत, (3) खं ब्रह्म ((1) மனதை பிரம்மமென்று உபாஸனை செய்ய வேண்டும், (2) சூரியனை பிரம்மமாக உபாஸனை செய்யவேண்டும், (3) ஆகாயம் பிரம்மம்) என்று பிரம்மவஸ்து வல்லனவாகிய மனது முதலியவற்றை பிரம்மமாக உபாஸனை செய்யும்படி விதிப்பதுபோல், ஜீவனை பிரம்மமாக உபாஸனை செய்யவேண்டும் என்று 'तत्त्वमसि' என்ற வசனத்திற்கு கருத்துக்கொள்வோம்.

संश्रूयतेऽन्यत्र यथा लिङादिर्विधायको ब्रह्मविभावनाय ।
तथा विधेरश्रवणान्मनीषिन् संजाघटीत्यत्र कथं विधानम् ॥ ८३

ஸ்ரீ சங்கரர்:- புத்திமானே! அந்த வசனங்களில் 'உபாஸனை செய்ய வேண்டும்' என்பதற்குரிய விதியைக் கூறும் சொற்கள் உள. இவ்விடத்தில் தத்வமஸி என்ற வசனத்தில் அவ்வாறு விதியைக் கூறும் சொல் இல்லையல்லவா? எவ்வாறு விதிவாக்கியம் என்று உரைக்கலாம்?

यद्वत्प्रतिष्ठाफलदर्शनेन विधिर्यतीनां वर रात्रिसत्रे ।
प्रकल्प्यते तद्वदिहापि मुक्तिफलश्रुतेः कल्पयितुं स युक्तः ॥ ८४

மண்டனபண்டிதர்:- ஸன்னியாசிகளில் சிறந்தவரே! 'ராத்திரி ஸத்ரம், என்ற யாகத்தைக் கூறும் வசனத்தில் விதியைக் கூறும் சொல் இல்லாவிடினும், 'प्रतितिष्ठन्ति ह वै य एता रात्रीरुपयन्ति' (இந்த ராத்திரி ஸத்ரத்தை எவர்கள் செய்கின்றனரோ அவர்கள் பிரதிஷ்டையை அடைகின்றனர்) என்று பயனைக் கூறும் வாக்கியம் இருப்பது பற்றி விதியை அமைத்துப் பயனைக் கூறுகின்றனர். அதுபோலவே இங்கும், தத்வமஸி என்றவிடத்திலும், 'முக்தி' என்ற பயன் கூறப்படுவதால் விதியைக் கற்பித்துக் கூறுதல் தக்கதாகும்.

तर्हि क्रियाजन्यतया विमुक्तिः स्वर्गादिवद्धन्त विनश्वरा स्यात् ।
उपासना कर्तुमकर्तुमन्यथा वा कर्तुमर्हा मनसः क्रियैव ॥ ८५

ஸ்ரீசங்கரர்:- அப்படியாகில் 'முக்தி' செயலினால் உண்டாகுகிறது என்று அர்த்தம். உபாஸனை மனதின் செயல். அந்தச் செயல் செய்யத்தக்கதாகவும், செய்யத்தகாததாகவும், வேறுவிதம் செய்யத்தக்கதாகவும் இருக்கிறது. (போகிறான், ஓடுகிறான், வண்டியில் போகிறான், போகாமலிருக்கிறான், என்றிவ்விதம் செயல் செயலாற்றுகிறவனுடைய விருப்பத்தை பின்பற்றியது). அவ்வாறு மனதின் செயலாகிய உபாஸனையின் பயனாகிய 'முக்தி'யும் அழிவுள்ளதாகுமேயன்றி நித்தியசுகமாகாது.

'முக்திசுகம்' அழியக்கூடியதாயின் விண்ணுலகசுகத்திற்கும் அதற்கும் பேதமில்லை. இரண்டும் அழியக்கூடியவை. செயலினால் உண்டாகும் பயனும் அழிவுள்ளது என்பதற்கு அனுபவமும் யுக்தியும் பிரமாணங்கள். ஆகவே, வேறுவிதத்தில் மண்டனபண்டிதர் ஆக்ஷேபத்தைக் கிளப்புகிறார்:-

मा भूदिदं तत्त्वमसीति वाक्यमुपासनापर्यवसायि कामम् ।
किन्त्वस्य जीवस्य परेण साम्यप्रत्यायकं सत्तम बोभवीतु ॥ ८६

மிக்கச் சிறந்தவரே! 'तत्त्वमसि' (தத்வமஸி) என்ற வாக்கியம் உபாஸனுவிதியைக் கூறவேண்டாம். ஆனல், ஜீவாத்மாவிற்கும் பரமாத்மாவிற்கும் ஒப்புமையைக் கூறுவதாக இருக்கட்டும்.

किं चेतनत्वेन विवक्ति साम्यं सार्वज्ञ्यसार्वात्म्यमुखैर्गुणैर्वा ।
आद्ये प्रसिद्धं न खलूपदेश्यमन्ते स्वसिद्धान्तविरुद्धता स्यात् ॥ ८७

ஸ்ரீசங்கரர்:- ஜீவபரமாத்மர்களுடைய ஒப்புமையை 'தத்வமஸி' என்ற வாக்கியம் கூறுவதாகில், சேதனத்தன்மையினுல் ஒப்புமையா? அல்லது ஸர்வக்ஞத்வம், ஸர்வாத்மத்வம் என்ற குணங்களைக்கொண்டு ஒப்புமையா? எந்தவகையில் என்பதை நிரூபணம் செய்ய வேண்டும். சேதனத்தன்மையைப் பின்பற்றி கூறுகிறதாயின் அதற்கு இந்த சாஸ்திரம் தேவையில்லை. அந்த ஒப்புமை எல்லோருக்கும் விளக்கமான விஷயமே. எல்லோருக்கும் விளக்கமான விஷயத்தை சாஸ்திரம் புதிதாக உபதேசம் செய்கின்றது என்பதை ஒரு மதத்தினரும் ஒப்புக்கொள்ளுகிறதில்லை. ஆகவே முதல் விகற்பம் சரியன்று. ஸர்வக்ஞத்வம், ஸர்வாத்மத்வம் என்ற குணங்களைக்கொண்டு ஒப்புமையைக் கூறுதல் என்பது உமது சித்தாந்தத்திற்கு (மீமாம்ஸாமதத்திற்கு) முரணுகும். ஆகையால் இரண்டாவது விகற்பமும் சரியன்று.

नित्यत्वमात्रेण मुने परात्मगुणोपमानैः सुखबोधपूर्वैः ।
गुणैरविद्यावृतितोऽप्रतीतैः साम्यं ब्रवीत्वस्य ततो न दोषः ॥ ८८

மண்டனமிச்ரர்:- முனிவரே! ஆனந்தம், அறிவு என்பவைபோன்ற குணங்கள் பரமாத்மனுக்கு உள. ஜீவனுக்கும் அவை உள்ளவையாயினும் அவித்தையினுல் அந்த குணங்கள் மறைந்துள்ளன. இத்தகைய வித்தியாஸம் இருப்பினும் நித்தியத்வம் இருவருக்கும் சமமானது பற்றி அந்த குணத்தைப் பின்பற்றி 'தத்வமஸி' என்ற வாக்கியம் ஒப்புமையைக் கூறுகின்றது. ஆகையால் தாங்கள் கூறிய தோஷமில்லை.

यद्येवमेतस्य परत्वमेव प्रत्याययत्वत्र दुराग्रहः कः ।
त्वयैव तस्य प्रतिभासशङ्का विद्वन्नविद्यावरणान्निरस्ता ॥ ८९

ஸ்ரீசங்கரர்:- அறிஞரே! அப்படியாகில் அந்த ஜீவனுக்குப் பரமாத்மத்வம்தான் என்பதைக் கூறுவதில் என்ன தடையிருக்கிறது? அவ்விருவருக்கும் வேற்றுமையைக் கூறுவதில் ஏன் பிடிவாதங்கொள்ளவேண்டும்? பரமாத்மத்வம் விளங்குகிறதில்லையே. ஆகையால்தான் வேற்றுமை கூற வேண்டும் என்ற ஆக்ஷேபம் சரியன்று. ஏனெனில், அறிஞரே! அந்த ஆக்ஷேபத்திற்கு உமது வசனத்திலேயே சமாதானமிருக்கிறது. இன்பம், அறிவு போன்ற ஜீவனுடைய குணங்கள், அவித்தையினுல் மறைவுபட்டமையால் விளங்குவதில்லை என்று சமாதானம் கூறுவதுபோல், பரமாத்மத்வமும் விளங்குவதில்லை என்றே சமாதானம்.

வேறுவிதமாக மண்டனர் பொருள் விளக்குகிருர்:-

भोश्चेतनत्वेन शरीरिसाम्यमावेद्यतामस्य जगत्प्रसूतेः ।
चिदुत्थितत्वेन परोदितस्याप्यणुप्रधानप्रभृतेर्निरासः ॥ ९०

உலகத்திற்குக் காரணமாகிய பரமாத்மாவிற்கு சைதன்யம் என்ற குணத்தைக்கொண்டு ஜீவனுடன் ஒப்புமை கூறுதல் என்று கருத்து. அப்படிக் கூறுவதால், நையாயிகர்கள் கூறும் அணுவும், சாங்கியர்கள் கூறும் பிரதானமும் விலக்கப்படுகின்றன. (அவைகள் ஜடப்பொருள்களாதலால் ஒப்புமையில்லை என்பது திண்ணம்.)

हन्तैवमस्तीति तदा प्रयोगः स्यात्त्वन्मते तत्त्वमसीति न स्यात् ।
तदैक्षतेत्यत्र जडत्वशङ्काव्यावर्तनाचात्र पुनर्न चोद्यम् ॥ ९१

ஸ்ரீசங்கரர்:- ஆஹா! அப்படிக் கூறுகையில், (तत्) தத் = அந்த ஜகத் காரணமான பொருள், (त्वम्) த்வம் = உனக்குச் சமமாக (अस्ति) அஸ்தி = இருக்கிறது என்று படர்க்கையில் கூறவேண்டுமேயன்றி (असि) அஸி = இருக்கிறாய் என்று முன்னிலையில் கூறக்கூடாது. மேலும், உலகத்தின் காரணமான பொருள், 'நான் உலகத்தைப் படைக்கப்போகிறேன்' என்று முதலில் ஸங்கற்பம் செய்து பிறகு உலகத்தைப் படைக்கின்றதாக உபநிஷத்துக்கள் கூறுகின்றன. அத்தகைய ஸங்கற்பம் ஜடப்பொருளுக்கு நிலவாதாகையால் சேதனன்தான் சிருஷ்டிகாரணம் என்று அந்த வாக்கியங்களினாலேயே தீர்மானமாகிறது. ஆகையால், இந்தவிடத்தில் 'சிருஷ்டிகாரணம் யாது' என்ற கேள்வி எழுவதில்லை. ஆகவே ஜடப்பொருளை விளக்குதலும் இங்கு அவசியமில்லை.

न त्वेवमप्यैक्यपरत्वमस्य प्रत्यक्षपूर्वप्रमितिप्रकोपात् ।
न युज्यते तज्जपमात्रयोगिस्वाध्यायविध्याश्रितमभ्युपेयम् ॥ ९२

மண்டனர்:- ஐயா! ஆயினும் முதல் முதலாக ஏற்படுகிற பிரத்தியக்ஷப் பிரமாணம் பேதத்தை உணர்த்துகின்றது. அதற்கு முரணாக வேதம் அபேதத்தைக் கூறுதல் இயலாது. ஆகவே பிரத்தியக்ஷப்பிரமாணத்திற்கு முரணாகக் கூறும் 'தத்வமஸி' என்பனவைபோன்ற வாக்கியங்கள் கேவலம் ஜபத்திற்கு மட்டும் உபயோகப்படுபவை. வேதத்தை அத்தியயனம் செய்யவேண்டும் என்ற விதிவாக்கியத்திற்கு 'தத்வமஸி' போன்றவைகளும் லக்ஷியமாகையால் அப்படிக் கூறுதலே சிறந்தது.

अक्षेण चेद्भेदमितिस्तदा स्यादभेदवादिश्रुतिवाक्यबाधः ।
असन्निकर्षान्न भवेद्धि भेदप्रमैव तेनास्य कुतो विरोधः ॥ ९३

ஸ்ரீசங்கரர்:- இந்திரியத்தினால் பேதம் தெரிந்துகொள்ளப்படுமாகில் அபேதத்தைக் கூறும் 'சுருதி' பாதிக்கப்படும். உருவம், பொருள் முதலியவை கண்ணினால் அறியப்படுவதுபோல் 'பேதம்' அறியப்படுவதில்லை. பேதம் கண்ணுக்குப் புலனாவதில்லை. அப்படியிருக்கையில் அபேதத்தைக் கூறும் வேதவசனத்தை பேதத்தை விளக்கும் பிரத்யக்ஷப் பிரமாணம் எவ்வாறு தடைசெய்யும்?

भिन्नोऽहमीशादिति भासते हि भेदस्य जीवात्मविशेषणत्वम् ।
तत्संनिकर्षोऽस्त्वथ सम्प्रयोगाभावेऽपि भेदेन्द्रिययोर्मनीषिन् ॥ ९४

மண்டனர்:- புத்திமானே! நான் ஈசுவரனைக்காட்டிலும் வேறுபட்டவன் என்று ஞானம் நிலவுகிறது. பேதம் கண்ணுக்குப் புலப்படாவிடினும் ''பேதமுள்ளவன்'' என்ற வியவகாரம் உண்டாவதினுல் அனுபவரூபமாகிய அந்த ஞானம் அபேதசுருதியை பாதிக்கின்றது.

अतिप्रसक्तेर्न तु केवलस्य विशेषणत्वस्य तदभ्युपेयम् ।
भेदाश्रये हीन्द्रियसन्निकृष्टे न सन्निकृष्टत्वमिहात्मनोऽस्ति ॥ ९५

ஸ்ரீசங்கரர்:- பொருள், நிறம் முதலியவை கண்ணுக்குப் புலனுவது போல் பேதம் கண்ணுக்குப் புலனுகிறதில்லை. அதாவது வெவ்வேறு பொருட்கள் காணப்படுகின்றனவேயன்றி அப்பொருட்களின் வேற்றுமை கண்ணுக்குப் புலனுவதில்லை. அப்படிக் கூறினுல் 'அதிப்பிரஸக்தி' என்ற தோஷம் ஏற்படுகிறது. (கண்ணுக்குப் புலனல்லாத 'கனம்' முதலிய குணங்களுடைய பேதமும் ஏன் கண்ணுக்குப் புலனுகக்கூடாது?) அப்படியில்லை என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயமே. ஆகையால் பொறிகளில் சம்பந்தப்படக்கூடிய பொருட்களுடைய பேதத்தைத்தான் பிரத்தியக்ஷப் பிரமாணம் உணர்த்துகிறது என்று கட்டாயமாக ஒப்புக்கொள்ள வேண்டும். ஆத்மாவோ, இந்திரியங்களுடன் சம்பந்தப்படுகிறதில்லை. அப்படியிருக்கையில் அதன் பேதம் எவ்வாறு பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் உணர்த்தப்படும்?

भेदाश्रयात्मेन्द्रियसंनिकर्षो नेत्युक्तमेतच्चतुरं न यस्मात् ।
चित्तात्मनोर्द्रव्यतया द्वयोरप्यस्त्येव संयोगसमाश्रयत्वम् ॥ ९६

மண்டனர்:- பேதத்திற்கு ஆச்ரயமான ஆத்மாவிற்கு இந்திரியங்களுடன் சம்பந்தமில்லை என்று கூறுதல் சரியன்று. மனதிற்கும், ஆத்மாவிற்கும் சம்பந்தமுண்டு. (மனது இந்திரியம் என்று சிலருடைய கொள்கை.) ஆகையால், அந்த மனத்துடன் ஆத்மா சம்பந்தப்படுகிறதினுல், இந்திரியசம்பந்தமுள்ளவன்.

आत्मा विभुः स्यादथवाऽणुमात्रः संयोगिता नोभयथापि युक्ता ।
दृष्टा हि सा सावयवस्य लोके संयोगिता सावयवेन योगिन् ॥ ९७

मनोऽक्षमित्यभ्युपगम्य भेदासङ्गित्वमुक्तं परमार्थतस्तु ।
साहाय्यकृल्लोचनपूर्वकस्य दीपादिवन्नेन्द्रियमेव चित्तम् ॥ ९८

ஸ்ரீசங்கரர்:- ஆத்மா விபுவா = எங்கும் நிறைந்த பொருளா? அல்லது அணுவா = மிக்கச் சிறிய பொருளா? (என்பதை தீர்மானம் செய்ய வேண்டும்). விபு என்று கூறுகையில், எங்கும் வியாபித்த அத்தகைய பொருள் மற்ருென்றினுடன் 'ஸம்யோகம்' என்ற சம்பந்தத்தை அடைவதில்லை. (தரையில் பெட்டி, பெட்டியில் புஸ்தகம் என்றவைபோல சம்பந்தம் கூறமுடியாது.) அவயவம் உள்ள ஒரு பொருள்தான் அவயவமுள்ள மற்ருெரு பொருளுடன் சம்பந்தப்படுகிறது. யோகின் = கர்மயோகத்தில் திறமையுடையவரே!

(நித்தியகர்மங்கள் முதலியவைகளைச் செய்கின்ற தாங்கள் பொருள்களின் சம்பந்தம் எத்தகையது என்பதை உணராதவரோ என்ற உட்கருத்துடன் விளிவேற்றுமை கூறுகிறார்.)

மேலும், மனம் 'இந்திரியம்' என்று சிலருடைய கொள்கையை பின்பற்றியே ஆத்மாவிற்கு இந்திரியத்துடன் சம்பந்தமில்லை என்று கூறப்பட்டது. உண்மையில் மனது 'இந்திரியம்' அன்று. தீபம், ஒளி முதலியவை கண் முதலிய பொறிகளுக்கு உதவிபுரிவதுபோல் மனமும் அவைகளுக்கு உதவியாயிருந்துகொண்டு ஞானத்திற்குக் காரணமாகவிருக்கிறது. ஆகையால் பேதஞானம் இந்திரியத்தினால் நிலவுகிறதில்லை.

भेदप्रमा नेन्द्रियजाऽस्तु तर्हि साक्षिस्वरूपैव तथाऽपि योगिन् ।
तया विरोधात्परमात्मजीवाभेदं कथं बोधयितुं प्रमाणम् ॥ ९९

மண்டனர்:- யோகியே! பேதஞானம் இந்திரியத்தினால் உண்டாவதில்லை யாயினும் ஸாக்ஷிஸ்வரூபமாகவே இருக்கிறது. (மானஸப்பிரத்தியக்ஷஞானம் என்போம்.) அத்தகைய ஸாக்ஷிஞானம் பேதத்தை உணர்த்துகையில், அதற்கு முரணாக அபேதத்தை உபநிஷத்து எவ்வாறு தெரிவிக்கும்.

प्रत्यक्षमात्मेश्वरयोरविद्यामायायुजोर्द्योतयति प्रभेदम् ।
श्रुतिस्तयोः केवलयोरभेदं भिन्नाश्रयत्वान्न तयोर्विरोधः ॥ १००

ஸ்ரீசங்கரர்:- மானஸப் பிரத்தியக்ஷமான ஸாக்ஷிஞானம் அவித்தையுடன் கூடிய ஜீவனுக்கும், மாயையுடன் கூடிய பரமாத்மாவிற்கும் பேதத்தை உணர்த்துகிறது. அவித்தை, மாயை என்ற அந்த உபாதிகள் விலகினால் இருவருக்குமுள்ள அபேதத்தை உபநிஷத்து உபதேசம் செய்கிறது. ஆகையால் பிரத்தியக்ஷப்பிரமாணத்திற்கும் உபநிஷத்திற்கும் விரோதமில்லை. (ஆவரணசக்தியை முக்கியமாகக்கொண்டது அவித்யை. தான் எதனை ஆச்ரயித்துள்ளதோ அதனுடைய உண்மை நிலைமையையும் மறைத்து, வெளிப்பொருள்களையும் மறைக்கும் தன்மையுள்ளது. தன்னுடைய ஆச்ரயத்திற்கு எவ்வித மாறுதலையும் தீங்கையும் விளைவிக்காமல் பற்பல மாறுபாடுகளை வெளியில் தோற்றுவிக்கிறது மாயை. ஈசுவரனை ஆச்ரயித்தது, உலகசிருஷ்டி முதலியவற்றின் காரணம். அவித்தை ஜீவனை ஆச்ரயித்தது. உண்மையறிவை மறைக்கிறது என்ற வித்தியாஸம்.)

स्याद्वा विरोधस्तदपि प्रवृत्तं प्रत्यक्षमग्रेऽबलमेव बाध्यम् ।
प्राबल्यवत्या चरमप्रवृत्त्या श्रुत्या ह्यपच्छेदनयोक्तरीत्या ॥ १०१

முதலில் உண்டான பிரத்தியக்ஷத்துடன் சுருதிக்கு விரோதம் ஏற்பட்டாலும், பலமற்ற பிரத்தியக்ஷப்பிரமாணம், பலமுள்ளதும் பின்னர் ஏற்பட்டதுமாகிய சுருதியினால் பாதிக்கப்படுகிறது என்று ''அபச்சேதநியாயத்தை'' அனுஸரித்துக் கூறவேண்டும்.

नन्वेवमप्यस्त्यनुमानबाधोऽभेदश्रुतेः संयमिचक्रवर्तिन् ।
घटादिवद्ब्रह्मनिरूपितेन भेदेन युक्तोऽयमसर्ववित्वात् ॥ १०२

மண்டனர்:- ஸன்னியாசிச்சக்ரவர்த்தியே! ஆயினும், ஞானமற்ற குடம், வஸ்திரம் முதலிய பதார்த்தங்கள் வேறுபட்டவை என்பதுபோல் ஸர்வக்ஞனல்லாத ஜீவன் ஸர்வக்ஞனை பரமாத்மாவைக்காட்டிலும் வேறுபட்டவன் என்ற யுக்தியினுல் = அனுமானப்பிரமாணத்தினுல் அபேதசுருதிக்கு விலக்கு ஏற்படுகிறது.

किमेष भेदः परमार्थभूतः प्रसाध्यते काल्पनिकोऽथवाऽऽद्ये ।
दृष्टान्तहानिश्चरमे तु विद्वन्नूरीकृतोऽस्माभिरसाधनीयः ॥ १०३

ஸ்ரீசங்கரர்:- ''வித்வானே! ஜீவனுக்கும் பரமாத்மனுக்குமுள்ள இந்த பேதம் உண்மையானதா, கற்பனை செய்யப்பட்டதா? உண்மையென்றுல், ஒரு திருஷ்டாந்தத்தை = உதாரணத்தை விளக்கி நிரூபணம் செய்யவேண்டும். (காரியம், காரணத்தைக்காட்டிலும் வேறல்ல. ஆனதுபற்றி, காரியமாகிய பிரபஞ்சத்திற்கும் காரணமாகிய பிரம்மவஸ்துவிற்கும் உண்மையான வேற்றுமையில்லாமையால் உதாரணம் கூறுதல் இயலாது). ஆகவே, முதல் விகற்பம் சரியன்று. கற்பனையினுல் பேதம் என்றுலோ அதனை நாங்கள் ஒப்புக்கொள்ளுகிறோம். அதற்கு வேறு பிரமாணம் வேண்டியதில்லை.

स्वप्रत्ययाबाध्यभिदाश्रयत्वं साध्यं घटादौ च तदस्ति योगिन् ।
त्वयाऽऽत्मबोधेन भिदा न बाध्येत्यनभ्युपेतेति न कोऽपि दोषः ॥ १०४

மண்டனர்:- ஸ்வஞானம் = ஆத்மஞானம். அத்தகைய ஞானம் ஏற்பட்டபோதிலும் பதார்த்தங்களில் வேற்றுமை புத்தியிருக்கிறது என்று எமது கொள்கை. ஆகவே, பிரம்மத்தைக்காட்டிலும் பதார்த்தங்களில் பேதம் உண்டு என்று கூறுகிறோம். தாங்கள் ஸ்வஞானத்தினுல் = ஆத்ம ஞானத்தினுல், பேதபுத்தி நாசமடைகிறதில்லை என்று ஒப்புக்கொள்வதில்லை. (ஆத்மஞானத்தினுல், பேதபுத்தி நாசமடைகிறது என்று ஸ்ரீசங்கரருடைய கொள்கை.) ஆகையால், யாம் கூறுவது சரி என்று (மண்டனர் கூறுகிறுர்.)

ननु स्वशब्देन सुखादिमान्वा विवक्षितस्तद्विधुरोऽथवाऽऽत्मा ।
आद्योऽस्मदिष्टं ननु साध्यमन्त्ये दृष्टान्तहानिः पुनरेव ते स्यात् ॥ १०५

ஸ்ரீசங்கரர்:- ஸ்வஞானம் என்ற சொல்லில் அடங்கியுள்ள, ஸ்வ என்ற பதம் சுகம், துக்கம் முதலிய குணங்களுள்ள ஆத்மாவைக் கூறுகிறதா? அல்லது குணங்களில்லாத பரமாத்மவஸ்துவைக் கூறுகிறதா? முதல் விகற்பத்தை யாமும் ஒப்புக்கொள்கிறோம். ஜீவன், தன்னை சுகம் துக்கம் முதலிய குணங்களுள்ளவனுக உணருவதால் பேதஞானம் நீங்குவதில்லை. இரண்டாவது விகற்பத்தின்படி நிர்க்குணப் பிரம்மஞானத்தினுல் பேதஞானம் யாவும் நாசமடைகிறபடியால், தனிப்பட்ட உதாரணத்துடன் நிரூபணம் செய்ய முடியாது. (திருஷ்டாந்தமின்றி அனுமானப்பிரமாணம் கூறமுடியாதல்லவா.)

योगिन्ननौपाधिकभेदवत्त्वं विवक्षितं साध्यमिह त्वदिष्टः ।
औपाधिकस्त्वीश्वरजीवभेदो घटेशभेदो निरुपाधिकश्च ॥ १०६

மண்டனர்:- யோகியே! பதார்த்தங்களுக்கும் பரமாத்மனுக்கும் பேதம் உபாதி = காரணம் இன்றியே உள்ளது என்பதுபோல் ஜீவனுக்கும் பரமாத்மனுக்குமுள்ள பேதமும் காரணமின்றியுள்ளது. தாங்கள் ஜீவபரமாத்மர்களுடைய பேதம் காரணத்தைப் பின்பற்றினது என்று கூறுகிறீர்கள். ஆகையால், கடம் = குடம், படம் = வஸ்திரம் முதலியவைகளுக்கும் பரமாத்மனுக்குமுள்ள பேதம் எவ்வாறு உண்மையோ, அதுபோலவே ஜீவபரமாத்மர்களுடையவும் பேதம் உண்மை (காரணமில்லாதது) என்று நிரூபித்து அனுமானப்பிரமாணம் கூறுகிறோம்.

घटेशभेदेऽप्युपधिर्ह्यविद्या तवानुमानेषु जडत्वमेव ।
चित्वादभिन्नः परवत्परस्मादात्मेति वाऽत्र प्रतिपक्षहेतुः ॥ १०७

ஜடப்பொருள்களுக்கும் பரமாத்மாவிற்கும் வேற்றுமை அவித்தை என்ற உபாதியை = காரணத்தைப் பின்பற்றிக் கூறவேண்டும். ஆகையால் அந்த பேதமும் நிருபாதிகமன்று = காரணமற்றது அல்ல. மேலும், ஜீவன் சேதனனுகையால், பரமாத்மாவைக்காட்டிலும் வேறுபட்டவனன்று என்று யுக்தியிருக்கையில் பரமாத்மனுக்கும் ஜீவனுக்கும் பேதத்தைக் கூறமுடியாது.

धर्मिप्रमाबाध्यशरीरिभेदो ह्यसंसृतौ ब्रह्मणि साध्यमिष्टम् ।
त्वयेष्यते ब्रह्मधियाऽऽत्मभेदो बाध्यो घटादिप्रमया त्वबाध्यः ॥ १०८

மண்டனர்:- தர்மியாகிய = ஞானத்திற்கு விஷயமாகிய ஆத்மாவின் உண்மையான அறிவினுல் நாசமடையாத ஜீவபேதம் பிரம்மத்தினிடம் இருக்கிறது என்று எமது கொள்கை. (தன்னுடைய ஞானம் ஏற்பட்டபோதிலும் தான் = ஜீவன் பிரம்மத்தைக்காட்டிலும் வேறுபட்டவன் என்று கருத்து.) அந்த ஆத்மஞானத்தினுல் = உண்மையான பிரம்மஞானத்தினுல் வேற்றுமை நீங்குகிறது என்று உமது கொள்கை. மற்ற பொருள்களின் ஞானத்தினுல் பேதபுத்தி நீங்குகிறதில்லை என்றும் கூறுகிறீர்கள். (அதுபோல், யாம் ஆத்மஞானத்தினுல் = ஜீவாத்மஞானத்தினுல் பேதபுத்தி விலகுகிறதில்லை என்று கூறுகிறோம்.)

किं कृत्स्नधर्मिप्रमया न बाध्यः किं वा स यत्किंचनधर्मिबोधात् ।
घटाधिके ब्रह्मणि चात्मभेदस्यैक्यात् पुनः स्यान्ननु पूर्वदोषः ॥ १०९

ஸ்ரீசங்கரர்:- தர்மிஞானம் என்று கூறுதல், தர்மிகளாக = ஞானத்திற்கு விஷயமாக எல்லாப் பொருட்களையும் உட்படுத்திக் கூறுதலாயின் அனுமானத்திற்கு திருஷ்டாந்தம் கூறமுடியாது. பிரம்மவஸ்துவைத் தவிர மற்றப்பொருட்களுக்கு பேதம் உண்டு என்று கூறுகிறவர்கள்போல், சில பொருட்களுக்கும் ஜீவனுக்கும் பேதத்தையே யாமும் கூறுவதால், சில பொருளின் ஞானத்தினுல் பேதஞானம் நீங்குவதில்லை என்பது எங்களுக்கும் சம்மதமேயாகும்.

किंचागुणो वा सगुणो मनीषिन्विवक्ष्यते धर्मिपदेन नान्त्यः ।
भेदस्य तद्बुध्यविबाध्यतेष्टेर्नाद्यश्च तत्रोभयथाऽपि दोषात् ॥ ११०

மேலும், தர்மி (ஞானத்திற்கு விஷயமான பொருள்) ஸகுணமா, அல்லது நிர்க்குணமா என்று யோசிக்க வேண்டும். இரண்டாவதாகில், எங்களுக்கு அது சம்மதமே. ஸகுணஞானத்தினுல் பேதபுத்தி நீங்குகிறதில்லே. நிர்க்குணம் என்ருல் அதிலும் தோஷமிருக்கிறது.

किं निर्विशेषं प्रमितं न वाऽन्त्ये प्राप्ताऽऽश्रयासिद्धिरथाद्यकल्पे ।
शरीर्यभेदेन परस्य सिद्धेः प्राप्नोति धर्मिग्रहमानकोपः ॥ १११

நிர்விசேஷமான பிரம்மவஸ்து யதார்த்தஞானத்திற்கு (பிரமைக்கு) விஷயமா, இல்லேயா? என்று விசாரிக்க வேண்டும். இல்லேயென்ருல் ஞானத்திற்கே விஷயமாகாத ஒரு பொருளினிடம் எப்படி பேதத்தை கூறமுடியும்? ஞானவிஷயமாயிற்று என்ருல் அதனே உணர்த்தும் உபநிஷத்துக்கள் அபேதத்தைக் கூறுகையில், பேதத்தை யுக்தியினுல் ஸாதித்தல், ''யாகம் ஸ்வர்க்கபலத்தைக் கொடுக்கிறது'' என்று வேதங்கள் கூறுகையில் ''எச்சில் உமிழ்வது என்ற செயல் எவ்வாறு பயனற்றதோ, அதுபோலவே செயலாகிய வேள்வியும் பயனற்றது'' என்று திருஷ்டாந்தத்தைக் கூறி விளக்குவதற்குச் சமமாகும். வேதங்களில் நம்பிக்கையுள்ளவர் அந்த யுக்தியை சம்மதிப்பார்களா?

பிரத்தியக்ஷம் அனுமானம் என்ற இரு பிரமாணங்கள் நிராகரிக்கப் பட்டமையால், மண்டனபண்டிதர் பேதவாதத்திற்கு சுருதியை ஆதாரமாகக் கூறுகிருர்:-

भो 'द्वा सुपर्णा सयुजा सखाये'त्याद्या श्रुतिर्भेदमुदीरयन्ती ।
जीवेशयोः पिप्पलभोक्त्रभोक्त्रोस्तयोरभेदश्रुतिबाधिकाऽस्तु ॥ ११२

நல்ல இறக்கைகளுள்ள இரண்டு பறவைகள் ஒரு விருக்ஷத்தில் இருப்பதுபோல் சரீரமாகிய விருக்ஷத்தில் ஜீவன், பரமாத்மா என்ற இருவர்கள் வசிக்கின்றனர். அவர்களில் ஒருவன் (ஜீவன்) வினேகளின் பயன்களே அனுபவிக்கிருன். மற்றவன் உதாஸீனஞக பற்றற்றவஞக விளங்குகிருன் என்று வேற்றுமையைக் கூறும் 'சுருதி' அபேதவாதத்திற்கு நிவாரணம் என்று கூறுக.

प्रत्यक्षसिद्धे विफले परात्मभेदे श्रुतिर्नो नयवित्प्रमाणम् ।
स्यादन्यथा मानमतत्परोऽपि स्वार्थेऽर्थवादः सकलोऽपि विद्वन् ॥ ११३

ஸ்ரீசங்கரர்:- நியமங்களே அறிந்த அறிஞரே! பிரத்தியக்ஷப் பிரமாணத்தினுலேயே உணர்த்தப்பட்ட விஷயங்களில் சுருதியை 'பிரமாணம்' என்று கூறக்கூடாது என்பது உங்களுக்குச் சம்மதமான விஷயம். அப்படியில்லாவிடில், பிரத்தியக்ஷம் முதலிய பிரமாணங்களால் அறிந்த விஷயங்களேக் கூறும் ''அர்த்தவாதரூபமான வேதமும்'' அந்தப் பொருளில் தாத்பரியம் கொண்ட பிரமாணம் என்று கூறவேண்டியதாகும். அது ஜைமினியின் கொள்கைக்கு முரணன்ருே?

स्मृतिप्रसिद्धार्थविबोधि वाक्यं यथेष्यते मूलतया प्रमाणम् ।
प्रत्यक्षसिद्धार्थकवाक्यमेवं स्यादेव तन्मूलतया प्रमाणम् ॥ ११४

மண்டனர்:- ஸ்மிருதியில் கூறிய விஷயத்தை உணர்த்துவதாயினும், மூலகாரணமாகையால் அந்த வேதவசனத்தை பிரமாணம் என்று ஒப்புக்கொள்கிறோம். அதுபோல், பிரத்தியக்ஷப்பிரமாணத்தினுல் அறியக்கூடிய விஷயத்தைக் கூறும் வேதவசனமும் முதல்முதலாக உண்டானது பற்றி உலகப்பிரசித்தவிஷயத்தில் பிரமாணம்.

श्रुतिः स्मृतेऽर्थे यदि वेदविद्भिर्भवेन्न तन्मूलतया प्रमाणम् ।
कथं भवेद्भेदकथानभिज्ञैर्ज्ञातेऽपि भेदे परजीवयोः सा ॥ ११५

ஸ்ரீசங்கரர்:- வேதங்களை அறிந்த முனிவர்கள் இயற்றியது ஸ்மிருதி. அவர்கள் முதலில் வேதங்களினுல் அறிந்துகொண்ட விஷயங்களை ஸ்மிருதியில் இயற்றியுள்ளார். அப்படியிருக்கையில், வேதங்களை மூலப்பிரமாணம் என்று கூறவேண்டாம். (ஸ்மிருதியில் பிரஸித்தமாகிய விஷயத்தைக் கூறுவது பற்றி வேதம் பிரமாணம் என்ற கருத்தல்ல. பின் யாதெனில் வேறு பிரமாணங்களாலறியாததைக் கூறுதல்பற்றித்தான் பிரமாணம் = மற்றப் பிரமாணங்களால் அறியமுடியாத விஷயங்களை உணர்த்துவதுதான் முக்கியமான பிரமாணம் என்று பிரமாணலக்ஷணம்.) மேலும், வேதங்களையே உணராத சாதாரண ஜனங்களாலேயே பேதம் அறிந்துகொள்ளப்பட்டிருக்கிறது. பிரத்தியக்ஷத்தினுல் அறியப்பட்ட அந்த பேதத்தை வேதம் கூறுவதாயின் அதன் ''தாத்பரியம்'' அந்த பேதமல்ல என்பது உறுதி.

जीवेश्वरौ सा वदतीत्युपेत्य प्रावोचमेतत्परमार्थतस्तु ।
विविच्य सत्वात्पुरुषं समस्तसंसारराहित्यममुष्य वक्ति ॥ ११६

மேற்கூறப்பட்ட 'द्वा सुपर्णा' என்ற சுருதி ஜீவபரமாத்மாக்களைக் கூறுவதாக வைத்துக்கொண்டுக் கருத்தைக் கூறினேன். உண்மையில் அந்த சுருதி அவர்களைப்பற்றிக் கூறுகிறதில்லை. கர்மபலன்களை அனுபவிக்கும் புத்தியைக்காட்டிலும் ஆத்மா வேறு என்று விளக்கி அந்த ஆத்மாவிற்கு எவ்விதத்திலும் கர்மபந்தம் இல்லை என்பதை போதிக்கின்றது.

यदीयमाख्यात्यथ सत्त्वजीवौ विहाय सर्वज्ञशरीरभाजौ ।
जडस्य भोक्तृत्वमुदाहरन्ती प्रामाण्यमर्हन् कथमश्नुवीत ॥ ११७

மண்டனர் ஆக்ஷேபிக்கிறார்: - பூஜிக்கத்தக்கவரே! பரமாத்மாவையும் ஜீவனையும் விலக்கி புத்தியையும் ஜீவனையும் கூறுதல் தகாது. ஏனெனில், புத்தி ஜடப்பொருள். ஜடமான அந்த புத்தி வினைப்பயன்களை அனுபவிக்கிறது என்ற சொல் பொருத்தமில்லை.

न चोदनीया वयमत्र विद्वन् यतस्त्वया पैङ्गिरहस्यमेव ।
अत्तीति सत्त्वं त्वभिपश्यति ज्ञ इति स्म सम्यग्विवृणोति मन्त्रम् ॥ ११८

ஸ்ரீசங்கரர்:- வித்வானே! இந்த விஷயத்தை எம்மிடம் ஆக்ஷேபிப்பதில் பயனில்லை. ஏனெனில், பைங்கிரகஸ்யம் என்ற உபநிஷத்திலேயே மந்திரம் 'புத்தி அனுபவிக்கின்றது' என்றும் 'ஆத்மா ஸாக்ஷியாகவிருக்கிறுன்' என்றும் வியாக்கியானம் கூறுகிறது.

शरीरवाची ननु सत्त्वशब्दः क्षेनज्ञशब्दः परमात्मवाची ।
तत्राप्यतो नान्यपरत्वमस्य वाक्यस्य पैङ्गचोदितवर्त्मनाऽपि ॥ ११९

*மண்டனர்:-* 'ஸத்வ' என்ற சொல் ஜீவனையும், 'க்ஷேத்ரக்ஞ' என்ற சொல் பரமாத்மாவையும் கூறுகிறபடியால், ஜீவபரமாத்மர்களுடைய வேற்றுமையேயன்றி புத்தி ஜீவர்களை விளக்குகிறதில்லை.

तदेतदित्यादिगिरा हि चित्ते प्रदर्शिता सत्वपदस्य वृत्तिः ।
क्षेत्रज्ञशब्दस्य च वृत्तिरुक्ता शारीरके द्रष्टरि तत्र विद्वन् ॥ १२०

*ஸ்ரீசங்கரர்:-* வித்வானே! மேல் வாக்கியத்தில் तदेतत्सत्वं येन स्वप्नं पश्यति, योऽयं शरीर उपद्रष्टा स क्षेत्रज्ञस्तावेतौ सत्वक्षेत्रज्ञौ என்றுள்ளது. எதனால் கனவைக் காண்கிருனே அது ஸத்வம் = சித்தம் என்றும், அந்தக் கனவைக் காண்கிறவன் சரீரத்தில் அபிமானமுள்ள ஜீவன், க்ஷேத்ரக்ஞன் என்றும் மேற்கூறிய வாக்கியத்தின் பொருள். அதன்படி, 'द्वा सुपर्णा' என்ற சுருதி ஜீவபரமாத்மர்களை விளக்குகிறதன்று. சித்தத்தையும் ஜீவனையும் பற்றித்தான் கூறுகிறது.

येनेति हि स्वप्नदृशिक्रियायाः कर्तोच्यते तत्र स जीव एव ।
क्षेत्रज्ञशब्दाभिहितश्च योगिन् स्यात्स्वप्नदृक् सर्वविदीश्वरोऽपि ॥ १२१

*மண்டனர்:-* 'येन स्वप्नं पश्यति' என்ற வாக்கியத்தில் ஸ்வப்னத்தைப் பார்க்கிறவன் ஜீவன் என்றும் 'க்ஷேத்ரக்ஞ' சப்தத்தினுல் ஸர்வக்ஞனை பரமாத்மன் என்றும் கூறப்படுகிறது.

तिङ्प्रत्ययेनाभिहितोऽत्र कर्ता ततस्तृतीया करणेऽभ्युपेया ।
द्रष्टा च शारीरतया मनीषिन् विशेष्यते तेन स नेश्वरः स्यात् ॥ १२२

*ஸ்ரீசங்கரர்:-* तिङ्प्रत्ययத்தினுலேயே 'கர்த்தா' (எழுவாய்) கூறப்பட்டமையால் மூன்ரும் வேற்றுமை காரணத்தைக் கூறுகிறது. பார்க்கிறவன் சாரீர = சரீரத்தில் அபிமானமுள்ளவன் என்று விசேஷணபதத்தினுல் கூறப்படுகிறபடியால், அவன் ஈசுவரனல்லன்.

वृत्तिः शरीरे भवतीत्यमुष्मिन्नर्थे हि शारीरपदस्य योगिन् ।
तस्मिन् भवन् सर्वगतो महेशः कथं न शारीरपदाभिधेयः ॥ १२३

*மண்டனர்:-* 'சாரீர' என்ற சொல்லிற்கு சரீரத்திலிருப்பவன் என்று பொருள். ஹே யோகியே! எங்குமிருக்கும் ஈசுவரன் சரீரத்திலுமுளானன்ருே! ஆகவே, 'சாரீர' என்ற சொல் ஏன் ஈசுவரனைக் குறிக்காது?

भवञ्छशरीरादितरत्र चेशः कथं च शारीरपदाभिधेयः ।
नभः शरीरेऽपि भवत्यथापि न केऽपि शारीरमितीरयन्ति ॥ १२४

*ஸ்ரீசங்கரர்:-* எங்கும் நிறைந்த ஆகாயம், சரீரத்திலிருப்பதுபற்றி அதனை ஒருவனும் 'சாரீரம்' என்று கூறுகிறதில்லை. அதுபோலவே சரீரமல்லாத இடங்களிலும் வியாபித்திருக்கும் ஈசுவரனை 'சாரீரன்' என்று எவ்வாறு கூறலாம்?

यद्येष मन्त्रोऽनभिधाय जीवप्राज्ञौ वदेद्बुद्धिशरीरभाजौ ।
अत्तीति भोक्तृत्वमचेतनाया बुद्धेर्वदेत्तर्हि कथं प्रमाणम् ॥ १२५

மண்டனர்:- இந்த மந்திரம் ஜீவபரமாத்மர்களைக் கூறாமல் புத்தியையும் ஜீவனையும் பற்றிக் கூறுவதாகில், ஜடமான புத்தி கர்மபயன்களை அனுபவிக்கிறது என்பது எப்படித்தகும்?

अदाहकस्याप्ययसः कृशानोराश्लेषणाद्दाहकता यथाऽऽस्ते ।
तथैव भोक्तृत्वमचेतनाया बुद्धेरपि स्याच्चिदनुप्रवेशात् ॥ १२६

ஸ்ரீசங்கரர்:- எரிக்கும் சக்தியில்லாததாயினும், இரும்பை நெருப்பின் ஸம்பந்தத்தினால் 'இரும்பு சுடுகிறது' என்று கூறுவதுபோல் 'சித்'தினுடைய ஸம்பந்தத்தினால் ஜடமான புத்தியும் பயனை அனுபவிக்கிறது என்று கூறலாம்.

छायातपौ यद्वदतीव भिन्नौ जीवेश्वरौ तद्वदिति ब्रुवाणा ।
ऋतं पिबन्ताविति काठकेषु श्रुतिस्त्वभेदश्रुतिबाधिकाऽस्तु ॥ १२७

மண்டனர்:- இருளும் வெயிலும் எவ்வாறு வேறுபட்டவைகளோ, அது போல், கர்மபலன்களை அனுபவிக்கிற ஜீவனும், பரமாத்மாவும் வேறுபட்டவர்கள் என்று காடக சுருதி அபேத சுருதியை பாதிக்கிறது என்று கூறுவோம்.

भेदं वदन्ती व्यवहारसिद्धं न बाधतेऽभेदपरश्रुतिं सा ।
एषा त्वपूर्वार्थतया बलिष्ठा भेदश्रुतेः प्रत्युत बाधिका स्यात् ॥ १२८

ஸ்ரீசங்கரர்:- காடக வாக்கியம் உலகில் பிரசித்தமான பேதத்தை எடுத்துக்காட்டுகிறதேயன்றி புதிதாக பேதத்தை உணர்த்துகிறதில்லை. மற்ற பிரமாணங்களால் உணர்த்தப்படாத அபேதத்தை 'தத்வமஸி' என்பது போன்ற வாக்கியங்கள் உபதேசம் செய்கிறபடியால் மிக்க பலமுள்ள பிரமாணங்கள். அவைகள்தான் பேதசுருதியை பாதிக்கின்றன.

मानान्तरोपोद्बलिता हि भेदश्रुतिर्बलिष्ठा यमिनां वरेण्य ।
तद्बाधितुं सा प्रभवत्यभेदश्रुतिं प्रमाणान्तरबाधितार्थाम् ॥ १२९

மண்டனர்:- யோகிகளில் சிறந்தவரே! மற்ற பிரமாணமும் அனுகூலமாக இருப்பதுபற்றி பேதத்தைக் கூறும் சுருதியே அதிக பலமுள்ளது. மற்ற பிரமாணத்தின் பலத்துடன் கூடிய பேதசுருதி, மற்ற பிரமாணங்களுக்கு முரண்பட்ட விஷயத்தைக் கூறும் அபேத சுருதியை பாதிக்க சக்தியுள்ளது.

प्राबल्यमापादयति श्रुतीनां मानान्तरं नैव बुधाग्रयायिन् ।
गतार्थतादानमुखेन तासां दौर्बल्यसम्पादकमेव किन्तु ॥ १३०

ஸ்ரீசங்கரர்:- அறிஞர்களின் முன்னணியில் இருப்பவரே! மற்றப் பிரமாணங்கள் வேதத்திற்குப் பலத்தையளிக்கமாட்டா. நேர்மாறாக தெரிந்த விஷயத்தைக் கூறுவதால் வேதவசனத்தின் பலத்தைக் குறைப்பதாகவே ஆகும்.

इत्याद्या दृढयुक्तिरस्य शुशुभे दत्तानुमोदा गिरां
देव्या तादृशविश्वरूपरभसावष्टंभमुष्टिंधया ।
भर्तृन्यासविलक्ष्यसूक्तिजननीसाक्षित्वकुक्षिंभरिः
सश्लाघाद्भुतपुष्पवृष्टिलहरी सौगन्ध्यपाणिन्धया ॥ १३१

இவ்வாறு தன் கணவருடைய ஸன்னியாஸம் என்ற பந்தயத்தை முன்னிட்டு நடந்த ஸம்பாஷணைக்கு ஸரஸ்வதீதேவியே ஸாக்ஷியாக இருக்கையில் அந்த வாக்தேவியினாலேயே ஆமோதிக்கப்பெற்றதும், வித்வானாகிய விசுவரூபருடைய செருக்கை அறுத்ததும், ஆச்சரியமான மலர்மாரியின் பரிமளவாசனையை வென்றதுமான ஸ்ரீசங்கரருடைய சொற்பொழிவுகள் விளங்கின.

इत्थं यतिक्षितिपतेरनुमोद्य युक्तिं मालां च मण्डनगले मलिनामवेक्ष्य ।
भिक्षार्थमुच्चलतमद्य युवामितीमावाचष्ट तं पुनरुवाच यतीन्द्रमम्बा ॥ १३२

இவ்வாறு யதிச்சக்கரவர்த்தியினுடைய வசனத்தை ஆமோதித்து, மண்டனருடைய கழுத்தில் மாலையை வாடியதாகவும் கண்டு ''இருவரும் பிக்ஷைக்கு எழுங்கள்'' என்று அவர்களிடம் கூறி, பிறகு தாயாகிய அந்த ஸரஸ்வதீதேவி யதீசுவரரிடம் கூறினாள்.

कोपातिरेकवशतः शपता पुरा मां दुर्वाससा तदवधिर्विहितो जयस्ते ।
साऽहं यथागतमुपैमि शमिप्रवीरेत्युक्त्वा ससंभ्रममुं निजधाम यान्तीम् ॥ १३३

''மிக்கச் சினங்கொண்ட துர்வாஸமுனிவரால் முன்காலத்தில் சாபமளிக்கப்பட்ட எனக்கு அந்த சாபத்தின் முடிவுகாலம் தங்களுடைய வெற்றி என்று கூறப்பட்டது. சாந்தகுணமுள்ளவர்களில் சிறந்தவரே! அத்தகைய நான் வந்தவழியே போகிறேன்'' என்று கூறி விரைவாகத் தன்னுடைய உலகத்திற்குச் செல்ல முயலுகையில்,

बबन्ध निःशङ्कमरण्यदुर्गामन्त्रेण तां जेतुमना मुनीन्द्रः ।
जयोऽपि तस्याः स्वमतैक्यसिद्ध्यै सार्वज्ञतः स्वस्य न मानहेतोः ॥ १३४

முனிச்சிரேஷ்டராகிய ஸ்ரீ சங்கரர் அவளுடன் வாதஞ்செய்து ஜயிக்க விரும்பியவராக ''வனதுர்க்கா'' மந்திரத்தினால் அவளை பந்தனஞ்செய்தார். அவ்வாறு அந்த தேவியை வெல்லுதல் ''தனது மதம் கல்விகளுக்கு அதிஷ்டானதேவியாகிய அவளுக்குச் சம்மதமானது'' என்ற தீர்மானத்தைப் பெறுவதற்கேயன்றி ஸர்வக்ஞத்வத்தினாலுள்ள தன்னுடைய புகழுக்காகவில்லை.

जानामि देवीं भवतीं विधातुर्देवस्य भार्यां पुरभित्सगर्भ्याम् ।
उपात्तलक्ष्म्यादिविचित्ररूपां गुप्त्यै प्रपञ्चस्य कृतावताराम् ॥ १३५

தங்களை பிரம்மதேவருடைய மனைவியென்றும், த்ரிபுரங்களை எரித்தவருடைய ஸகோதரி என்றும், உலகத்தின் பாதுகாப்பிற்காக லக்ஷ்மி முதலிய அநேக உருவங்களை எடுத்துக்கொள்பவள் என்றும் அறிவேன்.

व्रज जननि तदा त्वं भक्तचूडामणिस्ते निजपदमनुदास्याम्यभ्यनुज्ञां यदैतुम् ।
इति निजवचनेऽस्मिञ्छारदासंमतेऽसौ मुनिरथ मुदितोऽभून्माण्डनं हृद्बुभुत्सुः॥
१३६

''தாயே! உமது சிறந்த பக்தனாகிய நான் விடையளிக்கையில் தங்களுடைய பதத்திற்குச் செல்லுவீர்களாக'' என்று கூறிய அவருடைய சொல்லை சாரதாதேவி சம்மதிக்க, முனிவராகிய ஸ்ரீசங்கரர் மண்டனருடைய மனதை அறிய விருப்பமுற்று சந்தோஷத்துடன் விளங்கினார்.

इति श्रीमाधवीये तन्मण्डनार्यकथापरः ।
संक्षेपशङ्करजये सर्गोऽसावष्टमोऽभवत् ॥ ८ ॥

இவ்வாறு ஸ்ரீமாதவரியற்றிய ஸ்ரீ சங்கரவிஜயச் சுருக்கத்தில்
ஸ்ரீசங்கரருக்கும் மண்டனருக்குமுள்ள
ஸம்பாஷணையாகிய
எட்டாவது ஸர்க்கம்
முற்றிற்று.

आदितः श्लोकाः 920



# अथ नवमः सर्गः

## ஒன்பதாவது ஸர்க்கம்

### श्रीमदाचार्यसरस्वतीसंवादः

### ஸ்ரீசங்கராசாரியருக்கும் ஸரஸ்வதிக்கும் ஸம்பாஷணை

இவ்வாறு மண்டனருடன் வாதத்தை நிரூபணஞ்செய்து, அந்த பரமாசாரியருடைய ஸர்வக்ஞத்வத்திற்குத் தகுந்த உபாயத்தைக் கூறுவதற்கு ஆரம்பிக்கிருர்:-

अथ संयमिक्षितिपतेर्वचनैर्निगमार्थनिर्णयकरैः सनयैः ।
शमिताग्रहोऽपि पुनरप्यवदत् कृतसंशयः सपदि कर्मजडः ॥ १

ஸன்யாசிச் சக்ரவர்த்தியான ஸ்ரீசங்கரகுருவின் யுக்தியுக்தங்களும், வேதங்களின் கருத்தின் தீர்மானத்தை விளக்குகின்றவைகளுமான சொற்களால் அறிவுணர்ந்தபோதிலும், கர்மமார்க்கத்திலேயே ஈடுபட்ட அந்த மண்டன பண்டிதர் சந்தேகமுற்றவராக மீண்டும் கூறினுர்.

यतिराज संप्रति ममाभिनवान्न विषादितोऽस्म्यपजयादपि तु ।
अपि जैमिनीयवचनान्यहहोन्मथितानि हीति भृशमस्मि कृशः ॥ २

யதிகளுக்கரசே! இப்பொழுது எனக்கு புதிதாக ஏற்பட்ட தோல்வியினுல் நான் வருந்துகிறேனில்லை. ஆயினும், ஜைமினிமுனிவருடைய வசனங்கள், குழப்பிக் கலக்கப்பட்டனவென்றுதான் மிகவும் வருந்துகிறேன்.

स हि वेत्त्यनागतमतीतमपि प्रियकृत्समस्तजगतोऽधिकृतः ।
निगमप्रवर्तनविधौ स कथं तपसां निधिर्वितथसूत्रपदः ॥ ३

மூன்று காலங்களையும் அறிந்தவரும், உலகங்கள் எல்லாவற்றிற்கும் நன்மையை செய்கின்றவருமாகிய அவர் மறைகளின் நெறியைக் காண்பிக்க நியமிக்கப்பட்டிருக்கையில் அர்த்தமற்ற ஆயிரக்கணக்கான சூத்திரங்களை இயற்றியிருப்பாரா?

इति संदिहानमवदत्तमसौ न हि जैमिनावपनयोऽस्ति मनाक् ।
प्रमिमीमहे न वयमेव मुनेर्हृदयं यथावदनभिज्ञतया ॥ ४

இவ்வாறு ஐயமுற்றுக்கூறிய அந்த மண்டனபண்டிதரை நோக்கி பரமாசாரியர் கூறினுர்: - ஜைமினிமுனிவரிடத்தில் சிறிதுகூட குறையில்லை. உண்மையையறிய வல்லமையில்லாமையால் நாம்தான் அவருடைய நியாயங்களின் கருத்தை சரியாக உணருகிறேமில்லை.

यदि विद्यते कविजनाविदितं हृदयं मुनेस्तदिह वर्णय भोः ।
यदि युक्तमत्र भवता कथितं हृदि कुर्महे दलदहंकृतयः ॥ ५

ஐயா! அறிஞர்களுக்குக்கூட புலப்படாத உட்கருத்து யாது என்று தாங்கள் சரியாக கூறினால், கல்விச் செறுக்கையறுத்து யாமும் அதனை ஏற்றுக் கொள்வோம்.

अभिसंधिमानपि परे विषयप्रसरन्मतीननुजिघृक्षुरसौ ।
तदवाप्तिसाधनतया सकलं सुकृतं न्यरूपयदिति स्म परम् ॥ ६

பரப்பிரம்மத்தினிடத்தில் கருத்துள்ளவராயினும் உலக இன்பங்களிலேயே மனப்பற்றுள்ள மனிதர்களை மதித்து அருள் செய்ய விருப்பங்கொண்டவராக மேலான சுகங்களுக்கு சாதனம் ஸத்கர்மங்கள் என்று தர்மமார்க்கத்தை நிரூபணம் செய்தார் என்பது கருத்து.

वचनं तमेतमिति धर्मचयं विदधाति बोधजनिहेतुतया ।
तदपेक्षयैव स च मोक्षपरो निरधारयन्न परथेति वयम् ॥ ७

''तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदषन्ति यज्ञेन, दानेन तपसाऽनाशकेन'' என்று மறை முறையிடுகிறது. அதன் பொருள்: - அந்தப் பரப்பிரம்மனை வேதங்களை ஓதுவதனாலும், யக்ஞத்தினாலும், தானத்தினாலும், தவத்தினாலும், உபவாசத்தினாலும் அறிந்துகொள்ள விரும்புகிறார்கள் என்பது. அதன்படி ஞானத்தை அடைய விரும்புதற்கே கர்மங்கள் காரணம் என்று கருதித்தான் தர்மங்களை நிரூபணம் செய்துள்ளாரேயன்றி வேறுவிதம் அல்ல. (ஆகையால் பரமாத்மா இல்லை என்பது ஜைமினிமுனிவருடைய கருத்தல்ல.) என்று எமது அபிப்பிராயம்.

श्रुतयः क्रियार्थकतया सफला अतदर्थकानि तु वचांसि वृथा ।
इति सूत्रयन्ननु कथं मुनिराडपि सिद्धवस्तुपरतां मनुते ॥ ८

''आम्नायस्य क्रियार्थत्वादानर्थक्यमतदर्थानाम्'' என்று ஜைமினி முனிவருடைய சூத்திரம். செய்யவேண்டிய தர்மங்களையும், செய்யக்கூடாத அதர்மங்களையும் வேதங்கள் கூறுகின்றன. ஆகையால் செயலுக்கு சம்பந்தமில்லாத சொல் அர்த்தமற்றது என்று சூத்திரம் இயற்றிய சிறந்த முனிவராகிய ஜைமினி ஸித்தமான பொருளை (பரமாத்மனை) கருத்தாகக்கொண்டவை வேதங்கள் என்று கூறமாட்டாரன்றோ? (என்று மண்டனருடைய ஆக்ஷேபம்.)

श्रुतिराशिरद्वयपरोऽपि परंपरयाऽऽत्मबोधफलकर्मणि च ।
प्रसरत्कटाक्ष इति कार्यपरत्वमसूचि तत्प्रकरणस्थगिराम् ॥ ९

வேதங்களின் தொகுதி அத்விதீயமான ஆத்மாவைத்தான் கூறுவதில் முக்கிய தாத்பரியம் கொண்டது. ஆயினும் அந்த ஞானத்திற்கு காரணங்களான கர்மங்களை போதிக்கும் பிரகரணத்திலுள்ள வாக்கியங்களில் கர்மங்கள் அவாந்தர தாத்பரியத்தைக் கொண்டவையேயன்றி முக்கிய தாத்பரியமில்லை. (காசியாத்திரை செய்து கங்காஸ்நானத்திற்கு தீர்மானம் செய்தவன் மத்தியிலுள்ள

தீர்த்தங்களை விலக்காமல் நீராடினதினுல் அவன் உத்தேசம் அதேயாகுமா? மத்தியிலுள்ள தீர்த்தங்களைத்தான் விலக்குவானு? என்பது திருஷ்டாந்தம்.)

ननु सच्चिदात्मपरताऽभिमता यदि कृत्स्नवेदनिचयस्य मुनेः ।
फलदातृतामपुरुषस्य वदन् स कथं निराह परमेशमपि ॥ १०

மண்டனர் ஆக்ஷேபிக்கிறுர்: - ஐயா! வேதங்களின் தொகுதி ஸச்சிதானந்த ரூபமான அகண்ட ஆத்மவஸ்துவைக் கூறுகிறது என்பது முனிவரின் கருத்தாயின், ஈசுவரன் பயனை அளிப்பவனல்லன், கர்மங்கள்தான் பயனை அளிக்கின்றன என்று ஈசுவரனை நிராகரித்தது முரண்பாடாகின்றதன்றோ?

ननु कर्तृपूर्वकमिदं जगदित्यनुमानमागमवचांसि विना ।
परमेश्वरं प्रथयति श्रुतयस्त्वनुवादमात्रमिति काणभुजाः ॥ ११

ஆசாரியர் பதில் கூறுகிறுர்:- ஐயா! இந்த உலகம் ஒரு கர்த்தாவினுல் ஏற்பட்டது. அந்த கர்த்தாவை வேதங்களல்லாமல் அனுமானத்தினுல் தெரிந்துகொள்ளப்பட்ட ஈசுவரனை வேதங்கள் அனுவாதம் செய்கின்றனவேயன்றி அபூர்வமாக உணர்த்துகிறதில்லை என்று நையாயிகர்கள் கூறுகிறுர்கள். (வேறு பிரமாணத்தினுல் தெரிந்து கொண்ட விஷயத்தை எடுத்துக் கூறுதல் அனுவாதம்.)

न कथंचिदौपनिषदं पुरुषं मनुते बृहन्तमिति वेदवचः ।
कथयत्यवेदविदगोचरतां गमयेत् कथं तमनुमानमिदम् ॥ १२

''तं त्वौपनिषदं पुरुषं पृच्छामि'' உபநிஷத்துக்களால் மட்டும் அறியத்தக்கவரை கூறும்படி வினவுகிறேன். ''नावेदविन्मनुते तं बृहन्तम्'' வேதத்தை அறியாதவன் அந்த பிரம்மபதார்த்தத்தையறியான் என்ற வசனங்கள் வேதம் அறியாதவன் ஆத்மாவை அறியான் என்று கூறுகையில், இந்த வேதம் அனுமானத்தினுல் அறியப்பட்ட ஆத்மாவை அனுவாதம் செய்கிறது என்பது எவ்வாறு?

इति भावमात्मनि निधाय मुनिः स निराकरोन्निशितयुक्तिशतैः ।
अनुमानमीश्वरपरं जगतः प्रभवं लयं फलमपीश्वरतः ॥ १३

மேற்கூறிய கருத்தை மனதில்கொண்டு நையாயிகருடைய அனுமான வாதத்தை யுக்திகளால் கண்டித்தார். அந்தக் கருத்துடன்தான் ஈசுவரனிடமிருந்து உற்பத்தி, ஸ்திதி, லயம் இவைகளையும் கண்டனம் செய்தார். (அனுமானம் யுக்திவாதகண்டனமேயன்றி ஈசுவரவாத கண்டனமல்ல.)

तदिहास्मदुक्तविधया निषदा न विरुद्धमण्वपि मुनेर्वचसि ।
इति गूढभावमनवेक्ष्य बुधास्तमनीशवाद्ययमिति ब्रुवते ॥ १४

ஆகையால், யாம் கூறுகிற ரீதியில் ஜைமினி முனியினுடைய வசனங்களுக்கு உபநிஷத்துக்களுடன் ஒருவித முரண்பாடும் இல்லை. இந்த ரகஸ்யமான கருத்தை உணராமல் அறிஞர்கள்கூட ''இவர் ஈசுவரனில்லை என்று மறுக்கிறவர்'' என்று கூறுகிறுர்கள்.

किमु तावतैव स निरीश्वरवाद्यभवत् परात्मविदुषां प्रवरः ।
न निशाटनाहिततमः क्वचिप्यदहनि प्रभां मलिनयेत्तरणेः ॥ १५

ஆத்மஞானிகளில் சிறந்தவராகிய அந்த ஜைமினி முனிவர் அறிவற்றவர்கள் கூறும் அந்த சொல்லினுல் நிரீசுவரவாதியாக ஆகிவிடுவாரா? இரவில் ஸஞ்சரிக்கும் கோட்டான் முதலிய பிராணிகள் சூரியனுக்கு ஒளியில்லை என்று கூறினுல், அந்தச் சொல் பகலில் பிரகாசிக்கின்ற கதிரவனுடைய ஒளியை ஒழித்துவிடுமா?

इति जैमिनीयवचसां हृदयं कथितं निशम्य यतिकेसरिणा ।
मनसा ननन्द कविराण्णितरां स शारदाश्च सदसस्पतयः ॥ १६

யதீச்வரராகிய ஸ்ரீ சங்கரபகவத்பாதருடைய இந்த வசனத்தினுல் ஜைமினி முனிவருடைய மனதிலுள்ள கருத்தைக் கேட்டு, அறிஞர்களுடைய முன்னணியில் விளங்கும் மண்டனரும், சாரதையும், சபையோர்களாகிய மற்ற வித்வான்களும் மனதினுல் ஆமோதித்தனர்.

विदिताशयोऽपि परिवर्तिमनाग्विशयः स जैमिनिमवाप हृदा ।
अवगन्तुमस्य वचसाऽपि पुनः स च संस्मृतः सविधमाप कवेः ॥ १७

அபிப்பிராயம் அறிந்தவராயினும், சிறிது சந்தேகம் சித்தத்தில் இருந்தமையால் அதனை ஜைமினியினுடைய வசனத்தினுலேயே நீக்கிக்கொள்வதற்காக மனதினுல் அவரை தியானம் செய்தார். நினைத்தமாத்திரத்திலேயே ஜைமினிமுனிவரும் வித்வானுகிய மண்டனருடைய அருகில் தோன்றினுர்.

अवदच्च शृण्विति स भाष्यकृति प्रजहाहि संशयमिमं सुमते ।
यदवोचदेष मम सूत्रततेर्हृदयं तदेव मम नापरथा ॥ १८

மண்டனரை நோக்கிச் சொல்லவும் செய்தார்: - புத்திசாலியே! கேட்பாயாக! (சூத்திர) பாஷ்யமியற்றிய இவரிடம், ஐயத்தை விட்டுவிடு. என்னுடைய சூத்திரத்தொகுதிக்கு கருத்து இவர் கூறியதுதான் சரி. வேறுவிதமான அபிப்ராயம் எனக்கு இல்லை.

न ममैव वेद हृदयं यमिराडपि तु श्रुतेः सकलशास्त्रततेः ।
यदभूद्भविष्यति भवत्तदपि ह्ययमेव वेद न तथा त्वितरः ॥ १९

யதிகளுக்கரசராகிய இவர் என்னுடைய மதத்தின் ரகஸ்யம் மட்டுமல்ல, வேதங்கள், சாஸ்திரங்கள் அனைவற்றினுடையவும் ரகஸ்யத்தை உணர்ந்தவர். இறந்தது, நடக்கிறது, வரப்போகிறது என்ற மூன்றையும் இவரைப்போல் வேறு ஒருவனும் அறியான்.

गुरुणा चिदेकरसतत्परता निरणायि हि श्रुतिशिरोवचसाम् ।
कथमेकसूत्रमपि तद्विमतं कथयाम्यहं तदुपसादितधीः ॥ २०

குருவாகிய வேதவியாஸமுனிவரால் உபநிஷத்துக்களின் கருத்து ஸச்சிதானந்தரூபமான பரமாத்மாவை உணர்த்தல் என்று கூறப்பட்டுள்ளது. அவர் புகட்டிய புத்தியைக்கொண்ட யான் அவருடைய கருத்துக்கு முரணாக ஒரு சூத்திரத்தைக்கூட சொல்லமுடியுமா?

अलमाकलय्य विशयं सुयशः शृणु मे रहस्यमिममेव परम् ।
त्वमवेहि संसृतिनिमग्नजनोत्तरणे गृहीतवपुषं पुरुषम् ॥ २१

சந்தேகம் கொள்ளவேண்டாம்; கீர்த்திபெற்றவனே! பெரிய ரகஸ்யத்தைச் சொல்லுகிறேன்; கேட்பாயாக! சம்ஸாரசமுத்திரத்தில் முழுகிய ஜனங்களை உத்தாரணம் செய்வதற்காக உடலை எடுத்து அவதரித்த புருஷன் இவர் என்று அறிந்துகொள்.

आद्ये सत्वमुनिः सतां वितरति ज्ञानं द्वितीये युगे
दत्तो द्वापरनामके तु सुमतिर्व्यासः कलौ शङ्करः ।
इत्येवं स्फुटमीरतोऽस्य महिमा शैवे पुराणे यत-
स्तस्य त्वं सुमते मते त्ववतरेः संसारवार्धिं तरेः ॥ २२

கிருதயுகத்தில் கபிலமுனிவராகத் தோன்றி ஸாதுக்களுக்கு ஆத்ம ஞானத்தை உபதேசிக்கின்றவராகவும், திரேதாயுகத்தில் தத்தாத்திரேயராகவும், துவாபரத்தில் புத்திமானான வியாஸமுனிவராகவும், கலியில் சங்கரராகவும் தோன்றியுள்ளார் என்று இவருடைய மகிமை சிவபுராணத்தில் தெளிவாக கூறப்பட்டுள்ளது. ஆகையால், புத்திமானே ! நீ இவருடைய மதத்தைப் பின்பற்றி ஸம்ஸாரமாகிய பெருங்கடலைத் தாண்டுவாயாக.

इति बोधितद्विजवरोऽन्तरधान्मनसोपगुह्य यमिनामृषभम् ।
स च यायजूकपरिषत्प्रमुखः प्रणिपत्य शङ्करमवोचदिदम् ॥ २३

இவ்வாறு மண்டனருக்கு புத்திமதிகூறி, அந்த சங்கரரை மனதில் பெற்றுக்கொண்டு மறைந்தார். யக்ஞங்கள் செய்தவர்களில் சிறந்தவரான மண்டனர், சங்கரரை வணங்கி கூறினார்.

विदितोऽस्ति संप्रति भवाञ्जगतः प्रकृतिर्निरस्तसमतातिशयः ।
अवबोधमात्रवपुरप्यबुधोद्धरणाय केवलमुपात्ततनुः ॥ २४

ஒப்புயர்வற்றவரான தாங்கள் உலகத்திற்கு காரணமானவர் என்று அறியப்பட்டவராக இருக்கிறீர். ஞானவடிவமாயதும், அஞ்ஞானிகளை உத்தாரணம் செய்வதற்காகவே உள்ளதுமான உடலுற்றவராகத் தோன்றியுள்ளீர்.

यदेकमुदितं पदं यतिवर त्रयीमस्तकै -
स्तदस्य परिपालकस्त्वमसि तत्त्वमस्यायुधः ।
परं गलितसौगतप्रलपितान्धकूपान्तरे
पतत्कथमिवान्यथा प्रलयमद्य नापत्स्यते ॥ २५

மூன்று வேதங்களுடைய சிரஸ்ஸாகிய உபநிஷத்தினுல் எந்தப் பொருள் அழிவில்லாததாகச் சொல்லப்படுகிறதோ அந்தப் பொருளைத் தாங்கள் 'तत्त्वमसि' என்ற மகாவாக்கியத்தையே ஆயுதமாகக்கொண்டு அஞ்ஞானிகளை காப்பாற்றியுள்ளீர். அப்படி செய்யாவிடில் வேதமார்க்கத்திற்கு புறம்பாகிய ஸௌகதர்களுடைய பிதற்றலான கிணற்றில் வீழ்ந்து இந்த உலகம் நாசமடையாமலிருக்குமா?

प्रबुद्धोऽहं स्वप्नादिति कृतमतिः स्वप्नमपरं
यथा मूढः स्वप्ने कलयति तथा मोहवशगाः ।
विमुक्तिं मन्यन्ते कतिचिदिह लोकान्तरगतिं
हसन्त्येतान् दासास्तव गलितमायाः परगुरोः ॥ २६

நான் கனவிலிருந்து விழித்துக்கொண்டேன் என்று எண்ணி மூடனுன மனிதன் வேருெரு கனவை நினைவாகக்கொள்ளுவதுபோல், சிலர் வேறு உலகத்திற்கு செல்லுவதையே முக்தி என்று கூறுகின்றனர். அத்தகையவர்களைக் கண்டு பரமகுருவாகிய தங்களுடைய பக்தர்கள் மாயையை விலக்கியமையால் நகைக்கின்றனர்.

मुहुर्धिग्धिग्भेदिप्रलपितविमुक्तिं यदुदयेऽप्य -
सारः संसारो विरमति न कर्तृत्वमुखरः ।
भृशं विद्वन्मोदे स्थिरतमविमुक्तिं त्वदुदितां
भवातीता येयं निरवधिचिदानन्दलहरी ॥ २७

பேதவாதிகள் சொல்லும் முக்தியை திரஸ்கரிக்கவேண்டும். ஏனெனில், அந்த முக்தியில் ஜீவன் கர்த்தாவாக இருக்கிறபடியால் பிரபஞ்சதுக்கத்திற்கு ஓய்வில்லை. அறிஞரே! தாங்கள் சொல்லும் முக்தியோவெனில், அழியாதது. பரமானந்தத்தின் பிரவாகரூபமாகியது. துக்கத்தின் கலப்பில்லாதது. ஆகையால் நான் அதனை ஆனந்தத்துடன் ஆமோதிக்கிறேன்.

अविद्याराक्षस्या गलितमखिलेशं परगुरो
पिचण्डं भित्त्वास्याः सरभसममुष्मादुदहरः ।
वृतां पश्यन् रक्षोयुवतिभिरमुष्य प्रियतमां
हनूमांल्लोकेऽड्यस्तव तु कियती स्यान्महितता ॥ २८

அரக்கனுல் அபகரிக்கப்பட்டு, அரக்கிகளின் நடுவிலிருந்த சீதையைக் கண்டு இராமனுக்கு சமாசாரம் கூறிய ஹனுமான் உலகத்தினுல் புகழத்தக்கவரானுர். பரமகுருவே! தாங்களோவெனில், அவித்தையாகிய அரக்கியால் விழுங்கப்பட்ட உலகங்களுக்கு ஈசுவரனுன பரமாத்மாவை அந்த அரக்கியின் வயிற்றைக் கீறி வெளியே கொண்டுவந்து காப்பாற்றினீர்கள். அத்தகைய தங்களுடைய மஹிமையை யார் புகழமுடியும்?

जगदार्तिहन्ननवगम्य पुरा महिमानमीदृशमचिन्त्यमहम् ।
तव यत्पुरोऽब्रवमसाम्प्रतमप्यखिलं क्षमस्व करुणाजलधे ॥ २९

உலகங்களுடைய துன்பங்களை தொலைக்கின்றவரே! முன்னமேயே உங்களுடைய அற்புதமானதும், மனதினாலறியமுடியாததுமாகிய மகிமையை உணராமல் யான் தங்களுக்கு எதிரில் கூறிய தகுதியற்ற வசனங்களை, கருணைக்கடலே! பொறுத்துக்கொள்வீராக.

कपिलाक्षपादकणभुक्प्रमुखा अपि मोहमीयुरमितप्रतिभाः ।
श्रुतिभावनिर्णयविधावितरः प्रभवेत्कथं परशिवांशमृते ॥ ३०

ஒப்பற்ற புத்தியின் திறமையுடைய கபிலர், அக்ஷபாதர், கௌதமர் முதலிய முனிவர்கள்கூட வேதத்தின் உட்கருத்தை உணருவதில் அறிவின்மையினராயினர். பரமேசுவரனுடைய அம்சமல்லாதவரால் சுருதிகளின் கருத்தை எவ்வாறு உணரமுடியும்?

समेतैरेतैः किं कपिलकणभुग्गौतमवच-
स्तमस्तोमैश्वेतोमलिनिमसमारम्भणचणैः ।
सुधाधारोद्गारप्रचुरभगवत्पादवदन-
प्ररोहद्व्याहारामृतकिरणपुञ्जे विजयिनि ॥ ३१

பகவத்பாதராகிய தங்களுடைய முகமாகிய சந்திரனிடமிருந்து அமிருததாரையின் வீழ்ச்சிபோல், இடைவிடாது பொழிந்துகொண்டேயிருக்கிற சொற்களாகிய சந்திரகிரணங்கள் வெற்றியுடன் விளங்கிக்கொண்டிருக்கையில், மனதில் அஞ்ஞானமாகிய இருளை வளரச்செய்வதில் வல்லமைகொண்ட கபிலர், கணாதர் முதலியவருடைய சொற்கள் எல்லாம் ஒன்றுசேர்ந்துந்தான் என்ன பயன்?

भिन्दानैर्देवमेतैरभिनवयवनैः सद्गवीभञ्जनोत्कै-
र्व्याप्ता सर्वेयमुर्वी क्व जगति भजतां कैव मुक्तिप्रसक्तिः ।
सद्वा सद्वादिराजा विजितकलिमला विष्णुतत्त्वानुरक्ता
उज्जृम्भन्ते समन्ताद्दिशि दिशि कृतिनः किं तया चिन्तया मे ॥ ३२

பரமாத்மாவை பேதிக்கின்றவர்களும் (இல்லையென்று கூறுகிறவர்களும் தேவவிக்கிரஹத்தை உடைக்கிறவர்களும்), நல்ல வேதங்களை நாசம் செய்வதில் உற்சாகம் உள்ளவர்களும் (கோஹத்தி செய்வதில் சந்தோஷமுள்ளவர்களும்) ஆகிய புதிதான யவனர்களால் பூமிமுழுதும் வியாபிக்கப்பட்டிருக்கையில், பக்திசெய்கிறவர்களுக்கு எங்கு, எப்பொழுதுதான் மோக்ஷம் கிட்டும்? ஆனால், உத்தமராகிய உங்களை அரசனாகக்கொண்டவர்களும், கலிதோஷத்தை நாசம் செய்கின்றவர்களும், விஷ்ணுபக்தர்களுமாகிய தங்களுடைய சிஷ்யர்கள் எல்லா திசையிலும் ஸஞ்சாரஞ்செய்கையில் எனக்கு கவலை யாது?

कथमल्पबुद्धिविवृतिप्रचयप्रबलोरगक्षतिहताः श्रुतयः ।
न यदि त्वदुक्त्यमृतसेकधृता विहरेयुरात्मविधृतानुशयाः ॥ ३३

அற்பபுத்திகளுடைய புல்லிய வியாக்கியானமாகிய மாபெரும்பாம்பினால் தீண்டப்பெற்ற சுருதிகள், தங்களுடைய சிறந்த சொற்பொழிவாகிய

அமிருதத்தினுல் உய்விக்கப்படாவிடில், தங்களிடத்தில் நம்பிக்கையுடன் = யாம் உயிருடன் வாழ்வோம் என்ற தைரியத்துடன், எவ்வாறு ஸஞ்சரிக்க முடியும்?

भवदुक्तसूक्त्यमृतभानुकरा न चरेयुरार्य यदि कः शमयेत् ।
अतितीव्रदुःसहभवोष्णकरप्रचुरातपप्रभवतापमिमम् ॥ ३४

தங்களுடைய இனிய சொற்களாகிய சந்திரகிரணங்கள் வீசாவிடில், மிகவும் கடுமையான ஸம்ஸாரமாகிய சூரியகிரணங்களாலுண்டாகும் தாபத்தை யார் தணிக்கமுடியும்?

बत कर्मयन्त्रमधिरुह्य तपःश्रुतगेहदारसुतभृत्यधनैः ।
अतिरूढमानभरितः पतितो भवतोद्धृतोऽस्मि भवकूपबिलात् ॥ ३५

ஆஹா! வினையாகிய யந்திரத்தில் சிக்கிக்கொண்டு தபஸ், கல்வி, வீடு, மனைவி, புத்திரன், வேலைக்காரர்கள், செல்வங்கள் ஆகிய பெரிய பாரம் ஆழ்த்த ஸம்ஸாரமாகிய கிணற்றில் வீழ்ந்து தத்தளிக்கின்ற யான் கருணைகொண்ட தங்களால் தூக்கி மேலே எடுக்கப்பெற்றேன்.

अहमचरं बहुतपोऽसुकरं ननु पूर्वजन्मसु न चेदधुना ।
जगदीश्वरेण करुणानिधिना भवता कथा मम कथं घटते ॥ ३६

ஸ்வாமி! நான் முன்ஜன்மங்களில் அரிய தபஞ்செய்துள்ளேன். இல்லாவிடில் கருணைக்கடலும், உலகங்களுக்கெல்லாம் ஈசுவரருமாகிய தங்களுடன் எவ்வாறு ஸம்பாஷணை நேர்ந்திருக்கும்?

शान्तिप्राक्सुकृताङ्कुरं दमसमुल्लासोल्लसत्पल्लवं
वैराग्यद्रुमकोरकं सहनतावल्लीप्रसूनोत्करम् ।
ऐकाग्रीसुमनोमरन्दविसृतिं श्रद्धासमुद्यत्फलं
विन्देयं सुगुरोर्गिरां परिचयं पुण्यैरगण्यैरहम् ॥ ३७

கணக்கிடமுடியாத புண்யங்களால் தங்களுடைய பேச்சின் பரிசயத்தை பெற்றேன். அந்தப் பரிசயம் எப்படிப்பட்டதெனில், சாந்தகுணமாக மாறுதலடைந்த பூர்வபுண்ணியத்தினுடைய முளையும், தமத்தினுடைய துளிராகவும், வைராக்கியத்திற்கு அரும்பாகவும், பொறுமையாகிய கொடியினுடைய மலராகவும், மனத்திற்கு சமாதானமாகிய மலரின் மகரந்தமும் (தேனும்) சிரத்தையின் பழமும் ஆகவுள்ளது. இத்தகைய குணங்களனைத்திற்கும் காரணமாகவும், அந்த குணங்களுள்ளவனுல் மட்டும் அடையக்கூடியதுமான அது எனக்கு கிட்டியது என்னுடைய பாக்கியத்தின் மகிமையே ஆகும்.

त्रिदिवौकसामपि पुमर्थकरीमिह संसरज्जनविमुक्तिकरीम् ।
करुणोर्मिलां तव कटाक्षझरीमवगाहतेऽत्र खलु धन्यतमः ॥ ३८

தேவர்களுக்குக்கூட புருஷார்த்தத்தையளிக்கின்றதும், ஸம்ஸாரதுக்கங்களை நீக்குகின்றதும், கருணையாகிய அலைகளின் திரளுள்ளதுமாகிய தங்களுடைய கடாக்ஷப்பிரவாகத்தில், எல்லையில்லா பாக்கியமுள்ளவன் முழுகுகிருன்.

केचिच्चञ्चललोचनाकुचतटीचेलाञ्चलोच्चालन-
स्पर्शद्राक्परिरंभसंभ्रमकलालीलासु लोलाशयाः ।
सन्त्वेते कृतिनस्तु निस्तुलयशःकोशादयः श्रीगुरु-
व्याहारक्षरितामृताब्धिलहरीदोलासु खेलन्त्यमी ॥ ३९

சிலர் ஸ்திரீகளிடம் ஆசைகொண்டவர்களாக ஸ்பர்ச உணர்ச்சி முதலிய அவர்களுடைய மார்பிலுள்ள ஆடையைத் தொடுதல்--அந்த இன்பத்தையே பெரிதாக நினைத்தால், அவர்கள் கிடக்கட்டும். புண்யசாலிகள் ஸ்ரீ குருவினுடைய சொற்பொழிவாகிய அமிருதப்பிரவாகத்திலேயே விளையாடிக் களிக்கின்றனர்.

चिन्तासन्तानतन्तुग्रथितनवभवत्सूक्तिमुक्ताफलौघै-
रुद्यद्वैशद्यसद्यःपरिहृततिमिरैर्हारिणो हारिणोऽमी ।
सन्तः सन्तोषवन्तो यतिवर किमतो मण्डनं पण्डितानां
विद्या हृद्या स्वयं तान् शतमखमुखरान् वारयन्ती वृणीते ॥ ४०

சிறப்பாக விளங்கும் தூய்மையினால் அஞ்ஞானமாகிய இருளை நாசம் செய்கின்றவைகளும், சர்ச்சை என்ற நூலில் கோர்க்கப்பட்டவைகளுமாகிய தங்களுடைய சொற்களாகிய முத்துக்களை ஹாரமாக அணிந்ததினால் அழகுடன் விளங்குகின்றவர்களாக தங்களுடைய சிஷ்யர்கள் சந்தோஷத்துடன் இருக்கிறார்கள். இதைக்காட்டிலும் பண்டிதர்களுக்கு சிறந்த அணி யாது? சிறந்த வித்யை என்ற அணங்கு இந்திரன் முதலியவர்களைக்கூட விலக்கி சந்தோஷத்தையே செல்வமாகக்கொண்ட அவர்களையே வரிக்கின்றாளன்றோ!

सन्तः सन्तोषपोषं दधतु तव कृताम्नायशोभैर्यशोभिः
सौरालोकैरुलूका इव निखिलखला मोहमाहो वहन्तु ।
धीरश्रीशङ्करार्यप्रणतिपरिणतिभ्रश्यदन्तर्दुरन्त-
ध्वान्ताः सन्तो वयं तु प्रचुरतरनिजानन्दसिन्धौ निमग्नाः ॥ ४१

தங்களுடைய உபதேசத்தைப் பெற்றுக்கொண்டதினால் விளங்குகிற கீர்த்திகளால் ஸாதுஜனங்கள் மிகவும் ஸந்தோஷத்தைப் பெறட்டும். சூரிய கிரணங்களால் கோட்டான் பறவைகள் வருத்தமுறுவதுபோல் துஷ்டர்கள் மனமயக்கத்தையடையட்டும். நாங்களோவெனில் மகாதீரரும் புத்திசாலியுமாகிய ஸ்ரீ சங்கரகுருவின் பாதங்களில் செய்த வணக்கத்தின் பயனாக இருள் நீங்கி ஆனந்தக்கடலில் ஆழ்ந்துள்ளோம்.

चिन्तसन्तानशाखी पदसरसिजयोर्वन्दनं नन्दनं ते
सङ्कल्पः कल्पवल्ली मनसि गुणनुतेर्वर्णना स्वर्णदीयम् ।
स्वर्गो दृग्गोचरस्त्वत्पदभजनमतः संविचार्येदमार्या
मन्यन्ते स्वर्गमन्यं तृणवदतिलघुं शङ्करार्य त्वदीयाः ॥ ४२

ஹே சங்கரகுருவே! தங்களை மனதில் நினைப்பது கற்பகவிருக்ஷம். பாதகமலங்களில் வணங்குதல் நந்தவனம். பூஜை செய்ய மனதில் சங்கற்பம்

கொள்ளுதல் கற்பகக்கொடி. தங்களுடைய குணங்களை வர்ணித்தல் தேவகங்கை. தங்களுடைய கடைக்கண்ணுக்கு விஷயமானவன் ஸ்வர்க்கம். ஆகையால் தங்களுடைய பக்தர்கள் மற்ற ஸ்வர்க்கத்தை புல்லாகக் கருதுகிறார்கள். (ஸ்வர்க்கம் ஸ்வர்க்கத்தை விரும்புமா?)

तदहं विसृज्य सुतदारगृहं द्रविणानि कर्म च गृहे विहितम् ।
शरणं वृणोमि भगवच्चरणावनुशाधि किङ्करममुं कृपया ॥ ४३

ஆகையால், நான் புத்திரன், மனைவி, கிருகம், செல்வம் ஆகிய அனைத்தையும் விட்டு, தங்களுடைய பாதங்களை அடைக்கலம் புகுந்துள்ளேன். அடியேனை கருணை கூர்ந்து அருள்வீராக.

इति सूनृतोक्तिभिरुदीर्णगुणः सुधियाऽऽत्मवाननुजिघृक्षुरसौ ।
समुदैक्षतास्य सहधर्मचरीं विदिताशया मुनिमवोचत सा ॥ ४४

இவ்வாறு சிறந்த புத்திசாலியான மண்டனபண்டிதருடைய பிரியமான வசனங்களைக் கேட்டு அவரை அனுக்ரஹம் செய்ய விரும்பி நற்குணங்கள் நிரம்பிய முனிவரும், அவருடைய மனைவியைக் கண்ணுற்றார். அபிப்பிராயத்தை உணர்ந்த அவள் கூறினாள்.

यतिपुण्डरीक तव वेद्मि मनो ननु पूर्वमेव विदितं च मया ।
इह भावि तापसमुखादखिलं तदुदीर्यते शृणु ससभ्यजनः ॥ ४५

யதிகளில் சிறந்தவரே! தங்கள் மனதில் உள்ளதை அறிவேன். ஸ்வாமி, இதற்கு முந்தியே யான் அறிந்துள்ளேன். ஒரு தபஸ்வியினுடைய முகத்திலிருந்து எதிர்கால செய்திகள் யாவையும் அறிந்ததைக் கூறுகிறேன். சபையிலுள்ளவர்களும், தாங்களும் கேட்பீர்களாக.

मयि जातु मातुरुपकण्ठजुषि प्रभया तडित्प्रतिभटोच्चजटः ।
सितभूतिरूषितसमस्ततनुः श्रमणोऽभ्ययादपरसूर्य इव ॥ ४६

நான் ஒருநாள் தாயாருடைய அருகில் இருக்கையில், மின்னல்போல் ஒளிவீசுகின்ற ஜடைகளுடனும், விபூதியினால் வெண்மையான உடலுடனும் விளங்கிய ஒரு முனிவர் இரண்டாவது சூரியன்போல் அவ்விடம் வந்தார்.

परिगृह्य पाद्यमुखयाऽर्हणया रचिताञ्जलिर्नमितपूर्वतनुः ।
जननी तदाऽऽत्तवरिवस्यममुं मुनिमन्वयुङ्क्त मम भाव्यखिलम् ॥ ४७

அவரை வரவேற்று பாத்யம் முதலிய உபசாரங்களால் ஆராதித்து வணங்கி கைகூப்பி என் தாயார் என் எதிர்காலத்தைப்பற்றி அம்முனிவரிடம் வினவினார்.

भगवन्न वेद्मि दुहितुर्मम भाव्यखिलं च वेत्ति तपसा हि भवान् ।
प्रणते जने हि सुधियः कथयन्त्यपि गोप्यमार्यसदृशाः कृपया ॥ ४८

பகவானே! என் புதல்வியினுடைய எதிர்காலத்தை யான் அறியேன். தவத்தின் மகிமையால் தாங்கள் எல்லாவற்றையும் அறிவீர்கள்.

புத்திமான்களாகிய சான்றோர்கள், பணிந்தவர்களிடம் கருணையுற்றவர்களாக, இரகஸ்யமான விஷயத்தையுங்கூட உரைக்கிறார்கள்.

कियदायुरवाप्स्यति सुतान् कति वा दयितं कथंविधमुपैष्यति च ।
अथ च क्रतूनपि करिष्यते मे दुहिता प्रभूतधनधान्यवती ॥ ४९

என் புதல்வியின் ஆயுள் எவ்வளவு? மக்கள் எவ்வளவு? எத்தகைய கணவனையடையப் போகிறாள்? மேலும் ஏராளச்செல்வம், தான்யலக்ஷ்மி முதலியவைகளையுடையவளாக, மறைகள் கூறும் வேள்விகளைச் செய்வாளா?

इति पृष्टभाविचरितः प्रसुवा क्षणमात्रमीलितविलोचनकः ।
सकलं क्रमेण कथयन्निदमप्यपरं जगाद सुरहस्यमपि ॥ ५०

இவ்வாறு என் தாயினால் வருங்காலத்தை வினவப்பட்ட அம்முனிவர் கணநேரம் கண்களை மூடி எல்லாவற்றையும் முறையே கூறி, ரஹஸ்யமான வேறு ஒரு விஷயத்தையும் கூறினார்.

निगमाध्वनि प्रबलबाह्यमतैरमितैरधिक्षिति खिले द्रुहिणः ।
पुनरुद्दिधीर्षुरवतीर्य खलु प्रतिभाति मण्डनकवीन्द्रमिषात् ॥ ५१

மண்ணுலகில் மறையின் நெறிமுழுதும் புறம்பான மதத்தினவர்களால் அழியவும், அதனைப் பாதுகாப்பதற்காக பிரம்மதேவர் அவதரித்து மண்டனர் என்ற சிறந்த அறிஞர் வடிவத்தில் விளங்குகிறார்.

तमवाप्य रुद्रमिव साऽद्रिसुता दुहिता तवाच्युतमिवाब्धिसुता ।
अनुरूपमाहृतसमस्तमखा ससुता भविष्यति चिरं मुदिता ॥ ५२

மலைமகளாகிய அந்த உமை மகாதேவனைக் கணவனாக அடைந்துவிளங்குவதுபோலவும், பாற்கடலிலிருந்து தோன்றிய திருமகள் அழிவற்ற ஹரியை அடைந்து விளங்குவதுபோலவும், உனது புதல்வி புத்திமானாகிய அந்த பண்டிதரைப் பதியாகப் பெற்று புதல்வர்களுடன் கூடியவளாக வெகுகாலம் மகிழ்ச்சியுடன் இல்லறம் நடத்துவாள்.

अथ नष्टमौपनिषदं प्रबलैः कुमतैः कृतान्तमिह साधयितुम् ।
ननु मानुषं वपुरुपेत्य शिवः समलंकरिष्यति धरां स्वपदैः ॥ ५३

பிறகு பலசாலிகளாகிய கெட்ட கொள்கையினரால் உபனிஷத்துக்களுடைய ரகஸியம் உணரமுடியாமல் அழிக்கப்பட்டபொழுது, அந்த வேதாந்த சித்தாந்தத்தை நிலைநிறுத்தப் பரமசிவன் மானிட வடிவம் கொண்டவராக ஆங்காங்கே யாத்திரை செய்து பூமியைப் பரிசுத்தம் செய்வார்.

सह तेन वादमुपगम्य चिरं दुहितुः पतिस्तु यतिवेषजुषा ।
विजितस्तमेव शरणं जगतां शरणं गमिष्यति विसृष्टगृहः ॥ ५४

உமது மகளுடைய கணவன், சன்னியாசிவேஷந்தரித்த அவருடன் வெகுநாள் வாதஞ்செய்து கடைசியில் தோல்வியுற்று, மனைவி

முதலியவற்றையெல்லாம் துறந்து, உலகத்தின் பாதுகாப்பை செய்த அவரை சரணமடைவார்.

इति गामुदीर्य स मुनिः प्रययौ सकलं यथातथमभूच्च मम ।
भवदीयशिष्यपदमस्य कथं वितथं भविष्यति मुनेर्वचसि ॥ ५५

இவ்வாறு கூறிவிட்டு அந்த முனிவர் சென்றார். அவர் கூறியது உண்மையாக பலித்தது. ஆகையால் இவர் தங்களுடைய சிஷ்யனாக அமர்ந்தார். முனிவருடைய சொல் பொய்யாகுமா?

अपि तु त्वयाऽद्य न समग्रजितः प्रथिताग्रणीर्मम पतिर्यदहम् ।
वपुरर्धमस्य न जिता मतिमन्नपि मां विजित्य कुरु शिष्यमिमम् ॥ ५६

புத்திமானே! ஆயினும் பிரசித்திபெற்றவர்களில் முதல்வராகிய இவரைப் பூர்த்தியாக தாங்கள் வெல்லவில்லை. ஏனெனில், இவருடைய பாதி உடலாகிய யான் வெல்லப்படவில்லையல்லவா? ஆகையால் வாதத்தில் என்னையும் வென்றபின் இவரை சிஷ்யராக ஏற்றுக்கொள்ளுங்கள்.

यदपि त्वमस्य जगतः प्रभवो ननु सर्वविच्च परमः पुरुषः ।
तदपि त्वयैव सह वादकृते हृदयं बिभर्ति मम तूत्कलिकाम् ॥ ५७

இந்த உலகத்திற்குக் காரணமும், ஸர்வக்ஞருமாகிய பரமபுருஷன் தாங்கள். ஆயினும், ஸ்வாமி! தங்களுடன் கூடவே வாதஞ்செய்வதற்கு என்னுடைய மனம் மிகவும் ஆவல்கொண்டிருக்கிறது.

इति यायजूकसहधर्मचरीकथितं वचोऽर्थवदगर्ह्यपदम् ।
मधुरं निशम्य मुदितः सुतरां प्रतिवक्तुमैहत यतिप्रवरः ॥ ५८

அநேக வேள்விகள் செய்தவராகிய அந்த மண்டனருடைய மனையாள் கூறிய இனிய பொருளடங்கிய சொல்லைக் கேட்டு மிக மகிழ்ச்சியடைந்த ஸ்ரீ சங்கரர் பதில் கூற முயன்றார்.

यदवादि कलहोत्सुकतां प्रतिपद्यते हृदयमित्यबले ।
तदसांप्रतं न हि महायशसो महिलाजनेन कथयन्ति कथाम् ॥ ५९

அபலையே! வாதஞ்செய்வதற்கு மனம் மிகவும் ஆவல்கொண்டுள்ளது என்று நீ கூறுதல் சரியன்று; பெரிய கீர்த்திபெற்றவர்கள் பெண்மணிகளுடன் வாதம் செய்யார்.

स्वमतं प्रभेत्तुमिह यो यतते स वधूजनोऽस्तु यदि वाऽस्त्वितरः ।
यतितव्यमेव खलु तस्य जये निजपक्षरक्षणपरैर्भगवन् ॥ ६०

பகவானே! தன்னுடைய மதத்தைப் பாதுகாக்க கருத்துகொண்டவர்கள் அதற்கு எதிர்வாதம் கூறுகின்றவர்கள் பெண்களாயினும், ஆண்களாயினும் அவர்களை வாதத்தில் வெல்லுவதற்கு முயலவேண்டியதவசியமன்றோ!

अत एव गार्ग्यभिधया कलहं सह याज्ञवल्क्यमुनिराडकरोत् ।
जनकस्तथा सुलभयाऽबलया किममी भवन्ति न यशोनिधयः ॥ ६१

ஆகையால்தான், யாக்ஞவல்கியமாமுனிவர் கார்க்கி என்ற பெண்மணியுடனும், ஜனகர் சுலபையென்பவளுடனும் வாதம் செய்தனர். அவர்களுடைய கீர்த்தி அதனால் குன்றியதா? இல்லை.

इति युक्तिमद्वदितमाकलयन्मुदितान्तरः श्रुतिसरिज्जलधिः ।
स तया विवादमधिदेवतया वचसामियेष विदुषां सदसि ॥ ६२

இவ்வாறு யுக்தியுடன் கூடிய அந்த வசனத்தைக் கேட்டு, வேதசமுத்திரமாகிய சங்கரர் மனதில் உவகையுற்றவராக வாக்கிற்கு அதிஷ்டானதேவியாகிய அந்த அணங்குடன் அறிஞர்களுடைய அவையில் வாதஞ்செய்ய விருப்பங்கொண்டார்.

अथ सा कथा प्रववृते स्म तयोरुभयोः परस्परजयोत्सुकयोः ।
मतिचातुरीरचितशब्दझरी श्रुतिविस्मयीकृतविचक्षणयोः ॥ ६३

பிறகு ஒருவருக்கொருவர் ஜயிக்கவேண்டுமென்ற ஆர்வமுற்றவர்களும், புத்தியின் சிறப்பினால் வெளியே பொங்குகின்ற சொற்பொழிவுகளால் வித்வான்களுடைய செவிகட்கு இனிய விருந்தினால் வியப்பளிப்பவர்களுமாகிய அவ்விருவருக்கும் வாதம் நிலவிற்று.

अनयोर्विचित्रपदयुक्तिभरैर्निशमय्य संकथनमाकलितम् ।
न फणीशमप्यतुलयन्न पपीं न गुरुं कविं किमपरं जगति ॥ ६४

ஆச்சரியமாக யுக்திகளை விளக்குகின்ற இவர்களுடைய சொற்பொழிவுகளைக் கேட்ட அவையோர்கள் ஆதிசேஷனையும், சூரியனையும், பிரகஸ்பதியையும், சுக்ராசாரியரையும் நிகராக நினைக்கவில்லையென்றால், மற்றவர்கள் அவர்களுக்கு நினைவில் வருவார்களோ!

न दिवा न निश्यपि च वादकथा विरराम नैयमिककालमृते ।
इति जल्पतोः सममनल्पधियोर्दिवसाश्च सप्त दश चात्यगमन् ॥ ६५

ஸந்தியாவந்தனம் முதலிய நியமங்களை நடத்தவேண்டிய காலமல்லாது ஒருபொழுதும், அல்லும், பகலும் அவர்களுடைய வாதம் ஓய்வடையவில்லை. இவ்வாறு அவர்களுடைய வாதம் பதினேழு தினங்கள் நடந்தன.

अथ शारदाऽकृतकवाक्प्रमुखेष्वखिलेषु शास्त्रनिचयेषु परम् ।
तमजय्यमात्मनि विचिन्त्य मुनिं पुनरप्यचिन्तयदिदं तरसा ॥ ६६

பிறகு வேதங்களிலும், அதனுடைய அங்கங்களாகிய நூல்கள் அனைவற்றிலும் அவரை மீற முடியாதெனக்கருதி சாரதை திடீரென்று மனதில் இவ்வாறு யோசித்தாள்.

अतिबाल्य एव कृतसंन्यसनो नियमैः परैरविधुरश्च सदा ।
मदनागमेष्वकृतबुद्धिरसौ तदनेन संप्रति जयेयमहम् ॥ ६७

மிக பால்லியத்திலேயே துறவியாக கிளம்பிய இவர் எப்பொழுதும் துறப்பின் சிறந்த விரதங்களேயே செய்கிறவர். ஆகையால் காமநூல்களில் புத்தியை செலுத்தாதவர். ஆகையால் அந்த நூல்விஷயத்தில் ஜயித்துவிடுகிறேன்.

इति संप्रधार्य पुनरप्यमुना कथने प्रसंगमथ संगतितः ।
यमिनं सदस्यमुमपृच्छदसौ कुसुमास्त्रशास्त्रहृदयं विदुषी ॥ ६८

இவ்வாறு தீர்மானங்கொண்டு அறிஞளாகிய அந்த அணங்கு வாதத்தில் பிரசக்தியைக் கொணர்ந்து, துறவியாகிய அவரிடம் காமசாஸ்திரத்தில் நுண்ணிய நுட்பத்தை வினவினுள்.

कलाः कियन्त्यो वद पुष्पधन्वनः किमात्मिकाः किंच पदं समाश्रिताः ।
पूर्वे च पक्षे कथमन्यथा स्थितिः कथं युवत्यां कथमेव पूरुषे ॥ ६९

புஷ்பத்தை வில்லாகக்கொண்ட மன்மதனுடைய கலைகள் எவ்வளவு? அவைகளின் ஸ்வரூபம் என்ன? எதைப் பின்பற்றியுள்ளன? சுக்லபக்ஷத்திலும், கிருஷ்ணபக்ஷத்திலும் பெண்ணினிடம் எவ்வாறு அமைந்துள்ளன? ஆணிடம் எவ்வாறு அமைந்துள்ளன?

नेतीरितः किंचिदुवाच शङ्करो विचिन्तयन्नत्र चिरं विचक्षणः ।
तासामनुक्तौ भविताऽल्पवेदिता भवेत्तदुक्तौ मम धर्मसंक्षयः ॥ ७०

சமர்த்தராகிய ஸ்ரீ சங்கரர் இந்த விஷயத்திற்கு பதில் கூறுமலேயே சிறிது யோசனை செய்தார். யாதெனில் அந்த வினுக்களுக்கு விடைகூருவிடில் அற்பக்ஞன் என்ற பெயர் கிட்டும். விடைகூறினுல் துறவறத்திற்கு குறைவு (என்று யோசனை செய்தார்.)

इति संविचिन्त्य स हृदाऽऽशु तदाऽनवबुद्धपुष्पशरशास्त्र इव ।
विदितागमोऽपि सुरिरक्षयिषुर्नियमं जगाद जगति व्रतिनाम् ॥ ७१

இவ்வாறு விரைவில் தன் மனதில் யோசனைசெய்து, காமநூல்களே யறிந்தவராயினும், துறவிகளுடைய நியமங்களே உலகத்தார்களுக்கு கற்பிக்க விரும்பியவராக அந்த நூலே அறியாதவர்போலப் பாசாங்கு செய்தார்.

इह मासमात्रमवधिः क्रियतामनुमन्यते हि दिवसस्य गणः ।
तदनन्तरं सुदति हास्यसि भोः कुसुमास्त्रशास्त्रनिपुणत्वमपि ॥ ७२

இந்தக் கலைகளேப்பற்றி விடைகூறும் விஷயத்தில் ஒரு மாதம் அவகாசம் அளிக்கவேண்டும். இத்தகைய சந்தர்ப்பங்களில் அவ்வாறு நாட்களே அனுமதிப்பது உலகவழக்கம். அதற்குப்பிறகு காமசாஸ்திரத்திலுள்ள வல்லமையை நீர் இழப்பீர்.

उररीकृते सति तथेति तयाऽऽक्रमते स्म योगिमृगराड् गगनम् ।
श्रुतविग्रहः श्रुतविनेययुतो दधदभ्रचारमथ योगदृशा ॥ ७३

'சரி' என்று ஸரஸ்வதியால் ஒப்புக்கொள்ளப்பட்டபொழுது, பிரசித்தமான உருவத்தையுடையவரும், கல்வியில் சிறந்த சிஷ்யர்களுடன் கூடியவரும்

யோகிகளுக்கு அரசருமாகிய ஸ்ரீ சங்கரர் தனது யோகசக்தியின் மகிமையால் ஆகாயமார்க்கத்தில் ஸஞ்சாரத்தை செய்தார்.

स ददर्श कुत्रचिदमर्त्यमिव त्रिदिवच्युतं विगतसत्त्वमपि ।
मनुजेश्वरं परिवृतं प्रलपत्प्रमदाभिरार्तिमदमात्यजनम् ॥ ७४

ஒரு காட்டில், சுற்றிலும் புலம்பிக்கொண்டிருக்கும் பெண்களும், வருத்தமுற்று நிற்கின்ற மந்திரிகளும் சூழ்ந்திருக்கும் ஒருவிடத்தில் உயிர் நீங்கிய போதிலும் தேவலோகத்திலிருந்து மண்ணுலகில் விழுந்த ஒரு தேவன் போன்ற அரசன் தரையில் கிடப்பதைக்கண்டார்.

अथो निशाखेटवशादटव्यां मूले तरोर्मोहवशात्परासुम् ।
तं वीक्ष्य मार्गेऽमरुकं नृपालं सनन्दनं प्राह स संयमीन्द्रः ॥ ७५

இரவில் வேட்டையாடி மயக்கமுற்று மரத்தினடியில் உயிர்நீங்கிப் படுத்திருக்கும் அமருகனென்ற அரசனைக்கண்டு, ஐம்பொறிகளை அடக்கியவர்களின் அரசனாகிய ஸ்ரீ சங்கரர் ஸனந்தனரிடம் கூறுகிறார்.

सौन्दर्यसौभाग्यनिकेतसीमाः परःशता यस्य पयोरुहाक्ष्यः ।
स एव राजाऽमरुकाभिधानः शेते गतासुः श्रमतो धरण्याम् ॥ ७६

அழகினுடையவும், பாக்கியத்தினுடையவும் ஒப்பற்றத் தங்குமிடமாகிய நூற்றுக்கணக்கான மங்கையர்கள் எந்த அரசனுடைய அந்தப்புரத்தை யழகுபடுத்துகின்றனரோ, அந்த அமருகன் என்ற அரசன் இதோ இங்கு உயிர் நீங்கி தரையில் கிடக்கிறான்.

प्रविश्य कायं तमिमं परासोर्नृपस्य राज्येऽस्य सुतं निवेश्य ।
योगानुभावात्पुनरप्युपैतुमुत्कण्ठते मानसमस्मदीयम् ॥ ७७

யோகசக்தியினால் இந்த அரசனுடைய உடலில் புகுந்து, இவனுடைய புதல்வனை சிங்காஸனத்திலமர்த்தி பிறகு அந்த உடலைவிட்டு வெளியே வர வேண்டும் என்று எமது மனம் மிகவும் ஆர்வங்கொண்டுள்ளது.

अन्यादृशानामदसीयनानाकुशेशयाक्षीकिलकिञ्चितानाम् ।
सर्वज्ञतानिर्वहणाय सोऽहं साक्षित्वमप्याश्रयितुं समीहे ॥ ७८

ஸரஸ்வதியினால் வினவப்பட்ட யான், ஸர்வக்ஞத்துவத்தை நிலைநிறுத்துவதற்காக அந்த அரசனுடைய அணங்குகளின் கோபம், சந்தோஷம் முதலியவைகளால் நிலவும் கண்ணீர் முதலிய விகாரங்களைக் கண்ணுறவேண்டும் என விரும்புகிறேன். (சிருங்காரசேஷ்டைகளுக்கு சாக்ஷியாக இருக்க விரும்புகிறேன் என்று கூறுகிறார். ஆகையால், தான் அவைகளுக்கு சம்பந்தப் படுகிறதில்லை என்று கருத்து. வாதிப்பிரதிவாதிகளுடைய செயலுக்கு உடன்படாதவனன்றோ சாக்ஷி என்பது உலகில் பிரசித்தமான விஷயம்.)

इत्यूचिवांसं यतितल्लजं तं सनन्दनः प्राह ससान्त्वमेनम् ।
सर्वज्ञ नैवाविदितं तवास्ति तथाऽपि भक्तिर्मुखरं तनोति ॥ ७९

இவ்வாறு கூறிய துறவிசிரேஷ்டரிடம் ஸனந்தனர் இனிய வாக்கினுல் பதில் உரைத்தார். ஸர்வக்ஞரே! தங்களுக்கு தெரியாத விஷயம் ஒன்றுமில்லே. ஆயினும் தங்களிடமுள்ள பக்தி என்னைப் புகலத் தூண்டுகிறது.

मत्स्येन्द्रनामा हि पुरा महात्मा गोरक्षमादिश्य निजाङ्गगुप्त्यै ।
नृपस्य कस्यापि तनुं परासोः प्रविश्य तत्पत्तनमाससाद ॥ ८०

முன்காலத்தில் மத்ஸ்யேந்திரன் என்ற ஒரு மகான், கோரக்ஷன் என்ற தன்னுடைய சிஷ்யனை தன்னுடைய உடலே பாதுகாக்கும்படி நியமித்து, உயிர் நீங்கிய ஒரு அரசனுடைய உடலில் புகுந்து அவனுடைய பட்டணத்தில் பிரவேசித்தார்.

भद्रासनाध्यासिनि योगिवर्ये भद्राण्यनिद्राण्यभवन्प्रजानाम् ।
ववर्ष कालेषु वलाहकोऽपि सस्यानि चाशास्यफलान्यभूवन् ॥ ८१

யோகிசிரேஷ்டர், சிங்காஸனத்திலமர்ந்து அரசாக்ஷிபுரிகையில், பிரஜைகளுக்கு நன்மைகள் செழித்து வளர்ந்தன. காலத்தில் மாரி உண்டாயிற்று. பயிர்கள் செழித்து ஓங்கின.

विज्ञाय विज्ञाः सचिवा नृपस्य काये प्रविष्टं कमपीह दिव्यम् ।
समादिशन्राजसरोरुहाक्षीः सर्वात्मना तस्य वशीक्रियायै ॥ ८२

தேசத்தில் அற்புதமான மாறுதலேக்கண்டு புத்திமான்களாகிய அமைச்சர்கள் அரசனுடைய தேகத்தில் சிறந்த ஒரு திவ்யபுருஷன் புகுந்துள்ளார் என்று தீர்மானங்கொண்டு அவரை ஸ்வாதீனம் செய்துகொள்ள அந்தப்புரத்திலுள்ள மங்கையர்களைத் தூண்டினர்.

संगीतलास्याभिनयादिकेषु संसक्तचेता ललितेषु तासाम् ।
स एष विस्मृत्य पुनः समाधिं सर्वात्मना प्राकृतवद्बभूव ॥ ८३

அவர்களுடைய கானம், நர்த்தனம், அபினயம் முதலிய இனிய சிருங்காரசேஷ்டைகளில் ஈடுபட்டு, தன்னுடைய தவத்தை முழுதும் மறந்து, சாதாரண ஒரு அஞ்ஞானியான மனிதனுகவே மாறிவிட்டார்.

गोरक्ष एषोऽथ गुरोः प्रवृत्तिं विज्ञाय रक्षन् बहुधाऽस्य देहम् ।
निशान्तकान्तानटनोपदेष्टा नितान्तमस्याभवदन्तरङ्गः ॥ ८४

பிறகு இந்த கோரக்ஷன் சில நாட்கள் அவருடைய உடலேக் காப்பாற்றி வந்தார். தன்னுடைய குருவின் சமாசாரத்தை அறிந்தபிறகு, அவர் அந்தப்புரத்திலுள்ள பெண்களுக்கு நர்த்தனவித்தையை உபதேசஞ்செய்கிறவராக அமர்ந்து அவருக்கு = யோகிக்கு அந்தரங்க நண்பனுக ஏற்பட்டார்.

तत्रैकदा तत्त्वनिबोधनेन निवृत्तरागं निजदेशिकं सः ।
योगानुपूर्वीमुपदिश्य निन्ये यथापुरं प्राक्तनमेव देहम् ॥ ८५

அங்கு ஒரு நாள், அவர் தன்னுடைய ஆசிரியருக்கு யோகத்தின் தத்துவத்தை உபதேசஞ்செய்து, விஷயங்களிலுள்ள பற்றையகற்றி, அவர் தன்னுடைய தேகத்தையடையும்படிச் செய்தார்.

हन्तेदृशोऽयं विषयानुरागः किंचोर्ध्वरेतोव्रतखण्डनेन ।
किं नोदयेत्किल्बिषमुल्बणं ते कृत्यं भवानेव कृती विवेक्तुम् ॥ ८६

அந்தோ! விஷயங்களில் விருப்பம் இத்தகையது. மேலும், அந்த ஊர்த்துவரேதஸ்ஸுக்களுடைய (இந்திரியத்தையடக்கிய துறவிகளுடைய) விரதத்தையறுத்து உங்களுக்கு மிக்கப் பெரிதான பாபத்தை விளைவிக்காதா? காரியத்தை நன்கு ஆராய்வதற்கு தாங்கள்தான் வல்லவர்.

व्रतमस्मदीयमतुलं क्व महत् क्व च कामशास्त्रमतिगर्ह्यमिदम् ।
तदपीष्यते भगवतैव यदि ह्यनवस्थितं जगदिहैव भवेत् ॥ ८७

ஒப்பற்றதும், சிறந்ததுமாகிய நம்முடைய விரதம் எங்கே? மிகவும் நிந்திக்கத்தக்கதாகிய இந்த காமநூல் எங்கே? ஆயினும் ஸர்வக்ஞராகிய தாங்களே இதில் விருப்பங்கொண்டால் உலகம் இப்பொழுதே எவ்வித கட்டுப்பாடுமில்லாததாக மாறிவிடுமன்றோ?

अधिमेदिनि प्रथयितुं शिथिलं धृतकङ्कणस्य यतिधर्ममिमम् ।
भवतः किमस्त्यविदितं तदपि प्रणयान्मयोदितमिदं भगवन् ॥ ८८

குறைந்துள்ள துறவறத்தை பூமியில் பிரசித்தமாகச் செய்ய கங்கணம் கட்டியவராக (உறுதியான நிச்சயங்கொண்ட) விளங்கும் தங்களுக்கு தெரியாத விஷயம் ஒன்றுமில்லை. ஆயினும், பகவானே! பக்தியினால் இவ்வாறு கூறினேன்.

स निशम्य पद्मचरणस्य गिरं गिरति स्म गीष्पतिसमप्रतिभः ।
अविगीतमेव भवता फणितं श्रृणु सौम्य वच्मि परमार्थमिदम् ॥ ८९

பத்மபாதருடைய வசனத்தைக் கேட்டு, பிரகஸ்பதிபகவானுக்கு ஒப்பான புத்திவன்மையைப் பெற்ற பரமாசாரியர் புகலத்துவங்கினார். புத்திசாலியே! உன்னால் கூறப்பட்ட சொல் நியாயமேயாகும். ஆயினும் உண்மையைக் கூறுகிறேன் கேட்பாயாக.

असङ्गिनो न प्रभवन्ति कामा हरेरिवाभीरवधूसखस्य ।
वज्रोलियोगप्रतिभूः स एष वत्सावकीर्णित्वविपर्ययो नः ॥ ९०

கோபிமார்களுடன் லீலைகளைச்செய்த ஸ்ரீ கிருஷ்ணனுடைய யோகசக்திக்கு எவ்வாறு குறைவு ஏற்படவில்லையோ, அதுபோலவே விஷயசுகங்களில் விருப்பமற்றவனை சிற்றின்பங்கள் வசப்படுத்துவதில்லை. பாபத்தை விலக்கக்கூடிய 'வஜ்ரோளி' என்ற யோகசக்தி நம்முடைய விரதத்தைக் காப்பாற்றுகின்றது.

सङ्कल्प एवाखिलकाममूलं स एव मे नास्ति समस्य विष्णोः ।
तन्मूलहानौ भवपाशनाशः कर्तुः सदा स्याद्भवदोषदृष्टेः ॥ ९१

ஸங்கற்பம்தான் காமங்களனைவற்றிற்கும் காரணம். விஷ்ணுவிற்கு ஒப்பான எனக்கு அந்த ஸங்கற்பமே கிடையாது. ஸம்ஸாரத்தின் குறைகளையறிந்து வியவகாரம் செய்கிறவனுயினும் ஸங்கற்பம் நாசமுற்முல் ஸம்ஸாரபாசம் நாசமடைகிறது.

अविचार्य यस्तु वपुराद्यहमित्यभिमन्यते जडमतिः सुदृढम् ।
तमबुद्धतत्त्वमधिकृत्य विधिप्रतिषेधशास्त्रमखिलं सफलम् ॥ ९२

உண்மையை உணராமல் உடல் முதலியவைகளில் 'யான்' என்ற உறுதியான அபிமானத்தையுடையவஞன ஆத்மஞானமில்லாதவனைத்தான் விதிவிலக்குகளைக் கூறும் சாஸ்திரம் கட்டுப்படுத்துகின்றது.

कृतधीस्त्वनाश्रममवर्णमजात्यवबोधमात्रमजमेकरसम् ।
स्वतयाऽवगत्य न भजेन्निवसन्निगमस्य मूर्ध्नि विधिकिङ्करताम् ॥ ९३

ஆச்ரமம், வர்ணம், ஜாதி இவைகளற்று ஞானரூபமாகவும், ஆனந்தரூபமாகவுமுள்ள ஆத்மாவை உறுதியாக அறிந்தவன் உபநிஷத்துக்களின் தத்துவத்தை உணர்ந்து பெற்றமையால் விதிக்கு கட்டுப்பட்டவனுக இருப்பதில்லை.

कलशादि मृत्प्रभवमस्ति यथा मृदमन्तरा न जगदेवमिदम् ।
परमात्मजन्यमपि तेन विना समयत्रयेऽपि न समस्ति खलु ॥ ९४

எவ்வாறு மண்ணினுடைய விகாரமாகிய பாத்திரங்கள் பலவைகள், மண்ணைத்தவிர வேறல்லனவோ, அதுபோலவே, பரமாத்மனிடமிருந்து தோன்றிய உலகமனைத்தும் மூன்றுகாலங்களிலும் பரமாத்மரூபமேயன்றி வேறல்ல.

कथमज्यते जगदशेषमिदं कलयन्मृषेति हृदि कर्मफलैः ।
न फलाय हि स्वपनकालकृतं सुकृतादि जात्वनृतबुद्धिहतम् ॥ ९५

இந்த உலகமனைத்தையும் உண்மையல்லவென்று மனதில் உணர்ந்தவன் செயல்களின் பயன்களால் எப்படிப்பயன்படுத்தப்படுவான். பொய்யென்று தீர்மானம் செய்யப்பட்டதாகிய கனவில் நிலவும் புண்ணியபாபங்கள் பயனையளிக்குமா?

तदयं करोतु हयमेधशतान्यमितानि विप्रहननान्यथवा ।
परमार्थविन्न सुकृतैर्दुरितैरपि लिप्यतेऽस्तमितकर्तृतया ॥ ९६

ஆகையால் பரமதத்துவத்தை உணர்ந்தவன் நூறு அசுவமேதங்களைச் செய்தாலும், பிரம்மஹத்திகளைச் செய்தாலும் கர்த்தா என்ற அபிமானமற்றமையால் அந்த புண்ணியபாபங்களால் பாதிக்கப்படுகிறதில்லை.

अवधीत्त्रिशीर्षमददाच्च यतीन् वृकमण्डलाय कुपितः शतशः ।
बत लोमहानिरपि तेन कृता न शतक्रतोरिति हि बह्वृचगीः ॥ ९७

( त्रिशीर्षाणं त्वाष्ट्रमहनमरुन्मुखान्यतीन् सालावृकेभ्यः प्रायच्छं ''तस्य मे तत्र लोम च न मीयते, स यो मां वेद न हवै तस्य केन च कर्मणा लोको मीयते न स्तेयेन न भ्रूणहन्यया'' என்று சுருதி கூறுகிறது. )

த்வஷ்டாவின் புத்திரஞன மூன்று தலையுள்ள விச்வரூபனைக் கொன்றேன். வேதாந்தச்சொற்களைக் கூறுமலிருக்கின்ற யதிகளைத் துண்டம் துண்டமாக வெட்டி ஓநாய்களுக்கு பலியிட்டேன். ஆயினும் பிரம்மஞானியான எனக்கு இந்த பாபங்களால் ஒரு உரோமத்தில்கூட தீங்கு ஏற்படவில்லையென்றும், அத்தகைய என்னையறிந்து கொள்ளுகிறவனுக்கும் ஒரு சிறதளவுகூட கெடுதல் ஏற்படுகிறதில்லை என்று வேதங்கள் கூறுகின்றன.

बहुदक्षिणैरयजत क्रतुभिर्विबुधानतर्पयदसंख्यधनैः ।
जनकस्तथाऽप्यभयमाप परं न तु देहयोगमिति काण्ववचः ॥ ९८

ஜனகமகாராஜன் ஏராளமான தக்ஷிணைகளையளித்தும், வித்வான்களுக்கு ஸந்தோஷத்தையளித்தும் அநேக யாகங்களைச் செய்தார். ஆயினும் தேகத்தில் அகங்காரங்கொள்ளாமலிருந்தார் என்று காண்வசாகையில் கூறுகிறது.

न विहीयतेऽहिरिपुवद्दुरितैर्न च वर्धते जनकवत्सुकृतैः ।
न स तापमेत्यकरवं दुरितं किमहं न साध्वकरवं त्विति च ॥ ९९

ஆகையால் பிரம்மஞானி இந்திரன்போல் பாபச்செயல்களாலும், ஜனகர்போல் புண்ணியச்செயல்களாலும் பாதிக்கப்படுவதில்லை. ''किमहꣳसाधुनाकरवं, किमहं पापमकरवं'' = யான் என்ன நல்ல புண்ணியத்தை செய்யவில்லையோ, என்ன பாபத்தைச் செய்தேனே என்று பச்சாத்தாபப்படுகிறதில்லை.

तदनङ्गशास्त्रपरिशीलनमप्यमुनैव सौम्य करणेन कृतम् ।
न हि दोषकृत्तदपि शिष्टसरण्यवनार्थमन्यवपुरेत्य यते ॥ १००

புத்திமானே! ஆகையால் இந்த தேகத்திஞலேயே யான் காமசாஸ்திரத்தைக் கற்றுணர்ந்தாலும்கூட அதனுடைய பாபம் என்னைச் சேராது. ஆயினும் சாதுக்களுடைய வழியைப் பின்பற்றி அதனைக் காப்பாற்றுவதற்காக வேறு உடலை அடைந்து அந்த காமசாஸ்திரத்தை உணருவதற்கு முயலுகின்றேன்.

इति सत्कथाः स कथनीययशा भवभीतिभञ्जनकरीः कथयन् ।
सुदुरासदं चरणचारिजनैर्गिरिशृङ्गमेत्य पुनरेव जगौ ॥ १०१

புகழத்தக்க கீர்த்தியையுடைய அந்தப் பரமஹம்ஸர் இவ்வாறு ஸம்ஸாரபீதியை அகற்றுகிற கதைகளைக் கூறி ஜனங்கள் கால்நடையாகச் செல்வதற்கரிதான மலையின் சிகரத்தையடைந்து, பிறகும் கூறிஞர்.

अधिसानु पश्यत विभाति गुहा पुरतःशिला समतला विपुला ।
सरसी च तत्परिसरेऽच्छजला फलभारनम्रतरुरम्यतटा ॥ १०२

இந்த சிகரத்தில் ஒரு குகைக்கு முன்ஞல் சமமாகவும், விசாலமாகவும் உள்ள ஒரு கல்லையும், அதற்கருகாமையில் சுத்தமான நீருள்ளதும், பழங்கள் செழித்த

மரங்களால் சுற்றிலும் சூழப்பட்டதும், கரையழகினுல் விளங்குகிறதுமாகிய ஒரு குளம் இருப்பதையும் பாருங்கள்.

परिपाल्यतामिह वसद्भिरिदं वपुरप्रमादमनवद्यगुणाः ।
अहमास्थितस्तदुचितं करणं कलयामि यावदसमेषुकलाम् ॥ १०३

மாசற்ற குணங்கள் நிரம்பியவர்களே! இங்கு நீங்கள் வாசஞ்செய்து கொண்டு இந்த உடலை ஜாக்கிரதையாக பாதுகாப்பீர்களாக. யான் தக்க வேறு தேகத்தில் புகுந்து காமகலைகளனைவற்றையும் கற்றுக்கொண்டுவருகிறேன். அதுவரையில் இந்த உடலை இங்கு பாதுகாக்கவேண்டும்.

इति शिष्यवर्गमनुशास्य यतिप्रवरो विसृष्टकरणोऽधिगुहम् ।
महिपस्य वर्ष्म गुरुयोगबलोऽविशदातिवाहिकशरीरयुतः ॥ १०४

சிறந்த யோகத்திறமையுடையவரும், ஐம்பொறிகளையடக்கியவர்களின் முன்னணியில் விளங்குகிறவருமாகிய அவர் இவ்வாறு சீடர்களிடம் கட்டளையிட்டு தன்னுடைய ஸ்தூலசரீரத்தை விட்டு லிங்க சரீரத்துடன் அரசனுடைய தேகத்தில் புகுந்தார்.

தனது உடலைவிட்டு அரசனுடைய உடலில் புகுந்த கிரமத்தைக் கூறுகிறார்:-

अङ्गुष्ठमारभ्य समीरणं नयन् करन्ध्रमार्गाद्बहिरेत्य योगवित् ।
करन्ध्रमार्गेण शनैः प्रविष्टवान् मृतस्य यावच्चरणाग्रमेकधीः ॥ १०५

யோகத்தையறிந்த அவர் மனதை நிலைநிறுத்தியவராக கால்கட்டைவிரலிலிருந்து வாயுவை இழுத்து பிரம்மரந்திரம்வரையில் கொணர்ந்து அந்த வழியாக வெளியே சென்று அரசனுடைய உடலில் பிரம்மரந்திரம்வழியாக உட்புகுந்து கால்கட்டை விரல் வரையில் விரைவாகப் பிராணவாயுவைப் பரவச்செய்தார்.

गात्रं गतासोर्वसुधाधिपस्य शनैः समास्पन्दत हृत्प्रदेशे ।
तथोदमीलन्नयनं क्रमेण तथोदतिष्ठत्स यथापुरैव ॥ १०६

இறந்த அரசனுடைய உடலில், மார்பில் சிறிது சலனம் உண்டாயிற்று. சிறுதுநேரத்தில் கண் விழித்துக்கொண்டது. பிறகு அரசன் முன்போலவேயெழுந்தான்.

முன் கூறியதையே விளக்குகிறார்:-

आदौ तदङ्गमुदयन्मुखकान्ति पश्चान्नासान्तनिर्यदनिलं शनकैः परस्तात् ।
उन्मीलदंघ्रिचलनं तदनूद्यदक्षिव्याकोचमुत्थितमुपात्तबलं क्रमेण ॥ १०७

உடலில் முதலாக முகத்தில் காந்தி நிலவியது. பிறகு மெதுவாக மூக்கின் துவாரம்வழியாக மூச்சுக்காற்று வெளிவந்தது. காலில் அசைவுண்டாயிற்று. கண் இமை திறந்தது. பிறகு சக்தியுற்று எழுந்தான்.

तं प्राप्तजीवमुपलभ्य पतिं प्रभूतहर्षस्वनाः प्रमुदिताननपङ्कजास्ताः ।
नार्यो विरेजुररुणोदयसंप्रफुल्लपद्माः ससारसरवा इव वारिजिन्यः ॥ १०८

சூரியனுதிக்கையில் தாமரை மலர்கள் மலர்ந்து, சாரஸப்பறவைகள் இனிமையாக கூவவும் தாமரைக்குளங்கள் விளங்குவதுபோல், உயிரைப்பெற்ற கணவனைக் கண்ணுற்று, அளவுகடந்த ஆனந்தத்தினுல் ஆரவாரஞ்செய்து கொண்டும், மலர்ந்த தாமரைபோன்ற முகங்களுடனும் அந்தப்புரத்தணங்குகள் விளங்கினர்.

हर्षं तासामुदितमतुलं वीक्ष्य वामेक्षणाना-
मात्तप्राणं नृपमपि महामात्यमुख्याः प्रहृष्टाः ।
दध्मुः शङ्खान् पणवपटहान् दुन्दुभीश्चाभिजघ्नु-
स्तेषां घोषाः सपदि बधिरीचक्रिरे द्यां भुवं च ॥ १०९

அரசன் உயிருற்றதையும் அணங்குகளின் எல்லையில்லா சந்தோஷத்தையும் கண்டு முக்கியமந்திரி முதலியவர்களும் மிக்க மகிழ்ச்சியடைந்தனர். சங்குகள், பணவங்கள், படகங்கள், துந்துபிகள் முதலிய வாத்தியங்களை முழக்கவும், அந்த ஒலி பூமியிலும், ஆகாயத்திலும் மிகவும் முழங்கி ஒலித்தது.

इति श्रीमाधवीये तत्सार्वज्ञ्योपायगोचरः ।
संक्षेपशङ्करजये सर्गोऽयं नवमोऽभवत् ॥ ९ ॥

இவ்வாறு ஸ்ரீ மாதவாசாரியர் இயற்றிய சங்கரவிஜயச்சுருக்கத்தில்
அந்தப் பரமாசாரியர் ஸர்வக்ஞத்துவத்தைப்
பெறும் வழியைக் கூறும்
ஒன்பதாவது ஸர்க்கம்
முற்றிற்று.

आदितः श्लोकाः 1029



# अथ दशमः सर्गः

## பத்தாவது ஸர்க்கம்

## राजदेहप्रवेशादिकथनम्

### ஸ்ரீசங்கரர் அரசனுடைய உடலில் புகுதல் முதலியதைக் கூறுதல்

अथ पुरोहितमन्त्रिपुरःसरैर्नरपतिः कृतशान्तिककर्मभिः ।
विहितमाङ्गलिकः स यथोचितं नगरमास्थितभद्रगजो ययौ ॥ १

பிறகு, புரோகிதர்களாலும், மந்திரிகளாலும் தகுந்த மங்கள காரியங்கள் நடத்தப்பட்டு அந்த அரசன் சிறந்த யானையின் மீது ஏறிக்கொண்டு நகரத்திற்கு சென்றார்.

समधिगम्य पुरं परिसान्त्वितप्रियजनः सचिवैः सह सम्मतैः ।
भुवमपालयदादृतशासनो नृपतिभिर्दिवमिन्द्र इवाधिराट् ॥ २

பட்டணத்தில் பிரவேசித்து பிரியமான பந்துக்களை உபசரித்து, சிற்றரசர்களால் ஆதரிக்கப்பட்ட ஆக்ஞையை உடையவராக, இந்திரன் தேவலோகத்தை யாளுவதுபோல் மந்திரிமார்களுடன் அரசு புரிந்தார்.

इति नृपत्वमुपेत्य वसुन्धरामवति संयमिभूभृति मन्त्रिणः ।
तमधिकृत्य परं कृतसंशया इति जजल्पुरनल्पधियो मिथः ॥ ३

இவ்வாறு, துறவியரசராகிய ஸ்ரீ சங்கரர், அரண்மனையரசராக மாறி அரசாளுகையில் புத்தி வன்மையுள்ள மந்திரிகள் அவர் விஷயத்தில் ஸந்தேகமுற்றவர்களாக தமக்குள் கூறிக்கொண்டனர்.

मृतिमुपेत्य यथा पुनरुत्थितः प्रकृतिभाग्यवशेन तथा त्वयम् ।
नरपतिः प्रतिभाति न पूर्ववत्समुदिताखिलदिव्यगुणोदयः ॥ ४

இறந்தபின், பிரஜைகளுடைய பாக்யவிசேஷத்தினால் மறுபடியும் உயிர் பெற்ற அரசர் முன்போல் இல்லை. சிறந்த நற்குணங்களுள்ளவராக விளங்குகிறார்.

वसु ददाति ययातिवदर्थिने वदति गीष्पतिवद्गिरमर्थवित् ।
जयति फाल्गुनवत्प्रतिपार्थिवान् सकलमप्यवगच्छति शर्ववत् ॥ ५

வேண்டுகிறவர்களுக்கு யயாதிமகாராஜன்போல் பொருளை அள்ளிக் கொடுக்கிறார். பிரஹஸ்பதிபகவான்போல் கருத்தையறிந்து சிறந்த சொல் கூறுகிறார். அர்ஜுனன்போல் பகைவர்களை வெல்லுகிறார். சிவபெருமான்போல் ஸகலத்தையும் உணருகிறார்.

अनुसवनविसृत्वरैरपूर्वैर्वितरणपौरुषशौर्यधैर्यपूर्वैः ।
अनितरसुलभैर्गुणैर्विभाति क्षितिपतिरेष परः पुमानिवाद्यः ॥ ६

மற்றவர்களுக்கு அரிதும் அற்புதங்களுமாகிய கொடை, முயற்சி, சௌரியம், தைரியம் முதலிய குணங்கள் எப்பொழுதும் குறையின்றிக் காணப்படுவதால் இந்த அரசர் பிறப்பற்ற பரமபுருஷன்போல் விளங்குகிறுர்.

अनृतुषु तरवः सुपुष्पिताग्रा बहुतरदुग्धदुघाश्च गोमहिष्यः ।
क्षितिरभिमतवृष्टिराढ्यसस्या स्वविहितधर्मरताः प्रजाश्च सर्वाः ॥ ७

இருதுகாலமில்லாமலேயே மரங்கள், மலர்கள் நிரம்பினவைகளாகவுள. பசுக்களும் எருமைகளும் ஏராளமாகப் பால் பொழிகின்றன. பூமி போதுமளவு மழையுடையதாகவிருக்கிறது. பயிர்கள் செழித்துள்ளன. குடிகள் அனைவரும் தமது கடமைகளில் கருத்துக்கொண்டவர்களாக இருக்கின்றனர்.

कालस्तिष्यः सर्वदोषाकरोऽपि त्रेतामत्येत्यद्य राज्ञः प्रभावात् ।
तस्मादस्मद्राजवर्ष्म प्रविश्य प्राप्तैश्वर्यः शास्ति कश्चिद्धरित्रीम् ॥ ८

காலம் எல்லாவித தோஷங்களும் குடிகொண்ட கலியுகமாயினும் இப்பொழுது அரசனுடைய மகிமையினுல் திரேதாயுகத்தையும் மீறியதாக விளங்குகிறது. ஆகையால், யோகசக்தியினுலுள்ள ஐசுவரியங்கள் யாவும் நிரம்பிய ஒரு மகான் நமது அரசனுடைய உடலில் புகுந்து இப்பொழுது பூமியை ஆளுகிறுர்.

तदयं गुणवारिधिर्यथा प्रतिपद्येत न पूर्वकं वपुः ।
करवाम तथेति निश्चयं कृतवन्तः सचिवाः परस्परम् ॥ ९

ஆகையால், நற்குணக்கடலாகிய இவர் தனது முன்சரீரத்தை அடையாமல் இந்த உடலிலேயே நிலைக்கும்படி நாம் செய்வோம் என்று அமைச்சர்கள் ஒருவருக்கொருவர் யோசித்துத் தீர்மானம் செய்தனர்.

अथ ते भुवि यस्य कस्यचिद्विगतासोर्वपुरस्ति देहिनः ।
अविचार्य तदाशु दह्यतामिति भृत्यान् रहसि न्ययोजयन् ॥ १०

பிறகு அவர்கள் ''பூமியில் எங்காவது உயிர் நீங்கிய சடலம் காணப்பட்டால் சிறிதேனும் யோசனை செய்யாமல் விரைவில் நெருப்பிட்டு எரிக்கப்பட வேண்டும்'' என்று இரகசியமாக வேலைக்காரர்களுக்கு கட்டளையளித்து நியமித்தனர்.

अथ राज्यधुरं धराधिपः परमाप्तेषु निवेश्य मन्त्रिषु ।
बुभुजे विषयान् विलासिनीसचिवोऽन्यक्षितिपालदुर्लभान् ॥ ११

பிறகு அரசன் ஆப்தர்களான அமைச்சர்களிடம் அரசாங்கத்தின் காரியங்களை அமைத்து அணங்குகளுடன் ஆனந்தமாக ஏனைய அரசர்களுக்கு அரிய அநேக போகங்களை அனுபவித்தார்.

स्फटिकफलके ज्योत्स्नाशुभ्रे मनोज्ञशिरोगृहे
वरयुवतिभिर्दीव्यन्नक्षैर्दुरोदरकेलिषु ।
अधरदशनं बाह्वावाहं महोत्पलताडनं
रतिविनिमयं राजाऽकार्षीद्ग्लहं विजये मिथः ॥ १२

अधरजसुधाश्लेषाद्धृच्यं सुगन्धि मुखानिल-
व्यतिकरवशात्कामं कान्ताकरात्तमतिप्रियम् ।
मधु मदकरं पायंपायं प्रियाः समपायय-
त्कनकचषकैरिन्दुच्छायापरिष्कृतमादरात् ॥ १३

मधुमदकलं मन्दस्विन्नं मनोहरभाषणं
निभृतपुलकं सीत्काराढ्यं सरोरुहसौरभम् ।
दरमुकुलिताक्षीषल्लज्जं विसृत्वरमन्मथं
प्रचरदलकं कान्तावक्त्रं निपीय कृती नृपः ॥ १४

विवृतजघनं संदष्टोष्ठं प्रणुन्नपयोधरं
प्रसृतभणितं प्राप्तोत्साहं रणन्मणिमेखलम् ।
निभृतकरणं नृत्यद्गात्रं गतेतरभावनं
प्रसृमरसुखं प्रादुर्भूतं किमप्यपदं गिराम् ॥ १५

मनसिजकलातत्त्वाभिज्ञो मनोज्ञविचेष्टितः
सकलविषयव्यावृत्ताक्षः सदानुसृतोत्तमः ।
कृतकुचगुरूपास्त्याऽत्यन्तं सुनिर्वृतमानसो
निधुवनवरब्रह्मानन्दं निरर्गलमन्वभूत् ॥ १६

* ** ** * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *
* ** ** * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *

पुरेव भोगान् बुभुजे महीभृत्स भोगिनीभिः सहितोऽप्यरंस्त ।
कन्दर्पशास्त्रानुगतः प्रवीणैर्वात्स्यायने तच्च निरक्षैताद्धा ॥ १७

அந்த அரசர் முன்போலவே மங்கையர்களுடன் இன்புற்றார். காமநூலைப் பின்பற்றியவராக அந்த நூலில் திறமையுள்ளவர்களுடன் வாத்ஸியாயன முனிவர் இயற்றிய நூலை ஆராய்ந்தார்.

वात्स्यायनप्रोदितसूत्रजातं तदीयभाष्यं च निरीक्ष्य सम्यक् ।
स्वयं व्यधत्ताभिनवार्थगर्भं निबन्धमेकं नृपवेषधारी ॥ १८

அரசனுடைய வேஷத்தை தரித்த அந்த சங்கரர், வாத்ஸியாயன முனிவரால் இயற்றப்பெற்ற ஸூத்திரங்களையும் அவைகளின் பாஷ்யத்தையும் நன்கு ஆராய்ந்து அந்த விஷயத்தை விளக்கும் ஒரு நூலையும் இயற்றினார்.

पारशर्यवनिभृतिः प्रविश्य राज्ञो वर्ष्मैवं विहरति तद्विलासिनीभिः ।
दृष्ट्वा तत्समयमतीतमस्य शिष्या रक्षन्तो वपुरितरेतरं जजल्पुः ॥ १९

ஸன்னியாசி சக்கரவர்த்தியாகிய ஸ்ரீ சங்கரர் இவ்வாறு அரசனுடைய உடலில் புகுந்து அந்தப்புரப்பெண்களுடன் இன்பமுறுகையில், அவர் கூறியகாலம் மீறியதைக்கண்டு, அவருடைய உடலை பாதுகாத்துவந்த சிஷ்யர்கள் ஒருவருக்கொருவர் கூறினர்.

आचार्यैरवधिरकारि मासमात्रं सोऽतीतः पुनरपि पञ्चषाश्च घस्राः ।
अद्यापि स्वकरणमेत्य नः सनाथान् कर्तुं तन्मनसि न जायतेऽनुकम्पा ॥ २०

ஆசாரியரால் ஒரு மாதம் காலாவதி கூறப்பட்டது. அந்தக் காலம் கடந்தது. ஐந்தாறு நாட்கள் அதிகம் சென்றுவிட்டன. இன்னும் தமது உடலைப் பெற்றுக்கொண்டு நம்மை அனுக்கிரகம் செய்வதற்கு அவருடைய மனதில் இரக்கம் தோன்றவில்லை!

किं कुर्मः क्व नु मृगयामहे क्व यामः को जानन्निह वसतीति नोऽभिदध्यात् ।
विज्ञातुं कथमिममीशमहे विचिन्त्याप्या सिन्धु क्षितितलमन्यगात्रगूढम् ॥ २१

என்ன செய்வோம், எங்கு தேடுவோம், எங்கு செல்வோம்? இந்தவிடத்தில் வசிக்கிறார் என்று உணர்ந்து நமக்கு யார் கூறுவார்? வேறு உடலில் புகுந்துள்ள இவரை மண்ணுலகில் கடல்கரைவரையிலும் தேடியும் எவ்வாறு அறிய வல்லவர்களாகுவோம்?

गुरुणा करुणानिधिना ह्यधुना यदि नो निहिता विहितास्त्यजिताः ।
जगति क्व गतिर्भजतां त्यजतां स्वपदं विपदन्तकरं तदिदम् ॥ २२

கருணைக்கடலாகிய குருவினால் தியாகம் செய்யப்பட்ட நாம், இப்பொழுது அருகில் தோன்றி ஏற்றுக்கொள்ளப்படாவிடில், ஆபத்துக்களை அழிக்கின்ற அவரது பாதங்களை நம்பிக்கையுடன் சேவிக்கின்ற நமக்கு இந்த உலகில் வேறு கதி யாதுள்ளது?

निःशेषेन्द्रियजाड्यहृन्नवनवाह्लादं मुहुस्तन्वती
नित्याश्लिष्टरजोयतीशचरणाम्भोजाश्रया श्रेयसी ।
निष्प्रत्यूहविजृम्भमाणवृजिनस्योद्वासना वासना
निःसीमा हृदयेन कल्पितपरीरम्भा चिरं भाव्यते ॥ २३

ரஜோகுணத்தின் ஸம்பந்தமில்லாதவரும் துறவிச் சக்கரவர்த்தியுமாகிய பரமாசாரியருடைய பாதகமலங்களை பணிவுடன் மனதில் சேவித்தல் மங்களத்தை அளிக்கின்றது. அந்தத் திருவடிமலர்களின் தியானம் இந்திரியங்களுடைய ஜடத்தன்மையை நாசம் செய்கின்றது. அடிக்கடி ஆனந்தத்தைப் புதிதாக்கி வளரச்செய்கிறது. தடையின்றித் துன்பமளிக்கின்ற துரதிருஷ்டத்தைத் தொலைக்கின்றது. அந்தத் தியானம் செய்தல் தொடர்ச்சியாக நிகழுவதால் எல்லையற்றதாகவே ஹிருதயத்தில் இருக்கிறது. (பரமாசாரியருடைய

பிரிவாற்ருமையைப் பொறுத்துக்கொள்வதற்கு அவருடைய திருவடி தியானமே தக்க ஔஷதமாக தற்சமயமநுகூலத்தைச் செய்கிறது.)

फलितैरिव सत्वपादपैः परिणामैरिव योगसम्पदाम् ।
समयैरिव वैदिकश्रियां सशरीरैरिव तत्वनिर्णयैः ॥ २४

सधनैर्निजलाभवैभवात् सकुटुम्बैरुपशान्तिकान्तया ।
अतदन्यतयाऽखिलात्मकैरनुगृह्येय कदा नु धामभिः ॥ २५

சிறந்த ஸத்வ குணங்களாகிய மரங்கள் காய்த்துப் பழுத்து உருவம் கொண்டவைகள்போலவும், யோகஸித்திகள் உடலுற்றவைகள் போலவும், வேதலக்ஷ்மிகளின் சம்பிரதாயங்கள் சரீரமடைந்தவைகள் போலவும், தத்துவங்களின் தீர்மானங்கள் தேகம் தரித்தவைகள் போலவும், ஆத்மலாபமாகிய ஆஸ்திபெற்ற ஆஸ்திகர்கள் போலவும், 'சாந்தி' என்ற குணமாகிய மனேவியால் இல்லறத்தினவர்கள்போலவும், பரமாத்மனேக்காட்டிலும் வேற்றுமையின்மையால் எல்லோருடையவும் ஆத்மாவுமாகிய அந்தப் பரமாசாரியர்களாகிய சிறந்த தேஜஸ்ஸுக்களால் யான் எப்பொழுது அருள் செய்யப்படுவேன்? (என்று ஒருவர் மிகவும் ஆர்வத்துடன் கூறுகிருர். வெகுமதியால் பன்மை.)

अविनयं विनयन्नसतां सतामतिरयं तिरयन् भवपावकम् ।
जयति यो यतियोगभृतां वरो जगति मे गतिमेष विधास्यति ॥ २६

அஸத்துக்களுடைய செருக்கைக் குறைக்கின்றவரும், ஸம்ஸாரமாகிய தீயின் தீவிரதாபத்தைத் தணிக்கின்றவரும் யோகாப்பியாஸம் செய்கிறயதிகளில் சிறந்தவருமாகிய குரு எனக்கு இவ்வுலகில் நற்கதியை அளிப்பார். (என்று ஒருவர் கூறுகிருர்.)

வேறுசிலர்:-

विगतमोहतमोहतिमाप्य यं विधुतमायतमा यतयोऽभवन् ।
अमृतदस्य तदस्य दृशः सृतवाक्तरेम तरेम शुगर्णवम् ॥ २७

அஞ்ஞானமாகிய இருளை விலக்கிய எவரை அடைந்து யதிகள் மாயையிலிருந்து நன்கு விடப்பட்டவராயினரோ, முக்தியை அளிக்கின்ற அத்தகைய மகானுடைய கண்களுக்கு புலனுகுதலால் நாம் விரைவில் துக்கக்கடலைத் தாண்டுவோம்.

शुभाशुभविभाजकस्फुरणदृष्टिमुष्टिंधयः क्षपान्धमतपान्थदुष्कथकदम्भकुक्षिंभरिः ।
कदा भवसि मे पुनःपुनरनाद्यविद्यातमः प्रमृद्य गलितद्वयं पदमुदञ्चयन्नद्वयम् ॥ २८

புண்ணியபாபங்களைப் பிரித்துப் புகலும் மீமாம்சை நூலின் அறிவினுல் செருக்கடைந்தவர்களை அடக்குகிறவரும், வழியாத்திரை செய்பவர்கள் கெட்டகதைகளைக் கூறுவதுபோல் பேதவாதங்கள் பலவற்றைக் கூறுதலினுல் தீயநெறிகளை விளக்குகின்றவர்களுடைய கர்வத்தை நாசம் செய்கின்றவரும், அண்டியவர்களுடைய அறிவின்மையை அகற்றி ஆத்மஞானத்தை

அளிக்கின்றவருமாகிய ஆசிரியசிகாமணியே! என்னுடைய அஞ்ஞானம் விலகுமாறு எப்பொழுது அருள் புரிவீர்?

मर्त्यानां निजपादपङ्कजजुषामाचार्य वाचा यया
रुन्धानो मतिकल्मषं त्वमिह किंकुर्वाणनिर्वाणया ।
द्राङ्नायास्यसि चेत्सुधीकृतपरीहासस्य दासस्य ते
दुःखान्तो न भवेदितीड्य स पुनर्जानीहि मीनीहि मा ॥ २९

புகழத்தக்கவரே! மோக்ஷலக்ஷ்மியை அடிமையாக்கும் சொல்வன்மையினுல் தமது பாதங்களை பஜிக்கின்ற மனிதர்களுடைய மதிதோஷத்தை அறுத்து முத்தியை அளிக்கின்ற தாங்கள் விரைவில் எனது கண்களுக்குப் புலனுகாவிடில் புத்திமான்களுடைய கேலிக்கு ஆளாகுவேன். ஆகையால், எனது அல்லலுக்கு எல்லையில்லாமலாகும். இந்த விஷயத்தை அறிந்து அருள்வீராக. (இவ்வாறு சிஷ்யர்கள் வருந்திக் கூறும் சொற்கள், ஸ்ரீகிருஷ்ணருடைய பிரிவாற்ருமையினுல் கோபியர்கள் கூறும் சொற்களை ஒத்திருக்கின்றன. १) दयित दृश्यताम्, २) नेह किं वधः, ३) त्वयि धृतासवः என்று அவர்கள் கானம் செய்துள்ளனர். அவைகளின் பொருள் முறையே 1) ''நாதா கண்களுக்குப் புலப்படுவீராக, 2) பிரிவாற்ருமையால் வருத்தமுற்ற எங்களை இவ்வாறு செய்தல் வதையன்ருே, 3) எவ்விதத்திலும் தாங்கள் வருவீர்கள் என்ற நம்பிக்கை கொண்டவர்களாகவும் இந்த கோகுலத்தில் தோன்றிய உம்மிடமே உயிரை அர்ப்பணம் செய்தவர்களாகவும் இருக்கின்ருேம்'' என்பது பொருள்.) இங்கு मीनीहि मा = ஹிம்ஸை செய்யாதீர்கள் என்று கூறுகின்றனர். மற்ற இரண்டும் விளக்கம் செய்யப்பட்டுள்ளன.)

इति खेदमुपेयुषि मित्रजने प्रतिपन्नयतिक्षितिभृन्महिमा ।
शुचमर्थवता शमयन्वचसा निजगाद सरोरुहपाद इदम् ॥ ३०

இவ்விதம் நண்பர்கள் வருந்துகையில், யதீசுவரராகிய ஸ்ரீசங்கரருடைய மகிமையை உணர்ந்த 'பத்மபாதர்' சிறந்த கருத்துள்ள செய்யுட்களால் அவர்களுடைய துக்கம் தணியும்படிப் புகன்ருர்.

पर्याप्तं नः क्लैब्यमुपेत्यात्र सखायः कृत्वोत्साहं भूमिमशेषामपिधानात् ।
अन्वेष्यामो भूविवराण्यप्यथ च द्यां यद्वद्देवं देवमनुष्यादिषु गूढम् ॥ ३१

நண்பர்களே; இந்த விஷயத்தில் வருந்தாதீர்கள்! மாறுவேஷம் தரித்து உற்சாகத்துடன் பூமி முழுவதையும், பாதாளலோகத்தையும் சுவர்க்கத்தையும் அடைந்து, தேவர்கள் மனிதர்கள் முதலிய உடல்களில் புகுந்துள்ள தேவதேவனைப்போல், நமது குருநாதரைத் தேடுவோம்.

अनिर्विण्णचेताः समास्थाय यत्नं सुदुष्प्रापमप्यर्थमाप्नोत्यवश्यम् ।
मुहुर्विघ्नजालैः सुरा हन्यमाना सुधामप्यवापुर्ह्यनिर्विण्णचित्ताः ॥ ३२

மனச்சோர்வை விலக்கி விடாமுயற்சியுடன் செயலில் ஈடுபடுகிறவன் கிடைப்பதற்கரிதான பயனையும் அடைதல் திண்ணம். இடையூறுகள்

பலவைகளாலடிக்கடித் தடை செய்யப்பட்டும் தேவர்கள் மனமுடையாதவர்களாக முயன்றமையால் அமிருதத்தை அடைந்தனரன்றோ!

यदप्यन्यगात्रप्रतिच्छन्नरूपो दुरन्वेषणः स्याद्गुरुर्नस्तथापि ।
स्वभानूदरस्थः शशीव प्रकाशैस्तदीयैर्गुणैरेव वेत्तुं स शक्यः ॥ ३३

வேறு உடலில் புகுந்துள்ள நமது ஆசிரியரைத் தேடித்தெரிந்துகொள்ளுதல் எளிதல்லவாயினும், இருள்வடிவமான ராகுவின் உதரத்திலிருக்கும் சந்திரன் பிரகாசத்தினுல் அறியப்படுவதுபோல் அந்த மகான் தனது குணங்களாலேயே அறியத்தக்கவராவார்.

इक्षुचापागमापेक्षया निर्गतो वर्ष्म तस्योचितं कृष्णवर्त्मद्युतिः ।
विभ्रमाणां पदं सुभ्रुवां भूपतेः प्राप्तुमर्हत्यकामाग्रणीः संयमी ॥ ३४

அந்த யதீசுவரர் காமமற்றவர்களின் தலைவராயினும், காமக்கலையைக் கற்றுக்கொள்வதற்காக அந்தப்புரத்திலிருக்கும் அணங்குகளின் சிருங்காரவிலாசங்களை அனுபவிக்க உரிமையுள்ள அரசனுடைய உடலைத்தான் அடைந்திருக்கக்கூடும். ஆயினும் அக்கினிக்குச் சமமான தேஜஸ்ஸுள்ளவர் அவர். (ஆகையால், அவரை கர்மங்கள் பாதிப்பதில்லை என்று கருத்து.)

नित्यतृप्ताग्रयाय्याश्रिते निर्वृताः प्राणिनो रोगशोकादिना नेक्षिताः ।
दस्युपीडोज्झिताः स्वस्वधर्मे रताः कालवर्षी स्वराण्मेदिनी कामसूः ॥ ३५

ஆத்மானந்தத்தினுல் எப்பொழுதும் ஸந்துஷ்டர்களான ஜனங்களுக்கு முன்னணியில் விளங்கும் அவர் வசிக்கும் தேசத்தில், பிராணிகள் வியாதி, துக்கம், முதலியவைகளை அறியாதவர்களாகவும் திருடர்களுடைய பயமணுகாமலும், தம்தம் கடமையில் கருத்துக்கொண்டவர்களாகவும் இருப்பதுடன், தேவேந்திரன் காலமாரி பொழிகிறவனுகவும், பூமி விருப்பங்களை அளிக்கிறதாகவும் உள்ள நிலைமை நிலவும்.

तदिहाऽऽलस्यमपास्य विचेतुं निरवधिसंसृतिजलधेः सेतुम् ।
देशिकवरपदकमलं यामो न वृथाऽनेहसमत्र नयामः ॥ ३६

ஆகையால், ஆழமில்லா ஸம்ஸாரக்கடலை தாண்டுவதற்கு வரப்பைக் காட்டுமணையாக விளங்கும் ஆசாரியருடைய பாதகமலத்தை தேடுவதற்கு சோம்பலை நீக்கி, புறப்படுவோம். வீணுக இங்கு காலத்தை கழிக்காதிருப்போம்.

इति जलरुहपदवचनं सर्वे मनसि निधाय निराकृतगर्वे ।
कांश्चित्तत्र निवेश्य शरीरं रक्षितुमन्ये निरगुरुदारम् ॥ ३७

இவ்வாறு பத்மபாதருடைய அந்த வசனத்தைக் கேட்டு, அமைதியுடன் 'சரி' என்று மனதில் தரித்து ஆசாரியருடைய உடலை காப்பாற்றுவதற்கு சிலரை நியமித்து மற்றவர்கள் உற்சாகத்துடன் புறப்பட்டனர்.

ते चिन्वन्तः शैलाच्छैलं विषयाद्विषयं भुवमनुवेलम् ।
प्रापुर्धिक्कृतविबुधनिवेशान् स्फीतानमरुकनृपतेर्देशान् ॥ ३८

அவர்கள் இடைவிடாமல் மலைகள்தோறும் தேசங்கள்தோறும் சென்று தேடி கடைசியில் தேவலோகத்தைக்கூட தனது அழகினாலும், செல்வத்தினாலும் கேலிசெய்கிற அமருக அரசனுடைய தேசத்திற்குச் சென்றனர்.

मृत्वा पुनरप्युत्थितमेनं श्रुत्वा वैन्यदिलीपसमानम् ।
त्यक्त्वा विरहजदैन्यममन्दं मत्वाऽऽचार्यं धैर्यमविन्दन् ॥ ३९

''இறந்து பிறகு எழுந்த இவர் பிருதுமகாராஜன், திலீபமகாராஜன் என்பவர்கள் போலிருக்கிறார்'' என்று அந்த தேசத்து அரசனைப்பற்றி ஜனங்கள் கூறியதைக்கேட்டு பிரிவாற்றாமையினாலுள்ள அதிகமான வருத்தத்தையகற்றி ''அவர் தமது ஆசாரியர்'' என்று அறிந்து தைரியமுற்றனர்.

ते च ज्ञात्वा गानविलोलं तरुणीसक्तं धरणीपालम् ।
विविशुः स्वीकृतगायकवेषा नगरं विदितसमस्तविशेषाः ॥ ४०

பாட்டில் பற்றுள்ளவரும் பெண்களிடம் விருப்பமுள்ளவருமாக அந்த அரசர் இருப்பதை உணர்ந்து, விசேஷ அறிஞர்களான அவர்கள், பாடகர்களுடைய வேஷத்தையணிந்தவர்களாக நகரத்தில் புகுந்தனர்.

राज्ञे ज्ञापितविद्यातिशयास्ते तत्संग्रहविधृतातिशयाः ।
रमणीशतमध्यगमवनीन्द्रं ददृशुस्तारावृतमिव चन्द्रम् ॥ ४१

அந்த அரசரை ஸ்வாதீனம் செய்துகொள்ள விருப்பம்கொண்ட அவர்கள் தங்களுடைய கானவித்தையை தோற்றுவித்து, நக்ஷத்திரங்களுக்கிடையில் விளங்கும் திங்கள்போல் அநேக அணங்குகளுக்கிடையில் அமர்ந்திருந்த அரசரைக் கண்டனர்.

वरचामरकरतरुणीकङ्कणरञ्जितमनोहरपश्चाद्भागम् ।
गीतिगतिज्ञोद्गीतश्रुतिसुखतानसमुल्लसदग्रिमदेशम् ॥ ४२

சிறந்த சாமரங்களை கைகளில் பிடித்துவீசுகின்ற அணங்குகள் அணிந்த இரத்தினவளைகளின் ஒளிவீசுவதினால் பின்பக்கத்தில் பிரகாசமுடையவரும், 1) ஷட்ஜம், 2) ரிஷபம், 3) காந்தாரம், 4) மத்தியமம், 5) பஞ்சமம், 6) தைவதம், 7) நிஷாதம் என்ற ஸ்வரங்களை 1) மந்த்ரம், 2) மத்தியம், 3) தாரம் என்று மூன்றுவகைகளாக (21 விதத்தில்) ஆரோஹாவரோஹக்கிரமத்துடன் பாடும் திறமை வாய்ந்த மங்கையர்கள் எதிரில் கானம் செய்கையில் சிறப்புடன் விளங்குகின்றவரும் ஆகிய அரசரைக் கண்டனர்.

धृतचामीकरदण्डसितातपवारणरञ्जितरत्नकिरीटम् ।
श्रितविग्रहमिव रतिपतिमाश्रितभुवमिव सान्तःपुरममरेशम् ॥ ४३

பொற்காம்புடன் கூடிய வெண்கொற்றக்குடையின் ஒளிவீச்சினால் விசேஷமாக விளங்கும் இரத்தினகிரீடம் தரித்தவரும், உருவம் பெற்றுக்கொண்டு மண்ணுலகில் அவதாரம் செய்த மன்மதன் போலவும், தேவேந்திரன் போலவும், அந்தப்புரத்திய அணங்குகளுடன் கூடியவருமாகிய அமருக அரசனைக் கண்ணுற்றனர்.

रुचिरवेषाः समासाद्य तां संसदं नयनसंज्ञावितीर्णासना भूभुजा ।
समतिसृष्टास्ततः सुस्वरं मूर्च्छनापदविदस्ते जगुर्मोहयन्तः सभाम् ॥ ४४

அழகான ஆடையணிந்த அவர்கள் அந்த அவையை அடைந்து அரசனுடைய கண்ஜாடையினுல் அளிக்கப்பட்ட ஆஸனத்தில் அமர்ந்து அவையோர்கள் ஆச்சரியமடையும்படி ஆரோஹாவரோஹக்கிரமத்தில் அநேக இசைகளை இனிமையாக இயற்றினர்.

भृङ्ग तव सङ्गतिमपास्य गिरिशृङ्गे तुङ्गविटपिनि सङ्गमजुषि त्वदङ्गे ।
स्वाङ्गरचिताः सकलुषान्तरङ्गाः संगमकृते भङ्गमुपयन्ति भृङ्गाः ॥ ४५

ஹே வண்டே; உயர்ந்து ஓங்கிவளர்ந்த மரங்கள் நிரம்பிய மலையின் உச்சியில் உமது ஸங்கத்தினுல் ஸந்தோஷத்துடன் வாஸம்செய்து, பிறகு பிரிவு ஏற்பட்டதினுல் வருத்தமுற்ற மனமுடையவளாக சில வண்டுகள் உமது வரவை எதிர்பார்த்துக்கொண்டு பயன் அடையாமையால் மனம் கலங்குகின்றனர். (புஷ்பங்களின் ஸாரமாகிய தேனை வண்டு அருந்துவதுபோல் உபநிஷத்துக்களின் ஸாரத்தை எடுத்து உரைப்பதுபற்றி வண்டு என்று உருவகமாகக் கூறினர். அவருடைய சிஷ்யர்களையும் அவ்வாறு உருவகமாகக் கூறினர்.)

पञ्चशरसमयसञ्चयकृते प्राञ्चं मुञ्चन्निवेह सञ्चरसि प्रपञ्चम् ।
पञ्चजनमुख पञ्चमुखमप्यनञ्चंस्त्वं च गतिरिति किंच किल वञ्चितोऽसौ ॥ ४६

ஐந்து பாணங்களையுடைய காமனுடையக் கலையை கற்பதற்கு தமது முந்தின உடலைவிட்டு இங்கு ஸஞ்சாரம் செய்கின்றீர். ஐந்து ஜனங்களில் முக்கியரே! = பிராணன், கண், செவி, உடல், மனம் ஆகிய ஐந்துகளுக்கு அதிஷ்டாதாவே! பரமசிவனைக்கூட பூஜை செய்யாமல் தாங்களே 'கதி' என்று நம்பி தங்களைத் தஞ்சம் புகுந்த இந்த சிடர்களின் தொகுதி தங்களால் ஏமாற்றப்பட்டது. (ஐந்து ஜனங்களில் முக்கியமானவர் என்ற சொல் 5 x 5 = 25 என்று இலக்கணையால் கூறுகிறது. मूलप्रकृतिरविकृतिर्महादाद्याः प्रकृतिविकृतयः सप्त। षोडशकस्तु विकारो न प्रकृतिर्न विकृतिः पुरुषः ॥ என்று ஸாங்கிய நூல்படி விகாரமடையாத மூலப்பிரகிருதி, மஹத்தத்துவம், அஹங்காரம், ஐந்து தன்மாத்திரைகள், ஞானேந்திரியங்கள் 5ம், கர்மேந்திரியங்கள் 5ம், பிராணன்கள் 5ம், மனம் என்று விகாரமடைந்த பொருள்கள் ஆகிய 24ம் பிரகிருதியும் விகாரமுமல்லாத புருஷன் என்று 25 பதார்த்தங்கள் என்று கொள்ளத்தக்கது.)

पर्वशशिमुख सर्वमपहाय पूर्वं कुर्वदिह गर्वमनुसृत्य हृदपूर्वम् ।
न स्मरसि वस्त्वस्मदीयमिति कस्मात्संस्मर तदस्मर परमस्मदुक्त्या ॥ ४७

பௌர்ணமித் திங்கள் போன்ற முகமுடையவரே; சமம், தமம் முதலிய குணங்களுடன்கூடிய முன்சரீரத்தைவிட்டு புதிதான இந்த சரீரத்தில் அபிமானத்துடன் வசித்துக்கொண்டு தமது பொருளை ஏன் மறந்துவிட்டீர்கள். காமவிகாரமற்றவரே! எங்களுடைய வசனத்தினுல் அதனை ஞாபகத்தில் கொண்டுவருவீர்களாக.

नेतिनेतीत्यादिनिगमवचनेन निपुणं निषिध्य मूर्तामूर्तराशिम् ।
यदशक्यनिह्नवं स्वात्मरूपतया जानन्ति कोविदास्तत्त्वमसि तत्त्वम् ॥ ४८

உருவமுற்றதும் உருவமற்றதுமாகிய பொருள்களை 'ந' 'ந' என்று = இதுவுமல்ல அதுவுமல்ல என்று விலக்கி, எல்லாவற்றிற்கும் அதிஷ்டானமாக எந்தப்பொருளை வல்லவர்களாகிய ஆத்மஞானிகள் ஸ்வஸ்வரூபமாக உணருகின்றனரோ, அத்தகைய 'தத்வமஸி' என்ற மகாவாக்கியத்தால் போதிக்கப்படும் தத்துவமன்றோ தாங்கள்.

खाद्यमुत्पाद्य विश्वमनुप्रविश्य गूढमन्नमयादिकोशतुषजाले ।
कवयो विविच्य युक्त्यवघाततो यत्तण्डुलवदाददति तत्त्वमसि तत्त्वम् ॥ ४९

ஆகாயம் ஆதியாகவுள்ள பதார்த்தங்களை சிருஷ்டித்து, உட்புகுந்து நிலைத்துள்ள எதனை, உமிக்குள் இருக்கும் அரிசியை உலக்கை முதலியவைகளால் குத்தி அடைவதுபோல யுக்திகளால், 1) அன்னமயம், 2) பிராண மயம், 3) மனோமயம், 4) விஞ்ஞானமயம், 5) ஆனந்தமயம் என்ற பஞ்ச கோசங்களைப் பிரித்தறிந்து, அவைகளுக்குள் இருப்பதாக உணர்ந்து பெறுகின்றனரோ, அத்தகைய தத்துவமன்றோ தாங்கள்.

विषमविषयेषु सञ्चारिणोऽक्षाश्वान् दोषदर्शनकशाभिघाततः ।
स्वैरं संनिवर्त्य स्वान्तरश्मिभिर्धीरा बध्नन्ति यत्र तत्त्वमसि तत्त्वम् ॥ ५०

மேடுபள்ளங்களாகவும், பற்பல துன்பங்களுக்கும் தங்குமிடமாகவும் உள்ள விஷயங்களாகிய வழிகளில் வரையற்றுச் செல்லுகின்ற பொறிகளாகிய பரிகளை, (அவைகளின்) குறைகளை அறிதல் என்ற சவுக்கடியினாலும், தூய மனோவிருத்திகளாகிய கடிவாளத்தினாலும் இழுத்து எந்தவிடத்தில் தீரர்கள் கட்டுகின்றனரோ அந்தத் தத்துவம் தாங்களே.

व्यावृत्तजाग्रदादिष्वनुस्यूतं तेभ्योऽन्यदिव पुष्पेभ्य इव सूत्रम् ।
इति यदौपाधिकत्रयपृथक्त्वेन विदन्ति सूरयस्तत्त्वमसि तत्त्वम् ॥ ५१

விழிப்புணர்ச்சி, கனவு, துயில் முதலிய மாறுபட்ட வெவ்வேறு நிலைமைகளில் உபாதிகளை (தனிப்பட்ட நிலைமைகளை அல்லது பொருட்களை) விலக்கி, புஷ்பங்களில் தொடர்ந்துள்ள நூல்போல், எல்லாவற்றிலும் தொடர்ந்திருப்பதாக எந்த தத்வத்தை ஞானிகள் உணருகின்றனரோ அந்த தத்வமன்றோ தாங்கள்!

पुरुष एवेदमित्यादिवेदेषु सर्वकारणतया यस्य ।
सार्वात्म्यं हाटकस्येव मुकुटादितादात्म्यं सरसमाम्नायते तत्त्वमसि तत्त्वम् ॥५२

பொன்னால் அமைக்கப்பட்ட கிரீடம், கங்கணம் முதலிய நகைகள் பொன்னல்லாமல் வேறல்லனவென்று போன்ற உசித உதாரணங்களால் இந்த உலகம் யாவும் பரமாத்மாவைக்காட்டிலும் வேறல்லவென்று பல மறைகளால் கூறப்படுகிறது. அந்த தத்வம் தாங்கள்தான்.

यश्चाहमत्र वर्ष्मणि भामि सोऽसौ योऽसौ विभाति रविमण्डले सोऽहमिति ।
वेदवादिनो व्यतिहारतो यदध्यापयन्ति यत्नतस्तत्त्वमसि तत्त्वम् ॥ ५३

இந்த உடலில் விளங்கும் யான்தான் சூரியமண்டலத்திலும் விளங்குகிறவன். சூரியமண்டலத்தில் விளங்குபவன்தான் இந்த உடலிலும் என்று எந்தப்பரம்பொருளை மறைகளில் வல்லவர்கள் இருவிதமாகவும் எடுத்துக் காட்டுகின்றனரோ அந்த தத்வம் தாங்களே.

वेदानुवचनसद्दानमुखधर्मैः श्रद्धयाऽनुष्ठितैर्विद्यया युक्तैः ।
विविदषन्त्यत्यन्तविमलस्वान्ता ब्राह्मणा यद्ब्रह्म तत्त्वमसि तत्त्वम् ॥ ५४

வேதங்களை ஓதியும், பொருள்களையறிந்து சிரத்தையுடன் தானம் தர்மம் முதலியவற்றைச் செய்தும் மனச்சுத்தியை அடைந்த அந்தணர்கள் எந்த உருவத்தை ஆவலுடன் அறிய விரும்புகின்றனரோ அத்தகைய தத்வம் தாங்களே.

शमदमोपरमादिसाधनैर्धीराः स्वात्मनाऽऽत्मनि यदन्विष्य कृतकृत्याः ।
अधिगतामितसच्चिदानन्दरूपा न पुनरिह खिद्यन्ते तत्त्वमसि तत्त्वम् ॥ ५५

சமம், தமம் முதலிய குணங்களைக்கொண்ட தீரர்கள் எதனைத் தமது ஹிருதயத்தில் உணர்ந்தமையால் ஸம்ஸாரபாசத்திலிருந்து விடுபட்டு ஸச்சிதானந்தரூபமாக மாறுவதினால் மறுபடியும் துன்பமுறுவதில்லையோ, அத்தகைய தத்வம்தான் தாங்கள்.

अविगीतमेवं नरपतिराकर्ण्य वर्णितात्मार्थम् ।
विससर्ज पूरिताशानेतान्निर्ज्ञातकर्तव्यः ॥ ५६

குறையின்றித் தன்னுடைய விஷயத்தை இவ்வாறு கூறியதைக் கேட்டு, தான் செய்யவேண்டியதை உணர்ந்த அரசன் அவர்களுடைய விருப்பத்தைப் பூர்த்திசெய்து அனுப்பினார்.

उद्बोधितः सदसि तैरवलम्ब्य मूर्च्छां निर्गत्य राजतनुतो निजमाविवेश ।
गात्रं पुरोदितनयेन स देशिकेन्द्रः संज्ञामवाप्य च पुरेव समुत्थितोऽभूत् ॥ ५७

இவ்வாறு பத்மபாதர் முதலியவர்களால் உணர்த்தப்பட்ட அந்தப் பரமாசாரியர் முன் கூறியபடி அரசனுடைய உடலிலிருந்து வெளியே கிளம்பி உணர்ச்சியையடைந்து முன்போல் எழுந்தார்.

तदेनु कुहरमेत्य पूर्वदृष्टं नरपतिभृत्यविसृष्टपावकेन ।
निजवपुरवलोक्य दह्यमानं झटिति स योगधुरन्धरो विवेश ॥ ५८

பிறகு, முன்பு தான் கண்ட குகையில் சென்று, யோகசக்தி வாய்ந்தவர்களின் தலைவராகிய அவர், அரசனுடைய வேலைக்காரர்களிட்ட நெருப்பினால் எரிந்துகொண்டிருக்கும் தனது உடலைக்கண்டு விரைவில் அதனுட்புகுந்தார்.

सपदि दहनशान्तये महान्तं नरमृगरूपमधोक्षजं शरण्यम् ।
स्तुतिभिरधिकलालसत्पदाभिस्त्वरितमतोषयदात्मवित्प्रधानः ॥ ५९

(பத்மபாதர் முதலியவர்களால், ஸ்ரீ சங்கரருடைய உடலின் பாதுகாப்பிற்காக நியமிக்கப்பட்டவர்கள், தெய்வச்செயலாக மத்தியானகாலத்தில் குளக்கரையில் மரச்சோலையில் அஸம்பிரக்ஞாத ஸமாதியில் = அறிவு, அறிகிறவன், அறியப்படுபொருள் என்ற மூவகை வேற்றுமைகளற்ற தியானநிஷ்டையில், இருக்கும்கால் அரசனுடைய அமைச்சர்கள் கட்டளையிட்டபடி சேவகர்கள் இட்ட நெருப்பு உடலை எரித்துக்கொண்டிருந்தது.) ஆத்ம ஞானிகளின் முன்னணியில் விளங்குகின்ற ஆசாரியர் அதனைக்கண்டவுடன் அண்டினவர்களுடைய ஆபத்துக்களை அகற்றிக் காப்பாற்றும் ஸ்வபாவமுள்ளவரும், பொறிகளுக்குப் புலனாகாதவரும், மனிதன், சிங்கம் என்ற இருவகை உருவமடைந்தவருமாகிய பகவானை மிகச் சிறந்த சொற்களடங்கிய துதிகளால் சந்தோஷிக்கச் செய்தார்.

## ஸ்ரீ சங்கரபகவத்பாதர் அருளியதென பிரசித்தமான ''லக்ஷ்மீ நரஸிம்ம கராவலம்ப'' ஸ்தோத்திரம்

श्रीमत्पयोनिधिनिकेतन चक्रपाणे भोगीन्द्रभोगमणिरञ्जितपुण्यमूर्ते ।
योगीश शाश्वत शरण्य भवाब्धिपोत लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ १

ब्रह्मेन्द्ररुद्रमरुदर्ककिरीटकोटिसंघट्टिताङ्घ्रिकमलामलकान्तिकान्त ।
लक्ष्मीलसत्कुचसरोरुहराजहंस लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ २

संसारघोरगहने चरतो मुरारे मारोग्रभीकरमृगप्रवरार्दितस्य ।
आर्तस्य मत्सरनिदाघनिपीडितस्य लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ ३

संसारकूपमतिघोरनिदाघमूलं संप्राप्य दुःखशतसर्पसमाकुलस्य ।
दीनस्य देव कृपणापदमागतस्य लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ ४

संसारसागरविशालकरालकालनक्रग्रहग्रसननिग्रहविग्रहस्य ।
व्यग्रस्य रागरसनोर्मिनिपीडितस्य लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ ५

संसारवृक्षमघबीजमनन्तकर्मशाखाशतं करणपत्रमनङ्गपुष्पम् ।
आरुह्य दुःखफलितं पततो दयालो लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ ६

संसारसर्पघनवक्त्रभयोग्रतीव्रदंष्ट्राकरालविषदग्धविनष्टमूर्तेः ।
नागारिवाहन सुधाब्धिनिवास शौरे लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ ७

संसारदावदहनातुरभीकरोरुज्वालावलीभिरतिदग्धतनूरुहस्य ।
त्वत्पादपद्मसरसीशरणागतस्य लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ ८

संसारजालपतितस्य जगन्निवास सर्वेन्द्रियार्थबडिशार्थझषोपमस्य ।
प्रोत्खण्डितप्रचुरतालुकमस्तकस्य लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ ९

संसारभीकरकरीशकराभिघातनिष्पिष्टमर्मवपुषः सकलार्तिनाश ।
प्राणप्रयाणभवभीतिसमाकुलस्य लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ १०

अन्धस्य मे हृतविवेकमहाधनस्य चौरैः प्रभो बलिभिरिन्द्रियनामधेयैः ।
मोहान्धकूपकुहरे विनिपातितस्य लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ ११

लक्ष्मीपते कमलनाभ सुरेश विष्णो वैकुण्ठ कृष्ण मधुसूदन पुष्कराक्ष ।
ब्रह्मण्य केशव जनार्दन वासुदेव देवेश देहि कृपणस्य करावलम्बम् ॥ १२



नरहरिकृपया ततः प्रशान्ते प्रबलतरे स हुताशने प्रविष्टः ।
निरगमदचलेन्द्रकन्दरान्ताद्विधुरिव वक्त्रबिलाद्विधुन्तुदस्य ॥ ६०

கொழுந்துவிட்டெரிந்த நெருப்பு, பிறகு நரசிம்மபகவானுடைய கருணையினால் தணிந்தவுடன், ராகுவின் வாயிலிருந்து சந்திரன் வெளிவருவது போல், தன்னுடலில் புகுந்த அந்த ஸ்ரீ சங்கரர் குகையிலிருந்து வெளியேறினார்.

तदनु शमधनाधिपो विनेयैश्चिरविरहादतिवर्धमानहार्दैः ।
सनक इव वृतः सनन्दनाद्यैर्जिगमिषुराजनि मण्डनस्य गेहम् ॥ ६१

பிறகு, சாந்தகுணச்செல்வந்தருக்கரசராகிய ஸ்ரீசங்கரர் பல நாட்கள் பிரிந்திருந்ததினால் சித்தத்தில் சிநேகம் சிறப்பாக வளர்ந்த ஸனந்தனர் முதலிய சிஷ்யர்களால் சூழப்பட்டவராக ஸநகமாமுனிவர்போல் அந்த மண்டனருடைய மனைக்குச் செல்ல மனம் கொண்டார்.

तदनु सदनमेत्य पूर्वदृष्टं गगनपथाद्गलितक्रियाभिमानम् ।
विषयविषनिवृत्ततर्षमुच्चैरतनुत मण्डनमिश्रमक्षिपात्रम् ॥ ६२

பிறகு, ஆகாயமார்க்கமாகச் சென்று முன்பு கண்ட அவருடைய மனையில் சென்று, நான் கர்த்தா = செயலாற்றுகிறவன் என்ற அபிமானமகன்றவரும், விஷயங்களாகிய விஷத்திலிருந்து விருப்பை அறவே விலக்கியவரும் ஆகிய மண்டனரைக் கண்ணுற்றார்.

तं समीक्ष्य नभश्च्युतं स च प्राञ्जलिः प्रणतपूर्वविग्रहः ।
अर्हणाभिरभिपूज्य तस्थिवानीक्षणैरनिमिषैः पिबन्निव ॥ ६३

ஆகாயமார்க்கமாகக் குதித்து இறங்கிய அவரைக் கண்டு மண்டனர் கை கூப்பி வணங்கி, கடன்முறைகள் யாவையும் செய்து இமைகொட்டாத கண்களால் குடிக்கின்றவர்போல் பார்த்துக்கொண்டு திகைத்து நின்றார்.

स विश्वरूपो बत सत्यवादी पपात पादाम्बुजयोर्यतीशः ।
गृहं शरीरं मम यच्च सर्वं तवेति वादी मुदितो महात्मा ॥ ६४

உண்மையே கூறும் ஸ்வபாவமுள்ளவரும் மகாத்மாவுமாகிய அந்த விசுவரூபர் உவகை பூண்டு 'இந்த உடல், கிருஹம், மற்றும் என்னுடையது

யாவும் தம்முடையதே' என்று கூறி யதீசுவரருடைய பாதாரவிந்தங்களில் பணிந்தார்.

प्रेयसा प्रथममर्चितं मुनिं प्राप्तविष्टरमुपस्थितं बुधैः ।
प्रश्रयावनतमूर्तिरब्रवीच्छारदाऽभिवदने विशारदा ॥ ६५

பிராணநாதனுல் முதலில் உபசரிக்கப்பட்டு, ஆஸனத்தில் அமர்ந்து, வித்வான்களால் சேவிக்கப்பட்டு விளங்கும் அந்தப் பரமஹம்ஸரைப் பணிந்து சொல்திறமை திரண்டு விளங்குகின்ற ஸரஸ்வதி கூறினுள்.

ईशानः सर्वविद्यानामीश्वरः सर्वदेहिनाम् ।
ब्रह्मणोऽधिपतिर्ब्रह्मन् भवान् साक्षात्सदाशिवः ॥ ६६

பிரம்மன்! தாங்கள் கலைகளனைவற்றிற்கு ஈசுவரரும், எல்லாப் பிராணிகளுக்கும் நாயகரும், நான்முகக்கடவுளுக்கும் தலைவரும் எப்பொழுதும் மங்களரூபியுமாகிய சிவபெருமானன்றோ!

सदसि मामविजित्य तथैव यन्मदनशासन कामकलास्वपि ।
तदवबोधकृते कृतिमाचरस्तदिह मर्त्यचरित्रविडम्बनम् ॥ ६७

மன்மதனை எரித்தவரே! அவையில் என்னை வெல்லாமல் காமகலைகளைக் கற்றுக்கொள்வதற்கு தாங்கள் ஆற்றிய செயல் இவ்வுலகில் மனிதனுடைய செய்கையை அநுஸரித்தலேயாகும். (அவ்வாறு செய்யாமலேயே எனது வினுக்களுக்கு விடையளிக்க வல்லமையுள்ளவராயினும் தெய்வத்தன்மையை விளக்காமலிருப்பதற்கு கூடுவிட்டுக் கூடுபாய்ந்தீர். மானிடப்பிறவியை ஏற்றுக்கொண்டு யோகப்பயிற்சியின் மகிமையைக் காண்பித்தீர்.)

त्वया यदावां विजितौ परात्मन्न तत्त्रपामावहतीड्य सर्वथा ।
कृताभिभूतिर्न मयूखशालिना निशाकरादेरपि कीर्तये खलु ॥ ६८

துதிக்கத்தக்கவரே! பரமாத்மாவே! தங்களால் நாங்களிருவரும் வெல்லப்பட்டோம் என்பது எவ்விதத்திலும் எங்களுக்கு வெட்கத்தை அளிப்பதில்லை. கதிரவனுல், திங்கள் தாரங்கள் ஆகியவை தோற்கடிக்கப்பட்டால் அது அவைகளுடைய கீர்த்திக்கு இழிவாகுமா? (மகான்களிடமிருந்து இழிவு ஏற்படுதல் சிறந்ததேயாகும். அற்பனிடமிருந்து கௌரவம் கிட்டுவதும் சிறந்ததல்ல. ஸ்ரீகிருஷ்ணனுடைய பாதங்களால் காளியன் உதைக்கப்பட்டான். அது காளியனுக்கு அலங்காரமாயிற்று. அதனுல் கருடனிடமிருந்து அபாயம் நிகழவில்லை.)

आदावात्म्यं धाम कामं प्रयास्याम्यर्हस्यच्छं मामनुज्ञातुमर्हन् ।
इत्यामन्त्र्यान्तर्हितां योगशक्त्या पश्यन् देवीं भाष्यकर्ता बभाषे ॥ ६९

பூஜிக்கத்தக்கவரே! பரிசுத்தமான என்னுடைய பதவியை (ஸத்யலோகத்தை) அடைய விரும்புகிறேன். அதற்கு உத்தரவு அளிப்பீர்களாக என்று கூறி யோகசக்தியினுல் கண் மறைவாகப் புறப்படும் தருணத்தில், பாஷ்யங்களை இயற்றிய ஸ்ரீ சங்கரர் அவளைப் பார்த்துப் புகன்றார். ('யோக

சக்தியால்' என்ற சொல் இருவிதமாக அன்வயப்படுத்தி பொருள் விளக்குதற்குரியது. யோகசக்தியால் 'தேவி' கண்மறைவானுள். அந்த தேவியை ஸ்ரீ சங்கரர், யோகசக்தியினுல் கண்ணுற்றுர் என்றும் விளக்கம்.)

जानामि त्वां देवि देवस्य धातुर्भार्यामिष्टामष्टमूर्तेः सगर्भ्याम् ।
वाचामाद्यां देवतां विश्वगुप्त्यै चिन्मात्रामप्यात्तलक्ष्म्यादिरूपाम् ॥ ७०

தேவியே! தங்களை பிரம்மதேவருடைய மனைவியென்றும், பரமசிவனுடைய ஸகோதரியென்றும், வாக்தேவியென்றும், உலகத்தின் பாதுகாப்பிற்காக லக்ஷ்மி முதலிய உருவத்தைப் பெற்றுக்கொள்கிறவளென்றும், சித்ரூபிணியென்றும் யான் அறிவேன்.

तस्मादस्मत्कल्पितेष्वर्च्यमाना स्थानेषु त्वं शारदाख्या दिशन्ती ।
इष्टानर्थानृष्यशृङ्गादिकेषु क्षेत्रेष्वास्स्व प्राप्तसत्संनिधाना ॥ ७१

ஆகையால், என்னுல் அமைக்கப்படும் சிருங்ககிரி முதலிய ஸ்தானங்களில் 'சாரதா' என்ற பெயருடன் ஸன்னிதானம் பெற்று விளங்கிக் கொண்டும் (பக்தர்களின்) விருப்பங்களை அளித்துக்கொண்டும் வாஸம் செய்வீர்களாக.

तथेति संश्रुत्य सरस्वती सा प्रायात्प्रियं धाम पितामहस्य ।
अदर्शनं तत्र समीक्ष्य सर्व आकस्मिकं विस्मयमीयुरुच्चैः ॥ ७२

'சரி' என்று வாக்களித்து அந்த வாக்தேவி பிரம்மதேவருடைய ஸ்தானமாகிய ஸத்தியலோகமடைந்தாள். திடீரென்று அவளுடைய அந்த மறைவைக்கண்டு அங்கிருந்த ஜனங்கள் மிக்க வியப்படைந்தனர்.

तस्या यतीशजितभर्तृयतित्वजातवैधव्यसंभवशुचा भुवमस्पृशन्त्याः ।
अन्तर्धिमेक्ष्य मुदितोऽजनि मण्डनोऽपि तत्साधु वीक्ष्य मुमुदे यतिशेखरश्च ॥ ७३

யதீசுவரரால் வெல்லப்பட்ட தன் கணவன் துறவறம் பெற்றமையால் நிலவிய வைதவ்யதுக்கத்தினுல் பூமியைத் தொடாமல் ஆகாயமார்க்கமாக அந்த சாரதாதேவி மறைந்ததைக்கண்டு மண்டனர் மனக்களிப்புற்றுர். ஸ்ரீ சங்கரரும் தக்க நிகழ்ச்சியென்று ஆனந்தமடைந்தார்.

मण्डनमिश्रोऽप्यथ विधिपूर्वं दत्वा वित्तं यागे सर्वम् ।
आत्मारोपितशोचिष्केशो भेजे शङ्करमस्तमिताशः ॥ ७४

மண்டனமிச்ரரும் முறைப்படி வேள்வி நிகழ்த்திச் செல்வங்களை தானம் செய்து அக்னிகளை மந்திரபூர்வமாக தன்னிடம் ஏற்றுக்கொண்டு விருப்பங்களை விலக்கியவராக ஸ்ரீ சங்கரரைச் சரணம் புகுந்தார்.

संन्यासगृह्यविधिना सकलानि कर्माण्यह्नाय शङ्करगुरुर्विदुषोऽस्य कुर्वन् ।
कर्णे जगौ किमपि तत्त्वमसीति वाक्यं कर्णेजपं निखिलसंसृतिदुःखहानेः ॥ ७५

ஸ்ரீ சங்கரர் சாஸ்திரமுறைப்படி ஸன்னியாஸத்திற்குரிய காரியங்களை செய்வித்து, ஸம்ஸாரதுக்கங்களனைவற்றையும் அகற்றுகின்ற 'तत्त्वमसि' என்னும் மகாவாக்கியத்தை வித்வானுகிய மண்டனருடைய காதில் ஓதினுர்.

संन्यासपूर्वं विधिवद्बिभिक्षे पश्चादुपादिक्षदथाऽऽत्मतत्त्वम् ।
आचार्यवर्यः श्रुतिमस्तकस्थं तदादिवाक्यं पुनराबभाषे ॥ ௭௬

ஸன்னியாஸமுறையில் மண்டனர் பிக்ஷையை (உபதேசத்தை) யாசித்தார். பரமாசாரியரும் உபநிஷத்திலுள்ள 'तत्त्वमसि' போன்ற மகாவாக்யங்களின் பொருளைப் புகன்று பிறகு கூறினர்.

त्वं नासि देहो घटवद्व्यनात्मा रूपादिमत्त्वादिह जातिमत्त्वात् ।
ममेति भेदप्रथनादभेदसंप्रत्ययं विद्धि विपर्ययोत्थम् ॥ ௭௭

'நீ' தேகமல்லன். ஏனெனில், தேகத்திற்கு உருவம், பிறப்பு என்பவை உள. குடம், வஸ்திரம் முதலியவை உருவம் உற்பத்தி உள்ளவை. அவைகள் ஆத்மாவல்ல. அதுபோல் உடலும் ஆத்மாவல்ல. என்னுடைய தேகம் என்று வேற்றுமை வியவகாரம், தேகம் ஆத்மாவைக்காட்டிலும் வேறு என்பதற்குச் சான்ருகும். நான் மெலிந்தவன், பருத்தவன் என்ற வியவகாரங்கள் உடலே ஆத்மாவுடன் பிணைத்து பிரமத்தினல் உண்டாகும் வியவகாரங்களேயன்றி உண்மையான அபேதத்திற்குச் சான்றல்ல.

लोप्यो हि लोप्यव्यतिरिक्तलोपको दृष्टो घटादिः खलु तादृशी तनुः ।
दृश्यत्वहेतोर्व्यतिरेकसाधने त्वत्तः शरीरं कथमात्मतागतिः ॥ ௭௮

நாசமடையும் பொருள் தனது நாசத்திற்குக் காரணமான பொருளைவிட வேருகக் காணப்படுகின்றது. தடி குடத்தை உடைத்து நாசம் செய்கின்றது. குடம் வேறு, தடி வேறு என்பது திண்ணம். அதுபோலவே ஆத்மஞானத்தினல் நாசமடையும் உடல் எவ்வாறு 'ஆத்மா' என்று கூறத்தக்கதாகும்? திருச்யம் யாவும் நாசமடையும் பொருள். உடல் திருச்யப் பொருள். (புலப்படும் பொருள்)

नापीन्द्रियाणि खलु तानि च साधनानि दात्रादिवत्कथममीषु तवाऽऽत्मभावः ।
चक्षुर्मदीयमिति भेदगतेरमीषां स्वप्नादिभावविरहाच्च घटादिसाम्यम् ॥ ௭௯

பொறிகளும் ஆத்மாவல்ல. அவை அறிவிற்குக் கருவிகள். தச்சனுக்கு உளி கருவியாக இருப்பதுபோல், அறிவிற்குக் கருவிகளாக இருப்பதனுலும், 'என்னுடைய கண், செவி' என்று வேற்றுமை வியவகாரம் இருப்பதனுலும், துயிலுங்கால் செயலற்றவைகளாக இருப்பதினுலும் கனவு முதலியவைகளை உணரும் ஆத்மாவாகப் பொறிகளைக் கூறுதல் இயலாது.

यद्यात्मतैषां समुदायगा स्यादेकव्ययेनापि भवेन्न तद्धीः ।
प्रत्येकमात्मत्वमुदीर्यते चेन्नश्येच्छरीरं बहुनायकत्वात् ॥ ௮௦

ஆத்மத்தன்மை இந்திரியங்களின் தொகுதியில் உள்ளதாகில் ஒரு இந்திரியம் இறந்தால் அந்தக் குறைவினல் ஆத்மா இல்லை என்று கூறவேண்டும். (கண்ணிழந்தவன் 'நான் கேட்கிறேன்' என்றும், செவிடன் 'நான் காண்கிறேன்' என்றும் தனிப்பட்ட இந்திரியம் இல்லாவிடினும் உணர்ச்சியுள்ளவனே கூறுவதனுல் இந்திரியங்களின் தொகுதியில் ஆத்மத்தன்மை இல்லை என்பதை அறிகிறோம்.) தனிப்பட்ட ஒவ்வொரு இந்திரியத்தில் ஆத்மத்தன்மை இருக்கிறதாயின் பகுநாயகத்துவம் பேரனர்த்தத்திற்குக் காரணமென்று முடியும்.

आत्मत्वमन्यतमगं यदि चक्षुरादेश्चक्षुर्विनाशसमये स्मरणं न हि स्यात् ।
एकाश्रयत्वनियमात्स्मरणानुभूत्योर्दृष्टश्रुतार्थविषयावगतिश्च न स्यात् ॥ ८१

மேலும், ஆத்மத்துவம் ஒரு இந்திரியத்தின் குணம் என்று கூறுகையில் அந்த இந்திரியம் உணர்ந்த பொருளை வேறு இந்திரியம் ஞாபகத்தில் வைத்தல் என்பது இயலாது. கண்கள் கண்டறிந்த விஷயத்தை கண்ணிழந்த பின், 'இதனை நான் முன்பு கண்ணுற்றதை இப்பொழுது நினைவுறுகிறேன்' என்று கூறுகிறான். நேரில்கண்டது கண். பிற்காலத்தில், கண்ணில்லாமலிருக்கையில் கேள்வியினால் ஞாபகத்திற்கு கொண்டுவந்து கூறுதல் கண்ணும் காதுமல்லாத 'ஆத்மா வேறு ஒருவன்' என்ற விஷயத்தை தீர்மானப்படுத்துகிறது. ஒருவன் பார்த்த பொருளை மற்றவன் ஞாபகப்படுத்திக்கொள்கிறான் என்பது முரண். ஆகையால் பொறிகளால் பொருள்களை உணருகின்ற ஆத்மா பொறி என்று கூறுதல் இயலாது.

मनोऽपि नाऽऽत्मा करणत्वहेतोर्मनो मदीयं गतमन्यतोऽभूत् ।
इति प्रतीतेर्व्यभिचारितायाः सुप्तौ च तच्चिन्मनसोर्विविक्तता ॥ ८२

மனமும் ஆத்மாவல்ல. மற்றப் பொறிகள் போல் மனமும் காரணமேயாகும். என்னுடைய மனம் என்று வேற்றுமை வியவகாரத்தாலும் துயிலுங்கால் மனம் செயலற்று இருப்பதாலும், அச்சமயம் மனம் ஒன்றையும் உணராமலிருப்பதாலும் மனம் ஆத்மாவல்ல என்பது நிச்சயம். என்னுடைய மனம் வேறு விஷயத்தில் ஈடுபட்டதால் இதனை நான் உணரவில்லை என்ற வியவகாரம் இதற்குச் சான்று.

अनयैव दिशा निराकृता न च बुद्धेरपि चाऽऽत्मता स्फुटम् ।
अपि भेदगतेरनन्वयात्करणादाविव बुद्धिमुज्झ भोः ॥ ८३

ஐயா, இவ்விதம் 'என்னுடைய புத்தி' என்று வேற்றுமை வியவகாரம் இருப்பதால் புத்தியும் ஆத்மாவல்ல என்று அறிந்துகொள்வீராக.

नाहंकृतिश्चरमधातुपदप्रयोगात् प्राणा मदीया इति लोकवादात् ।
प्राणोऽपि नाऽऽत्मा भवितुं प्रगल्भः सर्वोपसंहारिणि सन् सुषुप्ते ॥ ८४

'அஹங்கார' மென்ற சொல்லில் கடைசியில் செய்கையைக் கூறும் 'கார' என்ற சொல் அமைந்துள்ளதால் அதுவும் ஆத்மாவல்ல. துயிலில் மற்றப் பொறிகள் செயலற்று ஓய்வடைந்து பிராணன் செயலுள்ளதாக இருப்பதால் அந்தப் பிராணனை 'ஆத்மா' என்று கூறுதலும் சரியன்று. 'என்னுடைய பிராணன்' என்று கூறுகிறோமன்றோ! அதனாலேயே ஆத்மாவிற்கும் பிராணனுக்கும் வேற்றுமை தெளிவாகிறது.

एवं शरीराद्यविविक्त आत्मा त्वंशब्दवाच्योऽभिहितोऽत्र वाक्ये ।
तदोदितं ब्रह्म जगन्निदानं तथा तथैक्यं पदयुग्मबोध्यम् ॥ ८५

இவ்வாறு சரீரம் முதலியவைவயைக்காட்டிலும் வேறாகிய ஆத்மா 'त्वम्' என்ற சொல்லினால் கூறப்படுகிறது. 'तत्' என்ற சொல்லால் ஜகத்திற்குக் காரணமாகிய பிரம்மவஸ்து கூறப்படுகிறது. 'असि' என்ற சொல்லால் இரண்டினுடையவும் அபேதம் கூறப்படுகிறது.

कथं तदैक्यं प्रतिपादयेद्वचः सर्वज्ञसंमूढपदाभिषिक्तयोः ।
न ह्येकता संतमसप्रकाशयोः संदृष्टपूर्वा न च दृश्यतेऽधुना ॥ ८६

இருளுக்கும் வெளிச்சத்திற்கும் அபேதம் காணப்பட்டதில்லை. காணப்படுகிறதுமில்லை. (எதிர்காலத்திலும் காணப்படாது.) அதுபோல் ஸர்வக்ஞனை பரமாத்மாவிற்கும் அற்பக்ஞனை ஜீவனுக்கும் அபேதம் எவ்வாறு வேதவசனத்தினால் கூறமுடியும்? (என்று ஆட்சேபம்).

सत्यं विरोधगतिरस्ति तु वाच्यगेयं सोऽयं पुमानितिवदत्र विरोधहानेः ।
आदाय वाच्यमविरोधि पदद्वयं तल्लक्ष्यैक्यबोधनपरं ननु को विरोधः ॥ ८७

வெகுகாலத்திற்கு முன் கண்ட மனிதனை தற்சமயத்தில் காணுகையில் 'அந்த மனிதன் இவன்' என்று கூறும் வாக்கியத்தில் இறந்தகாலம், முன் கண்ட தேசம், முந்திய நிலைமை முதலியவற்றையும், நிகழ்காலம், தேசம், நிலைமை முதலியவற்றையும் அகற்றி வியக்தியை (தனிப்பட்ட மனிதனை) மட்டும் கூறுவதுபோல, வாச்யார்த்தத்தின் ஏகதேசத்தை = சில அம்சத்தை (ஸர்வக்ஞத்தன்மை, அற்பக்ஞத்தன்மை என்பவைகளை) நீக்கி லக்ஷ்யார்த்தத்தை = சைதன்யாம்சத்தை மட்டும் கூறுகையில் ஆட்சேபத்திற்கிடமில்லை.

जहीहि देहादिगतामहंधियं चिरार्जितां कर्मशठैः सुदुस्त्यजाम् ।
विवेकबुद्ध्या परमेव सन्ततं ध्यायाऽऽत्मभावेन यतो विमुक्तता ॥ ८८

பிரவிருத்திமார்க்கத்திலேயே ஈடுபட்டவர்களால் விலக்கமுடியாததும் வெகுகாலம் நிலவியதுமாகிய தேகத்தில் ஆத்மபுத்தியை அகற்றி, விவேகத்தையடைந்து எப்பொழுதும் பரமாத்மாவையே தியானம் செய்வீராக. அதனால் முக்திசுகம் நிலவும்.

साधारणे वपुषि काकशृगालवह्निमात्रादिकस्य ममतां त्यज दुःखहेतुम् ।
तद्वज्जहीहि बहिरर्थगतां च विद्वंश्चित्तं बधान परमात्मनि निर्विशङ्कम् ॥ ८९

வித்வானே! காகம், நரி, நெருப்பு முதலியவற்றிற்கு இரையாகக்கூடிய தேகத்தில் நான் என்ற அபிமானம் துக்கத்திற்குக் காரணமாதலால் அதையும் அதுபோலவே வெளிப்பொருள்களில் பற்றுதலையும் அகற்றி பரமாத்மனிடத்தில் சந்தேகமின்றி சித்தத்தை நிலைநிறுத்துவீராக.

तीरात्तीरं संचरन् दीर्घमत्स्यस्तीराद्भिन्नो लिप्यते नापि तेन ।
एवं देही संचरञ्जाग्रदादौ तस्माद्भिन्नो नापि तद्धर्मको वा ॥ ९०

பெரியமீன் பிரவாஹத்தில் ஸஞ்சரித்துக்கொண்டு இரு கரைகளுக்கும் செல்லுகிறது. அந்த மீன் நதியின் பிரவாஹம், கரைகள் என்பவைகளைக் காட்டிலும் மாறுபட்டது. அதுபோல், விழிப்புணர்ச்சியிலும், கனவிலும் வியவஹாரங்களைச் செய்கிறதாயினும் அந்த ஆத்மா அவைகளைக்காட்டிலும் வேறுபட்டதுதான்.

जाग्रत्स्वप्नसुषुप्तिलक्षणमदोऽवस्थात्रयं चित्तनौ
त्वय्येवानुगते मिथो व्यभिचरद्धीसंज्ञमज्ञानतः ।
क्लृप्तं रज्ज्विवदमंशके वसुमतीच्छिद्राहिदण्डादिवत्
तद्ब्रह्मासि तुरीयमुज्झितभयं मा त्वं पुरेव भ्रमीः ॥ ९१

ஆகையால், கண்ணுக்குப் புலனாகிய கயிற்றில் பாம்பு முதலிய பல கற்பனைகள் ஏற்படுவதுபோல், சித்ரூபியான ஆத்மாவினிடத்திலேயே விழிப்புணர்ச்சி, கனவு, துயில் முதலிய புத்தியின் மாறுபாடுகளாகிய பல கற்பனைகள் செய்யப்படுகின்றன. அந்த மூன்று நிலைமையுமற்று அச்சம் நீங்கிய நான்காவது பிரம்மவஸ்துவாக நீ இருக்கிறாய் என்பதை உறுதியாக உணர்ந்து வேற்றுமையை அகற்றுவாயாக. முன்போல் பிரமையைக் கொள்ள வேண்டாம்.

प्रत्यक्तमं परपदं विदुषोऽन्तिकस्थं दूरं तदेव परिमूढमतेर्जनस्य .
अन्तर्बहिश्च चितिरस्ति न वेति कश्चिच्चिन्वन् बहिर्बहिरहो महिमाऽऽत्मशक्तेः ॥ ९२

ஸச்சிதானந்தரூபமான அந்தப் பரம்பொருள் அறிஞனுக்கு அருகிலேயே உள்ளது. அறிவிழந்த மூடனுக்குத் தொலைவிலிருக்கிறது. உள்ளும் வெளியும் வியாபித்த பொருளாயினும் மூடனே அதனை எப்பொழுதும் வெளியே தேடுகிறான். ஆத்மசக்தியின் வன்மை வியக்கத்தக்கது.

यथा प्रपायां बहवो मिलन्ते क्षणे द्वितीये बत भिन्नमार्गाः ।
प्रयान्ति तद्वद्बहुनामभाजो गृहे भवन्त्यत्र न कश्चिदन्ते ॥ ९३

தண்ணீர்ச்சாலையில் அநேகர் சந்தித்துக்கொள்கின்றனர். அடுத்த கணத்தில் பல வேறு வழிகளில் அவர்கள் பிரிந்து செல்கின்றனர். அதுபோல் இல்லத்திலும் பல பெயர்களைப் பெற்று ஜனங்கள் ஒன்றுசேர்கின்றனர். மரணத்தில் ஒருவனும் நிலைப்பதில்லை.

सुखाय यद्यत् क्रियते दिवानिशं सुखं न किंचिद्बहुदुःखमेव तत् ।
विना न हेतुं सुखजन्म दृश्यते हेतुश्च हेत्वन्तरसन्निधौ भवेत् ॥ ९४

சுகத்திற்காக அல்லும் பகலும் முயன்று பணியாற்றியும் சுகம் கிடைக்காமல் துக்கமே அதிகமாக உண்டாகிறது. காரணமின்றி சுகம் கிடைப்பதுமில்லை. அந்தக்காரணம் பூர்வபுண்யமேயாகும். அதற்குக்காரணம் அதற்கும் முன்ஜன்மத்துப் புண்ணியமேயாகும்.

परिपक्वमतेः सकृच्छ्रुतं जनयेदात्मधियं श्रुतेर्वचः ।
परिमन्दमतेः शनैः शनैर्गुरुपादाब्जनिषेवणादिना ॥ ९५

பரிசுத்தமான புத்தியுள்ளவனுக்கு ஒருதடவை கேட்டமாத்திரத்திலேயே உபநிஷத்துக்களின் வசனம் ஆத்மஞானத்தை உண்டாக்குகிறது. மந்தபுத்தியுள்ளவனுக்கு குருபாதகமலங்களை சேவித்தல் முதலிய உபாயங்கள் மூலமாக காலக்கிரமத்தில் ஆத்மஞானம் உண்டாகிறது.

प्रणवाभ्यसनोक्तकर्मणोः करणेनापि गुरोर्निषेवणात् ।
अपगच्छति मानसं मलं क्षमते तत्त्वमुदीरितं ततः ॥ ९६

ஓங்காரத்தை அடிக்கடி ஜபிப்பதினாலும், விதிக்கப்பட்ட கடமைகளைச் செய்வதாலும், குருவின் சேவையாலும் மனத்தின் மலம் நீங்கி தத்துவ ஞானம் ஏற்படுகிறது.

मनोऽनुवर्तेत दिवानिशं गुरौ गुरुर्हि साक्षाच्छिव एव तत्त्ववित् ।
निजानुवृत्या परितोषितो गुरुर्विनेयवक्त्रं कृपया हि वीक्षते ॥ ९७

பகலும் இரவும் மனம் குருவினிடத்திலேயே ஈடுபடவேண்டும். தத்துவ ஞானியாகிய குரு ஸாக்ஷாத் பரமசிவனேயாவார். தன்னை அனுஸரிப்பதால் ஸந்தோஷமடைந்த குருநாதன் கருணையுடன் சிஷ்யனுடைய முகத்தைப் பார்க்கின்றார்.

सा कल्पवल्लीव निजेष्टमर्थं फलत्यवश्यं किमकार्यमस्याः ।
आज्ञा गुरोस्तत्परिपालनीया सा मोदमानीय विधातुमिष्टा ॥ ९८

அந்த குருகருணை கற்பகவிருக்ஷம்போல் பயனளிக்கிறது. அதனால் அடையமுடியாதது ஒன்றுமில்லை. ஆகையால் குருவின் ஆக்ஞையை பராமரிக்கவேண்டும். ஸந்தோஷத்துடன் ஏற்று அதனை நிறைவேற்றவேண்டும்.

गुरूपदिष्टा निजदेवता चेत्कुप्येत्तदा पालयिता गुरुः स्यात् ।
रुष्टे गुरौ पालयिता न कश्चिद्गुरौ न तस्माज्जनयेत कोपम् ॥ ९९

குருவினால் தேவனுடைய உருவம் உபதேசம் செய்து உணர்த்தப்படுகிறது. அவ்வாறு உணரும்படி செய்யப்பட்ட தேவனுக்கு நம்மிடம் சினம் நிலவினால் குரு அதிலிருந்து நம்மை காப்பாற்றுவார். தேவனுடைய அருமையான உருவத்தை உபதேசித்த குருவிற்குக் கோபம் ஏற்பட்டால் ஒருவரும் அதிலிருந்து நம்மைக் காப்பாற்றமுடியாது. ஆகையால் குருவிற்குக் கோபத்தை விளைவிக்கக்கூடாது.

पुमान् पुमर्थं लभतेऽपि चोदितं भजन्निवृत्तः प्रतिषिद्धसेवनात् ।
विधिं निषेधं च निवेदयत्यसौ गुरोरनिष्टच्युतिरिष्टसंभवः ॥ १००

செய்யவேண்டியதைச் செய்வதனாலும், செய்யக்கூடாதவைகளை விலக்குவதினாலும் மனிதன் சுகத்தை அடைகிறான். இது செய்யவேண்டியது, இது செய்யக்கூடாதது என்ற விதிவிலக்குகளைக் கூறுபவர் குருவேயாதலால் தீமை நீங்குதல் நன்மை நெருங்குதல் குருவினாலேயாகும்.

आराधितं दैवतमिष्टमर्थं ददाति तस्याधिगमो गुरोः स्यात् ।
नो चेत्कथं वेदितुमीश्वरोऽयमतीन्द्रियं दैवतमिष्टदं नः ॥ १०१

நன்கு ஆராதிக்கப்பட்ட தெய்வம் நம்முடைய விருப்பத்தையளிக்கின்றது. அந்த தெய்வத்தை நாம் அறிந்துகொள்ளுதல் குருவினிடமிருந்தேயாகும். கண்ணுக்குப் புலப்படாதாயினும் நம்முடைய விருப்பத்தையளிக்கும்

தெய்வத்தை குருவின் உபதேசமும் அருளுமின்றி மனிதன் எவ்வாறு அறியமுடியும்?

तुष्टे गुरौ तुष्यति देवतागणो रुष्टे गुरौ रुष्यति देवतागणः ।
सदाऽऽत्मभावेन सदात्मदेवताः पश्यन्नसौ विश्वमयो हि देशिकः ॥ १०२

குருநாதர் சந்தோஷமடைந்தால் தேவர்களும் சந்தோஷமடைகின்றனர். குருநாதர் கோபமடைந்தால் தேவர்களும் கோபமடைகின்றனர். தனது உபாஸ்ய தேவர்களை எப்பொழுதும் பேதமின்றி பாவித்து தன்னிடமே ஸாக்ஷாத்காரம் செய்கிற குருநாதர் ஸர்வ உலகரூபியன்றோ.

एवं पुराणगुरुणा परमात्मतत्त्वं शिष्टो गुरोश्चरणयोर्निपपात तस्य ।
धन्योऽस्म्यहं तव गुरो करुणाकटाक्षपातेन पातिततमा इति भाषमाणः ॥ १०३

இவ்வாறு பூர்வாசாரியரால் சிறந்த ஆத்மதத்துவம் உபதேசம் செய்யப்பட்டபொழுது, ''குருவே! தங்களுடைய கருணைகடாக்ஷத்தினால் அஞ்ஞானம் நீங்கிய யான் பாக்கியம் பெற்றவனானேன்'' என்று கூறிக்கொண்டு அவருடைய பாதங்களில் பணிந்தார்.

ततः स संप्राप्य सुरेश्वराख्यां दिगङ्गनाभिः क्रियमाणसख्याम् ।
सच्छिष्यतां भाष्यकृतश्च मुख्यामवाप तुच्छीकृतधातृसौख्याम् ॥ १०४

பிறகு எல்லா திசைகளிலும் பிரசித்தமான 'ஸுரேசுவரர்' என்ற பெயரையுமடைந்து, பிரம்மதேவருடைய சுகத்தையும் துச்சமாக நினைக்கும் வன்மைபெற்ற சிஷ்யபதவியையும் அடைந்தார்.

निखिलनिगमचूडाचिन्तया हन्त यावत् स्वमनवधिकसौख्यं निर्विशन्निर्विशङ्कम्।
बहुतिथमभितोऽसौ नर्मदां नर्मदां तां मगधभुवि निवासं निर्ममे निर्ममेन्द्रः ॥ १०५

பிறகு அந்த சுரேஸ்வரர் எல்லா பொருள்களிலும் பற்றற்றவராகவும் வேதங்களின் சிரஸ்ஸுக்களான உபநிஷத்துக்களைச் சர்ச்சை செய்து கொண்டும், ஒப்பற்ற பேரானந்தத்தை அனுபவித்துக்கொண்டும் நன்மையளிக்கும் நர்மதைநதியின் கரையில் மகததேசத்தில் சுகமாக வசித்தார்.

इति वशीकृतमण्डनपण्डितः प्रणतसत्करणत्रयदण्डितः ।
सकलसद्गुणमण्डलमण्डितः स निरगात् कृतदुर्मतखण्डितः ॥ १०६

இவ்வாறு மண்டனபண்டிதரை தமது சிஷ்யராக அமைத்துக்கொண்டும் தன்னை வணங்கும் மனிதர்களின் மனதை பிரணவமந்திரோபதேசத்தாலும், வாக்கை மௌனம் செய்வித்தலாலும், உடலை விஷயங்களில் விருப்பை அகற்றுவதாலும் அடங்கும்படிச் செய்துகொண்டும், நற்குணங்களையே அணிகளாக அணிந்துகொண்டும், தீயமதங்களைத் தொலைத்துக்கொண்டும் அந்தப் பரமாசாரியர் உலகயாத்திரைக்குப் புறப்பட்டார்.

कुसुमितविविधपलाशभ्रमदलिकुलगीतमधुरस्वनम् ।
पश्यन् विपिनमयासीदाशां कीनाशपालितामेषः ॥ १०७

மலர்ந்த மலர்களின் இதழ்களில் அமர்ந்து இனிமையாக இசைக்கின்ற வண்டுகளின் ஒலிகளால் மனதைக் கவருகின்ற வனத்தைப் பார்த்துக்கொண்டு தென்திசையை அடைந்தார் இந்தப் பரமாசாரியர்.

तत्र महाराष्ट्रमुखे देशे ग्रन्थान् प्रचारयन् प्राज्ञतमः ।
शमितमतान्तरमानः शनकैः सनकोपमोऽगमच्छ्रीशैलम् ॥ १०८

சிறந்த புத்திமானாகிய பரமாசாரியர், அங்கு மகாராஷ்ட்ரம் முதலிய தேசங்களில் தன்னுடைய மதத்தைப் பிரசாரம் செய்துகொண்டும், மற்ற மதங்களை மறுத்துக்கொண்டும் ஸஞ்சாரம் செய்து ஸநகமுனிவருக்கு நிகரான அவர் ஸ்ரீசைலத்திற்குச் சென்றார்.

प्रफुल्लमल्लिकावनप्रसङ्गसङ्गतामितप्रकाण्डगन्धबन्धुरप्रवातधूतपादपम् ।
सदामदद्विपाधिपप्रहारशूरकेसरिव्रजं भुजंगभूषणप्रियं स्वयंभुकौशलम् ॥ १०९

மலர்ந்த மல்லிகைமலர்கள் நிரம்பிய வனத்தில் வீசுகின்றதும், அநேக தாவுகளில் விளங்கும் மலர்களின் நறுமணத்துடன் கூடியதுமாகிய காற்றினால் அசைகின்ற மரங்கள் அடர்ந்ததும், மதம்பிடித்து ஸஞ்சரிக்கும் சிறந்த யானையைக் கொல்ல வல்லமையுள்ள மடங்கல்கள் மருவியதும், அரவணிந்தோனுக்கு ஆனந்தத்தையளிக்கின்றதும், உலகங்களைப் படைத்த பிரம்மதேவருடைய செயல்வன்மைக்குச் சான்றுமாகிய ஸ்ரீசைலத்தை ஸ்ரீசங்கரர் அடைந்தார்.

कलिकल्मषभङ्गायां सोऽद्रेराराचलत्तरङ्गायाम् ।
अधरीकृततुङ्गायां सस्नौ पातालगामिगङ्गायाम् ॥ ११०

மலையருகில் அலைவீச்சுடன் கூடியதும், கலிதோஷத்தையறுக்கின்றதும் பரிசுத்தகுணத்தினால் மலையைக்காட்டிலும் சிறந்ததும், பாதாளத்திற்குச் செல்லுகின்றதுமாகிய கங்கையில் ஸ்நானம் செய்தார்.

नमन्मोहभङ्गं नभोलेहिशृङ्गं त्रुटत्पापसङ्गं रटत्पक्षिभृङ्गम् ।
समाश्लिष्टगङ्गं प्रहृष्टान्तरङ्गं तमारुह्य तुङ्गं ददर्शेशलिङ्गम् ॥ १११

வணங்குகின்றவர்களின் அவிவேகத்தை அறுக்கின்றதும், ஆகாயமளாவி ஓங்கி வளர்ந்த சிகரங்களுள்ளதும், பாபசம்பந்தமற்றதும், கூவுகின்ற பறவைகளும் ஹ்ரீங்காரம் செய்யும் வண்டுகளும் நிரம்பியதும், கங்கையை அணைத்துக்கொண்டதும், மனதை சந்தோஷிக்கச்செய்கின்றதுமாகிய அந்த மலையிலேறி ஈசுவரலிங்கத்தை தர்சனம் செய்தார்.

प्रणमद्भवबीजभर्जनं प्रणिपत्यामृतसम्पदार्जनम् ।
प्रमुमोद स मल्लिकार्जुनं भ्रमराम्बासचिवं नतार्जुनम् ॥ ११२

வணங்குபவர்களின் அஞ்ஞானத்தை அகற்றித் துன்பங்களைத் தொலைக்கின்றவரும், தேவர்களுடைய செல்வத்தை = மோக்ஷத்தை சொரிகின்றவரும், அர்ஜுனனால் வணங்கப் பெற்றவரும், ப்ரமராம்பாசமேதருமாகிய மல்லிகார்ஜுனேசுவரரை வணங்கிக் களித்தார்.

तीररुहैः कृष्णायास्तीरेऽवात्सीत्तिरोहितोष्णायाः ।
आवर्जिततृष्णाया आचार्येन्द्रो निरस्तकार्ष्ण्यायाः ॥ ११३

இரு கரைகளிலுமுள்ள மரங்களால் கருநிறமுள்ளதும், உஷ்ணமில்லாததும், துறவிகளையும் தனது அழகினால் கவருகின்றதும், பாபத்தை அறுக்கின்றதுமாகிய அந்த கங்கையின் கரையில் பரமாசாரியர் வாசம் செய்தார்.

तत्रातिचित्रपदमत्रभवान् पवित्रकीर्तिर्विचित्रसुचरित्रनिधिः सुधीन्द्रान् ।
अग्राहयत्कृतमसद्ग्रहनिग्रहार्थमग्र्यान् समग्रसुगुणान् महदग्रयायी ॥ ११४

அங்கு பிறரை பரிசுத்தம் செய்கின்ற புகழையுடையவரும், ஆச்சரியங்களான நல்ல சரித்திரங்களுக்குச் சமுத்திரமும், சான்றோர்களுக்கும் சான்றவரும், உலகங்களால் போற்றத்தக்கவருமாகிய ஸ்ரீசங்கரர் நற்குணங்கள் நிரம்பியவர்களும், புத்திசாலிகளும், உத்தமர்களுமாகிய ஜனங்களுக்கு தன்னால் இயற்றப்பட்டதும், இனிய சொற்களடங்கியதும், துஷ்டமதங்களை நிராகரிக்கின்றதுமான பாஷ்யத்தை உபதேசம் செய்தார்.

अध्यापयन्तमसदर्थनिरासपूर्वं किन्त्वन्यतीर्थयशसं श्रुतिभाष्यजातम् ।
आक्षिप्य पाशुपतवैष्णववीरशैवमाहेश्वराश्च विजिता हि सुरेश्वराद्यैः ॥ ११५

மற்ற மதங்களை மறுத்து விசேஷமான பொருள் விளக்கத்தினால் பரிசுத்தரும், மிக்க கீர்த்திபெற்றவரும், தனது பாஷ்யங்களை கற்பிக்கின்றவரும் ஆகிய அவரை பாசுபதம், வீரவைஷ்ணவம், வீரசைவம், வீரமாகேசுவரம் முதலிய மதங்களைச் சார்ந்தவர்கள் ஆக்ஷேபித்தனர். ஆனால் அவர்கள் சுரேஸ்வரர் முதலிய சிஷ்யர்களாலேயே வெல்லப்பட்டனர்.

केचिद्विसृज्य मतमात्म्यममुष्य शिष्यभावं गता विगतमत्सरमानदोषाः ।
अन्ये तु मन्युवशमेत्य जघन्यचित्ता निन्युः क्षणं निधनमस्य निरीक्षमाणाः ॥११६

சிலர் விரோதத்தையும் கர்வத்தையும் இழந்து தங்களுடைய மதத்தை விலக்கி இவருக்கு சிஷ்யராயினர். வேறு சிலரோவெனில், சினமுற்று அற்ப மனப்பான்மையுடன் இவருக்குத் தீங்கு விளைவிக்க ஸந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக்கொண்டு காலத்தைக் கழித்தனர்.

वेदान्तीकृतनीचशूद्रवचसो वेदाः स्वयं कल्पनाः
पापिष्ठाः स्वमपि त्रयीपथमपि प्रायो दहन्तः खलाः ।
साक्षाद्ब्रह्मणि शङ्करे विदधति स्पर्धानिबद्धां मतिं
कृष्णे पौण्ड्रकवत्तथा न चरमां किं ते लभन्ते गतिम् ॥ ११७

அற்பர்களுடைய வசனங்களையே வேதாந்தங்களாகவும், தமது புத்தியின் கற்பனைகளையே வேதங்களாகவும் ஏற்றுக்கொண்டு, வேதாந்த நூலில் கூறும் பரமாத்மனையும், பிரவிருத்திமார்க்கத்தில் கூறும் தர்மங்களையும் மறுத்து பிரஸங்கஞ்செய்த துஷ்டர்கள் பிரம்மஸ்வரூபியான ஸ்ரீசங்கரரிடம் பொறுமையினால் துஷ்டபுத்தியை உபயோகித்ததால், ஸ்ரீகிருஷ்ணரிடம் பகைமைகொண்ட பௌண்ட்ரகன்போல் மரணத்தை அடையாமலிருக்க முடியுமா?

(கருஷதேசத்து அரசனுன பௌண்ட்ரகன் ஸ்ரீகிருஷ்ணன்போல் வேஷம் தரித்துக்கொண்டு அரசசபையில் வீற்றிருக்கும் ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கு தூதர்கள் மூலமாக தெரிவித்தான். ''யான்தான் துஷ்டர்களை வதை செய்வதற்கு அவதரித்த வாஸுதேவன். நீ வீணுக அந்தப் பெயரை வைத்துக்கொண்டிருக்கிருய். என்னிடமுள்ளவைகளே உண்மையான கதை, சக்கரம் முதலிய ஆயுதங்கள். உனது பெயரும் ஆயுதங்களும் போலி. அவைகளை நீ விட்டுவிடவேண்டும், இல்லாவிடில் என்னுடன் போர் தொடர வேண்டும்''. அச்சொற்களை கேட்டு ஸ்ரீகிருஷ்ணர் நகைத்தார். போருக்குப் புறப்பட்டார். போர்க்களத்தில் வேஷத்தாலும், உடைகளாலும், கருவிகளாலும் தனக்கு நிகராக விளங்கின அந்தப் பகைவனைக் கண்ணுற்று வியந்தார். கடைசியில் அவனுக்கு ஸாரூப்பியமுக்தியை அளித்தார் என்று பாகவதநூல் கூறுகிறது.)

वाणी काणभुजी च नैव गणिता लीना क्वचित्कापिली
शैवं चाशिवभावमेति भजते गर्हापदं चार्हतम् ।
दौर्गं दुर्गतिमश्नुते भुवि जनः पुष्णाति को वैष्णवं
निष्णातेषु यतीशसूक्तिषु कथाकेलीकृतासूक्तिषु ॥ ११८

யதீசுவரருடைய சிஷ்யர்கள் அவருடைய மதத்தில் வல்லமை பெற்று வேடிக்கையாகக் கூறும் இனிய சொற்கள் விளங்குகையில் காணுதருடைய சொல் கண்யமில்லாமலாயிற்று. காபிலச் சொல் காற்றில் பாய்ந்து மாயமாக மறைந்தது. சைவம் சிதறியதாயிற்று. ஆர்ஹதம் அருஹதையற்றதாயிற்று. துர்க்காமதம் துரதிருஷ்டம் பிடித்ததாயிற்று. வைஷ்ணவம் மண்ணுயிற்று. (வைஷ்ணவமதத்தை ஒருவனும் போஷணை செய்யவில்லை.)

तथागतकथा गता तदनुयायि नैयायिकं
वचोऽजनि न चोदितो वदति जातु तौताततिः ।
थविदग्धति न दग्धधीर्विदितचापलं कापिलं
विनिर्दयविनिर्दलद्विमतसङ्करे शङ्करे ॥ ११९

கருணையை விட்டுப் பரமதத்தை அறுத்த ஸ்ரீ சங்கரர் பிரகாசிக்கையில் பௌத்தமதம் ஓடிப்போயிற்று. நையாயிகமதம் அதனைப் பின்பற்றிப் பறந்துவிட்டது. திறமை ஒழிந்ததால் குமாரிலமதம் வாயை திறக்கவில்லை. காபிலம் சலித்துக்கொண்டே இருந்தது.

इति श्रीमाधवीये तत्कलाज्ञत्वप्रपञ्चनम् ।
संक्षेपशङ्करजये सर्गोऽयं दशमोऽभवत् ॥ १० ॥

இவ்வாறு ஸ்ரீ மாதவாசாரியர் இயற்றிய ஸ்ரீ சங்கரவிஜயத்தில்
அவருடைய ஸர்வக்ஞத்துவத்தை நிரூபணஞ்செய்யும்
பத்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

आदितः श्लोकाः 1148



# अथैकादशः सर्गः
# பதினேராவது ஸர்க்கம்

## उग्रभैरववधः
## உக்ரபைரவனைக் கொல்லுதல்

तत्रैकदाच्छादितनैजदोषः पौलस्त्यवत्कल्पितसाधुवेषः ।
निर्मानमायं स्थितकार्यशेषः कापालिकः कश्चिदनल्पदोषः ॥ १

அந்த ஸ்ரீசைலத்தில், ஒருநாள் மிக்க தோஷங்கள் நிரம்பியவனும் அந்த தோஷங்களை ராவணன்போல் வெளிவேஷத்தால் மறைத்துக்கொண்டவனும், தனக்கு ஆகவேண்டிய காரியமொன்றை நிறைவேற்ற விரும்பியவனுமாகிய காபாலிகன் ஒருவன், தேகாபிமானமும் கபடமுமில்லாத அந்த ஸ்ரீ சங்கரகுருவைக் கண்டான்.

असावपश्यन्मदानाद्यवश्यं वश्येन्द्रियाश्वैर्मुनिभिर्विमृग्यम् ।
आदिश्य भाष्यं सपदि प्रशस्यमासीनमाश्रित्य मुनिं रहस्यम् ॥ २

காமம், வெகுளி முதலிய தீயகுணங்களுக்கு வசப்படாதவரும், ஐம்பொறிகளாகிய பரிகளை அடக்கிய முனிவர்களால் அறியத்தக்கவரும், சிறந்த பாஷ்யத்தை உபதேசஞ்செய்து தனிமையில் உட்கார்ந்திருப்பவருமாகிய அந்த மாமுனிவரை ரகஸ்யமாகக் கண்டான்.

दृष्ट्वैव हृष्टः स चिरादभीष्टं निर्धार्य संसिद्धमिव स्वमिष्टम् ।
महद्विशिष्टं निजलाभतुष्टं विस्पष्टमाचष्ट च कृत्यशिष्टम् ॥ ३

அவரைக்கண்டமாத்திரத்திலேயே வெகுகாலமாக தான் விரும்பிய காரியம் கைகூடியதென்று உவகையுண்டு சான்றோர்களில் சிறந்தவரும், ஆத்ம ஞானத்தினுல் ஆனந்தம்பெற்றவருமாகிய அவரிடம் தனது காரியத்தை தெளிவாக உரைத்தான். (செயலினுல் சிறந்தவராகிய அவரிடம் உரைத்தான்.)

गुणांस्तावाकर्ण्य मुनेऽनवद्यान्सार्वज्ञ्यलसौशील्यदयालुताद्यान् ।
द्रष्टुं समुत्कण्ठितचित्तवृत्तिर्भवन्तमागां विदितप्रवृत्तिः ॥ ४

முனிவரே! ஸர்வக்ஞத்வம், தூயகுணம், கருணை முதலிய தங்களுடைய நற்குணங்களனைவற்றையும் செவியுற்று, தங்களுடைய வரலாற்றையும் அறிந்தமையால் மிக்க ஆவலுடன் தங்களை அணுகினேன்.

त्वमेक एवात्र निरस्तमोहः पराकृतद्वैतिवचःसमूहः ।
आभासि दूरीकृतदेहमानः शुद्धाद्वये योजितसर्वमानः ॥ ௫

வேற்றுமைவாதம் கூறுகிறவர்களின் சொற்களை சிதறடித்து, எல்லாப் பிரமாணங்களையும் அத்வைதக்கொள்கையில் இணைத்துக் கூறுகின்ற தாங்கள் ஒருவர்தான், அஞ்ஞானத்தை அகற்றி தேகாபிமானத்தை அறுத்தவராக இவ்வுலகில் காணப்படுகிறீர்கள்.

தனது காரியம் கைகூடுவதற்காக புகழ்கிறான்:-

परोपकृत्यै प्रगृहीतमूर्तिरमर्त्यलोकेष्वपि गीतकीर्तिः ।
कटाक्षलेशार्दितसज्जनार्तिः सदुक्तिसम्पादितविश्वपूर्तिः ॥ ௬

गुणाकरत्वाद्भुवनैकमान्यः समस्तवित्त्वादभिमानशून्यः ।
विजित्वरत्वाद्दलहस्तितान्यः स्वात्मप्रदत्वाच्च महावदान्यः ॥ ௭

தாங்கள் பிறருக்கு உபகாரம் செய்வதற்காகவே உடல் தரித்துள்ளீர்கள். தேவலோகங்களிலுங்கூட புகழப்பட்ட கீர்த்தியுடையவர்கள். கடைக்கண் சிறு பார்வையினாலேயே பாரிலுள்ள சான்றோர்களின் துன்பங்களை தூர அகற்றுகிறவர்கள். நல்ல சொற்களால் உலகங்களுடைய விருப்பங்களை பூர்த்திசெய்கிறீர்கள். நற்குணக்கடலாகையால் பாரிலுள்ளவர்களால் பூஜிக்கத்தக்கவர்களாக விளங்குகிறீர்கள். எல்லாமறிந்தமையால் செருக்கில்லாதவர்கள். வெற்றிபெற்றமையால் மற்ற மதங்களை மறுத்தவர்கள். ஆத்மாவையே அளிப்பதனால் மாபெரும் வள்ளல்.

अशेषकल्याणगुणालयेषु परावरज्ञेषु भवादृशेषु ।
कार्यार्थिनः क्वाप्यनवाप्य कामं न यान्ति दुष्प्रापमपि प्रकामम् ॥ ௮

எல்லா நற்குணங்களுக்கும் தங்குமிடமும் உயர்வுதாழ்வுகளை உணர்ந்தவர்களுமாகிய தங்களைப் போன்றவர்களை அணுகுகிறவர்கள் ஒருபொழுதும் தமது காரியங்கள் கைகூடாமல் வீணாகத் திரும்பிச் செல்வதில்லை.

तस्मान्महत्कार्यमहं प्रपद्य निर्वर्तितं सर्वविदा त्वयाऽद्य ।
कपालिनं प्रीणयितुं यतिष्ये कृतार्थमात्मानमतः करिष्ये ॥ ௯

ஆகையால், ஸர்வக்ஞராகிய தங்களால் மாபெருங்காரியம் ஒன்றை நிறைவேற்றிக்கொண்டு இன்று கபாலியை திருப்திசெய்ய முயற்சிக்கின்றேன். அந்த முயற்சி நிறைவேறி என்னையும் கிருதார்த்தனாகச் செய்துகொள்ள விரும்புகிறேன்.

अनेन देहेन सहैव गन्तुं कैलासमीशेन समं च रन्तुम् ।
अतोषयं तीव्रतपोभिरुग्रं सुदुष्करैरब्दशतं समग्रम् ॥ ௧௦

இந்த உடலுடனேயே கைலாசலோகத்தை அடைந்து ஈசுவரனுடன் சந்தோஷமாக விளையாடுவதற்கு நூறுவருஷகாலமாக குறைவின்றி கடின தவங்கள் செய்து சிவபெருமானை களிக்கச் செய்தேன்.

तुष्टोऽब्रवीन्मां गिरिशः पुमर्थमभीप्सितं प्राप्स्यसि मत्प्रियार्थम् ।
जुहोषि चेत्सर्वविदः शिरो वा हुताशने भूमिपतेः शिरो वा ॥ ११

பரமசிவன் சந்தோஷமடைந்து ''ஸர்வக்ஞனுடையவாவது அரசனுடையவாவது சிரஸ்ஸை நீ அக்னியில் ஹோமஞ்செய்தால் உன்னுடைய விருப்பம் நிறைவேறும்'' என்று கூறினர்.

एतावदुक्त्वाऽन्तरधान्महेशस्तदादि तत्संग्रहणे धृताशः ।
चराम्यथापि क्षितिपो न लब्धो न सर्ववित्तत्र मयोपलब्धः ॥ १२

இவ்வாறு கூறி மகாதேவன் மறைந்தார். அதுமுதல் யான் மனதில் விருப்பங்கொண்டு ஆங்காங்கு ஸஞ்சரித்தேன். ஆயினும், அரசனுவது ஸர்வக்ஞனுவது எனக்கு கிடைக்கவில்லே.

दिष्ट्याऽद्य लोकस्य हिते चरन्तं सर्वज्ञमद्राक्षमहं भवन्तम् ।
इतःपरं सेत्स्यति मेऽनुबन्धः संदर्शनान्तो हि जनस्य वन्धः ॥ १३

உலகத்திற்கு ஹிதத்தை செய்கிற தங்களே பாக்கியத்தால் கண்டேன். என்னுடைய முயற்சி பலித்தது. தங்களுடைய தர்சனம் கிடைக்கும்வரையில் தான் எனக்கு சரீரபந்தம் உள்ளது.

मूर्धाभिषिक्तस्य शिरःकपालं मुनीशितुर्वा मम सिद्धिहेतुः ।
आद्यं पुनर्मे मनसाऽप्यलभ्यं ततःपरं तत्रभवान् प्रमाणम् ॥ १४

சிங்காஸனத்தில் பட்டாபிஷேகம் செய்யப்பட்ட அரசனுடையவோ அல்லது மாமுனிவருடையவோ தலே என்னுடைய தவத்திற்கு பயனேயளிக்கும் வன்மையுள்ளது. முதலில் கூறிய பொருள் மனதினுல்கூட அடைதற்கரிது. பிறகு, இந்த விஷயத்தில் தீர்மானம் கூறுதல் தங்களுடைய பொறுப்பு.

शिरःप्रदानोऽद्भुतकीर्तिलाभस्तवापि लोके मम सिद्धिलाभः ।
आलोच्य देहस्य च नश्वरत्वं यद्रोचते सत्तम तत्कुरु त्वम् ॥ १५

சான்ரேர்களில் சிறந்தவரே! தலேயை தானஞ்செய்தால் உலகில் உங்களுக்கு அற்புதமான புகழ் உண்டாகும். எனக்கு தவப்பயனும் கைகூடும். உடலோ எவ்விதத்திலும் நாசமடையும் தன்மையுள்ளது. ஆகையால், தங்களுடைய விருப்பம் யாதோ அதனேச் செய்வீர்களாக.

तद्याचितुं न क्षमते मनो मे को वेष्टदायि स्वशरीरमुज्झतु ।
भवान्विरक्तो न शरीरमानी परोपकाराय धृतात्मदेहः ॥ १६

அந்த தலேயை எனது மனம் யாசிக்கத்துணிகிறதில்லே. சுகத்தை அளிக்கின்ற உடலே யார்தான் தியாகஞ்செய்வான். ஆனல், தாங்கள் வைராக்கியம் பெற்றவர்கள்; சரீரத்தில் அபிமானமற்றவர்கள்; பிறருக்கு உதவிபுரிவதற்கு உடலே தாங்கியவர்கள்.

जनाः परक्लेशकथानभिज्ञा नक्तं दिवा स्वार्थकृतात्मचित्ताः ।
रिपुं निहन्तुं कुलिशाय वज्री दाधीचमादात्किल वाञ्छितास्थि ॥ १७

பிறருடைய வருத்தத்தின் பேச்சையே அறியாதவர்கள், அல்லும் பகலும் தமது காரியத்திலேயே சித்தங்கொண்டவர்களாக திரிகின்றனர். பகைவனை விருத்திராசுரனை கொல்லுவதற்கு இந்திரன் ததீசிமுனிவருடைய முதுகெலும்பை யாசித்துப் பெற்றுக்கொண்டானன்றோ!

दधीचिमुख्याः क्षणिकं शरीरं त्यक्त्वा परार्थे स्म यशःशरीरम् ।
प्राप्य स्थिरं सर्वगतं जगन्ति गुणैरनर्घ्यैः किल रञ्जयन्ति ॥ १८

ததீசிமுனிவர்போன்றவர்கள் அழியக்கூடிய உடலைப் பிறருக்கு தானம் செய்து, என்றுமழியாததும் எங்கும் வியாபித்ததுமாகிய புகழாகிய சரீரத்தைப் பெற்று ஒப்புயர்வற்ற குணங்களால் உலகங்களை மகிழச்செய்கின்றனர்!

वपुर्धरन्ते परतुष्टिहेतोः केचित्प्रशान्ता दयया परीताः ।
अस्मादृशाः केचन सन्ति लोके स्वार्थैकनिष्ठा दयया विहीनाः ॥ १९

சிலர் சந்தோஷத்தினால் சாந்தகுணமும் கருணையும் நிரம்பியவர்களாக உடலைத் தாங்குகின்றனர். என்னைப் போன்ற சிலர் ஸ்வயகாரியத்திலேயே கருத்துக்கொண்டு கருணையற்றவர்களாக உலகில் இருக்கின்றனர்.

परोपकारं न विनाऽस्ति किंचित्प्रयोजनं ते विधुतैषणस्य ।
अस्मादृशा कामवशास्तु युक्तायुक्ते विजानन्ति न हन्त योगिन् ॥ २०

யோகியே! மூன்று ஏஷணைகளையும் (பொன்னாசை, பெண்ணாசை, புதல்வனாசை அல்லது உலக ஆசை) துறந்த தங்களுக்கு பரோபகாரமின்றி வேறு பயனில் ஆசையில்லை. அவர்களுக்கே அடிமையாகிய என்னைப்போன்றவர்கள், அந்தோ! தக்கது, தகாதது என்ற பிரித்தறிவில்லாதவர்கள்.

जीमूतवाहो निजजीवदायी दधीचिरप्यस्थि मुदा ददानः ।
आचन्द्रतारार्कमपायशून्यं प्राप्तौ यशः कर्णपथं गतौ हि ॥ २१

ஜீமூதவாகனன் தன்னுயிரை தியாகம் செய்தமையாலும், ததீசிமுனிவர் மகிழ்ச்சியுடன் முதுகெலும்பை தானஞ்செய்தமையாலும், சந்திரன், நக்ஷத்திரங்கள், சூரியன் ஆகியவர்களுள்ளளவும் அழிவற்ற புகழ்பெற்றனர் என்று கேட்டறிந்துள்ளோம்.

यदप्यदेयं ननु देहवद्भिर्मयाऽर्थितं गर्हितमेव सद्भिः ।
तथाऽपि सर्वत्र विरागवद्भिः किमस्त्यदेयं परमार्थविद्भिः ॥ २२

பிராணிகளால் கொடுக்க இயலாததைத்தான் யான் வேண்டினேன். என்னுடைய வேண்டுகோள் சான்றோர்களால் இகழப்பட்டதேயாகும். ஆயினும், ஒன்றிலும் பற்றில்லாமையால் வைராக்கியம் பெற்றவர்களும், பரமார்த்தத்தை உணர்ந்தவர்களுமாகிய சான்றோர்களால் கொடுக்கத்தகாதது ஒன்றுமில்லை.

अखण्डमूर्धन्यकपालमाहुः संसिद्धिदं साधकपुङ्गवेभ्यः ।
विना भवन्तं बहवो न सन्ति तद्वत्पुमांसो भगवन् पृथिव्याम् ॥ २३

அகண்டமான (குறையற்ற) மண்டையோடு தவம்புரிகின்றவர்களுக்கு தவப்பயனை அளிக்க உரிய உபாயம் என்று கூறுகின்றனர். பகவானே! மண்ணுலகில் தங்களைத்தவிர அத்தகைய சிறந்த புருஷர்கள் ஏராளமாக இல்லை.

प्रयच्छ शीर्षं भगवन्नमः स्तादितीरयित्वा पतितं पुरस्तात् ।
तमब्रवीद्वीक्ष्य सुधीरधस्तात्कृपालुरावृत्तमनाः समस्तात् ॥ २४

தலையை அளிப்பீராக. பகவானே! தங்களுக்கு நமஸ்காரம் என்று கூறி எதிரில் பணிந்த அவனைக்கண்டு, புத்திசாலியும், கருணையுடையவரும், முற்றிலும் பற்றற்ற மனமுடையவருமாகிய ஸ்ரீ சங்கரர் கூறினார்.

नैवाभ्यसूयामि वचस्त्वदीयं प्रीत्या प्रयच्छामि शिरोऽस्मदीयम् ।
को वाऽर्थिसात्प्राज्ञतमो नृकायं जानन्न कुर्यादिहि बह्वपायम् ॥ २५

உமது வசனத்தில் நான் சினங்கொள்ளவில்லை. உவகையுடன் எமது தலையையளிக்கின்றேன். எவ்விதத்திலும் அழியக்கூடியதும், பல துறைகளிலும் ஆபத்துக்களை அடைகின்றதுமாகிய மானிட உடலின் நிலைமையை அறிந்த சிறந்த புத்திமானாகிய யார்தான் அதனை வேண்டுகிறவனுக்கு அளிக்காமலிருப்பான்?

पतत्यवश्यं हि विकृष्याणं कालेन यत्नादपि रक्ष्यमाणम् ।
वर्ष्मामुना सिध्यति चेत्परार्थः स एव मर्त्यस्य परःपुमर्थः ॥ २६

மிகுந்த முயற்சியுடன் பாதுகாக்கப்பட்டதாயினும் இந்த உடல் காலத்தினாலும், காலனாலும் = யமனாலும் இழுக்கப்பட்டு, அழிதல் உறுதியாகவிருக்கையில் இதனால் பிறனுடைய விருப்பம் பயன்பெறுகிறதாயின் அதைக்காட்டிலும் வேறு சிறந்த புருஷார்த்தம் யாதுள்ளது?

वर्ते विविक्तेऽधिसमाधि सिद्धिविन्मिथः समायाहि करोमि ते मतम् ।
नाहं प्रकाशं वितरीतुमुत्सहे शिरःकपालं विजनं समाश्रय ॥ २७

தவத்தின் சித்தியை அறிந்தவரே! நான் ஸமாதிநிஷ்டையில் இருக்கையில் வருவீராக. உமது இஷ்டத்தை அளிக்கிறேன். எல்லோருக்கும் தெரியும்படி யான் சிரஸ்ஸையளிக்க முயலவில்லை. இரகஸ்யமான இடத்திற்கு வருவீர்.

शिष्या विदन्ति यदि चिन्तितकार्यमेतत् योगिन् मदेकशरणा विहतिं विदध्युः ।
को वा सहेत वपुरेतदपोहितुं स्वं को वा क्षमेत निजनाथशरीरमोक्षम् ॥ २८

யோகியே! யாம் யோசனை செய்த இந்தக் காரியத்தை சிஷ்யர்கள் அறிந்தால், என்னையே புகலிடமாகக்கொண்ட அவர்கள் இந்தக் காரியத்தில் தடை செய்வார்கள். தன்னுடையதான இந்த உடலை தியாகஞ்செய்ய எவன்தான் துணிவான்? நீர் கூறியபடி துறவியாகிய நான் அதனை தியாகஞ்செய்ய துணிந்தபோதிலும், தனது தலைவன் சரீரத்தை தியாகஞ்செய்தலை எவன்தான் பொறுப்பான்?

तौ संविदं वितनुतामिति संप्रहृष्टौ योगी जगाम मुदितो निलयं मनस्वी ।
श्रीशङ्करोऽपि निजधामनि जोषमास प्रोचे न किंचिदपि भावमसौ मनोगम् ॥ २९

தன்னுடைய விருப்பம் பயன்பெற்றது என்று ஒருவர், அழியக்கூடிய இந்த உடலை பிறனுக்குப் பயன்படும்படி உபயோகிக்க சந்தர்ப்பம் நேர்ந்தது என்று மற்றொருவர், என்றிவ்வாறு இருவரும் உவகையுடன் சங்கேதம் செய்துகொண்டனர். வந்தவரான யோகி மனமகிழ்ச்சியுடன் தனது இருப்பிடம் சென்றார். உறுதிமனமுள்ள ஸ்ரீ சங்கரரும் தங்கிய இடத்தில் மௌனமாகவிருந்தார். மனதிலுள்ள கருத்தை வெளியே ஒருவரிடமும் கூறவில்லை.

शूली त्रिपुण्ड्री पुरतोऽवलोकी कंकालमालाकृतगात्रभूषः ।
संरक्तनेत्रो मदघूर्णिताक्षो योगी ययौ देशिकवासभूमिम् ॥ ३०

(பிறகு குறிப்பிட்ட சமயத்தில்) யோகியாகிய காபாலிகன் சூலாயுதத்தையேந்தியும், விபூதியணிந்தும், எலும்புமாலையணிந்தும், கள்குடித்துக் கண்கள் சிவந்தும், பொறிகள் நிலைகொள்ளாமலும், எதிரில் யாராவது தென்படுகின்றனரோ என்ற ஐயத்துடன் பார்த்துக்கொண்டும் ஆசிரியர் இருக்குமிடத்திற்குச் சென்றான்.

शिष्येषु शिष्टेषु विदूरगेषु स्नानादिकार्याय विविक्तभाजि ।
श्रीदेशिकेन्द्रे तु सनन्दनाख्यभीत्या स्वदेहं व्यवधाय गूढे ॥ ३१

சிறந்த சிஷ்யர்கள் ஸ்நானம் முதலிய காரியங்களுக்குத் தொலைவில் சென்றிருக்கையில் ஸனந்தனர் என்ற சிஷ்யனுக்குப் பயந்து ஸ்ரீ சங்கரர் ஒருவருமில்லாத தனிமையான இடத்தில் தனது உடலை இரகஸ்யமாகத் தியாகஞ்செய்யத் தயாராக இருக்கையில் (பைரவன் அங்கு சென்றான்).

तं भैरवाकारमुदीक्ष्य देशिकस्त्यक्तुं शरीरं व्यधित स्वयं मनः ।
आत्मानमात्मन्युदयुङ्क्त यो जपन् समाहितात्मा करणानि संहरन् ॥ ३२

அந்தக் காபாலிகனை கண்டு ஸ்ரீசங்கரர் உடலை தியாகஞ்செய்ய உறுதி கொண்டவராக மனதையும் பொறிகளையுமடக்கி பிரணவத்தை அனுஸந்தானம் செய்துகொண்டு தியானநிஷ்டையிலமர்ந்தார்.

तं भैरवोऽलोकत लोकपूज्यं स्वसौख्यतुच्छीकृतदेवराज्यम् ।
योगीशमासादितनिर्विकल्पं सनत्सुजातप्रभृतेरनल्पम् ॥ ३३

जत्रुप्रदेशे चिबुकं निधाय व्यात्तास्यमुत्तानकरौ निधाय ।
जानूपरि प्रेक्षितनासिकान्तं विलोचने सामि निमील्य कान्तम् ॥ ३४

आसीनमुच्चीकृतपूर्वगात्रं सिद्धासनं शेषितबोधमात्रम् ।
चिन्मात्रविन्यस्तहृषीकवर्गं समाधिविस्मारितविश्वसर्गम् ॥ ३५

உலகங்களால் பூஜிக்கத்தக்கவரும், ஆத்மானந்தத்தால் தேவ லோககங்களையே புல்லாக மதித்தவரும், நிர்விகல்பகசமாதியிலிருப்பவரும், ஸனத்குமாரர் முதலியவர்களுக்குச் சமமானவரும், மார்புக்காறை யெலும்பில் தாடையை வைத்துக்கொண்டு மூக்கின் நுனியில் பார்வையைச் செலுத்து கின்றவரும், கைகளை மலர்த்திக் கால்களில் வைத்தவரும், முன்னுடலை விரைப்பாக உயர்த்திக்கொண்டவரும், ஸித்தாசனத்திலமர்ந்தவரும், பொறிகளின் செயல்களை யொடுக்கி ஞானரூபத்தை மட்டும் நிலைநிறுத்தியதனுல் உலகத்தையே மறந்து தியான நிஷ்டையிலிருப்பவரும் ஆகிய அந்தப் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசாரியசிரேஷ்டரை பைரவன் பார்த்தான்.

विलोक्य तं हन्तुमपास्तशङ्कः स्वबुद्धिपूर्वार्जिततीव्रपङ्कः ।
प्रापोद्यतासिः सविधं स यावद्विज्ञातवान् पद्मपदोऽपि तावत् ॥ ३६

அவரைக் கண்டு அஞ்சாமல் அவரைக் கொல்லுவதற்குத் தீர்மானம் செய்தமையால் மனப்பூர்வமாகக் கொடிய பாபத்தைச் சம்பாதித்தவனுக அந்த பைரவன் கத்தியை கையில் உயர்த்திக்கொண்டு அருகில் வந்த உடனேயே அந்தப் பத்மபாதரும் ஞானக்கண்ணினுல் அந்தச் செயலை உணர்ந்தார்.

त्रिशूलमुद्य निहन्तुकामं गुरुं यतात्मा समुदैक्षतान्तः ।
स्थितश्चुकोप ज्वलिताग्निकल्पः स पद्मपादः स्वगुरोर्हितैषी ॥ ३७

(ஸ்நானஞ்செய்து தியானநிஷ்டையில் இருக்கையில்) பொறிகளையும், மனதையும் அடக்கிய அந்தப் பத்மபாதர் தனது ஆசிரியரை கொல்ல விரும்பியவனும், சூலாயுதத்தைக் கையில் உயர்த்திக்கொண்டு ஆசிரியருக்கு அருகில் நிற்கின்றவனுமான பைரவனை அகத்தில் கண்டார். கொழுந்துவிட்டு எரிகின்ற அக்கினிபோல் கோபங்கொண்டு தனது ஆசிரியருக்கு ஹிதத்தைச் செய்ய விருப்பங்கொண்டார்.

स्मरन्नथैष स्मरदार्तिहारि प्रह्लादवश्यं परमं महस्तत् ।
स मन्त्रसिद्धो नृहरेर्नृसिंहो भूत्वा ददर्शोग्रदुरीहचेष्टाम् ॥ ३८

நரசிம்மமந்திரத்தை வெகுகாலம் ஜபித்து ஸித்தியடைந்த அந்தப் பத்மபாதர் நினைத்தமாத்திரத்திலேயே தீமைகளையழிக்கின்றதும் பிரஹ்லாதனுக்கு வசப்பட்டதுமாகிய சிறந்த ஜோதியை ஸ்மரணஞ்செய்தார். அந்த ஸ்மரணையின் வன்மையால் நரசிம்மராகவே மாறிக் குதித்துச் சென்று கொடியவனுடைய கொடிய செயலைக் கண்ணுற்ருர்.

(பக்தர்களில் சிறந்தவரும், ஞானிகளுக்குத் தலைவரும், கருணைக்கடலுமாகிய நாரதமாமுனிவரால், கருவிலிருக்கையிலேயே அனுக்கிரஹம் செய்யப்பெற்றவர் பிரஹ்லாதர். अयं निष्किल्बिषः साक्षान्महाभागवतो महान् । त्वया ना प्राप्स्यते संस्थामनन्तानुचरो बली ॥ என்று நாரதர் அருளினுர். ஹிரண்ணியகசிபு மந்தரமலையில் தவஞ்செய்யுங்காலத்தில் தேவேந்திரன் அவனுடைய அரண்மனையில் புகுந்து கர்ப்பிணியான கயாதுவை (ஹிரண்ணியகசிபுவின் மனைவியை) பலாத்காரமாக இழுத்துச்செல்ல

முயன்ருன். அத்தருணத்தில் நாரதமாமுனிவர் தற்செயலாக அங்கு சென்று தேவேந்திரனுடைய செயலைக்கண்டு வியந்தார். பதிவிரதையும் கர்ப்பிணியுமாகிய கயாதுவின் நிலைமையைக்கண்டு வருத்தமும் கருணையும் அந்த மாமுனியின் மனதில் மேலிட்டது. பிரஸவமான பின் அந்த சிசுவைக் கொலைசெய்வதாக இந்திரன் தனது உள்ளத்தை உரைத்தான். அதை உணர்ந்த முனிவர் சினங்கொண்டவராயினும், அந்தப் பெண்மணியின்பாலும் கருவிலிருக்கும் சிசுவின் மீதும் அளவற்ற கருணைகொண்டவராக மேற்கூறிய வசனத்தையருளினர். அதன் பொருள் - அயம் நிஷ்கில்பிஷ: = இவன் குற்றமற்றவன். மகான் = சிறந்தவன். பாகவத:= பகவானிடம் பக்தி கொண்டவன். மகாபாகவத:= பக்தர்களில் சிறந்தவன். ஸாக்ஷாத் மகாபாகவத:= பக்திமான்களில் இவனுக்கு நிகரர்க ஒருவனுமிருத்தல் இயலாது. அதாவது உருவமற்ற பரம்பொருளாகிய பரமன் அடியார்களுடைய அனுக்கிரகத்திற்காக உருவம் பெற்று அவதரிக்கையில், அநேகப் பிறவிகளில் செய்த தவத்திற்கும் ஸத்கர்மங்களுக்கும் பயனுக சிறந்த பதிவிரதைகளாகிய மங்கைகளின் கருவில் வாஸஞ்செய்தவராக பாவனைசெய்துகொண்டு அவர்களுக்குப் புதல்வனுகத் தோன்றி ஆனந்திக்கச்செய்கிருர். மண்ணுலகிலுள்ள மனிதர்களைப்போல் செயலாற்றுகிருர். அத்தகைய பரமன் இந்த மங்கையின் கருவிலிருக்கும் குழந்தையின் வசனத்திற்குக் கட்டுப்பட்டு அதன்படி உதயமாகும் ஸங்கற்பங்கொண்டுள்ளவர். ஆகவே ஜோதிவடிவமாகிய பரமனுக்கு உருவத்தையளிக்கும் தன்மை இந்த சிசுவிற்கு உண்டு என்ற கருத்தை நாரதமாமுனிவர் கூறிய 'ஸாக்ஷாத் மகாபாகவத:' என்ற சொல் விளக்குகிறது. மேலும், பலீ = பலசாலி, அனந்தானுசர: = அனந்தரான பகவானுடைய தாசன். அனந்தர் எவனுக்கு அனுசரரோ = பின்பற்றிச் செல்கிறவரோ, அத்தகையன். அழிவற்ற நற்குணங்கள் நிரம்பிய அச்சுதர் இந்த சிசுவின் தாசனுக விளங்குகையில் அவனுடைய பலம் கூறமுடியாதன்ருே! ஆகையால், ஹே இந்திரா! உன்னுல் இந்த சிசுவிற்கு மரணத்தைச் செய்ய இயலாது. ஹிரண்ணியகசிபு உனக்கு பகைவனுக துன்பம் விளைவித்தால், அதற்குப் பழிவாங்குதல் இந்தக் குழந்தையின் மீது செய்யக்கூடாது என்பதை 'இந்தக் குழந்தை நிரபராதி' என்ற சொல்லால் விளக்கினுர். தந்தை செய்யும் தீமைக்கு மகன் உத்தரவாதமில்லாததுமன்றி இந்த சிசு கருவிலிருக்கையில் எவ்வாறு குற்றவாளியாவான். கருவிலிருக்கையில் கடவுளைக் கண்டுக் களிப்புடன்துதிக்கும் நிலைமையேயல்லாது வேறு தீயச் செயல் சம்பந்தம் கிடையாது என்று கருத்து.

यस्त्वया मन्दभाग्योक्तो मदन्यो जगदीश्वरः। क्वासौ, यदि स सर्वत्र, कस्मात् स्तम्भे न, दृश्यते ॥
பாக்கியமற்றவனே! உன்னைக் காப்பாற்றுகிறவன் என்னைத் தவிர வேறு ஜகதீசுவரன் ஒருவன் இருப்பானுகில் அவன் எங்கே? என்று ஹிரண்ணியகசிபு புதல்வனிடம் வினவ, 'அவர் எங்கும் உள்ளார்' என்று பிரஹ்லாதர் விடையளித்தார். அப்படியாகில் 'தூணில் ஏன் இல்லை?' என்று பிறகும் கோபத்துடன் வினவினுன். அதற்கு பக்தசிகாமணியாகிய பிரஹ்லாதர் 'காணப்படுகிருர்' என்று பணிவுடன் விடையளித்தார். எண்ணில்லாப் பிறவிகளில் செய்யும் மாபெரும் தவங்களாலும் கிடைப்பதற்கரிதான பகவானுடைய காக்ஷியை உலககண்டகனுகிய ஹிரண்ணியகசிபுவிற்கு

அளித்தது, ஒப்புயர்வற்ற பக்தரத்தினமாகிய பிரஹ்லாதரருளிய 'திருச்யதே' என்ற சொல்லேயாகும். பக்தனுடைய வாயிலிருந்து விழுந்த முத்துக்கள் போன்ற எழுத்துக்கள் வீணாகக்கூடாது என்ற தீர்மானங்கொண்டவராகவன்றோ அந்தப்பரமன் தூணிலிருந்து வெளிவந்தார்! பகவான் தூணிலிருக்கிறார் என்று விடைகூறினால், ஏன் எனக்கு காணவில்லை? என்று ஆக்ஷேபம் உண்டாகும். அத்தகைய ஆக்ஷேபத்திற்கும் சமாதானம் கூறும் ரீதியிலேயே दृश्यते (திருச்யதே) = காணப்படுகிறார் என்ற சொல்நயம் சுவைக்கத்தக்கது. செயப்பாடுவினையாக சொல் அமைந்ததால், என்னால் அந்தப் பரமன் (தூணில்) காணப்படுகிறார், ஞானிகளால் காணப்படுகிறார் என்றும், உம்மால் காணப்படாவிடின் அது பகவானுடைய குறையன்று. ஒளிவீசுகின்ற கதிரவன் குருடனாலும், கோட்டானாலும் காணப்படாவிடின் அது கதிரவனுடைய குறையன்று என்பதை யார் மறுப்பார்? இத்தகைய சொல்லை விடுவித்த நிர்வ்யாஜபக்தனான பிரஹ்லாதருடைய 'दृश्यते' என்ற அரிய சொல்லை மெய்யாக்குவதற்கு ஸ்ரீமன் நாராயணன் நரசிம்மவடிவமாகத் தோன்றிய வைபவத்தை இங்கு ஸ்ரீ வித்யாரண்யஸ்வாமிகள் 'प्रह्लादवश्यम्' என்ற விசேஷணத்தால் கூறியுள்ளார்.)

स तत्क्षणक्षुब्धनिजस्वभावः प्रवृद्धरुड् विस्मृतमर्त्यभावः ।
आविष्कृतात्युग्रनृसिंहभावः समुत्पपातातुलितप्रभावः ॥ ३९

सटाच्छटास्फोटितमेघसंघस्तीव्रारवत्रासितभूतसंघः ।
संवेगसंमूर्च्छितलोकसंघः किमेतदित्याकुलदेवसंघः ॥ ४०

क्षुभ्यत्समुद्रं समुदूढरौद्रं रटन्निशाटं स्फुटदद्रिकूटम् ।
ज्वलद्दिशान्तं प्रचलद्धरान्तं प्रभ्रश्यदक्षं दलदन्तरिक्षम् ॥ ४१

जवादभिद्रुत्य शितस्वरूग्रैर्दैत्येश्वरस्येव पुरा नखाग्रैः ।
क्षिपत्त्रिशूलस्य स तस्य वक्षो ददार विक्षिप्तसुरारिपक्षः ॥ ४२

அந்த கணத்தில் தனது சுபாவம் குழப்பமடைந்து சீற்றம் மிக்க மேலிட்டதால் மனிதத்தன்மையை மறந்து நரசிம்ம உருவத்தைத் தோற்றுவித்தவராகவும், நிகரற்ற பிரபாவமுடையவராகவும், பிடரிமயிர்களால் மேகக்கூட்டத்தையகற்றிக்கொண்டும், பயங்கரமான கர்ஜ்ஜனத்தால் பிராணிகளுக்கு அச்சத்தை வளர்த்திக்கொண்டும், வேகத்தினால் உலகத்தை மூர்ச்சையடையும்படி செய்துகொண்டும், 'இது என்ன' என்று தேவர்களுக்கும் மனக்கலக்கத்தை உண்டாக்கிக்கொண்டும், ஸமுத்திரங்கள் கோஷிக்க, அரக்கர்கள் ஆரவாரம் செய்ய, மலைகளின் சிகரங்கள் சிதற, திசைகள் ஜ்வலிக்க, பூமி நடுங்க, ஜனங்களுடைய இந்திரியங்கள் கலங்க, ஆகாயம் அதிர விரைவில் பாய்ந்து வஜ்ராயுதம்போல் கடூரங்களான நகங்களால் முன்காலத்தில் ஹிரண்ணியகசிபுவினுடைய மார்பைப் பிளர்ந்ததுபோல், சூலாயுதத்தைத் தாங்கிய அந்த பைரவனுடைய மார்பைப் பிளர்ந்து கொன்றார்.

तत्तादृगत्युग्रनखायुधाग्र्यो दंष्ट्रान्तरप्रोतदुरीहदेहः ।
निन्ये तदानीं नृहरिर्विदीर्णद्युपट्टनाट्टालिकमट्टहासम् ॥ ४३

அத்தகைய மிக்க கூர்மைகளான நகங்களையே ஆயுதமாகவுடையவராகிய நரசிம்மர் துஷ்டனான அந்தக் காபாலிகனுடைய உடலை பற்களுக்கிடையில் கவ்விக்கொண்டு தேவலோகங்களில் அட்டங்களெல்லாம் பிளரும்படி பெரும் அட்டகாசம் செய்தார்.

आकर्णयंस्तं निनदं बहिर्गता उपागमन्नाकुलचित्तवृत्तयः ।
व्यलोकयन् भैरवमग्रतो मृतं ततो विमुक्तं च गुरुं सुखोषितम् ॥ ४४

வெளியே சென்ற மற்ற சிஷ்யர்கள் அந்த கர்ஜ்ஜனையை கேட்டு மனம் கலங்கியவராக அங்கே வந்தனர். பைரவன் இறந்து கிடப்பதையும் அவனிடமிருந்து தப்பி ஆசிரியர் சுகமாக இருப்பதையும் கண்ணுற்றனர்.

प्रह्लादवश्यो भगवान् कथं वा प्रसादितोऽयं नृहरिस्त्वयेति ।
सविस्मयैः स्निग्धजनैः स पृष्टः सनन्दनः सस्मितमित्यवादीत् ॥ ४५

நண்பர்கள் வியந்து ''பிரஹ்லாதனுக்கு வசமாகிய பகவான் எவ்வாறு உம்மால் சந்தோஷமடையும்படி செய்யப்பட்டார்?'' என்று வினவ அந்த ஸனந்தனர் புன்னகைபூத்துப் புகன்றார்.

पुरा किलाहं बलभूधराग्रे पुण्यं समाश्रित्य किमप्यरण्यम् ।
भक्तैकवश्यं भगवन्तमेनं ध्यायन्ननेकान् दिवसाननैषम् ॥ ४६

யான் முன்காலத்தில் 'பல' என்ற பெயருள்ள மலையின் பரிசுத்தமான ஒரு காட்டில் தங்கி பக்தர்களுக்குமட்டும் வசமாகவுள்ள இந்த பகவானை தியானம் செய்துகொண்டு நாட்களைக் கழித்தேன்.

किमर्थमेको गिरिगह्वरेऽस्मिन् वाचंयम त्वं वससीति शश्वत् ।
केनापि पृष्टोऽत्र किरातयूना प्रत्युत्तरं प्रागहमित्यवोचम् ॥ ४७

''பயங்கரமான இந்தக் காட்டில் வாக்கை அடக்கிக்கொண்டு தனிமையாக ஏன் வாசஞ்செய்கிறீர்'' என்று அடிக்கடி ஒரு வேடவாலிபனால் வினவப்பட்ட யான் விடைகூறினேன்.

आकण्ठमत्यद्भुतमर्त्यमूर्तिः कण्ठीरवात्मा परतश्च कश्चित् ।
मृगो वनेऽस्मिन् मृगयो वसन्मे भवत्यहो नाक्षिपथे कदापि ॥ ४८

''வேடனே! கழுத்துவரையில் ஆச்சரியமான மனிதவடிவங்கொண்டதும், அதற்குமேல் சிங்கத்தின் உருவமுள்ளதுமாகிய ஒரு விலங்கு இந்த வனத்தில் வாசஞ்செய்து கொண்டிருந்தபோதிலும் என் கண்களுக்கு ஒரு பொழுதும் புலனாகின்றதில்லை, என்ன வியப்பு.''

इतीरयत्येव मयि क्षणेन वनेचरोऽयं प्रविशन् वनान्तम् ।
विबध्य गाढं नृहरिं लताभिः पुण्यैरगण्यैः पुरतो न्यधान्मे ॥ ४९

இவ்வாறு நான் கூறுகையிலேயே இந்த வேடன் விரைவில் காட்டில் புகுந்து கொடிகளால் கட்டி நரசிம்மனை எண்ணில்லாப் புண்ணியங்களின் பயனாக என் கண்ணுக்கெதிரில் கொணர்ந்தான்.

महर्षिभिस्त्वं मनसाप्यगम्यो वनेचरस्यैव कथं वशेऽभूः ।
इत्यद्भुताविष्टहृदा मयाऽसौ विज्ञाप्यमानो विभुरित्यवादीत् ॥ ५०

''மாமுனிவர்களுடைய மனதிற்குக்கூட எட்டாத நீர் காட்டாளனுடைய கையில் எவ்வாறு சிக்கிக்கொண்டீர்'' என்று வியந்த மனதுடன் என்னால் வினவப்பட்ட விபுவாகிய = எங்கும் நிறைந்த பரமன் இவ்வாறு கூறினார்.

एकाग्रचित्तेन यथाऽमुनाहं ध्यातस्तथा धातृमुखैर्न पूर्वैः ।
नोपालभेथास्त्वमितीरयन्मे कृत्वा प्रसादं कृतवांस्तिरोधिम् ॥ ५१

''உறுதிநிலைகொண்ட மனதினால் இவன் என்னை தியானம் செய்வது போல், முன்னோர்களாகிய பிரம்மன் முதலியவர்கள்கூட தியானம் செய்வதில்லை. இந்த விஷயத்தில் என்னைக் குறைகூறாதே'' என்று அருளிச்செய்து பகவான் மறைந்தார்.

आकर्ण्य तां पद्मपदस्य वाणीमानन्दमग्नैरखिलैरभावि ।
जगर्ज चोच्चैर्जगदण्डभाण्डं भूम्ना स्वधाम्ना दलयन् नृसिंहः ॥ ५२

பத்மபாதருடைய அந்த வசனத்தைக் கேட்டு எல்லோரும் ஆனந்தக் கடலில் ஆழ்ந்தனர். (பிறகு) நரஸிம்மரூபியாகிய அவர் அண்டகோளங்களை தனது ஒளியாலும் ஒலியாலும் பிளந்துகொண்டு கர்ஜ்ஜனம் செய்தார்.

ततस्तदार्भाटचलत्समाधिः स्वात्मप्रबोधोन्मथितत्र्युपाधिः ।
उन्मील्य नेत्रे विकरालवक्त्रं व्यलोकयन्मानवपञ्चवक्त्रम् ॥ ५३

பிறகு, விழிப்புணர்ச்சி, கனவு, துயில் என்ற மூன்று நிலைமைகளை ஆத்மஞானத்தால் அகற்றிய ஸ்ரீசங்கரர் அவருடைய அட்டகாஸத்தால் நிஷ்டையிலிருந்து எழுந்து கண்களைத் திறந்து ஆச்சரியமான நரசிம்ம ரூபத்தைக் கண்டார்.

चन्द्रांशुसोदर्यसटाजटालं तार्तीयनेत्राब्जकनन्निटालम् ।
सहोद्यदुष्णांशुसहस्रभासं विध्यण्डविस्फोटकृदट्टहासम् ॥ ५४

नखाग्रनिर्भिन्नकपालिवक्षः स्थलोच्चलच्छोणितपङ्किलाङ्कम् ।
श्रीवत्सवत्सं गलवैजयन्तीश्रीरत्नसंस्पर्धितदन्त्रमालम् ॥ ५५

सुरासुरत्रासकरातिघोरस्वाकारसारव्यथिताण्डकोशम् ।
दंष्ट्रकरालाननर्निर्यदग्निज्वालालिसंलीढनभोवकाशम् ॥ ५६

स्वरोमकूपोद्गतविस्फुलिङ्गप्रचारसंदीपितसर्वलोकम् ।
जम्भद्विड्जृम्भितशम्भुदम्भसंस्तम्भनारम्भकदन्तपेषम् ॥ ५७

मा भूदकाण्डे प्रलयो महात्मन् कोपं नियच्छेति गृणद्भिरारात् ।
ससाध्वसैः प्राञ्जलिभिः सगात्रकम्पैर्विरिञ्च्यादिभिरर्थ्यमानम् ॥ ५८

विलोक्य विद्युच्चपलोग्रजिह्वं यतिक्षितीशः पुरतो नृसिंहम् ।
अभीतिरैडिष्ट तदोपकण्ठं स्थितोऽपि हर्षाश्रुपिनद्धकण्ठः ॥ ५९

சந்திரகிரணங்கள்போல் விளங்கும் பிடரிமயிர்களுடனும் மூன்ருவது கண்ணினுல் ஒளிவீசும் தலையுடனும், ஏககாலத்திலுதித்த ஆயிரம் கதிரவர்கள் போல் பிரகாசத்துடனும், பிரம்மாண்டகோளத்தைப் பிளர்க்கும் அட்டகாசத்துடனும், (தனது) நகங்களால் பிளர்ந்த பைரவன் மார்பிலிருந்து பெருகும் இரத்தத்தினுல் நனைந்த உடலுடனும், ஸ்ரீவத்ஸமென்ற மச்சத்துடனும், கழுத்தில் தொங்கும் வைஜயந்தீமாலையென்று நினைக்கத்தக்க குடல் மாலையுடனும், தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் பீதியைத்தருகின்ற உடல் வலிமையால் உலகத்தை நடுங்கச் செய்கின்றவரும், பற்களிலிருந்து கிளம்பும் தீப்பொறிகளை ஆகாயத்தில் பரவச் செய்கின்றவரும், உடலிலுள்ள உரோமதுவாரங்களிலிருந்து வெளியே செல்லும் தீப்பொறிகளால் உலகத்தில் வியாபித்தவரும், சீறிய சினத்துடன் வஜ்ராயுதத்தை ஓங்கிய தேவேந்திர னுடையவும், ருத்திரபகவானுடையவும் கோபத்தை அடக்கும்படி பற்களை நெறுக்குகின்றவரும், ''அகாலத்தில் பிரளயம் வேண்டாம்; மகாத்மாவே! கோபத்தையடக்குவீராக'' என்று நடுங்கி, வணங்கி, கைகூப்பி பிரம்மாதி தேவர்களால் பிரார்த்திக்கப்பட்டவரும், மின்னல்போல் அசைகின்ற கடுமையான நாவையுடையவரும் ஆகிய நரசிம்மரைக்கண்டு அருகில் நின்று ஆனந்தக்கண்ணீர் ததும்ப திக்கிய நெஞ்சத்துடன் கூடியவராக ஸ்ரீ சங்கரர் துதித்தார்.

नरहरे हर कोपमनर्थदं तव रिपुर्निहतो भुवि वर्तते ।
कुरु कृपां मयि देव सनातनीं जगदिदं भयमेति भवद्दृशा ॥ ६०

ஹே நரசிம்மரே! உலகங்களுடைய ஆபத்திற்குக் காரணமாகிய சினத்தைத் தணித்துக்கொள்வீராக. தங்களுடைய பகைவன் கொல்லப்பட்டு கீழே கிடக்கிருன். என்மீது அழிவற்ற கருணைகொள்வீராக. தங்களுடைய காக்ஷியால் உலகம் நடுங்குகின்றது.

तव वपुःकिल सत्वमुदाहृतं तव हि कोपनमण्वपि नोचितम् ।
तदिह शान्तिमवाप्नुहि शर्मणे हरगुणं हरिराश्रयसे कथम् ॥ ६१

தங்களுடைய உருவம் ஸத்வகுணம் நிரம்பியது. சிறிதுகூட கோபம் கொள்ளுதல் தங்களுக்குத் தகாதன்ருே! ஆகையால் உலகத்தின் சுகத்திற்காக சாந்தமடைவீராக. ருத்திரருடைய குணமாகிய சினத்தை விஷ்ணுவாகிய தாங்கள் எவ்வாறு கொள்கிறீர்?

सकलभीतिषु दैवतम स्मरन् सकलभीतिमपोह्य सुखी पुमान् ।
भवति किं प्रवदामि तवेक्षणे परमदुर्लभमेव तवेक्षणम् ॥ ६२

சிறந்த தைவமே! எவ்வித பயத்திலும் தங்களை மனதில் நினைக்கின்றவன் பயத்தையகற்றி சுகத்தையடைகிருன். தங்களை நேரில் கண்டால் அதனைப்பற்றிக் கூறவேண்டுமா? தங்களுடைய தரிசனம் கிடைப்பதற்கரிது.

स्मृतवतस्तव पादसरोरुहं मृतवतः पुरुषस्य विमुक्तता ।
तव कराभिहतोऽमृत भैरवो न हि स एष पुनर्भवमेष्यति ॥ ६३

தங்களுடைய பாதகமலங்களை மனதில் நினைத்து மரணமடைந்தவனுக்கு முக்தி கிடைக்கிறது. தங்களுடைய கைகளாலேயே கொல்லப்பட்டு பைரவன் மரணமடைந்தான். அத்தகைய இவன் மறுபிறப்படையான்.

दितिजसूनुममुं व्यसनार्दितं सकृदरक्षदुदारगुणो भवान् ।
सकलगत्वमुदीरितमस्फुटं प्रकटमेव विधित्सुरभूत्पुरः ॥ ६४

தாங்கள் எங்கும் நிறைந்தவர் என்பது எல்லோர்களாலும் அறிந்து கொள்ளப்படவில்லை. அதனை வெளிப்படுத்துவதற்கு (பக்தரத்தினமாகிய பிரஹ்லாதன் கூறியதை உண்மையாகச் செய்துகொண்டு) நற்குணங்களுக்குத் தங்குமிடமாகிய தாங்கள் தோன்றி, துன்பமடைந்த அந்த அசுரக் குழந்தையை காப்பாற்றினீர்கள்.

सृजसि विश्वमिदं रजसाऽऽवृतः स्थितिविधौ श्रितसत्व उदायुधः ।
अवसि तद्धरणे तमसाऽऽवृतो हरसि देव तदा हरसंज्ञितः ॥ ६५

ரஜோகுணத்தை கைக்கொண்டவராக உலகத்தை சிருஷ்டிக்கிறீர். ஸத்துவகுணத்தை உடையவராக ஆயுதம் தாங்கிக்கொண்டுக் காப்பாற்றுகிறீர். தமோகுணத்தையடைந்து 'ஹரன்' என்ற பெயருடையவராக உலகத்தை அழிக்கிறீர்.

तव जनिर्न गुणास्तव तत्त्वतो जगदनुग्रहणाय भवादिकम् ।
तव पदं खलु वाङ्मनसातिगं श्रुतिवचश्चकितं तव बोधकम् ॥ ६६

தங்களுக்குப் பிறப்பில்லை. குணங்களும் உண்மையில் கிடையா. உலகங்களை உய்விப்பதற்காக பிறப்பையும் குணங்களையும் பெறுகிறீர்கள். உங்களுடைய நிலைமை வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாதது. வேதங்கள் பயந்து நேர்முகமாகத் தங்களை கூருமல் எதிர்முகமாக கூறுகின்றன.

नरहरे तव नामपरिश्रवात् प्रमथगुह्यकदुष्टपिशाचकाः ।
अपसरन्ति विभोऽसुरनायका न हि पुरःस्थितये प्रभवन्त्यमी ॥ ६७

பிரபுவே; நரசிம்மரே; தங்களுடைய பெயரைக்கேட்ட மாத்திரத்திலேயே பிரமதர்கள், குஹ்யகர்கள், துஷ்டபிசாசர்கள், அசுரத்தலைவர்களாகிய எல்லோரும் தங்களுக்கு முன்னால் நிற்க வல்லமையற்றவர்களாக தொலைவில் ஓடுகின்றனர்.

त्वमेव सर्गस्थितिहेतुरस्य त्वमेव नेता नृहरेऽखिलस्य ।
त्वमेव चिन्त्यो हृदयेऽनवद्ये त्वामेव चिन्मात्रमहं प्रपद्ये ॥ ६८

நரசிம்மரே! உலகங்களின் உற்பத்திற்கும்,பாதுகாப்பிற்கும் அழிவிற்கும் தாங்கள்தான் காரணம். எல்லாவற்றிற்கும் நாயகர் தாங்கள்தான். தோஷங்கள் நீங்கி சுத்தமான மனதில் தியானம் செய்யத்தக்கவரும் தாங்களேயாகும். சித்ரூபியாகிய தங்களையே புகலிடமாகப்புகுந்தேன்.

हतो वराको हि रुषं नियच्छ विश्वस्य भूमन्नभयं प्रयच्छ ।
एते हि देवाः शममर्थयन्ते निरीक्ष्य भीताः प्रतिखेदयन्ते ॥ ६९

எங்கும் நிறைந்தவரே! அற்பன் கொல்லப்பட்டான். உலகத்திற்கு அபயமளிப்பீராக. இத்தேவர்கள் சாந்தத்தை விரும்புகின்றனர். தங்களுடைய உருவத்தைக்கண்டு அஞ்சி வருந்துகின்றனர்.

द्रष्टुं न शक्या हि तवानुकम्पाहीनैर्जनैर्निह्नुतकोटिशंपाम् ।
मूर्तिं तदात्मन्नुपसंहरेमां पाहि त्रीलोकीं समतीतसीमाम् ॥ ७०

தங்களுடைய கருணையில்லாத ஜனங்களால் தங்களுடைய இவ்வுருவத்தைப்பார்க்க முடியாது. இவ்வுருவத்தைக்கண்டு மூவுலகமும் மிக்க அச்சமடைந்து எல்லை தாண்டி ஓட்டம் பிடிக்கின்றது. ஆகையால், கோடிக்கணக்கான மின்னல்களுக்குச் சமமாய் ஒளிவீசுகின்ற இந்த உருவத்தை மறைத்து அருள்புரிவீர்களாக.

कल्पान्तोज्जृम्भमाणप्रमथपरिवृढप्रौढलालाटवह्नि -
ज्ज्वालालीढत्रिलोकीजनितचटचटाध्वानधिक्कारधुर्यः ।
मध्ये ब्रह्माण्डभाण्डोदरकुहरमनैकान्त्यदुःस्थामवस्थां
स्त्यानस्त्यानो ममायं दलयतु दुरितं श्रीनृसिंहाट्टहासः ॥ ७१

பிரமத பரிவாரங்களின் அதிபதியாகிய பரமசிவனுடைய நெற்றிக் கண்ணிலிருந்து பிரளயகாலத்தில் பொங்கிப் பரவிய நெருப்புப்பற்றி பார், பரலோகம், பாதாளம் என்ற மூவுலகிலுள்ள பொருள்கள் எரியும் பொழுது உண்டாகிற 'சடசட' என்ற மாபெரும் ஒலியை வெல்லும் வன்மையுள்ளதாகிய ஸ்ரீ நரசிம்மப்பெருமாளுடைய அட்டகாசகர்ஜனையாகிய மேகம், பிரம்மாண்டத்தின் மத்தியமாகிய குஹையில் நிலவும் எண்ணில்லாத் துன்பங்களாகிய தாபங்களை தணிக்க வேண்டும்.

मध्ये व्यानद्धवातंधयवलनाधानमन्थानभूभृ-
न्मन्थेनोत्क्षिप्तदुग्धोदधिलहरिमिथःस्फालनाचारघोरः ।
कल्पान्तोन्निद्ररुद्रोच्चतरडमरुकध्वानबद्धाभ्यसूयो
घोषोऽयं कर्णघोरः क्षपयतु नृहरे रंहसां संहतिं नः ॥ ७२

நரசிம்மரே; நடுப்பில் வாசுகியைச் சுற்றிக்கட்டி மந்தரமலையினால் பாற்கடலைக் கடையும்பொழுது உண்டாகிற அலைகள் மோதுகையில் கிளம்பும் மாபெரும் ஒலிபோல் பயங்கரமும், பிரளயகாலத்தில் உலகங்களை ஸம்ஹாரம் செய்யத்துணிந்த ருத்திரனுடைய டமருகவாத்தியத்தின் ஒலியுடன் போர் செய்கின்றதும் (அதற்கு நிகரானதும்) ஆகிய கர்ணகடூரமான ஒலி தனது கடூரத்தன்மையால் எங்களுடைய கொடிய பாபங்களை நாசம் செய்யட்டும்.

क्षुन्दानो मंक्षु कल्पावधिसमयसमुज्जृम्भदम्भोदगुम्भ-
स्फूर्जद्दंभोलिसंघस्फुरदुरुरटिताखर्वगर्वप्ररोहान् ।
क्रीडाक्रोडेन्द्रघोणासरभसविसरद्घोरघूर्घोरवश्री-
र्गम्भीरस्तेऽट्टहासो हर हर नृहरे रंहसाऽहांसि हन्यात् ॥ ७३

பிரளயகாலத்தில் தோன்றும் மேகக்கூட்டங்களில் மின்னல்களுக்குப் பிறகு உண்டாகின்ற இடிமுழக்கங்களை திடீரென்று மங்கச்செய்கின்றதும், லீலாவராகமூர்த்தியின் முகத்திலிருந்து வேகத்துடன் வெளியே வருகின்ற வன்மையுள்ள ''குர், குர்'' என்ற த்வனிக்கு நிகராக கம்பீரத்தன்மையுள்ளதுமாகிய தங்களுடைய அட்டகாஸம் ஹர, ஹர நரசிம்மரே! எங்களுடைய பாபங்களை விரைவில் விலக்கட்டும். (பரபரப்பினுல் ஹர, ஹர என்று கூறினுர்.)

एवं विशिष्टनुतिभिर्नृहरौ प्रशान्ते स्वं भावमेत्य मुनिरेष बभूव शान्तः ।
स्वप्नानुभूतमिव शान्तमनाः स्मरंस्तमात्मानमात्मगुरवे प्रणतिं चकार ॥ ७४

இவ்வாறு சிறந்த துதிகளால் நரசிம்மரூபம் சாந்தமடைய, இந்தப் பத்மபாதமுனிவர் சாந்தமடைந்தார். இந்நிகழ்ச்சியை கனவுபோலுணர்ந்து சினம் தணிந்தவராக தனது குருவிற்கு வந்தனம் செய்தார்.

चारित्र्यमेतत्प्रयतस्त्रिसन्ध्यं भक्त्या पठेद्यः शृणुयादवन्ध्यम् ।
तीर्त्वाऽपमृत्युं प्रतिपद्य भक्तिं स भुक्तभोगः समुपैति मुक्तिम् ॥ ७५

சரித்திரஸம்பந்தமானதும், பயனையளிக்கின்றதுமாகிய இந்நிகழ்ச்சியை எவன் பக்தியுடன் படிக்கின்றுனே, கேட்கவும் செய்கின்றுனே அவனுக்கு துர்மரணம் ஏற்படாது. சிறந்த பக்தியை அடைந்து இம்மையிலுள்ள போகங்கள் யாவற்றையும் அனுபவித்து பேரானந்தமாகிய முக்திசுகத்தை பெறுகிறுன்.

इति श्रीमाधवीये तदुग्रभैरवनिर्जयः ।
संक्षेपशङ्करजये सर्ग एकादशोऽभवत् ॥ ११ ॥

இவ்வாறு ஸ்ரீ மாதவாசாரியர் இயற்றிய ஸ்ரீ சங்கரவிஜயச் சுருக்கத்தில்
'உக்ரபைரவவதை' என்ற விஷயத்தைக் கூறும்
பதினென்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

आदितः श्लोकाः 1223

(இச்சர்க்கத்தில் 45 முதல் 52-வது சுலோகமுட்படவுள்ளவை, பொருளையனுஸரித்து யோசிக்கையில், 74-வது சுலோகத்திற்குப் பின் இருக்க வேண்டும். நரசிம்ம உருவமடைந்த பத்மபாதமுனிவரை ஆதிசங்கர பகவத்பாதர் துதித்து அதனுல் சினம் தணிந்து தனது நிலையை அடைந்தபின், நண்பர்கள் வினவ தனதுமந்திரசக்தியின் வன்மையைக் கூறுதல் என்பது பொருந்தும். ''पाठक्रमादर्थक्रमो बलीयान्'' என்று நியாயம். கூறிய வரிசையை பொருளையனுஸரித்து மாற்றிக்கொள்ளுதல் வேண்டும் என்று அதன் கருத்து. நூலாசிரியர் பக்திபரவசத்தினுல், பின்னுரைக்கவேண்டியதை முன்னமேயே கூறியுள்ளார் என்று கூறுவதில் குறையில்லை.)



# अथ द्वादशः सर्गः

## பன்னிரண்டாவது ஸர்க்கம்

## हस्तामलकादीनां शिष्यत्वेन ग्रहणम्

## ஹஸ்தாமலகர் முதலியவர்களை சிஷ்யர்களாகப் பெறுதல்

अथैकदाऽसौ यतिसार्वभौमस्तीर्थानि सर्वाणि चरन् सतीर्थ्यैः ।
घोरात् कलेर्गोपितधर्ममागाद्गोकर्णमभ्यर्णचलार्णवौघम् ॥ १

*பிறகு, அந்த ஸ்ரீசங்கரபகவத்பாதாசாரியர் தனது சிஷ்யர்களுடன் எல்லாப் புண்ணியதீர்த்தங்களுக்கும் யாத்திரை செய்கையில், கலியின் தோஷம் பாதிக்காததும், சமுத்திரத்தின் அலைகள் அருகில் வீசுகின்றதுமாகிய கோகர்ணக்ஷேத்திரத்திற்கு ஒருநாள் வந்துசேர்ந்தார்.*

विरिञ्चिनाम्भोरुहनाभवन्द्यं प्रपञ्चनाट्याद्भुतसूत्रधारम् ।
तुष्टाव वामार्धवधूटिमस्तदुष्टावलेपं प्रणमन् महेशम् ॥ २

*பிரம்மதேவராலும் பத்மநாபராலும் வணங்கத்தக்கவரும், பிரபஞ்சமாகிய ஆச்சரியமான நாடகத்திற்கு ஸூத்திரதாரரும், இடதுபக்கத்தில் மங்கையை உடையவரும், துஷ்டர்களுடைய செருக்கையடக்குகின்றவருமாகிய மஹேசுவரரை வணங்கித் துதித்தார்.*

वपुः स्मरामि क्वचन स्मरारेर्बलाहकाद्वैतवदावदश्रि ।
सौदामिनीसाधितसम्प्रदायसमर्थनादेशिकमन्यतश्च ॥ ३

*வலதுபக்கத்தில் மேகங்களுடைய ஒளிக்கு நிகராகவும், இடது பக்கத்தில் மின்னலுக்குச்சமமாகவுமிருப்பதனால், மேகம், மின்னல் என்ற இருபொருள்கள் போல்,சக்தியாகிய தேவியும், சக்தனாகிய தானும் (சிவமும்) இணைபிரிவதில்லை என்பதை உணர்த்திக்கொண்டு விளங்கும், அர்த்தநாரீசுவர மூர்த்தியை யான் தியானம் செய்கின்றேன்.*

वामाङ्गसीमाङ्कुरदंशुतृण्याचञ्चन्मृगाञ्चत्तरदक्षपाणि ।
सव्यान्यशोभाकलमाग्रभक्षसाकांक्षकीरान्यकरं महोऽस्मि ॥ ४

*இடது பக்கத்தில் பரவுகின்ற கிரணங்களாகிய புற்களில் ஆசை கொண்டு அவைகளை தின்பதற்கு முயற்சிக்கும் மானையுடையதான வலது கையும், வலது கையிலிருக்கும் தான்னியப்பயிறை தின்பதற்கு விருப்பங்கொண்ட கிளியை இடது பக்கத்தில் கொண்டதுமாகிய அர்த்தநாரீசுவர மூர்த்தியான ஜோதிவடிவமாக நான் இருக்கிறேன்.*

(இடதுபாகத்தில் விளங்கும் தேவியின் கையிலுள்ள கிளியை புல் என்று நினைத்து, (வலதுபாகத்தில் விளங்கும்) சிவபெருமானுடைய கையில் இருக்கின்ற மான் அதனை திங்க விரும்புகின்றது. சிவபெருமானுடைய கையிலிருக்கும் மானை பக்குவமான 'நெற்பயிறு' என்று நினைத்து தேவியின் கையிலுள்ள கிளி அதனை திங்க முயலுகின்றது என்று பிராந்திமதலங்காரமாக நூலாசிரியர் வர்ணித்துள்ளார்.)

महीध्रकन्यागलसंगतोऽपि माङ्गल्यतन्तुः किल हालहालम् ।
यत्कण्ठदेशेऽकृत कुण्ठशक्तिमैक्यानुभावादहमस्मि भूमा ॥ ٥

மலைமகளாகிய பார்வதியின் கழுத்திலிருக்கின்ற மங்களகரமாகிய நூல் (திருமாங்கல்யம்) சிவபெருமானுடைய நெஞ்சத்தில் சென்ற கொடிய நஞ்சின் வன்மையை தணித்ததன்றோ! அபேதபாவனையினால் அத்தகைய வியாபகமான மாபெரும்பொருள் யானே!

(இவ்விடத்தில் (1) ''कामेशबद्धमाङ्गल्यसूत्रशोभितकन्धरा'' என்ற லலிதாபரமேசுவரியின் நாமமும், (2) सुधामप्यास्वाद्य प्रतिभयजरामृत्युहरिणीं विपद्यन्ते विश्वे विधिशतमुखाद्या दिविषदः । करालं यत्क्ष्वेलं कबलितवतः कालकलना न शम्भोस्तन्मूलं तव जननि ताटङ्कमहिमा ॥ என்ற ஸௌந்தரியலஹரீ சுலோகமும் ஒப்பிடத்தக்கது. அவைகளின் பொருள் - (1) காமேசுவரன், கழுத்தில் கட்டியதனால் (என்றும் அழிவற்றதாக விளங்கும்) மங்களஸூத்திரத்தினால் பிரகாசிக்கின்ற கழுத்தை உடையவள் லலிதாபரமேசுவரி. (2) பயங்கரமான முதுமையையும் மரணத்தையும் நீக்கும் அமிருதத்தை அருந்திய போதிலும் பிரம்மர், இந்திரன் முதலிய தேவர்கள் (பிரளயகாலத்தில்) மரணமடைகின்றனர். அமிருதத்தை புஜித்தவர்களுக்கு மரணம் இல்லை என்ற சொல் அவர்கள் விஷயத்தில் பொய்யாயிற்று. ஆனால், முகர்ந்தாலே உயிரை எடுக்கும் வன்மை கொண்ட கொடிய காலகூடவிஷத்தை சாப்பிட்ட போதிலும் சிவபெருமானுக்கு மரணம் நிகழவில்லை என்பது, ஹே தாயே; உமது காதணியாகிய தாடங்கத்தின் மகிமையன்றோ!)

गुणत्त्रयातीतविभाव्यमित्थं गोकर्णनाथं वचसाऽर्चयित्वा ।
तिस्रः स रात्रीस्त्रिजगत्पवित्रे क्षेत्रे मुदैष क्षिपति स्म कालम् ॥ ௬

ஸத்வரஜஸ்தமோ குணங்களற்ற சிறந்த ஞானிகளுடையவும் பக்தர்களுடையவும் ஹிருதயத்தில் விளங்கும் கோகர்ணேசுவரனை இவ்வாறு வசனத்தினால் துதித்து, அந்தப் பரமாசாரியர் மூவுலகங்களிலும் மிக்கப் பரிசுத்தமான அந்தப் புண்ணியக்ஷேத்திரத்தில் உவகையுடன் மூன்று நாட்கள் வாஸம் செய்தார்.

वैकुण्ठकैलासविवर्तभूतं हरन्नताघं हरिशङ्कराख्यम् ।
दिव्यस्थलं देशिकसार्वभौमस्तीर्थप्रवासी नचिरादयासीत् ॥ ௭

பரமாச்சாரிய சக்கரவர்த்தியாகிய அந்த ஸ்ரீசங்கரர், தீர்த்தயாத்திரை செய்யும்கால், விரைவில், வைகுண்டம் கைலாஸம் என்ற இரண்டும் ஒன்று சேர்ந்து மண்ணுலகில் தோற்றமளிக்கின்றனவென்று கருதத்தக்கதும்,

வணங்குகிறவர்களுடைய பாபங்களை நீக்குகின்றதுமாகிய 'ஹரிஹரபுரம்' என்ற திவ்வியஸ்தலத்தையடைந்தார்.

भ्रमापनोदाय भिदावदानामद्वैतमुद्रामिह दर्शयन्तौ ।
आराध्य देवौ हरिशङ्करौ स द्व्यर्थाभिरित्यर्चयति स्म वाग्भिः ॥ ८

பேதவாதம் கூறுகிறவர்களுடைய 'பேதபுத்தி' தப்பிதம் என்று உணர்த்தி அதனை நீக்குவதற்காக அபேதத்தை (வேற்றுமையின்மையை) காண்பிக்கின்ற சங்கரநாராயணர்களை பூஜித்து இரு பொருள்கள்கொண்ட செய்யுட்களால் துதித்தார்.

10 அவதாரலீலைகளை காண்பித்த திருமாலுக்கும், சிவபெருமானுக்கும் சிலேஷையாக துதி:-

वन्द्यं महासोमकलाविलासं गामादरेणाऽऽकलयन्ननादिम् ।
मैनं महः किंचन दिव्यमङ्गीकुर्वन् विभुर्मे कुशलानि कुर्यात् ॥ ९

(1) வணங்கத்தக்கதும், சிறந்த சந்திரக்கலையை அணிந்ததும், மேனையின் அம்சமும் சிறந்த ஜோதியுமாகிய மங்கையை பெற்றுக்கொண்டு, அநாதியான = புராதனமான எருதை = நந்தியை ஆதரவுடன் கூப்பிடுகிற ஸர்வ வியாபியாகிய பரமசிவன் எனக்கு நன்மைகளை அளிப்பாராக. (2) மகா ஸோமனுடைய = மாபெரும் பிரளயகாலத்தின் தண்ணீரினுடைய, கலையில் = அம்சத்தில், விளையாடுகின்ற மீன்வடிவத்தைப் பெற்றுக்கொண்டு, அநாதி கோவை = புராதனவசனமாகிய வேதசமூஹத்தை, ஆதரவுடன் காப்பாற்றிய ஸர்வவியாபியாகிய ஸ்ரீமந் நாராயணன் எனக்கு மங்களங்களை அளிப்பாராக.

(मैनं = மேனையைச்சேர்ந்த, மீனைச்சேர்ந்த)

यो मन्दरागं दधदादितेयान् सुधाभुजः स्माऽऽतनुते विषादी ।
स्वामद्रिलोलोचितचारुमूर्ते कृपामपारां स भवान् विधत्ताम् ॥ १०

(1) தேவர்களிடம் மிக்க அன்புகொண்டு, தான் விஷத்தை அருந்தி அந்த தேவர்களை அமிருதத்தை சாப்பிடும்படி எவர் அருள்புரிந்தாரோ, கைலாஸ மலையில் விளங்கும் அழகிய வடிவம்கொண்டவரே! அத்தகைய தாங்கள் என்மீது எல்லையில்லாக்கருணை புரிவீராக. (இப்பொருளில், அமந்த = அதிகமான ராகம் = அன்பை, தரித்தவராக என்றும், விஷாதீ = விஷத்தை சாப்பிட்டவர் என்றும் சொற்களை பிரித்தல்.)

(2) எவர், மந்தரம் என்ற அகத்தை = மலையை பிடித்துக்கொண்டு, அவிஷாதீ = வருத்தமடையாதவராக (விடாமுயற்சியுடன் பாற்கடலைக் கடையும் பொழுது) தனது லீலைகளைக் காட்டுவதற்குத்தக்க உருவத்தை = ஆமை வடிவத்தைப் பெற்றுக்கொண்டாரோ, (தனது உடலினல் மந்தரமலையைத் தாங்கினரோ) அத்தகைய பகவான் எல்லையில்லாக் கருணையை என்மீது காண்பிப்பாராக.

उल्लासयन्यो महिमानमुच्चैः स्फुरद्वराहीशकलेवरोऽभूत् ।
तस्मै विदध्मः करयोरजस्रं सायन्तनाम्भोरुहसामरस्यम् ॥ ११

(1) தனது மகிமையை காண்பிப்பதற்காக எவர் படமெடுத்த பாம்புகளையே பூஷணமாக உடலில் அணிந்துகொண்டு விளங்குகின்றாரோ அவருக்கு மாலைத்தாமரைமலர்போல் கூப்பியகைகளால் வணக்கம் செலுத்துகிறோம்.

(ஸ்புரத் = விளங்குகின்ற, வர = சிறந்த, அஹீச = அரவரசர்களை, கலேவரத்தில் = உடலில் உடையவர்.)

(2) அரவினுடலில் பள்ளிகொண்ட ஸ்ரீமந் நாராயணன், வராகத்தின் உடலை பெற்றுக்கொண்டார். அந்த உடல் எல்லாவிதவல்லமையுடையதாக விளங்கியது. அவருக்கு கைகூப்பி வணக்கம் செலுத்துகிறோம்.

समावहन् केसरितां वरां यः सुरद्विषत्कुञ्जरमाजघान ।
प्रह्लादमुल्लासितमादधानं पञ्चाननं तं प्रणुमः पुराणम् ॥ १२

(1) ஸரிதாம்வராம் = நதிகளில் சிறந்த கங்கையை, கே = தலையில், தரித்த எவர் தேவர்களுக்குப் பகைவனான கஜாஸுரனைக் கொன்று, (தான் ஆனந்தத்தை அடைவதுபோல்) தேவர்களுக்கும் மற்ற சான்றோர்களுக்கும் ஆனந்தத்தை அளித்தாரோ, ஐந்து முகங்களுடைய பிறவியற்ற பரம்பொருளாகிய அத்தகைய பரமேசுவரனை துதிக்கிறோம்.

(2) வராம் = சிறந்த, கேஸரிதாம் = மடங்கல் வடிவத்தை பெற்றுக் கொண்டு, அஸுரர்களுக்கு அரசனாகிய ஹிரண்யகசிபுவைக் கொன்று (பக்த சிகாமணியாகிய) பிரஹ்லாதனை காப்பாற்றி ஆனந்திக்கச் செய்த பிறப்பற்ற நரசிம்மப்பெருமானை துதிக்கிறோம்.

उदैत्तु बल्याहरणाभिलाषो यो वामनं हार्यजिनं वसानः ।
तपांसि कान्तारहितो व्यतानीदाद्योऽवतादाश्रमिणामयं नः ॥ १३

(1) தக்ஷயாகத்தில் தனக்கு பூஜை செய்யாமையால் சினம்கொண்டவர் போல் முயன்று, பிறகு மனைவியை இழந்து, அழகிய மான்தோலை தரித்துக் கொண்டு தவம் செய்தவரும், அழகிய உருவம் கொண்டவரும், ஆச்ரம தர்மங்களைப் பின்பற்றுகிறவர்களில் சிறந்தவருமாகிய ஆதிக்கடவுள் (பரமேசுவரர்) நம்மைக் காப்பாற்றுவாராக.

(2) மாபலிசக்கரவர்த்தியிடமிருந்து தானத்தைப்பெற விரும்பியவராக எவர் அழகிய மான்தோலையணிந்துகொண்டு அந்த மாபலியையடைந்து, அருள் புரிந்து, பெண்ணாசையைத் துறந்தவராகத் தவங்களை செய்தவரும், ஆச்ரமங்களில் முதலாவதாகிய பிரம்மசரியாச்ரமத்தைக் கைப்பற்றியவருமாகிய வாமனர் நம்மைக் காப்பாற்றுவாராக.

येनाधिकोद्यत्तरवारिणाऽऽशु जितोऽर्जुनः संङ्गररङ्गभूमौ ।
नक्षत्रनाथस्फुरितेन तेन नाथेन केनापि वयं सनाथाः ॥ १४

(1) பெருகுகின்ற தண்ணீருடன் கூடிய கங்கையைத் தாங்கியவரும், யுத்தத்தில் அர்ஜுனனை வென்றவரும், நக்ஷத்திரங்களுக்கரசனாகிய சந்திரனை அணிந்தவரும் வர்ணிக்க முடியாதவருமான சிவபெருமானால் யாம் நாதன் உள்ளவர்களாக இருக்கின்றோம்.

(2) மிக்க பலசாலியான பாலனுகவிருக்கையிலேயே எவர், போரில் கார்த்தவீரியார்ஜுனனை வென்று க்ஷத்திரியஜாதியே இருக்கக்கூடாது என்ற தீர்மானம்கொண்டாரோ, அப்பரசுராமர் வர்ணிக்கமுடியாத நாதராக இருக்கையில் யாம் நாதன் உள்ளவர்கள்.

विलासिनाऽलीकभवेन धाम्ना कामं द्विषन्तं स दशास्यमस्यन् ।
देवो धरापत्यकुचोष्मसाक्षी देयादमन्दात्मसुखानुभूतिम् ॥ १५

(1) பொய்யான பிரபஞ்சத்தில் விளங்கும் தனது வன்மையினுல் (சான்ருேர்களிடம்) பகைமையைக் காண்பிக்கின்றவனும், ஞானேந்திரியங்கள் ஐந்தும் கர்மேந்திரியங்கள் ஐந்துமாகிய பத்து இந்திரியங்கள் வாயிலாகத் தோன்றுகிறவனுமாகிய காமனை = மன்மதனைக் கொன்றவரும் மலைமகளாகிய உமையுடன் இன்பமனுபவிக்கின்றவருமாகிய சிவபெருமான் பேரானந்தத்தையளிப்பாராக.

(2) நன்கு விளங்கும் அம்புகளின் வன்மையால் பகைவனுன பத்துத்தலை ராவணனைக் கொன்று பூமகளாகிய சீதாபிராட்டியுடன் இன்பமனுபவித்த ஸ்ரீராமர் நமக்குப் பேரானந்தத்தையளிப்பாராக.

उत्तालकेतुः स्थिरधर्ममूर्तिर्हालाहलस्वीकरणोग्रकण्ठः ।
स रोहिणीशानिशचुम्ब्यमाननिजोत्तमाङ्गोऽवतु कोऽपि भूमा ॥ १६

(1) தாளலயம் ஒத்த கானகாலத்தில் (நடராஜப்பெருமானுக) விளங்குகின்றவரும், அழிவற்ற தர்மவடிவமும், ஹாலாஹலத்தை = கொடியவிஷத்தை பெற்றுக்கொண்டு அதன் வன்மையை அடக்கும் சக்திவாய்ந்த நெஞ்சையுடையவரும், ரோஹிணீசனுல் = சந்திரனுல், முத்தமிடப்பட்ட தலையை உடையவரும், எங்கும் வியாபித்தவரும், புகலமுடியாதவருமாகிய பகவான் காப்பாற்றுவாராக.

(2) சிறந்த தாலமரத்தை கொடியாகக் கொண்டவரும், உறுதியான தர்மமூர்த்தியும், மத்யபானம் செய்தபோதிலும் சிறந்த குரலையுடையவரும் கலப்பையை ஆயுதமாகக்கொண்டவரும், ரோஹிணீசனுல் = ரோஹிணியின் கணவனுகிய வசுதேவரால்உச்சி முகரப்பெற்றவருமாகிய பலராமர் நம்மைக் காப்பாற்றுவாராக.

विनायकेनाऽऽकलिताहितापं निषेदुषोत्सङ्गभुवि प्रहृष्यन् ।
यः पूतनामोहकचित्तवृत्तिरव्यादसौ कोऽपि कलापभूषः ॥ १७

(1) (துதிக்கையினுல்) எடுத்துத் தலையில் தண்ணீரை அபிஷேகம் செய்கின்றவரும், மடியில் அமர்ந்தவருமாகிய விநாயகரைக்கண்டு களிக்கின்றவரும், பூதநாமா = பரிசுத்தமான பெயரைக்கொண்டவரும், ஊஹகசித்தவிருத்தி: = நினைக்கின்றவர்களுடைய மனதில் வசிக்கின்றவரும், கலைகளுடன் கூடிய சந்திரனை பூஷணமாகக்கொண்டவரும் ஒப்புயர்வற்றவருமாகிய மகாதேவர் காப்பாற்றுவாராக.

(2) வி = பறவைகளுக்கு, நாயகனான கருடனுடன் கூடியவரும், அஹி = அரவிற்கு, காளியனுக்கு, ஆகலிததாபம் = தாபத்தை வளர்த்தும்படி அவனது உடலில் ஆனந்தத்துடன் அமர்ந்தவரும், பூதனையின் மனதை மயக்கமடையும்படிச் செய்தவரும், மயில்பீலியையணிந்தவரும், வர்ணிக்க முடியாதவருமாகிய வாசுதேவர் காப்பாற்றுவாராக.

पाठीनकेतोर्जयिने प्रतीतसर्वज्ञभावाय दयैकसीम्ने ।
प्रायः क्रतुद्वेषकृतादराय बोधैकधाम्ने स्पृहयामि भूम्ने ॥ १८

(1) மன்மதனை வென்றவரும், ஸர்வக்ஞன் என்று மறைகளால் புகழப் பட்டவரும், கருணைக்கடலும், தக்ஷயாகத்தை அழித்தமையால் செருக்குக்கொண்டவர்களின் வேள்விகளில் வெறுப்புக்கொண்டவரும், ஞானவடிவமுமாகிய வியாபகமான சிவஜோதியை அடைய விரும்புகிறேன்.

(2) காமவிகாரத்தை வென்றவரும், ஸர்வக்ஞன் என்ற பிரசித்தியடைந்தவரும், அசுரர்களை மயக்குவதற்காக யாகங்களை வெறுக்கின்றவரும், ஞானவடிவமுமாகிய புத்தபகவானை நேசிக்கிறேன்.

व्यतीत्य चेतोविषयं जनानां विद्योतमानाय तमोनिहन्त्रे ।
भूम्ने सदावासकृताशयाय भूयांसि मे सन्तुतमां नमांसि ॥ १९

ஜனங்களுடைய மனதிற்கு எட்டாதவரும், ஸ்வயம் பிரகாசரூபியும், இருளை=அஞ்ஞானத்தை நீக்குகின்றவரும், சான்றோர்களிடம் வாஸத்தை விரும்புகின்றவரும், ஸர்வவ்யாபியுமாகிய பகவானுக்கு (ஸ்ரீசங்கரனுக்கும், கல்கிதேவருக்கும்) எனது எண்ணில்லா வணக்கங்கள் நிலவுக.

वृषाकपायीवरयोः सपर्यां वाचाऽतिमोचारसयेति तन्वन् ।
मुनिप्रवीरो मुदितात्मकामो मूकाम्बिकायाः सदनं प्रतस्थे ॥ २०

இவ்வாறு, மலைமகளுடையவும் மலர்மகளுடையவும் நாதர்களை வாழைப்பழத்தினும் மீறிய சுவைகொண்ட சொற்களால் துதித்தலாகிய தனது விருப்பத்தைப் பூர்த்திசெய்துகொண்டு சிறந்த முனிவராகிய அவர் மூகாம்பிகா க்ஷேத்திரத்திற்குப் புறப்பட்டார்.

अङ्के निधाय व्यसुमात्मजातं महाकुलौ हन्त मुहुः प्ररुद्य ।
तदेकपुत्रौ द्विजदम्पती स दृष्ट्वा दयाधीनतया शुशोच ॥ २१

அவ்விடத்தில்தமது ஒரே புதல்வன் உயிர்நீங்கியதனால், அச்சடலத்தை மடியில் வைத்துக்கொண்டு மிகவும் வருந்திப் புலம்புகின்ற உயர்ந்த குலத்தில் தோன்றிய தம்பதிகளைக் கண்ணுற்று கருணை நிரம்பிய மனமுடையவராக வருந்தினார்.

अपारमञ्चत्यथ शोकमस्मिन्नभूयतोच्चैरशरीरवाचा ।
जायेत संरक्षितुमक्षमस्य जनस्य दुःखाय परं दयेति ॥ २२

ஸ்ரீசங்கரர் தயவினுல் மிகவும் வருந்துகையில், ''காப்பாற்ற வல்லமையற்றவனுடைய கருணை வருத்தத்தையே வளர்க்கும்'' என்று அசரீரி உண்டாயிற்று.

आकर्ण्य वाणीमशरीरिणीं तामसाविति व्याहरति स्म विज्ञः ।
जगत्त्रयीरक्षणदक्षिणस्य सत्यं तवैकस्य तु शोभते सा ॥ २३

அந்த அசரீரியைக் கேட்டு விசேஷ அறிஞராகிய ஸ்ரீ சங்கரர் கூறினர். ''மூவுலகங்களையும் காப்பாற்ற வன்மையுள்ள தங்களொருவருக்கே அக்கருணை தகும்.'' (ஆகையால், இவ்வாறு கூறும் தாங்களே கருணை கூர்ந்து இவர்களுடைய துன்பத்தை அகற்றவேண்டும், என்று கருத்து.)

इतीरयत्येव यतौ द्विजातेः सुतः सुखं सुप्त इवोदतिष्ठत् ।
समीपगैः सर्वजनीनमस्य चारित्र्यमालोक्य विसिष्मिये च ॥ २४

யதீசுவரர் இவ்வாறு கூறுகையிலேயே, அந்தணருடைய புதல்வன் துயில் நீங்கியவன்போல் சுகமாக எழுந்தான். எல்லோருக்கும் ஹிதத்தையளிக்கும் இவருடைய செயலைக் கண்டு அருகிலிருந்தவர்கள் வியந்தனர்.

रम्योपशल्यं कृतमालसालरसालहिंतालतमालशालैः ।
सिद्धिस्थलं साधकसम्पदां तन्मूकाम्बिकायाः सदनं जगाहे ॥ २५

கிருதமாலமரம், தேக்குமரம், மாமரம், ஹிந்தாலமரம் முதலிய பற்பல மரங்கள் அடர்ந்து அழகிய அக்கிரகாரத்தின் எல்லையுடன் கூடியதும், தவம் செய்யும் ஜனங்களுக்குத் தவப்பயனையளிக்கின்ற புண்ணியஸ்தலமுமாகிய மூகாம்பிகையின் கோவிலில் புகுந்தார்.

उच्चावचानन्दजबाष्पमुच्चैरुद्दीर्णरोमाञ्चमुदारभक्तिः ।
अम्बामिहापारकृपावलम्बां संभावयन्नस्तुत निस्तुलं सः ॥ २६

அளவுகடந்த பக்தியுடைய அப்பரமஹம்ஸர், கரைகடந்த கருணை காண்பித்துக்கொண்டு இங்கு விளங்கும் அம்பிகையை தியானம் செய்துகொண்டு ஆனந்தக்கண்ணீர் பெருக, உரோமாஞ்சத்துடன் நிகரற்ற வசனங்களால் துதித்தார்.

पारेपरार्धं पदपद्मभाःसु षष्ट्युत्तरं ते त्रिशतं तु भासः ।
आविश्य वह्न्यर्कसुधामरीचीनालोकवन्त्यादधते जगन्ति ॥ २७

ஹே தேவி! தங்களுடைய பாதகமலங்களின் கிரணங்கள் எண்ணில்லாதவை. அவைகளில், 360 கிரணங்கள் அக்னியிலும், சூரியனிடமும், சந்திரனிடமும் புகுந்து உலகங்களைப் பிரகாசிக்கச்செய்கின்றன.

(अष्टोत्तरशतं वह्नेः षोडशोत्तरकं रवेः । षट्त्रिंशदुत्तरशतं चन्द्रस्य च विनिर्णयः॥ என்று பைரவயாமளத்தில் கூறப்பட்டுள்ளது. அக்னியின் கிரணங்கள் 108, சூரியனுடையவை 116, சந்திரனுடையவை 136. இந்த விஷயம், ஸௌந்தரிய

லஹரி ''क्षितौ षट्पञ्चाशत्'' என்ற 14-வது சுலோகத்தில், ஸ்ரீ லக்ஷ்மீதர வியாக்யானத்தில் விஸ்தாரமாக கூறப்பட்டுள்ளது.)

अन्तश्चतुः षष्ट्युपचारभेदैरन्तेवसत्काण्डपटप्रदानैः ।
आवहनाद्यैस्तव देवि नित्यमाराधनामादधते महान्तः ॥ २८

ஹே! தேவியே! மகான்கள் (யதீசுவரர்கள்) ஆவாஹனம் முதலிய அறுபத்துநான்கு உபசாரங்களை மனதில் பாவனைரூபமாக வஸ்திரம் முதலிய பொருள்களை தானம் செய்தல் மூலமாகவே நிறைவேற்றுகின்றனர்.

अम्बोपचारेष्वधिसिन्धुषष्टि शुद्धाज्ञयोः शुद्धिदमेकमेकम् ।
सहस्रपत्रे द्वितये च साधु तन्वन्ति धन्यास्तव तोषहेतोः ॥ २९

தாயே! பாக்கியவான்கள் உமது பிரஸாதத்தைப் பெறுவதற்கு 64 உபசாரங்களை விசுத்திசக்கரத்திலும், ஆக்ஞாசக்கரத்திலும் இரண்டாவது ஸகஸ்ரபத்மத்திலும் நன்கு செய்கின்றனர்.

आराधनं ते बहिरेव केचिदन्तर्बहिश्चैकतमेऽन्तरेव ।
अन्ये परे त्वम्ब कदापि कुर्युर्नैव त्वदैक्यानुभवैकनिष्ठाः ॥ ३०

தாயே! சிலர் வெளியே மட்டும் உமக்குப் பூஜையைச் செய்கின்றனர். மத்தியாதிகாரிகள், உள்ளேயும் வெளியேயும் பூஜைசெய்கின்றனர். உத்தமர்கள் உள்ளே மட்டும் (மனதில் மாத்திரம்) பூஜைசெய்கின்றனர். உத்தமோத்தமர்களோவெனில், சிறந்த ஞானிகளாதலால் ஆத்மரூபமாகவே தங்களை தியானம் செய்தலில் நிலைபெற்றமையால் எவ்வித பூஜையும் செய்வதில்லை.

अष्टोत्तरत्रिंशति याः कलास्ताः स्वर्ध्याः कलाः पञ्च निवृत्तिमुख्याः ।
तासामुपर्यम्ब तवाङ्घ्रिपद्मं विद्योतमानं विबुधा भजन्ते ॥ ३१

38 கலைகளில் 5 நிவிருத்திமார்க்கத்திற்கு அநுகூலமானவை. அவைகளுக்கும் மேலாக தங்களுடைய பாதகமலம் விளங்குகிறது. தாயே! ஞானிகள் அத்தகைய பாதகமலத்தைப் பூஜிக்கின்றனர்.

कालाग्निरूपेण जगन्ति दग्ध्वा सुधात्मनाऽऽप्लाव्य समुत्सृजन्तीम् ।
ये त्वामवन्तीममृतात्मनैव ध्यायन्ति ते सृष्टिकृतो भवन्ति ॥ ३२

பிரளயகாலத்து அக்னிரூபத்தைப் பெற்று உலகங்களை எரித்து, அமிருதரூபத்தினால் நனைத்து சிருஷ்டிசெய்து பாதுகாப்பையளிக்கும் தன்மையுள்ளவளாக தங்களை எவர்கள் பாவனை செய்கின்றனரோ, அவர்கள் உலகங்களை சிருஷ்டிக்கும் வன்மையுள்ளவர்களாக ஆகின்றனர்.

ये प्रत्यभिज्ञामतपारविज्ञा धन्यास्तु ते प्राग्विदितां गुरूक्त्या ।
सैवाहमस्मीति समाधियोगात् त्वां प्रत्यभिज्ञाविषयं विदध्युः ॥ ३३

முன்னமேயே தங்களையறிந்து, பிறகு குருவின் உபதேசம் நிலவுகையில் தியானத்தின் சிறப்பினால் ஹிருதயத்தில் பிரகாசிக்கும்பொழுது ''அந்த தேவதை

நானே, நானே அந்த தேவதை'' என்று பிரத்யபிக்ஞையினுல் அறிந்து கொள்பவர்கள் பாக்கியவான்கள்.

(வெகுகாலத்திற்கு முன் கண்டறிந்ததோ அல்லது கேட்டறிந்ததோ ஆகிய பொருளே, நீண்டகாலத்திற்குப் பின் காணும்பொழுது அல்லது கேட்கும்பொழுது, அதுதான் இந்தப் பொருள் என்று ஞாபகத்தினுல் உணருதல் பிரத்யபிக்ஞை.)

आधारचक्रे च तदुत्तरस्मिन्नाराधयन्त्यैहिकभोगलुब्धाः ।
उपासते ये मणिपूरके त्वां वासस्तु तेषां नगराद्बहिस्ते ॥ ३४

இம்மையில் போகங்களே விரும்புகின்றவர்கள், மூலாதாரத்திலும், (நான்கு தளங்களுள்ள சக்கரத்தில்) ஸ்வாதிஷ்டானத்திலும் (பவழநிறங் கொண்ட ஆறுதள சக்கரத்தில்) ஆராதிக்கின்றனர். மணிபூரகத்தில் (பத்து தளமுள்ள தவிட்டுநிற சக்கரத்தில்) தங்களே எவர்கள் உபாஸிக்கின்றனரோ, அவர்கள் ஸ்ரீசக்ரநகரத்திற்கு வெளியே வாஸஞ்செய்கின்றனர்.

अनाहते देवि भजन्ति ये त्वामन्तःस्थितिस्त्वन्नगरे तु तेषाम् ।
शुद्धाज्ञयोर्ये तु भजन्ति तेषां क्रमेण सामीप्यसमानभोगौ ॥ ३५

ஹே தேவி! (பன்னிரண்டு தளங்கள்கொண்ட மஞ்சள் நிறமான) அநாஹதத்தில் பஜிக்கின்றவர்களுக்கு தங்களுடைய நகரத்தில் வாஸம் (ஸாலோக்கியம்). (பதினுறு தளங்களுள்ள தவிட்டுநிறங்கொண்ட) விசுத்த சக்கரத்தில் பூஜை செய்கிறவர்களுக்கு ஸாமீப்பியமுக்தியும், (ஆயிரமிதழ்கள் கொண்ட கர்ப்பூரநிறமான) ஆக்ஞாசக்கரத்தில் உபாஸனே செய்கிறவர்களுக்கு ஸமான போகமும் (ஸமான ஐசுவரியம்) நிலவுகின்றது.

सहस्रपत्रे ध्रुवमण्डलाख्ये सरोरुहे त्वामनुसंदधानः ।
चतुर्विधैक्यानुभवास्तमोहः सायुज्यमम्बाञ्चति साधकेन्द्रः ॥ ३६

தாயே! துருவமண்டலம் என்று கூறப்படும் ஆயிரமிதழ்கள் கொண்ட பத்மத்தில் தங்களே தியானம் செய்கிற சிறந்த உபாஸகன் நான்குவித அபேதங்களே பாவனே செய்து அக்ஞானமகன்றமையால் ஸாயூஜ்யமுக்தியை அடைகிருன்.

श्रीचक्रषट्चक्रकयोः पुरोऽथ श्रीचक्रमन्वोरपि चिन्तितैक्यम् ।
चक्रस्य मन्त्रस्य ततस्तवैक्यं क्रमादनुध्यायति साधकेन्द्रः ॥ ३७

உபாஸகர்களில் சிறந்தவன், முதலில் (1) ஸ்ரீ சக்கரத்திற்கும் ஷட்சக்கரத்திற்கும், (2) ஸ்ரீ சக்கரத்திற்கும் மந்திரத்திற்கும் (பஞ்சதசீ அல்லது ஷோடசீ மந்திரம் என்று கூறப்படும் ஸ்ரீ வித்யை), (3) மந்திரத்திற்கும் ஸ்ரீசக்கரத்திற்கும், (4) மந்திரத்திற்கும் உபாஸ்யதெய்வமாகிய தங்களுக்கும் அபேதத்தை (வேற்றுமையின்மையை) பாவனேயினுல் அறிகிருன்.

इति तां वचनैः प्रपूज्य भैक्षौदनमात्रेण स तुष्टिमान् कृतार्थः ।
बहुसाधकसंस्तुतः कियन्तं समयं तत्र निनाय शान्तचेताः ॥ ३८

இவ்வாறு அத்தேவியை சொற்களால் பூஜித்து பிக்ஷான்னத்திஞலேயே சந்தோஷமடைந்து சாந்தமனமுடையவரும், உபாஸகர்களநேகர்களால் நன்கு புகழப்பட்டவரும், கிருதார்த்தருமாகிய ஸ்ரீ சங்கரர் அங்கு சில தினங்கள் வாஸஞ்செய்தார்.

श्रयति स्म ततोऽग्रहारकं श्रीबलिसंज्ञं स कदाचन स्वशिष्यैः ।
अनुगेहहुताग्निहोत्रदुग्धप्रसरत्पावनगन्धलोभनीयम् ॥ ३९

பிறகு, அவர் ஒருநாள் தனது சிஷ்யர்களுடன் ஸ்ரீபலிபுரம் என்ற பெயருள்ள ஒரு அக்கிரஹாரத்தை அடைந்தார். அந்த அக்கிரஹாரம் ஒவ்வொரு கிருஹத்திலும் செய்யப்படும் அக்னிஹோத்திரத்தில் ஹோமம் செய்யப்படும் பாலின் பரிமளவாசனை வீசுகிறதிஞல் மனதைக் கவருகின்றதாக இருந்தது.

यतोऽपमृत्युर्बहिरेव याति भ्रान्त्वा प्रदेशं शनकैरलब्ध्वा ।
दृष्ट्वा द्विजातीन्निजकर्मनिष्ठान् दूरान्निषिद्धं त्यजतोऽप्रमत्तान् ॥ ४०

அநேக தேசங்களில் ஸஞ்சாரம்செய்து மெதுவாக அந்த அக்ரஹாரத்திற்கு வந்து அபமிருத்யு, அங்கிருக்கும் அந்தணர்கள் ஸ்வதர்மத்தில் கருத்துடன் அதை செய்கிறதையும், அதர்மத்தை தூரத்தில் விலக்குவதையும் கண்டு தனக்கு உள்ளே புகுவதற்கு இடம் கிட்டாமையால் வெளியே சென்றுவிட்டது.

यस्मिन् सहस्रद्वितयं जनानामग्न्याहितानां श्रुतिपाठकानाम् ।
वसत्यवश्यं श्रुतिचोदितासु क्रियासु दक्षं प्रथितानुभावम् ॥ ४१

அந்த அக்ரஹாரத்தில், யக்ஞங்கள் செய்தவர்களும், வேதங்களை நன்கு அத்யயனம் செய்தவர்களும், வேதங்களில் கூறும் ஸத்கர்மங்களைச் செய்வதில் வல்லமையுள்ளவர்களும், மகிமைபொருந்தியவர்களுமாகிய இரண்டாயிரம் அந்தணர்கள் வஸித்துவந்தனர்.

मध्ये वसन् यस्य करोति भूषां पिनाकपाणिर्गिरिजासहायः ।
हारस्य यष्टेस्तरलो यथा वै रात्रेरिवेन्दुर्गगनाधिरूढः ॥ ४२

ஹாரத்திற்கு மத்யமணிபோலவும், ஆகாயத்தில் விளங்கும் சந்திரன் இரவிற்கு அலங்காரம்போலவும் அந்த அக்ரஹாரத்தில் பார்வதிநாயகராகிய பரமசிவன் ஸன்னிதானம் செய்து அருள்கிறுர்.

तत्र द्विजः कश्चन शास्त्रवेदी प्रभाकराख्यः प्रथितानुभावः ।
प्रवृत्तिशास्त्रैकरतः सुबुद्धिरास्ते क्रतून्मीलितकीर्तिबृन्दः ॥ ४३

அந்த அக்ரஹாரத்தில், எல்லா சாஸ்திரங்களிலும் வல்லமை வாய்ந்தவரும், பிரவிருத்திமார்க்கத்தில் பற்றுள்ளவரும், அநேக வேள்விகளைச் செம்மையாகச் செய்து, உலகமெங்கும் பரவிய கீர்த்தி வாய்ந்தவரும், புத்திமானுமாகிய பிரபாகரர் என்ற ஓர் அந்தணர் இருந்தார்.

गावो हिरण्यं धरणी समग्रा सद्बान्धवा ज्ञातिजनाश्च तस्य ।
सन्त्येव किं तैर्न हि तोष एभिः पुत्रो यदस्याजनि मुग्धचेष्टः ॥ ४४

ஏராளமான பசுக்கள், பொற்குவியல், செழித்த நிலம், உற்ற பந்துக்கள், தயவுள்ள தாயாதிகள், வேறும் மற்ற எல்லாச் செல்வங்களும் அவருக்கு இருந்தன. இருந்தும் என்ன பயன்? இவைகளால் அவருக்கு மனதில் ஸந்தோஷம் நிலவவில்லை. ஏனெனில், அவருடைய புதல்வன் புத்தியற்ற செயலாற்றுபவனாக இருந்தான்.

न वक्ति किंचिन्न शृणोति किंचित् ध्यायन्निवास्ते किल मन्दचेष्टः ।
रूपेषु मारो महसा महस्वान् मुखेन चन्द्रः क्षमया महीसमः ॥ ४५

அந்தப் புதல்வன் வாய்திறந்து ஒரு பேச்சுக்கூட பேசுவதில்லை. ஒரு விஷயத்திற்கும் செவிசாய்க்கிறவனல்லன். செய்கையற்றவனாக மனதில் ஏதோ தியானம் செய்பவன்போல் இருப்பான். உருவத்தில் மன்மதன், ஒளியில் சூரியன், முகத்தினழகில் சந்திரன், பொறுமையில் பூமிதேவிக்கே நிகரானவன்.

ग्रहग्रहात् किं जडवद्विचेष्टते किं वा स्वभावादुत पूर्वकर्मणः ।
संचिन्तयंस्तिष्ठति तत्पिताऽनिशं समागतान् प्रष्टुमना बहुश्रुतान् ॥ ४६

பூதம், பிசாசு முதலியவைகளின் ஆவேசத்தினாலா, கிரகதோஷத்தினாலா, இயற்கையினாலா அல்லது முன்ஜன்ம வினையினாலா, எக்காரணத்தினால் ஜடம்போல் செயலாற்றுகிறான் என்று அப்புதல்வனுடைய தந்தை யோசனை செய்துகொண்டு, தனது தேசத்திற்கு வந்த விசேஷ அறிஞர்களிடம் அந்த விஷயத்தைப்பற்றி வினவ விருப்பமுள்ளவராக இருந்தார்.

शिष्यैः प्रशिष्यैर्बहुपुस्तभारैः समागतं कञ्चन पूज्यपादम् ।
शुश्राव तं ग्राममनिन्दितात्मा निनाय सूनुं निकटं स तस्य ॥ ४७

அநேக நூல்களைப் பெற்றுள்ள சிஷ்யர்களுடனும், பிரசிஷ்யர்களுடனும்= சிஷ்யர்களுடைய சிஷ்யர்களுடனும் தனது அக்ரஹாரத்திற்கு வந்துள்ள பூஜிக்கத்தக்க மகான் ஒருவரைக் கேட்டறிந்து, மாசற்ற மனமுடைய அவர் தனது புதல்வனை அவருடைய (ஸ்ரீ சங்கரருடைய) அருகில் அழைத்துச்சென்றார்.

न शून्यहस्तो नृपमिष्टदैवं गुरुं च यायादिति शास्त्रवित् स्वयम् ।
सोपायनः प्राप गुरुं व्यशिश्रणत् फलं ननामास्य च पादपङ्कजे ॥ ४८

அரசனையும், தெய்வத்தையும், குருவையும் காணச்செல்லுகையில் கையில் ஒன்றுமில்லாமல் போகக்கூடாது என்ற நூலின் முறையறிந்த அறிஞராகிய அவர், காணிக்கைப் பொருளுடன் குருவை அடைந்து, பழங்களை ஸமர்ப்பணம் செய்து, அவருடைய பாதகமலங்களில் வணங்கினார்.

अनीनमत्तं च तदीयपादयोर्जडाकृतिं भस्मनिगूढवह्निवत् ।
स नोदतिष्ठत् पतितः पदाम्बुजे प्रायः स्वजाड्यं प्रकटं विधित्सति ॥ ४९

ஜடநிலைமை கொண்டவனும், நீறு பூத்த நெருப்பைப்போன்றவனுமாகிய புதல்வனையும் அவருடைய பாதகமலங்களில் வணங்கச்செய்தார். அவருடைய பாதாரவிந்தங்களில் வணங்கி விழுந்த அப்புதல்வன் எழவில்லை. தன்னுடைய ஜடத்தன்மையையே அதிகமாக வெளியிட விரும்பினான்.

उपात्तहस्तः शनकैरवाङ्मुखं तं देशिकेन्द्रः कृपयोदतिष्ठिपत् ।
उत्थापिते स्वे तनये पिताब्रवीत् वद प्रभो जाड्यममुष्य किंकृतम् ॥ ५०

அந்தப் பரமாசாரியர் அவருடைய கையைப்பிடித்து எழுப்பவும், அவர் முகத்தை தாழ்த்திக்கொண்டு நின்ருர். தனது மகன் எழுப்பப்படுகையில் தந்தை, ''பிரபுவே! இவனுடைய ஜடத்தன்மைக்குக் காரணம் யாது'' என்று ஸ்ரீசங்கரரிடம் வினவினுர்.

वर्षाण्यतीयुर्भगवन्नमुष्य पञ्चाष्ट जातस्य विनाऽवबोधम् ।
नाध्यैष्ट वेदानलिखच्च नार्णानचीकरं चोपनयं कथञ्चित् ॥ ५१

பிறந்த இவனுக்கு வருஷங்கள் பதின்மூன்று ஆயின. ஆயினும், அறிவு உண்டாகவில்லை. எழுத்துக்களெழுத அறியாதவனுக இருக்கிருன். எவ்விதத்திலோ உபநயனத்தை செய்வித்தேன். இவன், இன்னும் வேதங்களை ஓதவில்லை.

क्रीडापरः क्रोशति बालवर्गस्तथाऽपि न क्रीडितुमेष याति ।
बालाः शठा मुग्धमिमं निरीक्ष्य सन्ताडयन्तेऽपि न रोषमेति ॥ ५२

பையன்கள் விளையாட்டில் விருப்புக்கொண்டவர்களாக கூக்குரலிட்டுக் கூப்பிடுகின்றனர். ஆயினும் இவன் விளையாடச் செல்லுவதில்லை. ஒருவேளை சென்ருல், துஷ்டப்பையன்கள், முட்டாளென்று கருதி இவனை அடிக்கின்றனர். அதனுல் இவன் சினங்கொள்வதில்லை.

भुङ्क्ते कदाचिन्न तु जातु भुङ्क्ते स्वेच्छाविहारी न करोति चोक्तम् ।
तथापि रुष्टेन न ताड्यतेऽयं स्वकर्मणा वर्धत एव नित्यम् ॥ ५३

அநேக நாட்கள் கழித்து எப்பொழுதாவது ஒருநாள் சாப்பிடுவான். இல்லாவிடிலும் இல்லை. தனது விருப்பம்போல் நடக்கிருன். கூறிய காரியத்தை செய்வதில்லை. ஆயினும், கோபத்தினுல் யாம் இவனை அடிப்பதில்லை. தனது வினைப்பயனுக வளருகிருன்.

इतीरयित्वोपरते च विप्रे पप्रच्छ तं शङ्करदेशिकेन्द्रः ।
कस्त्वं किमेवं जडवत् प्रवृत्तः स चाब्रवीद्बालवपुर्महात्मा ॥ ५४

இவ்வாறு அந்தணர் கூறிமுடித்தபொழுது, பரமகுருவாகிய ஸ்ரீசங்கரர், ''நீ யார், ஏன் ஜடம்போல் நடக்கிருய்'' என்று வினவினுர். பாலவடிவங்கொண்ட அந்த மகான் கூறினுர்.

नाहं जडः किन्तु जडःप्रवर्तते मत्संनिधानेन न सन्दिहे गुरो ।
षडूर्मिषड्भावविकारवर्जितं सुखैकतानं परमस्मि तत्पदम् ॥ ५५

ஹே குருவே! நான் ஜடமல்லன். ஜடமாகிய உடல், சேதனுன என்னுடைய ஸம்பந்தத்தினுல் செயலுள்ளதாக விளங்குகிறது. இதில் ஐயமில்லை. ஆறு ஊர்மிகளும்= (1) சோகம், (2) மோகம், (3) பசி, (4) தாகம், (5) ஜனனம், (6)மரணம்; ஆறு விகாரங்களும்=(1) உண்டாகுதல், (2) இருத்தல், (3) மாறுதல்,

*(4) வளருதல், (5) தேய்தல், (6) நாசமடைதல் (இவைகள்) அற்றதும், கேவலபரமானந்தரூபமுமாகிய ''தத்பதத்தின்'' பொருள்தான், யான்.*

ममेव भूयादनुभूतिरेषा मुमुक्षुवर्गस्य निरूप्य विद्वन् ।
पद्यैः परैर्द्वादशभिर्बभाषे चिदात्मतत्त्वं विधुतप्रपञ्चम् ॥ ५६

*வித்வானே! முக்தியை விரும்புகின்றவர்களுக்கெல்லாம் என்னுடைய அநுபவம்போன்ற அநுபவம் உண்டாகக்கடவது என்று கூறி பிரபஞ்சப்பற்றற்ற சித்ரூபியான ஆத்மதத்துவத்தை சிறந்த பன்னிரண்டு செய்யுட்களால் விளக்கினார்.*

प्रकाशयन्ते परमात्मतत्त्वं करस्थधात्रीफलवद्यदेकम् ।
श्लोकास्तु हस्तामलकाः प्रसिद्धास्तत्कर्तुराख्यापि तथैव वृत्ता ॥ ५७

*ஒப்பற்ற பரமாத்மதத்துவத்தை உள்ளங்கையிலுள்ள நெல்லிக்கனி போல் விளக்குவதனால் அச்செய்யுட்களுக்கும் அவைகளை இயற்றியவருக்கும் 'ஹஸ்தாமலகர்' என்ற பெயர் பிரசித்தமாக நிலவியது. (हस्त = கையிலுள்ள, आमलकः = நெல்லிக்கனி)*

## ஹஸ்தாமலகர் கூறிய செய்யுட்கள்

निमित्तं मनश्चक्षुरादिप्रवृत्तौ निरस्ताखिलोपाधिराकाशकल्पः ।
रविर्लोकचेष्टानिमित्तं यथा यः स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ १

यमग्न्युष्णवन्नित्यबोधस्वरूपं मनश्चक्षुरादीन्यबोधात्मकानि ।
प्रवर्तन्त आश्रित्य निष्कम्पमेकं स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ २

मुखाभासको दर्पणे दृश्यमानो मुखात् पृथक्त्वेन नैवास्ति वस्तु ।
चिदाभासको धीषु जीवोऽपि तद्वत् स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ ३

यथा दर्पणाभाव आभासहानौ मुखं विद्यते कल्पनाहीनमेकम् ।
तथा धीवियोगे निराभासको यः स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ ४

मनश्चक्षुरादेर्वियुक्तः स्वयं यो मनश्चक्षुरादेर्मनश्चक्षुरादिः ।
मनश्चक्षुरादेरगम्यस्वरूपः स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ ५

य एको विभाति स्वतः शुद्धचेताः प्रकाशस्वरूपोऽपि नानेव धीषु ।
शरावोदकस्थो यथा भानुरेकः स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ ६

यथाऽनेकचक्षुःप्रकाशो रविर्न क्रमेण प्रकाशीकरोति प्रकाश्यम् ।
अनेका धियो यस्तथैकप्रबोधः स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ ७

विवस्वत्प्रभातं यथारूपमक्षं प्रगृह्णाति नाऽऽभातमेवं विवस्वान् ।
तथा भात आभासत्येकमक्षं स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ ८

यथा सूर्य एकोऽप्यनेकश्चलासु स्थिरास्वप्सु चैकोऽग्निभाव्यस्वरूपः ।
चलासु प्रभिन्नः स्वधीष्वेक एव स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ ९

घनच्छन्नदृष्टिर्घनच्छन्नमर्कं यथा मन्यते निष्प्रभं चातिमूढः ।
तथा बद्धवद्भाति यो मूढदृष्टेः स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ १०

समस्तेषु वस्तुष्वनुस्यूतमेकं समस्तानि वस्तूनि यं न स्पृशन्ति ।
वियद्वत्सदा शुद्धमच्छस्वरूपः स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ ११

उपाधौ यथा भेदता सन्मणीनां तथा भेदता बुद्धिभेदेषु तेऽपि ।
यथा चन्द्रिकाणां जले चञ्चलत्वं तथा चञ्चलत्वं तवापीह विष्णो ॥ इति ॥ १२



विनोपदेशं स्वत एव जातः परात्मबोधो द्विजवर्यसूनोः ।
व्यस्मेष्ट सम्प्रेक्ष्य स देशिकेन्द्रो न्यधात्स्वहस्तं कृपयोत्तमाङ्गे ॥ ५८

பிராம்மணசிரேஷ்டருடைய புதல்வனுக்கு உபதேசமின்றியே நிலவிய ஆத்மஞானத்தினுல் வியப்படைந்த ஸ்ரீ சங்கரர், கருணை பூரித்தவராகி தனது வலது கையினுல் அவருடைய தலையைத் தொட்டு அனுக்கிரகம் செய்தார்.

सुते निवृत्ते वचनं बभाषे स देशिकेन्द्रः पितरं तदीयम् ।
वस्तुं न योग्यो भवता सहायं न तेऽमुनाऽर्थो जडिमास्पदेन ॥ ५९

புதல்வன் புகன்று முடித்தபின், பரமஹம்ஸர் அவனுடைய தந்தையிடம் கூறினர்:- ''இவன் தங்களுடன் தங்குவதற்குத் தகுதியற்றவன். ஜடத்தன்மை கொண்டவன். இவனுல் தங்களுக்குப்பயன் யாதுமில்லை.

पुराभवाभ्यासवशेन सर्वं स वेत्ति सम्यङ् न च वक्ति किंचित् ।
नो चेत्कथं स्वानुभवैकगर्भपद्यानि भाषेत निरक्षरास्यः ॥ ६०

முன்ஜன்மப் பயிற்சியினுல் எல்லாவற்றையும் நன்கு உணர்ந்து சிறந்த ஆத்மஞானியாக இருக்கிருன். அதனைத்தவிர மற்ற விஷயங்களறியாதவன். ஆத்மஞானமில்லாதவனுகில், இப்பிறவியில் எழுத்துக்களையே கற்காதவன் எவ்வாறு தனது ஆத்மஞானத்தை விளக்குவான்?

न सक्तिरस्यास्ति गृहादिगोचरा नात्मीयदेहे भ्रमतोऽस्य विद्यते ।
तादात्म्यताऽन्यत्र ममेति वेदनं यदा न सा स्वे किमु बाह्यवस्तुषु ॥ ६१

கிருஹம் முதலியவைகளில் இவனுக்குப் பற்றில்லை. தனது உடலிலேயே 'நான்' என்ற அபிமானமில்லாதவனுக்கு வெளிப்பொருளில் 'என்னுடையது' என்ற அபிமானம் எவ்வாறுண்டாகும்?

इतीरयित्वा भगवान् द्विजात्मजं ययौ गृहीत्वा दिशमीप्सितां पुनः ।
विप्रोऽप्यनुव्रज्य ययौ स्वमन्दिरं कियत्प्रदेशं स्थिरधीर्बहुश्रुतः ॥ ६२

பகவானாகிய ஸ்ரீசங்கரர் இவ்வாறு கூறி, அந்த ஹஸ்தாமலகரையும் அழைத்துக்கொண்டு தனக்கு விருப்பமான இடத்திற்குப் புறப்பட்டார். பிரவிருத்திமார்க்கத்தில் உறுதியான அறிவுள்ளவரும் மிக்கப் படித்தவருமாகிய பிரபாகரரும் சிறிது தூரம் அவரைப் பின்பற்றிச்சென்று பிறகு தன் மனைக்குச் சென்றார்.

ततः शतानन्दमहेन्द्रपूर्वैः सुपर्वबृन्दैरुपगीयमानः ।
पद्मांघ्रिमुख्यैः सममाप्तकामक्षोणीपतिः शृङ्गगिरिं प्रतस्थे ॥ ६३

பிறகு, விஷ்ணு, இந்திரன் முதலிய தேவர்களால் புகழப்பட்டவரும், தமது விருப்பங்களனைவற்றையும் பெற்றவர்களுக்கு அரசரும் ஆகிய ஸ்ரீ சங்கரர், பத்மபாதர் முதலிய சிஷ்யர்களுடன் சிருங்கேரிக்குப் புறப்பட்டார்.

यत्राधुनाऽप्युत्तममृष्यशृङ्गस्तपश्चरत्यात्मभृदन्तरङ्गः ।
संस्पर्शमात्रेण वितीर्णभद्रा विद्योतते यत्र च तुङ्गभद्रा ॥ ६४

अभ्यागतार्चाल्पितकल्पशाखाः कूलंकषाधीतसमस्तशाखाः ।
इज्याशतैर्यत्र समुल्लसन्तः शान्तन्तराया निवसन्ति सन्तः ॥ ६५

எந்தவிடத்தில், ஐம்பொறிகளையடக்கிய ஆத்மஞானிகளில் சிறந்தவரான கலைக்கோட்டு முனிவர் (ருஷ்யச்ருங்கர்) இப்பொழுதும் சிறந்த தவம் செய்கின்றாரோ, தொட்ட மாத்திரத்திலேயே நன்மைகளை அளிக்கும் 'துங்கபத்ரா' நதி பிரவஹிக்கின்றதோ, அதிதிகளை பூஜிக்கும் விஷயத்தில் கற்பகவிருக்ஷங்களின் ஆற்றலையும் அற்பமாகச்செய்கின்றவர்களும், வேதசாகைகளனைவற்றையும் முற்றிலும் கற்றவர்களும், வேள்விகள் பலவற்றையும் செய்வதினால் நன்மைகளை இடையூறின்றி அனுபவிக்கின்றவர்களுமாகிய சான்றோர்கள் விளங்குகின்றனரோ, அத்தகைய சிருங்கேரிக்குப் புறப்பட்டார்.

अध्यापयामास स भाष्यमुख्यान् ग्रन्थान्निजांस्तत्र मनीषिमुख्यान् ।
आकर्णनप्राप्यमहापुमर्थानादिष्ट विद्याग्रहणे समर्थान् ॥ ६६

அங்கு புத்திசாலிகளில் சிறந்தவர்களுக்கு பாஷ்யம் முதலிய நூல்களை கற்பித்தார். வித்யையைப் பெறும் வன்மையுள்ள சிலருக்கு, கேட்பதனாலேயே பரமபுருஷார்த்தமாகிய முக்தியையளிக்கும் சக்தியுள்ள மந்திரங்களை உபதேசம் செய்தார்.

मन्दाक्षनम्रं कलयन्नशेषं पराणुदत् प्राणितमांस्यशेषम् ।
निरस्तजीवेश्वरयोर्विशेषं व्याचष्ट वाचस्पतिनिर्विशेषम् ॥ ६७

வெட்கத்தால் வித்வான்களை தலைகுனியும்படிச் செய்துகொண்டும், ஜனங்களுடைய அக்ஞானத்தை அறவே அறுத்துக்கொண்டும், ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் உண்மையாக வேற்றுமை இல்லை என்று உறுதி கூறிக்கொண்டும் பிரஹஸ்பதிபகவானுக்கு நிகராக வியாக்கியானம் செய்தார்.

प्रकल्प्य तन्त्रेन्द्रविमानकल्पं प्रासादमाविष्कृतसर्वशिल्पम् ।
प्रवर्तयामास स देवतायाः पूजामजाद्यैरपि पूजितायाः ॥ ६८

அங்கு, சிற்பசாஸ்திரத்தின் திறமையைத் திரட்டிக் காண்பிக்கின்றதும், தேவேந்திரனுடைய சபைக்குச் சமானமுமாகிய ஒரு விமானத்தைச் செய்வித்து, பிரம்மன் முதலிய தேவர்களாலும் பூஜிக்கத்தக்க பரதேவதையின் பூஜையை என்றென்றும் நடக்கும்படி நியமித்தார்.

या शारदेत्यभिधां वहन्ती कृतां प्रतिज्ञां प्रतिपालयन्ती ।
अद्यापि शृङ्गेरिपुरे वसन्ती प्रद्योततेऽभीष्टवरान् दिशन्ती ॥ ६९

எந்த தேவி 'சாரதை' என்ற பெயரை வைத்துக்கொண்டு தான் கூறிய வாக்குறுதியைக் காப்பாற்றுகிறவளாகவும், இக்காலத்திலும் சிருங்கேரியில் வசித்துக்கொண்டும், பக்தர்களுடைய விருப்பங்களை பூர்த்திசெய்து கொண்டும் விளங்குகின்றாளோ, அந்த தேவிக்கு பூஜையை தினந்தோறும் நடத்தும்படி நியமித்தார்.

चित्तानुवर्ती निजधर्मचारी भूतानुकम्पी तनुवाग्विभूतिः ।
कश्चिद्विनेयोऽजनि देशिकस्य यं तोटकाचार्यमुदाहरन्ति ॥ ७०

(குருநாதருடைய) மனதிற்கு அனுகூலமான செயல்களைச் செய்கின்றவரும், தனது கடமைகளை முறைப்படிச் செய்கின்றவரும், பிராணிகளிடம் கருணையுள்ளவரும், அற்பமாகப் பேசுகின்றவருமாகிய ஒரு சிஷ்யர் ஸ்ரீசங்கரருக்கு ஏற்பட்டார். அவரை தோடகாசாரியர் என்று கூறுகின்றனர்.

स्नात्वा पुरा क्षिपति कम्बलवस्त्रमुख्यैरुच्चासनं मृदु समं स ददाति नित्यम्।
संलक्ष्य दन्तपरिशोधनकाष्ठमग्र्यं बाह्यादिकं गतवते सलिलादिकं च ॥ ७१

ஆசாரியர் எழுவதற்கு முன் தான் எழுந்து ஸ்நானம் செய்து, தனது குருவிற்கு சுத்திசெய்துகொள்ள ஜலத்தையும் பற்குச்சியையும் அளித்து, காலத்தையறிந்து ஆக்ஞையளிப்பதற்கு முன்னமேயே கம்பளம் வஸ்திரம் முதலியவைகளால் மிருதுவான சிறந்த ஆஸனத்தையும் அமைப்பார். (காஷாயவஸ்திரம் முதலியவைகளையுமளிப்பார்.)

श्रीदेशिकाय गुरवे तनुमार्जवस्त्रं विश्राणयत्यनुदिनं विनयोपपन्नः ।
श्रीपादपद्मयुगमर्दनकोविदश्च छायेव देशिकमसौ भृशमन्वयाद्यः ॥ ७२

ஸ்ரீ பரமகுருவிற்கு உடலைத் துடைத்துக்கொள்வதற்கு சிறந்த வஸ்திரத்தையளிப்பார். பணிவுடன் பாதகமலங்களைத் தடவுவார். நிழல்போல் எப்பொழுதும் எல்லாவிதத்திலும் ஆசிரியரைப் பின்பற்றுவார்.

गुरोः समीपे न तु जातु जृम्भते प्रसारयन्नो चरणौ निषीदति ।
नोपेक्षते वा बहु वा न भाषते न पृष्ठदर्शी पुरतोऽस्य तिष्ठति ॥ ७३

குருவிற்கு ஸமீபத்தில் கொட்டாவியிடமாட்டார். எதிரில் கால்களை நீட்டிக்கொண்டு உட்காரமாட்டார். சொல்லவேண்டிய விஷயத்தைச்

சொல்வதிலும், செய்யவேண்டியதைச் செய்வதிலும் உபேக்ஷை செய்ய மாட்டார். மிதமீறிப் பேசமாட்டார். புறங்காட்டி குருவிற்கு எதிரில் நிற்கமாட்டார்.

तिष्ठन् गुरौ तिष्ठति संप्रयाते गच्छन् ब्रुवाणे विनयेन शृण्वन् ।
अनुच्यमानोऽपि हितं विधत्ते यच्चाहितं तच्च तनोति नास्य ॥ ७४

குருநாதர் நின்று கொண்டு கூறும் விஷயத்தைத் தான் நின்று கொண்டும், சென்றுகொண்டு கூறுகையில், பணிவுடன் தானும் நடந்துகொண்டும் கேட்பார். கூறுமலேயே குருவிற்கு ஹிதத்தைச் செய்வார். அஹிதத்தைச் செய்யார்.

तस्मिन् कदाचन विनेयवरे स्वशाटीप्रक्षालनाय गतवत्यपवर्तनीगाः ।
व्याख्यानकर्मणि तदागममीक्षमाणो भक्तेषु वत्सलतया विललम्ब एषः ॥ ७५

பக்தர்களிடம் அன்புள்ள இந்த ஆசிரியர், சிஷ்யர்களில் சிறந்தவராகிய அவர் (தோடகாசாரியர்), ஆசாரியருடைய வஸ்திரங்களைக் கசக்கித் துவைக்க நதிக்குச் சென்ற சமயத்தில், பாஷ்யத்தைப் பிரவசனம் செய்வதற்கு அவருடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டு தாமதம் செய்தார்.

शान्तिपाठमथ कर्तुमसंख्येषूद्यतेषु स विनेयवरेषु ।
स्थीयतां गिरिरपि क्षणमात्रादेष्यतीति समुदीरयति स्म ॥ ७६

புத்திசாலிகளாகிய மற்ற சிறந்த சிஷ்யர்களநேகர்கள் சாந்திபாடம் செய்துகொள்ள (பாஷ்யத்தின் உபதேசத்தைப் பெற்றுக்கொள்ள) தயாராக இருக்கையில் ''சிறிது பொறுங்கள், கிரியும் வந்துவிடுவான்'' என்று அந்தப் பரமாசாரியர் கூறினர்.

तां निशम्य निगमान्तगुरूक्तिं मन्दधीरनधिकार्यपि शास्त्रे ।
किं प्रतीक्ष्यत इति स्म ह भित्तिः पद्मपादमुनिना समदर्शि ॥ ७७

வேதாந்த நூல்களை உபதேசம் செய்கின்ற அத்தகைய பரமகுருவின் வசனத்தைக் கேட்டு ''புத்தியற்றவனும் சாஸ்திரத்தைக் கற்கத் தகுதியற்றவனுமாகியவன் ஏன் எதிர்பார்க்கப்படுகிறுன்?'' என்ற கருத்துடன் பத்மபாத முனிவரால் சுவர் சுட்டிக் காண்பிக்கப்பட்டது.

तस्य गर्वमपहर्तुमखर्वं स्वाश्रयेषु करुणातिशयाच्च ।
व्यादिदेश स चतुर्दश विद्याः सद्य एव मनसा गिरिनाम्ने ॥ ७८

அவருடைய அதிகமான செருக்கை அறுக்கவேண்டுமென்றும் பக்தர்களிடம் அளவற்ற கருணையினுலும் அந்தப் பரமாசாரியர் 'கிரி' என்பவருக்கு உடனேயே பதினுன்கு வித்யைகளையும் மனதினுல் அருளினுர்.

सोऽधिगम्य तदनुग्रहमग्र्यं तत्क्षणेन विदिताखिलविद्यः ।
ऐट्ट देशिकवरं परतत्त्वव्यञ्जकैर्ललिततोटकवृत्तैः ॥ ७९

அந்தக் கணத்திலேயே, அந்த கிரியும் பரமாசாரியருடைய சிறந்த அருளையடைந்து, கல்விகளனைவற்றையும் அறிந்தவராக ஆத்மதத்துவத்தை

விளக்கும் இனிய தோடகவிருத்தத்திலமைக்கப்பட்ட செய்யுட்களால் பரமாசாரியரை துதித்தார்.

## கிரி கூறிய செய்யுட்களாவன

भगवन्नुदधौ मृतिजन्मजले सुखदुःखझषे पतितं व्यथितम् ।
कृपया शरणागतमुद्धर मामनुशाध्युपसन्नमनन्यगतिम् ॥ १

विनिवर्त्य रतिं विषये विषमां परिमुच्य शरीरविबद्धमतिम् ।
परमात्मपदे भव नित्यरतो जहि मोहमयं भ्रममात्ममते ॥ २

विसृजान्नमयादिषु पञ्चसु तामहमस्मि ममेति मतिं सततम् ।
दृशिरूपममनन्तमजं विगुणं हृदयस्थमवेहि सदाऽहमिति ॥ ३

जलभेदकृता बहुतेव रवेर्घटिकादिकृता नभसोऽपि यथा ।
मतिभेदकृता तु तथा बहुता तव बुद्धिदृशोऽविकृतस्य सदा ॥ ४

दिनकृत्प्रभया सदृशेन सदा जनचित्तगतं सकलं स्वचिता ।
विदितं भवताऽविकृतेन सदा यत एवमतोऽसि सदेव सदा ॥ ५

श्रीमद्देशिकपादपङ्कजयुगीमूला तदेकाश्रया
तत्कारुण्यसुधावसेकसहिता तद्भक्तिसद्वल्लरी ।
हृद्यं तोटकवृत्तवृन्तरुचिरं पद्यात्मकं सत्फलं
लेभे भोक्तुमनोतिसत्तमशुकैरास्वाद्यमानं मुहुः ॥ ८०

பரமாசாரியராகிய ஸ்ரீ சங்கரபகவத்பாதாளுடைய பாதாரவிந்தங்களையே விதையாகக்கொண்டதும், அவரையே கொழுகொம்பாகப் பெற்றதும், அவருடைய கருணையாகிய ஜலத்தினால் நனைக்கப்பட்டதுமாகிய 'ஆசாரிய பக்தி' என்ற சிறந்த கொடி அழகிய தோடகவிருத்தமென்ற காம்பில் நற்சுவையுள்ள செய்யுட்களாகிய பழத்தொகுதியை தோற்றுவித்தது. அந்தப்பழத்தொகுதி சாப்பிட விருப்பமுள்ள ஸாதுக்களாகிய கிளிகளால் நன்கு சுவைக்கப்படுகிறது.

येनौन्नत्यमवापिता कृतपदा कामं क्षमायामियं
निःश्रेणिः पदमुन्नतं जिगमिषोर्व्योम स्पृशन्ती परम् ।
वंश्या काप्यधरीकृतत्रिभुवनश्रेणी गुरूणां कथं
सेवा तस्य यतीशितुर्न विरलं कुर्वीत गुर्वी तमः ॥ ८१

உயர்ந்த ஸ்தானமாகிய முக்திசுகத்தை விரும்புகிறவர்களுக்கு மண்ணுலகத்தில் நிலைபெற்றதும், நல்ல மூங்கிலால் செய்யப்பட்டதும், (சிறந்த வம்ச முறையில் தோன்றியதும்), மூன்று உலகங்களையும் கீழ்ப்படுத்துகின்றதும்,

ஆகாயமளாவியதுமாகிய ஏணி (ஞானமார்க்கம்) எவரால் அமைக்கப்பட்டதோ அந்தப்பரமஹம்ஸ பரிவ்ராஜக பரமாசாரியருடைய சிறப்புற்ற சேவை அக்ஞானமாகிய இருளை ஏன் நீக்காது?

अथ तोटकवृत्तपद्यजातैरयमज्ञातसुपर्वसूक्तिकोऽपि ।
दययैव गुरोस्त्रयीशिरोऽर्थं स्फुटयन्नैक्षि विचक्षणः सतीर्थ्यैः ॥ ८२

பிறகு, தேவபாஷையாகிய ஸம்ஸ்கிருதபாஷையை அறியாதவராயினும் ஆசாரியருடைய அருளினுல் உபநிஷத்துக்களுடைய கருத்தை தோடக விருத்தத்திலுள்ள செய்யுட்தொகுதிகளால் விளக்குகின்ற வல்லவரான இவர் தனது ஸகபாடிகளால் காணப்பட்டார்.

अथ तस्य बुधस्य वाक्यगुम्भं निशमय्यामृतमाधुरीधुरीणम् ।
जलजांघ्रिमुखाः सतीर्थ्यवर्याः स्मयमन्वस्य सविस्मया बभूवुः ॥ ८३

பிறகு, அமிருதத்தைக்காட்டிலும் நற்சுவை நிரம்பிய அவ்வறிஞருடைய வசனங்களைக் கேட்டு, ஸகபாடிகளாகிய பத்மபாதர் முதலியவர்கள் செருக்கையகற்றி வியப்படைந்தனர்.

भक्त्युत्कर्षात् प्रादुरासन्यतोऽस्मात्पद्यान्येवं तोटकाख्यानि सन्ति
तस्मादाहुस्तोटकाचार्यमेनं लोके शिष्टाः शिष्टवंश्यं मुनीन्द्रम् ॥ ८४

பக்தியின் சிறப்பினுல் இவருடைய முகத்திலிருந்து தோடகவிருத்தச் செய்யுட்கள் தோன்றியதுபற்றி சிறந்த குலத்தில் உதித்த இவரைச் சான்றோர்கள் 'தோடகாசாரியர்' என்று கூறுகின்றனர்.

अद्यापि तत्प्रकरणं प्रथितं पृथिव्यां तत्संज्ञया लघु महार्थमनल्पनीति ।
शिष्टैर्गृहीतमतिशिष्टपदानुविद्धं वेदान्तवेद्यपरतत्त्वनिवेदनं यत् ॥ ८५

உபநிஷத்துக்களில் கூறும் பரதத்துவத்தை உணர்த்துகின்ற அந்த நூல் இக்காலத்தில் இவ்வுலகில் அந்தப் பெயருடன் (தோடகவிருத்தம்) விளங்குகின்றது. ஸரளமாகவும், உயர்ந்த கருத்துக்களையும் நீதிகளையும் உணர்த்துகின்றதும், சான்றோர்களால் சிறப்புடன் புகழப்பட்டதும், இனிய சொற்கள் அமைந்ததுமாக இருக்கிறது.

तोटकाह्वयमवाप्य महर्षेः ख्यातिमाप स दिशासु तदादि ।
पद्मपादसदृशप्रतिभावान् मुख्यशिष्यपदवीमपि लेभे ॥ ८६

அன்றுதொட்டு, அந்த 'கிரி' என்பவர் 'தோடகர்' என்ற பெயரையடைந்து, பத்து திசைகளிலும் பிரஸித்திபெற்றார். பத்மபாதருக்கு நிகரான புத்தியின் வன்மையுடையவராக சிஷ்யர்களில் சிறந்த நிலைமையையும் அடைந்தார்.

पुमर्थाश्चत्वारः किमुत निगमा ऋक्प्रभृतयः
प्रभेदा वा मुक्तेर्विमलतरसालोक्यमुखराः ।
मुखान्याहो धातुश्चिरमिति विमृश्याथ विबुधा
विदुः शिष्यान् हस्तामलकमुखराञ्छङ्करगुरोः ॥ ८७

இவர்கள் நான்கு புருஷார்த்தங்களோ, ருக்கு முதலிய நான்கு வேதங்களோ, முக்தியின் நான்கு பிரிவுகளோ, (1. ஸாலோக்யம், 2. ஸாமீப்யம், 3. ஸார்ஷ்டி = ஸமான ஐசுவரியம், 4. ஸாயுஜ்யம்) அல்லது பிரம்மதேவருடைய நான்கு முகங்களோ என்று பல யோசனைகள் செய்து, புத்திமான்கள் இவர்களை ஹஸ்தாமலகர், தோடகர், சுரேசுவரர், பத்மபாதர் என நான்கு சிஷ்யர்கள் என்று முடிவுசெய்து தெரிந்துகொண்டனர்.

स्फारद्वारप्रघाणद्विरदमदसमुल्लोलकल्लोलभृङ्गी -
सङ्गीतोल्लासभङ्गीमुखरितहरितः संपदोऽकिंपचानैः ।
निष्ठीव्यन्तेऽतिदूरादधिगतभगवत्पादसिद्धान्तकाष्ठा -
निष्ठासम्पद्विजृम्भन्निरवधिसुखदस्वात्मलाभैकलोभैः ॥ ८८

பகவத்பாதாசாரியருடைய பரமஸித்தாந்தத்தை உணருதலாகிய செல்வத்தினுல் உள்ளே நிலவும் எல்லையில்லாப் பேரானந்தத்திலேயே மிக்க விருப்பம் பெற்ற வள்ளல்களாகிய சான்ருேர்களால், அகன்ற வாயிலில் கட்டப் பட்ட மதயானைகளின் மதஜலத்தில் விருப்பம் கொண்ட வண்டுகள் ஹ்ரீங்காரம் செய்யக்கூடிய செல்வங்களனைவற்றையும் 'தூ தூ' என்று கூறிக்கொண்டு தூரத்தில் நிராகரிக்கின்றனர்.

समिन्धानो मन्थाचलमथितसिन्धूदरभव-
त्सुधाफेनाभेनामृतरुचिनिभेनाऽऽत्मयशसा ।
निरुन्धानो दृष्ट्या परमहह पन्थानमसतां
पराधृष्यैः शिष्यैररमत विशिष्यैष मुनिराट् ॥ ८९

மந்தரமலையினுல் கடையப்பட்ட பாற்கடலிலிருந்து தோன்றிய அமிருதத்தினுடைய நிறமும் சுவையும்போன்ற தூயகீர்த்தியினுல் விசேஷமாக விளங்கும் முனிசிரேஷ்டர், துஷ்டர்களுடைய நெறியை, தனது கடாக்ஷத்தினுலேயே நிராகரித்துக்கொண்டு பிறரால் தாக்கமுடியாத சிறந்த சிஷ்யர்களுடன் களிப்புற்ருர்.

इति श्रीमाधवीये तद्धस्तधात्र्यादिसंश्रयः ।
संक्षेपशङ्करजये सर्गोऽयं द्वादशोऽभवत् ॥१२॥

இவ்வாறு ஸ்ரீ மாதவாசாரியருடைய ஸ்ரீ சங்கரவிஜயச் சுருக்கத்தில்
ஹஸ்தாமலகர் முதலிய சிஷ்யர்களையடைதல் என்பதைக்
கூறும் பன்னிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

आदितः श्लोकाः 1312



# अथ त्रयोदशः सर्गः

# பதின்மூன்ருவது ஸர்க்கம்

## ब्रह्मविद्याविचारः

## பிரம்மவித்யையின் விசாரம்

ततः कदाचित् प्रणिपत्य भक्त्या सुरेश्वरार्यो गुरुमात्मदेशम् ।
शारीरकेऽत्यन्तगभीरभावे वृत्तिं स्फुटं कर्तुमना जगाद ॥ १

பிறகு ஒருநாள், சுரேசுவராசாரியர் ஆத்மஞானத்தை உபதேசஞ்செய்த பரமாசாரியரை பக்தியுடன் வணங்கி கம்பீரமான கருத்துக்கொண்ட சாரீரக பாஷ்யத்திற்கு 'விருத்தி' இயற்றுவதற்கு விருப்பங்கொண்டவராகக் கூறினர்.

मम यत्करणीयमस्ति ते त्वमिमं मामनुशाध्यसंशयम् ।
तदिदं पुरुषस्य जीवितं यदयं जीवति भक्तिमान् गुरौ ॥ २

குருவே! நான் செய்யவேண்டிய பணிவிடையை அருளுவீர்களாக. ஆசிரியரிடம் பக்தியுடன் ஜீவித்திருப்பதுதான் இவ்வுலகில் மனிதனுடைய வாழ்க்கைக்கு சிறந்த பயன் என்பதில் ஐயமில்லே.

इतीरिते शिष्यवरेण शिष्यं प्रोचे गरीयानतिहृष्टचेताः ।
मत्कस्य भाष्यस्य विधेयमिष्टं निबन्धनं वार्तिकनामधेयम् ॥ ३

இவ்வாறு சிறந்த சிஷ்யரால் கூறப்பட்டபொழுது மிகவும் மகிழ்ச்சியையடைந்து பரமாசாரியார் ''என்னுடைய பாஷ்யத்திற்கு ஒரு வார்த்திகத்தை இயற்றவேண்டும்'' என்று உத்தரவளித்தார்.

उक्तानुक्तदुरुक्तानां चिन्ता यत्र प्रवर्तते । तं ग्रन्थं वार्तिकं प्राहुर्वार्तिकज्ञामनीषिणः॥ என்று வார்த்திகத்தின் லக்ஷணம். (பாஷ்யத்தில்) கூறப்பட்டதும், கூறப்படாததும், முரணுகத் தோன்றுகிறதுமான பொருளேப்பற்றி சர்ச்சை செய்யும் நூல் 'வார்த்திகம்' என்று புத்திமான்கள் கூறுகிருர்கள் (என்று பொருள்).

द्रष्टुं सतर्कं भवदीयभाष्यं गम्भीरवाक्यं न ममास्ति शक्तिः ।
तथाऽपि भावत्ककटाक्षपाते यते यथाशक्ति निबन्धनाय ॥ ४

அநேக யுக்திகளேக்கொண்டதும், கம்பீரமான நடையிலுள்ள வாக்கியங்கள் அமைந்ததுமான தங்களுடைய பாஷ்யத்தைப் பார்ப்பதற்கே எனக்கு வல்லமையில்லே. ஆயினும், தங்களுடைய கருணேக்கடாக்ஷமிருந்தால் வியாக்கியான நூல் இயற்ற இயன்றவாறு முயலுகிறேன்.

अस्त्वेवमित्यार्यरपदाभ्यनुज्ञामादाय मूर्ध्ना स विनिर्जगाम ।
अथाम्बुजाङ्घ्रेर्दयिताः सतीर्थ्यास्तं चित्सुखाद्या रहसीत्थमूचुः ॥ ५

'சரி' என்று ஆசாரியருடைய அருளைத் தலையில் பெற்றுக்கொண்டு அவர் வெளியே சென்றார். பிறகு பத்மபாதருடைய நண்பர்களும், சகபாடிகளும் ஆகிய சித்சுகர் முதலியவர்கள் தனிமையில் ஆசிரியரிடம் இவ்வாறு கூறினர்.

योऽयं प्रयत्नः क्रियते हिताय हिताय नायं विफलत्वनर्थम् ।
प्रत्येकमेवं गुरवे निवेद्य बोद्धा स्वयं कर्मणि तत्परश्च ॥ ६

''ஹிதத்தை விரும்பி எந்த முயற்சி செய்யப்படுகின்றதோ, அது விபரீதமான அநர்த்தத்தைத் தரக்கூடும்'' என்று ஒவ்வொருவரும் ஆசாரியரிடம் அறிவித்துப் பிறகும் கூறினர். அவர் அறிஞராயினும் கர்மங்களில் கருத்துள்ளவர்.

यः सार्वलौकिकमपीश्वरमीश्वराणां प्रत्यादिदेश बहुयुक्तिभिरुत्तरज्ञः ।
कर्मैव नाकनरकादिफलं ददाति नैवं परोऽस्ति फलदो जगदीशितेति ॥ ७

கர்மம்தான் ஸ்வர்க்கம் நரகம் முதலிய பயன்களையளிக்கின்றதேயன்றி பயனளிக்கின்ற ஈசுவரன் ஒருவனில்லையென்று, பல யுக்திகளைக் கூறும் திறமை வாய்ந்த எவர் உலகத்தோருக்கெல்லாம் நன்மையையளிக்கும் பிரம்மாதிகளுக்கும் மேலான ஈசுவரனை மறுத்தாரோ, (இவர் இயற்றும் நூல் அனுகூலமாக இருக்காது).

प्रत्येकमस्य प्रलयं वदन्ति पुराणवाक्यानि स तस्य कर्ता ।
व्यासो मुनिर्जैमिनिरस्य शिष्यस्तत्पक्षपाती प्रलयावलम्बी ॥ ८

புராணவசனங்களில் ஒவ்வொன்றும் இந்த உலகத்திற்குப் பிரளயத்தைக் கூறுகின்றன. அந்தப் புராணங்களை இயற்றியவர் வியாஸமாமுனி. ஜைமினி அவருடைய சிஷ்யர். ஆகையால் அவரும் பிரளயத்தை ஒப்புக்கொண்டு அவருடைய மதத்தைப் பின்பற்றுகிறவர் என்று கூறவேண்டும்.

गुरोश्च शिष्यस्य च पक्षभेदे कथं तयोः स्याद्गुरुशिष्यभावः ।
तथाऽपि यद्यस्ति स पूर्वपक्षः सिद्धान्तभावस्तु गुरूक्त एव ॥ ९

குருவிற்கும் சிஷ்யருக்கும் கொள்கையில் மாறுபாடு நிலவினால் குரு சிஷ்யர்கள் என்ற உறவு நிலைக்காது. ஒருவேளை, மாறுதல் தோன்றினால் சிஷ்யருடைய மதம் பூர்வபக்ஷமாகவும், குருவினுடைய மதமே சித்தாந்தமாகவும் (முடிவாகவும்) இருப்பதுதான் சரி.

आ जन्मनः स खलु कर्मणि योजितात्मा कुर्वन्नवस्थित इहानिशमेव कर्म ।
ब्रूते परांश्च कुरुतावहिताः प्रयत्नात् स्वर्गादिकं सुखमवाप्स्यथ किं वृथाध्वे ॥ १०

பிறந்தமுதல் மனதைக் கர்மமார்க்கத்தில் பற்றுள்ளதாகச் செய்து பிறரிடமும் ''ஜாக்கிரதையாக நல்ல வேள்விகளைச் செய்து சுகரூபமான

சுவர்க்கத்தையடைவீர்களாக. வீண் மார்க்கத்தில் செல்லாதீர்கள்'' என்று கூறுகிறுர்.

एवंविधेन क्रियते निबन्धनं यदि त्वदाज्ञामवलम्ब्य भाष्यके ।
भष्यं परं कर्मपरं स योक्ष्यते मा च्यावि मूलादपि वृद्धिमिच्छता ॥ ११

இவ்வாறு எண்ணங்கொண்டவரால் தங்களுடைய ஆக்ஞைப்படி சிறந்த பாஷ்யத்திற்கு வியாக்கியான நூல் இயற்றப்படுவதாகில் அதனை கர்மமார்க்கத்தில் இணைத்துவிடுவார். வளர்ச்சியை விரும்பி வேரறுபடாமலிருக்க வேண்டுமன்றோ! (வட்டியை விரும்பி மூலதனமே அழியாமலிருக்கவேண்டும்.)

संन्यासमप्येष न बुद्धिपूर्वकं व्यधत्त वादे विजितो वशो व्यधात् ।
तस्मान्न विश्वासपदं विभाति नो मा चीकरोऽनेन निबन्धनं गुरो ॥ १२

இவர் ஸன்னியாசத்தையும் மனப்பூர்வமாகப் பெற்றுக்கொண்டவரல்லர். வாதத்தில் வெல்லப்பட்டு, தங்களுக்கு வசப்பட்டதினுல்தான் ஏற்றுக் கொண்டார். குருவே! ஆகையால் எங்களுக்கு இவரிடம் நம்பிக்கையில்லை. இவரைக்கொண்டு 'வார்த்திகம்' இயற்றச்செய்யாதீர்கள்.

यः शक्नुयात् कर्म विधातुमीप्सितं सोऽयं न कर्माणि विहातुमर्हति ।
यद्यस्ति संन्यासविधौ दुराग्रहो जात्यन्धमूकादिरमुष्य गोचरः ॥ १३

அவசியம் செய்யப்படவேண்டிய கர்மங்களைச் செய்வதற்குத் தகுதியுள்ளவன் அவைகளை விடக்கூடாது. ஸன்னியாசதர்மத்தில் பிடிவாதம் பிடிப்பதாயினும், பிறவிக்குருடர், ஊமையர் முதலிய அங்கஹீனமுள்ள வர்களுக்குத்தான் அதில் அதிகாரம்.

एवं सदा भट्टमतानुसारिणो ब्रुवन्त्यसौ तन्मतपक्षपातवान् ।
एवं स्थिते योग्यमदो विधीयतां न नोऽस्ति निर्बन्धनमत्र किञ्चन ॥ १४

இவ்வாறு பட்ட மதத்தைப் பின்பற்றுகிறவர்கள் கூறுகின்றனர். இவரும் அந்த மதத்தில் பற்றுள்ளவர். இப்படியிருக்கையில் யாது தகுந்ததோ அது செய்யப்படவேண்டும். எங்களுக்கு இந்த விஷயத்தில் ஒருவிதத்திலும் வற்புறுத்தலில்லை.

पुरा किलास्मासु सुरापगायाः पारे परस्मिन् विचरत्सु सत्सु ।
आकारयामास भवानशेषान् भक्तिं परिज्ञातुमिवास्मदीयाम् ॥ १५

முன்ஞெரு நாள் நாங்கள் எல்லோரும் கங்கையின் மறுகரையிலிருக் கும்பொழுது, எங்களுடைய பக்தியைச் சோதிப்பதற்குப்போல் தாங்கள் எங்களைக் கூப்பிட்டீர்கள்.

तदा तदाकर्ण्य समाकुलेषु नावर्थमस्माप्सु परिभ्रमत्सु ।
सनन्दनस्त्वेष वियत्तटिन्या झरीमभिप्रस्थित एव तूर्णम् ॥ १६

அதைக் கேட்டு நாங்கள் பரபரப்படைந்து ஓடத்தைத் தேடிக் கொண்டிருக்கையில் இந்த ஸனந்தனர் விரைவில் ஆகாயகங்கையின் பிரவாகத்தில் பிரயாணம் செய்தார்.

अनन्यसाधारणमस्य भावमाचार्यवर्ये भगवत्यवेक्ष्य ।
तुष्टा त्रिवर्त्मा कनकाम्बुजानि प्रादुष्करोति स्म पदे पदे च ॥ ௧௭

ஒப்புயர்வற்ற இவருடைய குருபக்தியைக் கண்டு மகிழ்ச்சியடைந்த கங்கை இவருடைய ஒவ்வொரு காலடியிலும் தங்கத்தாமரைகளைத் தோற்றுவித்தாள்.

पदानि तेषु प्रणिधाय युष्मत्सकाशमागाद्यदयं महात्मा ।
ततोऽतितुष्टो भगवांश्चकार नाम्ना तमेनं किल पद्मपादम् ॥ ௧௮

அந்தத் தாமரைகளில் காலடிகளை வைத்து இந்த மகாத்மா தங்களுடைய அருகில் வந்ததினால், பகவானாகிய தாங்கள் இவரைப் பத்மபாதர் என்று பெயரளித்து அருளினீர்கள்.

स एव युष्मच्चरणारविन्दसेवाविनिर्धूतसमस्तभेदः ।
आजानसिद्धोऽर्हति सूत्रभाष्ये वृत्तिं विधातुं भगवन्नगाधे ॥ ௧௯

அத்தகைய பத்மபாதர் தங்களுடைய பாதாரவிந்தங்களில் சேவை செய்வதினால் பேதபுத்தி விலகியவர். பிறவிமுதலேயே ஞானத்தைப் பெற்றவராகிய அவர், கம்பீரமான தங்களுடைய ஸூத்ரபாஷ்யத்திற்கு விருத்தியை இயற்றத்தகுந்தவர்.

यद्वाऽयमानन्दगिरिर्यदुग्रतपःप्रसन्ना परमेष्ठिपत्नी ।
भवत्प्रबन्धेषु यथाभिसंधि व्याख्यानसामर्थ्यवरं दिदेश ॥ ௨௦

அல்லது, இந்த ஆனந்தகிரி, அவ்வாறு செய்யத்தகுந்தவர். அவருடைய கடும் தவத்தினால் சந்தோஷமடைந்த ஸரஸ்வதிதேவி தங்களுடைய நூல்களுக்கு வியாக்கியானம் செய்யும் சக்தியை அவருக்கருளினாளன்றோ!

कर्मैकतानमतिरेष कथं गुरो ते विश्वासपात्रमभवन्ननु विश्वरूपः ।
भाष्यस्य पद्मपद एव करोतु टीकामित्यूचरे रहसि योगिवरं विधेयाः ॥ ௨௧

ஹே குருவே! கர்மமார்க்கத்தில் மனங்கொண்டவராகிய இந்த விச்வரூபர் எவ்வாறு தங்களுடைய விசுவாஸத்திற்கு உரியவரானார். பாஷ்யத்திற்கு பத்மபாதரே வியாக்கியான நூலை இயற்றட்டும் என்று யோகிகளில் சிறந்தவராகிய அவரிடம் சிஷ்யர்கள் இரகசியமாகக் கூறினர்.

अत्रान्तरेऽभ्यर्णगतः स तूर्णं सनन्दनो वाक्यमुदाजहार ।
आचार्य हस्तामलकोऽपि कल्पो भवत्कृतौ वार्तिकमेष कर्तुम् ॥ ௨௨

இந்த ஸந்தர்ப்பத்தில் ஸனந்தனர் விரைவில் அருகில் வந்து, ஆசிரியரே! இந்த ஹஸ்தாமலகரும் தங்களுடைய பாஷ்யத்திற்கு வார்த்திகம் எழுத வல்லமையுள்ளவர்.

यतः करस्थामलकाविशेषं जानाति सिद्धान्तमसावशेषम् ।
अतो ह्यमुष्मै भवतैव पूर्वमदायि हस्तामलकाभिधानम् ॥ २३

வேதாந்தசித்தாந்தங்களனைவற்றையும் கையிலுள்ள நெல்லிக்கனிபோல இவர் உணருவதால் தங்களாலேயே 'ஹஸ்தாமலகர்' என்ற பெயர் இவருக்கு அளிக்கப்பட்டுள்ளது.

वाणीं समाकर्ण्य सनन्दनस्य सामिस्मितं भाष्यकृदाबभाषे ।
नैपुण्यमन्यादृशमस्य किन्तु समाहितत्वान्न बहिः प्रवृत्तिः ॥ २४

ஸனந்தனருடைய வசனத்தைக் கேட்டு புன்முறுவல் பூத்து பாஷ்யகாரர் புகன்றார். இந்த ஹஸ்தாமலகருடைய வல்லமை ஒப்புயர்வற்றது. ஆனால் சமாதிநிஷ்டையை யடைந்தமையால் வெளிநோக்கமான முயற்சியற்றவர்.

अयं तु बाल्ये न पपाठ पित्रा नियोजितः सादरमक्षराणि ।
न चोपनीतोऽपि गुरोः सकाशादध्यैष्ट वेदान् परमार्थनिष्ठः ॥ २५

பால்யத்தில் தகப்பனாரால் ஆக்ஞாபிக்கப்பட்டபோதிலும் எழுத்துக்களைக் கற்கவில்லை. உபநயனம் செய்யப்பட்டபோதிலும், பரமாத்மனிடத்திலேயே நிஷ்டையுள்ள இவர் குருவினிடமிருந்து வேதங்களையும் ஓதவில்லை.

बालैर्न चिक्रीड न चान्नमैच्छन्न चारुवाचं ह्यवदत् कदाऽपि ।
निश्चित्य भूतोपहतं तमेनमानिन्यिरेऽस्मन्निकटं कदाचित् ॥ २६

குழந்தைகளுடன் விளையாடினதில்லை. உணவை உட்கொள்ளவில்லை. நற்சொற்களையும் ஒருபொழுதும் புகன்றவரல்லர். இவரைப் பூதம்பிடித்தவர் என்று தீர்மானம் செய்து ஒருசமயத்தில் நமது அருகில் கொணர்ந்தனர்.

अस्मानवेक्ष्यैव मुहुः प्रणम्य कृताञ्जलौ तिष्ठति बालकेऽस्मिन् ।
इमामपूर्वां प्रकृतिं विलोक्य विसिष्मिये तत्र जनः समेतः ॥ २७

நம்மைக் கண்டவுடனேயே அடிக்கடி வணங்கிக் கைகூப்பி பாலராகிய இவர் நிற்கையில் அற்புதமான இந்தப் பிரகிருதியைக் கண்டு அங்குள்ள ஜனங்கள் வியப்புற்றனர்.

कस्त्वं शिशो कस्य सुतः कुतो वेत्यस्माभिराचष्ट किलैष पृष्टः ।
आत्मानमानन्दघनस्वरूपं विस्मापयन् वृत्तमयैर्वचोभिः ॥ २८

''சிசுவே! நீ யார்? யாருடைய புதல்வன்? எங்கிருந்து வந்தாய்?'' என்று எங்களால் வினவப்பட்ட இவர், ஸச்சிதானந்தகனரூபியான ஆத்மரூபத்தை செய்யுட்களாகிய சொற்களால் விளக்கி எங்களை வியக்கும்படிச் செய்தார்.

तदा कदाऽप्यश्रुतिगोचरं तदाकर्ण्य वाग्वैभवमात्मजस्य ।
पिता प्रपद्यास्य परं प्रहर्षं सप्रश्रयां वाचमुवाच विज्ञः ॥ २९

அப்பொழுது அதற்குமுன் கேட்கப்படாத புதல்வனுடைய பேச்சுத் திறமையைச் செவியுற்று தந்தை மிகவும் மகிழ்ச்சியடைந்து அறிஞராகிய அவர் பணிவுடன் புகன்றார்.

जनैर्जडत्वेन विनिश्चितोऽपि ब्रवीति यद्येष परात्मतत्त्वम् ।
प्रज्ञोन्नतानामपि दुर्विभाव्यं किं वर्ण्यतेऽर्हन् भवतः प्रभावः ॥ ३०

பூஜிக்கத்தகுந்தவரே! ஜனங்களால் ''ஜடப்பொருள் இவன்'' என்று தீர்மானம் செய்யப்பட்டவனுயினும், தங்களுடைய ஸன்னிதானத்திஞல், சிறந்த ஞானிகளாலும் அறிதற்கரிய ஆத்மதத்வத்தைக் கூறுகிறதிஞல், தங்களுடைய மகிமை கூறத்தக்கதோ?

आ जन्मनः संसृतिपाशमुक्तः शिष्योऽस्त्वयं विश्वगुरोस्तवैव ।
प्रफुल्लराजीववने विहारी कथं रमेत क्षुरके मरालः ॥ ३१

பிறவியிலிருந்தே ஸம்ஸாரபாசத்திலிருந்து விடுபட்டவஞன இவன் உலககுருவாகிய தங்களுக்கே சிஷ்யஞக இருக்கத்தக்கவன். மலர்ந்த தாமரைக்குளத்தில் சந்தோஷமாக விளையாடும் இயல்புள்ள அன்னப்பறவை காட்டில் களிப்புறுமோ?

विज्ञाप्य तस्मिन्निति निर्गतेऽसौ तदाप्रभृत्यत्र वसत्युदारः ।
आ शैशवादात्मविलीनचेताः कथं प्रवर्तेत महाप्रबन्धे ॥ ३२

தந்தை இவ்வாறு தெரிவித்துப்போனபின் அன்றுமுதல் அந்த ஹஸ்தாமலகர் நம்முடைய அருகில் விசாலமான மனப்பான்மையுடன் வாசஞ்செய்கிருர். சிறுவயதிலிருந்தே பரமாத்மனிடம் லயமடைந்த மனமுற்ற இவர் பெரிதான நூலியற்றுவதற்கு எவ்வாறு முயலுவார்?

श्रुत्वेति पप्रच्छुरमुं विनेयाः स्वामिन् विनैव श्रवणाद्युपायैः ।
अलब्ध विज्ञानमयं कथं वा भवानिदं साधु विदांकरोतु ॥ ३३

இவ்வாறு கூறியதைக் கேட்டு சிஷ்யர்கள் 'ஸ்வாமி! சிரவணம் முதலிய முயற்சி செய்யாமலேயே இவர் உறுதியான ஆத்மஸாக்ஷாத்காரத்தை எவ்வாறு அடைந்தார்? இந்த விஷயத்தை எங்களுக்கு கருணைகூர்ந்து நன்கு விளக்குவீர்களாக'' என்று வினவினர்.

तानब्रवीत् संयमिचक्रवर्ती कश्चित् पुरा यामुनतीरवर्ती ।
बभूव सिद्धः किल साधुवृत्तः सांसारिकेभ्यः सुतरां निवृत्तः ॥ ३४

மூன்றுகாலங்களையுமறிந்த மாமுனிவர்களுடைய சக்ரவர்த்தி அவர்களிடம் கூறிஞர்:- முன்காலத்தில் தவத்திஞல் சித்தியடைந்தவரும், நல்ல சுபாவ முடையவரும், ஸம்ஸாரவியவகாரங்களிலிருந்து அறவே ஒழிந்தவருமாகிய ஒரு மகான் யமுனைநதியின் கரையில் வசித்துவந்தார்.

तस्यान्तिके काचन विप्रकन्या द्विहायनं जातु निवेश्य बालम् ।
क्षणं प्रतीक्षस्व शिशुं द्विजेति स्नातुं सखीभिः सह निर्जगाम ॥ ३५

ஒருநாள் ஒரு பிராம்மணப்பெண் இரண்டு வயதான தன்னுடைய புதல்வனை அவருடைய அருகில் வைத்து ''பிராம்மணரே! தயவுசெய்து சிறிது நேரம் இந்தக்

குழந்தையை பார்த்துக்கொள்ளுங்கள்'' என்று கூறிவிட்டு தோழிமார்களுடன் ஸ்நானத்திற்குச் சென்றாள்.

अत्रान्तरे दैववशात्स बालश्चङ्क्रम्यमाणो निपपात नद्याम् ।
मृतं तमादाय शिशुं तदीयाश्चक्रन्दुरुच्चैः पुरतो महर्षेः ॥ ३६

இந்த மத்தியில் தெய்வச்செயலாக அந்தக் குழந்தைத் தவழ்ந்து நதியில் வீழ்ந்து உயிரிழந்தது. அதை எடுத்துக்கொண்டு அதனுடைய சுற்றத்தார் மாமுனிவருடைய முன்னிலையில் பலமாகப் புலம்பினர்.

आक्रोशमाकर्ण्य मुनिः स तेषामत्यन्तखिन्नो निजथोगभूम्ना ।
प्राविक्षदङ्गं पृथुकस्य तस्य स एष हस्तामलकस्तपस्वी ॥ ३७

அவர்களுடைய அந்தப் புலம்பலைக் கேட்டு மிகவும் வருந்திய மாமுனிவர் தன்னுடைய யோகசக்தியினால் அந்தக் குழந்தையின் உடலில் புகுந்தார். அவர்தான் இந்த ஹஸ்தாமலகர் என்ற தாபஸர்.

तस्मादयं वेद विनोपदेशं श्रुतीरनन्ताः सकलाः स्मृतीश्च ।
सर्वाणि शास्त्राणि परं च तत्त्वमज्ञातमेतेन न किञ्चिदस्ति ॥ ३८

ஆகையால் இவர் உபதேசம்பெருமலேயே மறைகளனைத்தையும், ஸ்மிருதிகளையும், சாஸ்திரங்கள் ஸகலவைகளையும், சிறந்த ஆத்மதத்துவத்தையும் உணர்ந்தவர். இவர் உணராதவிஷயம் ஒன்றுமில்லை.

तत्तादृगात्मा न बहिःप्रवृत्तौ नियोगमर्हत्ययमत्र वृत्तौ ।
स मण्डनस्त्वर्हति बुद्धतत्त्वः सरस्वतीसाक्षिकसर्ववित्त्वः ॥ ३९

அத்தகைய மனவன்மையுற்ற இவர் வெளிநோக்கத்திற்கு காரணமாகிய நூலியற்றும்விஷயத்தில் நியமிப்பதற்கு தகுதியுள்ளவரல்லர். ஸரஸ்வதி ஸாக்ஷியாக இருக்கையில் ஸர்வக்ஞத்தன்மை விளக்கப்பெற்றவரும் ஆத்ம தத்துவத்தை உணர்ந்தவருமாகிய அந்த மண்டனரே இதற்குத் தகுதியுற்றவர்.

तत्तादृशात्युज्ज्वलकीर्तिराशिः समस्तशास्त्रार्णवपारदर्शी ।
आसादितो धर्महितः प्रयत्नात् स चेन्न रोचेत न दृश्यतेऽन्यः ॥ ४०

உலகில் பிரசித்தமான புகழ்பெற்றவரும், ஸகல சாஸ்திரங்களாகிய கடல்களுடையவும் கரைகண்டவரும், தர்மநெறியில் விருப்பமுள்ளவரும் ஆகிய அவர் இயற்றுவதில் விருப்பமில்லாவிடில் வேறு ஒருவரும் தகுதியுள்ளவர் காணப்படுகிறுனில்லை.

अहं बहूनामनभीष्टकार्यं न कारयिष्ये हि महानिबन्धे ।
किंचात्र संशीतिरभून्ममातो यदेककार्ये बहवः प्रतीपाः ॥ ४१

அநேகர்களுக்கு இஷ்டமில்லாத இந்த பெரிய நூலியற்றுதலை யான் செய்விக்க விரும்பவில்லை. மேலும், இந்த ஒரு விஷயத்தில் அநேகர்கள் எதிரிகளாக ஏற்பட்டது ஏன்? என்று என் மனதில் சந்தேகம் உண்டாயிற்று.

भवन्निदेशाद्भगवन् सनन्दनः करिष्यते भाष्यनिबन्धमीप्सितम् ।
स ब्रह्मचर्यादुररीकृताश्रमो मतिप्रकर्षो विदितो हि सर्वतः ॥ ४२

பகவானே! தங்களுடைய ஆக்ஞை கிடைத்தால் ஸனந்தனர் தங்களுடைய பாஷ்யத்திற்கு வியாக்கியானத்தை இயற்றுவார். பிரம்மசரியத்திலிருந்தே சன்னியாஸத்தைப் பெற்றுக்கொண்ட அவருடைய புத்திவன்மை எல்லோருக்கும் தெரிந்த விஷயம். (என்று சிஷ்யர்கள் கூறினர்.)

सनन्दनो नन्दयिता जनानां निबन्धमेकं विदधातु भाष्ये ।
न वार्तिकं तत्तु परप्रतिज्ञं व्यधात् प्रतिज्ञां स हि नूत्नदीक्षः ॥ ४३

ஸனந்தனர் ஜனங்களுக்கு ஆனந்தத்தை அளிக்கின்றவர். அவர் பாஷ்யத்திற்கு வேறு ஒரு வியாக்கியானத்தை இயற்றுவாராக. வார்த்திகத்தை எழுதவேண்டாம். அது மற்றவருக்கு வாக்களிக்கப்பட்டுள்ளது. அந்த சுரேசுவரர் புதிதான தீக்ஷையைக் கைக்கொண்டு அதனை செய்வதாக பிரதிக்ஞை கூறியுள்ளார் (என்று ஸ்ரீசங்கரர் கூறினர்).

आदिश्येत्थं शिष्यसङ्घं यतीन्द्रः प्रोवाचेत्थं नूत्नभिक्षुं रहस्तम् ।
भाष्ये भिक्षो मा कृथा वार्तिकं त्वं नेमे शिष्याः सेहिरे दुर्विदग्धाः ॥ ४४

இவ்வாறு சிஷ்யசமூகங்களுக்குக் கட்டளையிட்டு அந்தத் துறவியரசர், புதிதாக சன்னியாசம் பெற்றுக்கொண்ட சுரேசுவரரிடம் தனிமையில் கூறினர்--''சன்யாசியே! நீர் பாஷ்யத்திற்கு வார்த்திகம் எழுதவேண்டாம். கர்வங்கொண்ட இந்த சிஷ்யர்களுக்கு அது சகிக்கவில்லை.

तात्पर्यं ते गेहिधर्मेषु दृष्ट्वा तत्संस्कारं सांप्रतं शङ्कमानाः ।
भाष्ये कृत्वा वार्तिकं योजयेत्स भाष्यं प्राहुः स्वीयसिद्धान्तशेषम् ॥ ४५

இல்லறங்களில் உமது கருத்தைக்கண்டு அந்த வாசனையின் தொடர்பு இருப்பதாக ஐயங்கொண்டவர்களாய், பாஷ்யத்தைக் கர்மமார்க்கத்திற்கு அங்கமாக சித்தாந்தம் கூறுவீர் என்று நினைக்கிறார்கள்.

नास्त्येवासावाश्रमस्तुर्य इत्थं सिद्धान्तोऽयं तावको वेदसिद्धः ।
द्वारि द्वाःस्थैर्वारिता भिक्षमाणा वेश्मान्तस्ते न प्रवेशं लभन्ते ॥ ४६

வேதாந்தத்தில் கூறப்பட்டதாயினும் இந்த நான்காவது ஆசிரமம் ஒப்பத்தக்கதல்லவென்று உமது கொள்கை. பிக்ஷையை விரும்பிவந்த துறவிகள், உமது மனையின் வாயிலில் துவாரபாலகர்களால் தடுக்கப்பட்டு, உள்ளே புக அனுமதிக்கப்படவில்லை.

इत्याद्यां तां किंवदन्तीं विदित्वा तेषां नाऽऽसीत्प्रत्ययस्त्वय्यनल्पे ।
स्वातन्त्र्यात्त्वं ग्रन्थमेकं महात्मन् कृत्वा मह्यं दर्शयाध्यात्मनिष्ठम् ॥ ४७

இதுபோன்ற உலகவார்த்தையையறிந்து, அற்பத்தன்மையற்றவராயினும் உம்மிடத்தில் நம்பிக்கையில்லை. மகாத்மாவே! ஆகையால் ஆத்மதத்துவத்தை விளக்குகின்ற தனிப்பட்ட ஒரு நூலை இயற்றி எனக்குக் காண்பிப்பீராக.

विद्वन् यद्वत्प्रत्ययः स्यादमीषां शिष्याणां नो ग्रन्थसंदर्शनेन ।
इत्युक्त्वेमं वार्तिकं सूत्रभाष्ये नाभूद्धाहेत्याप खेदं च किञ्चित् ॥ ४८

''அறிஞரே! எமது இந்த சிஷ்யர்கள் உம்முடைய நூலைக் கண்டு ஐயம் நீங்கும்படி முயலுவீராக'' என்று கூறி ''ஆஹ! ஸூத்திரபாஷ்யத்திற்கு வார்த்திகம் ஏற்படவில்லையே'' என்று சிறிது வருத்தமுற்றார்.

शिष्योक्तिभिः शिथिलितात्ममनोरथोऽसावेनं स्वतन्त्रकृतिनिर्मितये न्ययुङ्क्त ।
नैष्कर्म्यसिद्धिमचिराद्विदधत्स चेत्थं न्याय्यामविन्दत सुरेश्वरदेशिकाख्याम् ॥ ४९

சிஷ்யர்களுடைய சொற்களால் தளர்ந்த விருப்பமுடையவராக ஸ்ரீ சங்கரர் இந்த மண்டனரைத் தனிப்பட்ட நூல் இயற்றும்படி நியமித்தார். அவரும் விரைவில் ''நைஷ்கர்ம்யஸித்தி'' என்ற நூலை இயற்றி ''சுரேசுவராசாரியர்'' என்ற பெயருக்குத் தகுதியுள்ளவர் என்ற பிரசித்தியைப் பெற்றார்.

नैष्कर्म्यसिद्धिमथ तां निरवद्ययुक्तिं निष्कर्मतत्त्वविषयावगतिप्रधानाम् ।
आद्यन्तहृद्यपदबन्धवतीमुदारामाद्यन्तमैक्षततरां परितुष्टचेताः ॥ ५०

குறையில்லா யுக்திவசனங்கள் நிரம்பியதும், கர்மபந்தம் விலகிய ஆத்ம தத்துவத்தையே விஷயமாகக்கொண்டதும், முதலிலிருந்து கடைசிவரையில் இனிய செய்யுட்களமைந்ததுமாகிய ''நைஷ்கர்ம்யஸித்தியை'' முதல் தொட்டு கடைசி வரையில் கண்ணுற்று ஸ்ரீ சங்கரகுருவும் மனமகிழ்ச்சியுற்றார்.

ग्रन्थं दृष्ट्वा मोदमानो मुनीन्द्रस्तं चान्येभ्यो दर्शयामास हृद्यम् ।
तेषां चाऽऽसीत्प्रत्ययस्तद्वदस्मिन् यद्वचान्यस्तत्त्वविद्यः स नेति ॥ ५१

அந்த நூலைக்கண்டு உவகைபூத்து முனிசிரேஷ்டர் மற்றவர்களுக்கும் காண்பித்தார். அவர்கள் அதைப் பார்த்து ''பாரில் இவரைப்போல் தத்துவஞானி வேறு ஒருவருமில்லை'' என்று நம்பிக்கை பெற்றனர்.

यत्राद्यापि श्रूयते मस्करीन्द्रैर्निष्कर्माऽऽत्मा यत्र नैष्कर्म्यसिद्धिः ।
तन्नाम्नाऽयं ववृधे ग्रन्थवर्यस्तन्माहात्म्यात् सर्वलोकाद्दतोऽभूत् ॥ ५२

யதீசுவரர்களால் அந்த நூலில், கர்மபந்தமற்ற ஆத்மஸ்வரூபம் கேட்கப்படுகிறது. அதனைப் பரிசீலனம் செய்வதினால் கர்மபந்தம் விலகுகின்றது. ஆகையால் அந்தப் பெயருடன் விளங்கியது. அந்த மகிமையினால் எல்லோராலும் ஆதரிக்கப்பட்டதாயிற்று.

आचार्यवाक्येण विधित्सितेऽस्मिन् विघ्नं यदन्ये व्यधुरुत्ससर्ज ।
शापं कृतेऽस्मिन् कृतमप्युदारैः तद्वार्तिकं न प्रसरेत् पृथिव्याम् ॥ ५३

ஆசாரியருடைய உத்தரவினால் செய்ய விரும்பிய வார்த்திகத்திற்கு இடையூறு விளைவித்ததினால் ''புத்திசாலிகளாகிய மற்றவர்களால் வார்த்திகம் இயற்றப்பட்டதாயினும் அது உலகில் பிரசாரமடையாமலாகுக'' என்று சாபமளித்தார்.

नैष्कर्म्यसिद्ध्याख्यनिबन्धमेकं कृत्वाऽऽत्मपूज्याय निवेद्य चाऽऽप्त्वा ।
विश्वासमुक्त्वाऽथ पुनर्बभाषे स विश्वरूपो गुरुमात्मदेवम् ॥ ५४

''நைஷ்கர்ம்யஸித்தி'' என்ற நூலை இயற்றி தன்னால் பூஜிக்கத்தக்கவராகிய ஆசாரியரிடம் ஸமர்ப்பணம் செய்து அவருடைய நம்பிக்கையையும் பெற்ற பிறகு அந்த விசுவரூபர், தன்னுடைய தெய்வமாகிய ஸ்ரீ சங்கரரிடம் பிறகும் கூறினார்.

न ख्यातिहेतोर्न च लाभहेतोर्नाप्यर्चनायै विहितः प्रबन्धः ।
नोल्लङ्घनीयं वचनं गुरूणां नोल्लङ्घने स्याद्गुरुशिष्यभावः ॥ ५५

கீர்த்திக்காகவோ, ஒரு லாபத்தைப் பெறுவதற்காகவோ, அல்லது பிறருடைய மதிப்பைப் பெறுவதற்காகவோ என்னால் இந்த நூல் எழுதப்படவில்லை. குருவின் கட்டளை கடக்கத்தக்கதன்று. குருவின் கட்டளையை மீறினால், இருவருக்கும் குரு, சிஷ்யன் என்ற ஸம்பந்தம் நிலைக்காதன்றோ.

पूर्वं गृहीत्वेऽपि न तत्स्वभावो न बाल्यमन्वेति हि यौवनस्थम् ।
न यौवनं वृद्धमुपैति तद्वत् व्रजन् हि पूर्वस्थितिमोज्झ्य गच्छेत् ॥ ५६

நான் முதலில் இல்லறத்தவனாக இருந்தபோதிலும் துறவியாக மாறின பிறகு அந்த இயல்புள்ளவனன்று. இளமையிலுள்ள செயல்கள் பருவத்திலும், காளைப்பருவநிலை முதுமையிலும் தொடருகிறதில்லை. முதல் காலை விட்டுப் பிறகு இரண்டாவது காலை வேறிடத்தில் வைக்கிறான்.

अहं गृही नात्र विचारणीयं किं तेन पूर्वं मन एव हेतुः ।
बन्धे च मोक्षे च मनोविशुद्धो गृही भवेद्वाऽप्युत मस्करी वा ॥ ५७

முன்பு நான் இல்லறத்தவனாகத்தானிருந்தேன். அதில் சந்தேகமில்லை. அதனால் என்ன கெட்டது? பந்தத்திற்கும் மோக்ஷத்திற்கும் மனம்தான் காரணம். மனதில் சுத்தமுள்ளவன் இல்லறத்தவனாகவோ, துறவறத்தவனாகவோ இருக்கலாம்.

नास्त्येव चेदाश्रम उत्तमाऽऽदिः कथं च तत्प्राप्तिनिवृत्तिगामिनौ ।
प्रतिश्रवौ नौ कथमल्पकालौ न हि प्रतिज्ञा भगवन्निरुद्धा ॥ ५८

சிறந்த பகவானே! துறவறம் இல்லை என்பது என்னுடைய உண்மையான கொள்கையாகில், சமீபகாலத்தில் நடந்த வாதத்தில் நம்முடைய பிரதிக்ஞை எவ்வாறு ஒப்பத்தகும்? தோல்வியடைகிறவர் வெற்றிபெற்றவருடைய ஆசிரமத்தை ஏற்றுக்கொள்ளுகிறது என்று ஒப்பந்தம் செய்யப்பட்டதல்லவா? ஸன்னியாசதர்மம் கிடையாது என்பது என்னுடைய உண்மையான கருத்தாயிருந்தால் அத்தகைய ஸன்னியாசத்தை ஏற்றுக்கொள்ளுவதாக யான் பிரதிக்ஞை கூறியிருப்பேனா! (மலடியின் மகளை மணம்புரிய ஒப்பந்தம் பேசுவது வழக்கமுண்டா?)

संभिक्षमाणा न लभन्त एव चेद्गृहप्रवेशं गुरुणा प्रवेशनम् ।
कथं हि भिक्षा विहिता ननूत्तमा को नाम लोकस्य मुखाभिधायकः ॥ ५९

பிக்ஷையை விரும்புகிற துறவிகள் மனைக்குள் புக அனுமதிக்கப்படாவிடில், குருநாதராகிய தாங்கள் புகுந்து நல்ல பிக்ஷையைப் பெறவில்லையா? ஊர்வாயை யார் மூட முடியும்?

तत्त्वोपदेशाद्विदितात्मतत्त्वो व्यधामहं संन्यसनं कृतात्मा ।
विरागभावान्न पराजितस्तु वादो हि तत्त्वस्य विनिर्णयाय ॥ ६०

தத்துவத்தின் உபதேசத்தைப் பெற்று, ஆத்மஞானத்தையடைந்த நான் கிருதார்த்தனாகவே துறவறத்தை ஏற்றுக்கொண்டேன். வைராக்கியம் நிலவியதினால் துறவியானதேயன்றி தோல்வியுற்றதினாலன்று. உண்மையை தெரிந்துகொள்ளுவதற்காகத்தான் தங்களுடன் வாதஞ்செய்தேன். வேறு கருத்தினாலல்ல.

पुरा गृहस्थेन मया प्रबन्धा नैयायिकादौ विहिता महार्थाः ।
इतः परं मे हृदयं चिकीर्षु त्वदङ्घ्रिसेवां न विलङ्घ्य किञ्चित् ॥ ६१

முன்பு இல்லறத்திலிருக்கையில் நியாய சாஸ்திரம் முதலியவைகளில் சிறந்த பொருளடங்கிய பெரிய நூல்களியற்றப்பட்டன. இனிமேல் தங்களுடைய பாதங்களுக்கு பணிவிடையைத் தவிர்த்து வேறு பணி செய்வதில் என்னுடைய மனதிற்கு விருப்பம் இல்லை.

श्रद्धामद्वैतचबद्धादरबुधपरिषच्छेमुषीसंनिषण्णा -
मर्वाग्दुर्वादिगर्वानलविपुलतरज्वालमालावलीढाम् ।
सिक्त्वा सूक्तामृतौघैरहह परिहसञ्जीवयस्यद्य सद्यः
को वा सेवापटुः स्याद्रणतरणविधौ सद्गुरोर्नैव जाने ॥ ६२

புதிய துஷ்டவாதிகளுடைய கர்வமாகிய அக்னியின் ஜ்வாலையினால் நாசஞ்செய்யப்பட்ட சிரத்தையை, சிரித்துக்கொண்டே இன்சொற்களாகிய அமிருதப்பொழிவினால் நனைத்து அத்வைதசாஸ்திரத்தில் ஆதரவுடன் கூடிய புத்திமான்களுடைய புத்தியை அந்த சிரத்தை நிலைகொள்ளும்படிச் செய்கின்ற ஸத்குருவாகிய தங்களுக்குப் பணிசெய்து யார்தான் கடனைத்தீர்த்துக்கொள்ள முடியும் என்பதை யான் அறியேன்.

इत्युक्त्वोपरते सुरेश्वरगुरौ तेनैव शारीरके
नो संभाव्यहहात्र वार्तिकमिति प्रौढं शुगग्निं शनैः ।
धीराग्र्यः शमयन्विवेकपयसा देवेश्वरेण त्रयी -
भाष्ये कारयितुं स वार्तिकयुगं बद्धादरोऽभून्मुनिः ॥ ६३

இவ்வாறு சுரேசுவராசாரியர் கூறிமுடித்தபொழுது பிரம்மசூத்திர பாஷ்யத்திற்கு இவருடைய வார்த்திகம் இயலவில்லையென்ற துக்கமாகிய அக்னியை தீரராகையால் விவேகமாகிய தண்ணீரைக்கொண்டு தணித்து, அந்த

சுரேசுவரரிடம் தைத்திரீயம், பிருகதாரண்யம், நரசிம்மதாபனீ என்ற மூன்று பாஷ்யங்களுக்கும், தக்ஷிணாமூர்த்திஸ்தோத்திரத்திற்கும் பஞ்சீகரணம் என்ற விஷயத்திற்கு வார்த்திகங்களை இயற்றும்படி உத்தரவளித்தார்.

மேல் கூறிய விஷயத்தை விளக்குகிறார்:-

भावानुकारिमृदुवाक्यनिवेशितार्थं स्वीयैः पदैः सह निराकृतपूर्वपक्षम् ।
सिद्धान्तयुक्तिविनिवेशिततत्स्वरूपं दृष्ट्वाऽभिनन्द्य परितोषवशादवोचत् ॥ ६४

பாஷ்யத்தின் கருத்தடங்கிய சொற்களால் விஷயத்தை வெளிப்படுத்துகின்றதும், தன்னுடைய சொற்களாலும், பூர்வபக்ஷத்தையும் சித்தாந்தத்தையும் விளக்குகின்றதுமாகிய நூலைக் கண்ணுற்று சந்தோஷத்தினால் கூறினார்.

सत्यं यदात्थ विनयिन् मम याजुषी या शाखा तदन्तगतभाष्यनिबन्ध इष्टः ।
तद्वार्तिकं मम कृते भवता प्रणेयं सचेष्टितं परहितैकफलं प्रसिद्धम् ॥ ६५

பணிவுள்ளவரே! நீர் கூறுவது உண்மை. என்னுடைய சாகையாகிய யஜுர்வேதத்திலுள்ள உபநிஷத்தின் பாஷ்யத்திற்கு உம்மால் வார்த்திகம் எழுதப்படவேண்டுமென்று என்னுடைய விருப்பம். சான்றோர்களுடைய செயல் பிறருக்கு ஹிதத்தையே பயனாகக்கொண்டதன்றோ!

तद्वत्त्वदीया खलु काण्वशाखा ममापि तत्रास्ति तदन्तभाष्यम् ।
तद्वार्तिकं चापि विधेयमिष्टं परोपकाराय सतां प्रवृत्तिः ॥ ६६

அதுபோலவே உம்முடைய சாகையாகிய காண்வசாகையின் உபநிஷத்துக்கு என்னுடைய பாஷ்யமிருக்கிறதல்லவா? அதற்கு வார்த்திகம் எழுதவேண்டும். ஸாதுக்களுடைய முயற்சி பரோபகாரத்திற்காகவன்றோ.

तत्रोभयत्र कुरु वार्तिकमार्तिहारि कीर्तिं च याहि जितकार्तिकचन्द्रिकाभाम् ।
मा शङ्कि पूर्वमिव दुःशठवाक्यरोधो मद्वाक्यमेव शरणं व्रज मा विचारीः ॥ ६७

அவ்விரண்டு பாஷ்யத்திற்கும், ஆர்த்தியை அபகரிக்கின்ற வார்த்திகத்தைச் செய்து, கார்த்திகைத்திங்களின் நிலாபோன்ற கீர்த்தியைப் பெறுவீராக. முன்போல் பிடிவாதக்காரருடைய தடையேர்ப்படும் என்று சந்தேகம் வேண்டாம். என்னுடைய சொல்லே பிரமாணம். ஐயமற்றுச்சென்று செய்வீராக.

इत्थं स उक्तो भगवत्पदेन श्रीविश्वरूपो विदुषां वपिष्ठः ।
चकार भाष्यद्वयवार्तिके द्वे ह्याज्ञा गुरूणां ह्यविचारणीया ॥ ६८

பகவத்பாதரால் இவ்வாறு கட்டளையளிக்கப்பட்ட சிறந்த விசுவரூபர் இரண்டு பாஷ்யங்களுக்கும் வார்த்திகத்தை வரைந்தார். குருவின் உத்தரவு உதறத்தக்கதல்ல.

आज्ञा गुरोरनुचरैर्न हि लङ्घनीयेत्युक्त्वा तयोर्निगमशेखरयोरुदारम् ।
निर्माय वार्तिकयुगं निजदेशिकाय निःसीमनिस्तुलनधीरुपदां चकार ॥ ६९

சிஷ்யர்கள் குருவின் கட்டளையை மறுக்கக்கூடாது என்று கருதி இரண்டு உபநிஷத்பாஷ்யங்களுக்கும் கம்பீரமாக வார்த்திகத்தை வரைந்து ஒப்புயர்வற்ற புத்தியுள்ள சுரேசுவரர் ஸ்ரீ சங்கரருக்குக் காணிக்கை செய்தார்.

सनन्दनो नाम गुरोरनुज्ञया भाष्यस्य टीकां व्यधितेरितः पराम् ।
यत्पूर्वभागः किल पञ्चपादिका तच्छेषगा वृत्तिरिति प्रथीयसी ॥ ७०

ஸனந்தனர் ஆசாரியருடைய உத்தரவின்படி பாஷ்யத்திற்கு சிறந்த வியாக்கியானம் இயற்றினார். அதனுடைய முதற்பாகத்திற்கு 'பஞ்சபாதிகை' என்றும், பின்பகுதிக்கு 'விருத்தி' என்றும் பிரசித்தி உண்டாயிற்று.

व्यासर्षिसूत्रनिचयस्य विवेचनाय टीकाभिधं विजयडिण्डिममात्मकीर्तेः ।
निर्माय पद्मचरणो निरवद्ययुक्तिदृब्धं प्रबन्धमकरोद्गुरुदक्षिणां सः ॥ ७१

வியாஸமுனிவருடைய சூத்திரத்தொகுதிகளை விவரிப்பதற்காக தன்னுடைய கீர்த்தியை விளம்பரப்படுத்தும் டீகையைச்செய்து, மாசற்ற யுக்திகள் நிரம்பிய அந்த நூலை ஆசாரியருக்கு தக்ஷிணையாக ஸமர்ப்பித்தார்.

आलोचयन्नथ तदानुगतिं ग्रहाणामूचे सुरेश्वरसमाह्वयमुपह्वरे सः ।
पञ्चैव वत्स चरणाः प्रथिता इह स्युस्तत्रापि सूत्रयुगलद्वयमेव भूम्ना ॥ ७२

அந்த ஸமயத்தில் கிரகங்களுடைய கதியை ஆலோசனை செய்து, அந்த பரமாசாரியர் சுரேசுவரரைத் தனிமையில் கூப்பிட்டுக் கூறினார் - குழந்தாய்! இந்த உலகில் இந்த டீகையின் ஐந்து பாதங்கள்தான் உலகில் பிரசித்தியைப் பெறும். அதிலும் பொதுவாக நான்கு சூத்திரங்களுடைய வியாக்கியானத்திற்குத்தான் அதிகமான பிரசாரம் நிலவும்.

प्रारब्धकर्मपरिपाकवशात् पुनस्त्वं वाचस्पतित्वमधिगम्य वसुन्धरायाम् ।
भव्यां विधास्यसितमां मम भाष्यटीकामाभूतसंलयमधिक्षिति सा च जीयात् ॥ ७३

பிராரப்தகர்மவசத்தினால் இந்த பூமியில் 'வாசஸ்பதி' என்ற பெயருடன் பிறந்து என்னுடைய பாஷ்யத்திற்கு விசேஷமான விளக்குரை உரைப்பாயாக. அது பிரளயகாலம்வரையில் இவ்வுலகில் விளங்கும்.

इत्येवमुक्त्वाऽथ यतीश्वरोऽसावानन्दगिर्यादिमुनीन् स हूत्वा ।
कुरुध्वमद्वैतपरान्निबन्धान्नित्यन्वशान्निर्ममसार्वभौमः ॥ ७४

இவ்வாறு கூறி யதீசுவரராகிய ஸ்ரீ சங்கரர் ஆனந்தகிரி முதலிய முனிவர்களையுமழைத்து, மமதையற்றவர்களுக்குச் சக்ரவர்த்தியாகிய அவர் அத்வைதமதத்தை கருத்தாகக்கொண்ட நூல்களை வரைவீர்களாக என்று ஆக்ஞையளித்தார்.

ते सर्वेऽप्यनुमतिमाप्य देशिकेन्दोरानन्दाचलमुखरा महानुभावाः ।
आतेनुर्जगति यथास्वमात्मतत्त्वाम्भोजार्कान् विशदतरान् बहून्निबन्धान् ॥ ७५

மகானுபாவர்களாகிய ஆனந்தகிரி முதலிய சிஷ்யர்கள் அனைவரும் பரமாசாரியருடைய கட்டளையை அடைந்து உலகில் ஆத்மதத்துவமாகிய மலருக்கு கதிரவன்போன்ற சிறந்த நூல் தொகுதியை தமது சக்திக்குத்தக்கபடி இயற்றினர்.

इति श्रीमाधवीये तद्वार्तिकान्तप्रवर्तनः ।
संक्षेपशङ्करजये पूर्णः सर्गस्त्रयोदशः ॥ १३ ॥

இவ்வாறு ஸ்ரீ மாதவாசாரியரியற்றிய ஸ்ரீ சங்கரவிஜயச் சுருக்கத்தில் வார்த்திகம் வரையிலுள்ள பிரம்மவித்தையைப் பிரதிஷ்டை
செய்தல் என்ற பொருளைக் கூறும்
பதின்மூன்றுவது ஸர்க்கம்
முற்றிற்று.

आदितः श्लोकाः 1387



# अथ चतुर्दशः सर्गः

## பதினான்காவது ஸர்க்கம்

### पद्मपादतीर्थयात्रावर्णनम्

### பத்மபாதருடைய தீர்த்தயாத்திரை முதலியதின் வர்ணனை

अथाब्जपात् कर्तुमनाः स तीर्थयात्रामयाचिष्ट गुरोरनुज्ञाम् ।
देया गुरो मे भगवन्ननुज्ञा देशान्दिदृक्षे बहुतीर्थयुक्तान् ॥ १

பிறகு, பத்மபாதர் தீர்த்தயாத்திரை செய்ய மனங்கொண்டவராக குருவினுடைய அனுமதியை யாசித்தார். ''குருவே! அநேகதீர்த்தங்களுடன் கூடிய தேசங்களைப் பார்க்க வேண்டுமென்ற விருப்பங்கொண்டுள்ளேன். அதற்கு அனுமதிதரவேணுமாகக் கோருகிறேன்.''

स क्षेत्रवासो निकटे गुरोर्यो वासस्तदीयाङ्घ्रिजलं च तीर्थम् ।
गुरूपदेशेन यदात्मदृष्टिः सैव प्रशस्ताऽखिलदेवदृष्टिः ॥ २

குருவினுடைய அண்மையில் வாசஞ்செய்தலே, புண்ணிய க்ஷேத்திரங்களில் வாசம். அவருடைய பாதஜலமே தீர்த்தம். அவருடைய உபதேசத்தினால் ஆத்மாவை அறிந்துகொள்ளுதலே எல்லா தேவர்களுடையவும் தரிசனமாகும்.

शुश्रूषमाणेन गुरोः समीपे स्थेयं न नेयं च ततोऽन्यदेशे ।
विशिष्य मार्गश्रमकर्शितस्य निद्राभिभूत्या किमु चिन्तनीयम् ॥ ३

பணிவிடை செய்துகொண்டு ஆசாரியருடைய அருகில் வாசஞ்செய்து கொண்டு நாட்களைக் கழிக்க வேண்டும். வேறுதேசத்திற்குச் செல்லுதல் கூடாது. வழிநடந்து களைப்படைந்தவன் துறவிக்குரியதான ஆத்மவிசாரம் செய்ய இயலாது. வழிநடந்த களைப்புடன் தூக்கமும் பாதித்தால் எவ்வாறு ஆத்மவிசாரம் செய்ய முடியும்?

द्विधा हि संन्यास उदीरितोऽयं विबुद्धतत्त्वस्य च तद्बुभुत्सोः ।
तत्त्वंपदार्थैक्य उदीरितोऽयं यत्नात्त्वमर्थः परिशोधनीयः ॥ ४

ஆத்மஞானத்தை அடைந்தவருக்கும், அடைய விரும்பியவருக்கும் என இந்த துறவறம் இருவிதமாக ஏற்பட்டுள்ளது. ஆத்மஞானத்தை யடைந்தவருக்கு விக்ஷேபங்கள் விலகியதினால் தீர்த்தயாத்திரை முதலியன பாதகத்தை விளைவிக்காது. நீங்கள் ஞானத்தைப் பெறத் துறவறம் பெற்றுள்ளீர். 'த்வம்' பதார்த்தத்தை விசாரஞ்செய்து அறிந்துகொள்ள வேண்டும். அதற்கு யாத்திரை இடையூறாகும்.

संभाव्यते क्व च जलं क्व च नास्ति पाथः
शय्यास्थलं क्वचिदिहास्ति न च क्व चास्ति ।
शय्यास्थलीजलनिरीक्षणसक्तचेताः
पान्थो न शर्म लभते कलुषीकृतात्मा ॥ ५

சிலவிடங்களில் தண்ணீர் இருக்கும், சிலவிடங்களில் அது கிடைப்பதரிது. படுக்கவிடம் சிலவிடங்களில் மட்டுமிருக்கும். சிலவிடங்களில் கிடைக்காது. படுக்குமிடம், தண்ணீர் இவைகளையே தேடுவதில் மனங்கொண்டு யாத்ரிகன் மனக்கவலைகளால் சுகமடைவதரிது.

ज्वरातिसारादि च रोगजालं बाधेत चेत्तर्हि न कोऽप्युपायः ।
स्थातुं च गन्तुं च न पारयेत तदा सहायोऽपि विमुञ्चतीमम् ॥ ६

ஜ்வரம், அதிசாரம் முதலிய வியாதி துன்புறுத்தினால் அதனை நீக்கிக் கொள்ள உபாயம் கிடைக்காமல், இருக்குமிடத்திலேயே தங்குவதற்கும், செல்லுவதற்கும் சக்தியற்றவனாக இருப்பான். உதவி செய்கிறவரும் அச்சந்தர்ப்பத்தில் கைவிடுவார்கள்.

स्नानं प्रभाते न च देवतार्चनं क्व चोक्तशौचं क्व च वा समाधयः ।
क्व चाशनं कुत्र च मित्रसंगतिः पान्थो न शाकं लभते क्षुधातुरः ॥ ७

காலையில் ஸ்நானமும், தேவபூஜையும் செய்ய இயலாது. தன்னுடைய சுத்தத்தையும் தியானத்தையும் எவ்வாறு செய்துகொள்ள முடியும்? சிலவிடங்களில் ஆகாரம் கிடைப்பதரிது. நண்பர்களுடைய ஸகவாசத்திற்கு ஸந்தர்ப்பம் நேராது. பசியினால் வருந்தி வழிப்போக்கன் சுகமடைவதரிது.

नास्त्युत्तरं गुरुगिरस्तदपीह वक्ष्ये सत्यं यदाह भगवान् गुरुपार्श्ववासः ।
श्रेयानिति प्रथमसंयमिनामनेकान् देशानवीक्ष्य हृदयं न निराकुलं मे ॥ ८

குருவாகிய தங்களுடைய வசனத்திற்கு பதில்கூற இயலாது. ஆயினும், கூறுகிறேன். பகவானாகிய தாங்கள் கூறியபடி ஆசாரியருடைய அண்மையில் வாசமே சிறந்தது. அது உண்மை. ஆயினும் முன்னோர்களாகிய யதீசுவரர்கள் வாசஞ்செய்த இடங்களைப் பார்க்காவிடின் என்னுடைய மனம் சாந்தமடையாது.

सर्वत्र न क्वापि जलं समस्ति पश्चत् पुरस्तादथवा विदुक्षु ।
मार्गो हि विद्येत न सुव्यवस्थः सुखेन पुण्यं क्व नु लभ्यतेऽधुना ॥ ९

நான்கு திசைகளிலும் உபதிசைகளிலும் எல்லாவிடங்களிலும் ஜலம் கிடைப்பதரிதுதான். வழியும் பிரயாணத்திற்கு உரியதாக இருப்பதரிது. ஆயினும் புண்ணியம் கிடைப்பது எளிதில் ஏற்படுமா?

जन्मान्तरार्जितमघं फलदानहेतो -
र्व्याध्यात्मना जनिमुपैति न नो विवादः ।
साधारणादिह च वा परदेशके वा
कर्म ह्यभुक्तमनुवर्तत एव जन्तुम् ॥ १०

முன்ஜன்மத்தில் செய்த பாபம் பயனையளிப்பதற்கு வியாதி உருவத்தில் உருக்கொள்ளுகிறது, என்பதில் ஐயமில்லை. அந்தப் பாபம் தன்னுடைய தேசத்திலும், பரதேசத்திலும் பயனளிக்கக் கிழவனையடைதல் என்பது திண்ணம். கர்மம் பயனையளிக்காமல் விடாது.

इह स्थितं वा परतः स्थितं वा कालो न मुञ्चेत् समयागतश्चेत् ।
तद्देशगत्याऽमृत देवदत्त इत्यादिकं मोहकृतं जनानाम् ॥ ११

இங்கிருந்தாலும், எங்கிருந்தாலும் ஸமயம் வந்தால் மரணம் ஒருவனையும் விடுவதில்லை. அந்த தேசத்திற்குச் சென்றதினால் தேவதத்தன் இறந்தான், என்று முதலிய பேச்சு ஜனங்களுடைய அவிவேகத்தினால் ஏற்படுகிறது.

मन्वादयो मुनिवराः खलु धर्मशास्त्रे धर्मादि संकुचितमाहुरतिप्रवृद्धम् ।
देशाद्यवेक्ष्य न तु तत्सरणिं गतानां शौचाद्यतिक्रमकृतं प्रभवेदघं नः ॥ १२

தர்மம் முதலியவை மிகப் பெரிதாக இருந்தபோதிலும் மனு முதலிய மாமுனிவர்கள் தமது நூல்களில் தேசம், காலம், பொருள், நிலைமை ஆகியவற்றை அனுசரித்துச் சுருக்கமாகச் செய்யும்படிக் கூறியுள்ளார். அதனைப் பின்பற்றிச் செய்கின்றவர்களுக்கு ஸ்நானம் முதலியவற்றில் நிலவும் குறைகள் குற்றமாகா.

दैवेऽनुकूले विपिनं गतो वा समाप्नुयाद्वाञ्छितमन्नमेषः ।
ह्रियेत नश्यदपि वा पुरस्थं तस्मिन् प्रतीपे तत एव सर्वम् ॥ १३

மனிதன், தெய்வம் அனுகூலமாகவிருந்தால், காட்டிலும் தனக்குரிய ஆகாரத்தை அடைவான். அந்த தெய்வம் எதிராகவிருந்தால் தன் முன்னுலுள்ளது காணுமல்போகும், அல்லது திருடர் முதலியவர்களால் அபகரிக்கப்படும். ஆகையால் நன்மை தீமை அனைத்தும் தெய்வச்செயலேயாகும்.

गृहं परित्यज्य विदेशगो ना सुखं समागच्छति तीर्थदृश्वा ।
गृहं गतो याति मृतिं पुरस्तात्तदागमादत्र च किं निमित्तम् ॥ १४

வீட்டைவிட்டுத் தீர்த்தயாத்திரைக்குச் சென்றவன் சுகமாக திரும்பவும் மனையை அடைகிறுன். வீட்டிலிருப்பவனேவென்றுல், யாத்திரை சென்றவன் திரும்பிவருவதற்குமுன் மரணமடைகிறுன். இதற்கு காரணம் யாது?

देशे कालेऽवस्थितं तद्विमुक्तं ब्रह्मानन्दं पश्यतां तत्र तत्र ।
चित्तैकाग्र्ये विद्यमाने समाधिः सर्वत्रासौ दुर्लभो नेति मन्ये ॥ १५

தேசத்திலும், காலத்திலும் மாறுபடாத பிரம்மானந்தத்தையனுபவிக்கின்றவர்கள் அதனை எங்கும் நிறைந்ததாக உணருவதினால், மனதின் ஒரே நிலைமையாகிய தியானநிஷ்டை எங்கும் குறைவின்றி கிட்டுமென்றே எண்ணுகிறேன்.

सत्तीर्थसेवा मनसः प्रसादिनी देशस्य वीक्षा मनसः कुतूहलम् ।
क्षिणोत्यनर्थान् सुजनेन सङ्गमस्तस्मान्न कस्मै भ्रमणं विरोचते ॥ १६

புண்ணியதீர்த்தங்களின் சேவை, மனதை சுத்தப்படுத்துகின்றது. அநேக தேசங்களைக் காணுதல் மனதிற்கு சந்தோஷத்தைத் தருகின்றது. ஸாதுக்களுடைய ஸகவாசம் அநர்த்தங்களை நீக்குகின்றது. ஆகையால், தேசயாத்திரை யாருக்குத்தான் பிரியமாகவிருக்காது?

अटाट्यमानोऽपि विदेशसङ्गतिं लभेत विद्वान् विदुषाऽभिसङ्गतिम् ।
बुधो बुधानां खलु मित्रमीरितं खलेन मैत्री न चिराय तिष्ठति ॥ १७

தேசாந்தரயாத்திரை செய்தபோதிலும் வித்வான் வித்வானுடைய ஸஹவாஸத்தையடைகிறான். அறிஞனுக்கு அறிஞன்தான் நட்புக்குரியவன். துஷ்டனுடைய நட்பு வெகுகாலம் நிலைக்காது.

समीपवासोऽयमुदीरतो गुरोर्विदेशगो यद् हृदयेन धारयेत् ।
समीपगोऽप्येष न संस्थितोऽन्तिके न भक्तिहीनो यदि धारयेद् हृदि ॥ १८

அன்னியதேசத்திற்குச் சென்றபோதிலும் மனதில் ஆசாரியரைத் தியானம் செய்தல்தான், அவருடைய சமீபத்தில் வாசஞ்செய்தலாகுமேயன்றி அவருடைய அருகில் இருந்தும் பக்தியற்றவனாக அவரை மனதில் நினைக்காமலிருத்தல் அண்மையில் வாஸஞ்செய்தலாகாது.

सुजनः सुजनेन संगतः परिपुष्णाति मतिं शनैः शनैः ।
परिपुष्टमतिर्विवेकवाञ्शनकैर्हेयगुणं विमुञ्चति ॥ १९

ஸாது, ஸாதுவுடன் சேர்ந்து மனதை வளர்த்துக்கொள்ளுகிறான். மனவளர்ச்சியுற்று விவேகமடைந்தவனாக தீயகுணங்களை காலக்கிரமத்தில் விலக்குகிறான்.

ஆசாரியர் கூறுகிறார்:-

यद्याग्रहोऽस्ति तव तीर्थनिषेवणायां विघ्नो मयाऽत्र न खलु क्रियते पुमर्थे ।
चित्तस्थिरत्वगतये विहितो निषेधो मा भूद्विशेषगमनं त्वतिदुःखहेतुः ॥ २०

உமக்கு தீர்த்தங்களைச் சேவிப்பதில் அதிகமான விருப்பமிருந்தால், உம்முடைய விருப்பத்திற்கு நான் விக்னம் விளைவிக்கவில்லை. மனதை உறுதியாக நிலைநிறுத்துவதற்காக மறுத்தல் செய்யப்பட்டது. அதிகமான துக்கத்திற்குக் காரணமான விசேஷஸஞ்சாரம் கூடாது.

नैको मार्गो बहुजनपदक्षेत्रतीर्थानि यातां
चौराध्वानं परिहर सुखं त्वन्यमार्गेण याहि ।
विप्राग्र्याणां वसतिविततिर्यत्र वस्तव्यमीष -
न्नो चेत्सार्धं परिचितजनैः शीघ्रमुद्दिष्टदेशम् ॥ २१

அநேக தேசங்களுக்கும், க்ஷேத்திரங்களுக்கும், தீர்த்தங்களுக்கும் வழிகள் அநேகங்கள் உள. திருடர்களிருக்கும் வழியை விலக்கி நல்ல வழியில் செல்ல வேண்டும். சிறந்த அந்தணர்கள் வஸிக்கும் அக்ரஹாரங்களில் சிறிதுகாலம் தங்கவேண்டும். அல்லது மிக்கப் பரிசயமுள்ளவர்களுடன் இஷ்டமான இடத்திற்கு விரைவில் செல்லவேண்டும்.

सद्भिः सङ्गो विधेयः स हि सुखनिचयं सूयते सज्जनाना -
मध्यात्मैक्ये कथास्ता घटितबहुरसाः श्राव्यमाणाः प्रशान्तैः ।
कायक्लेशं विभिन्द्युः सततभयभिदः श्रान्तविश्रामवृक्षाः
स्वान्तश्रोत्राभिरामाः परिमृषिततृषः क्षोभितक्षुत्कलङ्काः ॥ २२

சான்றோர்களுடன் ஸகவாசம் செய்ய வேண்டும். அந்த ஸகவாசம் சுகத்தை வளர்க்கும். மேலும் ஆத்மஞானத்தை விளக்கும் கதைகள் கூறப்படும். இன்சுவை நிரம்பியவையும், மரணபயத்தை நீக்குகின்றவையும், களைத்தவர் களுக்கு களைப்பாற்றும் மரங்களும், மனதையும் செவியையும் களிக்கச் செய்கின்றவையும், பசிதாகங்களைப் பறக்கடிக்கின்றவையுமாகிய அவர் களுடைய சம்பாஷணங்கள் உடல் வருத்தங்களை வேரற்றவைகளாகச் செய்யும்.

सत्सङ्गोऽयं बहुगुणयुतोऽप्येकदोषेण दुष्टो
यत् स्वान्तेऽयं तपति च परं सूयते दुःखजालम् ।
खल्वासङ्गो वसतिसमये शर्मदः पूर्वकाले
प्रायो लोके सततविमलं नास्ति निर्दोषमेकम् ॥ २३

சான்றோர்களுடைய ஸகவாசம் அநேக குணங்களுள்ளபோதிலும் ஒரு குறையுள்ளதாக இருக்கிறது. யாதெனில், இறுதியில் அது மனதில் மிகவும் வருத்தத்தை அளிக்கிறது. ஆரம்பத்தில் ஆனந்தத்தையளிப்பதாயினும் முடிவில் அவர்களுடைய பிரிவினால் வருத்தத்தையேயளிக்கின்றது. பொதுவாக உலகில் குறையில்லாப் பொருள் ஒன்றுமில்லை.

मार्गे यास्यन्न बहुदिवसान् पाथसः संग्रही स्या -
त्तस्माद्दोषो जिगमिषुपदप्राप्तिविघ्नस्ततः स्यात् ।
प्राप्योद्दिष्टं वस निरसनं तत्र कार्यस्य सिद्धे-
र्मूलाद्भ्रंशोऽभिलषितपदप्राप्त्यभावोऽन्यथा हि ॥ २४

வழியில் யாத்திரை செய்யும்பொழுது தண்ணீரைக்கூட அதிகமாகத் தயாரித்து வைத்துக்கொள்ளக்கூடாது. அதை யாராவது அபகரித்துவிட்டால் தன் பொருளை இழந்ததுபோல் வருத்தம் நிலவும். விசேஷமாகத் துறவிக்கு அது பொருளன்றோ! அந்த வருத்தம், போகவேண்டிய இடத்திற்குப் பிரயாணத்திற்குத் தடையாக நேரும். சேரவேண்டிய இடத்திற்குச் சென்று அங்குதான் வாசத்தைச் செய்ய வேண்டும். மத்தியில் தங்கினால், இஷ்டத்திற்குக் குறைவும், அனுஷ்டானங்களுக்கு இடையூறும் நிலவும்.

मार्गे चोरा निकृतिवपुषः संवसेयुः सहैव
छन्नात्मानो बहुविधगुणैः संपरीक्ष्याः प्रयत्नात् ।
देवान् वस्त्रं लिखितमथवा दुर्विधा नेतुकामा
विश्वासोऽतोऽपरिचितनृषु प्रोज्झनीयो न कार्यः ॥ २५

வழியில் திருடர்கள் மாறுவேஷத்துடன் யாத்திரிகர்கள் கூடவே பிரயாணம் செய்வார்கள். நன்கு சோதனை செய்து அவர்களை ஊடறிந்துகொள்ளவேண்டும்.

துஷ்டர்கள் துணியையும், தேவனையும், ஏட்டுச்சுவடிகளையும் அபகரிக்க விரும்புவார்கள். ஆகையால் பரிசயமில்லாதவர்களிடம் நம்பிக்கையைக் கைவிடவேண்டுமேயன்றி செய்துகொள்ளக்கூடாது.

मध्येमार्गं योजनाभ्यन्तरे वा तिष्ठेयुश्चेद्भिक्षवस्तेऽभिगम्याः ।
पूज्याः पूज्यास्तद्व्यतिक्रान्तिरुग्रा श्रेयस्कार्यं निष्फलीकर्तुमीशाः ॥ २६

மார்க்கத்தின் நடுவில் ஒரு யோஜனை தூரத்தில் யதீசுவரர்கள் இருப்பார்களேயாகில் அவர்களையணுகவேண்டும். பூஜிக்கத்தகுந்த அவர்களைப் பூஜிக்க வேண்டும். அவர்களை மீறுதல் கடினமான செயல். தகுந்தபடி பூஜை செய்யாவிடில் நன்மைக்கு தடைசெய்யும் வல்லமையுள்ளவர்கள்.

यदापदपदं सदा यतिवर स्थितं वस्तु त -
न्मतं भज मितंपचान् मनसि मा कृथाः प्राकृतान् ।
कषायकलुषाशयक्षतिविनिर्वृतः सन्मतः
सुखी चर सुखे चिरात् स्फुरति संततानन्दता ॥ २७

யதிகளில் சிறந்தவரே! யாருடைய மதம் ஆபத்திற்குக் காரணமல்லாததோ அதனைப் பின்பற்றுவீராக. அற்பர்களை மனதில் கருதாதீர். பாபங்கள் நீங்கியமையால் சந்தோஷமுற்றவராகவும், சான்றோர்களால் மதிக்கப் பட்டவராகவும் சுகமாக யாத்திரை செய்வீராக. மனதிற்கு சந்தோஷம் நிலவினால் நித்தியானந்தம் எப்பொழுதும் விளங்கிக்கொண்டிருக்கும்.

इत्थं गुरोर्मुखगुहोदितवाक्सुधां तामापीय हृष्टहृदयः स मुनिः प्रतस्थे ।
प्रस्थाप्य तं गुरुवरोऽथ सुरेश्वराद्यैः कालं कियन्तमनयत् सह शृङ्गकुध्रे ॥ २८

இவ்வாறு குருவினுடைய முகமாகிய குகையிலிருந்து பெருகிய சொல்லாகிய அமிருதத்தையருந்தி களித்த மனமுடையவராகி அந்தப் பத்மபாத முனிவர் புறப்பட்டார். குருநாதரும் அவருக்கு விடையளித்தனுப்பியபின் சுரேசுவரர் முதலியவர்களுடன் அந்த சிருங்கேரியில் சிறிது நாட்கள் வசித்தார்.

अधिगम्य तदाऽऽत्मयोगशक्तेरनुभावेन निवेद्य चाऽऽश्रवेभ्यः ।
अवलंबिततारकापथोऽसावचिरादन्तिकमाससाद मातुः ॥ २९

தனது யோகசக்தியின் வன்மையினால் தாயாருடைய நிலைமையையறிந்து, சிஷ்யர்களிடமும் விஷயத்தைக் கூறி ஆகாயநெறியாகப் புறப்பட்டு விரைவில் தாயாருடைய அருகில் சென்றார்.

तत्राऽऽतुरां मातरमैक्षतासौ ननाम तस्याश्चरणौ कृतात्मा ।
सा चैनमुद्वीक्ष्य शरीरतापं जहौ निदाघार्त इवाम्बुदेन ॥ ३०

அங்கு வருத்தமுற்ற தாயாரைக் கண்டு, கிருதார்த்தராயினும் அந்தப் பரமாசாரியர் அவர் பாதங்களில் வணங்கினார். அவரைக்கண்டகணத்திலேயே, கோடையினால் தாபமுற்றவன் கார்மேகத்தினால் தாபத்தைத் தணித்துக் கொள்ளுவதுபோல் அந்த மாது உடலிலுள்ள தாபத்தை நீக்கிக் கொண்டாள்.

(பிரம்மஞானிகளில் மிக்கச் சிறந்தவரும், அநேக சீடர்களை பிரம்மஞானிகளாகச் செய்தவரும், உலககுருவுமாகிய பரமஹம்ஸ பரிவ்ராஜகாசாரியர், தாயாரை வணங்குதல், உலகங்களுக்கு நன்னெறியைக் காண்பித்ததாகும். संन्यस्ताखिलकर्मापि पितुर्वन्द्यो हि मस्करी । सर्ववन्द्येन यतिना प्रसूर्वन्द्या प्रयत्नतः ॥ என்று ஸ்காந்தத்தில் கூறப்பட்டுள்ளது. எல்லாக் கர்மங்களை துறந்த யதீசுவரர் தன்னுடைய தகப்பனாரால் வணங்கத்தக்கவரேயாவார். எல்லோராலும் வணங்கப்பட்ட யதீசுவரர் தாயாரை பிரயத்தினபூர்வமாக வணங்கவேண்டும் என்று பொருள்.)

असावसङ्गोऽपि तदाऽऽर्द्रचेतास्तामाह मोहान्धतमोपहर्ता ।
अम्बायमस्त्यत्र शुचं जहीहि ब्रवीहि किं ते करवाणि कृत्यम् ॥ ३१

அவர் பற்றற்றவராயினும், தாயாருடைய நிலைமையைக்கண்டுக் கருணையால் அலிந்த மனமுடையவராக ஆனார். அஞ்ஞானமாகிய இருளை அகற்றுகின்ற அவர் "தாயே! இதோ யான் உள்ளேன். துக்கத்தை விட்டு விடுங்கள். யான் செய்யவேண்டியது யாது என்பதைக் கூறுவீர்களாக.

दृष्ट्वा चिरात् पुत्रमनामयं सा हृष्टान्तरात्मा निजगाद मन्दम् ।
अस्यां दशायां कुशली मया त्वं दिष्ट्याऽसि दृष्टः किमतोऽस्ति कृत्यम् ॥ ३२

வெகுகாலத்திற்குப் பின் புதல்வன் குசலமாகத் திரும்பிவந்ததைக் கண்டு, களித்தமனமுற்ற தாய் மெல்லிய குரலில் கூறினாள். இந்த நிலைமையில், உன்னை க்ஷேமமாக கண்ணுற்றபின் எனக்குச் செய்யவேண்டிய செயல் யாதுள்ளது?

इतः परं पुत्रक गात्रमेतद्वोढुं न शक्नोमि जरातिशीर्णम् ।
संस्कृत्य शास्त्रोदितवर्त्मना त्वं सद्वृत्त मां प्रापय पुण्यलोकान् ॥ ३३

அன்பார்ந்த புதல்வனே! வயதுமுதிர்ந்து ஜீர்ணமான இந்த உடலை இனிமேல் தாங்கவல்லேனல்லள். நற்செயலாற்றலுள்ளவனே! சாஸ்திரத்தில் கூறியுள்ள முறைப்படி ஸம்ஸ்காரத்தைச் செய்து என்னை புண்ணிய லோகங்களை அடையும்படிச் செய்வாயாக.

सुतानुगां सूक्तिमिमां जनन्याः श्रुत्वाऽथ तस्यै सुखरूपमेकम् ।
मायामयाशेषविशेषशून्यं मानातिगं स्वप्रभमप्रमेयम् ॥ ३४

தன்னிடம் அன்பைக்காட்டும் தாயாருடைய சொல்லைக்கேட்டு அந்தப் பரமகுரு, மாயையாகிய வியாதியற்றதும், பிரமாணங்களுக்குப் புலப்படாததும், தானகவே விளங்குகின்றதும், அளவிடமுடியாததுமாகிய சுகஸ்வரூபமான ஆத்மதத்துவத்தை உபதேசித்தார்.

उपादिशद्ब्रह्म परं सनातनं न यत्र हस्ताङ्घ्रिविभागकल्पना ।
अन्तर्बहिः संनिहितं यथाऽम्बरं निरामयं जन्मजरादिवर्जितम् ॥ ३५

கைகால் முதலிய அங்கங்களற்றதும், ஆகாயம்போல் உள்ளும் வெளியும் நிறைந்ததும், விகாரமற்றதும், முதிர்தலில்லாததும், நித்யமுமாகிய பிரம்ம வஸ்துவை உபதேசித்தார்.

सौम्यागुणे मे रमते न चित्तं रम्यं वद त्वं सगुणं तु देवम् ।
न बुद्धिमारोहति तत्त्वमात्रं यदेकमस्थूलमनण्वगोत्रम् ॥ ३६

பிரியமான காக்ஷியளிப்பவனே! குணமற்ற உருவத்தில் என் மனம் களிப்புறுகிறதில்லை. அழகிய ஸகுணமான தேவனைப்பற்றிக் கூறுவாயாக. ஸ்தூலரூபமற்றதும், சிறிய உருவமில்லாததும், குலமற்றதும், நிர்க்குணமுமாகிய தத்துவம் மனதில் பிடிபடுகிறதில்லை.

निशम्य मातुर्वचनं दयालुस्तुष्टाव भक्त्या मुनिरष्टमूर्तिम् ।
वृत्तैर्भुजङ्गोपपदैः प्रसन्नः प्रस्थापयामास स च स्वदूतान् ॥ ३७

தாயாருடைய வசனத்தைச் செவியுற்று, கருணைகொண்டவராக அவர் பக்தியுடன் 'புஜங்கம்' என்ற விருத்தத்தினால் பரமசிவனைத் துதித்தார். அவரும் மகிழ்ந்து தன்னுடைய தூதர்களையனுப்பினார்.

विलोक्य ताञ्शूलपिनाकहस्तान्नैवानुगच्छेयमिति ब्रुवत्याम् ।
तस्यां विसृज्यानुनयेन शैवानस्तौदथो माधवमादरेण ॥ ३८

சூலம், பினாகம் என்பவைகளைக் கையில்கொண்டுள்ள அவர்களைக் கண்டு, 'நான் இவர்களைப் பின்பற்றவல்லேனல்லள்' என்று தாயார் கூறுகையில் இனிய சொற்களால் அவர்களையனுப்பிப் பிறகு லக்ஷ்மியின் காமுகனாகிய விஷ்ணுவைத் துதித்தார்.

भुजगाधिपभोगतल्पभाजं कमलाङ्कस्थलकल्पिताङ्घ्रिपद्मम् ।
अभिवीजितमादरेण नीलावसुधाभ्यां चलमानचामराभ्याम् ॥ ३९

विहिताञ्जलिना निषेव्यमाणं विनतानन्दकृताऽग्रतो रथेन ।
धृतमूर्तिभिरस्त्रदेवताभिः परितः पञ्चभिरञ्चितोपकण्ठम् ॥ ४०

महनीयतमालकोमलाङ्गं मुकुटीरत्नचयं महार्हयन्तम् ।
शिशिरेतरभानुशीलिताग्रं हरिनीलोपलभूधरं हसन्तम् ॥ ४१

ஆதிசேஷனுடைய உடலில் பள்ளிகொண்டவரும், லக்ஷ்மியின் மடியிலமைந்த பாதகமலங்களுடையவரும், நீளாதேவியாலும், பூமாதேவியாலும் சாமரங்களை வீசி பக்தியுடன் உபசரிக்கப்பட்டவரும், விநதையின் மகனும் தனது வாகனமுமாகிய கருடாழ்வாரால் கைகூப்பி முன்னால் நின்று சேவிக்கப்பட்டவரும், பஞ்சாயுததேவதைகளால் உருவம்பெற்று அருகில் துதிக்கப்பட்டவரும், சிறந்த தமாலமரம்போல் அழகிய அங்கங்களமைந்தவரும், கிரீடத்தில் ஒளிவீசும் இரத்தினங்களுக்கு அழகையளிக்கின்றவரும், சூரியனை தன்னுடைய சிகரத்தில்பெற்ற இந்திரநீலமலையின் அழகை நகைக்கின்றவரும் ஆகிய திருமாலைத் துதித்தார்.

तत्तादृशं निजसुतोदितमम्बुजाक्षं चित्ते दधार मृतिकाल उपागतेऽपि ।
चित्तेन कञ्जनयनं हृदि भावयन्ती तत्याज देहमबला किल योगिवत्सा ॥ ४२

மரணகாலம் நெருங்கிய போதிலும், தன்னுடைய புதல்வர் கூறியத் தாமரைக்கண்ணராகிய அத்தகையத் திருமாலே அந்த மாது மனதில் தியானம் செய்தாள். அபலேயாயினும், அந்தத் தாமரைக்கண்ணனே மனதில் தியானம் செய்தமையால், யோகிகள் போலவே தன்னுடைய உடலே தியாகஞ்செய்தாள்.

(योगिवत्सा = யோகியை தன்னுடைய புதல்வனுகப் பெற்றவள் என்றும் கூறுதல் பொருந்தும். தான் அபலேயாயினும், தன்னுடைய புதல்வனின் மகிமையால் பேரானந்தமாகிய முக்தியை அடையத்தகுதியுள்ளவள். ஏனெனில், कुलं पवित्रं जननी कृतार्था विश्वम्भरा पुण्यवती च तेन । अपारसंवित्सुखसागरेऽस्मिल्लीनं परे ब्रह्मणि यस्य चेतः ॥ எல்லேயில்லாப் பேரானந்தக்கடலாகிய பரமாத்மனிடத்தில் சிறிதுநேரமாவது லயமடைகின்ற மனதைக்கொண்டவர் எந்தக் குலத்தில் பிறவியுறுகின்றனரோ அந்தக் குலம் பரிசுத்தமானது. அவருடைய தாயார் பயனுற்ற பிறவியடைந்தவள். (அவளுக்கு மறு பிறப்பில்லே). அத்தகையவரால் பூமி பரிசுத்தமடைகிருள் என்று சான்ருேர்களுடைய சொல். ஆகையால் யோகியைப் புதல்வனுகப்பெற்ற அந்த மாது யோகியைப்போலவே உடலேத் தியாகஞ்செய்தாள்.)

ततः शरच्चन्द्रमरीचिरोचिर्विचित्रपारिप्लवकेतनाढ्यम् ।
विमानमादाय मनोज्ञरूपं प्रादुर्बभूवुः किल विष्णुदूताः ॥ ४३

பிறகு விஷ்ணுவின் தூதர்கள், சரத்காலத்துச் சந்திரன்போல் விளங்கும் கொடிகளேயுடைய அழகிய விமானத்துடன் தோன்றினர்.

वैमानिकांस्तान्नयनाभिरामानवेक्ष्य हृष्टा प्रशशंस पुत्रम् ।
विमानमारोप्य विराजमानमनायि तैः सा बहुमानपूर्वम् ॥ ४४

கண்களேக் கவருகின்ற விஷ்ணுபக்தர்களேக் கண்ணுற்று அந்த மாது புதல்வனேப் புகழ்ந்தாள். அந்த விஷ்ணுபக்தர்களும் அந்த உத்தமியை வெகுமானத்துடன் விமானத்தில் ஏற்றிக்கொண்டு வைகுண்டலோகத்திற்கு அழைத்துச்சென்றனர்.

इयमर्चिरहर्वलक्षपक्षान् षडुदङ्मासससमानिलार्कचन्द्रान् ।
चपलावरुणेन्द्रधातृलोकान् क्रमशोऽतीत्य परं पदं प्रपेदे ॥ ४५

இந்த உத்தமி அக்னி, பகல், சுக்லபக்ஷம், உத்தராயணம், வருஷம் இவைகளுடைய அதிஷ்டானதேவர்களேயும், வாயுபகவான், சூரியன், சந்திரன், மின்னல்தேவி, வருணன், இந்திரன், பிரம்மதேவர் முதலியவர்களுடைய உலகங்களேயும் தாண்டி கிரமமாக வைகுண்டலோகத்தையடைந்தாள்.

स्वयमेव चिकीर्षुरेष मातुश्चरमं कर्म समाजुहाव बन्धून् ।
किमिहास्ति यते तवाधिकारः कितवेत्येनममी निनिन्दुरुच्चैः ॥ ४६

இந்த சங்கரர், தாயாருடைய ஸம்ஸ்காரத்தைத் தானே செய்ய விருப்பங்கொண்டவராக பந்துஜனங்களேக் கூப்பிட்டார். 'சன்னியாசியே! உமக்கு

இந்தக் காரியத்தில் உரிமையுண்டா? கபடமுள்ளவனே' என்று கூறி அவர்கள் மிகவும் நிந்தித்தனர்.

अनलं बहुधाऽर्थिताऽपि तस्मै बत नाऽऽदत्त च बन्धुता तदीया ।
अथ कोपपरीवृतान्तरोऽसावखिलांस्तानशपच्च निर्ममेन्द्रः ॥ ४७

பலவாறு பிரார்த்திக்கப்பட்டபோதிலும் அவருடைய பூர்வாச்ரமத்து உறவினர், அந்தக் காரியத்திற்கு அக்னியை அளிக்கவில்லே. பிறகு, மமதாபிமானத்தைத் துறந்தவர்களில் சிறந்தவராயினும் அவர் சினம்கொண்ட மனதுடன் அவர்களே சபித்தார்.

सञ्चित्य काष्ठानि सुशुष्कवन्ति गृहोपकण्ठे धृततोयपात्रः ।
स दक्षिणे दोष्णि ममन्थ वह्निं ददाह तां तेन च संयतात्मा ॥ ४८

பொறிகளேயடக்கிய அவர், இல்லத்திற்கு அருகில் உலர்ந்த கட்டைகளேச் சேமித்து, தண்ணீர் பாத்திரத்தையும் பெற்றவராக, வலது கையைக் கடைந்து அக்கினியை உண்டு பண்ணி அதனுல் தகனக்கிரியை செய்தார்.

न याचिता वह्निमदुर्यदस्मै शशाप तान् स्वीयजनान् सरोषः ।
इतः परं वेदबहिष्कृतास्ते द्विजा यतीनां न भवेच्च भिक्षा ॥ ४९

உறவினர் வேண்டப்பட்டும் அக்னியை அளிக்காததினுல், சினங்கொண்டவராகி, ''அந்தணர்களே! இனிமேல் உங்களுக்கு வேதங்களே ஓதுவதில் உரிமையில்லாமை நிலவுக. யதீசுவரர்களுக்கு பிக்ஷையளித்தலும் உங்களுக்கு இல்லாமலாகுக.''

गृहोपकण्ठेषु च वः श्मशानमद्यप्रभृत्यस्त्विति ताञ्शशाप ।
अद्यापि तद्देशभवा न वेदमधीयते नो यमिनां च भिक्षा ॥ ५०

'இன்றுமுதல் இல்லங்களின் அண்டையிலேயே உங்களுக்கு வன்காடு ஏற்படட்டும்' என்றும் சாபமளித்தார். இப்பொழுதும் அந்த தேசத்தியவர் வேதமோதுவதில்லே; யதீசுவரர்களுக்குப் பூஜையும் அங்கு நிலவுகிறதில்லே.

तदाप्रभृत्येव गृहोपकण्ठेष्वासीच्छ्मशानं किल हन्त तेषाम् ।
महत्सु धीपूर्वकृतापराधो भवेत् पुनः कस्य सुखाय लोके ॥ ५१

அதுமுதல், அவர்களுடைய இல்லங்களுக்கண்டையிலேயே அவர்களுக்கு வன்காடும் ஏற்பட்டது. அந்தோ! சான்ருேர்களுக்கு மனப்பூர்வமாகத் தீங்கு செய்தால் யார்தான் உலகில் சுகமடைவார்?

शान्तः पुमानिति न पीडनमस्य कार्यं शान्तोऽपि पीडनवशात् क्रुधमुद्वहेत् सः ।
शीतः सुखोऽपि मथितः किल चन्दनद्रुस्तीव्राहुताशजनको भवति क्षणेन ॥ ५२

ஒரு மனிதன் மிகச் சாந்தகுணமுடையவன் என்று கருதி அவனுக்குத் துன்பத்தைத் தரக்கூடாது. அவ்வாறு துன்பத்தைத் தந்தால், சாந்தமானவனுகிலும் அவன் சினம் கொள்வான். சந்தனமரம் சாந்தமும் சுகத்தையளிப்பதுமாயினும் உரசப்பட்டால் கடுமையான தீயை உடனே உண்டாக்குகின்றது.

यद्यप्यशास्त्रीयतया विभाति तेजस्विनां कर्म तथाऽप्यनिन्द्यम् ।
विनिन्द्यकृत्यं किल भार्गवस्य ददुः स्वपुत्रान् कतिचिद्वृकाय ॥ ५३

மகிமையுடையவர்களுடைய செயல், நம்முடைய பார்வையில், நூல்களுக்கு முரணுக விளங்குகிறதாயினும் அது மாசற்றதேயாகும். பரசுராமர் சகோதரர்களைக் கொன்ருர். வேறு சிலர், தம்முடைய புதல்வர்களை ஓநாய்க்குப் பலியிடுவதுபோல் யமனுக்கு அளித்தனர்.

इति स्वजननीमसौ मुनिजनैरपि प्रार्थितां
पुनः पतनवर्जितामतनुसौख्यसंदोहिनीम् ।
यतिक्षितिपतिर्गतिं वितमसं स नीत्वा तत-
स्ततोऽन्यमतशातने प्रयतते स्म पृथ्वीतले ॥ ५४

இவ்வாறு அந்த ஸ்ரீ சங்கரர் முனிஜனங்களாலும் விரும்பப்பட்டதும், மறுபிறப்பையளிக்காததும், அளவில்லா ஆனந்தத்தைச் சுரக்கின்றதும், இருளில்லாததுமாகிய வைகுண்டபதத்தைத் தாயாருக்களித்து, பிறகு பூமியில் பிறருடைய கொள்கைகளைக் கண்டனம் செய்ய முயன்ருர்.

अथ तत्सहायजलजाङ्घ्रयुपागमेच्छुरभीप्सितेऽत्र विललम्ब एषकः ।
जलाजाङ्घ्रिरप्यथ पुरा निजाज्ञया कृतवानुदीच्यबहुतीर्थसेवनम् ॥ ५५

அன்னிய மதங்களை நிராகரிக்கப் பத்மபாதருடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டு இந்தக் காலடி க்ஷேத்திரத்தில் தனிமையாக வாசம் செய்தார். பத்மபாதரும் ஆசிரியருடைய உத்தரவின்படி, வடதிசையில் அநேக தீர்த்த ஸ்தலங்களைச் சேவித்தார்.

आससाद शनकैर्दिशं मुनिर्यस्य जन्म वसुधाघटी स्मृता ।
सा श्रुतिः सकलरोगनाशिनी योऽपिबज्जलधिमेकबिन्दुवत् ॥ ५६

எவருக்குப் பிறந்தவிடம் குடமோ, எவருடைய பெயர் கேட்ட மாத்திரத்திலேயே எல்லா வியாதிகளையும் நாசம் செய்கின்றதோ, எவர் சமுத்திர ஜலத்தை ஒரு துளிபோல் குடித்தனரோ அந்த அகஸ்தியமுனிவருடைய தேசத்திற்கு (தென்திசைக்குச் சென்றனர்.)

अद्राक्षीत्सुभगाहिभूषिततनुं श्रीकालहस्तीश्वरं
लिङ्गे सन्निहितं दधानमनिशं चान्द्रीं कलां मस्तके ।
पार्वत्या करुणारसार्द्रमनसाऽऽश्लिष्टं प्रमोदास्पदं
देवैरिन्द्रपुरोगमैर्जय जयेत्याभाष्यमाणं मुनिः ॥ ५७

அவ்விடத்தில், அழகிய அரவினுல் அலங்காரம் செய்யப்பட்டவரும், சிரஸ்ஸில் சந்திரக்கலையையணிந்தவரும், கருணை நிரம்பிய மனம்கொண்ட பார்வதிதேவியினுல் ஆலிங்கனம் செய்யப்பட்டவரும், பிரேமை நிரம்பியவரும், இந்திரன் முதலிய தேவர்களால் 'ஜய ஜய' என்று புகழப்பட்டவருமாகிய காளஹஸ்தீசுவரலிங்கமூர்த்தியை தரிசனம் செய்தார்.

स्नात्वा सुवर्णमुखरीसलिलाशयेऽन्तर्गत्वा पुनः प्रणमति स्म शिवं भवान्या ।
आनर्च भावकुसुमैर्मनसा नुनाव स्तुत्वा च तं पुनरयाचत तीर्थयात्राम् ॥ ५८

ஸுவர்ணமுகரீநதியில் ஸ்நானம் செய்து, பிறகு பார்வதீஸமேதரான பரமேசுவரனை வணங்கி, மனதை அர்ப்பணம் செய்தலாகிய மலர்ப்பூஜையைச் செய்து, மனதினால் துதித்து, மேலும் தீர்த்தயாத்திரைக்கு அனுமதியருளும்படி பிரார்த்தித்தார்.

लब्ध्वाऽनुज्ञां तज्ज्ञराट् कालहस्तिक्षेत्रात् काञ्चीक्षेत्रमागात् पवित्रम् ।
संसाराब्धिं संतितीर्षोः प्रसिद्धं वृद्धाः प्राहुर्यद्धि लोके ह्यमुष्मिन् ॥ ५९

ஆத்மஞானிகளுக்கரசராகிய அவர், அவரிடமிருந்து அனுமதிபெற்று, அந்தக் காளஹஸ்தியிலிருந்து பரிசுத்தமான காஞ்சிக்குச் சென்றார். ஸம்ஸாரக்கடலைத் தாண்ட விரும்புகிறவனுக்கு மறுமைசுகத்தையளிக்கும் வன்மையுள்ளது என்று, சான்றோர்கள் அந்தக் காஞ்சியைப் புகழுகின்றனர்.

तत्रैकाम्राधीश्वरं विश्वनाथं नत्वा गम्यं स्वीयभाग्यातिशीत्या ।
देवीं धामान्तर्गतामन्तकारेर्हार्दं रुद्रस्येव जिज्ञासमानाम् ॥ ६०

कल्लालेशं द्राक्ततो नातिदूरे लक्ष्मीकान्तं संवसन्तं पुराणम् ।
कारुण्यार्द्रस्वान्तमन्तादिशून्यं दृष्ट्वा देवं संतुतोषैकभक्त्या ॥ ६१

அங்கு, மிருத்யுவை வென்றவராகிய பரமசிவனுடைய உள்ளத்தையறிய விரும்பியவள்போல் அந்த லிங்கத்திலேயே உட்புகுந்து விளங்கும் தேவியுடன்கூடிய ஏகாம்பரேசுவரரையும், ஸமீபத்தில், அனாதிகாலத்திலிருந்தே அருளியிருக்கும், கருணை நிரம்பியவரும், உற்பத்தி நாசங்கள் அற்றவரும், லக்ஷ்மீநாயகருமாகிய கல்லாலேசுவரப்பெருமாளையும், பாக்கிய விசேஷத்தினால் தரிசித்து, பக்தியுடன் துதித்தார்.

पुण्डरीकपुरमाययौ मुनिर्यत्र नृत्यति सदाशिवोऽनिशम् ।
वीक्षते प्रकुतिरादिमा हृदा पार्वतीपरिणतिः शुचिस्मिता ॥ ६२

பார்வதி என்ற பெயருடன் உருவமெடுத்து விளங்கும் பிரகிருதிதேவி, புன்னகைபூத்துக் கண்ணுறுகையில், பரமசிவன் எந்த இடத்தில் எப்பொழுதும் ஆனந்தநடனம் செய்கின்றனரோ, அந்தச் சிதம்பரக்ஷேத்திரத்திற்கு வந்தார்.

ताण्डवं मुनिजनोऽत्र वीक्षते दिव्यचक्षुरमलाशयोऽनिशम् ।
जन्ममृत्युभयभेदि दर्शनान्नेत्रमानसविनोदकारकम् ॥ ६३

அந்த க்ஷேத்திரத்தில், ஞானக்கண்ணைப் பெற்றவர்களும், பரிசுத்த மனமுடையவர்களுமான முனிவர்கள் பிறப்பிறப்புகளாலுள்ள பீதியை அகற்றுகின்றதும், கண்களையும் மனதையும் களிப்புறச்செய்கின்றதுமாகிய ஆதிக்கடவுளுடைய ஆனந்தத் தாண்டவத்தை எப்பொழுதும் கண்டு களிக்கின்றனர்.

किंचात्र तीर्थमिति भिक्षुगणेन कश्चित् पृष्टोऽब्रवीच्छिवपदाम्बुजसक्तचित्तः ।
संप्रार्थितः करुणयाऽस्मरदत्र गङ्गां देवोऽथ संन्यधित दिव्यसरित् सुतीर्थम् ॥ ६४

இங்கு, தீர்த்தம் யாது என்று, பத்மபாதருடைய நண்பர்களாகிய யதிகளால் வினவப்பட்டபொழுது, சிவபெருமானுடைய பாதகமலங்களில் பற்றுள்ளவராகிய ஒரு பக்தர் புகன்றார் -- ''பக்தர்களால் பிரார்த்திக்கப்பட்ட சிவபெருமான், கங்கையை நினைத்தார். அவ்வமயம், கங்காதேவி இவ்விடத்தில் தீர்த்தத்தைத் தோற்றுவித்தாள்.

शिवाज्ञयाऽभूदिति तीर्थमेतच्छिवस्य गङ्गां प्रवदन्ति लोके ।
स्नानादमुष्यां विधुतोरुपापाः शनैः शनैस्ताण्डवमीक्षमाणाः ॥ ६५

சிவனுடைய ஆக்ஞையினால் தோன்றியது பற்றி உலகில் இதனை 'சிவகங்கை' என்று கூறுகின்றனர். இதில் ஸ்நானம் செய்வதினால் பாபம் நீங்கியவர்களாக, காலக்கிரமத்தில் நடராஜருடைய நர்த்தனத்தைக் காண்கின்றனர்.

शिवस्य नाट्यश्रमकर्शितस्य श्रमापनोदाय विचिन्तयन्ती ।
शिवेति गङ्गापरिणामगाऽभूत्ततोऽथवैतत्प्रथितं तदाख्यम् ॥ ६६

நடனம் செய்ததினால் களைப்புற்ற பரமனுடைய களைப்பாற்றுவதற்கு நாயகியாகிய பார்வதீதேவியே (சிவை) இவ்வாறு தீர்த்த உருவத்தையுற்றாள் என்ற காரணத்தினாலாவது 'சிவகங்கை' என்ற பெயர் பிரசித்தி பெற்றது. (சிவை+கங்கை).

नृत्यत्तीरहतस्खलज्जलगतेः पर्यापतद्बिन्दुकं
पार्श्वे स्वावसतेर्विनोदवशतो यज्जह्नुकन्यापयः ।
नृत्यं तन्वति धूर्जटौ विगलितं प्रेङ्खज्जटामण्डला-
त्तेनैतच्छिवजाह्नवीति कथयन्त्यन्ये विपश्चिज्जनाः ॥ ६७

அருகாமையில், ஆனந்தத் தாண்டவம் செய்கையில் பரமசிவனுடைய ஜடையிலிருக்கும் கங்காஜலம் ததும்பி இந்தத் தீர்த்தத்தில் விழுந்ததுபற்றி இது சிவகங்கை என்று வேறு சில அறிஞர்கள் கூறுகின்றனர்.

स्नायंस्नायं तीर्थवर्येऽत्र नित्यं वीक्षंवीक्षं देवपादाब्जयुग्मम् ।
शोधंशोधं मानसं मानवोऽसौ वीक्षेतेदं ताण्डवं शुद्धचेताः ॥ ६८

மண்ணுலகில் பிறந்தவன் இந்தத் தீர்த்தத்தில் குளிக்கக்குளிக்க, தேவருடைய பாதகமலங்களிரண்டினையும் காண்கின்றான். அவைகளைக்காணும் தோறும் மனது சுத்தமாகின்றது. மனது சுத்தமாகும்தோறும் ஆனந்தத் தாண்டவத்தைப் பார்க்கின்றான்.

शुद्धं महद्वर्णयितुं क्षमेत पुण्यं पुरारिः स्वयमेव तस्य ।
निमज्ज्य शम्भुद्युसरित्यमुष्यां दाक्षायणीनाथमुदीक्षते यः ॥ ६९

இந்த சிவகங்கையில் ஸ்நானம் செய்து, தாக்ஷாயணியின் நாயகராகிய சிவபெருமானை எவன் காண்கின்றானோ, அத்தகைய புண்ணியபுருஷனுடைய சிறந்த தூய புண்ணியத்தின் வன்மையை அந்த புராரியாகிய பரமசிவனே புகல வல்லவன்.

इतीरितः शङ्करयोजितात्मा केनापि भिक्षुर्मुदितो जगाहे ।
तीर्थं तदाप्लुत्य ननाम शम्भोरङ्घ्रिं जितात्मा भुवनस्य गोप्तुः ॥ ௭௦

இவ்வாறு ஒருவரால் கூறப்பட்டபொழுது, பொறிகளையடக்கிய அந்த யதீசுவரராகிய பத்மபாதர், உவகையுண்டு அந்தத் தீர்த்தத்தில் மூழ்கி எழுந்து, உலகங்களனைவற்றையும் பாதுகாக்கின்றவரும், சுகத்தையளிக்கின்றவருமாகிய பரமசிவனுடைய பாதகமலங்களை வணங்கினார்.

रामसेतुगमनाय संदधे मानसं मुनिरनुत्तमः पुनः ।
वर्त्मनि प्रयतमानसो व्रजन् संददर्श सरितं कवेरजाम् ॥ ௭௧

பிறகு, ஒப்பற்ற முனிவராகிய அவர் இராமசேதுவிற்குப் போக மனங்கொண்டார். பரிசுத்த மனமுடையவராகிய அவர் வழியில் காவேரி நதியைக் கண்ணுற்றார்.

यत्पवित्रपुलिनस्थलं पयःसिन्धुवासरसिकाय विष्णवे ।
अभ्यरोचत हिरण्यवाससे पद्मनाभमुखनामशालिने ॥ ௭௨

பாற்கடலில் வாசம் செய்வதில் விருப்பம் கொண்டவராயினும், எங்கும் வியாபகராயினும், பீதாம்பரதாரியும், பத்மநாபன் முதலிய பெயர்களால் விளங்குகிறவருமாகிய பகவானுக்கு எந்தக் காவேரியின் பரிசுத்த மணல் திட்டு வாசத்திற்கு விருப்பத்தை வளர்க்கின்றதோ, (அப்படிப்பட்ட காவேரி நதியைக் கண்டார்.)

सह्यपर्वतसुतातिनिर्मलाम्भोभिषिक्तभगवत्पदाम्बुजे ।
आकलय्य बहुशिष्यसंवृतः प्रास्थिताभिरुचितस्थलाय सः ॥ ௭௩

அந்தக் காவேரிஜலத்தினால் அபிஷேகம் செய்யப்பட்ட பகவானுடைய பாதகமலங்களை மனதில் தியானம் செய்துக்கொண்டு, விரும்பப்பட்ட அந்த இடத்திற்கு (ஸ்ரீரங்கத்திற்கு) அநேக சிஷ்யர்களுடன் கூடியவராகப் புறப்பட்டார்.

गच्छन् गच्छन् मार्गमध्येऽभियातं गेहं भिक्षुर्मातुलस्याऽऽजगाम ।
दृष्ट्वा शिष्यैस्तं चिरेणाभियातं मोदं प्रापन्मातुलः शास्त्रवेदी ॥ ௭௪

சென்றுகொண்டிருக்கையில் வழியின் மத்தியில் சந்திக்க நேர்ந்த (தன்னுடைய பூர்வாச்ரமத்து) மாமனுடைய வீட்டில் புகுந்தார். சாஸ்திரங்களைக் கற்றறிந்த மாமனும், வெகுகாலத்திற்குப் பிறகு, சிஷ்யர்களுடன் வந்த அவரைக் கண்டு உவகைகொண்டார்.

शुश्राव तं बन्धुजनः सशिष्य स्वमातुलागारमुपेयिवांसम् ।
आगत्य दृष्ट्वा चिरमागतं तं जहर्ष हर्षातिशयेन साश्रुः ॥ ௭௫

தன்னுடைய மாமன் கிருஹத்திற்கு, வெகு நாட்களுக்குப் பின் சிஷ்யர்களுடன் வந்த அவரைக் கண்டு உறவினர் சந்தோஷமடைந்தனர். ஆனந்தக்கண்ணீர் பெருக்கினர்.

रुरोद कश्चिन्मुमुदेऽत्र कश्चिज्जहास पूर्वावरितं बभाषे ।
कश्चित्प्रमोदातिशयेन किञ्चिद्वचः स्खलद्गीः प्रणनाम कश्चित् ॥ ௭௬

உறவிற்குத் தக்கவாறு ஒருவன் அழுதான்; ஒருவன் உவந்தான்; மற்ருெருவன் நகைத்தான்; வேருெருவன் முன்காலத்துச் செய்கையைக் கூறினுன்; மற்றுமொருவன் சந்தோஷம் பொங்கத் திக்கித்திக்கிப் பேசினுன்; இன்னுமொருவன் வணங்கினுன்.

ऊचेऽथ तं ज्ञातिजनः प्रमोदी दृष्ट्वा चिरायाक्षिपथं गतोऽभूः ।
दिदृक्षते त्वां जनताऽतिहार्दात्तथाऽपि शक्नोषि न वीक्षणाय ॥ ௭௭

பிறகு தாயாதிகள் உவகையுடன் உரைத்தனர்:- ஸ்வாமீ! வெகுகாலத்திற்குப் பிறகு எங்களுக்கு தரிசனம் அளித்துள்ளீர். உறவினர்கள் நட்பினுல் தங்களைப் பார்க்கவேண்டுமென்ற ஆவலுடன் வெகுநாட்களாக எதிர்பார்த்தும் அந்த பாக்கியத்தைத் தாங்கள் அளிக்கவில்லை.

पुत्राः समित्रा न न बन्धुवर्गो न राजबाधा न च चोरभीतिः ।
कृतार्थतामूलपदं यतित्वं प्रसूनवन्तं फलितं महान्तम् ॥ ௭௮

शाखोपशाखाञ्चितमेव वृक्षं बाधन्त आगत्य न तद्विहीनम् ।
यथा तथा वा धनिनं दरिद्रा बाधन्त आगत्य दिने दिने स्म ॥ ௭௯

துறவறம் கிருதார்த்தத்தன்மைக்குக் காரணமாகவுள்ளது. புதல்வர்களில்லை; நண்பர்களில்லை; உறவினரில்லை; ஆகையால் அவர்கள்மூலமாக துன்பங்களுமில்லை; அரசர்களுடைய துன்பம் கிடையாது; திருடர்களிடமிருந்து பீதியும் கிடையாது. காய்த்துப் பழுத்துத் தாவுகள் பல நிரம்பிய பெரிதான மரத்தையடைந்து ஜனங்கள் துன்புறுத்துவதுபோல், செல்வமுள்ள இல்லறத்தவனை வறுமையினர் வந்தடைந்து தினந்தோறும் துன்புறுத்துகின்றனர்.

कुटुम्बरक्षागतमानसानामायाति निद्राऽपि सुखं न जातु ।
क्व देवतार्चा क्व च तीर्थयात्रा क्व वा निषेवा महतां भवेन्नः ॥ ௮௦

குடும்பத்தைப் பாதுகாக்க மனம்கொண்ட ஜனங்களுக்கு தூக்கம் கிடையாது. ஒருபொழுதும் சுகமும் கிடைக்காது. எங்களுக்குத் தேவர்களைப் பூஜைசெய்ய ஸந்தர்ப்பம் எங்கே? தீர்த்தயாத்திரை எவ்வாறு நிலவும்? சான்ருேர்களுக்குப் பணிவுசெய்தலும் எவ்வாறு கிடைக்கும்?

अश्रौष्म संन्यासकृतं भवन्तं विप्रात् कुतश्चिद्गृहमागतान्नः ।
कालोऽत्यगात्ते बहुरद्य दैवात्तीर्थस्य हेतोर्गृहमागतस्त्वम् ॥ ௮௧

எமது இல்லத்திற்கு வந்த ஒரு அந்தணர் வாயிலாகத் தங்களைத் துறவறம் பெற்றவராகக் கேள்வியுற்ருேம். அப்படி யாம் கேள்வியுற்று காலம் வெகு

சென்றுவிட்டது. தெய்வச் செயலாக, தீர்த்தயாத்திரை காரணமாக எமது இல்லத்திற்கு வந்தருள் செய்தீர்கள்.

यथा शकुन्ताः परवर्धितान् द्रुमान् समाश्रयन्ते सुखदांस्त्यजन्त्यपि ।
परप्रक्लृप्तान् मठदेवतागृहान्यतिः समाश्रित्य तथोज्झति ध्रुवम् ॥ ८२

பிறரால் வளர்க்கப்பட்டு காய், பழம், நிழல் முதலியவைகளால் சுகத்தையளிக்கின்ற மரங்களையணுகிப் பறவைகள் சிறிது நேரம் அவைகளில் தங்கிப் பிறகு எவ்வாறு விட்டுச் செல்லுகின்றனவோ, அதுபோலவே துறவியும் மற்றவர்களால் கட்டியமைக்கப்பட்ட மனைகள், மடங்கள், கோயில்கள் முதலிய இடங்களில் தங்கிப் பிறகு நிச்சயமாக அவைகளை விட்டுப் புறப்படுகின்றார்.

यथा हि पुष्पाण्यभिगम्य षट्पदाः संगृह्य सारं रसमेव भुञ्जते ।
तथा यतिः सारमवाप्नुवन् सुखं गृहाद्गृहादोदनमेव भिक्षते ॥ ८३

அவ்வாறு இல்லங்களுக்குச் சென்றபோதிலும் துறவிக்குத் துன்பங்கள் கிடையா. ஏனெனில், வண்டுகள் மலர்களில் அமர்ந்து அதனுடைய ரசத்தை, மலர்களுக்குக் கெடுதியேர்ப்படாமல் எவ்வாறு அருந்துகின்றனவோ, அவ்வாறே யதியும் இல்லங்கள் தோறும் சென்றபோதிலும், அங்குள்ளவர்களுக்கு நன்மையும் சுகமும் உண்டாகுமாறு தனக்கு மிக அவசியமும் சாரமுமாகிய அன்னத்தை மட்டும்தான் அபேக்ஷிக்கிறார்.

यतेर्विरज्यात्मगतिः कलत्रं देहं गृहं संयतमेव सौख्यम् ।
विरक्तिभाजस्तनयाः स्वशिष्याः किमर्थनीयं यतिनो महात्मन् ॥ ८४

ஸன்னியாசிக்கு விரக்தியினால் நிலவும் ஆத்மஞானமே மனைவி. உடலே இல்லம். தியானநிஷ்டையே சௌக்கியம். வைராக்கியத்தைப் பெற்ற சிஷ்யர்களே புதல்வர்கள். மஹாத்மாவே! அத்தகைய துறவிக்கு என்ன விருப்பம் இருக்கிறது?

मनोरथानां न समाप्तिरिष्यते पुनः पुनः संतनुते मनोरथान् ।
दारानभीप्सुर्यतते दिवानिशं तान् प्राप्य तेभ्यस्तनयानभीप्सति ॥ ८५

காமத்திற்கு வசப்பட்ட மனிதனுடைய மனதின் விருப்பங்களுக்கு முடிவில்லை. மேன்மேலும் மனக்கோட்டைகளைக் கட்டுகிறான். இல்லத்திற்குத் துணையாளை அடைய விருப்பத்துடன் அல்லும் பகலும் அலைந்து முயற்சிக்கிறான். அவளையடைந்த பின் மக்கள்ப்பேறை எதிர்பார்க்கிறான்.

अनाप्नुवन् दुःखमसौ सुतीव्रं प्राप्नोति चेष्टेन वियुज्यते पुनः ।
सर्वात्मना कामवशस्य दुःखं तस्माद्विरक्तिः पुरुषेण कार्या ॥ ८६

தான் கோரியபடி இஷ்டமான பொருள் கிட்டாமலதிகமான துக்கத்தையடைகிறான். ஒருவேளை இஷ்டப்பட்ட பொருள் கிட்டினபோதிலும் அது இவனைவிட்டுப் பிரிந்து விடுகிறது. எவ்விதத்திலும் காமங்களுக்கு வசமாக இருப்பவனுக்கு துக்கம்தான். ஆகையால் மனிதன் வைராக்கியத்தையடைய வேண்டியதவசியம்.

विरक्तिमूलं मनसो विशुद्धिं तन्मूलमाहुर्महतां निषेवाम् ।
भवादृशास्तेन च दूरदेशे परोपकाराय रसामटन्ति ॥ ८७

வைராக்கியத்திற்குக் காரணம் மனதின் தூய்மை என்றும், மனதின் தூய்மைக்குக் காரணம் சான்றோர்களைச் சேவித்தல் என்றும் கூறுகின்றனர். ஆகையால், தங்களைப்போன்ற பெரியோர்கள் பரோபகாரத்திற்காக பூமியில் ஆங்காங்கு தொலைவிலுள்ள தேசங்களில் ஸஞ்சாரம் செய்கின்றனர்.

अज्ञातगोत्रा विदितात्मतत्त्वा लोकस्य दृष्ट्या जडवद्विभान्तः ।
चरन्ति भूतान्यनुकम्पमानाः सन्तो यदृच्छोपनतोपभोग्याः ॥ ८८

ஆத்மஞானத்தையுணர்ந்த ஸாதுஜனங்கள், குலகோத்திரங்களறியப் படாதவர்களாகவும், உலகிலுள்ளவர்களுடைய நோட்டத்தில், ஜடம்போல் தோன்றுகிறவர்களாகவும், தற்செயலாகக் கிட்டிய பொருள்களையே ஏற்றுக் கொள்ளுகிறவர்களாகவும், பிராணிகளிடம் கருணை காண்பித்துக் கொண்டு உலகில் ஸஞ்சாரம் செய்கிறார்கள்.

चरन्ति तीर्थान्यपि संग्रहीतुं लोकं महान्तो ननु शुद्धभावाः ।
शुद्धात्मविद्याक्षपितोरुपापास्तज्जुष्टमम्भो निगदन्ति तीर्थम् ॥ ८९

சுத்தமான மனதையுடைய சான்றோர்கள், தங்களுடைய ஆத்மஞானத்தினாலேயே பாபம் நீங்கியவர்கள். அத்தகையவர்கள் தீர்த்தயாத்திரைக்காக ஸஞ்சாரம் செய்தல், உலகங்களுக்கு உபதேசம் செய்தலேயாகும். தீர்த்த யாத்திரையினால் அவர்களுக்கு ஆகவேண்டிய பயன் ஒன்றுமில்லை. ஏனெனில், அவர்கள் சேவிக்கும் ஜலம்தான் தீர்த்தம். அவர்களுடைய சம்பந்தத்தினால் நதி முதலியன பரிசுத்தமடைகின்றன.

वस्तव्यमत्र कतिचिद्दिवसानि विद्वंस्त्वद्दर्शनं वितनुते मुदितादि भव्यम् ।
एष्यद्वियोगचकिता जनतेयमास्ते दुःखं गतेऽत्र भवितेति भवत्यसङ्गे ॥ ९०

அறிஞரே! இங்கு சிறிது நாட்கள் வாஸம்செய்ய வேண்டும். தங்களுடைய காட்சி சிறந்த சுகம், ஆனந்தம் முதலியவைகளைத் தருகின்றது. பற்றற்றவராகிய தங்களுடைய பிரிவை யோசித்து, இந்த ஜனத்தொகுதி இப்பொழுதே வருத்தமுற்றுள்ளது.

कोशं क्लेशमलस्य लास्यगृहमप्युद्रंहसामलयं
पैशुन्यस्य निशान्तमुत्कटमृषाभाषाविशेषाश्रयम् ।
हिंसामांसलमाश्रिता घनधनाशंसानृशंसा वयं
वर्ज्यं दुर्जनसङ्गमं करुणया शोध्या यतीन्दो त्वया ॥ ९१

யதிசிரேஷ்டரே! கஷ்டங்களுக்குக் கட்டுத்தறியும், கொடிய பாபங்களுடைய தாண்டவஸ்தலமும், கோழ்ச் சொல் குடியிருக்குமிடமும், மாபெரும் பொய்ச் சொற்கள் பிறக்குமிடமும், ஹிம்ஸைக்கு இருப்பிடமும் ஆகிய இல்லத்தை ஆச்ரயித்த நாங்கள் பணப்பேராசையினால்

கொடியவர்களாயுள்ளோம். கருணை செய்து எமது துஷ்டஸகவாசத்தை நீக்கி, எங்களைப் பரிசுத்தர்களாகச் செய்வீராக.

பத்மபாதர் அவர்களுக்குப் பதில் கூறுகிறார்:-

संयुनक्ति वियुनक्ति देहिनं दैवमेव परमं मनागपि ।
इष्टसङ्गतिनिवृत्तिकालयोर्निर्विकारहृदयो भवेन्नरः ॥ ९२

தெய்வம்தான் பிராணிகளுக்கு வேண்டியவைகளையும் வேண்டாதவைகளையும் சேர்க்கின்றது, பிரிக்கவும் செய்கின்றது. ஆகையால் விரும்பியது கிடைத்தாலும், நீங்கினாலும் சிறிதும் மனதில் விகாரமற்றவனாக இருக்க வேண்டும்.

मध्याह्नकाले क्षुधितस्तृषार्तः क्व मेऽन्नदातेति वदन्नुपैति ।
यस्तस्य निर्वापयिता क्षुदार्तेः कस्तस्य पुण्यं वदितुं क्षमेत ॥ ९३

நடுப்பகலில் பசியினாலும், தாகத்தினாலும் வருத்தமுற்றவன் ''எனக்கு உணவு அளிப்பது யார்?'' என்று தேடிக்கொண்டு வருகையில் அந்தப் பசிப் பிணியை எவன் ஆற்றுகிறானோ, அவனுடைய புண்ணியத்தை யார் கூற வல்லவன்?

सायंप्रातर्वह्निकार्यं वितन्वन् मज्जंस्तोये दण्डकृष्णाजिनी च ।
नित्यं वर्णी वेदवाक्यन्यधीयन् क्षुद्ध्वा शीघ्रं गेहिनो गेहमेति ॥ ९४

காலையும் மாலையும் அக்னிகாரியத்தைச் செய்கின்றவனும், மூன்று வேளைகளில் ஸ்நானஞ்செய்து, பலாசதண்டத்தையும், மான்தோலையும் தரித்துக்கொண்டு, எப்பொழுதும் வேதத்தை ஓதுகின்ற பிரம்மசாரி பசியினால் வருத்தமுற்று இல்லறத்தவனுடைய இல்லத்திற்குச் செல்லுகிறான்.

उच्चैः शास्त्रं भाषमाणोऽपि भिक्षुस्तारं मन्त्रं सञ्जपन्वा यतात्मा ।
मध्येघस्रं जाठराग्नौ प्रदीप्ते दण्डी नित्यं गेहिनो गेहमेति ॥ ९५

சிறந்த வேதாந்தசாஸ்திரத்தைக் கூறுகிறவரும், பொறிகளையடக்கித் தாரகமந்திரத்தை ஜபஞ்செய்கின்றவரும் ஆகிய சன்னியாசியும், தன்னுடைய ஆச்ரமத்திற்குரிய தண்டத்தைத் தாங்கினவராயினும், நடுப்பகலில் ஜாடராக்னி ஜ்வலிக்குகையில் பசி தாங்கமுடியாமல் தினந்தோறும் கிருகஸ்தனுடைய கிருகத்தையே அடைகிறார்.

यदन्नदानेन निजं शरीरं पुष्णंस्तपोऽयं कुरुते सुतीव्रम् ।
कर्तुस्तदर्धं ददतोऽन्नमर्धमिति स्मृतिः संववृतेऽनवद्या ॥ ९६

அந்த யதீசுவரர் யாருடைய அன்னத்தையுண்பதினால் சரீரத்தை வளர்த்துக்கொண்டு கடுமையான தவம் செய்கிறாரோ, அந்த தவத்தின் பாதி அம்சம் செய்கின்றவருக்கும், மீதிப்பாதி அன்னமளித்தவருக்கும் சேருகிறது என்று சிறந்த தர்மசாஸ்திரம் கூறுகிறது.

पुण्यं गृहस्थेन विचक्षणेन गृहेषु संचेतुमलं प्रयासात् ।
विनाऽपि तत्कर्तृनिषेवणेन तीर्थादिसेवा बहुदुःखसाध्या ॥ ९७

திறமையுள்ள இல்லறத்தவனுல், தீர்த்தயாத்திரை முதலிய புண்ணியச் செயல்களைச் செய்யாமலேயே, அவைகளைச் செய்தவர்களுக்குப் பணிவு செய்து புண்ணியத்தைச் சம்பாதித்துக்கொள்ளமுடியும். புண்ணியதீர்த்தங்களுக்குச் செல்லுதல் பெருந்துக்கங்களையுட்கொண்டாலன்றி முடியாது.

गृही धनी धन्यतरो मतो मे तस्योपजीवन्ति धनं हि सर्वे ।
चौर्येण कश्चित्प्रणयेन कश्चिद्दानेन कश्चिद्बलतोऽपि कश्चित् ॥ ९८

ஆகையால், செல்வமுள்ள கிருகஸ்தன் மற்றவரைக்காட்டிலும் பாக்கியமுள்ளவன் என்று என்னுடைய தீர்மானம். ஏனெனில், எல்லோரும் அவனுடைய பொருளை அனுபவிக்கின்றனர். ஒருவன் திருடிப் பெற்றுக்கொள்ளுகிறுன். வேறு ஒருவன் அன்பினுலடைகிறுன். மற்ருெருவன் கொடையினுல் பெறுகிறுன். இன்னுமொருவன் பலவந்தஞ்செய்து அடைகிறுன்.

सन्तोषयेद्वेदविदं द्विजं यः सन्तोषयत्येष स सर्वदेवान् ।
तद्वेदविप्रे निवसन्ति देवा इति स्म साक्षाच्छ्रुतिरेव वक्ति ॥ ९९

வேதங்களையறிந்த அந்தணரை எவன் சந்தோஷப்படுத்துகிறுனே அவன் எல்லா தேவர்களையும் சந்தோஷமடையும்படி செய்கிறுன். ''यावतीर्वै देवतास्ताः सर्वा वेदविदि ब्राह्मणे वसन्ति'' என்று சுருதி, தேவர்கள் எவ்வளவு இருக்கின்றனரோ, அவர்கள் எல்லோரும், வேதங்களையறிந்த அந்தணரிடத்தில் வாசஞ்செய்கின்றனர் என்று கூறுகின்றது.

स्वधर्मनिष्ठा विदिताखिलार्था जितेन्द्रियाः सेवितसर्वतीर्थाः ।
परोपकारव्रतिनो महान्त आयान्ति सर्वे गृहिणो गृहाय ॥ १००

ஸ்வதர்மங்களில் நிலைபெற்றவர்களும், எல்லாவிஷயங்களையும் உணர்ந்தவர்களும், ஐம்பொறிகளையடக்கியவர்களும், தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்தவர்களும், பிறருக்கு உபகாரஞ்செய்தலையே விரதமாகக்கொண்டவர்களுமாகிய சான்ருேர்கள் யாவரும் கிருகஸ்தனுடைய கிருகத்திற்கு வருகின்றனர்.

गृही गृहस्थोऽपि तदश्नुते फलं यत्तीर्थसेवाभिरवाप्यते जनैः ।
तत्तस्य तीर्थं गृहमेव कीर्तितं धनी वदान्यः प्रवसेन्न कश्चन ॥ १०१

மற்ற ஜனங்களால் தீர்த்தஸ்நானம் முதலியவைகளைச் செய்து அடையப்படுகின்ற புண்ணியத்தைக் கிருகஸ்தன் தன்னுடைய மனையில் இருந்து கொண்டே அடைகிறுன். ஆகையால் அவனுக்கு அந்த இல்லமே தீர்த்தமாகக் கூறப்படுகிறது. ஆகவே செல்வந்தனுகிய வள்ளல் வீட்டைவிட்டு வெளியே ஸஞ்சாரம் செய்யவேண்டிய அவசியமில்லை.

अन्तःस्थिता मूषकमुख्यजीवा बहिःस्थिता गोमृगपक्षिमुख्याः ।
जीवन्ति जीवाः सकलोपजीव्यस्तस्माद्गृही सर्ववरो मतो मे ॥ १०२

எலி, எறும்பு முதலிய பிராணிகள் உள்ளே வசித்துக்கொண்டும் பசு, எருமை, பறவை முதலிய பிராணிகள் வெளியே வசித்துக்கொண்டும் இல்லறத்தவனையண்டி ஜீவிக்கின்றன. இவ்வாறு எல்லா பிராணிகளும் அண்டிப் பிழைப்பதற்குக் காரணமாதலால் இல்லறம் எல்லாவற்றிலும் சிறந்தது என்று என் தீர்மானம்.

शरीरमूलं पुरुषार्थसाधनं तच्चान्नमूलं श्रुतितोऽवगम्यते ।
तच्चान्नमस्माकममीषु संस्थितं सर्वं फलं गेहपतिद्रुमाश्रयम् ॥ १०३

புருஷார்த்தங்களையடைவதற்கு சரீரம் காரணம். அந்த சரீரத்தின் நிலை, உணவை மூலமாகக்கொண்டது. எங்களுக்கு உரியதான உணவு இந்த இல்லறத்தினவரிடம் நிலைகொண்டுள்ளது. எல்லாவிதப் பயன்களாகிய பழங்கள் இல்லறத்தியவனாகிய மரத்தை ஆச்ரயமாகக்கொண்டவை.

ब्रवीमि भूयः शृणुताऽऽदरेण वो गृहागतं पूजयताऽऽतुरातिथिम् ।
संपूजितो वोऽतिथिरुद्धरेत्कुलं निराकृतात् किं भवतीति नोच्यते ॥ १०४

இன்னும் உங்களுக்கு உரைக்கின்றேன். கவனத்துடன் கேட்பீர்களாக. இல்லத்திற்கு வலுவேவந்த வருந்திய அதிதியை ஆதரிப்பீர்களாக. அன்புடன் ஆதரவளிக்கப்பட்ட அதிதி உங்களுடைய குலத்தைக் காப்பாற்றுவார். நிராகரித்தால் நிலவும் நிலைமையைக் கூற யான் விரும்பவில்லை.

विनाऽभिसन्धिं कुरुत श्रुतीरितं कर्म द्विजा नो जगतामधीश्वरः ।
तुष्येदिति प्रार्थनयाऽपि तेन स्वान्तस्य शुद्धिर्भविताऽचिरेण वः ॥ १०५

அந்தணர்களே! பயனை விரும்பாமல் வேதத்தில் கூறியுள்ள தர்மத்தைச் செய்யுங்கள். ஜகத்துக்கெல்லாம் ஈசுவரனாகிய பரமாத்மா சந்தோஷமடையவேண்டும் என்றுகூட மனதில் விருப்பங்கொள்ளாமல் தர்மங்களைச் செய்தால் விரைவில் மனது சுத்தமடையும்.

ससंरम्भाश्लिष्यत्सुफणितिवधूटीकुचतटी-
पटीवत्पाटीरागरवनवपङ्काङ्कितहृदः ।
तथाऽप्येते पूता यतिपतिपदाम्भोजभजन-
क्षणक्षीणक्लेशाः सदयहृदयाभाः सुकृतिनः ॥ १०६

இல்லறத்திலிருப்பவர்கள், அன்புடன் அணைத்துக்கொள்ளும் மங்கையர்களின் மார்பில் பூசப்பட்டச் சந்தனக்குழம்பினால் சந்தோஷமடைந்த தமது மார்பையுடையவர்களாக விளங்குகின்றனர். யாமோவெனில், யதீசுவரராகிய பரமாசாரியருடைய பாதாரவிந்தங்களைப் பஜிப்பதினால் வருத்தம் நீங்கியவர்களாகவும், கருணை நிறைந்த மனமுடையவர்களாகவும் இருப்பதினால் புண்ணியசாலிகளாக இருக்கின்றோம்.

संदिश्येत्थं बन्धुतां भिक्षुराजो भिक्षां चक्रे मातुलस्यैव गेहे ।
पप्रच्छैनं मातुलो भुक्तवन्तं किंस्विच्छन्नं पुस्तकं शिष्यहस्ते ॥ १०७

இவ்வாறு பந்துஜனங்களுக்கு புத்திமதிகூறி யதீசுவரராகிய அவர் மாமனுடைய இல்லத்திலேயே பிக்ஷையை ஏற்றுக்கொண்டார். பிக்ஷயான பின், ''சிஷ்யனுடைய கையில் மூடிவைத்துள்ள இந்தப் புத்தகம் யாது:'' என்று மாமன் வினவினர்.

टीका विद्वन् भाष्यगेति ब्रुवाणं तां देहीति प्रोचिषे दत्तवांश्च ।
अद्राक्षीत्तां मातुलस्तस्य बुद्धिं दृष्ट्वाऽऽनन्दीत् खेदमापच्च किञ्चित् ॥ १०८

பத்மபாதர்:- அறிஞரே! பாஷ்யத்திற்கு வியாக்கியானம்.

மாமன்:- அதனை அளிப்பீராக.

அவ்வாறு கூறியபொழுது பத்மபாதர் அளிக்கவும் செய்தார். அதனை மாமன் கண்ணுற்றார். பிறகு அவருடைய புத்தியின் திறமையை உணர்ந்து சந்தோஷமடைந்தார். சிறிது வருத்தத்தையுமடைந்தார்.

प्रबन्धनिर्माणविचित्रनैपुणीं दृष्ट्वा प्रमोदं स विवेद किञ्चित् ।
मतान्तराणां किल युक्तिजालैर्निरुत्तरं बन्धनमालुलोके ॥ १०९

நூலியற்றுவதிலுள்ள அவருடைய திறமையைக்கண்டு உவகை ஏற்பட்டபோதிலும், மற்றமதங்களை அவர்கள் பதில் கூறமுடியாத நிலையில் நிராகரித்தலைக் கண்டு வருத்தமுற்றார்.

गुरोर्मतं स्वाभिमतं विशेषान्निराकृतं तत्र समत्सरोऽभूत् ।
साधुर्निबन्धोऽयमिति ब्रुवाणस्तं साभ्यसूयोऽपि कृताभिनन्दः ॥ ११०

தனக்கு இஷ்டமாகிய குருமதம் (பிராபாகரமதம்) விசேஷமாக நிராகரிக்கப்பட்டுள்ளதைக்கண்டு பகைமை புத்தியை அடைந்தார். பொறுமையேர்ப்பட்டதாயினும், இந்த கிரந்தம் நன்கமைந்துள்ளது என்று வெளிப்படையாக புகழ்ந்தார்.

सेतुं गच्छाम्यालये पुस्तभारं ते न्यस्येमं वर्तते मेऽत्र जीवः ।
विद्वन् यद्वद्गोगृहादौ परेषां प्रीतिः पूर्णा नस्तथा पुस्तभारे ॥ १११

இந்தப் புத்தகத்தை தமது இல்லத்தில் வைத்துவிட்டு சேதுவிற்குச் செல்லுகிறேன். என்னுடைய உயிர் இதனிலுள்ளது. அறிஞரே! மற்றவர்களுக்கு (இல்லறத்தினவர்களுக்கு) பசுக்கள், கிருகம் முதலியவற்றில் எவ்வளவு அன்புள்ளதோ, அதுபோல் எங்களுக்கு இந்தப் புத்தகங்களின் தொகுதியில் அன்புள்ளது.

इत्युक्त्वा तैर्मातुलं मस्करीशः शिष्यैर्हृष्यन् सेतुमेष प्रतस्थे ।
प्रस्थातुः श्रीपद्मपादस्य जातं कष्टं चैष्यत्सूचनायै निमित्तम् ॥ ११२

அந்த யதீசுவரர் மாமனிடம் இவ்வாறு கூறி சிஷ்யர்களுடன் சேதுவிற்குப் புறப்பட்டார். அவர் புறப்படுகையில் வருங்காலத்தில் ஸம்பவிக்கக் கூடியதிற்கு அறிகுறியான கெட்ட சகுனம் நிலவியது.

वामं नेत्रं गन्तुरस्पन्दतैव बाहुः पुस्फोरापि वामस्तथोरुः ।
चुक्षावोच्चैर्हन्त कश्चित्पुरस्तात्तत्सर्वं द्राग्ज्ञोऽगणित्वा जगाम ॥ ११३

புறப்படுந்தருணத்தில் அவருடைய இடது கண், கை, துடை இவைகள் துடித்தன. ஒருவன் எதிரில் தும்மினுன். அதையொன்றையும் பொருட்படுத்தாமல் அறிஞரான அவர் யாத்திரையைத் தொடர்ந்தார்.

गतेऽत्र मेने किल मातुलोऽस्य ग्रन्थे स्थितेऽस्मिन् गुरुपक्षहानिः ।
दग्धेऽत्र जायेत महान् प्रचारो नोक्त्या निराकर्तुमपि प्रभुत्वम् ॥ ११४

அவர் சென்றபொழுது, மாமன் யோசனை செய்தார். இங்கு இந்த நூல் இருக்கையில் குருமதத்திற்கு அழிவு ஏற்படும். இது எரிக்கப்பட்டால் அதற்கு பிரசாரம் நிலவும். அப்படியல்லாமல், இதனை வசனத்தினுல் நிராகரித்தலியலாது.

पक्षस्य नाशाद्गृहनाश एव नो वरं गृहेणैव दहामि पुस्तकम् ।
एवं निरूप्य न्यदधाद्धुताशनं चुक्रोश चाग्निर्दहतीति मे गृहम् ॥ ११५

நமது மதத்திற்கு நாசம் ஏற்படுவதைக்காட்டிலும் கிருஹத்திற்கே நாசம் ஏற்படுதல் மேலானது. ஆகையால் மனையுடன் புத்தகத்தையும் எரித்து விடுகிறேன் என்று மனதில் உறுதிகொண்டு வீட்டில் அதனை வைத்து வீட்டிற்கே நெருப்புவைத்தார். 'நெருப்பு என் இல்லத்தை எரிக்கிறது' என்று கூக்குரலுமிட்டார்.

ऐतिह्यमाश्रित्य वदन्ति चैवं तदेव मूलं मम भाषणेऽपि ।
यावत्कृतं तावदिहास्य कर्तुः पापं ततः स्याद्द्विगुणं प्रवक्तुः ॥ ११६

ஐதிகத்தைப் பின்பற்றி இவ்வாறு கூறுகின்றனர். அதுதான் என்னுடைய சொல்லிற்கும் ஆதாரம். அதல்லாது யான் அறியேன். விஷயத்தை தெரிந்துகொள்ளாமல் கூறுதல் செய்தவனைக்காட்டிலும் கூறுபவனுக்கு இரண்டுமடங்கு பயனளிக்கும்.

गच्छन्नसौ फुल्लमुनेर्जगाम तमाश्रमं यत्र च रामचन्द्रः ।
अश्वत्थमूले न्यधित स्वचापं स्वयं कुशानामुपरि न्यषीदत् ॥ ११७

சென்றுகொண்டிருக்கையில் அந்தப் பத்மபாதர் புல்லமுனிவருடைய (அகஸ்தியர்) பிரசித்தமான ஆச்ரமத்தையடைந்தார். எந்த இடத்தில் ஸ்ரீராமசந்திரர் தன்னுடைய வில்லைக் கீழேவைத்து அரசமரத்தின் அடியில் தர்ப்பங்களை விரித்துப் படுத்தாரோ, அங்கு சென்றுர்.

तीर्त्वा समुद्रं जनकात्मजायाः सन्दर्शनोपायमनीक्षमाणः ।
वसुन्धरायां प्रवणाः प्लवङ्गा न वारिराशौ प्लवनं क्षमन्ते ॥ ११८

सञ्चिन्तयन्निति कुशासनसंनिविष्टो ज्योतिस्तदैक्षत विदूरगमेव किञ्चित् ।
संव्याप्नुवज्जगदिदं सुखशीतलं यत्संप्रार्थनीयमनिशं मुनिदेवताभिः ॥ ११९

தரையில் தாவும் வல்லமையுள்ள வானரர்கள் கடலைத்தாவ வல்லமையில்லாதவர்கள். ஆகையால் சமுத்திரத்தைத் தாண்டி சீதையைக்காண வழியறியாதவராக தர்ப்பசயனத்திலமர்ந்து யோசனையிலாழ்ந்திருக்கையில் தூரத்தில் ஒரு ஜோதியைக் கண்டார். அந்த ஜோதி, உலகமெங்கும் பரந்ததும், சுகத்தையளிக்கின்றதும், குளிர்ச்சியுள்ளதும், முனிவர்களாலும் தேவர்களாலும் எப்பொழுதும் விரும்பத்தக்கதுமாக இருந்தது.

आगच्छदात्माभिमुखं निरीक्ष्य सर्वे तदुत्तस्थुरुदारवीर्याः ।
ततः पुमाकारमदृश्यतैतन्महाप्रभामण्डलमध्यवर्ति ॥ १२०

தமக்கு எதிராக வருகின்ற அந்த ஜோதியைக்கண்டு மிக்க பராக்கிரம சாலிகளாகிய சேனைவீரர்கள் அனைவரும் எழுந்தனர். பிறகு, ஒளியின் மண்டலத்தில் ஒரு புருஷவடிவம் புலப்பட்டது.

मध्येप्रभामण्डलमैक्षताञ्चितं शिवाकृतिं सर्वतपोमयं पुनः ।
लोपादिमुद्रासहितं महामुनिं प्राबोधि कुम्भोद्भवमादराज्जनैः ॥ १२१

அந்த ஒளிமண்டலத்தின் நடுவில், பரமசிவனுடைய வடிவங்கொண்டவரும், தவமே உருவெடுத்தவரும், லோபாமுத்திரையுடன் கூடியவருமாகிய அகஸ்தியமாமுனிவர் என்று ஜனங்களால் ஆதரவுடன் அறிந்துகொள்ளப்பட்டது.

अगस्त्यदृश्वा रघुनन्दनस्ततः स खेदमन्तःकरणोत्थमत्यजम् ।
प्रायो महद्दर्शनमेव देहिनां क्षिणोति खेदं रविवन्महातमः ॥ १२२

ஸ்ரீராகவர் அகஸ்தியமுனிவரைக் கண்ட கணத்திலேயே மனவருத்தம் நீங்கியவரானார். கதிரவன் இருளை அறுப்பதுபோல் சான்றோர்களுடைய காட்சியே ஜனங்களுடைய வருத்தத்தையகற்றுகிறது.

सभार्यमर्घ्यादिभिरर्चयित्वा रामस्तदङ्घ्रिं शिरसा ननाम ।
तूष्णीं मुहूर्तं व्यसनार्णवस्थो धृतिं समास्थाय पुनर्वभाषे ॥ १२३

ஸ்ரீராமர், மனையாளுடன் கூடிய அந்த முனிவருக்கு அர்க்யம் முதலிய பூஜைகளைச் செய்து அவருடைய பாதங்களில் பணிந்தார். துக்கக்கடலில் ஆழ்ந்தமையால் சிறிதுநேரம் வாளாவிருந்து பிறகு தைரியத்தைக் கைக்கொண்டு கூறினார்.

दृष्ट्वा भवन्तं पितृवत्प्रमोदे यन्मामगा दुःखमहार्णवस्थम् ।
मन्ये ममाऽऽत्मानमवाप्तकामं वंशो महान्मे तपनात्प्रवृत्तः ॥ १२४

தந்தைபோன்ற தங்களைக் கண்டதினால் நான் மிக்க உவகையுற்றேன். துக்கக்கடலில் மூழ்கிய என்னைப் பொருட்படுத்தி தாங்கள் வந்தமையால் என் விருப்பம் பயனுற்றதென்றே நினைக்கிறேன். ஸ்வாமி! என்னுடைய சிறந்த வம்சம் சூரியனிடமிருந்து தோன்றியது.

न तत्र मादृग्जनिता न जातः पदच्युतोऽहं प्रथमं सभार्यः ।
सलक्ष्मणोऽरण्यमुपागतश्च मारीचमायानिहतान्तरङ्गः ॥ १२५

ஆயினும், அந்த வம்சத்தில் என்னைப்போன்ற பாக்கியமற்றவன் பிறக்கப்போவதில்லை. இதற்குமுன் பிறந்தவனுமில்லை. சிங்காசனத்தையிழந்து மனைவியுடனும் தம்பியாகிய இலக்ஷ்மணனுடனும் காட்டில் புகுந்தேன். அங்கு மாரீசனுடைய மாயையினால் மனமேமாற்றமுற்றேன்.

तत्रापि भार्यामहृत च्छलेन स रावणो राक्षसपुंगवो मे ।
सा चाधुनाऽशोकवने समास्ते कृशा वियोगात्स्वत एव तन्वी ॥ १२६

மேலும் அந்தக் காட்டில் அரக்கர்களுக்கரசனாகிய இராவணன் என்னுடைய மனைவியை கபடமாக அபகரித்தான். இயற்கையாகவே மெலிந்த மெய்யுடையாள், இப்பொழுது அசோகவனத்தில் பிரிவாற்றாமையால் மிகவும் மெலிந்தவளாக இருக்கிறாள்.

तीर्त्वा समुद्रं विनिहत्य दुष्टं बलेन सीतां महता हरामि ।
यथा तथोपायमुदाहर त्वं न मे त्वदन्योऽस्ति हितोपदेष्टा ॥ १२७

சமுத்திரத்தைத் தாண்டி துஷ்டனான அந்த அரக்கனை சிறந்த பலத்தினால் யான் கொல்லுவதற்கு தக்க உபாயத்தைக் கூறுவீர்களாக. தங்களைக் காட்டிலும் எனக்கு ஹிதத்தை உபதேசம் செய்பவர் ஒருவருமில்லை.

इतीरितो वाचमुवाच विद्वान्मा राम शोकस्य वशं गतो भूः ।
वंशद्वये सन्ति नृपा महान्तः संप्राप्य दुःखं परिमुक्तदुःखाः ॥ १२८

இவ்வாறு கூறப்பட்ட அந்த அறிஞர் பதில் கூறினார். ராமா! வருந்தாதீர். (என்னைப்போல் துக்கத்தையனுபவிக்கின்றவர் யாருமில்லை என்று தாங்கள் கூறுவது சரியன்று.) சூரியவம்சத்திலும், சந்திரவம்சத்திலும் தோன்றிய பெரிய அரசர்கள் துக்கத்தையடைந்து, அதிலிருந்து விடுபட்டு விளங்கியவர் உண்டு.

त्वमग्रणीर्दाशरथे धनुर्भृतां तवानुजस्यापि समो न लक्ष्यते ।
प्लवङ्गमानामधिपस्य कोटिशो मा मुञ्च मा मुञ्च वचो विनार्थम् ॥ १२९

தசரதமஹாராஜனுடைய புதல்வரே! தாம் வில்லாளிகளுக்கு முன்னணியில் இருப்பவர். தங்களுடைய தம்பிக்கு நிகரான வீரர் உலகில் இல்லை. கோடிக்கணக்கான வானரசைன்னியங்களுக்குத் தலைவனாகிய சுக்ரீவனுக்கும் ஒப்பானவன் இல்லை. அர்த்தமில்லாத சொல்லைக் கூறவேண்டாம்.

सहायसंपत्तिरियं तवास्ति हितोपदेष्टाऽप्यहमस्मि कश्चित् ।
वारां निधिः किं कुरुते तवायं स्मराधुना गोष्पदमात्रमेनम् ॥ १३०

ராம! உமக்கு உதவிச்செல்வமிருக்கின்றது. யான் ஒருவன் ஹிதத்தைக்கூறுகிறவனும் உள்ளேன். இந்தக் கடல் என்ன செய்ய வல்லமையுள்ளது? நினைத்துப்பாருங்கள். இப்பொழுதே இந்தக் கடல், மாட்டின் குளம்பளவு ஆகிவிடும்.

पुरेव चार्वब्धिमहं पिबामि शुष्केऽत्र तेन प्रतियाहि लङ्काम् ।
एवं मया कीर्तिरुपार्जिता स्याद्बद्धे तु वार्धौ तव साऽर्जिता स्यात् ॥ १३१

முன்போல் யான் சமுத்திரத்தை நன்கு குடித்துவிடுகிறேன். அப்பொழுது வரட்சியடைந்த இந்த வழியாக இலங்கைக்குச் செல்லுவீராக. இப்படியானல், என்னுல் கீர்த்தி சம்பாதனை செய்யப்பட்டதாகும். சமுத்திரத்தில் அணை கட்டினுல் நும்மால் கீர்த்தி சம்பாதிக்கப்பட்டதாகும்.

सेतुं वार्धौ वन्धयित्वा जहि त्वं दुष्टं चौर्याद्येन सीता हृताऽऽसीत् ।
प्राप्नोषि त्वं कीर्तिमाचन्द्रतारं तेनात्राब्धिं बन्धय त्वं कपीन्द्रैः ॥ १३२

திருட்டுத்தனமாக சீதையை அபகரித்த துஷ்டனுகிய அரக்கனை, சமுத்திரத்தில் சேதுவைக்கட்டிக் கொல்லுவீராக. அதனுல் சந்திரன், நக்ஷத்திரங்கள் இவைகள் இருக்கும் வரையில் புகழையடைவீர். ஆகையால் சிறந்த வானரர்கள் மூலமாக சேதுவைக் கட்டுவீராக.

इत्थं यत्र प्रेरितेऽगस्त्यवाचा सेतुं रामो बन्धयामास वार्धौ ।
तुङ्गैः शृङ्गैर्वानरैस्तेन गत्वा तं हत्वाऽऽजौ जानकीमानिनाय ॥ १३३

இவ்வாறு, எந்த இடத்தில் அகஸ்தியமுனிவருடைய வசனத்தின்படி வானரர்களைக்கொண்டு சிறந்த மலைகளின் சிகரங்களை இட்டு, சமுத்திரத்தில் அணையைக் கட்டி, அதன் வழியாக இலங்கையில் புகுந்து போரில் இராவணனைக் கொன்று ஜானகியை மீட்டெடுத்தாரோ,

तत्ताद्दक्षे तत्र तीर्थे स भिक्षुः स्नात्वा भक्त्या रामनाथं प्रणम्य ।
तत्र श्रद्धोत्पत्तये मानुषाणां शिष्येभ्यस्तद्वैभवं सम्यगूचे ॥ १३४

அத்தகைய பரிசுத்தமான தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, அந்தப் பத்மபாதர் ஸ்ரீராமநாதரை வணங்கி, ஜனங்களுக்கு சிரத்தையுண்டாவதற்கு அந்த இடத்தின் மகிமையைச் சீடர்களுக்கு நன்கு விளக்கினுர்.

तन्माहात्म्यं वर्णयन्तं मुनिं तं पप्रच्छैनं कश्चिदेवं विपश्चित् ।
रामेशाख्या किंसमासोपपन्ना पृष्टस्त्रेधाऽवोचदेवं समासम् ॥ १३५

அந்த ஸ்தலத்தின் மாகாத்மியத்தை அவர் கூறுகையில், ஒரு வித்வான் அந்த முனிவரிடம், ''ராமேச'' என்ற சொல் என்ன ஸமாஸத்தைச் சேர்ந்தது? என்று வினவினுர். இவ்வாறு வினவப்பட்ட அந்தப் பத்மபாதர், மூன்று விதமாக அந்தச் சொல்லிற்கு ஸமாஸத்தைக் கூறினுர்.

रघूद्वहस्तत्पुरुषं परं जगौ शिवो बहुव्रीहिसमासमैरयत् ।
रामेश्वरे नामनि कर्मधारयं परं समाहुः स्म सुरेश्वरादयः ॥ १३६

ஸ்ரீராமர், रामस्य ईश्वरः = இராமருக்கு ஈசுவரர் என்று தத்புருஷஸமாஸத்தையும், சிவபெருமான் रामः ईश्वरः यस्य = இராமர் யாருக்கு ஈசுவரரோ அவர், என்று பகுவ்ரீஹிஸமாஸத்தையும், தேவேந்திரன் முதலியோர்

रामश्चासौ ईश्वरश्च = இராமரே ஈசுவரர் என்று கர்மதாரயஸமாஸத்தையும் கூறுகின்றனர் என்று, இவ்வாறு रामेश्वर என்ற சொல்லிற்குப் பொருள் கூறினர்.

एवं निश्चित्योदितं तत्समासं श्रुत्वा तत्रत्यो बुधो योऽभ्यनन्दत् ।
अम्भोजाङ्घ्रिस्तैरथ स्तूयमानः कञ्चित्कालं तत्र योगीडनैषीत् ॥ १३७

இவ்வாறு தீர்மானம் செய்து கூறிய रामेश्वर என்ற சொல்லின் பொருளைக் கேட்டு, அங்கிருந்த அறிஞர்கள் ஆனந்தமடைந்தனர். யோகிகளில் சிறந்த பத்மபாதரும் அவர்களால் புகழப்பட்டவராக சிறிது நாட்கள் அங்கு தங்கினர்.

तस्मादार्यः प्रस्थितोऽभूत् सशिष्यस्तीर्थस्नानोपात्तचित्तामलत्वः ।
पश्यन् देशान्मातुलीयं जगाहे गेहं दग्धं तस्य पुस्तेन सार्धम् ॥ १३८

श्रुत्वा किञ्चित् खेदमापेदिवान् स मत्वा मत्वा धैर्यमापेदिवान् सः ।
श्रावं श्रावं मातुलीयस्य तीव्रं दाहं गेहस्यानुकम्पां व्यधत्त ॥ १३९

தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தமையால் மனதில் உவகை பூத்தவராக அவர் பிறகு சீடர்களுடன் அங்கிருந்து புறப்பட்டு, மாமனுடைய கிருகத்திற்கு வரவும், மாமனுடைய கிருகம், தன்னுடைய புத்தகத்துடன் நெருப்பினுல் எரிந்ததைக் கேட்டு வருந்தி, பிறகு யோசனை செய்து தைரியத்தையடைந்தபோதிலும், மாமனுடைய மனை நெருப்பிற்கு இரையானது பற்றி வருந்தி மிகக் கருணை கொண்டார்.

विश्वस्य मां निहितवानसि पुस्तभारं तं चादहद्धुतवहः पतितः प्रमादात् ।
तावान्न मे सदनदाहकृतोऽनुतापो यावांस्तु पुस्तकविनाशकृतो मम स्यात् ॥ १४०

என்னை நம்பிப் புஸ்தகபாரத்தை வைத்தீர். தெரியாமல் அதில் நெருப்பு வீழ்ந்துவிட்டது. தங்களுடைய புஸ்தகங்களின் சுமை எரிந்ததினுலுள்ள துக்கம்போல், என்னுடைய இல்லம் எரிந்ததினுல்கூட எனக்கு அதிகமான துக்கம் கிடையாது.

इत्थं ब्रुवन्तं तमथो न्यगादीत् पुस्तं गतं बुद्धिरवस्थिता मे ।
उक्त्वा समारब्ध पुनश्च टीकां कर्तुं स धीरो यतिवृन्दवन्द्यः ॥ १४१

இவ்வாறு கூறிய மாமனுக்கு அவர் ''புஸ்தகம் போனுலும் என்னுடைய புத்தியிருக்கின்றது'' என்று கூறி, யதீசுவரர்களால் பூஜிக்கப்பட்டவரும், புத்திசாலியும், தைரியமுற்றவருமாகிய அவர் மறுபடியும் வியாக்கியானம் செய்ய ஆரம்பித்தார்.

दृष्ट्वा बुद्धिं मातुलस्तस्य भूयो भीतः प्रास्यद्भोजने तन्मनोघ्नम् ।
किञ्चिद्द्रव्यं पूर्ववन्नाक्षमिष्ट टीकां कर्तुं केचिदेवं ब्रुवन्ति ॥ १४२

அவருடைய புத்தியின் திறமையைக்கண்டு பிறகு பயமுற்றவராகிய மாமன் அவருடைய உணவில் புத்தியைக்கெடுக்கும் ஒரு மருந்தையிட்டான். அதனுல், முன்போல் வன்மையுள்ளவராக இருக்கவில்லை என்று சிலர் கூறுகின்றனர்.

अत्रान्तरेऽन्यैर्निजवचरद्भिः स्वैस्तीर्थयात्रां दयितैः सतीर्थ्यैः ।
अर्थादुपेत्याऽऽश्रमतः कनिष्ठैर्ज्ञातः सखेदैः स मुनिः समैक्षि ॥ १४३

இந்த ஸந்தர்ப்பத்தில் தன்னைப்போலவே தீர்த்தயாத்திரை செய்கின்ற தன்னுடைய ஸகபாடிகளாகிய தாழ்ந்த ஆச்ரமத்திலுள்ள சில நண்பர்களால் வருத்தத்துடன் அந்த முனிவர் காணப்பட்டார்.

दृष्ट्वा पद्माङ्घ्रिं क्रमात्ते प्रणेमुस्तत्पादाम्भोजीयरेणून् दधानाः ।
अन्योन्यं द्रागाददुस्ते ददुश्चानेकानेहोयोगजैक्यान्नमांसि ॥ १४४

அந்தப் பத்மபாதரைக் கண்டு வணங்கி அவருடைய பாதாரவிந்த தூசிகளை சிரஸ்ஸில் பெற்றுக்கொண்டனர். வெகுநாட்களாக பிரிந்திருந்த அவர்கள் இந்த ஸந்தர்ப்பத்தில் நண்பர்கள் ஒருவருக்கொருவர் வணக்கத்தையளிக்கவும் பெற்றுக்கொள்ளவும் செய்தனர்.

वाणीनिर्जितपन्नगेश्वरगुरुप्राचेतसा चेतसा
बिभ्राणा चरणं मुनेर्विरचितव्यापल्लवं पल्लवम् ।
धुन्वन्तं प्रभया निवारिततमाशङ्कापदं कामदं
रेजेऽन्तेवसतां समष्टिरसुहृत्तत्याहितात्याहिता ॥ १४५

வாக்கின் திறமையினால் ஆதிசேஷன், பிருகஸ்பதி, வால்மீகி ஆகியவர்களை வென்ற அந்த சீடர்களின் தொகுதி, ஆபத்துக்களை இலகுவாக விலக்குகின்றதும், சந்தேகங்களையகற்றுகின்றதும், விருப்பங்களைப் பூர்த்தி செய்கின்றதுமாகிய ஆசாரியபாதங்களை மனதில் தியானஞ்செய்துகொண்டு, உட்பகைவர்களுக்கும், வெளிப்பகைவர்களுக்கும் அச்சத்தை வளர்த்துக்கொண்டு விசேஷமாக விளங்கியது.

शुश्राव साऽन्तेवसतां समष्टिः स्वदेशकीयां सुखदां सुवार्ताम् ।
अर्थात् समीपागततः कुतश्चिद् द्विजेन्द्रतः सेवितसर्वतीर्थात् ॥ १४६

அவர்கள் தீர்த்தயாத்திரைசெய்து தமது இடத்திற்கு வந்த ஒரு அந்தணரிடமிருந்து தமது தேசத்து க்ஷேமசமாசாரத்தைக் கேட்டறிந்துகொண்டனர்.

अथ गुरुवरमनवेक्ष्य नितान्तं व्यथितहृदो मुनिवर्यविनेयाः ।
कथमपि विदिततदीयसुवार्ताः समधिगताः किल केरलदेशान् ॥ १४७

ஆசாரியரைப் பிரிந்து அவரைக்காணாமையினால் வருந்திய மனமுற்ற சீடர்கள் அவருடைய க்ஷேமசமாசாரத்தையறிந்து சந்தோஷத்துடன் கேரளதேசத்திற்குச் சென்றனர்.

अत्रान्तरे यतिपतिः प्रसुवोऽन्त्यकृत्यां कृत्वा स्वधर्मपरिपालनसक्तचित्तः ।
आकाशलङ्घिवरकेरमहीरुहेषु श्रीकेरलेषु मुनिरास्त चरन् विरक्तः ॥ १४८

யதீசுவரரும் தாயாருடைய கடைசிக்காலக் கடமைகளைச் செய்து தன்னுடைய தர்மத்தைக் காப்பாற்ற மனங்கொண்டவராக, ஆகாயமளாவி வளர்ந்திருக்கும் தென்னை மரங்கள் நிரம்பிய கேரளதேசத்தில், வைராக்கியம்பெற்றவராக வசித்துவந்தார்.

विचरन्नथ केरलेषु विष्वङ्निजशिष्यागमनं निरीक्ष्य मौनी ।
विनयेन महासुरालयेशं विनयन्नस्तुत निस्तुलानुभावः ॥ १४९

நிகரற்ற மகிமையுடையவரும், ஆத்மஸ்வரூபத்தை எப்பொழுதும் மனனம் செய்கின்றவருமாகிய ஸ்ரீசங்கரர் கேரளதேசங்களில் ஸஞ்சரித்துக் கொண்டு சீடர்களுடைய சந்திப்பையும் எதிர்பார்த்துக்கொண்டு மகாஸுரேசுவரர் என்ற விஷ்ணுஸ்தானத்தையடைந்து அந்தப் பகவானைத் துதித்தார்.

सदसत्त्वविमुक्तया प्रकृत्या चिदचिद्रूपमिदं जगद्विचित्रम् ।
कुरुषे जगदीश लीलया त्वं परिपूर्णस्य न हि प्रयोजनेच्छा ॥ १५०

ஹே ஜகதீசுவரரே! ஸத்தும் அஸத்துமல்லாததாகிய பிரகிருதியினால் விசித்திரமான உலகத்தை விளையாட்டாகவே சிருஷ்டிக்கின்றீர். நித்தியதிருப்தராகிய தங்களுக்கு ஒருவிதபயனிலும் விருப்பமில்லை. (உலகசிருஷ்டி உமது விளையாட்டு.)

रजसा सृजसीश सत्त्ववृत्तिस्त्रिजगद्रक्षसि तामसः क्षिणोषि ।
बहुधा परिकीर्त्यसे च स त्वं विधिवैकुण्ठशिवाभिधाभिरेकः ॥ १५१

ஹே ஈசா! தாங்கள் ரஜோகுணத்தைக் கைக்கொண்டு மூன்று உலகங்களையும் சிருஷ்டிக்கின்றீர்கள்; ஸத்வகுணத்தினால் காப்பாற்றுகிறீர்கள்; தமோகுணத்தினால் ஸம்ஹாரம் செய்கின்றீர்கள். ஆகையால், ஒருவரே பிரம்மன், விஷ்ணு, ருத்திரன் என்று பலவாறாகக் கூறப்படுகிறீர்கள்.

विविधेषु जलाशयेषु सोऽयं सवितेव प्रतिबिम्बितस्वभावः ।
बहुरूपमिदं प्रविश्य विश्वं स्वयमेकोऽपि भवान् विभात्यनेकः ॥ १५२

ஆகாயத்திலுள்ள சூரியன் பல தண்ணீர்ப்பாத்திரங்களில் பிரதிபலித்துப் பலவாறாகக் காணப்படுவதுபோல், ஒரே ஈசுவரன் பல உருவங்கொண்ட உலகில் உட்புகுந்து பலவிதமாகத் தோன்றுகிறார்.

इति देवमभिष्टुवन् विशिष्टस्तुतितोऽसौ सुरसद्मसंनिविष्टः ।
चिरकालवियोगदीनचित्तैः शिरसा शिष्यगणैरथो ववन्दे ॥ १५३

இவ்வாறு அந்தக் கோயிலிலிருந்துகொண்டு சிறப்புள்ளத் துதிகளால் பகவானைத் துதிக்கையில், வெகுகாலமாகப் பிரிவாற்றாமையினால் வருந்தி சிஷ்யர்களனேகர் யாத்திரை முடித்துத் திரும்பிவந்து அந்த ஸ்ரீசங்கரரை வணங்கினர்.

गुरुणा कुशलानुयोगपूर्वं सदयं शिष्यगणेषु सान्त्वितेषु ।
अतिदीनमनाः शनैरवादीदजहद्गद्गदिकं स पद्मपादः ॥ १५४

ஆசிரியர் சீடர்களை கருணைநிரம்பிய கண்களால் அருளி குசலங்கேட்டு சமாதானம் செய்து கொண்டிருக்கையில், மிகவும் வருத்தமுற்ற மனத்துடன் அந்தப் பத்மபாதர், திக்கிய குரலில் மெதுவாகக் கூறினார்.

भगवन्नभिगम्य रङ्गनाथं पथि पद्माक्षमहं निवर्तमानः ।
बहुधाविहितानुनीतिनीतो बत पूर्वाश्रममातुलेन गेहम् ॥ १५५

பகவானே! தாமரைக்கண்ணராகிய ஸ்ரீரங்கநாதரைத் தரிசித்து திரும்பி வருகையில், பூர்வாசிரமத்துமாமனால் இன்சொற்களைக் கூறி பலவாறு வற்புறுத்தி தனது மனைக்கு அழைத்துச் செல்லப்பட்டேன்.

अहमस्य पुरो भिदावदेन्दोरपि पूर्वाश्रमवासनानुबन्धात् ।
अपठं भवदीयभाष्यटीकामजयं चात्र कृतानुयोगमेनम् ॥ १५६

பூர்வாச்ரமத்திலுள்ள பந்தத்தை நினைத்து யான், பேதவாதியாகிய அவருக்கெதிரில் தங்களுடைய பாஷ்யத்தின் டீகையைப் படித்துப் பல ஆக்ஷேபங்களைக் கிளப்பிய அவருக்கு விடை கூறி வென்றேன்.

दग्धमुद्रमुखमुद्रणमन्त्रैर्ध्वस्ततर्कगुरुकापिलतन्त्रैः ।
वर्मितो निगमसारकसुधाक्तैर्मातुलं तमजयं तव सूक्तैः ॥ १५७

சக்ராதி முத்திரைகள் தரிக்கின்றவர்களுடைய முகத்தை மூடச்செய்கின்றவைகளும், தர்க்கம், மீமாம்சை, சாங்கியம் ஆகிய தந்திரங்களில் யுக்திகளைக் கண்டிக்கின்றவைகளும் வேதாந்தசாரமாகிய அமிருதத்தைப் பொழிகின்றவைகளுமாகிய தங்களுடைய இன்சொற்களால் காப்பாற்றப்பட்ட யான், மாமனை வென்றேன்.

खड्गाखड्गिविहारकल्पितरुजं काणादसेनामुखे
शस्त्राशस्त्रिकृतं श्रमं च विषमं पश्यत्पदानां पदे ।
यष्टीयष्टिभवं च कापिलबले खेदं मुने तावकैः
सूक्तैर्यौक्तिकवंशमौक्तिकमयैर्नाऽऽपद्यते वर्मितः ॥ १५८

ஹே முனிவரே! தங்களுடைய நல்ல யுக்திகளாகிய மூங்கில்களிலிருந்து தோன்றிய நற்சொற்களாகிய முத்துக்களை அணிதலாகிய கவசத்தைத் தரித்தவன் காணாதர்களுடைய சைன்யத்திற்கு எதிரில் யுத்தம் செய்யும்பொழுது கத்திப்போரினால் வருத்தமடைவதில்லை. கௌதமமதத்தினருடன் ஆயுதங்களால் போர்செய்து துன்பம் பெறுவதில்லை. காபிலமதத்தினருடன் தடியடிப்போரிலும் தத்தளிப்புறுவதில்லை. ( இவ்வாறு ஆசிரியருடைய கருணையே தன் வெற்றிக்குக் காரணம் என்று புகன்றார்.)

अथ गूढहृदो यथापुरं मामभिनन्द्याऽऽहितसत्क्रियस्य तस्य ।
अधिसद्म निधाय भाष्यटीकामहस्याऽऽयमशङ्कितो निशायाम् ॥ १५९

பிறகு தனது உள்ளத்தை வெளிப்படுத்தாமல் முன்போலவே, என்னை உபசரித்த அவருடைய இல்லத்தில் தங்களுடைய பாஷ்ய டீகையை வைத்து விட்டு ஐயமற்றவனாகவே யான் யாத்திரையைத் தொடர்ந்தேன்; அன்று இரவில்.

युगपर्ययनृत्यदुग्रफालज्वलनज्वालकरालकीलजालः ।
दहनोऽधिनिशीथमस्य धाम्ना बत टीकामपि भस्मसादकार्षीत् ॥ १६०

நள்ளிரவில், பிரளயகாலத்தில் நிருத்தம் செய்யும் ருத்திரருடைய நெற்றிக்கண்ணிலிருந்து தோன்றிய அக்னிபோல் கடும் ஜ்வாலைகளுடன் கூடிய நெருப்பு அவருடைய இல்லத்தையும் டீகையையும் நீறுக்கிவிட்டது; கஷ்டம்!

अदहत्स्वगृहं स्वयं हताशो विमतग्रन्थमसौ विदग्धुकामः ।
मतिमान्द्यकरं गरं च भैक्षे व्यधितास्येति विजृम्भते स्म वार्ता ॥ १६१

அக்னி இல்லத்தை நீறுக்கியது. பரமதத்தை நாசம் செய்ய விருப்பம் கொண்ட அவர், புத்தியைக் கெடுக்கக்கூடிய ஔஷதத்தை பிக்ஷையில் இட்டார் என்ற உலகவதந்தி உண்டாயிற்று.

अधुना धिषणा यथापुरं नो विधुनाना विशयं प्रसादमेति ।
विषमा पुनरीदृशी दशा नः किमु युक्ता भवदङ्घ्रिकिङ्कराणाम् ॥ १६२

பிரபுவே! இப்பொழுது ஐயங்களை அறுத்து மனம் முன்போல் தெளிவாக இயங்குகின்றதில்லை. தங்களுடைய பாதகமலங்களை அண்டிய தாசர்களுக்கு இத்தகைய ஆபத்து நிலவுதல் தகுமோ?

गुरुवर तव या भाष्यवरेण्ये व्यरचि मया ललिता किल वृत्तिः ।
निरतिशयोज्ज्वलयुक्तियुता सा पथि किल हा विननाश कृशानौ ॥ १६३

சிறந்த ஆசிரியரே! தங்களுடைய உயர்ந்த பாஷ்யத்திற்கு நல்ல யுக்திகளுடன் கூடிய அழகான வியாக்கியானம் யாது என்னால் இயற்றப்பட்டதோ, அது ஆஹா! வழியில் நெருப்பில் நீறுயிற்றன்றே!

प्रयतेऽहं पुनरेव यदा तां प्रविधातुं बहुधाकृतयत्नः ।
न यथापूर्वमुपक्रमते ताः पटुयुक्तीर्भगवन्मम बुद्धिः ॥ १६४

பகவானே! மறுபடி மிக முயற்சியுடன் அதனை எழுதுவதற்கு நான் துவக்கினால் என்னுடைய புத்தி முன்போல் யுக்திகளைத் தொகுப்பதில் இயங்குகின்றதில்லை.

कृपापारावारं तव चरणकोणाग्रशरणं
गता दीना दूनाः कति कति न सर्वेश्वरपदम् ।
गुरो मन्तुर्नन्तुः क इव मम पापांश इति चे -
न्मृषा मा भाषिष्ठाः पदकमलचिन्तावधिरसौ ॥ १६५

ஹே குருவே! வருந்திய எளியோர்கள் எவ்வளவுபேர்கள், கருணைக் கடலாகிய தங்களுடைய பாதங்களுடைய ஒரு மூலையையே அடைக்கலம் புகுந்தமையால் சிறந்த செல்வத்தை (ஈசுவரத்தன்மையை) அடைந்துள்ளார். எப்பொழுதும் உங்களையே மனனம் செய்பவனும், வணங்குகிறவனுமாகிய எனக்கு இந்த நிலைமை ஏற்பட்டது, ஒரு பாபத்தின் பயன் என்று கூறினால் பிரபுவே! தங்களுடைய எதிரில் வந்து தங்களது பாதகமலங்களைக் கண்டு மனதில் தியானம் செய்த பின்னும், அந்தப் பாபம் இருக்கக்கூடுமா? பொய் சொல்லாதீர்கள்.

इति वादिनमेनमार्यपादः करुणापूरकरम्भितान्तरङ्गः ।
अमृताब्धिसखैरपास्तमोहैर्वचनैः सान्त्वयति स्म वल्गुबन्धैः ॥ १६६

இவ்வாறு கூறிய அந்தப் பத்மபாதரை பகவத்பாதர் கருணை நிரம்பிய மனதுடன் கூடியவராக, அமிருதக்கடலின் அலைகளுக்கு நிகரானவைகளும் மயக்கத்தை மறைக்கின்றவைகளுமாகிய இன்சொற்தொகுதிகளால் சமாதானம் செய்தார்.

विषमो बत कर्मणां विपाको विषमोहोपमदुर्निवार एषः ।
विदितः प्रथमं मयाऽयमर्थः कथितश्चाङ्ग सुरेशदेशिकाय ॥ १६७

கர்மங்களின் பயன், விஷமமானது. விஷம் ஏறுவதுபோல் பயன்பட்டு யாராலும் தடுப்பதற்கரியது. ஐயா! இந்த விஷயம் என்னுல் முன்னமே அறியப்பட்டு சுரேசுவராசாரியரிடம் கூறப்பட்டது.

पूर्वं शृङ्गक्ष्माधरे मत्समीपे प्रेम्णा याऽसौ वाचिता पञ्चपादी ।
सा मे चित्तान्नापयात्यद्य शोको याताच्छीघ्रं तां लिखेत्याख्यदार्यः ॥ १६८

முன்பு சிருங்கேரியில் எனக்கு முன்னிலையில் அன்புடன் படிக்கப்பட்ட அந்தப் பஞ்சபாதி என்னுடைய மனதிலிருந்து அகலவில்லை, (அங்கே நிலை கொண்டுள்ளது). வருத்தத்தை நீக்கிக்கொள்வீர். கூறுகிறேன், எழுதிக்கொள்வீர் என்று ஸ்ரீசங்கரர் கூறினுர்.

आश्वास्येत्थं जलजचरणं भाष्यकृत्पञ्चपादी-
माचख्यौ तां कृतिमुपहितां पूर्वयैवाऽऽनुपूर्व्या ।
नैतच्चित्रं परमपुरुषेऽव्याहतज्ञानशक्तौ
तस्मिन् मूले त्रिभुवनगुरौ सर्वविद्याप्रवृत्तेः ॥ १६९

இவ்வாறு பத்மபாதரை சமாதானஞ்செய்து பஞ்சபாதியை முன்னிருந்த வரிசையாகவே யுக்திகளனைவற்றையும் தொகுத்துக் கூறினுர். தடைபடாத ஞானசக்தியையுடையவரும், ஸகல கலைகளுக்கும் உற்பத்தியிடமும், மூன்று உலகங்களுக்கும் பரமகுருவுமாகிய அந்த சங்கரபகவத்பாதர்விஷயத்தில் இது வியக்கத்தக்கதன்று.

प्रसभं स विलिख्य पञ्चपादीं परमानन्दभरेण पद्मपादः ।
उदतिष्ठदतिष्ठदभ्यरोदीत् पुनरुद्गायति तु स्म नृत्यति स्म ॥ १७०

அந்தப் பத்மபாதர் விரைவில் பஞ்சபாதியை எழுதி எழுந்தார், நின்ருர், அழுதார், கானஞ்செய்தார், பேரானந்தத்துடன் நர்த்தனஞ்செய்தார்.

कविताकुशलोऽथ केरलक्ष्माकमनः कश्चन राजशेखराख्यः ।
मुनिवर्यममुं मुदं वितेने निजकौटीरनिघृष्टपन्नखाग्र्यः ॥ १७१

பிறகு கவிதை இயற்றுவதில் வல்லவனை கேரளதேசத்து அரசனுகிய ராஜசேகரர் தன்னுடைய கிரீடத்திலுள்ள இரத்தினங்களால் பாதங்களின் நகங்களையொளியுள்ளதாகச் செய்து அந்த ஸ்ரீ சங்கராசாரியருக்கு ஆனந்தத்தையளித்தான்.

प्रथते किमु नाटकत्रयी सेत्यमुना संयमिना ततो नियुक्तः ।
अयमुत्तरमाददे प्रमादादनले साऽऽहुतितामुपागतेति ॥ १७२

அந்த நாடகங்கள் மூன்றும் பிரசித்திபெற்று விளங்குகின்றனவா? என்று, யதீசுவரராகிய அவரால் வினவப்பட்ட இந்த அரசன், ஏமாந்ததினுல் அது நெருப்பினுல் நீருயிற்று என்று கூறினுன்.

मुखतः पठितां मुनीन्दुना तां विलिखन्नेष विसिष्मियेऽथ भूपः ।
वद किं करवाणि किङ्करोऽहं वरदेति प्रणमन् व्यजिज्ञपच्च ॥ १७३

முனிசிரேஷ்டரால் முகபாடமாக கூறப்பட்ட அந்த நாடகங்கள் மூன்றையும் வரைந்தெடுத்து அரசன் வியப்படைந்தான். ''வரங்களை அளிப்பவரே! அடியனுகிய யான் செய்யவேண்டியது யாது? என்று அருளுவீர்களாக'' என்று பணிவுடன் தெரிவித்தான்.

नृप कालटिनामकाग्रहारा द्विजकर्मानधिकारिणोऽद्य शप्ताः ।
भवताऽपि तथैव ते विधेया बत पापा इति देशिकोऽशिषत्तम् ॥ १७४

அரசே! காலடியக்கிரகாரத்திலுள்ளவர்கள் பிராம்மணகர்மங்களுக்குத் தகுதியற்றவர்கள் என்று இப்பொழுது சாபமளிக்கப்பட்டுள்ளனர். தாமும் பாபிகளாகிய அவர்கள் அவ்வாறு நடக்கும்படி செய்யவேண்டும் என்று அந்த அரசனுக்கு கட்டளையளித்தார்.

पद्माङ्घ्रौ प्रतिपद्य नष्टविवृतिं तुष्टे पुनः केरल -
क्ष्मापालो यतिसार्वभौमसविधं प्राप्य प्रणम्याञ्जसा ।
लब्ध्वा तस्य मुखात् स्वनाटकवराण्यानन्दपाथोनिधौ
मज्जंस्तत्पदपद्मयुग्ममनिशं ध्यायन् प्रतस्थे पुरीम् ॥ १७५

பத்மபாதர், நாசமடைந்த தன்னுடைய டீகையை ஆசாரியரிடமிருந்து பெற்று உவகையுற்றபொழுது, பிறகு கேரளதேசத்தரசனும் யதிசக்ரவர்த்தியாகிய அந்த ஸ்ரீசங்கரபரமகுருவையடைந்து, பணிந்து, அவருடைய முகத்திலிருந்தே தன்னுடைய நாடகங்களையுமடைந்து ஆனந்தக்கடலிலாழ்ந்து, அவருடைய பாதகமலங்களை எப்பொழுதும் தியானம் செய்துகொண்டு தன்னுடைய நகரத்தையடைந்தான்.

इति श्रीमाधवीये तत्तीर्थयात्राटनार्थकः ।
संक्षेपशङ्करजये सर्गोऽजनि चतुर्दशः ॥ १४॥

இவ்வாறு ஸ்ரீ மாதவாசாரியர் இயற்றிய ஸ்ரீ சங்கரவிஜயச்சுருக்கத்தில்
பத்மபாதருடைய தீர்த்தயாத்திரை என்ற பொருள்கொண்ட
பதினுன்காவது ஸர்க்கம் முற்றிற்று.

आदितः श्लोकाः 1562

# अथ पञ्चदशः सर्गः

# பதினைந்தாவது ஸர்க்கம்

## आचार्यकृतदिग्विजयवर्णनम्

## ஆசாரியர் செய்த திக்விஜயவர்ணனை

अथ शिष्यवरैर्युतः सहस्रैरनुयातः स सुधन्वना च राज्ञा ।
ककुभो विजिगीषुरेष सर्वाः प्रथमं सेतुमुदार धीः प्रतस्थे ॥ १

பிறகு, உதாரமான புத்திவாய்ந்த இந்த ஸ்ரீசங்கரர் திக்விஜயம் செய்ய விருப்பமுற்றவராக ஆயிரக்கணக்கான சிஷ்யர்களுடனும் சுதன்வராஜனுடனும் முதலில் சேதுவிற்கு புறப்பட்டார்.

अभवत् किल तस्य तत्र शाक्तैर्गिरिजार्चाकपटान्मधुप्रसक्तैः ।
निकटस्थवितीर्णभूरिमोदस्फुटरिङ्गत्पटुयुक्तिमान् विवादः ॥ २

அங்கு, தேவீ பூஜை என்ற காரணத்தை முன்னிட்டு மதுபானத்தில் கருத்துள்ளவர்களான சாக்தர்களுடன், அருகிலுள்ளவர் உற்சாகப்படுத்த அநேக சிறந்த யுக்திகளைக் கூறி சிறப்பான வாதம் நிலவியது.

स हि युक्तिभरैर्विधाय शाक्तान् प्रतिवाग्व्याहरणेऽपि तानशक्तान् ।
द्विजजातिबहिष्कृताननार्यानकरोल्लोकहिताय कर्मसेतुम् ॥ ३

பிராம்மணதர்மங்களுக்குப் புறம்பான செயல்களைப் பின்பற்றிய சாக்தர்களை பல யுக்திகளைக் கூறி பதில்கூறச் சக்தியற்றவர்களாகச் செய்து உலகத்தின் நன்மைக்காக கர்மநெறியாகிய அணையைக்கட்டினார்.

अभिपूज्य स तत्र रामनाथं सह पाण्ड्यैः स्ववशे विधाय चोलान् ।
द्रविडांश्च ततो जगाम काञ्चीं नगरीं हस्तिगिरेर्नितम्बकाञ्चीम् ॥ ४

அங்கு அவர் ஸ்ரீராமநாதரைப் பூஜித்து, பாண்டிய தேசத்தியவர்களையும், சோழதேசத்தியவர்களையும், திராவிடர்களையும் தன்வசப்படுத்திப் பிறகு, ஹஸ்தகிரிக்கு மத்தியிலிருக்கும் காஞ்சிநகரத்திற்குச் சென்றார்.

सुरधाम स तत्र कारयित्वा परविद्याचरणानुसारि चित्रम् ।
अपवार्य च तान्त्रिकानतानीद्भगवत्याः श्रुतिसम्मतां सपर्याम् ॥ ५

அவர் அங்கு ஒரு தேவாலயத்தைக் கட்டச் செய்து உயர்ந்த வித்தையாகிய உபநிஷத்தின் தத்வஞானத்தைப் பின்பற்றியதாகப் பூஜையையும் நியமிப்பதற்கு,

தாந்திரிகர்களைத் தந்திரங்களின் திறமையினால் வென்று வேதோக்தமான பூஜையை தேவிக்குச் செய்யும்படிச் செயலாற்றினார்.

निजपादसरोजसेवनायै विनयेन स्वयमागतानथाऽऽन्ध्रान् ।
अनुगृह्य स वेङ्कटाचलेशं प्रणिपत्याऽऽप विदर्भराजधानीम् ॥ ६

தன்னுடைய பாதகமலங்களுக்கு பணிசெய்வதின் பொருட்டுப் பணிவுடன் வந்த ஆந்திரர்களை அனுக்கிரகம் செய்து திருவெங்கடாசலேசுவரரைக் கண்டு பணிந்து பின்பு விதர்ப்பதேசத்திற்கு சென்றார்.

अभिगम्य स भक्तिपूर्वमस्यां कृतपूजः क्रथकैशिकेश्वरेण ।
निजशिष्यनिरस्तदुष्टबुद्धीन् व्यदधाद्भैरवतन्त्रसावलम्बान् ॥ ७

விதர்ப்பதேசத்தரசனால் பக்தியுடன் வரவேற்று பூஜிக்கப்பட்டவராக, பைரவதந்திரத்தைப் பின்பற்றி அறநெறிக்குமாறாகச் செயலாற்றுகின்ற துஷ்டர்களை தன்னுடைய சிஷ்யர்கள் மூலமாக வென்று நன்னெறியைப் பின்பற்றும்படிச் செய்தார்.

अभिवाद्य विदर्भराडवादीदथ कर्णाटवसुन्धरामियासुम् ।
भगवन् बहुभिः कपालिजालैः स हि देशो भवतामगम्यरूपः ॥ ८

न हि ते भगवद्यशः सहन्ते निहितेर्ष्याः श्रुतिषु ब्रवीम्यतोऽहम् ।
अहिते जगतां समुत्सहन्ते महितेषु प्रतिपक्षतां वहन्ते ॥ ९

பிறகு கர்ணாடகதேசத்திற்குச் செல்ல விரும்பிய அந்த ஜகத்குருவினிடம் விதர்ப்பராஜன் கூறினார்: - ''பகவானே! கணக்கில்லாக் காபாலிகர்கள் வசிக்கும் அந்த தேசத்திற்குத் தாங்கள் செல்லுவது சிறப்பல்ல. வேதங்களில் பகைமை புத்திகொண்டுள்ள அவர்கள் பகவானாகிய தங்களுடைய புகழைப் பொறுக்கமாட்டார்கள். சான்றோர்களிடம் சினங்கொண்ட அவர்கள் உலகத்தின் தீமையிலேயே உற்சாகமுற்றவர்கள். ஆகையால் யான் கூறுகிறேன்.''

इतिवादिनि भूमिपे सुधन्वा यतिराजं निजगावधिज्यधन्वा ।
मयि तिष्ठति किं भयं परेभ्यस्तव भक्ते यतिनाथ पामरेभ्यः ॥ १०

இவ்வாறு விதர்ப்பராஜன் கூறியபொழுது சுதன்வராஜன் நாணேற்றி வில்லைக் கையில் தரித்தவனாகக் கூறினான்:- ''யதிசக்ரவர்த்தியே! தங்களுடைய தாசனாகிய நான் இருக்கையில் பாமரர்களாகிய மற்றவர்களிடமிருந்து தங்களுக்கு கவலை ஏன்?'' (என்றான்).

अथ तीर्थकराग्रणीः प्रतस्थे किल कापालिकजालकं विजेतुम् ।
निशमय्य तमागतं समागात्क्रकचो नाम कपालिदेशिकाग्र्यः ॥ ११

பிறகு நூலியற்றியவர்களின் முன்னணியிலுள்ளவராகிய ஸ்ரீசங்கரர் காபாலிகர்களுடைய கும்பலை வெல்லுவதற்குப் புறப்பட்டார். அவருடைய வரவையறிந்து காபாலிகர்களுடைய ஆசிரியர்களில் முதல்வனாகிய க்ரகசன் என்பவன் வந்தான்.

पितृकाननभस्मनाऽनुलिप्तः करसंप्राप्तकरोटिरात्तशूलः ।
सहितो बहुभिः स्वतुल्यवेषैः स इति स्माऽऽह महामनाः सगर्वः ॥ १२

மயானத்திலுள்ள சாம்பலை பூசிக்கொண்டு, கையில் மனிதனுடைய மண்டையோட்டை தரித்தவனும், சூலாயுதத்தைக் கையில் ஏந்தியவனும், தைரிய முள்ளவனுமாகிய அவன் தன்னைப்போலவே (உடைகளணிந்த வேஷங்களை தரித்த) அநேக சீடர்களுடன் வந்து செருக்குடன் கூறினன்.

भसितं धृतमित्यदस्तु युक्तं शुचि संत्यज्य शिरःकपालमेतत् ।
वहथाशुचि खर्परं किमर्थं न कथंकारमुपास्यते कपाली ॥ १३

நீங்கள் விபூதியையணிந்திருப்பது நியாயமே. ஆயினும், பரிசுத்தமான இந்த மண்டையோட்டை மறுத்து, அசுத்தமான மண் கமண்டலத்தை ஏன் சுமக்குகிறீர்கள்? கபாலியை ஏன் உபாசனை செய்கிறீர்களில்லை?

नरशीर्षकुशेशयैरलब्ध्वा रुधिराक्तैर्मधुना च भैरवार्चाम् ।
उमया समया सरोरुहाक्ष्या कथमाश्लिष्टवपुर्मुदं प्रयायात् ॥ १४

இரக்கத்தினல் நனைந்த, மனிதத்தலைகளாகிய தாமரைமலர்களாலும், கள்ளினலும் பைரவனுக்குப் பூஜைசெய்யாவிடில், தனக்குச் சமானமான உமையினல் ஆலிங்கனம் செய்துகொள்ளப்பட்ட உடலை உடையவனுக சந்தோஷத்தை எவ்வாறு அடையமுடியும்?

इति जल्पति भैरवागमानां हृदयं कापुरुषेति तं विनिन्द्य ।
निरवासयदात्मवित्समाजात् पुरुषैः स्वैरधिकारिभिः सुधन्वा ॥ १५

இவ்வாறு பைரவதந்திரங்களுடைய நுண்பத்தைக் கூறுகையில், 'அற்பனே' என்று அவனை நிந்தித்து ஸுதன்வராஜன் தன்னுடைய வீரர்கள் மூலமாக ஆத்மஞானிகளின் சபையிலிருந்து விரட்டினன்.

भ्रुकुटीकुटिलाननश्चलोष्ठः सितमुद्यम्य परश्वधं स मूर्खः ।
भवतां न शिरांसि चेद्विभिन्द्यां क्रकचो नाहमिति ब्रुवन्नयासीत् ॥ १६

புருவங்களை நெறித்துக் கடுமையான முகத்தையும், அசைகின்ற உதடுகளையும் கொண்டவனுக அந்த மூடன் பளபளப்பான கொடாரியை உயர்த்திக்கொண்டு ''உங்களுடைய தலைகளையறுக்காவிடில் யான் கிரகசனல்லன்'' என்று கூறிக்கொண்டு சென்ருன்.

रुषितानि कपालिनां कुलानि प्रलयाम्भोधरभीकरारवाणि ।
अमुना प्रहितान्यतिप्रसंख्यान्यभियातानि समुद्यतायुधानि ॥ १७

பிரளயகாலத்துக் கடல்போல் ஆரவாரம் செய்கின்றவர்களும் ஆயுதங்களைத் தாங்கியவர்களுமாகிய கணக்கில்லாக் காபாலிகர்களின் சைன்னியங்கள் சீறிய சினங்கொண்டவைகளாக வந்துப் போருக்குத் தயாராயின.

अथ विप्रकुलं भयाकुलं तदद्भुतमालोक्य महारथः सुधन्वा ।
कुपितः कवची रथी निषङ्गी धनुरादाय ययौ शरान् विमुञ्चन् ॥ १८

பிறகு பிராம்மணர்களுடைய கூட்டம் பயந்து ஓடியதைக்கண்டு மகாரதனுகிய ஸுதன்வராஜன் கோபங்கொண்டவனுய் கவசத்தையும் அம்பருத்தூணிகளையும் எடுத்துக்கொண்டு இரதத்தில் வீற்று வில்லெடுத்து அம்புகளை எய்துகொண்டு புறப்பட்டான்.

अवनीभृति योधयत्यरींस्तांस्त्वरयैकत्र ततोऽन्यतो नियुक्ताः ।
क्रकचेन वधाय भूसुराणां द्रुतमासेदुरुदायुधाः सहस्रम् ॥ १९

அரசன் ஓரிடத்தில் போர் செய்துகொண்டிருக்கையில், கிருகாசனுல் அனுப்பப்பட்ட ஆயிரக்கணக்கான காபாலிகர்கள் பிராம்மணர்களுடைய வதைக்காக ஆயுதங்களுடன் வேறொரு திசையிலிருந்து தோன்றினர்.

अवलोक्य कपालिसङ्घमाराच्छमनानीकनिकाशमापतन्तम् ।
व्यथिताः प्रतिपेदिरे शरण्यं शरणं शङ्करयोगिनं द्विजेन्द्राः ॥ २०

யமனுடைய சைன்னியங்கள் போல் வருகின்ற காபாலிகக்கூட்டத்தை தூரத்திலேயே கண்டு பிராம்மணர்கள் வருந்தி அடைக்கலம் புகுந்தவர்களை காப்பாற்றுகின்ற ஸ்ரீ சங்கரயோகீசுவரரைத் தஞ்சமடைந்தனர்.

असितोमरपट्टिशत्रिशूलैः प्रजिघांसून् भृशमुज्झिताट्टहासान् ।
यतिराट् स चकार भस्मसात्तान्निजहुङ्कारभुवाऽग्निना क्षणेन ॥ २१

வாள், தோமரம், பட்டிசம், சூலம் ஆகிய அயுதங்களால் பிராம்மணர்களைக் கொலைசெய்ய விரும்பி அட்டகாசம் செய்கின்ற அவர்களை யதிகளுக்கு அரசராகிய ஸ்ரீசங்கரர் தன்னுடைய 'ஹூம்'காரத்தினுலுண்டான அக்னியினுல் சாம்பலாக்கினுர்.

नृपतिश्च शरैः सुवर्णपुङ्खैर्विनिकृत्तैः प्रतिपक्षवक्त्रपद्मैः ।
रणरङ्गभुवं सहस्रसङ्घैः समलंकृत्य मुदाऽगमन्मुनीन्द्रम् ॥ २२

அரசனும், தங்கக்கட்டமைத்த அம்புகளால் ஆயிரக்கணக்கான எதிரிகளுடைய தலைகளாகிய தாமரைமலர்களால் போர்க்களத்தை அலங்காரம் செய்து வெற்றியுவகையுடன் முனிசிரேஷ்டராகிய ஸ்ரீசங்கரருடைய அருகில் சென்றுர்.

तदनु क्रकचो हतान् स्वकीयानरुजांश्च द्विजपुङ्गवानुदीक्ष्य ।
अतिमात्रविदूयमानचेता यतिराजस्य समीपमाप भूयः ॥ २३

பிறகு, தன்னுடைய வீரர்கள் கொல்லப்பட்டதையும், பிராம்மண சிரேஷ்டர்கள் காயமற்றிருப்பதையும் கண்டு, க்ரகசன் மிகவும் வருந்திய மனமுடையவனுக, பிறகு யதீசுவரருடைய அருகில் வந்தான்.

कुमताश्रय पश्य मे प्रभावं फलमाप्स्यस्यधुनैव कर्मणोऽस्य ।
इति हस्ततले दधत्कपालं क्षणमध्यायदसौ निमील्य नेत्रे ॥ २४

''கெட்ட கொள்கையை பின்பற்றினவரே! என்னுடைய பிரபாவத்தை பார்ப்பீராக. இந்தச் செயலுக்குப் பயனை இப்பொழுதே அடைவீர்'' என்று கூறி, அவன், கையில் கபாலத்தை ஏந்திக் கண்களை மூடிக்கொண்டு, கணநேரம் கபாலியை தியானம் செய்தான்.

सुरया परिपूरितं कपालं झटिति ध्यायति भैरवागमज्ञे ।
स निपीय तदर्धमर्धमस्या निदधार स्मरति स्म भैरवं च ॥ २५

பைரவாகமத்தையறிந்த அவன் தியானம் செய்கையில், திடீரென்று அந்த மண்டையோடு, கள் நிரம்பியதாயிற்று. அதில் பாதியைக் குடித்து, பாதியை மீதிவைத்து, பிறகும் கபாலியை நினைத்தான்.

अथ मर्त्यशिरःकपालमाली ज्वलनज्वालजटाछटस्त्रिशूली ।
विकटप्रकटाट्टहासशाली पुरतः प्रादुरभून्महाकपाली ॥ २६

பிறகு, மனிதர்களுடைய மண்டையோடுகளை மாலையாகவணிந்தவரும், அக்னிஜ்வாலைபோல் ஒளிவீசுகின்ற ஜடைகளின் கூட்டத்தையுடையவரும், கையில் சூலத்தைத் தரித்தவரும், பயங்கரமாக ஒலிக்கும் அட்டகாசத்தைச் செய்கின்றவருமாகிய 'மகாகபாலி' என்ற தேவர் முன்னால் தோன்றினார்.

तव भक्तजनद्रुहं दृशा सञ्जहि देवेति कपालिना नियुक्तः ।
कथमात्मनि मेऽपराध्यसीति क्रकचस्यैव शिरो जहार रुष्टः ॥ २७

தேவ! உன்னுடைய பக்தனுக்குத் தீங்கு செய்தவனைக் கண்பார்வையினாலேயே கொல்லுவாயாக என்று கூறப்பட்ட மகாகபாலி, ''என்னுடைய ஆத்மாவிற்கே நீ தீமை எவ்வாறு செய்கிறாய்'' என்று கூறி, சினத்துடன் சீறி அந்த க்ரகசனுடைய தலையையே அறுத்தார்.

(ज्ञानी त्वात्मैव मे मतम् என்று பகவத்கீதையில், ஆத்மஞானி பரமாத்மாவிற்கே ஆத்மா என்று கூறியிருக்கிறார்.)

यमिनामृषभेण संस्तुतः सन्नयमन्तर्धिमवाप देववर्यः ।
अखिलेऽपि खिले कुले खलानाममुमानर्चुरलं द्विजाः प्रहृष्टाः ॥ २८

யதீசுவரராகிய ஸ்ரீசங்கரரால் நன்கு துதிக்கப்பட்ட பிறகு அந்த மகா பைரவன் மறைந்தார். இவ்வாறு துஷ்டர்களுடைய கூட்டம் யாவும் அழிந்த பின் அந்தணர்கள் ஆனந்தமடைந்தவர்களாக அந்தப் பரமகுருவைப் பூஜித்தனர்.

यतिराडथ तेषु तेषु देशेष्विति पाषण्डपरान् द्विजान् विमथ्नन् ।
अपरान्तमहार्णवोपकण्ठं प्रतिपेदे प्रतिवादिदर्पहन्ता ॥ २९

பிறகு ஸ்ரீசங்கரர் ஆங்காங்குள்ள பாஷண்டர்களான பிராம்மணர்களைக் கண்டித்துக்கொண்டு, எதிர்வாதம் கூறுபவர்களுடைய செருக்கையும் சிதறடித்துக்கொண்டு மேற்குச் சமுத்திரத்திற்கு அருகே சென்றார்.

विललास चलत्तरङ्गहस्तैर्नदराजोऽभिनयन्निगूढमर्थम् ।
अवधीरितदुन्दुभिस्वनेन प्रतिवादीव महान् महारेण ॥ ३०

துந்துபிவாத்தியத்தினுடைய ஒலியை வென்ற பெரிய ஒலியினுல், அந்தக் கடல், அசைகின்ற அலேகளாகிய கைகளால், தன் மனதில் கூடமான பொருளே அபிநயித்துக் காண்பித்துக்கொண்டு எதிரிபோல் விளங்கிற்று.

बहुलभ्रमवानयं जडात्मा सुमनोभिर्मथितश्च पूर्वमेव ।
इति सिन्धुमुपेक्ष्य स क्षमावानिव गोकर्णमुदारधीः प्रतस्थे ॥ ३१

ஜடப் பிரகிருதியான இவன் அதிகமான பிரமையுள்ளவன். (ஜலத்தில் சுழிகள்) மேலும் தேவர்களால் முன்பே கடையப்பட்டவன். (புத்திமான்களால் கடைந்து கண்டிக்கப்பட்டவன்.) ஆகையால் இவனேத் துன்பப்படுத்த வேண்டாம் என்று உபேக்ஷை செய்பவர்போல் பொறுமையுள்ளவரும், பரந்த நோக்கமுள்ளவருமாகிய அவர் கோகர்ணத்திற்குப் புறப்பட்டார்.

अवगाह्य सरित्पतिं स तत्र प्रियमासाद्य तुषारशैलपुत्र्याः ।
स्तवसत्तममद्भुतार्थचित्रं रचयामास भुजङ्गवृत्तरम्यम् ॥ ३२

அங்கு சமுத்திரத்தில் ஸ்நானம் செய்து, பார்வதியின் பிரியனுன ஈசுவரனுடைய கோயிலேயடைந்து புஜங்கவிருத்தத்தில் அற்புதப் பொருள்கள் கொண்ட சிறந்த துதியை இயற்றினுர்.

तदनन्तरमागमान्तविद्यां प्रणतेभ्यः प्रतिपादयन्तमेनम् ।
हरदत्तसमाह्वयोऽधिगम्य स्वगुरुं सङ्गिरते स्म नीलकण्ठम् ॥ ३३

பிறகு தன்னேயணுகி வணங்கியவர்களுக்கு உபநிஷத்துக்களில் தத்வத்தையுபதேசம் செய்கின்ற இவரைப்பற்றி ஹரதத்தர் என்பவர் தன்னுடைய குருவாகிய நீலகண்டரையடைந்து கூறினுர்.

भगवन्निह शङ्कराभिधानो यतिरागत्य जिगीषुरार्यपादान् ।
स्ववशीकृतभट्टमण्डनादिः सह शिष्यैर्गिरिशालये समास्ते ॥ ३४

பகவானே! சங்கரர் என்ற பெயருடைய யதீசுவரர், குமரிலபட்டர், மண்டனமிச்ரர் முதலியவர்களே வென்றவராகி இங்கு வந்து பூஜ்யர்களாகிய தங்களே வெல்ல விருப்பங்கொண்டு சிஷ்யர்களுடன் பார்வதிபதியின் கோயிலில் இருக்கிறுர்.

इति तद्वचनं निशम्य सम्यग्ग्रथितानेकनिबन्धरत्नहारः ।
शिवतत्परसूत्रभाष्यकर्ता प्रहसन् वाचमुवाच शैववर्यः ॥ ३५

இவ்வாறு ஹரதத்தருடைய வசனத்தைச் செவியுற்று, அநேக நூல்களாகிய ரத்தினமயமான ஹாரங்களேத் தொகுத்தவரும், பிரம்மசூத்திரங்களுக்கு சிவபரமான பாஷ்யத்தை இயற்றியவரும், சைவர்களில் சிறந்தவருமாகிய அந்த நீலகண்டாசாரியர் நகைத்துக் கூறினுர்.

सरितां पतिमेष शोषयेद्वा सवितारं वियतः प्रपातयेद्वा ।
पटवत्सुरवर्त्म वेष्टयेद्वा विजये नैव तथाऽपि मे समर्थः ॥ ३६

இவர் நதிகளுக்கரசனுகிய சமுத்திரத்தை வற்றச் செய்வார். கதிரவனை ஆகாயத்திலிருந்து கீழே தள்ள வல்லவராவார். ஆகாயத்தை வஸ்திரம்போல் சுற்றுவார். ஆனல் என்னை வெல்ல வல்லவரல்லர்.

परपक्षतमिस्रचञ्चदर्कैर्मम तर्कैर्बहुधा विशीर्यमाणम् ।
अधुनैव मतं निजं स पश्यत्विति जल्पन्निरगादनल्पकोपः ॥ ३७

பரமதங்களாகிய இருளையறுக்க இங்கு கதிரவர்களாகிய என்னுடைய யுக்திகளால் தமது மதம் சிதறிப்போவதை அவர் இப்பொழுதே பார்க்கட்டும் என்று கூறிக்கொண்டு மிக்க கோபத்துடன் வெளிக்கிளம்பினர்.

सितभूतितरङ्गिताखिलाङ्गैः स्फुटरुद्राक्षकलापकम्रकण्ठैः ।
परिवीतमधीतशैवशास्त्रैर्मुनिरायान्तममुं ददर्श शिष्यैः ॥ ३८

அங்கங்களில் வெண்மையான விபூதி பூசிக்கொண்டவர்களும், ருத்திராக்ஷமாலைகளாலழகாக விளங்கும் கழுத்துக்களையுடையவர்களும், சைவ நூல்களைக் கற்றவர்களுமாகிய சீடர்களால் சூழப்பட்டுவருகின்ற அந்த நீலகண்டாசாரியரை ஸ்ரீ சங்கரபகவத்பாதர் கண்ணுற்றார்.

अधिगत्य महर्षिसन्निकर्षं कविरातिष्ठिपदात्मपक्षमेषः ।
शुकतातकृतात्मशास्त्रतः प्राक्कपिलाचार्य इवाऽऽत्मशास्त्रमद्धा ॥ ३९

சுகயோகின் தந்தையாகிய வியாசமாமுனிவர் தன்னுடைய மதத்தை இயற்றுவதற்குமுன், கபிலமுனிவர் தன் கொள்கையை நிலைநிறுத்தியது போல், அறிஞர்களுக்கரசனுகிய நீலகண்டர் மாமுனிவராகிய ஸ்ரீசங்கரரை அடைந்து ஆச்சரியப்படும்படி தன்னுடைய மதத்தை நிலையாகக் கூறினர்.

भगवन् क्षणमात्रमीक्ष्यतां तत्प्रथमं तु स्फुरदुक्तिपाटवं मे ।
इति देशिकपुङ्गवं निवार्य व्यवदत्तेन सुरेश्वरः सुधीशः ॥ ४०

பகவானே! சிறிதுநேரம் யான் அவருடைய பேச்சுத்திறமையைப் பார்க்கின்றேன் என்று கூறி புத்திமான்களில் சிறந்த சுரேசுவரர் ஆசாரியசிரேஷ்டரைத் தடைசெய்து அவருடன் வாதம் செய்தார்.

सुमते तव कौशलं विजाने स्वयमेवैष मुनिः प्रतिब्रवीतु ।
इति तं विनिवर्त्य नीलकण्ठो यतिकण्ठीरवसंमुखस्तदाऽऽसीत् ॥ ४१

சிறந்த புத்திமானே! உமது திறமையை யான் அறிவேன். இந்த முனிவரே பதில் கூறட்டும் என்று அந்த சுரேசுவரரை விலக்கி நீலகண்டர் யதிசிரேஷ்டருக்கு எதிராக வாதத்திற்குத் தயாரானர்.

परपक्षबिसावलीमरालैर्वचनैस्तस्य मतं चखण्ड दण्डी ।
अथ नीलगलः स्वपक्षरक्षां जहदद्वैतमपाकरिष्णुरूचे ॥ ४२

பிறருடைய மதங்களாகிய தாமரைத்தண்டுத் தொகுதிகளைத் தின்பதில் அன்னப்பறவைகளாகிய சொற்களால் யதீசுவரர் அவரை நிராகரித்தார். பிறகு நீலகண்டர் தன்னுடைய மதத்தை இழந்து அத்வைதத்தை நிராகரிக்க விரும்பியவராக வாதித்தார்.

प्रशमिंस्तदसीति यस्त्रयीकैः कथितोऽर्थः स न युज्यते त्वदिष्टः ।
अभिदा तिमिरप्रकाशयोः किं घटते हन्त विरुद्धधर्मवत्त्वात् ॥ ४३

யதீசுவரரே! 'तत्त्वमसि' என்ற உபநிஷத்திலுள்ள வசனங்களுக்கு உங்களுடைய கருத்துக் கூறல் சரியன்று. இருளுக்கும் பிரகாசத்திற்கும் அபேதம் எவ்வாறு கூறமுடியாதோ அதுபோலவே முரணான தன்மைகளுடைய ஜீவபரமாத்மாக்களுக்கு அபேதம் ஏற்படாது.

रवितत्प्रतिबिम्बयोरिवाभिद्घटतामित्यपि तत्त्वतो न वाच्यम् ।
मुकुरे प्रतिबिम्बितस्य मिथ्यात्वगतेर्व्योमशिवादिदेशिकोक्त्या ॥ ४४

मुकुरस्थमुखस्य बिम्बवक्त्राद्भिदया पार्श्वगलोकलोकनेन ।
प्रतिबिम्बितमाननं मृषा स्यादिति भावत्कमतानुगोक्तिका च ॥ ४५

ஆகாயத்திலுள்ள சூரியனுக்கும் பிரதிபிம்ப சூரியனுக்கும்போல் உண்மையில் ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் பேதமின்மையே என்று கூறுவோமேயாகில் அது சரியன்று. கண்ணாடியில் காணப்படும் முகம் பொய்யானது என்று வியோமசிவாசாரியர் கூறுகிறார். உண்மையான பொருளும் பொய்யான பொருளும் ஒன்றாகாதபடியால் அவ்விரண்டிற்கும் வேற்றுமையேயன்றி அபேதம் கூறமுடியாது. உங்களுடைய மதத்தைப் பின்பற்றுகிறவர்களும் கண்ணாடியில் முகம் காணப்படுகிறதென்றும், அந்த முகம் பிறராலும் காணப்படுவதாலும், ஒருவனுக்கு இரு முகங்களில்லாததுபற்றி பிரதிபிம்பமுகம் பொய்யென்றும், பொய்யாயினும் உண்டு என்றும் ஒப்புக்கொள்ளுகிறார்கள்.

न च मायिकजीवनिष्ठमौढ्येश्वरसार्वज्ञविरुद्धधर्मबाधात् ।
उभयोरपि चित्स्वरूपताया अविशेषादभिदैव वास्तवीति ॥ ४६

ஜீவனுக்கு மூடத்தன்மையும், ஈசுவரனுக்கு ஸர்வக்ஞத்தன்மையும் மாயையினால் ஏற்பட்டது. அவ்விரண்டு தன்மைகளையும் விலக்கிக் கேவலம் சைதன்யம் என்ற அம்சத்தைக்கொண்டு இருவருக்கும் உண்மையில் அபேதம் என்று கூறுவதும் இயலாது.

न हि मानशतैः स्थितस्य बाधाऽपरथा दत्तजलाञ्जलिर्भिदा स्यात् ।
विपरीतहयत्वगोत्वबाधाद्व्यपश्वोर्निजरूपकैक्ययुक्त्या ॥ ४७

அநேக பிரமாணங்களால் அறிந்துகொள்ளப்பட்ட பொருளை இல்லையென்று மறுத்தால் பேதம் என்பதற்கு தர்ப்பணம் செய்யப்பட்டதாக ஆகிவிடும் (இறந்ததாகிவிடும்). குதிரைஜாதி, பசுஜாதி என்று ஜாதிபேதம்

எல்லோரும் ஒப்புக்கொண்டவிஷயமே. அதன்படி இனவேறுபாடும் ஒப்புக்கொள்ளப்பட்டதாக இருக்கையில் அதை மறுப்பதற்கில்லையல்லவா?

यदि मानगतस्य हानमिष्टं न भवेत्तर्हि न चेश्वरोऽहमस्मि ।
इति मानगतस्य जीवसर्वेश्वरभेदस्य न हानमप्यभीष्टम् ॥ ४८

பிரமாணசித்தமானதை தள்ளக்கூடாதாயின் ''யான் ஈசுவரனல்லன்'' என்று அனுபவப்பிரமாணசித்தமான பேதத்தை மறுக்கக்கூடாதன்றோ?

इति युक्तिशतैः स नीलकण्ठः कविरक्षोभयदद्वितीयपक्षम् ।
निगमान्तवचःप्रकाश्यमानं कलभःपद्मवनं यथा प्रफुल्लम् ॥ ४९

யானை மலர்ந்த தாமரைக்காட்டைக் கலக்குவதுபோல், உபநிஷத்துக்களால் விளக்கப்படும் அத்வைதமதத்தை, வித்வானாகிய அந்த நீலகண்டர் அநேக யுக்திகளால் கலக்கிமறித்தார்.

अथ नीलगलोक्तदोषजालो भगवानेवमवोचदस्तु कामम् ।
शृणु तत्त्वमसीति संप्रदायश्रुतिवाक्यस्य परावरेऽभिसन्धिम् ॥ ५०

பிறகு, நீலகண்டர் கூறிய குறைகளைக் கேட்ட பகவானாகிய ஸ்ரீசங்கரர், நீர் கூறியது இருக்கட்டும். ஆயினும் 'तत्त्वमसि' என்ற மகாவாக்கியத்திற்கு சம்பிரதாயப்படி அகண்ட ஸச்சிதானந்த உருவமாகிய பிரம்மவஸ்துவின் கருத்து என்பதைக் கேட்பீராக.

ननु वाच्यगता विरुद्धताधीरिह सोऽसावितिवद्विरोधहाने ।
अविरोधि तु वाच्यमाददैक्यं पदयुग्मं स्फुटमाह को विरोधः ॥ ५१

ஐயா! வாச்யப்பொருள் இரண்டிற்கும்தான் முரண்பாடு. அற்பக்ஞத்வம் உள்ள ஜீவனுக்கும் ஸர்வக்ஞத்வமுள்ளவனாகிய ஈசுவரனுக்கும் பேதம்தான். அவர்கள் வாச்யப்பொருள்கள். ஆயினும், லக்ஷ்யார்த்தத்தை எடுத்துக்கொண்டு அபேதம் கூறுவோம். அந்த தேசத்தில், அந்தக்காலத்தில், அந்த நிலைமையிலுள்ள தேவதத்தனைக் கண்டு இப்பொழுது பார்க்கும் பொழுது தேசகாலங்கள் முதலியவைகளை நீக்கி வ்யக்தியொன்றுபற்றி அபேதம் கூறுவதுபோல் கூறுவதில் என்ன விரோதம்?

यदिहोक्तमतिप्रसञ्जनं भो न भवेन्नो हि गवाश्वयोः प्रमाणम् ।
अभिदाघटकं तयोर्यतः स्यादुभयोर्लक्षणयाऽभिदानुभूतिः ॥ ५२

இவ்விதம், இங்கு சித்துக்கள் இரண்டிற்கு அபேதம் என்று கூறினால் பேதமுள்ளதாக வேறு பிரமாணங்களால் அறிந்துகொள்ளப்பட்ட பசுவிற்கும், குதிரைக்கும் அபேதமே ஏற்படும் என்றும் தோஷம் கூறப்பட்டதோ, அது சரியன்று. பசுவிற்கும், குதிரைக்கும் வேறு பிரமாணத்தினால் அபேதமே கூறப்படுகிறதில்லை. அவ்வாறு ஏதாவது ஒரு பிரமாணத்தினால் அவ்விரண்டிற்கும் அபேதம் அறியப்பட்டிருந்தால் அதையனுசரித்து அபேதம் கூறலாம்.

ननु मौढ्यसमस्तवित्त्वधर्मान्वितजीवेश्वररूपतोऽतिरिक्तम् ।
उभयोः परिनिष्ठितं स्वरूपं बत नास्त्येव यतोऽत्र लक्षणा स्यात् ॥ ५३

ஐயா! மூடத்தன்மை ஜீவனுடைய நிலைமை, எல்லாமறியும் தன்மை ஈசுவரனுடைய ஸ்வரூபம். இதுதான் இருவருக்கும் ஸ்திரமானதும் உண்மையானதுமாகிய உருவமேயன்றி வேறு தன்மை இருவருக்கும் பொதுவாக ஒன்று கிடையாது. அவ்வாறிருந்தாலன்றோ அந்த அம்சத்தில் லக்ஷணை என்று கூறுதல் தகும். (அதாவது तत्त्वमसि என்றவிடத்தில் விசேஷணத்துடன் கூடிய ஜீவேசுவரர்கள் வாச்யார்த்தம். விசேஷணத்தை விட்டு சைதன்யாம்சம் லக்ஷ்யார்த்தம் என்று கூறுதல் தவறு. விசேஷணங்களுடன் கூடிய நிலைமையல்லாமல் இருவருக்கும் பொதுவான ஒரு அம்சமில்லை என்று நீலகண்டருடைய ஆக்ஷேபம்.)

इति चेन्न समीक्ष्यमाणजीवेश्वररूपस्य च कल्पितत्वयुक्त्या ।
तदधिष्ठितसत्यवस्तुनोऽद्धा नियमेनैव सदाऽभ्युपेयतायाः ॥ ५४

ஸ்ரீசங்கரர் பதில் கூறுகிறார்:- மேற்கூறியது சரியல்ல. ஏனெனில், ஜீவனுடைய மூடத்தன்மை (கிஞ்சித்க்ஞத்வம்) ஈசுவரனுடைய ஸர்வக்ஞத்வம் இரண்டும் சுத்த சைதன்யத்தில் கற்பனை செய்யப்பட்டவையேயாகும். அதிஷ்டானமாகிய சித்து, ஸத்தியம் என்பதை ஒப்புக்கொண்டேயாகவேண்டும். அது வேற்றுமையுள்ளதன்று.

भवताऽपि तथा हि दृश्यदेहाद्यहमन्तस्य जडत्वमभ्युपेयम् ।
परिशिष्टमुपेयमेकरूपं ननु किञ्चिद्धि तदेव तस्य रूपम् ॥ ५५

நான் இளைத்தவன், பருத்தவன், பார்க்கிறேன், போகிறேன், சாப்பிடுகிறேன் என்ற வியவகாரங்களில் தேகத்தினுடையவும் இந்திரியங்களுடையவும் செயல்களை சித்தான ஆத்மாவிடத்தில் கற்பனை செய்து கூறுகின்றது என்பதை நீங்களும் ஒப்புக்கொள்ள வேண்டும். இந்த கற்பனைகளுக்கு அதிஷ்டானம் யாதோ அதுவே அந்த சைதன்யம்.

जगतोऽसत एवमेव युक्त्या त्वनिरूप्यत्वत एव कल्पितत्वात् ।
तदधिष्ठितभूतरूपमेष्यं ननु किञ्चिद्धि तदीश्वरस्य सत्यम् ॥ ५६

உலகம் தோன்றியுள்ளது. பிறகு நாசத்தையுமடைகின்றது. அதனுடைய உற்பத்தி நாசங்களுக்கு அதிஷ்டானமான பொருள் ஒன்று இருக்க வேண்டும். ஸத்துக்கு நாசம் கிடையாது. அஸத்தாகில் தோன்றாது. தோற்றமும் நாசமுமாகிய விகாரமுள்ள உலகத்திற்கு நாசமற்ற நித்தியமான பொருள் அதிஷ்டானம். அதுதான் ஈசுவரனுடைய உண்மையான உருவம்.

तदिह श्रुतिगोभयस्वरूपे निरुपाधौ न हि मौढ्यसर्ववित्त्वे ।
न जपाकुसुमात्तलोहितिम्नः स्फटिके स्यान्निरुपाधिके प्रसक्तिः ॥ ५७

பக்கத்தில் வைத்திருந்த ஜபாபுஷ்பத்தினால் (செம்பருத்திப்பூ) ஸ்படிகக்கல்லில் தோன்றிய சிவப்பு நிறம், அந்தப் புஷ்பத்தின் சம்பந்தமில்லாத

காலத்தில் எவ்வாறு தோன்றுகிறதில்லையோ அப்படி வியவகாரமும் நிலவுகிறதில்லையோ அதுபோலவே உபாதியற்ற சித்தில் இரண்டு ரூபம் கற்பனையாலுண்டானபடியால் அவை உண்மையல்ல. அதிஷ்டானரூபமொன்றுதான் உண்மை.

अपि भेदधियो यथार्थतायां न भयं भेददृशः श्रुतिर्ब्रवीतु ।
विपरीतदृशो ह्यनर्थयोगो न भिदाधीर्विपरीतधीर्यतः स्यात् ॥ ५८

தவறுகத் தெரிந்துகொள்ளுகிறவனுக்குத்தான் துக்கம். உண்மையைத் தெரிந்துகொள்பவனுக்கு ஆபத்தில்லை. பேதத்தை அறிகிறவனுக்கு மரணமுண்டு என்று சுருதி கூறுகிறது. அதனுலும் பேதம் உண்மையல்ல. கற்பனையினுல் ஏற்பட்டது என்று தீர்மானம். ஆகையால் ஒரே அதிஷ்டானமான சைதன்யத்தில் ஜீவேசுவரபேதம் கற்பிதம்.

अभिदा श्रुतिगाऽप्यतात्त्विकी चेत्पुरुषार्थश्रवणं न तद्गतौ स्यात् ।
अशिवोऽहमिति भ्रमस्य शास्त्राद्विधुमानत्वगतेरिवास्ति बाधः ॥ ५९

அபேதத்தை அறிந்தவனுக்கு துக்கமில்லை என்று உபநிஷத்துக் கூறுகிறபடியால் அதனை உண்மையென்று கூறவேண்டும். சாஸ்திரத்தில் கூறும் உண்மையான அளவின் அறிவினுல், சந்திரன் ஒரு சாண் அளவு என்ற உலகவியவகாரம் தவறு என்று ஒப்புக்கொள்ளவேண்டுமேயன்றி நம்முடைய வியவகாரத்தை ஆதாரமாகக் கொண்டு சந்திரனுடைய அளவைக்கூறும் நூல் தவறு என்று கூறுவதுண்டா? நான் ஈசுவரனல்லன் என்ற பேதபுத்தி சாஸ்திரத்தினுல் தத்வஞானம் உண்டாக நாசமடைகிறது.

तदबाधितकल्पनाक्षतिर्नो श्रुतिसिद्धात्मपरैक्यबुद्धिबाधः ।
निगमात् प्रबलं विलोक्यते माकरणं येन तदीरितस्य बाधः ॥ ६०

ஆகையால், பிரமாணசித்தமான பொருளை மறுத்தல் என்றும் தோஷம் கிடையாது. உம்முடைய மதத்தை ஒப்புக்கொண்டால் (''नाऽहमीश्वरः'' என்ற வியவகாரத்தை சத்தியம் என்று ஒப்புக்கொண்டால்) வேதபிரமாணத்தினுல் தீர்மானம் செய்யப்பட்ட அபேதம் தவறு என்பதாக ஏற்படும். வேதத்தைவிட சத்தியமான பிரமாணம் வேறு ஒன்றுமில்லை. ஆகையால் அதில் கூறும் விஷயம்தான் சத்தியம்.

ऋषिभिर्बहुधा परात्मतत्त्वं पुरुषार्थस्य च तत्त्वमप्यथोक्तम् ।
तदपास्य निरूपितप्रकारो भवताऽसौ कथमेक एव धार्यः ॥ ६१

முனிவர்களால் ஆத்மாவிற்கு பேதமும், முக்திக்கு வேறு உருவமும் கூறப்பட்டுள்ளது. அதை விலக்கி தாம் கூறுகிறபடி ஆத்மதத்துவம் ஒன்று என்பதை ஒப்புக்கொள்ளுவது எவ்வாறு என்று ஆக்ஷேபம்.

प्रबलश्रुतिमानतो विरोधे बलहीनस्मृतिवाच एव मेयाः ।
इति नीतिबलात्त्रयीविरुद्धं न ऋषीणां वचनं प्रमात्वमीयात् ॥ ६२

மிகவும் வன்மையுள்ளது சுருதி. அதற்கு முரணுக ஸ்மிருதிவசனம் (ரிஷிகளுடைய வசனம்) ஏற்பட்டால் அதனுடைய பொருளை, சுருதிக்கு அனுகூலமாகக் கூறவேண்டும். வேதவிருத்தமாயின் முனிவர்களுடைய வசனம் பிரமாணமல்ல என்று பூர்வமீமாம்சா சாஸ்திரத்தின் நியாயம்.

நான்கு செய்யுட்களால் நீலகண்ட வித்வான் ஆக்ஷேபம் கூறுகிருர்:-

ननु युक्तियुतं महर्षिवाक्यं श्रुतिवद्ग्राह्यतमं परं तथा हि ।
प्रतिदेहमसौ विभिन्न आत्मा सुखदुःखादिविचित्रतावलोकात् ॥ ६३

यदि चाऽऽत्मन एकता तदानीमतिदुःखी युवराजसौख्यमीयात् ।
अमुकः ससुखोऽमुकस्तु दुःखीत्यनुभूतिर्न भवेत्तयोरभेदात् ॥ ६४

अयमेव विदन्वितश्च कर्ता न हि कर्तृत्वमचेतनस्य दृष्टम् ।
अत एव भुजेर्भवेत्स कर्ता परभोक्तृत्वमतिप्रसङ्गदुष्टम् ॥ ६५

पुरुषार्थ इहैष दुःखनाशः सकलस्यापि सुखस्य दुःखयुक्त्वात् ।
अतिहेयतया पुमर्थता नो विषपृक्तान्नवदित्यभेद्ययुक्तेः ॥ ६६

ஐயா! மாமுனிவருடைய வசனம் யுக்திகளுடன் கூடியமையால் வேதம் போலவே சிறந்த பிரமாணமாகையால் ஒப்புக்கொள்ளத்தக்கது. அதாவது ஒவ்வொரு தேகத்திலுமுள்ள ஜீவன் வெவ்வேறுதான். சுகதுக்கங்கள் பலவாருகக் காணப்படுகிறதல்லவா? ஜீவன் ஒருவன்தான். வேற்றுமையில்லையென்று கூறிஞல், மிகவும் துக்கமுள்ளவனும், இளவரசருடைய சுகத்தை அடையவேண்டும். இவன் மிக்க சுகமுள்ளவன், இவன் அதிக துக்கமனுபவிக்கின்றவன் என்றும் வேற்றுமை வியவகாரம்தான் நிலவுகிறது. ஜீவன் ஞானமுள்ளவன், அவன்தான் கர்த்தா, என்றும் கூறுதல் நியாயம். ஜடமான பொருளுக்கு கர்த்ருத்வம் காணப்பட்டதில்லை. போக்தாவும் அவனேயாகும். ஒருவன் செய்ததின் பயனை மற்றவன் அனுபவிக்கமாட்டானன்ருே! மேலும், முக்தி என்பது துன்பங்களின் நாசமேயன்றி சுகரூபமல்ல. எவ்வித சுகமும், துக்கம் கலப்புள்ளதேயன்றி வேறில்லை. விஷம் கலந்த உணவை விலக்குவதுபோல் துக்கம் கலந்த சுகமும் விலக்கத்தக்கது. ஆகையால், மோக்ஷம் சுகரூபமன்று.

इति चेन्न सुखादिचित्रताया मनसो धर्मतयाऽऽत्मभेदकत्वम् ।
न कथञ्चन युज्यते पुनः सा घटयेत्प्रत्युत मानसीयभेदम् ॥ ६७

ஸ்ரீசங்கரர் கூறுகிருர்:- மேற்கூறிய ஆக்ஷேபங்கள் சரியன்று. சுகதுக்கங்கள் பலவகையாயிருத்தல் மனதின் வேற்றுமையாலாகும். ஆத்மாவின் வேற்றுமைக்குப் பிரமாணமாகாது. மனதின் வேற்றுமையைத்தான் உறுதிப்படுத்துகின்றது.

चितियोगविशेष एव देहे कृतिमत्ताघटकोऽप्यचेतने स्यात् ।
तदभावत एव कर्तृता स्यान्न तृणादेरिति कल्पनं वरीयः ॥ ६८

'சித்'தினுடைய சம்பந்தத்தினால் ஜடமாகிய தேகத்தில் செயல் உண்டாகிறபடியால் அசேதனமாகிய தேகம் முதலியவைகளுக்கு கர்த்ருத்வம் என்று கூறவேண்டும். புல் முதலிய பொருட்கள் சேதன சம்பந்தமின்மையால் சலனமற்றதாகக் காணப்படுகிறதன்றோ!

विषयोत्थसुखस्य दुःखयुक्त्वेऽप्यलयं ब्रह्मसुखं न दुःखयुक्तम् ।
पुरुषार्थतया तदेव गम्यं न पुनस्तुच्छकदुःखनाशमात्रम् ॥ ६९

விஷயங்களுடைய சம்பந்தத்தினாலுண்டாகும் சுகம், துக்கக்கலப்பு உள்ளதாயினும், அழிவற்ற பிரம்மானந்தம் துக்கத்தின் தொடர்புள்ளதன்று. பிரம்மானந்தமே புருஷார்த்தம்; அதுதான் அடையத்தக்கது. துச்ச துக்க நாசம் புருஷார்த்தமன்று.

इति युक्तिशतोपबृंहितार्थैर्वचनैः श्रुत्यवरोधसौविदल्लैः ।
यतिरात्ममतं प्रसाध्य शैवं परकृद्दर्शनदारुणैरजैषीत् ॥ ७०

இவ்வாறு அநேக யுக்திகள் நிரம்பியவைகளும், வேதமார்க்கமாகிய அந்தப்புரத்தைக் காப்பாற்றும் கஞ்சுகிகளும் (துவாரபாலகர்களும்) பிறமதத்தையறுப்பதில் வல்லமையுள்ளவைகளுமாகிய வசனங்களால், சைவராகிய நீலகண்டகவியை வென்றார்.

विजितो यतिभूभूता स शैवः सह गर्वेण विसृज्य च स्वभाष्यम् ।
शरणं प्रतिपेदिवान् महर्षिं हरदत्तप्रमुखैः सहाऽऽत्मशिष्यैः ॥ ७१

யதிசக்ரவர்த்தியால் வெல்லப்பட்ட சைவராகிய அந்த நீலகண்டர் தன்னுடைய கர்வத்தையும் பாஷ்யத்தையும் இழந்து, ஹரதத்தர் முதலிய சிஷ்யர்களுடன் மகரிஷியாகிய ஸ்ரீசங்கரரைத் தஞ்சமடைந்தான்.

यमिनामृषभेण नीलकण्ठं जितमाकर्ण्य मनीषिधुर्यवर्यम् ।
सहसोदयनादयः कवीन्द्राः परमद्वैतमुषश्चकम्पिरे स्म ॥ ७२

புத்திமான்களுடைய முன்னணியில் விளங்குகின்ற நீலகண்டவித்வான் யதீசுவரசக்ரவர்த்தியால் ஜயிக்கப்பட்டதைக் கேட்டு உதயனர் முதலிய வித்வான்கள் உடனே பெரும்பயத்தினால் நடுக்கமுற்றனர்.

विषयेषु वितत्य नैजभाष्याण्यथ सौराष्ट्रमुखेषु तत्र तत्र ।
बहुधा विबुधैः प्रशस्यमानो भगवान् द्वारवतीं पुरीं विवेश ॥ ७३

பகவானாகிய ஸ்ரீசங்கரர் சௌராஷ்ட்ரதேசங்களில் தன்னுடைய பாஷ்யங்களை பிரசாரமடையும்படிச் செய்து புத்திமான்களால் புகழப்பட்டவராக பிறகு துவாரகைக்குச் சென்றார்.

भुजयोरतितप्तशङ्खचक्राकृतिलोहाहतसंभृतव्रणाङ्काः ।
शरदण्डसहोदरार्ध्वपुण्ड्रास्तुलसीपर्णसनाथकर्णदेशाः ॥ ७४

शतशः समवेत्य पाञ्चरात्रास्त्वमृतं पञ्चभिदाविदां वदन्तः ।
मुनिशिष्यवरैरतिप्रगल्भैर्मृगराजैरिव कुञ्जराः प्रभग्नाः ॥ ७५

சங்கு, சக்ரம், வடிவமுள்ள உலோஹத்தைக் காய்ச்சி இரு கைகளிலும் முத்திரை செய்துகொண்டும், நாணல்புல்லிற்கு சமானமான நாமங்களை அணிந்தவர்களும், காதில் துளசியைச் சொருகியவர்களும், பாஞ்சராத்திராகமத்தைப் பின்பற்றினவர்களும் ஆகிய வைஷ்ணவர் நூற்றுக்கணக்காக வந்து ஐந்து விதங்களான பேதங்கப்பேச்சுக்களைக் கூறினர். ((1) ஜீவர்களுக்கு பேதம், (2) ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் பேதம், (3) ஜீவர்களுக்கும் ஜடப்பொருளுக்கும் பேதம், (4) ஈசுவரனுக்கும் ஜடப்பொருளுக்கும் பேதம், (5) ஜடங்களுக்குள் பேதம்) கம்பீர குணமுள்ள சிங்கங்களால் யானைகள் உயிர் இழப்பதுபோல், அந்த பேதவாதிகள் வல்லமையுற்ற ஸ்ரீசங்கரருடைய சீடர்களால் வாதஞ்செய்து தங்கள் மதத்தையிழக்கும்படி செய்யப்பட்டார்கள்.

इति वैष्णवशैवशाक्तसौरप्रमुखानात्मवशंवदान्विधाय ।
अतिवेलवचोझरीनिरस्तप्रतिवाद्युज्जयिनीं पुरीमयासीत् ॥ ௭௬

இவ்வாறு வைணவம், சாக்தம், ஸௌரம் முதலிய மதத்தினர்களை தன்னுடைய அதீனத்தில் செய்து, எல்லையில்லாச் சொல் வன்மையினால் எதிரிகளை வென்றவராகிய அந்த ஸ்ரீ சங்கரர் உஜ்ஜயினிநகரம் சென்றார்.

सपदि प्रतिनादितः पयोदस्वनशङ्काकुलगेहकेकिजालैः ।
शशभृन्मुकुटार्हणामृदङ्गध्वनिरश्रूयत तत्र मूर्छिताशः ॥ ௭௭

அப்பொழுது அவ்விடத்தில், மேகத்தின் கர்ஜனம் என்று ஐயம் கொண்டு வீடுகளிலுள்ள மயில்களால் எதிர்த்து ஒலிசெய்யப்பட்டதும், திசைகளையெல்லாம் முழக்கியதும், சந்திரக்கலையைத் தலையிலணிந்த மகா காலேசுவரருடைய பூஜைக்கு உரியதுமான மிருதங்கவாத்தியத்தின் ஓசை ஒலித்தது.

मकरध्वजविद्विडाप्तिविद्वाञ्श्रमहृत्पुष्पसुगन्धवन्मरुद्भिः ।
अगरूद्भवधूपधूपिताशं स महाकालनिवेशनं विवेश ॥ ௭௮

மீனைக் கொடியாகக்கொண்ட மன்மதனை எரித்த மகாதேவனையடையும் நெறியை அறிந்த அந்த ஸ்ரீசங்கரர் புஷ்பங்களுடைய பரிமளவாசனையுடன் வீசுகின்ற காற்றினால் மனிதர்களுடைய களைப்பையாற்றுகின்றதும், அகில் கட்டையிட்டு உண்டாகும் வாசனை பொருந்திய புகை பரந்ததுமாகிய மகா காலேசுவரருடைய கோயிலில் புகுந்தார்.

भगवानभिवन्द्य चन्द्रमौलिं मुनिवृन्दैरभिवन्द्यपादपद्मः ।
श्रमहारिणि मण्डपे मनोज्ञे स विशश्राम विसृत्वरप्रभावः ॥ ௭௯

முனிவர்களின் கூட்டங்களால் வணங்கப்பட்ட பாதகமலங்களை உடையவரும், பரந்த பிரபாவமுள்ளவருமாகிய அந்த ஸ்ரீ சங்கரபகவத்பாதர் பரமசிவனைப் பணிந்து, சிரமத்தை அகற்றுகின்ற அழகான ஒரு மண்டபத்தில் அமர்ந்து களைப்பாற்றினார்.

कवये कथयास्मदीयवार्तामिह सौम्येति स भट्टभास्कराय ।
विससर्ज वशंवदाग्रगण्यं मुनिरभ्यर्णगतं सनन्दनार्यम् ॥ ८०

பிரியமான காக்ஷியளிப்பவனே! நம்முடைய சமாசாரத்தை பட்டபாஸ்கரவித்வானுக்குக் கூறுவீராக என்று சொல்லி அருகிலிருந்தவரும் சீடர்களில் சிறந்தவருமாகிய ஸனந்தனரை அனுப்பினர்.

अभिरूपकुलावतंसभूतं बहुधाव्याकृतसर्ववेदराशिम् ।
तमयत्ननिरस्तदुःसपत्नं प्रतिपद्येत्थमुवाच वावदूकः ॥ ८१

பேச்சுத்திறமையுற்ற அந்த ஸனந்தனர் சிறந்த குலத்திற்கு அலங்காரமாகவும், அநேக வேதங்களுக்கு பாஷ்யமியற்றியவரும், மதாந்தரத்தினவரை இலகுவாகவே வென்றவருமாகிய அவரிடம் சென்று கூறினர்.

जयति स्म दिगन्तगीतकीर्तिर्भगवाञ्शङ्करयोगिचक्रवर्ती ।
प्रथयन् परमाद्वितीयतत्त्वं शमयंस्तत्परिपन्थिवादिदर्पम् ॥ ८२

திசைகளின் எல்லேவரையிலும் புகழப்பட்ட கீர்த்தியையுடையவரும் வேதாந்தங்களுக்கு அத்விதீயமான பரமாத்மதத்வம்தான் கருத்து என்று பிரசாரம் செய்கின்றவரும், எதிர்வாதம் கூறுகிறவர்களுடைய கர்வத்தையறுக்கின்றவரும், யோகிகளுக்குச் சக்ரவர்த்தியுமாகிய ஸ்ரீ சங்கரபகவத்பாதர் வெற்றியுடன் விளக்குகின்றார்.

स जगाद बुधाग्रणीर्भवन्तं कुमतोत्प्रेक्षितसूत्रवृत्तिजालम् ।
अभिभूय वयं त्रयीशिखानां समवादिष्म परावरेऽभिसन्धिम् ॥ ८३

அறிஞர்களுடைய முன்னிலேயில் விளங்குகின்ற அவர், கெட்ட கொள்கையின்படி ஸூத்திரங்களுக்கு உரைவரைந்துள்ள தங்களிடம் கூறினர் :- ''யாம் உம்மை நிராகரித்து, அகண்டஸச்சிதானந்தமாகிய நிர்குண அத்வைதம்தான்'' உபநிஷத்துக்களின் கருத்து என்று கூறியுள்ளோம்.

तदिदं परिगृह्यतां मनीषिन् मनसाऽऽलोच्य निरस्य दुर्मतं स्वम् ।
अथवाऽस्मदुदग्रतर्कवज्रप्रतिघातात् परिरक्ष्यतां स्वपक्षः ॥ ८४

அறிஞரே! மனதில் நன்கு ஆராய்ந்து எங்களுடைய இந்த அத்வைத மதம் பெற்றுக்கொள்ளத்தக்கது. அல்லது, தங்களுடைய கொள்கையாகிய இறக்கை, எமது கடினதர்க்கமாகிய வஜ்ராயுதத்தினலுண்டாகும் அடியிலிருந்து காப்பாற்றிக்கொள்ளப்பட வேண்டும். (எங்களுடன் வாதம் செய்து எங்களே வெல்லவேண்டும்.)

इति तामवहेलपूर्ववर्णां गिरमाकर्ण्य तदा स लब्धवर्णः ।
यशसां निधिरीषदात्तरोषस्तमुवाच प्रहसन् यतीन्द्रशिष्यम् ॥ ८५

இவ்வாறு நிந்தையை முன்னிட்டுக் கூறிய சொல்லேக்கேட்ட அந்தக் கீர்த்திக்கடலாகிய அறிஞர், சிறிது சினம்கொண்டவராயினும் நகைத்த முகத்துடன் துறவிச் சீடரிடம் புகன்றார்.

धुवमेष न शुश्रुवानुदन्तं मम दुर्वादिवचस्ततीर्नुदन्तम् ।
परकीर्तिबिसाङ्कुरानदन्तं विदुषां मूर्धसु नानटत्पदं तम् ॥ ८६

துஷ்டவாதம் செய்கின்றவர்களுடைய சொற்களையறுக்கின்றதும், பிறருடைய புகழாகிய தாமரைத்தண்டைத் தின்பதில் அன்னப்பறவையும், அறிஞர்களுடைய தலைகளில் கால்களைவைத்து நடனம் செய்கின்றதுமாகிய என்னுடைய வரலாற்றை கட்டாயமாக இவர் கேட்டதில்லை.

मम वल्गति सूक्तिगुम्फवृन्दे कणभुग्जल्पितमल्पतामुपैति ।
कपिलस्य पलायते प्रलापः सुधियां कैव कथाऽधुनातनानाम् ॥ ८७

என்னுடைய சிறந்த சொற்தொகுதி விளையாடுகையில் காணதக்கொள்கை தலை குனிகின்றது. கபிலருடைய பேச்சு பாய்ந்து விடுகிறது. அப்படியிருக்கையில் தற்காலத்திய புத்திமான்களுடைய பேச்சு எவ்வாறு பெயரை அடையும்.

इति वादिनमब्रवीत् सनन्दः कुशलोऽथैनमविज्ञ माऽवमंस्थाः ।
न हि दारितभूधरोऽपि टङ्कः प्रभवेद्वज्रमणिप्रभेदनाय ॥ ८८

இவ்வாறு கூறிய அவருக்கு ஸமர்த்தராகிய ஸனந்தனர் பதில் கூறினார். ''அறிவற்றவரே! அவமதிக்கவேண்டாம். மலையைப் பிளர்க்க வல்லமையுள்ளதாயினும் கல்லுளி வஜ்ரமணியை பிளர்க்க வல்லமையுள்ளதன்று.

स तमेवमुदीर्य तीर्थकीर्तेरुपकण्ठं प्रतिपद्य सद्विदग्रचः ।
सकलं तदवोचदानुपूर्व्या स महात्माऽपि यतीशमाससाद ॥ ८९

ஸாதுக்களான அறிஞர்களில் முதல்வராகிய ஸனந்தனர் பட்டபாஸ்கரரிடமிவ்வாறு கூறிவிட்டு பரிசுத்தமான கீர்த்தியையுடையவராகிய ஸ்ரீ சங்கரரிடம் வந்து நிகழ்ச்சியனைவற்றையும் வரிசையாகக் கூறினார். மகாத்மாவாகிய பாஸ்கரவித்வானும் யதீசுவரரிடம் வந்தார்.

अथ भास्करमस्करिप्रवीरौ बहुधाक्षेपसमर्थनप्रवीणौ ।
बहुभिर्वचनैरुदारवृत्तैर्व्यदधातां विजयैषिणौ विवादम् ॥ ९०

பல ஆக்ஷேபங்களையும் சமாதானங்களையும் கூற வல்லமையுள்ள பாஸ்கர வித்வானும் துறவியரசும் வெற்றியை விரும்பிக்கொண்டு சிறந்த சொற்களால் வாதம் செய்தனர்.

अनयोरतिचित्रशब्दशय्यां दधतोर्दुर्नयभेदशक्तयुक्त्योः ।
पटुवादमृधेऽन्तरं तदस्थाः श्रुतवन्तोऽपि न किञ्चनान्वविन्दन् ॥ ९१

துஷ்டநியாயங்களைத் தொலைக்கும் திறமையுடனும் மிகவும் வியப்பளிக்கும் சொல்வன்மையுடனும் வாதப்போர்புரிகின்றவர்களுடைய சொற்களைச் செவியுற்ற மத்தியஸ்தர்கள் வாதிப்பிரதிவாதிகளின் திறமையின் தாரதம்யத்தையுணர முடியாதவர்களாயினர்.

अथ तस्य यतिः समीक्ष्य दाक्ष्यं निजपक्षाब्जशरज्जडाब्जभूतम् ।
बहुधाऽऽक्षिपदस्य पक्षमार्यो विबुधानां पुरतोऽप्रभातकक्ष्यम् ॥ ९२

பிறகு யதீசுவரர் அவருடைய சாமர்த்தியத்தைக் கண்டு, தன்னுடைய மதமாகிய சந்திரனுக்கு முன்னில், சரத்காலத்துத் தாமரைபோன்ற அவருடைய கொள்கையை (மதத்தை) பலவாறு நிராகரித்து வித்வான்களுடைய முன்னிலையில் மேலேகூறும் தன்மையற்றவராகச் செய்தார்.

अथ भास्करवित्स्वपक्षगुप्त्यै विधुतो वाग्मिवरः प्रगल्भयुक्त्या ।
श्रुतिशीर्षवचः प्रकाश्यमेवं कविरद्वैतमपाकरिष्णुरूचे ॥ ९३

ஸ்ரீசங்கரரால் நிராகரிக்கப்பட்ட வித்வானாகிய பாஸ்கரர் தன்னுடைய மதத்தின் பாதுகாப்பிற்கு, உபநிஷத்துக்களால் வெளிவிடப்பட்ட அத்வைத சித்தாந்தத்தின் மறுத்தலை கம்பீரமான யுக்திகளைக் கூறித் துவக்கினார்.

प्रशमिंस्त्वदुदीरितं न युक्तं प्रकृतिर्जीवपरात्मभेदिकेति ।
न भिनत्ति हि जीवगेशगा वोभयभावस्य तदुत्तरोद्भवत्वात् ॥ ९४

யதிகளே! ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் பேதத்தைத் தோற்றுவிக்கின்றது பிரகிருதி என்று தாங்கள் கூறுவது சரியன்று. பிரகிருதிக்குப் பிறகு ஏற்பட்டது, பேதம்: (1) ஜீவத்வம், (2) ஈசுவரத்வமிரண்டும். அப்படியிருக்கையில் எதனைப் பின்பற்றி (ஜீவனைப் பின்பற்றியா, அல்லது ஈசுவரனையடைந்தா) அந்த பிரகிருதிபேதத்தைத் தோற்றுவிக்க முடியும்? ஒருவிதத்திலும் முடியாது.

मुनिरेवमिहोत्तरं बभाषे मुकुरो वा प्रतिबिम्बबिम्बभेदी ।
कथमीरय वक्त्रमात्रगश्चेचितिमात्राश्रिदियं तथेति तुल्यम् ॥ ९५

ஸ்ரீசங்கரர் விடை கூறினார். கண்ணாடி பிரதிபிம்பத்திற்கும் பிம்பத்திற்கும் பேதத்தைக் காண்பிக்கிறதன்றோ! எதனில் சம்பந்தப்பட்டு அவ்வாறு தோற்றுவிக்கிறது? புகலுவீராக. முகத்தில் சம்பந்தப்பட்டு என்றுதான் கூறவேண்டும். ஆகவே, இங்கும் கேவல சைதன்யத்தில் சம்பந்தப்பட்டு பிரகிருதி (மாயை) வேற்றுமையைத் தோற்றுவிக்கின்றது என்று கூறுவதில் என்ன தப்பிதம்?

चितिमात्रगप्रकृत्युपाधेर्जहतो बिम्बपरात्मपक्षपातम् ।
प्रतिबिम्बितजीवपक्षपातो मुकुरस्येव विरुध्यते न जातु ॥ ९६

கண்ணாடி முகத்தின் பிரதிபிம்பத்தைக் காண்பித்துக்கொண்டு தன்னுடைய செய்கை முதலியவற்றை பிரதிபிம்பத்தில் காண்பிக்கிறதுபற்றி அதனை பிரதிபிம்பத்தைச் சேர்ந்ததாகக் கூறுவதுபோல், சித்தின் பிரதிபிம்பத்தைக் காண்பிக்கும் மாயையும் தன்னுடைய மாறுதலை பிரதிபிம்பமாகிய ஜீவனிடத்தில்தான் தோற்றுவிக்கிறது. ஆகவே சுகதுக்காதிகள் பிரதிபிம்பமாகிய ஜீவனுக்கேயாகும்.

अविकारिनिरस्तसङ्गबोधैकरसात्माश्रयता न युज्यतेऽस्याः ।
अत एव विशिष्टसंश्रितत्वं प्रकृतेः स्यादिति नापि शङ्कनीयम् ॥ ९७

ஜடமாகிய இந்த பிரகிருதி விகாரமுற்றது. அது விகாரமற்றதும், பற்றற்றதும், ஞானனந்தவடிவமுமாகிய சித்துடன் சம்பந்தமடைவது தகாது. ஆகையால் அந்தக்கரணவிசிஷ்டனுன (மனதுடன்கூடிய) ஜீவனுடையவும் ஸம்பந்தமுறுவது சரியன்று என்று ஆக்ஷேபம் உண்டாக சமாதானம் கூறுகிறுர்:-

न हि मानकथा विशिष्टगत्वे भवदापादित ईक्षते तथा हि ।
अहमज्ञ इति प्रतीतिरेषा न हि मानत्वमिहाश्नुते तथा चेत् ॥ ९८

விசேஷணத்துடன் கூடிய ஜீவனிடம் பிரகிருதி என்று கூறுவதற்கு பிரமாணம் ஒன்றுமில்லே. யான் அறிவில்லாதவன் என்ற வசனம் பிரமாணமாகாது. ஏனெனில்,

अनुभव्यहमित्यपि प्रतीतेरनुभूतेश्च विशिष्टनिष्ठता स्यात् ।
अजडानुभवस्य नो जडान्तःकरणस्थत्वमितीष्टता न तस्याः ॥ ९९

யான் ஞானமுடையவன் என்று வியவஹாரம் உண்டாகிறது. அதன் படி அந்த ஞானத்தை அந்தக்கரணவிசிஷ்டனுடையது என்று கூறவேண்டும். அது தகாது. ஏனெனில் அனுபவம் என்பது ஞானம். அது ஜடப்பொருளினுடைய குணமாகாது. ஆகவே ஜடமாகிய அந்தக்கரணத்துடன் கூடியவனுடையது என்று கூறமுடியாது. அதுபோலவே, 'अहमज्ञः' என்ற பிரமாணமும் விசிஷ்ட ஜீவனுடையது என்பது சரியன்று.

ननु दाहकता यथाग्नियोगादधिकूटं व्यपदिश्यते तथैव ।
अनुभूतिमदात्मयोगतोऽन्तःकरणे सा व्यपदिश्यतेऽनुभूतिः ॥ १००

பட்டபாஸ்கரருடைய ஆசங்கை:-

அக்னியினுடைய சம்பந்தத்தினுல் இரும்புக்கட்டையை சுடுகிறது என்று கூறுவதுபோல் ஞானத்துடன் கூடிய ஆத்மாவின் சம்பந்தமுள்ளதினுல் அந்தக்கரணத்திற்கும் ஞானமென்ற குணம் கூறப்படலாம்.

इति चेन्नैवमिहापि तस्य मायाश्रयचिन्मात्रयुते तथोपचारः ।
न पुनस्तदुपाधियोगतोऽन्तःकरणस्येति समाऽन्यथागतिर्हि ॥ १०१

மேற்கூறிய ஆசங்கைக்கு இடமில்லே.

மாயைக்கு ஆச்ரயமாகிய 'சித்'தினுடைய சம்பந்தமுள்ள அந்தக்கரணத்தில் 'அக்ஞன்' என்ற வியவகாரம். அப்படியல்லாமல் கேவலம் பிரகிருதியுடைய சம்பந்தமுள்ள அந்தக்கரணத்தினுடைய குணமல்ல.

न च तत्र हि बाधकस्य सत्वादियमस्तु प्रकृतेर्न साऽस्त्यबाधात् ।
इति वाच्यमिहापि तज्ञचित्ते तदुपाश्रित्ययुतेश्च बाधकत्वात् ॥ १०२

அந்தக்கரணம் ஜடமான பொருள். ஞானம் சேதனனுடைய தர்மம். சேதனனுடைய குணமான ஞானத்தை ஜடமான அந்தக்கரணத்தினுடையதாகக் கூறுதல் தகாது. ஆகையால் சேதனனுடைய சம்பந்தமுள்ளமையால் அந்தக்கரணத்தை ஞானசம்பந்தமுள்ளதாகக் கூறுதல் சரி. மாயையின்

விகாரமாகிய அந்தக்கரணம் மாயையுடன் கூடியது. சித்து மாயைக்கு ஆச்ரயம். அந்த சித்துடன் கூடியது அந்தக்கரணம். ஆகவே, ஜடமாகிய மாயையின் தர்மத்தை மாயைக்கு ஆச்ரயமாகிய சித்தின் சம்பந்தமுற்ற அந்தக்கரணத்தில் ''अहमज्ञः'' என்று வியவகாரம் எவ்வாறு? என்று ஆக்ஷேபம். பரிகாரம்: ''மாயையினுல் உண்டான சித்தம் மாயைக்கு ஆச்ரயமாக இருக்கமுடியாது. ஆகவே மாயையினுடைய விகாரமான சித்தத்தில் அக்ஞத்வம் கூறத்தகாது.

अधिसुप्त्यपि चित्तवर्ति तत्स्याद्यदि चाज्ञानमिदं हृदाश्रितं स्यात् ।
तदिहास्ति न मानमुक्तरीत्या प्रकृतेर्दृश्यविशिष्टनिष्ठतायाम् ॥ १०३

அக்ஞானத்தை மனதின் குணமாகக் கூறுகிறீரேயாகில், துயிலுகையில் அந்த அக்ஞானம் மனதில் இருப்பதாக ஒப்புக்கொள்ளவேண்டும். அப்படி இருந்தால் ''யான் அக்ஞன்'' என்ற அந்த உணர்வு உண்டாகவேண்டும். அதுவில்லை. ஆகையால் பிரகிருதி, விகாரமாகிய திருச்யப்பொருளை ஆச்ரயித்ததல்ல. கேவலம் சித்தைத்தான் ஆச்ரயித்தது.

ननु न प्रतिबन्धिकैव सुप्ताविति सा दूरत एव चिद्गतेति ।
प्रतिबन्धकशून्यता तु सुप्तेः परमात्मैक्यगतेः सतेति वाक्यात् ॥ १०४

நான்கு செய்யுட்களால் ஆக்ஷேபம்:-

ஐயா, ஜீவனுடையவும் பிரம்மத்தினுடையவும் ஐக்கியத்திற்குத் தடையாகிய மாயை துயிலில் நிலவுவதில்லை. ஆகையால், சித்தில் சம்பந்தமுள்ளதாக அப்பொழுது இருக்கிறது என்ற பேச்சிற்கு இடமேயில்லை. ''सता सौम्य तदा सम्पन्नो भवति'' ''ஹே ஸௌம்ய! அப்பொழுது (துயிலுகையில்) ஸத்துடன் சம்பந்தமடைந்தவனுக (ஐக்யமுற்றவனுக) இருக்கிருன்'' என்று சுருதி கூறுகிறது.

न च तत्र च तत्स्थितिप्रतीतिः सति संपद्य विदुर्न हीति वाक्यात् ।
श्रुतिगीस्तदधिक्षिपत्यभावप्रतिपत्तेर्न च निह्नवोऽत्र नेति ॥ १०५

''सति सम्पद्य न विदुः'' என்று சுருதி கூறுகிறது. பரமாத்மனிடத்தில் அபேதத்தை அடைந்து இவன் (ஜீவன்) ஒன்றையும் அறிகிருனில்லை என்று சுருதியானது ஞானமின்மையைக் கூறுகிறது என்று அதன் பொருள். ஆகையால் துயிலும்கால் ஞானமின்மை என்பது சுருதியின் கருத்து. (அந்த சுருதியினுல் அக்ஞானம் துயிலும்கால் உள்ளது என்ற பொருள் கூறப்படுகிறதில்லை.)

किमु नित्यमनित्यमेव चैतत्प्रथमो नेह समस्ति युक्त्यभावात् ।
अनिवर्तकसत्त्वतोऽस्य नान्त्यो न हि भिन्द्यादविरोधि चित्प्रकाशः ॥ १०६

மேலும், இந்த அக்ஞானம் நித்தியப்பொருளா? அல்லது அநித்தியப் பொருளா? நித்தியம் என்று கூறுவதற்குத் தக்க காரணம் இல்லை (உங்களுடைய மதத்தில் அக்ஞானம் நித்தியமல்ல). அநித்தியமென்று கூறுதலுமியலாது. இதனை நாசம் செய்யத்தகுதிபெற்றது ஒன்றுமில்லை. சித்து, அல்லது ஜடம் நாசம்செய்யும் பொருள் என்று கூறவேண்டும். சித்தின் பிரகாசம் அக்ஞானத்திற்கு எதிரியல்ல. விரோதமுள்ளதாயின் நாசம் செய்யும். அவ்வாறில்லை.

न च तच्छमयेज्जडप्रकाशोऽप्यविरोधात् सुतरां जडत्वतोऽस्य ।
तदिहाप्रतिबन्धकत्वमस्य प्रभवेत् किंत्विह तद्भ्रमाग्रहादि ॥ १०७

ஜடத்தினுடைய பிரகாசமும் அக்ஞானத்தை விலக்க வல்லமையற்றது. ஜடம் ஜடத்திற்கு விரோதமற்றது. ஆகையால், அக்ஞானத்தை விலக்கும் வன்மையுள்ள பொருளில்லாமையால், அதனை அநித்யமென்று கூறத்தகாது. ஆகவே, அக்ஞானம் நாசமடையாவிடில் உங்களுடைய கொள்கைப்படி மோக்ஷம் இல்லை. யாம் கூறுவது யாதெனில், பிரமையும், தத்வத்தின் அறிவின்மையும் மோக்ஷத்திற்குத் தடையென்பதேயாகும். பாவபதார்த்தமாகிய அக்ஞானமன்று.

इति चेदिदमीरय भ्रमः को मनुजोऽहं त्विति शेमुषीति चेन्न ।
अतिविस्मृतिशीलता तवाहो गदितुः सर्वपदार्थसङ्करस्य ॥ १०८

பிரமஞானம் முக்திக்குப் பிரதிபந்தகம் என்று கூறுகிறீர். அந்த பிரமம் யாது? யான் மனிதன் என்ற ஞானம் என்று கூறவேண்டும். அந்த ஞானம் ஆத்மாவிடமிருந்து வேறுபட்டதும் வேறுபடாததுமாகிய பொருளை விஷயமாகக்கொண்டதேயன்றி பிரமஞானம் என்று கூறுவதற்கில்லை. எல்லா விஷயங்களையும் ஒன்ருகக்கலந்து முன்பின் முரணுகக்கூறும் உமக்கு மறதிகுணம் அதிகம். ஆச்சரியம்.

प्रमितित्वमुपाश्रयन् प्रतीतेरमुकः खण्ड इति स्वाशास्त्रसिद्धात् ।
भिदभिद्द्वयगोत्तरत्वहेतोर्धियमेतां तु किमित्युपेक्षसे त्वम् ॥ १०९

வேறுபட்டதும் வேறுபடாததுமாகிய விஷயத்தைக்கொண்டது எல்லாவித ஞானம் என்று கூறுகின்ற நீர் இந்த ''யான் மனிதன்'' என்ற இந்த ஞானத்தையும் ஏன் அவ்வாறு ஒப்புக்கொள்ளக்கூடாது. (ஆத்மாவிலிருந்து வேறுபட்ட தேகம், பொறிகள், வேறுபடாத சேதனன் இவ்விரண்டும் ஞானத்தின் விஷயம்.)

अनुमानमिदं तथा च सिद्धं विमता धीः प्रमितिर्भिदाभिदत्वात् ।
इह चारु निदर्शनं भवेत् सा तव खण्डोऽयमिति प्रतीतिरेषा ॥ ११०

இது கறுப்புப் பசு என்று கூறும்பொழுது முன்புகண்ட கறுத்த பசுவிற்கும் இதற்கும் வேற்றுமையையும் ஒற்றுமையும் விஷயமாகக்கொண்டு கூறுவதுபோல் ''யான் மனிதன்'' என்ற வசனமும் வேறுபட்ட சரீரத்தையும் வேற்றுமையற்ற ஆத்மாவையும் கூறுகிறது என்று யுக்தி.

ननु संहननात्मधीः प्रमाणं न भवत्येव निषिद्ध्यमानगत्वात् ।
इदमिति प्रतिपन्नरूप्यधीवत्प्रबला सत्प्रतिपक्षतेति चेन्न ॥ १११

சுக்தியில் (கிளிஞ்சலில்) இது வெள்ளி என்று பிரமையான ஞானம் உண்டாவதுபோல் தேகத்தில் ஆத்மபுத்தியும் பிரமையாதலினுல் அது யதார்த்த ஞானமல்ல என்று ஆக்ஷேபம்.

व्यभिचारयुतत्वतोऽस्य खण्डः पशुरित्यत्र तदन्यधीस्थमुण्डे ।
इतरत्र निषिध्यमानखण्डोल्लिखितत्वेन निरुक्तहेतुमत्त्वात् ॥ ११२

இது கறுப்புப்பசுவல்ல, ஆனால் வெள்ளைப்பசு என்று கூறுகையில் கறுப்பு வெண்மையென்ற அம்சங்கள் மறுக்கப்பட்டபோதிலும் பசுத்வம் என்ற அம்சத்தைவைத்து அபேதம் கூறுவதுபோல் ''नाहं ब्रह्मास्मि'' என்றவிடத்திலும் தேகத்திற்கும் பிரம்மத்திற்கும் விலக்கப்பட்ட ஜீவனுடன் அபேதத்தையுணர்த்தும் நிலைமையிருப்பதுபற்றி பிரமாணம் என்று அதனைக் கூறலாம்.

ननु हेतुरयं विवक्ष्यतेऽत्र प्रतिपन्नोपधिके निषेधगत्वम् ।
इति चेन्न विवक्षितस्य हेतोर्व्यभिचारात् पुनरप्यमुत्र चैव ॥ ११३

கிளிஞ்சலோ வெள்ளியா என்று சந்தேகத்திற்கு விஷயமான பொருளில், இது கிளிஞ்சல், வெள்ளியல்ல என்று கூறுவதுபோல் இது மனிதனா, பிரம்மமா என்று சந்தேகத்திற்கு விஷயமான பொருளில் மனிதனல்ல, பிரம்ம வஸ்து என்று கூறப்படுகிறது. ஆனால் திருஷ்டாந்தத்தில் இது பசுவா அல்லவா என்ற சந்தேகமில்லை. பசு என்று தீர்மானம்செய்யப்பட்ட விஷயத்தில் நிறத்தை மட்டும்தான் மறுக்கிறோம். ஆகவே திருஷ்டாந்தம் சரியல்ல.

ननु गोत्व उपाधिके त्वमुष्य प्रतिपन्नस्य हि तत्र नो निषेधः ।
अपि तु प्रथमानमुण्ड इत्यत्र तथा च व्यभिचारिता न हेतोः ॥ ११४

ஐயா, பசுத்வத்துடன் கூடிய வியக்தியில் இது வெண்மையல்ல என்று கூறுகிறதில்லை. கறுப்புகுணமுடைய வியக்தியில்தான் இது வெண்மையல்ல என்று கூறுகிறோம். அதுபோல் नाहं ब्रह्मास्मि என்றவிடத்திலும் பிரம்மத்தன்மையுடையதாகிய ஜீவனிடத்தில்தான் பிரம்மபுத்தியை மறுக்கிறோம்.

इति चेन्न विकल्पनासहत्वात् किमु खण्डस्य तु केवले निषेधः ।
उत गोत्वसमन्विते स मुण्डे प्रथमो नो घटते प्रसक्त्यभावात् ॥ ११५

न हि जात्वपि खण्डके प्रसक्तः परमुण्डस्त्विवति संप्रसक्त्यभावः ।
चरमोऽपि न गोत्वयुक्तमुण्डे खलु खण्डस्य निषेधकाल एव ॥ ११६

स्वविशेषणभूतगोत्व एव स्फुटमेतस्य निषेधनं श्रुतं स्यात् ।
तदिहोदितहेतुसत्त्वतोऽस्य व्यभिचारो दृढवज्रलेप एव ॥ ११७

வெண்மைநிறத்தை கேவலமான (சுத்தமான) வியக்தியில் மறுக்கிறீரா, அல்லது கோத்வத்துடன்கூடிய வியக்தியிலா? எதற்கு பிரஸக்தியோ அதைத்தான் இல்லையென்று மறுக்கவேண்டும். கறுப்புப்பசுவில் வெண்மைக்கு பிரஸக்தியேயில்லை. அப்படியிருக்கையில் மறுப்பதிலர்த்தமில்லை. பசுத்வத்துடன் கூடிய வியக்தியில் (தனிப்பட்ட உருவத்தில்) மறுப்பதாகில் விசேஷணமாகிய பசுத்வத்திலும் மறுக்கப்படும் விஷயம் சம்பந்தப்படும்.

ननु भातितरामुपाधिरत्रादलदेतद्वयवहर्तृतेति चेन्न ।
अहमोऽनुभवेन साधनव्यापकभावादवगत्यनन्तरं च ॥ ११८

இது பசுவல்ல என்று மறுத்த பின்பு பசுவினிடம் பசு என்ற வியவகாரம் காணப்படுகிறது. அதுபோல் பிரம்மஸாக்ஷாத்காரத்திற்குப் பின் மனிதன் என்ற வியவகாரம் காணப்படுகிறதில்லை. ஆகையால் அந்த அனுமானப் பிரமாணம் சரியன்று என்பது அக்ஷேபம். பரிகாரம் பிரம்மஸாக்ஷாத்காரத்திற்கு பிறகும் பிராரப்தகர்மத்தினுல் நான் மனிதன் என்ற வியவகாரம் உண்டு.

ननु तद्व्यवहारसंछिदाया इह तत्केन कमित्यनेन मुक्तौ ।
श्रुतिवाक्यगतेन संप्रतीतेर्व्यवहर्तुर्न कथं छिदेति चेन्न ॥ ११९

''यत्र त्वस्य सर्वमत्मात्मैवाऽभूत् तत् केन कं पश्येत्'' எப்பொழுது இவனுக்கு எல்லாம் ஆத்மாவாகவே ஆகிவிடுகிறதோ, அப்பொழுது எதனுல் எதனை வேறுவிதமாக அறிந்துகொள்ளுகிருன்? இதனுல் வியவகாரத்திற்கு நாசம் கூறப்படுகையில் நான் மனிதன் என்ற வியவகாரம் நாசமடைகிறதல்லவா?

तदिदं घटते मतेऽस्मदीये तदबोधोल्लसितत्वतोऽखिलस्य ।
तदबोधलये लयोपपत्तेर्जगतः सत्यतया छिदा न ते स्यात् ॥ १२०

இது எங்களுடைய மதத்தில் சரி. உலகமனைத்தும் பிரமவஸ்துவின் அக்ஞானத்தினுல் தோன்றியது. அந்த அக்ஞானம் நாசமடைந்தால் உலக வியவகாரமும் நாசமுறுகின்றது என்று எமது கொள்கை. உமது கொள்கைப்படி உலகம் ஸத்யமானபடியால் வியவகாரத்திற்கு நாசம் கிடையாது.

ननु पञ्चसु तु स्थलेषु भेदो ह्यभिदा नो तु शरीरदेहिनोस्ते ।
प्रथितस्थलपञ्चकेतरत्वात् फलिता ह्यत्र तथा च हेत्वसिद्धिः ॥ १२१

1) ஜாதிவியக்திகள் (பசுத்வஜாதி, பசு என்ற தனிப்பட்ட ஒரு பொருள்) 2) குணகுணிகள், (சிவந்த துணி, சிவப்பு குணம், அதுள்ள துணி) 3) காரியகாரணம் (மண்ணும், குடமும்) 4) விசிஷ்ட ஸ்வரூபம் (தடியுடன்கூடிய மனிதன்) 5) அம்சம் அம்சி, (பொருளின் அம்சமும் பொருளும்) என்று ஐந்து இடங்களில் பேதாபேதம் கூறப்படுகிறது. தேகமும் தேகியான ஆத்மாவும் ஜாதிவியக்திகளும், குணகுணிகளுமில்லை. கார்யகாரணபாவமும் கிடையாது; விசிஷ்ட ஸ்வரூபத்வமுமில்லை. அவயவம் அவயவி என்ற பொருத்தமுமில்லை. ஆகையால் 'अहं मनुजः' என்ற வியவகாரம் பேதாபேதத்தை விஷயமாகக் கொள்ளவில்லை.

इति चेन्न विकल्पनासहत्वान्मिलितानां भिदभेदतन्त्रता किम् ।
उत वा पृथगेव तत्र नाऽऽद्यो मिलिताः पञ्च न हि क्वचिद्यतः स्युः ॥ १२२

மேற்கூறிய பேதாபேதம், எல்லாத்தன்மையுமுள்ளவிடத்தில் இருக்கிறதா? அல்லது தனிப்பட்ட ஒரு இடத்திலா? முதல்கூறியது சரியன்று. ஐந்து வகைகளும் ஒரு இடத்தில் நிலவுவதில்லை.

चरमोऽपि न युज्यते तदाऽङ्गाङ्गिकभावस्य च तन्त्रता न किं स्यात् ।
न च योजकगौरवं च दोषः प्रकृते तस्य तवापि सम्मतत्वात् ॥ १२३

தனிப்பட்ட முறையில் பேதாபேதம் என்பதும் சரியன்று. பிரகிருதமான தேகதேகிகளுக்கு அங்காங்கிபாவம் என்று ஏன் கூறமுடியாது? அந்த அங்காங்கிபாவத்தை நீர் ஒப்புக்கொண்டமையால் அதிகமான ஒரு சம்பந்தத்தைக் கூறவேண்டியதாலுள்ள தோஷமில்லை.

अपि चान्यतमस्य जातितद्वत्प्रभृतीनां घटकत्व आग्रहश्चेत् ।
अपि सोऽत्र न दुर्लभश्चिदात्माङ्गकयोः कारणकार्यभावभावात् ॥ १२४

மேலும், மேற்கூறிய ஐந்துவித சம்பந்தங்களில் பிரியமாயின் அவைகளில் காரியகாரணபாவமாகிய சம்பந்தத்தையே தேகதேகிகளுக்குக் கூறுவதில் தப்பிதமில்லை.

न च वाच्यमिदं परात्मजत्वात्सकलस्यापि न जीवकार्यतेति ।
तदभेदत एव सर्वकस्याप्युपपत्तेरिह जीवकार्यतायाः ॥ १२५

உலகமனைத்தும் பரமாத்மாவினிடமிருந்து தோன்றியதினால் ஜீவனுடைய சிருஷ்டியென்று சந்தேகப்படவேண்டாம். ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் அபேதமாகையால் பரமாத்மசிருஷ்டியை ஜீவசிருஷ்டி என்று கூறுவதில் ஆக்ஷேபமில்லை.

तदसिद्धिमुखानुमानदोषानुदयादुक्तनयस्य निर्मलत्वम् ।
भ्रमधीप्रमितित्ववेदिनोऽतस्तव न भ्रान्तिपदार्थ एव सिध्येत् ॥ १२६

ஆகையால் அனுமானப் பிரமாணத்திற்குள்ள தோஷங்கள் ஒன்றுமில்லாமையால் இந்த அனுமானம் மாசற்றது. இவ்வாறு 'நான் மனிதன்' என்ற முதலிய ஞானத்தை (விபரீதஞானத்தை) யதார்த்தஞானம் என்று தெரிந்துகொள்ளுகிற உனக்கு அயதார்த்தஞானமே கிடையாது.

अपि च भ्रम एष किं तवान्तःकरणस्येति चिदात्मनोऽथवाऽसौ ।
परिणाम इहाऽऽदिमो न तस्याऽऽत्मगतत्वानुभवस्य भङ्गपत्तेः ॥ १२७

மேலும், பிரமஞானம் உம்முடைய கொள்கைப்படி மனதினுடைய பரிணாமமா (மாறுதல்) அல்லது சேதனனாகிய ஆத்மாவின் பரிணாமமா? மனதினுடைய மாறுதல் என்று கூறினால், அதனை ஆத்மாவின் குணம் என்று கூறுதல் முரண்.

ननु रक्ततमप्रसूनयोगात् स्फटिके संस्फुरणं यथाऽरुणिम्नः ।
भ्रमसंयुतचित्तयोगतोऽस्य भ्रमणस्यानुभवस्तथाऽऽत्मनि स्यात् ॥ १२८

சிவப்பு புஷ்பத்தினுடைய சம்பந்தத்தினால் ஸ்படிகத்தில் அந்த சிவப்பு நிறம் தோன்றுவதுபோல பிரமஞானமுள்ள சித்தத்தின் சம்பந்தத்தினால் ஆத்மாவினிடம் அதனைச் சம்பந்தப்படுத்திக் கூறலாமல்லவா?

इति चेदयमीरयाऽऽत्मयोगो भ्रमणस्याऽऽश्रित एष सन्नसन्वा ।
प्रथमो घटते न संसृजेस्तेऽपरथाख्यातिवदस्य शून्यकत्वात् ॥ १२९

அப்படியாகில் அதனை ஆராய்ந்து யோசிக்கலாம். அந்தக்கரணத்தின் பரிணாமமாகிய பிரமத்திற்கு ஆத்மாவினுடன் உள்ள சம்பந்தம் ஸத்தா அல்லது அஸத்தா? முதல்கூறியது இயலாது. அன்யதாக்கியாதியைக் கூறும் உம்முடைய கொள்கைப்படி வேறொன்றின் குணம் மன்றொன்றின் சம்பந்தமடையாது. (அத்தகைய சம்பந்தமில்லை என்று கொள்கை.)

चरमोऽपि न युज्यतेऽपरोक्षप्रथनस्यानुपपद्यमानतायाः ।
परिणामविशेष आत्मनोऽसौ भ्रम इत्येष न युज्यतेऽन्त्यपक्षः ॥ १३०

ஆனால் அதனை அஸத்து என்று கூறுகையில், அபரோக்ஷஞானம் (ஸாக்ஷாத்காரம்) ஏற்படமுடியாது. அது அனுபவத்திற்கு முரணான பேச்சு, வேண்டாம். ஆத்மாவினுடைய பரிணாமமே அந்த பிரமஞானம் என்று இரண்டாவது (முதல்வகுப்பில்) நியாயவிரோதம்.

असभागतयाऽऽत्मनो निरस्तेतरयुक्तेः परिणत्ययोग्यतायाः ।
परिणत्ययुजेश्च योग्यतायामपि बुद्ध्याकृतितश्चिदात्मनोऽस्य ॥ १३१

மற்றப் பொருள்களுடன் பற்றற்றதும் அவயவமற்றதுமாகிய ஆத்மாவிற்குப் பரிணாமம் என்ற மாறுதல் இயல்பல்ல. அவ்வாறு மாறுதல் கூறுவதாயினும் புத்திரூபமாக மாற்றம் தகாது.

न हि नित्यचिदाश्रयप्रतीचः परिणामः पुनरन्यचित्स्वरूपः ।
गुणयोः समुदायगत्ययोगाद्गुणतावान्तरजातितः सजात्योः ॥ १३२

எப்பொழுதும் ஞானத்திற்கு ஆச்ரயமான பிரத்யக்ஷரூபமான ஆத்மாவிற்கு அந்த வகுப்பில்பட்டதாகிய வேறு ஞானரூபமான பரிணாமத்தைக் கூறுதல் நியாயவிரோதம். ஏககாலத்தில் ஒரே இனமாகிய குணங்களின் மாறுபாடு ஒரு பொருளில் இயலாது. வெண்மையான பொருள் ஏககாலத்தில் விருத்தமான பல நிறங்களையுடையதாக இருக்க இயலுமா? ஒரே பதார்த்தத்தில் விரோதமான பற்பல சுவைகளைச் சுவைக்கமுடியுமா?

युगपत्समवैति नो हि शौक्लयद्वयकं यत्र च कुत्रचिद्यदेतत् ।
ननु चिन्न गुणो गुणी तथा च प्रसरेन्नोदितदुष्टतेति चेन्न ॥ १३३

ஒரு பொருளில் ஒரே சமயத்தில் இரண்டு வெண்மைநிறம் தோன்றுமா? ஐயா, யாம் ஞானத்தைத் தர்மமாக (குணமாகக்) கூறுவதில்லை. குணியாகக் கூறுவோம். அப்பொழுது நீங்கள் கூறும் ஆக்ஷேபம் இயலாதல்லவா என்று கூறுதலும் சரியன்று.

कटकाश्रयभूतदीप्तहेम्नो रुचकाधारकभाववत्तथैव ।
अविनाशिचिदाश्रयस्य भूयोऽन्यचिदाधारतया स्थितेरयोगात् ॥ १३४

பிரமஞானத்தை குணியாக ஒப்புக்கொண்டபோதிலும் அதனை எப்பொழுதும் ஞானத்திற்கு ஆச்ரயமாகிய ஆத்மாவினிடத்தில் இருப்பதாகக் கூறுதல் முரண். வளையலாக இருக்கும் பொன் அந்தக்காலத்திலேயே கணையாழியாக இருப்பது இயலுமா?

न च संस्कृतिरग्रहोऽप्यविद्या भ्रमशब्दार्थनिरुक्त्यसंभवेऽपि ।
भ्रमसंज्ञितवस्त्वसंभवेन भ्रमसंपादितसंस्कृतेरयोगात् ॥ १३५

பிரமம் என்ற பதார்த்தமே இல்லாமையால் பிரமத்தினுலுண்டாகிய ஸம்ஸ்காரம் (வாசனை) இல்லாமையால், அதனுலுண்டாகிய ஸம்ஸ்காரம் 'अहं मनुजोऽस्मि' என்ற ஞானம் என்று கூறுதலும் தகாது.

अपि नाग्रहणं चितेरभावश्चितिरूपग्रहणस्य नित्यतायाः ।
तदसंभवतो न वृत्त्यभावस्तदभावेऽपि चिदात्मनोऽवभासात् ॥ १३६

ஆனல் அவித்தை என்பதை அக்ரஹணம் என்று கூறுவோம் என்ற ஆக்ஷேபத்தை நிராகிக்கின்ருர். அக்ரஹணம் = ஞானமின்மை. எந்த ஞானமின்மை? ஸ்வரூபஞானமின்மையா? உண்டாகிற (விருத்தி) ஞானமின்மையா? முதல்கூறுகிற ஸ்வரூபஞானமின்மை என்பது தகாது. ஸ்வரூபசைதன்யம் எப்பொழுதும் உள்ளது. அதற்கு அழிவில்லே. ஆகையால் அபாவம் கூற முடியாது. விருத்திஞானமின்மையென்ருல், அந்த விருத்திஞானம் இல்லாவிடினும் சித்ரூபமான ஆத்மா எப்பொழுதும் விளங்குகிருன். அதனுடைய பிரகாசத்திற்கு எவ்விதத்திலும் தடையில்லே.

न च भञ्जकमीक्ष्यते न तस्योपगमे दुःखजडानृतात्मकस्य ।
इति वाच्यमखण्डवृत्तिरूढेश्वरबोधस्य निवर्तकत्वयोगात् ॥ १३७

ஆத்மாவினிடத்தில் அக்ஞானத்தை நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்களன்ருே! அந்த அக்ஞானம் ஜடம், துக்கரூபம், பொய்யானது. அது ஆத்மாவை ஆச்ரயித்திருந்தால் அதனை அழிக்க வழியில்லே என்று ஐயப்பட வேண்டாம் என்று பரிகாரம் கூறுகிருர். 'तत्त्वमसि' முதலாகிய மகாவாக்கியத்தினுடைய அப்யாசத்தினுலுண்டாகும் விருத்தியில் பிரதிபலித்த ஈசுவரஞானம் அக்ஞானத்தை அழிக்கின்றது.

अपि चेष्टतदन्यहेतुधीजे जगतः कृत्यकृती न ते घटेते ।
सकलव्यवहारसङ्करत्वात्तदलं जीवनिकाऽपि दुर्लभा ते ॥ १३८

மேலும், உம்முடைய மதத்தின்படி பிரமஞானமில்லேயென்று எல்லாவற்றையும் ஒன்ருகக்கலந்துகட்டிக் கூறுவதனுல் சுகத்திற்கு சாதனமாகிய புண்யமும் துக்கத்திற்குக் காரணமாகிய பாபமும் ஒன்று என்பதுதான் ஏற்படும். அப்படிக்கூறுகையில் வாழ்க்கையே நிலேக்காது.

इति युक्तिशतैरमर्त्यकीर्तिः सुमतीन्द्रं तमतन्द्रितं स जित्वा ।
श्रुतिभावविरोधिभावभाजं विमतग्रन्थममन्थरं ममन्थ ॥ १३९

மிகவும் புத்திமான்களில் சிறந்தவரும், சுறுசுறுப்புள்ளவருமாகிய அந்த பட்டபாஸ்கரரை பல யுக்திகளால் வென்று, அழிவற்ற கீர்த்தியுடைய ஸ்ரீ சங்கரர் உபநிஷத்துக்களின் கொள்கைக்கு மாறுதலான கருத்தைக் கொண்ட பிறருடைய கொள்கையை நன்கு கடைந்தார்.

इति भास्करदुर्मतेऽभिभूते भगवत्पादकथासुधा प्रससे ।
घनवार्षिकवारिवाहजाले विगते शारदचन्द्रचन्द्रिकेव ॥ १४०

இவ்வாறு மழைகாலத்துக் கார்மேகங்களின் கூட்டம் நீங்கியபின் சரத்காலத்துத் திங்களின் நிலா பரவுவதுபோல், பாஸ்கரருடைய துஷ்டமதம் கண்டனம் செய்யப்பட்டு அடங்கிய பிறகு ஸ்ரீ சங்கரபகவத்பாதருடைய மதம் பரவியது.

स कथाभिरवन्तिषु प्रसिद्धान विबुधान् बाणमयूरदण्डिमुख्यान् ।
शिथिलीकृतदुर्मताभिमानान्निजभाष्यश्रवणोत्सुकांश्चकार ॥ १४१

அவர் அவந்திதேசத்தில் தன்னுடைய கிரந்தங்களினுல் பாணன், மயூரன், தண்டி முதலிய வித்வான்களை தமது துர்மதத்திலுள்ள பற்றை அகற்றச்செய்து தன்னுடைய பாஷ்யங்களைச் செவியுற விருப்பமுள்ளவர்களாகச் செய்தார்.

प्रतिपद्य तु बाह्लिकान् महर्षौ विनयिभ्यः प्रविवृण्वति स्वभाष्यम् ।
अवदन्नसहिष्णवः प्रवीणाः समये केचिदथाऽऽर्हताभिधाने ॥ १४२

மாமுனிவராகிய அவர் பால்ஹீகதேசத்தையடைந்து, தன்னைப் பணிந்த சீடர்களுக்கு தன்னுடைய பாஷ்யத்தை உரைக்கையில் ஆர்கதந்திரத்தில் (மதத்தில்) வல்லவர்கள், பொருமையுற்று அவருடைய அருகில் அணுகிக் கூறினர்.

ननु जीवमजीवमास्रवं च श्रितवत्संवरनिर्जरौ च बन्धः ।
अपि मोक्ष उपैषि सप्तसंख्यान्न पदार्थान् कथमेव सप्तभङ्ग्या ॥ १४३

ஐயா, (1) ஜீவன், (2) ஜடம், (3) ஆஸ்ரவம் (பொறிகளில் செயல் ஜீவனையும் ஜடத்தையும் ஆச்ரயித்திருக்கும்), (4) ஸம்வரம், (சமதமம் முதலியவைகளில் முயற்சி), (5) நிர்ஜரம், (புண்யபாபங்களை நாசம்செய்யக் காரணமாகிய காய்ச்சிய இரும்பில் ஏறுதல் முதலியன), (6) பந்தம், (7) மோக்ஷம் என்பவைகளை ஏழுவிதமான நியாயத்தையனுசரித்து ஏன் ஒப்புக்கொள்ளுகிறீர்களில்லை என்று வினவினர்.

(1) स्यादस्ति (பொருள் உண்டு என்று விருப்பத்தில்) நிலவுகிறது.

(2) स्यान्नास्ति (வேண்டாம் என்ற விருப்பத்தில்).

(3) स्यादस्ति च नास्ति च (இருவிதவிருப்பம் கிரமமாக உண்டாகும்பொழுது).

(4) स्यादवक्तव्यः (ஏககாலத்தில் இருவிருப்பம்).

(5) स्यादस्ति चावक्तव्यः (1-வதும், 4-வதும் விரும்பப்படுகையில்).

(6) स्यान्नास्ति चावक्तव्यश्च (2-வதும், 4-வதும் விரும்பப்படுகையில்).

(7) स्यादास्ति च नास्ति चावक्तव्यश्च (3-வதும், 4-வதும் விரும்பப்படுகையில்).

कथयाऽऽर्हत जीवमस्तिकायं स्फुटमेवंविध इत्युवाच मौनी ।
अवदत्स च देहतुल्यमानो दृढकर्माष्टकवेष्टितश्च विद्वन् ॥ १४४

ஆர்கத; ஜீவாஸ்திகாயன் எத்தகையவன் என்று நன்கு விளக்குவீராக என்று முனிவர் கூறவும், வித்வானே; தேகத்தின் பிரமாணத்தையுடையவன் திருடமான எட்டுவிதங்களாகிய கர்மங்களினுல் பந்தமுற்றவன் என்று விடை கூறினுர்.

( கர்ம எட்டுவிதம் : घातिकर्म 4 - (1) ज्ञानावरणीयम्, (2) दर्शनावरणीयम्, (3) मोहनीयम्, (4) आन्तरायम् । अघातिकर्म 4 - (1) वेदनीयम्, (2) नामिकम्, (3) गोत्रिकम्, (4) आयुष्यकम् )

अमहाननणुर्घटादिवत्स्यात्स न नित्योऽपि च मानुषाच्च देहात् ।
गजदेहमयन्विशेन्न कृत्स्नं प्रविशेच्च प्लुषिदेहमप्यकृत्स्नः ॥ १४५

ஜீவன் மகானுமல்லன் (பருத்தவனல்லன்) சிறு பரிமாணம் உள்ளவனுமல்லன் என்ருல், குடம் முதலியவைகள் போல் நித்யனல்லன். மேலும், மனித சரீரத்தில் வசித்தவன் கர்மவசத்திஞல் அதனைவிட்டு யானையுடலில் புகும் பொழுதும் எங்கும் வியாபித்தவஞகான். ஈயின் சரீரத்தில் புகுந்தால், சரீரத்தைவிட்டு வெளியேயும் இருக்கவேண்டும்.

उपयान्ति च केचन प्रतीका महता संहननेन सङ्गमेऽस्य ।
अपयान्त्यधिजग्मुषोऽल्पदेहं तदयं देहसमः समश्रुतेश्च ॥ १४६

பெரிதான உடலுடன் சேரும்பொழுதும் இந்த ஜீவனுடன் அதற்குத் தக்க சில அவயவங்கள் சம்பந்தமுறவும், சிறிய உடலில் புகுகையில் சில நீங்கவும் செய்கின்றன. ஆகையால் தேகபரிமாணமுள்ளவன்.

उपयन्त इमे तथाऽपयन्तो यदि वर्ष्मेव न जीवतां भजेयुः ।
प्रभवेयुरनात्मनः कथं ते कथमात्मावयवाः प्रयन्तु तस्मिन् ॥ १४७

வருகின்றவையும் செல்லுகின்றவையும் ஆகிய (உற்பத்திநாசங்களை உடைய) அவயவங்கள் ஜீவத்தன்மையை அடையமாட்டா. ஆத்மாவின் அம்சங்கள் தேகத்தில்நின்று எவ்வாறு உண்டாகும். ஜடமாகிய அந்த தேகத்தில் சேதனஞகிய ஆத்மாவின் அம்சங்கள் எவ்வாறு லாபமடைய முடியும்.

जनितारहिताः क्षयेण हीनाः समुपायान्त्यपयान्ति चाऽऽत्मनस्ते ।
अमुकोपचितः प्रयाति कृत्स्नं त्वमुकैश्चापचितः प्रयात्यकृत्स्नम् ॥ १४८

உற்பத்தியும் நாசமுமற்ற நித்யமான அந்த அவயவங்களே ஆத்மாவை அடையவும் விடவும் செய்கின்றன. அவைகளால் வளர்ச்சியடைந்து தகுந்த தேகத்தில் வியாபிக்கிருன். விலகப்பட்டு சில தேகங்களில் புகுகிருன்.

किमचेतनतोत चेतनत्वं वद तेषां चरमे विरुद्धमत्या ।
वपुरुन्मथितं भवेत्तु पूर्वे बत कात्स्न्र्येन वपुर्न चेतयेयुः ॥ १४९

அந்த அவயவங்களுக்கு எல்லாவற்றிற்கும் சைதன்யமில்லையா? உண்டா? என்பதைப் புகலுவாயாக. சைதன்யமுண்டு என்ற இரண்டாவது கொள்கையைக்கொண்டால், சைதன்யமுற்ற அநேகர்களால் உடல் குழப்பத்தையடையும். பகுநாயகம் நகருக்குத் தகாதது. சைதன்யமில்லையென்றால் முதல்கொள்கையில், சரீரத்தின் எல்லா அவயவங்களுக்கும் உணர்ச்சி நிலவாது. உணர்ச்சியற்ற அம்சம் இருக்கின்றதல்லவா?

चलयन्ति रथं यथैकमत्या बहवो वाजिन एवमप्रतीताः ।
इतरेतरमङ्गमेजयन्तु ज्ञपते चेतनतामपि प्रपद्य ॥ १५०

அறிஞர்களின் தலைவரே! அநேகம் குதிரைகள் ஒரு இரதத்தை ஒற்றுமையுடன் இழுப்பதுபோல் எல்லா அம்சங்களும் சைதன்யத்துடன் உடலுணர்ச்சியை நிலவச்செய்யும்.

बहवोऽपि नियामकस्य सत्त्वात्सुमते तत्र भजेयुरैकमत्यम् ।
कथमत्र नियामकस्य तद्वद्विरहात् कस्यचिदप्यदो घटेत ॥ १५१

புத்திமானே! அங்கு சாரதி ஒரு நாயகனாகவிருப்பதினால் அநேக குதிரைகள் இரதத்தைச் செலுத்துகின்றன. இங்கு அதுபோல் நாயகன் ஒருவன் இல்லாமையால் அது எவ்வாறு நிலவும்?

उपयान्ति न चापयान्ति जीवावयवाः किन्तु महत्तरे शरीरे ।
विकसन्ति च सङ्कुचन्त्यनिष्टे यतिवर्यात्र निदर्शनं जलौका ॥ १५२

யதிசிரேஷ்டரே! பெரிதான யானை முதலிய சரீரத்திலும், சிறிதான பூச்சியின் சரீரத்திலும் ஜீவனுடைய அவயவங்கள் புதிதாக புகுதலையும், போகுதலையும் செய்வதில்லை. ஆனால், விரிதலையும் சுருங்குதலையும் அடைகின்றன. இதற்கு உதாரணம் அட்டை.

यदि चैवममी सविक्रियत्वाद्धटवत्ते च विनश्वरा भवेयुः ।
इति नश्वरतां प्रयाति जीवे कृतनाशाकृतसङ्गमौ भवेताम् ॥ १५३

இவ்வாறு கூறுகையில், குடம் முதலிய பொருள்கள்போல் ஜீவனுடைய அவயவங்களும் அழியும் பொருள்கள் ஆகும். அழிவுற்றவைகளாகில், செய்த செயலுக்குப் பயனில்லாமல் நாசமும் செய்யாத புண்யபாபங்களின் பயனனுபவித்தலுமாகிய தோஷங்கள் நிலவும்.

अपि चैवमलाबुवद्भवाब्धौ निजकर्माष्टकभारमग्नजन्तोः ।
सततोर्ध्वगतिस्वरूपमोक्षस्तव सिद्धान्तसमर्थितो न सिध्येत् ॥ १५४

மேலும் அந்த ஜீவன் தன்னுடைய எட்டுவித கர்மங்களின் பாரத்தினால் ஸம்ஸாரமாகிய சமுத்திரத்தில் மூழ்கிக்கிடப்பான். ஆகவே, சுரக்காய் போல் மேலே மிதந்திருத்தலாகிய உமது சித்தாந்தப்படி மோக்ஷம் என்று கூறுதல் நிலைக்காது.

अपि साधनभूतसप्तभङ्गीनयमप्याहर्त नाऽऽद्रियामहे ते ।
परमार्थसतां विरोधभाजां स्थितिरेकत्र हि नैकदा घटेत ॥ १५५

மேலும், ஆர்கதரே! நீர் கூறும் ஸாதனங்களாகிய ஸப்தபங்கீநயத்தை நாம் அனுமதிக்கிறோமில்லை. உண்மையாக இருக்கும் பதார்த்தங்களுக்கு முரண்பாடுநிலைமை ஏககாலத்தில் இருத்தல் என்பது நிலவக்கூடியதில்லை.

इति माध्यमिकेषु भग्नदर्पेष्वथ भाष्याणि स नैमिशे वितत्य ।
दरदान् भरतांश्च शूरसेनान् कुरुपाञ्चालमुखान् बहूनजैषीत् ॥ १५६

இவ்வாறு மாத்யமிகர்களுடைய கர்வத்தை அடக்கிய பிறகு தனது பாஷ்யங்களை நைமிஷக்ஷேத்திரத்தில் பரவச்செய்து, தரதம், பரதம், சூரசேனம், குருபாஞ்சாலம் முதலிய தேசங்களனைவற்றையும் வென்றார்.

पटुयुक्तिनिकृत्तसर्वशास्त्रं गुरुभट्टोदयनादिकैरजय्यम् ।
स हि खण्डनकारमूढदर्पं बहुधा व्युह्य वशंवदं चकार ॥ १५७

சிறந்த யுக்திகளால் எல்லா நூல்களையும் மறுத்தவரும், குரு, பட்டர், உதயனாசாரியர் முதலியவர்களாலும் வெல்லமுடியாதவரும் செருக்குமிக்கவரும் ஆகிய கண்டனகாரராகிய ஸ்ரீ ஹர்ஷரை வாதத்தில் ஜயித்து தன் வசம் செய்துகொண்டார்.

तदनन्तरमेष कामरूपानधिगत्याभिनवोपशब्दगुप्तम् ।
अजयत्किल शाक्तभाष्यकारं स च भग्नो मनसेदमालुलोचे ॥ १५८

பிறகு இவர் காமரூபதேசத்திற்குச் சென்று அபிநவகுப்தர் என்ற பெயருள்ள சாக்தபாஷ்யகாரரை வென்றார். தோல்வியுற்ற அவர் மனதில் இவ்வாறு யோசித்தார்.

निगमाब्जविकासिबालभानोर्न समोऽमुष्य विलोक्यते त्रिलोक्याम् ।
न कथञ्चन मद्वशंवदोऽसौ तदमुं दैवतकृत्यया हरेयम् ॥ १५९

வேதங்களாகிய தாமரைமலர்களை மலரச்செய்கின்ற இளம் கதிரவனாகிய இவருக்கு நிகரானவர் மூவுலகில் ஒருவனுமில்லை. எவ்விதத்திலும் எனக்கு இவர் வசமாகமாட்டார். ஆகையால் ஆபிசாரத்தினால் இவரை ஒழித்துக்கட்டிவிடுகிறேன் என்று எண்ணங்கொண்டான்.

इति गूढमसौ विचिन्त्य पश्चात् सह शिष्यैः सहसा स्वशाक्तभाष्यम् ।
परिहृत्य जनापवादभीत्या यमिनः शिष्य इवान्ववर्ततैषः ॥ १६०

இவ்வாறு மனதில் கூடமாக யோசித்து, பிறகு சிஷ்யர்களுடன் கலந்து ஆலோசித்து உலகாபவாதத்திற்குப் பயந்தவனாக தன்னுடைய பாஷ்யத்தை தியாகம் செய்து சிஷ்யன்போல் அவரைப் பின்பற்றினான்.

निजशिष्यपदं गतानुदीच्यानिति कृत्वाऽथ विदेहकौशलाद्यैः ।
विहितापचितिस्तथाऽङ्गवङ्गेष्वयमास्तीर्य यशो जगाम गौडान् ॥ १६१

இவ்வாறு வடதேசத்தார்களை தன் சீடர்களாகச் செய்த பிறகு விதேக, கோசலம் என்ற தேசத்தோர்களால் உபசரிக்கப்பட்டவராக அங்க, வங்க தேசங்களிலும் கீர்த்தியைப் பரவச்செய்து கௌடதேசத்திற்குச் சென்றார்.

अभिभूय मुरारिमिश्रवर्यं सहसा चोदयनं विजित्य वादे ।
अवधूय च धर्मगुप्तमिश्रं स्वयशः प्रौढमगापयत्स गौडान् ॥ १६२

முராரிமிச்ரரையும் வென்று, உதயனாசாரியரையும் வாதத்தில் தோற்கடித்து, தர்மகுப்தரையும் தள்ளிவிட்டு கௌடதேசத்தில் தன் புகழைப் பரவச்செய்தார்.

पूर्वं येन विमोहिता द्विजवरास्तस्यासतोऽरीन् कलौ
बुद्धस्य प्रबिभेद मस्करिवरस्तान् भास्करादीन् क्षणात् ।
शास्त्राम्नायविनिन्दकेन कुधिया कूटप्रवादाग्रहा -
न्निष्णातो निगमागमादिषु मतं दक्षस्य कूटग्रहे ॥ १६३

ஹிதத்தைக் கூறும் வேதசாஸ்திரங்களை நிந்தித்த துஷ்டபுத்தியான புத்தருடைய எதிரிகளாகிய பட்டபாஸ்கரர் முதலியவர்கள் துஷ்டக்கொள்கையில் பற்றுள்ளவர்களாதலால் அவர்களை விரைவில் வென்று, வேதங்களின் கருத்தை உணராமல் துஷ்டமதத்தைப் பரப்புவதில் வல்லமைபெற்ற புத்தருடைய கொள்கையையும், திறமை வாய்ந்த ஸ்ரீ சங்கரபகவத்பாதர் வென்றார்.

शाक्तैः पाशुपतैरपि क्षपणकैः कापालिकैर्वैष्णवै-
रप्यन्यैरखिलैः खिलं खलु खलैर्दुर्वादिभिर्वैदिकम् ।
मार्गं रक्षितुमुग्रवादिविजयं नो मानहेतोर्व्यधा -
त्सर्वज्ञो न यतोऽस्य संभवति सम्मानग्रहग्रस्तता ॥ १६४

சாக்தர்களாலும், பாசுபதர்களாலும், பௌத்தர்களாலும், காபாலிகர்களாலும், வைணவர்களாலும், வேறும் மற்ற துஷ்ட மதஸ்தர்களாலும் வைதிகமார்க்கம் பாழடைந்திருக்கையில் அதனைக் காப்பாற்றுவதற்காக அந்த துஷ்டவாதிகளுடன் வாதம் செய்து அவர்களை வென்றார் என்பதே அன்றி ஸர்வக்ஞராகிய ஸ்ரீ சங்கரர் தன்னுடைய பெருமைக்காகச் செய்யவில்லை. ஏனெனில், தற்புகழ்ச்சி என்ற பேய் அவரைப் பிடிக்கவில்லை.

दिष्टे पङ्कजविष्टरेण जगतामाद्येन तत्सूनुभि -
र्निर्दिष्टे सनकादिभिः परिचिते प्राचेतसाद्यैरपि ।
श्रौताद्वैतपथे परात्मभिदुरान् दुर्वादिनः कण्टकान्
प्रोद्धृत्याथ चकार तत्र करुणो मोक्षाध्वगक्षुण्णताम् ॥ १६५

பிரம்மதேவரால் உபதேசம் செய்யப்பட்டு, ஸனகாதிகளால் காண்பிக்கப்பட்டு, வால்மீகி முதலியவர்களால் பரிசயம் செய்யப்பட்டு விளங்கிய வேதமார்க்கமாகிய அத்வைதம், பேதவாதிகளாகிய துஷ்டர்களால் கெடுக்கப்படுகையில், அந்த துர்வாதிகளாகிய முட்களை நீக்கி, மோக்ஷத்திற்குச்

செல்லும் நெறியை, வழிப்போக்கர்கள் நடக்கும்படி பழக்கத்திற்குக் கொண்டுவந்தார்.

शान्तिर्दान्तिविरागते ह्युपरतिः क्षान्तिः परैकाग्रता
श्रद्धेति प्रथिताभिरेधिततनौ षड्वक्त्रवन्मातृभिः ।
भिक्षुक्षोणिपतौ पिचण्डिलतरोचण्डातिकण्डूचल -
त्पाखण्डासुरखण्डनैकरसिके बाधा बुधानां कुतः ॥ १६६

ஆறு தாய்மார்களால் கந்தர் வளர்க்கப்பட்டதுபோல், சாந்தி முதலிய ஆறு குணங்களால் (பெண்பாலானதுபற்றித் தாய்மார்களாக உருவகம்) வளர்ச்சியடைந்த யதிச்சக்கரவர்த்தியாக ஸ்ரீ சங்கரபகவத்பாதர் விளங்குகையில், வயிறு பருத்து கைகளுக்குத் தினவெடுத்து போருக்குத் தயாராகும் அரக்கர்கள் போன்ற துஷ்ட மதஸ்தர்களால் வித்வான்களுக்கு பீதி எவ்வாறு உண்டாகும்?

यत्राऽऽरम्भजकाहलाकलकलैर्लोकायतो विद्रुतः
काणाः काणभुजास्तु सैन्यरजसा सांख्यैर्धृताऽसांख्यधीः ।
युद्ध्वा तेषु पलायितेषु सहसा योगाः सहैवाद्रवन्
को वा वादिभटः पटुर्भुवि भवेद्वस्तुं पुरस्तान्मुनेः ॥ १६७

அந்த சக்ரவர்த்தி வாதப்போர் புரிவதற்கு ஆரம்பத்தில் செய்த காஹலவாத்யத்தின் ஒலிகளைக் கேட்ட மாத்திரத்திலேயே லோகாயதிகன் ஓட்டம் பிடித்தான். சைன்யங்களுடைய தூசியினுல் காணுதர்கள் கண்களை இழந்தனர். ஸாங்கியர்கள் போரிலுள்ள புத்தியை இழந்தனர். அவர்கள் ஒருவாறு போர்புரிந்து ஓடவும் யோகமதஸ்தர்களும் அவர்களையே பின்பற்றி ஓடினர். வாதம் செய்ய விருப்பமுள்ள எந்த வீரன்தான் வையகத்தில் அந்த முனிவருடைய முன்னுல் நிற்கமுடியும்?

उच्चण्डे पणबन्धबन्धुरतरे वाचंयमक्ष्मापतेः
पूर्वं मण्डनखण्डने समुदभूद्यो डिण्डिमाडम्बरः ।
जाताः शब्दपरम्परास्तत इमाः पाखण्डदुर्वादिना -
मद्य श्रोत्रतटाटवीषु दधते दावानलज्वालताम् ॥ १६८

மாமுனிச்சக்ரவர்த்தியாகிய ஸ்ரீ சங்கரபரமகுரு, மண்டனமிச்ரருடன் பந்தயம்செய்து கொண்டு ஆரம்பிக்கும் வாதப்போரின் முதலிலுண்டான டிண்டிவாத்யத்தின் ஒலியினின்றும் உண்டாகிய சொற்கள், பாகண்டர்களாகிய துர்மதத்தர்களுடைய செவிகளாகிய காடுகளில் காட்டுத்தீயின் ஜ்வாலைகளாக விளங்கின.

बुद्धो युद्धसमुद्यतः किल पुनः स्थित्वा क्षणाद्विद्रुतः
कोणे द्राक्कणभुग्व्यलीयत तमःस्तोमावृतो गौतमः ।
भग्नोऽसौ कपिलः पलायत ततः पातञ्जलाश्चाञ्जलिं
चक्रुस्तस्य यतीशितुश्चतुरता केनोपमीयेत सा ॥ १६९

புத்தன் போருக்கு முயன்று சிறிது நின்று கணத்தில் ஓடினான். கணாதர் ஒரு மூலையில் யாரும் காணாமலிருக்கும்படி ஒளிந்துகொண்டார். கௌதமர் தம் மனதில் துக்கமுற்றார். கபிலர் காயமுற்று ஓடினார். பாதஞ்சலர்கள் அஞ்சலி செய்தனர். அந்த யதீசுவரருடைய பிரசித்திபெற்ற வல்லமைக்கு நிகர் யாதுள்ளது?

हस्तग्राहं गृहीताः कतिचन समरे वैदिका वादियोधाः
काणादाद्याः परे तु प्रसभमभिहता हन्त लोकायताद्याः ।
गाढं बन्दीकृतास्ते सुचिरमथ पुनः स्वस्वराज्ये नियुक्ताः
सेवन्ते तं विचित्रा यतिधरणिपतेः शूरता वा दया वा ॥ १७०

காணாதர்கள் முதலிய வைதிகமதத்தினராகிய சில வாதிவீரர்கள் வாதப் போரில் கைப்பிடியாகப் பிடிக்கப்பட்டு சிறிதுகாலம் கைதிகளாக அடைக்கப்பட்டு பிறகு தம் ஸ்வராஜ்யத்தில் (பிரம்மானந்தஸாக்ஷாத்காரமாகிய முக்தி சுகத்தில்) நியமிக்கப்பட்டனர். வேதத்திற்குப் புறம்பான வாதிகள் நன்கு தண்டிக்கப்பட்டனர். ஆச்சரியம்! இவ்வாறு செய்யப்பட்ட பின் அவர்கள் அந்த யதிச்சக்ரவர்த்தியைச் சேவித்தனர். இது அவருடைய சூரத்தன்மையா? தயாளகுணமா? எவ்விதத்திலும் வியக்கத்தக்கது.

शान्त्याद्यर्णववाडवानलशिखा सत्याभ्रवात्या दया -
ज्योत्स्नादर्शनिशाऽथ शान्तिनलिनीराकाशशाङ्कद्युतिः ।
आस्तिक्यद्रुमदावपावकनवज्वालावली सत्कथा -
हंसीप्रावृडखण्डि दण्डिपतिना पाखण्डवाङ्मण्डली ॥ १७१

சாந்தம் முதலிய ஸத்குணங்களாகிய சமுத்திரத்திற்கு பாடவாக்னி ஜ்வாலையும், ஸத்யமாகிய மேகத்திற்குப் புயல்காற்றும், கருணையாகிய நிலாவிற்கு அமாவாசை இரவும், சாந்தகுணமாகிய தாமரைக்கு பூர்ணிமத்திங்களும், ஆஸ்திக்யமாகிய மரத்திற்கு காட்டுத்தீயின் ஜ்வாலையும், நல்ல சொல்லாகிய ஹம்ஸத்திற்கு மழைக்காலமும் ஆகிய பாகண்டக்கூட்டங்களின் வாக்குத்தொகுதி, தண்டத்தைத் தரித்த யதிச்சக்கரவர்த்தியினால் துண்டிக்கப்பட்டது.

अद्वैतामृतवर्षिभिः परगुरुव्याहारधाराधरैः
कान्तैर्हन्त समन्ततः प्रसृमरैरुत्कृत्ततापत्रयैः ।
दुर्भिक्षं स्वपरैकताफलगतं दुर्भिक्षुसंपादितं
शान्तं संप्रति खण्डिताश्च निबिडाः पाखण्डचण्डातपाः ॥ १७२

துஷ்டசன்யாசிகளால் ஜீவபரமாத்மர்களுடைய ஐக்யவிஷயத்தில் நிலவும்படிச் செய்யப்பட்ட பஞ்சம், அத்வைதமாகிய தண்ணீரைப் பொழிகின்றவைகளும், அழகியவைகளும், எங்கும் பரந்து தாபத்திரயங்களைத் தணித்தவைகளும ஆகிய பரமாசாரியருடைய சொற்களாகிய மேகங்களால் நீக்கப்பட்டது. இப்பொழுது பாகண்டர்களுடைய கடும்சொற்களாகிய தாபங்கள் தணிந்தன.

शान्तानां सुभटाः कपालिकपतद्ग्राहग्रहव्यापृताः
काणादप्रतिहारिणः क्षपणकक्षोणीशवैतालिकाः ।
सामन्ताश्च दिगम्बरान्वयभुवश्चार्वाकवंशाङ्कुरा
नव्याः केचिदलं मुनीश्वरगिरा नीताः कथाशेषताम् ॥ १७३

பாதஞ்சலர்களுடைய வீரர்களும், காபாலிகர்களுக்குக் கொடிபிடிக்கின்றவர்களும், காணுதர்களுடைய வாயில்காப்போர்களும், பௌத்த அரசர்களுடைய ஸ்துதிபாடகர்களும், திகம்பரர்களுடைய வம்சத்தில் பிறந்த சிற்றரசர்களும், சார்வாகவம்சத்தின் முளைகளுமாகிய நவீனவாதிகளும் மாமுனிவருடைய சொற்களால் கதைமட்டும் மீதியுள்ளவர்களாகச் செய்யப்பட்டனர்.

इति सकलदिशासु द्वैतवार्तानिवृत्तौ स्वयमथ परितस्तारायमद्वैतवर्त्म ।
प्रतिदिनमपि कुर्वन् सर्वसन्देहमोक्षं रविरिव तिमिरौघे संप्रशान्ते महः स्वम् ॥ १७४

இவ்வாறு எல்லா திசைகளிலும் பேதவார்த்தைகள் நீங்கியபொழுது, இருள் நீங்கி கதிரவன் தன்னுடைய கிரணங்களைப் பரவச்செய்வதுபோல், இந்தப் பரமகுரு அத்வைதமார்க்கத்தை பரவச்செய்தார். தினமும் எல்லோருடைய ஐயங்களையும் அகற்றிவந்தார்.

इति श्रीमाधवीये तत्तदाशाजयकौतुकी
संक्षेपशङ्करजये सर्गः पञ्चदशोऽभवम् ॥ १५ ॥

இவ்வாறு ஸ்ரீ மாதவாசாரியர் இயற்றிய ஸ்ரீ சங்கரவிஜயச்சுருக்கத்தில்
அவருடைய திக்விஜயத்தின் குதூகலத்தை விளக்கும்
பதினைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

आदितः श्लोकाः 1736



# अथ षोडशः सर्गः

# பதினாருவது ஸர்க்கம்

## श्रीमदाचार्याणां शारदापीठवासवर्णनम्

## *ஸ்ரீ ஆசாரியர் சாரதாபீடத்திலமர்தலை வர்ணித்தல்*

अथ यदा जितवान्यतिशेखरोऽभिनवगुप्तमनुत्तममान्त्रिकम् ।
स तु तदाऽपजितो यतिगोचरं हतमनाः कृतवानपगोरणम् ॥ १

பிறகு யதீசுவரர், சிறந்த மந்திரவாதியாகிய அபிநவகுப்தாசாரியரை ஜயித்ததினால், தோல்வியுற்ற அவர் மனமுடைந்தவராக அந்த யதீசுவரருடைய வதைக்கு முயற்சி செய்தார்.

स ततोऽभिचचार मूढबुद्धिर्यतिशार्दूलममुं प्ररूढरोषः ।
अचिकित्स्यतमो भिषग्भिरस्मादजनिष्टास्य भगन्दराख्यरोगः ॥ २

மூடபுத்தியாகிய அவர் மிகச் சினம்கொண்டு யதிகளில் சிறந்த அந்த ஸ்ரீ சங்கரர் மீது ஆபிசாரம் செய்தார். ஆகையால், வைத்தியர்களால் பரிகாரம் செய்ய முடியாத 'பகந்தரம்' என்ற மிகக் கொடிய வியாதி அந்த ஸ்ரீ சங்கரருக்கு உண்டாயிற்று.

अचिकित्स्यभगन्दराख्यरोगप्रसरच्छोणितपङ्किलस्वशाटचाः ।
अजुगुप्सविशोधनादिरूपां परिचर्यामकृतास्य तोटकार्यः ॥ ३

பரிகாரம் செய்தற்கரிதான அந்த பகந்தரவியாதியினால் உடலிலிருந்து வெளியே வரும் ரத்தத்தினால் கறைபற்றுகின்ற அவருடைய வஸ்திரங்களை மனதில் சிறிதும் அருவெறுப்புக்கொள்ளாமல் துவைத்துச் சுத்தம் செய்தல் முதலிய பணிவிடைகளை தோடகாசாரியர் செய்துவந்தார்.

भगन्दरव्याधिनिपीडितं गुरुं निरीक्ष्य शिष्याः समबोधयञ्शनैः ।
नोपेक्षणीयो भगवन् महामयस्त्वपीडितः शत्रुरिवर्द्धिमाप्नुयात् ॥ ४

பகந்தர வியாதியினால் மிகவும் துன்புறுத்தப்பட்ட குருவைக் கண்டு சீடர்கள் மெதுவாகத் தெரிவித்தனர். பகவானே! இந்தப் பெரும் வியாதியை கவனிக்காமலிருக்கக்கூடாது. உபேக்ஷை செய்தால் பகைவன் தலைமேல் ஏறுவதுபோல் இப்பொழுதே பரிகாரம் செய்யாவிடில் பிறகு இதனை விலக்கமுடியாமல் போய்விடும்.

ममत्वहानाद्भवता शरीरके न गण्यते व्याधिकृताऽऽर्तिरीदृशी ।
पश्यन्त एवान्तिकवर्तिनो वयं भृशातुराः स्मः सहसा व्यथासहाः ॥ ५

சரீரத்தில் அபிமானமின்மையால் தாங்கள் இத்தகைய துன்பத்தைப் பொருட்படுத்துகிறீர்களில்லை. பக்கத்திலிருந்து பார்த்துக்கொண்டிருக்கும் யாம் தங்களுடைய இந்த வேதனையைத் தாங்கமுடியாதவர்களாக மிகவும் வருந்துகின்றோம்.

चिकित्सका व्याधिनिदानकोविदाः संप्रच्छनीया भगवन्नितस्ततः ।
प्रत्यक्षवत्संप्रति सन्ति पूरुषा जीवातुवेदे गदितार्थसिद्धिदाः ॥ ६

பகவானே! வியாதியின் காரணத்தை அறிவதில் வல்லமையுள்ள வைத்தியர்களிடம் கலந்து யோசனை செய்யவேண்டும். இக்காலத்தில் வைத்திய சாஸ்திரத்தில் கேட்கும் விஷயத்தைப் பயன்படுத்துகின்ற சமர்த்தர்கள் பிரத்யக்ஷமான தன்வந்தரமூர்த்திபோல் எல்லாவிடங்களிலுமிருக்கின்றனர்.

उपेक्षमाणेऽपि गुरावनास्थया शरीरकादौ सुखमात्मनीश्वरैः ।
नोपेक्षणीयं गुरुदुःखदृश्वभिर्दुःखं विनेयैरिति शास्त्रनिश्चयः ॥ ७

சரீரம் முதலியவைகளில் பற்றில்லாத ஆசிரியர் தன்னுடைய சுகத்தைக் கவனிக்காமல் உபேக்ஷைசெய்தாலும்கூட, அத்தகைய குருவினுடைய துக்கத்தைக் கண்ணுற்றவரும் வன்மையுள்ளவர்களுமாகிய சீடர்களால் அந்த விஷயத்தில் உபேக்ஷை செய்யத்தகாது என்பது நூல்களின் சித்தாந்தம்.

स्वस्थे भवत्पादसरोरुहद्वये स्वस्था वयं यन्मधुपायिवृत्तयः ।
तस्माद्भवेत्तावकविग्रहो यथा स्वस्थस्तथा वाञ्छति पूज्य नो मनः ॥ ८

பூஜிக்கத்தக்கவரே! வண்டுகள் தாமரைமலரின் தேனையருந்தி வாழ்வதுபோல் தங்களுடைய பாதகமலத்தில் வண்டுகளின் தொழிலைக்கொண்டுள்ள யாம் அந்தப் பாதகமலங்கள் சுகமாகவிருந்தால்தான் சுகமுறுவோம். ஆகையால் தங்களுடைய உடல் சுத்தத்துடன் இருக்குமாறு எங்களுடைய மனம் விரும்புகிறது.

व्याधिर्हि जन्मान्तरपापपाको भोगेन तस्मात् क्षपणीय एषः ।
अभुज्यमानः पुरुषं न मुञ्चेज्जन्मान्तरेऽपीति हि शास्त्रवादः ॥ ९

சங்கரர் கூறுகிறார்:- வியாதி முன்ஜன்ம வினையின் பயன். ஆகையால் அனுபவித்தேயாகவேண்டும். இந்த ஜன்மத்தில் அனுபவிக்காவிடின், மறு ஜன்மத்திலும் தொடரும் என்பது நூல்களின் தீர்மானம்.

व्याधिर्द्विधाऽसौ कथितो हि विद्भिः कर्मोद्भवो धातुकृतस्तथेति ।
आद्यक्षयः कर्मण एव लीनाचिकित्सया स्याच्चरमोदितस्य ॥ १०

முன்ஜன்மவினையினுலும், தாதுக்களின் கோபத்தினுலும் வியாதி இரு விதமாக அறிஞர்களால் கூறப்படுகிறது. பாபத்தின் பயனுன வியாதி பாபம் நசித்தால்தான் நீங்குகின்றது. இரண்டாவது சிகிச்சை செய்வதினுல் நாசமுறுகிறது.

संक्षीयतां कर्मण एव संक्षयाद्व्याधिः प्रवृत्तो न चिकित्स्यते मया ।
पतेच्छरीरं यदि तन्निमित्ततः पतत्ववश्यं न बिभेमि किञ्चन ॥ ११

எனக்கு ஏற்பட்ட இந்த வியாதி ஊழ்வினையழிவதினுலேயே அழிவடையத்தக்கது. இதற்கு வைத்தியம் செய்ய யான் தயாராகவில்லை. இதனுல் சரீரம் நாசமுறுவதாயின் அவ்வாறே ஆகக்கடவது. சிறிதும் யான் அஞ்சுகிறேனில்லை.

सत्यं गुरो ते न शरीरलोभः स्पृहालुता नस्तु चिराय तस्मै ।
त्वज्जीवनेनैव हि जीवनं नः पाथश्चराणां जलमेव तद्धि ॥ १२

சீடர்கள் கூறுகின்றனர்:-

குருவே! உண்மையில் தங்களுக்கு சரீரத்தில் பற்றில்லை. எங்களுக்கு அதனில் விசேஷமான அன்புள்ளது. ஜலத்தில் வாழும் பிராணிகளுக்கு ஜலம்போல் தங்களுடைய வாழ்க்கைதான் எமது வாழ்க்கைக்கு முக்கியமான சாதனம்.

स्वयं कृतार्थाः परतुष्टिहेतोः कुर्वन्ति सन्तो निजदेहरक्षाम् ।
तस्माच्छरीरं परिरक्षणीयं त्वयाऽपि लोकस्य हिताय विद्वन् ॥ १३

தாங்கள் கிருதார்த்தர்களாயினும் (அடையவேண்டிய வேறு பொருளில்லாதவர்களாயினும்) பிறருடைய சந்தோஷத்திற்காக தங்களைப்போன்ற சான்றோர்கள் தமது உடலைக் காப்பாற்றுகின்றனர். ஹே அறிஞரே! ஆகையால் உலகத்தின் நன்மைக்காக தாங்களுடலை அவசியம் காப்பாற்றவேண்டும்.

निर्बन्धतो गुरुवरः प्रददावनुज्ञां दिग्भ्यो भिषग्वरसमानयनाय तेभ्यः ।
नत्वा गुरुं प्रतिदिशं प्रययुः प्रहृष्टाः शिष्याः प्रवासकुशला हरिभक्तिभाजः ॥ १४

குருசிரேஷ்டராகிய ஸ்ரீ சங்கரர் வற்புறுத்தப்பட்டமையால் பல திசைகளிலிருந்து வைத்தியர்களை அழைத்துவருவதற்கு சீடர்களுக்கு அனுமதியளித்தார். விஷ்ணுபக்தியுள்ளவர்களும், அன்யதேச யாத்திரையில் திறமையுற்றவர்களுமாகிய சீடர்கள் குருவை வணங்கி உவகையுடன் பல திசைகளுக்கு பிரயாணமாயினர்.

प्रायो नृपं कविजना भिषजो वदान्यं वित्तार्थिनः प्रतिदिनं कुशला जुषन्ते ।
तस्मादमी नृपपुरेषु निरीक्षणीया इत्येव चेतसि मनोरथमादधानाः ॥ १५

तेऽतीत्य देशान् बहुलान् स्वकार्यसिद्धयै क्वचिद्राजपुरे भिषग्भिः ।
अवाप्य सन्दर्शनभाषणानि समानयंस्तान् गुरुवर्यपार्श्वम् ॥ १६

ஆயுர்வேத நூலில் வல்லமைவாய்ந்த வைத்தியர்கள் தங்களுடைய வாழ்க்கைக்குப் பொருள் இன்றியமையாததால் கொடையாளிகளான அரசர்களுடைய அரண்மனையில் வாசம் செய்வார்கள் என்று கருதி அந்த சீடர்கள் அநேக தேசங்களில் சென்று கடைசியில், அரசாங்கநகரமொன்றில் வைத்தியர்களைக்கண்டு சம்பாஷணைகள் செய்து ஆசாரியருடைய சமீபத்திற்கு அவர்களையழைத்துவந்தனர்.

ततो द्विजेन्द्रैर्निजसेवकैस्तान् सन्तोषितान् स्वाभिमतार्थदानैः ।
यदत्र कर्तव्यमुदीर्यतां तत्कुर्मः स्वशक्त्येति वदाङ्गौ सः ॥ १७

பிறகு தன்னுடைய சேவகர்களாகிய சிறந்த அந்தணர்கள் அந்த வைத்தியர்களுக்கு உரிய பொருள்களையளித்து சந்தோஷிக்கச்செய்தனர். அவர்களும் உவகையுற்று இங்கு யாம் செய்யவேண்டியதைக் கட்டளையளித்தால் இயன்றவாறு செய்கின்றோம் என்று கூற அவ்வைத்தியர்களிடம் ஸ்ரீ சங்கரர் கூறினர்.

उपगुदं भिषजः परिबाधते गद उदेत्य तनुं तनुमध्यगः ।
यदिदमस्य विधेयमिदं ध्रुवं वदत रोगतमस्तिमिरारयः ॥ १८

வியாதியாகிய இருளையறுக்கின்றவர்களாகிய வைத்தியர்களே! உடலின் மத்தியில் இருக்கும் வியாதி ஆசன துவாரத்தின் அருகில்வந்து துன்புறுத்துகின்றது. இதற்கு பரிகாரம் செய்யவேண்டியது யாதோ அதனை செய்வீர்களாக.

चिरमुपेक्षितवानहमेतकं दुरितजोऽयमिति प्रतिभाति मे ।
तदपि शिष्यगणैर्निरहिंस्यहं प्रहितवान् भवदानयनाय तान् ॥ १९

இந்த வியாதியை யான் வெகுநாட்களாக கவனிக்காமல் உபேக்ஷை செய்தேன். இது பாபத்தினால் தோன்றியது என்று என்னுடைய அபிப்பிராயம். ஆயினும் சீடர்களால் வற்புறுத்தப்பட்டேன். ஆகையால் உங்களை அழைத்துவருவதற்கு அவர்களையனுப்பினேன்.

निगदिते मुनिनेति भिषग्वरा विदधिरे बहुधा गदसत्क्रियाः ।
न च शशाम गदो बहुतापदो विमनसः पटवो भिषजोऽभवन् ॥ २०

முனிவரால் இவ்வாறு கூறப்பட்டபொழுது, சிறந்த வைத்தியர்கள் வியாதிக்குப் பரிகாரங்கள் செய்தனர். ஆனால் வியாதி தணியவில்லை. அதிகமான தாபத்தையே அளித்தது. ஆகையால் வல்லமையுள்ளவராயினும் அந்த வைத்தியர்கள் வருந்தி மனமிழந்தனர்.

अथ मुनिर्विमनस्त्वसमन्वितानिदमवोचत सिद्धभिषग्वरान् ।
अटत गेहमगात्समयो बहुर्गदहृते भवतामित ईयुषाम् ॥ २१

பிறகு முனிவர், மனமிழந்த அந்த சித்தவைத்தியர்களிடம் புகன்றார். ''ஹே வைத்தியர்களே! நீங்கள் வைத்தியம் செய்வதற்காக இங்கு வந்து நாட்கள் பல சென்றுவிட்டன. தங்களுடைய இல்லங்களுக்குச் செல்வீர்களாக.

दिनचयं गणयन् पथिलोचनः प्रियजनो निवसेद्विरहातुरः ।
नरपतिर्भवतां शरणं ध्रुवं स च विदेशगमं श्रुतवान्यदि ॥ २२

रुषितवान्न च वो वितरेन्नृपः फणितजीवितमक्षतशासनः ।
तुरगवन्नृपतिश्चलमानसो भिषजमन्यमसौ विदधीत वा ॥ २३

உறவினர் உங்களுடைய பிரிவினுல் வருந்தியவர்களாக நாட்களை எண்ணிக்கொண்டும், வரவை எதிர்பார்த்துக்கொண்டும் வழியைப் பார்த்துக்கொண்டுமிருப்பார்கள். உங்களுக்கு அரசன் அன்னமளிப்பவன். நீங்கள் வேறு தேசம் சென்றதை அவன் அறிந்தால் கோபமுற்றுக் கூறிய சம்பளத்தைத்தராமல் குறைத்துவிடுவான். அரசனுடைய கட்டளையை மீறுதல் தகாதது. குதிரையின் வேகம்போல் சலிக்கின்ற மனமுடையவன் அரசன். வேறு வைத்தியர்களை உங்களுடைய பதவியில் நியமித்துவிடுவான்.

जनपदो विरलो गदहारकैर्बहुलरुग्णजनः प्रकृतेरतः ।
मृगयते भवतो भवतां गृहे गदिजनः सहितुं गदमक्षमः ॥ २४

இயற்கையாகவே தேசத்தில் வைத்தியர்கள் குறைவு. வியாதிஸ்தர்கள் அதிகம். வியாதியைத் தாங்கமுடியாமல் அங்கு ஜனங்கள் உங்களுடைய இல்லங்களில் உங்களைத் தேடுவார்கள்.

पितृकृता जनिरस्य शरीरिणः समवनं गदहारिषु तिष्ठति ।
जनितमप्यफलं भिषजं विना भिषगसौ हरिरेव तनूभृतः ॥ २५

மனிதனுடைய உடல் தாய்தந்தையர்களிடமிருந்து தோன்றியதாயினும் அதனுடைய பாதுகாப்பு வைத்தியர்களைச் சேர்ந்தது. அத்தகைய வைத்தியனில்லாவிடில் பிறந்தும் பயனில்லை. ஆகவே மனிதனுக்கு, வைத்தியன் உலகத்தை பாதுகாக்கும் நாராயணனேயாகிறுன்.

यदुदितं भवता वितथं न तत्तदपि न क्षमते व्रजितुं मनः ।
सुरभुवं प्रविहाय मनुष्यगां व्रजितुमिच्छति कोऽत्र नरः सुधीः ॥ २६

வைத்தியர்கள் கூறுகிறுர்கள்:- தாங்கள் கூறுவது உண்மையே. ஆயினும் எங்களுடைய மனம் இங்கிருந்து போவதற்கு விருப்பம்கொள்ளுகிறதில்லை. விண்ணுலகையடைந்த புத்திசாலி அதனை விட்டு மண்ணுலகிற்குச் செல்ல விரும்புவாஞ?

इति निगद्य ययुर्भिषजां गणा विमनसः पटवोऽपि निजान् गृहान् ।
अथ मुनिर्विजहन्ममतां तनौ गुरुवरो गुरुदुःखमसोढ सः ॥ २७

இவ்வாறு கூறி மிகத் திறமையுள்ளவர்களாயினும் அந்த வைத்தியர்கள் தங்களுடைய முயற்சியும், திறமையும் பயன்படாமையால் வருந்தி ஆசிரியருடைய ஆக்ஞையின்படி தமது இல்லங்களுக்குத் திரும்பிச் சென்றனர். முனிவரும் குருசிரேஷ்டருமாகிய ஸ்ரீ சங்கரரும் தேகத்தில் அபிமானத்தை விட்டவராக அதிக வேதனையைப் பொறுத்துக்கொண்டார்.

प्रथितैरवनौ परःसहस्रैरगदंकारचयैरथाचिकित्स्ये ।
प्रबले सति हा भगन्दराख्ये स्मरति स्म स्मरशासनं मुनीन्द्रः ॥ २८

உலகில் பிரசித்திபெற்ற ஆயிரக்கணக்கான வைத்தியர்களாலும்கூட நீக்கமுடியாத பகந்தரம் என்ற வியாதி வலுத்து வேதனை தாங்கமுடியாமல் 'ஹா' என்று கூவி அந்த மாமுனிவர் காமனை எரித்த சங்கரரை மனதில் தீவ்ரமாகத் தியானம் செய்தார்.

स्मरशासनशासनान्नियुक्तौ द्विजवेषं प्रविधाय भूमिमाप्तौ ।
उपसेदतुरश्विनौ च देवौ सुभुजौ साञ्जनलोचनौ सुपुस्तौ ॥ २९

அவ்வாறு அவர் தியானம் செய்தமாத்திரத்திலேயே அந்த மகாதேவனுடைய உத்தரவினால் அச்வினீதேவர்கள் இருவரும் மானிடவேஷத்தில் மண்ணுலகிலிறங்கி, அழகிய கைகளுடனும், மையெழுதிய கண்களுடனும், நல்ல புத்தகங்களைத் தாங்கியவர்களுமாக அந்தப்பரமாசாரியருடைய அருகில் அணுகினர்.

यतिवर्य चिकित्सितुं न शक्या परकृत्याजनिता हि ते रुगेषा ।
इति तं समुदीर्य योगिवर्यं विबुधौ तौ प्रतिजग्मतुर्यथेतम् ॥ ३०

அவர்கள் பக்கத்தில் உட்கார்ந்து கூறினர்:- ''யதிசிரேஷ்டரே! தங்களுடைய இந்த வியாதி பிறனுடைய ஆபிசாரச்செயலினால் உண்டானது. ஔஷதத்தினால் விலக்கதற்கரிது.'' என்று அந்த சிறந்த யோகியாகிய ஸ்ரீ சங்கரரிடம் கூறி அந்த அச்வினிதேவர்கள் வந்தவழியே சென்றனர்.

तदनु स्वगुरोर्गदापनुत्त्यै परमन्त्रं तु जजाप जातमन्युः ।
मुहुरार्यपदेन वार्यमाणोऽप्यरिवर्गेऽप्यनुकम्पिनाऽब्जपादः ॥ ३१

பிறகு பத்மபாதர் மிக்க சினம் கொண்டவராக தன்னுடைய பரமகுருவின் வியாதி விலகுவதன்பொருட்டு சிறந்த மந்திரமான பிரணவத்தை ஜபம் செய்தார். பகைவர்களிடமும் கருணைகூர்ந்த ஸ்ரீ சங்கரர் அந்தப் பத்மபாதரை இந்த விஷயத்தில் தடைசெய்தபோதிலும் அதனையும் பொருட்படுத்தாமல் அந்த பத்மபாதர் ஆசாரியருடைய ஆரோக்யத்தை விரும்பி இவ்வாறு செய்தார். (ஆகையால் அவருடைய குருபக்தியின் கௌரவமும், தனக்குத் தீங்கு செய்தவனாயினும் அவனுக்குத் தீமை செய்தல் தகாது என்று சீடனுக்கு உபதேசம் அளித்த பரமகுருவின் கருணையின் எல்லையில்லா மகிமையும் இங்கு விசேஷமாக விளங்குகின்றது.)

अमुनैव ततो गदेन नीचः प्रतियातेन हतो ममार गुप्तः ।
मतिपूर्वकृतो महानुभावेष्वनयः कस्य भवेत्सुखोपलब्ध्यै ॥ ३२

பிறகு இந்த வியாதியே திரும்பிச்சென்று அற்பனுகிய அபிநவகுப்தனை பாதிக்க அதனுலேயே அவன் உயிர் நீங்கினுன். ( गुप्तः = காப்பாற்றப்பட்டவன், அப்படியிருந்தும் என்று பொருள்.) ஏனெனில், சான்றோர்களுக்கு மனப்பூர்வமாக துன்பம் செய்தால் எவன்தான் சுகத்தை அடைய முடியும்?

स्वस्थः सोऽयं ब्रह्म सायं कदाचिद्ध्यायन् गङ्गापूरसङ्गार्द्रवातैः ।
आगच्छन्तं सैकते प्रत्यगच्छद्योगीशानं गौडपादाभिधानम् ॥ ३३

வியாதி நீங்கி சுகத்தையடைந்த அவர் ஒருநாள் கங்கை நதியின் மணல் திட்டில் உட்கார்ந்துகொண்டு பிரம்மவஸ்துவை தியானம்செய்து கொண்டிருக்கையில் குளிர்ந்த காற்று வீசவும் கௌடபாதர் என்ற பெயருடையவராகிய யோகிசிரேஷ்டர் வருவதைக்கண்டு எதிர்சென்ருர்.

पाणौ पुल्लश्वेतपङ्केरुहश्रीमैत्रीपात्रीभूतभासा घटेन ।
आराद्राजत्कैरवानन्दसन्ध्यारागारक्ताम्भोदलीलां दधानम् ॥ ३४

पाणौ शोणाम्भोजबुद्ध्या समन्ताद्भ्राम्यद्भृङ्गीमण्डलीतुल्यकुल्याम् ।
अङ्गुल्यग्रासङ्गिरुद्राक्षमालामङ्गुष्ठाग्रेणासकृद्भ्रामयन्तम् ॥ ३५

செந்நிறமுள்ள கையில் வெண்தாமரைக்கு சமமாகிய கமண்டலத்தை வைத்திருப்பதினுல், மாலையில் செந்நிறமுற்ற வெண்மேகங்களுடைய அழகைக்கொண்டவரும், தாமரைமலர் என்று ஐயம்கொண்டு அதில்வந்து குவிந்த வண்டுக்கூட்டங்கள் என்று தோற்றத்தையளிக்கும் விரல்களினுள் உருத்திராக்ஷங்களை கட்டைவிரலின் நுனியால் உருட்டிக்கொண்டிருப்பவருமாகிய கௌடபாதர் வருவதைக்கண்டு எதிர்சென்ருர்.

आर्यस्याथो गौढपादस्य पादावभ्यर्च्यासौ शङ्करः पङ्कजाभौ ।
भक्तिश्रद्धासंभ्रमाक्रान्तचेताः प्रह्वस्तस्थावग्रतः प्राञ्जलिः सन् ॥ ३६

ஸ்ரீசங்கரர், பூஜிக்கத்தக்கவராகிய கௌடபாதமாமுனிவருடைய பாதகமலங்களைப் பூஜித்து, தன்னுடைய ஆசாரியருக்கு ஆசாரியராகிய அவரிடமுள்ள பக்தியினுலும் சான்ருேர்களிடமுள்ள சிரத்தையினுலும், மனம் நிரம்பியவராக அவருக்கருகில் பணிந்து கைகூப்பி நின்ருர்.

सिञ्चन्नेनं क्षीरवाराशिवीचीसाचिव्यायाऽऽसन्नयत्नैः कटाक्षैः ।
दन्तज्योत्स्नादन्तुराश्चापि कुर्वन्नाशाः सूक्तिं सन्दधे गौढपादः ॥ ३७

பாற்கடலின் அலைகளுடன் நட்புகொண்ட கடைக்கண்பார்வைகளால் இந்த ஸ்ரீ சங்கரரை அபிஷேகம் செய்துகொண்டும், பற்களின் ஒளியினுல் திசைகளை விளக்கிக்கொண்டும் அந்த கௌடபாதமுனிவர் வினவினுர்.

कच्चित्सर्वां वेत्सि गोविन्दनाम्नो हृद्या विद्या संसृदुद्धारकृद्या ।
कच्चित्तत्त्वं तत्त्वमानन्दरूपं नित्यं सच्चिन्निर्मलं वेत्सि वेद्यम् ॥ ३८

भक्त्या युक्ता स्वानुरक्ता विरक्ताः शान्ता दान्ताः सन्ततं श्रद्दधानाः ।
कच्चित्तत्त्वज्ञानकामा विनीताः शुश्रूषन्ते शिष्यवर्या गुरुं त्वाम् ॥ ३९

कच्चिन्नित्याः शत्रवो निर्जितास्ते कच्चित्प्राप्ताः सद्गुणाः शान्तिपूर्वाः ।
कच्चिद्योगः साधितोऽष्टाङ्गयुक्तः कच्चिच्चित्तं साधुचित्तत्त्वगं ते ॥ ४०

கோவிந்தர் உபதேசம்செய்ததும் சிறந்ததும், ஸம்ஸாரதுக்கங்களை விலக்குகின்றதுமாகிய அறிவை உணர்ந்தீரா? நித்யமாயும், ஸத்தாயும், சுத்தமாயும், ஆனந்தமாயும் உள்ள அறியவேண்டிய தத்வத்தை அறிந்துகொண்டீரா? சீடர்கள் பக்தியுள்ளவர்களாகவும், ஸ்வரூபத்தில் அன்புள்ளவர்களாகவும், மற்றப்பொருள்களில் வைராக்கியமுற்றவர்களாகவும், சமம், தமம், சிரத்தை இவைகளுடன் கூடினவர்களாகவும், தத்வஞானத்தில் விருப்பமுற்று பணிவுடன்கூடியவர்களாகவும் ஆசிரியராகிய உமக்கு பணிவிடை செய்கின்றனரா? காமம் முதலிய பகைவர்களை வென்றீரா? சமதமாதிகளாகிய நற்குணங்கள் நிலவினவா? எட்டு அங்கங்களுடன் கூடிய யோகத்தைச் செய்தீரா? உமது சித்தம் சித்ரூபமாகிய தத்வத்தில் லயமுற்றதா?

इत्यद्वैताचार्यवर्येण तेन प्रेम्णा पृष्टः शङ्करः साधुशीलः ।
भक्त्युद्रेकाद्बाष्पपर्याकुलाक्षो बध्नन्मूर्धन्यञ्जलिं व्याजहार ॥ ४१

இவ்வாறு அத்வைதமதத்திற்கு சிறந்த ஆசிரியராகிய அவரால் வினவப்பட்ட நல்லசுபாவமுள்ள ஸ்ரீ சங்கரர், பக்தியின் மிகுதியால் கண்ணீர் ததும்பிய கண்களுடன் கூடியவராக கைகளைக்கூப்பி தலையில்வைத்துக்கொண்டு கூறினார்.

यद्यत्पृष्टं स्पष्टमाचार्यपादैस्तत्तत्सर्वं भो भविष्यत्यवश्यम् ।
कारुण्याब्धेः कल्पयुष्मत्कटाक्षैर्दृष्टस्याऽऽहुर्दुर्लभं किंनु जन्तोः ॥ ४२

ஹே பகவானே! பூஜ்யர்களாகிய தாங்கள் வினவிய யாவும் கட்டாயமாக வரும்காலத்தில் ஏற்படப்போகிறது. ஐயா, கருணைக்கடலாகிய தங்களுடைய கடைக்கண் பார்வைகளால் அனுக்கிரஹத்தைப்பெற்ற மனிதனுக்குக் கிட்டாத பொருள் யாதுள்ளது?

मूको वाग्मी मन्दधीः पण्डिताग्र्यः पापाचारः पुण्यनिष्ठेषु गण्यः ।
कामासक्तः कीर्तिमान्निःस्पृहाणामार्यापाङ्गालोकतः स्यात्क्षणेन ॥ ४३

பூஜிக்கத்தக்கவர்களாகிய சான்றோர்களின் பார்வையினால், ஊமையன் சிறந்த சொல்வன்மையுள்ளவனாகவும், மூடன் அறிஞர்களின் முன்னணியில் இருப்பவனாகவும், பாபச்செயலுள்ளவன் புண்ணியவான்களுக்குள் மதிக்கத் தக்கவனாகவும், காமத்திலீடுபட்டவன் பற்றற்றவர்களின் புகழை அடைந்தவனாகவும் திடீரென்று மாறுகிறார்கள்.

लेशं वाऽपि ज्ञातुमीष्टे पुमान्कः सीमातीतस्याद्य युष्मन्महिम्नः ।
तुष्ट्वाऽत्यन्तं तत्त्वविद्योपदेष्टा जातः साक्षाद्यस्य वैयासकिः सः ॥ ४४

வியாஸமுனிவருடைய புதல்வனுகிய ஸ்ரீ சுகயோகி மிகவும் உவகையுற்று எந்தத்தங்களுக்கு ஆத்மஞானத்தைப் புகட்டினரோ அத்தகைய தங்களுடைய எல்லையில்லா மகிமையின் மிகச்சிறிது அம்சத்தைக்கூட அறிய வல்லமையுள்ள மனிதன் உலகில் யார் உள்ளான்?

आजानात्मज्ञानसिद्धं यमारादौदासीन्याज्ञातमात्रं व्रजन्तम् ।
प्रेमावेशात्पुत्र पुत्रेति शोचन्पाराशर्यः पृष्ठतोऽनुप्रपेदे ॥ ४५

यश्चाऽऽहूतो योगभाष्यप्रणेत्रा पित्रा प्राप्तः स प्रपञ्चैकभावम् ।
सर्वाहन्ताशीलनाद्योगभूमेः प्रत्याक्रोशं प्रातनोद्वृक्षरूपः ॥ ४६

பிறவியிலேயே ஆத்மஞானத்தினுல் சிறந்த தவப்பயனையடைந்த ஞான சித்தராகிய அந்த சுகயோகி மிகச்சிறுவயதிலேயே துறவியாக தந்தையின் அருகிலிருந்து புறப்பட்டு வெளியே செல்லுகையில் புதல்வனிடமுள்ள அன்பினுல், அவருடைய பிரிவாற்ருமை தாங்கமுடியாமல் வியாஸமாமுனிவர் பின்பற்றிச் சென்ருர். யோகசூத்திரங்களுக்கு பாஷ்யத்தை இயற்றிய மகானுகிய அந்த வியாஸமுனிவர், முன்னுல் விரைவில் செல்லுகின்ற புதல்வனை ''புத்திரனே!'' என்று உரக்க விளித்தார். அந்த சுகயோகியோவெனில் யோகாப்பியாசத்தின் வன்மையின் பயனுல் தன்னுடைய சிறு உடலில் ''நான், என்னுடையது'' என்ற அபிமானத்தையே துறந்தவரானதினுல், ஸர்வவியாபியாகிய பரமாத்மபாவம் நிலைத்தமையால் யோகசித்தியின் சிறப்பின் மகிமையினுல் தாவரங்களாகிய மரங்களுக்குள் அந்தர்யாமியாகப் புகுந்து அவைகள் மூலமாக தந்தையின் கூக்குரலுக்குப் பதிலளித்தார். (அதாவது, மாமுனிவராகிய வேதவியாஸர் தன்னைவிட்டுப் பிரிந்துசெல்லும் புதல்வனுகிய சுகயோகியைப் பின்தொடர்ந்து ''புத்திரா புத்திரா'' என்று கூப்பிடுகையில் மௌனமாகச்சென்ற சுகயோகி தன்னுடைய யோகசக்தியின் மகிமையால் மரங்களில் அந்தர்யாமியாகப் புகுந்து, அந்த மரங்களில் வசிக்கும் சுகங்கள் மூலமாக (தன் பெயரைக்கொண்ட கிளிகள் மூலமாக) தந்தையின் வருத்தத்தைத் தணியச்செய்தார். 'ஸ்வாமி! இந்தப் பறவையினங்களாகிய யாமும், தாவரங்களும் எங்களுக்கு தங்குமிடமுமாகிய இந்த மரங்களும் ஒன்றிலிருந்து மற்ருென்று தோன்றியபோதிலும், தந்தை, தாய், புதல்வி, புதல்வன் என்ற பந்தத்தைப் பாராட்டாமலிருக்கையில் இயற்கையிலேயே துறவியாக இருக்கும் எமது பெயருடைய இந்த ஞானசித்திபெற்றவரை, ஸம்ஸாரபாசத்தினுல் கட்டுண்ணும்படி ஏன் முயலுகிறீர்? வேண்டாம் வேண்டாம்' என்று அந்த கிளிகளின் பேச்சின்மூலமாக தந்தைக்கு புத்தி புகட்டினுர் என்று கருத்து.)

तत्तादृक्षज्ञानपाथोधियुष्मत्पादद्वन्द्वं पद्मसौहार्दहृद्यम् ।
दैवादेतद्दीनदृग्गोचरश्चेद्भद्रकस्यैतद्भागधेयं ह्यमेयम् ॥ ४७

அந்த சுகயோகியை ஆசாரியராகப்பெற்ற எல்லையில்லா ஞானக்கடலாகிய தங்களுடைய பாதகமலங்கள், எளியனான என்னுடைய கண்களுக்கு தெய்வச்செயலால் புலப்பட்டது என்பது, தங்கள் தாசனுடைய அளவற்ற பாக்கியமேயாகும்.

इत्याकर्ण्याथाब्रवीद्गौडपादो वत्स श्रुत्वा वास्तवांस्त्वद्गुणौघान् ।
द्रष्टुं शान्तस्वान्तवन्तं मम त्वां गाढोत्कण्ठागर्भितं चित्तमासीत् ॥ ४८

இவ்வாறு ஸ்ரீ சங்கரர் கூறிய வசனங்களைச் செவியுற்று, பிறகு கௌடபாதர் புகன்றார். ''குழந்தாய்; உண்மையாக உன்னுடைய உயர்ந்த குணங்களையும், சாந்தகுணத்திற்கு இருப்பிடமாகிய மனதையும் செவியுற்ற என்னுடைய மனம் நேரில் பார்க்கவேண்டுமென்று மிகவும் ஆவலுள்ளதாயிற்று''.

कृतास्त्वया भाष्यमुखा निबन्धा मत्कारिकावारिजनुःसुखार्काः ।
श्रुत्वेति गोविन्दमुखात्प्रहृष्य दृगध्वनीनोऽस्मि तवाद्य विद्वन् ॥ ४९

அறிஞனே! யான் இயற்றிய மாண்டூக்ய உபநிஷத்காரிகைகளாகிய தாமரைகளுக்கு கதிரவனாகிய பாஷ்யம் உம்மால் இயற்றப்பட்டுள்ளது என்ற விஷயத்தை கோவிந்தரிடமிருந்து செவியுற்று மிகவும் உவகைகொண்டவனாக உம் முன்னால் இப்பொழுது தோன்றினேன்.

इति स्फुटं प्रोक्तवते विनीतः सोऽश्रावयद्भाष्यमशेषमस्मै ।
विशिष्य माण्डूक्यगभाष्ययुग्मं श्रुत्वा प्रहृष्यन्निदमब्रवीत्तम् ॥ ५०

இவ்வாறு கூறியபொழுது, ஸ்ரீ சங்கரரும் தான் இயற்றிய பாஷ்ய மனைத்தையும் இவருக்குமுன்னால் படித்தார். மாண்டூக்ய உபநிஷத்தினுடையவும், மாண்டூக்ய காரிகைக்கும் பாஷ்யங்களையும் கேட்டு விசேஷமாகச் சந்தோஷம்கொண்டு அவர் கூறினார்.

मत्कारिकाभावविबोधिताद्दङ्माण्डूक्यभाष्यश्रवणोत्थहर्षः ।
दातुं वरं ते विदुषां वराय प्रोत्साहयत्याशु वरं वृणीष्व ॥ ५१

என்னுடைய காரிகைகளுடையவும் உபநிஷத்தினுடையவும் கருத்தை விளக்கும் பாஷ்யத்தைச் செவியுற்றதினாலுண்டான சந்தோஷம் அறிஞர்களில் சிறந்த உமக்கு வரத்தைத்தரும்படித் தூண்டுகின்றது. விரைவில் வேண்டிய வரத்தை வேண்டுவீராக (என்று கௌடபாதர் கூறினார்).

स प्राह पर्यायशुकर्षिमीक्ष्य भवन्तमद्राक्षमतिष्यपूरुषम् ।
वरः परः कोऽस्ति तथाऽपि चिन्तनं चित्तत्त्वगं मेऽस्तु गुरो निरन्तरम् ॥ ५२

ஸ்ரீசங்கரர்கூறினார்:- ஸ்ரீசுகயோகியின் வேறு உருவமாகிய தங்களைப் பார்த்த யான் கலிகாலமல்லாது மற்ற மூன்று யுகங்களிலுமவதரித்த பரம புருஷனாகிய பகவானையே பார்த்தேன். இதைக்காட்டிலும் வேறு சிறந்த லாபம் ஒன்றுமில்லை. ஆயினும், ஹே குருவே, என்னுடைய சித்தம் தொடர்ச்சியாக சித்தாகிய பிரம்மவஸ்துவினிடத்திலேயே நிலைக்குமாறு அருளுவீர்களாக.

तथेति सोऽन्तर्धिमपास्तमोहे गते चिरञ्जीविमुनावथासौ ।
वृत्तान्तमेतं स मुदाऽऽश्रवेभ्यः संश्रावयंस्तां क्षणदामनैषीत् ॥ ५३

'சரி' என்று கூறி, அக்ஞானம் நீங்கியவரும் சிரஞ்சீவியுமாகிய அந்த முனிவர் மறைந்த பின், ஸ்ரீ சங்கரர் தமது சீடர்களுக்கு இந்த விஷயத்தை உவகையுடன் கூறிக்கொண்டு இரவைக் கழித்தார்.

अथ द्युनद्यामुषसि क्षमीन्द्रो निर्वर्त्य नित्यं बिधिवत्स शिष्यैः ।
तीरे निदिध्यासनलालसोऽभूदत्रान्तरेऽश्रूयत लोकवार्ता ॥ ५४

பிறகு சமகுணம் நிறைந்த அந்த மாமுனிவர் விடியற்காலையில் தனது சீடர்களுடன் கடன்முறைகளை முடித்து கங்கைக்கரையில் தியானநிஷ்டைக்குத் தயாராகவிருக்கையில் உலகவதந்தி செவியில் விழுந்தது.

जम्बूद्वीपं शस्यतेऽस्यां पृथिव्यां तत्राप्येतन्मडलं भारताख्यम् ।
काश्मीराख्यं मण्डलं तत्र शस्तं यत्राऽऽस्तेऽसौ शारदा वागधीशा ॥ ५५

வையகத்தில் ஜம்பூதீவு உயர்ந்தது. அதில் பாரதகண்டம் சிறந்தது. அதிலும் வாக்தேவியாகிய சாரதை சன்னிதிகொண்டுள்ள காஷ்மீரதேசம் மிகச்சிறந்தது.

द्वारैर्युक्तं माण्डपैस्तच्चतुर्भिर्देव्या गेहं यत्र सर्वज्ञपीठम् ।
यत्राऽऽरोहे सर्ववित्सज्जनानां नान्ये सर्वे यत्प्रवेष्टुं क्षमन्ते ॥ ५६

அங்கு நான்கு வாயில்களுள்ள மண்டபம் அமைந்த 'ஸர்வக்ஞபீடம்' தேவியின் ஸ்தானமாக விளங்குகின்றது. அதன்மீது அமருவதற்குசான்றோர்களில் ஸர்வக்ஞராக உள்ளவரைத்தவிர மற்றவருக்கு வாய்ப்பில்லை.

प्राच्याः प्राच्यां पश्चिमाः पश्चिमायां ये चोदीच्यास्तामुदीचीं प्रपन्नाः ।
सर्वज्ञास्तद्द्वारमुद्घाटयन्तो दाक्षा नद्धं नो तदुद्घाटयन्ति ॥ ५७

கிழக்கு, மேற்கு, வடக்கு திசைகளில் தோன்றிய அறிஞர்களான ஸர்வக்ஞர்கள் அதாது (அதனதன்) துவாரங்களைத் திறப்பதற்கு முயன்றனர். ஆனால் தென்திசையினர் ஒருவரும் முயலவில்லை.

वार्तामुपश्रुत्य स दाक्षिणात्यो मानं तदीयं परिमातुमिच्छन् ।
काश्मीरदेशाय जगाम हृष्टः श्रीशङ्करो द्वारमपावरीतुम् ॥ ५८

தென்திசையில் தோன்றிய அந்த ஸ்ரீ சங்கரர் அந்த வதந்தியைக் கேட்டு தென்திசையின் மகிமையை வெளிப்படுத்த விருப்பமுற்று மிகசந்தோஷத்துடன் அந்த வாயிலைத் திறப்பதற்காக காஷ்மீரத்திற்குச் சென்றார்.

द्वारं पिनद्धं किल दाक्षिणात्यं न सन्ति विद्वांस इतीह दाक्षाः ।
तां किंवदन्तीं विफलां विधातुं जगाम देवीनिलयाय हृष्यन् ॥ ५९

மூடப்பட்டுள்ள தெற்குவாயிலைத் திறப்பதற்கு தென்திசையில் வித்வான்களில்லையென்ற வதந்தியை பொய்யாக்குவதற்கு ஸ்ரீ சங்கரர் சந்தோஷத்துடன் தேவியின் கோயிலுக்குச் சென்றார்.

वादिव्रातगजेन्द्रदुर्मदघटादुर्गर्वसङ्कर्षण -
श्रीमच्छङ्करदेशिकेन्द्रमृगराडायाति सर्वार्थवित् ।
दूरं गच्छत वादिदुःशठगजाः संन्यासदंष्ट्रायुधो
वेदान्तोरुवनाश्रयस्तदपरं द्वैतं वनं भक्षति ॥ ६०

करटतटान्तवान्तमदसौरभसारभर -
स्खलदलिसंभ्रमत्कलभकुम्भविजृम्भिबलः ।
हरिरिव जम्बुकानमददन्तगजान्कुजना -
नपि खलु नाक्षिगोचरयतीह यतिर्हतकान् ॥ ६१

संश्रावयन्नध्वनि देशिकेन्द्रः श्रीदक्षिणद्वारभुवं प्रपेदे ।
कवाटमुद्घाट्य निवेष्टुकामं ससंभ्रमं वादिगणो न्यरौत्सीत् ॥ ६२

துஷ்டவாதிகளாகிய மதயானைக்கூட்டங்களின் மதச்செருக்கை அறுக்கின்றவரும், துறவறமாகிய பற்களையே ஆயுதமாகக்கொண்டவரும், வேதாந்தங்களாகியவன்காட்டில் வசிக்கின்றவரும், ஸர்வக்ஞருமாகிய ஸ்ரீ சங்கரராகிய சிங்கம் வருகிறார், வாதிகளாகிய துஷ்டகஜங்களே! தூரத்தில் செல்லுங்கள் என்றும், மதஜலப்பெருக்கின் பரிமளவாசனையில் விருப்பங்கொண்டு சஞ்சரிக்கும் வண்டுகளுடன் கூடிய கொம்புள்ள யானைகளின் மஸ்தகத்தைப் பிளர்ப்பதில் தனது பலத்தைக் காண்பிக்கிற ஸ்ரீ சங்கரராகிய பெருமடங்கல், நரிகளையும், மதமும் கொம்புகளுமற்ற யானைகளையும்போன்ற அற்பர்களாகிய வாதிகளைக் கண்களால் கூடப் பார்க்கமாட்டார் என்றும் வழியில் முழங்கும்படி செய்துகொண்டு அந்தப் பரமாசாரியர் தென்வாயிலையடைந்தார். கதவைத்திறந்து உட்புக விரும்புகையில் வாதிகளின் ஒரு கூட்டம் பரபரப்புடன் தடுத்தது.

अथाब्रवीद्वादिगणः स देशिकं किमर्थमेवं बहुसंभ्रमक्रिया ।
यदत्र कार्यं तदुदीर्यतां शनैर्न संभ्रमः कर्तुमलं तदीप्सितम् ॥ ६३

பிறகு வாதிகள் அந்தப் பரமாசாரியரிடம் கூறினர் :- ''ஐயா, ஏன் இவ்வளவு அவசரப்படுகிறீர்? தாம் இங்கு செய்யக்கூடிய காரியத்தைக் கூறுங்கள். அவசரப்பட்டால் ஒன்றும் செய்யமுடியாது. மெதுவாகச் செய்யவேண்டும்.

यः कश्चिदेत्येतु परीक्षितुं चेद्वेदाखिलं नाविदितं ममाणु ।
इत्थं भवान्वक्ति समुन्नतीच्छो दत्त्वा परीक्षां व्रज देवतालयम् ॥ ६४

பரீக்ஷை செய்ய யாராவது வருகிறதாயின் வரலாம். யான் எல்லாமறிவேன். எனக்குத் தெரியாத விஷயம் ஒரு சிறிதுமில்லை என்று கூறுகிறீர்கள். உயர்வை விரும்புகின்றவரே! பரீக்ஷையில் ஜயம்பெற்று கோயிலில் புகுவீராக, என்று வாதிகள் கூறினர்.

षड्भाववादी कणभुङ्ममतस्थः पप्रच्छ तं स्वीयरहस्यमेकम् ।
संयोगभाजः परमाणुयुग्माज्जातं हि सूक्ष्मं द्व्यणुकं मतं नः ॥ ६५

பரீக்ஷயளிக்கத் தயாராகவிருந்த அந்த ஸ்ரீ பரமகுருவினிடம் (1) திரவ்யம் (2) குணம் (3) கர்மம் (4) சாமான்யம் (5) விசேஷம் (6) ஸமவாயம் என்று பதார்த்தங்கள் ஆறு என்று கூறுகின்ற காணுத மதத்தவன் கூறினுன். ஸம்யோகத்தைப் பெறுகின்ற பரமாணுக்கள் இரண்டுநின்று த்வியணுகம் உண்டாகின்றது என்று எங்களுடைய மதம்.

यत्स्यादणुत्वं तदुपाश्रितं तज्जायेत कस्माद्वद सर्वविच्चेत् ।
नो चेत्प्रभुत्वं तव वक्तुमेते सर्वज्ञभाषां विहितां ब्रुवन्ति ॥ ६६

ஸர்வக்ஞத்வம் இருக்கின்றதேயாகில் அந்த த்வியணுகத்திலுள்ள அணுத்வம் எதனிலிருந்து உண்டாகிறது என்பதைக் கூறுவீராக. இதனைக் கூருவிடில் உமது சிஷ்யர்கள் உம்மை ஸர்வக்ஞர் என்று கற்பனை செய்து கூறுகின்றனரேயின்றி அதற்குப் பொருள் இல்லை.

या द्वित्वसंख्या परमाणुनिष्ठा सा कारणं तस्य गतस्य मात्रा ।
इतीरिते तद्वचनं प्रपूज्य स्वयं न्यवर्तिष्ट कणादलक्ष्मीः ॥ ६७

''பரமாணுக்களிரண்டிலுமுள்ள இரட்டை என்ற தொகை அந்த அணுத்வத்திற்கு காரணம்'' என்று அறிஞராகிய அந்த ஸ்ரீ சங்கரரால் கூறப்பட்டபொழுது அவருடைய வசனத்தைப் புகழ்ந்து கணுத இலக்ஷ்மி திரும்பிச்சென்ருள்.

तत्रापि नैयायिक आत्तगर्वः कणादपक्षाच्चरणाक्षपक्षे ।
मुक्तेर्विशेषं वद सर्वविच्चेन्नो चेत्प्रतिज्ञां त्यज सर्ववित्त्वे ॥ ६८

பிறகு நையாயிகன் செருக்குடன் கூறினுன்:- கணுதமதத்திற்கும் கௌதமமதத்திற்கும் முக்தியில் வேற்றுமையைக் கூறுவீராக. இல்லாவிடில் ஸர்வக்ஞத்வத்தை இழந்துவிடுவீராக.

अत्यन्तनाशे गुणसङ्गतेर्या स्थितिर्नभोवत्कणभक्षपक्षे ।
मुक्तिस्तदीये चरणाक्षपक्षे साऽऽनन्दसंवित्सहिता विमुक्तिः ॥ ६९

கணுதருடைய மதத்தில், குணசம்பந்தத்தின் அறவே நாசம் ஏற்படுகையில் ஆகாயம்போலிருத்தல் 'முக்தி'. கௌதமருடைய மதத்தில் ஆனந்தத்துடன் கூடியதான அந்த நிலைமை 'முக்தி'.

पदार्थभेदः स्फुट एव सिद्धस्तथेश्वरः सर्वजगद्विधाता ।
स ईशवादीत्युदितेऽभिनन्द्य नैयायिकोऽपि न्यवृतन्निरोधात् ॥ ७०

கணுதமதத்தில் பதார்த்தங்கள் ஆறு. கௌதமமதத்தில் பதினுறு. இருவரும் ஈசுவரனை ஒப்புக்கொள்ளுகிறவர்கள் என்று கூறுகையில் ஈசுவர வாதியாகிய நையாயிகனும் தடைசெய்வதிலிருந்து விலகினுன்.

तं कापिलः प्राह च मूलयोनिः किं वा स्वतन्त्रा चिदधिष्ठिता वा ।
जगन्निदानं वद सर्ववित्त्वान्नो चेत्प्रवेशस्तव दुर्लभः स्यात् ॥ ७१

கபிலமதத்தினவன் வினவினன்:- ''மூலப்பிரகிருதி ஸ்வதந்திரமாக ஜகத்திற்குக் காரணமா, அல்லது சித்தை ஆச்ரயித்ததாகவா? கூறுவீராக. இல்லாவிடில் புக முடியாது.

सा विश्वयोनिर्बहुरूपभागिनी स्वयं स्वतन्त्रा त्रिगुणात्मिका सती ।
इत्येव सिद्धान्तगतिस्तु कापिली वेदान्तपक्षे परतन्त्रता मता ॥ ७२

மூன்று குணங்களுடையதாகிய பல நிறங்கள் கொண்ட அந்தப் பிரகிருதி ஸ்வதந்திரமாக உலகத்திற்குக் காரணம் என்று கபிலமுனிவருடைய கொள்கை. வேதாந்திகளின் மதப்படி பரதந்திரமாகக் காரணம் என்பது கொள்கை.

ततो नदन्तो न्यरुधन् सगर्वा दत्त्वा परीक्षां व्रज धाम देव्याः ।
बौद्धास्तथा संप्रथिताः पृथिव्यां बाह्यार्थविज्ञानकशून्यवादैः ॥ ७३

बाह्यार्थवादो द्विविधस्तदन्तरं वाच्यं विविक्षुर्यदि देवतालयम् ।
विज्ञानवादस्य च किं विभेदकं भवन्मताद्ब्रूहि ततः परं व्रज ॥ ७४

பிறகு, கர்வம்கொண்ட பௌத்தர்கள் கோஷித்துக்கொண்டுக் கூறினர். வெளிப்பொருள் உண்டென்றும், இல்லையென்றும், ஞானரூபம் என்றும் பல கொள்கைகளைக்கொண்ட அவர்கள் வினவினர். ''வெளிப்பொருள் உண்டு என்ற மதம் இருவிதம். அவைகளின் வித்தியாஸத்தையும், விஞ்ஞானவாதத்தின் மாறுதலையும், உம்முடைய கொள்கைக்கும் அதற்குமுள்ள வித்தியாஸத்தையும் கூறுவீர். பிறகு தேவியின் கோயிலின் உட்புகுவீர்.

सौत्रान्तिको वक्ति हि वेद्यजातं लिङ्गाधिगम्यं त्वितरोऽक्षिगम्यम् ।
तयोस्तयोर्भङ्गुरताऽविशिष्टा भेदः कियान्वेदनवेद्यभागी ॥ ७५

विज्ञानवादी क्षणिकत्वमेषामङ्गीचकारापि बहुत्वमेषः ।
वेदान्तवादी स्थिरसंविदेकेत्यङ्गीचकारेति महान्विशेषः ॥ ७६

ஸௌத்ராந்திகன் பொருளை அனுமானத்தினால் அறியத்தகுந்ததென்றும் வைபாஷிர் பிரத்யக்ஷத்தினால் (பொறிகளால்) அறியக்கூடியதென்றும் கூறுகின்றனர். இருவருடைய கொள்கைப்படி ''கணத்தில் நாசமுறுதல்'' என்பது சமானம். அறிவிக்கும் பிரமாணம் என்பதில்மட்டும் மாறுபாடு. விஞ்ஞானவாதி விஞ்ஞானங்களை கணநேரத்தில் நாசமுள்ளவை என்று கூறுகிறான். வேதாந்தவாதி நிலையுள்ள ஒரே விஞ்ஞானம் என்று கூறுகிறார் என்று பெரிதான வித்தியாஸம்.

अथाब्रवीद्दिग्वसनानुसारी रहस्यमेकं वद सर्वविचेत् ।
यदस्तिकायोत्तरशब्दवाच्यं तत्किं मतेऽस्मिन्वद देशिकाऽऽशु ॥ ७७

பிறகு திகம்பரமதத்தினவன் வினவினன்:-இந்த மதத்தில் 'அஸ்திகாய' என்ற சொல்லை மேற்கொண்டுள்ள பொருள் யாது? ஆசிரியரே! ஸர்வக்ஞரேயின் விரைவில் கூறுவீராக (என்று வினவினன்).

तत्राऽऽह देशिकवरः शृणु रोचते चेज्जीवादिपञ्चकमभीष्टमुदाहरन्ति ।
तच्छब्दवाच्यमिति जैनमतेऽप्रशस्ते यद्यस्ति बोद्धुमपरं कथयाऽऽशु तन्मे ॥ ७८

அதற்கு ஸ்ரீ சங்கரர் விடை கூறினர். ஜீவன், புத்கலம், தர்மம், அதர்மம், ஆகாயம் என்ற ஐந்து பொருள் அஸ்திகாயம் என்ற சொல்லை மேலே சேர்த்துக் கூறப்படுகின்றன. இது ஜைனமதக் கொள்கை. மேலும் அந்த மதத்தில் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயமிருந்தால் கூறு.

दत्तोत्तरे वादिगणे तु बाह्ये बभाण कश्चित्किल जैमिनीयः ।
शब्दः किमात्मा वद जैमिनीये द्रव्यं गुणो वेति ततो व्रज त्वम् ॥ ७९

வேதத்திற்குப் புறம்பான வாதிகள் விடையளிக்கப்பட்டு சந்தோஷமடைந்தபின் ஜைமினிமதத்தினவர் ஒருவர் வினவினர்:- ஜைமினி நூலில் 'சப்தம்' எத்தகையது? பொருளா? குணமா? என்பதைக் கூறிப் போவீராக.

नित्या वर्णाः सर्वगाः श्रोत्रवेद्या यत्तद्रूपं शब्दजालं च नित्यम् ।
द्रव्यं व्यापीत्यब्रुवञ्जैमिनीया इत्येवं तं प्रोक्तवान्देशिकेन्द्रः ॥ ८०

வர்ணங்கள் நித்யங்கள், எங்கும் வியாபித்தவை. செவியால் அறியத்தக்கவை. அந்த வர்ணரூபமாகிய ஒலியும் நித்யம், வியாபகமான திரவ்யம் என்று ஜைமினிமதத்தினவர் கூறியுள்ளனர் என்று பரமாசாரியர் விடையளித்தார்.

शास्त्रेषु सर्वेष्वपि दत्तवन्तं प्रत्युत्तरं तं समपूजयंस्ते ।
द्वारं समुद्घाट्य ददुश्च मार्गं ततो विवेशान्तरभूमिभागम् ॥ ८१

எல்லா சாஸ்திரங்களிலும் விடைகளையளித்த அந்தப் பரமாசிரியரை அவர்கள் பூஜித்தனர். கதவைத் திறந்து உள்ளே போவதற்கு வழியளித்தனர். பிறகு அவர் உட்புகுந்தார்.

पाणौ सनन्दनमसाववलम्ब्य विद्याभद्रासनं तदवरोढुमनाश्चचाल ।
अत्रान्तरे विधिवधूर्विबुधाग्रगण्यमाचार्यशङ्करमवोचदनङ्गवाचा ॥ ८२

ஸனந்தனரைக் கையில் பிடித்துக்கொண்டு அவர் ''வித்யாசிங்காசனத்தில்'' ஏறுவதற்குப் புறப்பட்டார். இந்த ஸந்தர்ப்பத்தில் ஸரஸ்வதிதேவி ஸ்ரீ சங்கராசாரியரிடம் அசரீரவாக்கின்மூலமாகக் கூறினள்.

सर्वज्ञता तेऽस्ति पुरैव यस्मात्सर्वत्र पर्यैक्षि भवान्न चेत्ते ।
विरिञ्चिरूपान्तरविश्वरूपः शिष्यः कथं स्यात्प्रथिताग्रणीः सः ॥ ८३

உமக்கு ஸர்வக்ஞத்வம் இருக்கிறது. எல்லா விஷயங்களிலும் பரீக்ஷை செய்யப்பட்டுள்ளீர். அப்படியில்லாவிடில் பிரம்மதேவருடைய அவதாரமாகிய மண்டனமிச்ரர் என்ற பிரசித்த வித்வான் தங்களுக்கு சீடராக ஏற்பட முடியுமா?

सर्वज्ञतैकैव भवेन्न हेतुः पीठाधिरोहे परिशुद्धता च ।
सा तेऽस्ति वा नेति विचार्यमेतत्तिष्ठ क्षणं त्वं कुरु साहसं मा ॥ ८४

இந்தப் பீடத்தில் ஏறுவதற்கு ஸர்வக்ஞத்வம் ஒன்றுமட்டும் இருந்தால் போதாது. திரிகரணசுத்தியுமிருக்க வேண்டும். அது உமக்கு இருக்கின்றதா, இல்லையா என்பதை யோசிக்க வேண்டும். சிறிது பொறுப்பீர். அவசரப்படாதீர்.

त्वं चाङ्गनाः समुपभुज्य कलारहस्यप्रावीण्यभाजनमभूर्यतिधर्मनिष्ठः ।
आरोढुमीदृशपदं कथमर्हता ते सर्वज्ञतेव विमलत्वमपीह हेतुः ॥ ८५

துறவறத்தைக் கைப்பற்றிய நீர் மங்கையர்களுடன் இன்பமுற்றுக் காமக்கலையின் திறமையைப்பெற்றீர். அத்தகையர் இந்த சிறந்த ஆசனத்தில் அமருவதற்கு எவ்வாறு தகுதியுள்ளவராவார்? ஸர்வக்ஞதைபோல் ஸர்வ சுத்தத்தையும் இதில் அமருவதற்கு அமைந்திருக்கவேண்டிய காரணமாகும்.

नास्मिञ्शरीरे कृतकिल्बिषोऽहं जन्मप्रभृत्यम्ब न संदिहेऽहम् ।
व्यधायि देहान्तरसंश्रयाद्यन्न तेन लिप्येत हि कर्मणाऽन्यः ॥ ८६

பிறந்த முதல் இந்த உடலினுல் யான் ஒரு பாபத்தையும் செய்தவனன்று தாயே! இதில் ஐயமில்லை. மற்றொரு சரீரத்தினுல் செய்த செயலுக்கு இந்த உடல் உடன்பட்டதாகாதன்றோ!

इत्थं निरुत्तरपदां स विधाय देवीं सर्वज्ञपीठमधिरुह्य ननन्द सभ्यः ।
संमानितोऽभवदसौ विबुधैश्च वाण्या गार्ग्या कहोलमुखरैरिव याज्ञवल्क्यः ॥ ८७

இவ்வாறு ஸரஸ்வதிதேவிக்கு விடையளித்து அந்தப் பரமகுரு ஸர்வக்ஞபீடத்தில் அமர்ந்து உவகைகொண்டார். யாக்ஞவல்க்ய முனிவர் ஆத்மஞானத்தின் வன்மைபற்றி கஹோலர் முதலிய முனிவர்களாலும் கார்கியினுலும் புகழப்பட்டதுபோல் சபையில் அமர்ந்த அவர் வித்வான்களாலும், தேவர்களாலும் பூஜிக்கப்பட்டார்.

वादप्रादुर्विनोदप्रतिकथनसुधीवाददुर्वारतर्क -
न्यक्कारस्वैरधाटीभरितहरिदुपन्यस्तमाहानुभाव्यः ।
सर्वज्ञो वस्तुमर्हस्त्वमिति बहुमतः स्फारभारत्यमोघ -
श्लाघाजोघुष्यमाणो जयति यतिपतेः शारदापीठवासः ॥ ८८

வாதம் செய்வதில் திறமைவாய்ந்த புத்திமான்களாகிய மண்டனமிச்ரர் முதலியவர்களுடன் சாஸ்திரங்களின் தத்வங்களை சர்ச்சை செய்யும்கால் பிறருடைய யுக்திகளைத் தவிர்ப்பதிலுள்ள சாமர்த்தியத்தினுல் திசைகளில் எங்கும் பரவிய மகிமைகொண்டதும், ''ஸர்வக்ஞராகிய நீர் இங்கு வாசம் செய்யத்

தகுதியுள்ளவர்'' என்று ஸரஸ்வதீதேவியினுல் புகழப்பட்டதுமாகிய ஸ்ரீ சங்கரருடைய சாரதாபீடவாசம் வெற்றியுள்ளதாக விளங்குகிறது.

कुत्राप्यासीत्प्रलीनेक्षणचरणकथा कापिली क्वापि लीना
भग्नाऽभग्ना गुरूक्तिः क्वचिदजनि परं भट्टपादप्रवादः ।
भूमावायोगकाणादजनिमतमथाभूतवाग्भेदवार्ता
दुर्दान्तब्रह्मविद्यागुरुदुरुदकथादुन्दुभेर्धिन्धिमेतः ॥ ८९

அடக்கமுடியாத வாதிகளுடன் அத்வைதாசாரியராகிய ஸ்ரீ சங்கரருக்கு வாதம் ஏற்பட்டு வெற்றி துந்துபியின் 'धिंधिं' என்ற ஒலி பரவியபொழுது, கௌதமருடைய மதம் போனவிடம் தெரியவில்லை. காபிலத்திற்கு உலைவைக்கப்பட்டது. குருமதம் குறைந்தது. குமரிலப்பட்டருடைய கொள்கை ஒளிந்துகொண்டது. யோகம், காணுதம் என்ற மதங்கள் யோசனையில்லாமல் கண்ணுக்கு மறைவாகப்போயின. பேதப்பேச்சு பேய் பிடித்ததாயிற்று.

काणादः क्व प्रणादः क्व च कपिलवचः क्वाक्षिपादप्रवादः
क्वाप्यन्धा योगकन्था क्व गुरुरतिलघुः क्वापि भाट्टप्रघट्टम् ।
क्व द्वैताद्वैतवार्ता क्षपणकविवृतिः क्वापि पाषण्डषण्ड -
ध्वान्तध्वंसैकभानोर्जयति यतिपतेः शारदापीठवासे ॥ ९०

பாஷண்டமதமாகிய இருளுக்குக் கதிரவணுகிய யதீசுவரர் சாரதாபீடத்திலமரவும், காணுதருடைய நாதம் நாசமுற்றது. காபிலத்தைக் காற்றலசியது. அக்ஷபாதமதமழிந்தது. யோகக்கந்தை இறுதியடைந்தது. குருமதத்தின் கௌரவமேயழிந்தது. பாட்டமதம் பட்டுப்போயிற்று. துவைதாத்வைதப்பேச்சு எல்லோராலும் துவேஷிக்கப்பட்டது. இவைகளே இந்த நிலையிலிருக்க ஆர்கதத்திற்கு என்ன அருகதையுள்ளது?

ततो दिविषदध्वनि त्वरितमध्वराशावली -
धुरन्धरसमीरितत्रिदशपाणिकोणाहतः ।
अरुन्द्ध हरिदन्तरं स्वरभरैर्भ्रमत्सिन्धुभि -
र्घनाघनघनारवप्रथमबन्धुभिर्दुन्दुभिः ॥ ९१

பிறகு தேவேந்திரனுடைய ஆக்ஞைப்படி தேவர்களால் அடிக்கப்பட்ட துந்துபிவாத்யம், அலைமுழக்கங்களுடன் கூடிய சமுத்திரங்களுடையவும், மேகங்களுடையவும் ஒலிக்கு நிகராக ஒலித்து ஆகாயமார்க்கத்தை முழக்கியது.

कचभरवहनं पुलोमजायाः कतिचिदहान्यपगर्भकं यथा स्यात् ।
गुरुशिरसि तथा सुधाशनाः स्वस्तरुकुसुमान्यथ हर्षतोऽभ्यवर्षन् ॥ ९२

பிறகு தேவர்கள், இந்திராணியின் கூந்தலில் அநேகம் நாட்கள் அணிந்துகொள்ளுவதற்கு மலர்கள் கிட்டாமலிருக்கும்படி அவ்வளவு கற்பகமரத்தின் மலர்களை ஸ்ரீ சங்கரபரமகுருவின் தலையில் பொழிந்தனர்.

इति मुनिरतितुष्टोऽध्युष्य सर्वज्ञपीठं निजमतगुरुतायै नो पुनर्मानहेतोः ।
कतिचन विनिवेश्याथर्ष्यशृङ्गाश्रमादौ मुनिरथ बदरीं स प्राप कैश्चित्स्वशिष्यैः ॥ ९३

இவ்வாறு முனிவர் மிக்க சந்தோஷத்துடன் ஸர்வக்ஞபீடத்தில் அமர்ந்து, தன்னுடைய கௌரவத்தில் விருப்பமற்று, தன்னுடைய சிறந்த மதம் ஓங்கி வளர்ச்சியடைதலைமட்டும் விரும்பியவராக சிருங்கேரி முதலிய இடங்களில் சில சிஷ்யர்களை அமர்த்தி, சில சீடர்களுடன் மௌனம் செய்வதற்குரியதான பதரிக்குச் சென்றார்.

दिवसान्विनिनाय तत्र कांश्चित्स च पातञ्जलतन्त्रनिष्ठितेभ्यः ।
कृपयोपदिशन्स्वसूत्रभाष्यं विजितत्याजितसर्वदर्शनेभ्यः ॥ ९४

அங்கும் யோகசாஸ்திரத்தில் திறமையுள்ளவர்களுடன் வாதம் செய்து அவர்களை வென்று மற்ற நூல்களை இழக்கும்படிச் செய்து அவர்கள்மீது கருணைகொண்டவராக தன்னுடைய சூத்ரபாஷ்யத்தை உபதேசம் செய்தார்.

नितरां यतिराडुडुराजकरप्रकरप्रचुरप्रसरस्वयशाः ।
स्वमयं समयं गमयन्रमयन्हृदयं सदयं सुधियां शुशुभे ॥ ९५

இந்த யதிச்சக்ரவர்த்தி, கருணையுடன் புத்திமான்களாகிய சான்றோர்களுடைய சித்தத்தை தன்னுடைய சிறந்த உபதேசத்தினால் உவகையுறும்படி செய்து நாட்களை கழித்துக்கொண்டு, சந்திரகிரணங்களின் ஒளிவீச்சு போல் எங்கும் பரவிய குளிர்ந்த நல்ல கீர்த்தியுடன் விளங்கினார்.

एवंप्रकारैः कलिकल्मषघ्नैः शिवावतारस्य शुभैश्चरित्रैः ।
द्वात्रिंशदत्युज्ज्वलकीर्तिराशेः समा व्यतीयुः किल शङ्करस्य ॥ ९६

பரமசிவனுடைய அவதாரமாகிய ஸ்ரீ சங்கரர் இவ்வாறு பரிசுத்தமான செயல்களால் உலகமெங்கும் பரவிய கீர்த்தியை சம்பாதித்து விளங்குகையில் வருஷங்கள் முப்பத்திரெண்டாயின.

भाष्यं भूष्यं सुशीलैरकलि कलिमलध्वंसि कैवल्यमूल्यं
हन्ताहन्ता समन्तात्कुमतिनतिकृता खण्डिता पण्डितानाम् ।
सद्यो विद्योतिताऽसौ विपथविमथनैर्मुक्तिपद्याऽनवद्या
श्रेयो भूयो बुधानामधिकतरमितः शङ्करः किं करोतु ॥ ९७

கலிதோஷங்களை நாசம் செய்கின்றதும், முக்திக்குக் காரணமும், நல்ல சுபாவமுள்ளவர்களால் புகழ்ந்து அணிந்துகொள்ளத்தக்கதும் ஆகிய பாஷ்யம் செய்யப்பட்டது. ஆச்சரியமான வேறு காரியங்களும் செய்யப்பட்டன. அற்பபுத்திகள் வணங்குவதினால் 'நான்' என்ற கர்வத்தையடைந்த அறிஞர்களுடைய அகந்தை அகற்றப்பட்டது. துஷ்ட நாஸ்திகமதங்களை அழித்து அழிவற்ற சுகமாகிய முக்திக்கு நெறி நிலைக்கும்படி செய்யப்பட்டது. இதைக்காட்டிலும் வித்வான்களுக்கு அந்த சங்கரர் என்ன செய்யமுடியும்? செய்யவேண்டியதனைத்தையும் செய்துமுடித்தார்.

हन्ताशोभि यशोभरैस्त्रिजगतीमन्दारकुन्देन्दुभा -
मुक्ताहारपटीरहीरविहरन्नीहारतारानिभैः ।
कारुण्यामृतनिर्झरैः सुकृतिनां दैन्यानलः शून्यतां
नीतः शङ्करयोगिना किमधुना सौरभ्यमारभ्यताम् ॥ ९८

ஆச்சரியம், புண்யசாலிகளுடைய எளிய நிலைமையாகிய அக்னி, ஸ்ரீ சங்கரயோகீந்திரரால் கருணாமிருதம் நிரம்பிய கடாக்ஷப்பிரவாகத்தினுல் தணிக்கப்பட்டது. மேலும், மூன்று உலகங்களிலுமுள்ள மந்தாரகுந்தமலர்கள், நிலா, முத்துமாலை, சந்தனம், வைரக்கல், பனி, நக்ஷத்திரங்கள் இவைகள் போன்றவையும் கருணைப்பிரவாகமும் ஆகிய புகழ்க்குவியல் உலகமெங்கும் பரவி விளங்குகையில் வேறு பரிமளவாசனையைத் தேடவேண்டிய அவசியம் யாது?

आक्रान्तानि दिगन्तराणि यशसा साधीयसा भूयसा
विस्मेराणि दिगन्तराणि रचितान्यत्यद्भुतैः क्रीडितैः ।
भक्ताः स्वेप्सितभुक्तिमुक्तिकलनोपायैः कृतार्थीकृता
भिक्षुक्ष्मापतिना किमन्यदधुना सौजन्यमातन्यताम् ॥ ९९

துறவிச்சக்ரவர்த்தியாகிய அந்த ஸ்ரீ சங்கரருடைய சிறந்த புகழ் உலகமெங்கும் எல்லா திசைகளிலும் பரவியது. அற்புதங்களான லீலைகளாலும் வீரச்செயல்களாலும் வியப்பும் உவகையுமுற்றன. பக்தர்கள் தமக்குரிய போக இன்பங்களையும் முக்திசுகத்தையும் பெறுவதற்குரிய நெறிகளைப் பின்பற்றி கிருதார்த்தர்களாயினர். இதைவிட எவ்விதம் தன்னுடைய மகிமையைப் பரப்புவார்.

पारिकाङ्क्षीश्वरोऽप्यापदुद्धारकं सेवमानातुलस्वस्तिविस्तारकम् ।
पापदावानलातापसंहारकं योगिबृन्दाधिपः प्राप केदारकम् ॥ १००

தபஸ்விகளில் சிறந்தவராயினும் அந்த ஸ்ரீ சங்கரஜகத்குரு ஆபத்துக்களை அழிக்கின்றதும், சேவிக்கின்ற ஜனங்களுக்கு ஒப்புயர்வற்ற மங்களத்தை அளிக்கின்றதும், பாபங்களாகிய காட்டுத்தீஜ்வாலையின் தாபத்தைத் தணிக்கின்றதுமாகிய கேதாரக்ஷேத்திரத்தை அடைந்தார்.

तत्रातिशीतार्दितशिष्यसङ्घसंरक्षणायातुलितप्रभावः ।
तप्तोदकं प्रार्थयते स्म चन्द्रकलाधरात्तीर्थकरप्रधानः ॥ १०१

ஒப்புயர்வற்ற மகிமையுடையவரும், சாஸ்திரக்காரர்களில் முதல்வரும் ஆகிய ஸ்ரீ சங்கரர் அதிகமான குளிரினுல் சீடர்களின் கூட்டம் வருத்தமுற்றதைக் கண்டு அவர்கள் மீது கருணைகொண்டு, வென்னீரைப் பரமசிவனிடம் வேண்டினுர்.

कर्मन्दिबृन्दपतिना गिरिशोऽर्थितः सन् संतप्तवारिलहरीं स्वपदारविन्दात् ।
प्रावर्तयत्प्रथयती यतिनाथकीर्तिं याऽद्यापि तत्र समुदञ्चति तप्ततोया ॥ १०२

யதிச்சக்ரவர்த்தியினால் பிரார்த்திக்கப்பட்ட ஸ்ரீசிவபெருமான் தன்னுடைய பாதகமலத்திலிருந்து கங்கையை வென்னீர்ப் பிரவாகமாகப் பெருக்கினார். அந்தவிடத்தில் யதிசிரேஷ்டராகிய ஸ்ரீஜகத்குருவின் மகிமையை உலகங்களுக்குக் காண்பிப்பதற்காக இப்பொழுதும் கங்கை வென்னீராகவே பிரவகிக்கின்றது.

इति कृतसुरकार्यं नेतुमाजग्मुरेनं रजतशिखरशृङ्गं तुङ्गमीशावतारम् ।
विधिशतमखचन्द्रोपेन्द्रवाय्वग्निपूर्वाः सुरनिकरवरेण्याः सर्षिसङ्घाः ससिद्धाः ॥१०३

இவ்விதம் தேவகாரியத்தைச் செய்து முடித்தவரும் பரமசிவனுடைய அவதாரமுமாகிய அந்த ஜகத்குருவை உயர்ந்த கைலாசமலையின் சிகரத்திற்கு அழைத்துச்செல்லுவதற்காக, முனிவர்களுடனும் சித்தர்களுடனும் பிரம்மன், இந்திரன், சந்திரன், விஷ்ணு, வாயு, அக்னி முதலிய தேவர்கள் வந்தனர்.

विद्युद्वल्लीनियुतसमुदारब्धयुद्धैर्विमानैः
संख्यातीतैः सपदि गगनाभोगमाच्छादयन्तः ।
स्तुत्वा देवं त्रिपुरमथनं ते यतीशानवेषं
मन्दारोत्थैः कुसुमनिचयैरब्रुवन्नर्चयन्तः ॥ १०४

கோடிக்கணக்கான மின்னல்கொடிகளுக்கு ஒப்பான ஒளியுடன் விளங்கும் எண்ணிலா விமானங்களால் ஆகாயத்தை மறைத்து தேவர்கள் அங்கு வந்து துறவிவேஷத்தையணிந்த பரமசிவனைத் துதித்து கற்பகமலர்களால் பூஜை செய்து விக்ஞாபித்தனர்.

भवानाद्यो देवः कवलितविषः कामदहनः
पुरारातिर्विश्वप्रभवलयहेतुस्त्रिनयनः ।
यदर्थं गां प्राप्तो भवमथन वृत्तं तदधुना
तदायाहि स्वर्गं सपदि गिरिशास्मत्प्रियकृते ॥ १०५

தாங்கள் ஆதிதேவர், விஷத்தையுண்டவர், காமனையெரித்தவர், திரிபுரங்களை சங்கரித்தவர். உலகங்களின் உற்பத்தி, பாதுகாப்பு, அழிவு இவைகளுக்குக் காரணமாகிய முக்கண்தேவர். ஸம்ஸாரதுக்கத்தை நீக்குகின்றவரே! எதனைக்கருதி மண்ணுலகை அடைந்தீர்களோ, அந்தக் காரியம் நிறைவேறியபடியால் எங்களுடைய பிரியத்தின்பொருட்டு விண்ணுலகை அடைவீர்களாக.

उन्मीलद्विनयप्रधानसुमनोवाक्यावसाने महा -
देवे संभृतसंभ्रमे निजपदं गन्तुं मनः कुर्वति ।
शैलादिः प्रमथैः परिष्कृतवपुस्तस्थौ पुरस्तत्क्षणा -
दुक्षा शारदवारिदुग्धवरटाहङ्कारहुङ्कारकृत् ॥ १०६

மிக்க பணிவுடன் தேவர்கள் கூறிய வசனம் முடிந்தவுடன் மகாதேவர் தன்னுடைய பதத்திற்குச் செல்ல அவசரத்துடன் மனவிருப்பங்கொள்ளவும், பிரமதகணங்களால் அலங்காரம் செய்யப்பட்ட நந்திகேசுவரர் சரத்காலத்து நீருக்கும், பாலுக்கும், அன்னப்பறவைக்குமுள்ள தமது வெண்ணிறத்தினுலுள்ள செருக்கையறுக்கக்கூடிய வெண்ணிறங்கொண்ட விருஷபவடிவத்துடன் முன்னிலையில் வந்து நின்ருர்.

इन्द्रोपेन्द्रप्रधानैस्त्रिदशपरिवृढैः स्तूयमानः प्रसूनै -
दिव्यैरभ्यर्च्यमानः सरसिरुहभुवा दत्तहस्तावलम्बः ।
आरुह्योक्षाणमग्र्यं प्रकटितसुजटाजूटचन्द्रावतंसः
शृण्वन्नालोकशब्दं समुदितमृषिभिर्धाम नैजं प्रतस्थे ॥ १०७

இந்திரன், விஷ்ணு முதலிய தேவர்களால் புகழப்பட்டு திவ்ய மலர்களால் பூஜிக்கப்பட்டு, தாமரைமலரில் தோன்றிய பிரம்மதேவரால் கையில் பிடிக்கப்பட்ட அந்த யதீசுவரர், சந்திரக்கலையையும், ஜடாபாரத்தையும் தரித்து தன்னுடைய திவ்யரூபத்தைத் தோற்றுவித்து விருஷபத்தில் ஏறிக் கொண்டு, முனிவர்களால் செய்யப்படும் ஜயகோஷத்தைச் செவியுற்றுக்கொண்டு தன் பதத்தையடைந்தார்.

इति श्रीमाधवीये तच्छारदापीठवासगः ।
संक्षेपशङ्करजये सर्गः पूर्णोऽपि षोडशः ॥१६॥

இவ்வாறு ஸ்ரீ மாதவாசாரியரியற்றிய சங்கரவிஜயச் சுருக்கத்தில்
அவர் சாரதாபீடத்தையுற்ற விஷயத்தைக் கூறும்
பதினாருவது சர்க்கம் முற்றிற்று.

आदितः श्लोकाः 1843

इति श्रीमद्विद्यारण्यविरचितः श्रीमच्छङ्करदिग्विजयः समाप्तः ॥

இவ்வாறு ஸ்ரீ மத் வித்யாரண்யரியற்றிய
ஸ்ரீமத் சங்கரதிக்விஜயம்
முற்றிற்று.



